தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—120

# குற்ற இயல் சட்டம்

## (CRIMINAL LAW)

மா. சண்முகசுப்பிரமணியம், பி.ஏ., பி.எல்.,
துணைச்செயலாளர், சட்டமன்றத் துறை,
சென்னை அரசு

**தமிழ் வெளியீட்டுக் கழகம்**
தமிழ்நாடு - அரசாங்கம்

# அணிந்துரை

(திரு. எம். பக்தவத்ஸலம், தமிழக முதலமைச்சர்)

தமிழ்நாடு அரசாங்கம், சில ஆண்டுகளுக்கு முன்னர்க் கல்லூரித் தமிழ்க் குழுவொன்றை நிறுவி, அதன்மூலம் கல்லூரி மாணவர்கட்குத் தேவையான பல தமிழ் நூல்களை வெளியிட்டுவந்தது. தமிழை ஆட்சி மொழியாக அரசாங்கம் ஏற்றுக்கொண்ட பிறகு, தமிழ் மொழிக்கு ஆக்கம் தேடுகின்ற முறையில், இன்னும் மகத்தான அளவில் தமிழில் நூல்கள் வெளிவரவேண்டும் என்ற கருத்தில் தமிழ் வெளியீட்டுக் கழகம் 1962-ல் நிறுவப் பெற்றது.

உலகின் பிற பகுதிகளிலுள்ள மக்களின் அறிவு வளர்ச்சிக்குக் குறையாமல் தமிழ் மக்களும் அறிவு வளர்ச்சி பெறவேண்டுமானால், பிறமொழியிலுள்ள நூல்களைப் படிக்க முடியாதவர்கள் தமிழின்மூலமே எல்லாவற்றையும் கற்கக்கூடிய சூழ்நிலை ஏற்படவேண்டும். இந்த எண்ணத்தின் அடிப்படையிலேயே தமிழ் வெளியீட்டுக் கழகம் கல்லூரி மாணவர்களுக்குரிய நூல்களை வெளியிடுவதுடன், பொதுமக்களுக்கும் பயன்படுகின்ற முறையில் வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், விஞ்ஞானக் கலைகள் ஆகிய பல துறைகளிலும் பல்வேறு நூல்களை வெளியிட முனைந்துள்ளது.

அத்தகைய முயற்சிகளுள் ஒன்றாக, 'குற்ற இயல் சட்டம்' என்ற இந்நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 120ஆவது வெளியீடாக வருகிறது.

கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து, இதுவரை 155 நூல்கள் தமிழ் வெளியீட்டுக் கழகத்தால் வெளியிடப்பெற்றுள்ளன. இந் நூல்களை வாங்கிப் படிப்பதன்மூலம் தமிழ் மக்கள் மேலும் வளர்ச்சி பெறுவார்கள் என்று நம்புகிறேன்.

**எம். பக்தவத்ஸலம்**

# அணிந்துரை

(சென்னை, உயர் நீதிமன்ற நீதிபதி
திரு. இர. சதாசிவம், பி.ஏ., எம்.எல்., அவர்கள்)

'ஒரு சட்டத் தொகுப்பு சிறந்து விளங்குவதற்கு பேக்கன் (Bacon) போன்ற சிந்தனையாளர் அதை வரைய வேண்டும், கோக் (Coke) போன்ற சட்ட அறிஞர் அதைச் சீரமைக்க வேண்டும்' என்று கூறுவதுண்டு. ஆனால், முதலாவது இந்தியச் சட்டக் குழுவின் (First Indian Law Commission) தலைவராக இருந்த தாமஸ் பேபிங்டன் மெக்காலே (Thomas Babington Macaulay) சட்ட இயல் வல்லுநரோ அல்லது வழக்கறிஞரோ அல்லர். எனினும், அவருடைய திறனாலேயே பெரும்பாலும் உருவான 'இந்தியக் குற்றச் சட்டத் தொகுப்பு' (Indian Penal Code) சிறந்து விளங்குகிறது என்பதில் ஐயமில்லை.

இச் சட்டத் தொகுப்பு உருவடைந்த காலத்தில் குற்ற இயல் பற்றிய ஞானம் வளர்ச்சி யடையவில்லை. லேம்ரோஸோ (Lambrosso), கேராஃபலோ (Garafalo), ஃபெரி (Ferri) போன்ற இத்தாலி நாட்டு அறிஞர்கள் குற்ற இயல் பற்றிக் கொண்டிருந்த நேர்நிலைக் கொள்கையும் (Positivist School), ஃபிரஞ்சு அறிஞர்கள் கொண்டிருந்த சமுதாயக் கொள்கையும் (Sociological School) அக் காலத்தில் தோன்றியிருக்கவில்லை. எனவே, தண்டனை யளிப்பதே இந்தியக் குற்றச் சட்டத் தொகுப்பின் நோக்கமாக அமைந்துள்ளது. இச் சட்டத் தொகுப்பின் பெயரும் தண்டனையை வலியுறுத்தும் வகையில் 'Penal Code' என்றே காணப்படுகிறது.

'ஆங்கில நாட்டுக் குற்ற இயல் சட்டத்திலிருந்து அவசியமில்லாத (தனித்த) முறைபாடுகளை நீக்கி, வியக்கத் தக்க வகையில் மிகச் சில திருத்தங்களுடன் இந்திய நாட்டுச் சூழ்நிலைகளுக்கு ஏற்றவாறு ஒழுங்கமைக்கப் பெற்றதுவே இந்தியக் குற்றச் சட்டத் தொகுப்பு,' என்று அறிஞர் ஸ்டீஃபன் (Stephen) என்பார் தாம் எழுதிய 'ஆங்கில நாட்டுக் குற்ற இயல் சட்ட வரலாறு' (Volume III) என்ற நூலில் கூறியுள்ளார். இந்தியக்

குற்றச் சட்டத் தொகுப்பு உலகிலேயே தலைசிறந்ததெனப் போற்றப்படுகிறது. பல நாடுகள் இச் சட்டத்தை அடிப் படையாக வைத்துத் தம் சட்டங்களை இயற்றியிருக் கின்றன. இந்தச் சட்டத்தின் பொருளமைப்பும் இயல்பான எளிய வரிசைமுறையில் அமைந்துள்ளது. ஹேல் (Hale) என்பவர் இயற்றிய நூலை (Hale's Pleas of the Crown) ஒட்டி இது வரையப்பட்டிருக்கிறது. 'தண்டனை' (Punishment) பற்றிய அத்தியாயம் இத் தொகுப்பின் இறுதியில் இருக்கவேண்டும் என்றும், செயலைவிட மனப்போக்கைக் குற்றமாக்கும் 'குற்ற முயற்சி'யும் (Criminal Attempt), 'குற்ற உடந்தை'யும் (Abetment) அடுத்து வரவேண்டும் என்றும் நெல்சன் (Nelson) கூறியுள்ளார். 'இந்தியச் சிறை ஆய்வுக் குழுவினரின்' (Indian Jail Committee) பரிந்துரைகளுக்கும், தற்காலக் குற்ற இயல் அறிவுக்கும் ஏற்றவாறு இச் சட்டத் தொகுப்பை மாற்றி யமைப்பது அவசியமாகும்.

இவ்வாறு, இச் சட்டத் தொகுப்பு திருத்தியமைக்கப் பெறவில்லை யெனினும், குற்றமிழைத்தவர்களைச் சீர்திருத் தும் நோக்கத்துடன் இயற்றப்பட்டுள்ள வேறு சட்டங் களின் உதவியால் நீதிமன்றங்கள் அச் சீர்திருத்தக் கொள்கைகளை நிறைவேற்றும் வகையிலேயே இயங்கு கின்றன. இங்கிலாந்து நாட்டுக் குற்ற இயல் கொள்கைகளை 1930ஆம் ஆண்டிற்குப் பிறகு இயற்றப்பட்ட இத்தாலிய நாட்டுக் குற்ற இயல் சட்டத்தோடு ஒப்பிடுகையில், ஸ்டாலிப்ராஸ் (Stallybrass) என்ற அறிஞர் கூறியுள்ளது இங்கு நினைவிற் கொள்ளத்தக்கது. பல தலைமுறைகளில் வாழ்ந்த சட்ட வல்லுநர்கள் முழுமையான, முன்பின் முரணில்லாத குற்ற இயல் சட்டக் கோவை ஒன்றை ஆக்க வேண்டும் என்ற நோக்குடன் ஆய்ந்து உழைத்ததன் பயனாய் உருவாகியது, இத்தாலியக் குற்ற இயல் சட்டத் தொகுப்பு. ஆங்கில நாட்டுச் சட்டமோ முன்தீர்ப்பு முறைமைகளை (Precedents) ஒட்டி அமைவது. ஏட்டிற் காணும் சட்டத் தொகுப்பிலோ சிறைகளிலோ ஆங்கி லேயர்களுக்கு நம்பிக்கை இருப்பதில்லை. 'சட்டம் செயற் படுவதைக் காட்டு' என்ற இயற்கையறிவுதான் ஆங்கி லேயரிடம் மிஞ்சி நிற்பதாகும். இவ்வாறு ஸ்டாலிப்ராஸ் கூறுகிறார்.

'குற்றம்' (Crime) என்ற சொல்லிற்கு இலக்கணம் வகுப்பதில் உள்ள இடர்ப்பாட்டினை 'குற்ற இயல் சட்டச்

சுருக்கம்' (Outlines of Criminal Law) என்ற தமது புகழ் பெற்ற நூலிலே அறிஞர் கென்னி (Kenny) குறிப்பிட்டுள்ளார். 'குற்ற இயல் சட்டத்தை மீறும் செயல் குற்றமாகும்,'' என்று கூறுவது சட்டப்படி சரியானதுதான். ஆனால், இந்த இலக்கணம் 'கூறியது கூறல்' என்ற வழுவிற்கு (tautological definition) உட்பட்டதாகிவிடுகிறது. மேலும், குற்ற இயல் சட்டத்தின் நோக்கத்தை நாம் புரிந்துகொள்ளுவதற்கும் இந்த இலக்கணம் உதவுவதில்லை. 'குற்றம்' என்பது சமூகத்திற்கு எதிரான நடத்தை அல்லது செயல் ஆகும். சமூகத்திற்குத் தீங்கு விளைவிப்பது என அது கொள்ளப்படுகிறது. சமுதாயத்திற்கு விரோதமல்லாத எவ்வித நடத்தையையும் 'குற்றம்' எனக் கொள்ளுதல் தகாது. அவ்வாறு கொள்ளும் சட்டம் இருந்தால் அது அச் சட்டத்தை இயற்றியவர்களின் தவறேயாகும். குற்றங்கள் எல்லாம் சமூகத்திற்கு எதிரான செயல்கள்தாம்; ஆனால், சமூகத்திற்கு எதிரான எல்லாச் செயல்களும் குற்றங்கள் ஆவதில்லை. வழக்க நெறி (Custom), மரபு (Tradition), தீமையெனக் கொள்ளப்படும் செயல்கள் இவற்றின் அடிப்படையிலேயே சமூக விரோதமான செயல்களில் எவற்றினையெல்லாம் குற்றங்களாகக் கொள்ளுவதென்பது தீர்மானிக்கப்படுகிறது. 'விலக்கிய செயல்களைச் சமுதாயம் வெளிப்படையாகக் கண்டனம் செய்து, அவைகளைத் தடுப்பதற்கெனத் தண்டனையும் விதிப்பதுதான் குற்ற இயல் சட்டத்தின் நோக்கமாகும்' என்று புகழ்பெற்ற ஓர் அமெரிக்க அறிஞர் கூறுகின்றார். 'குடி புறங்காத்து ஓம்புதலே' குற்றங் கடியும் சட்டத்தின் குறிக்கோளாகும்.

திரு. மா. சண்முகசுப்பிரமணியம் தமிழில் எழுதியுள்ள 'குற்ற இயல் சட்டம்' என்ற இச் சிறந்த நூல் பாராட்டுக்குரியது. ஆங்கில நாட்டுக் குற்ற இயல் சட்டம்பற்றிப் பல நல்ல நூல்கள் இருக்கின்றன. அவற்றோடு ஒப்பிடத்தக்க வகையில் மெயின் (Mayne), நெல்சன் (Nelson) இருவரும் இந்தியக் குற்ற இயல் சட்டம்பற்றி நூல்கள் எழுதியுள்ளனர். அவை மாணவர்களுக்கும் பயன்படுவன. நான் அறிந்தவரையில், தமிழில் 'குற்ற இயல் சட்டம்' பற்றி இதுவே முதலாவது நூலாகும். இந் நூலாசிரியர் முன்னர் 'சட்ட இயல்' (Jurisprudence), 'தீங்கியல் சட்டம்' (Law of Torts) என்ற இரு நூல்களைத் திறம்பட எழுதியிருக்கிறார். 'குற்ற இயல்' பற்றிய பொருள்களனைத்தும் இந் நூலில் அடங்கியுள்ளன. ஆசிரியர் தமது வழக்கமான

இனிய, எளிய, தூய தமிழ் நடையில் தெளிவாகச் சட்டத்தை விளக்கியுள்ளார். குற்ற இயல் சட்டத்தின் நுட்பங்களை அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தைப் படிப்போர் மனத்தில் எழுப்பும் வகையில் நூலின் நடை அமைந்திருக்கிறது. குற்ற இயல்பற்றிச் சட்டக் கல்லூரி மாணவர்களின் பட்டப்படிப்பிற்கு வேண்டியதனைத்தையும் இந்நூல் விரிவாகக் கூறுகிறது. 'இந்தியக் குற்றச் சட்டத் தொகுப்'பின் (Indian Penal Code) பிரிவுகளை விளக்குவதோடு ஆசிரியர் நின்றுவிடவில்லை. குற்றச் சட்ட அறிவியலுக்கு (Criminal Science) அடிப்படையாக அமைந்துள்ள பல கொள்கைகளையும் விளக்கி, பண்டைத் தமிழ் இலக்கியங்களிலிருந்து பல மேற்கோள்களையும் அவர் எடுத்துக் காட்டியுள்ளார்.

இந்நூலாசிரியர் தமிழறிஞர்கள் மரபிலே வந்தவர். சட்ட அறிவும் அனுபவமும் தக்க முறையில் பெற்றவர். எனவே, குற்ற இயல் சட்டத்தின் நுண்ணிய கருத்துகளைக் குறிக்கும் ஆங்கிலச் சொற்றொடர்களை விளக்குவதற்கு அவர் பயன்படுத்தியுள்ள தமிழ்ச் சொற்கள் மிகவும் பொருத்தமாக அமைந்துள்ளன. ஆங்கிலச் சட்டச் சொற்களுக்கு ஏற்ற தமிழ்ச் சொற்களைக் கண்டுபிடித்துக் கூறுவதில் ஆசிரியர் காட்டியுள்ள மிகுந்த கவனத்திற்கு இந் நூலின் இறுதியில் உள்ள கலைச்சொல்லகராதியே தக்க சான்றாகும். எவ்வளவு நுட்பமான, சிக்கலான சட்டக் கருத்துகளையும் எளிய தமிழில் தெளிவாகக் கூற இயலும் என்பதற்கு இந் நூல் ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

வழக்கறிஞர்களும் சட்ட மாணவர்களும்மட்டுமன்றி பொதுமக்களும் இந்நூலைக் கற்றுப் பயனடைவார்கள் என நம்புகிறேன். பல்வகைச் சட்டங்கள்பற்றி இதுபோன்ற நூல்கள் வெளிவருவதன் அவசியத்தை நாம் அறிவோம். 'சான்றியல் சட்டம்' (Law of Evidence), 'சொத்துச் சட்டம்' (Law of Property) முதலிய சட்டங்களையும் ஆசிரியர் விரைவிலேயே எழுதி முடிப்பார் என நம்புகிறேன். இந்த நல்ல தமிழ்த் தொண்டில் ஈடுபட்டிருக்கும் ஆசிரியரை நான் வாழ்த்துகிறேன்.

சென்னை,<br>29-9-66

**இர. சதாசிவம்**

# முகவுரை

நீதியுணர்வு நெஞ்சிலே இயல்பால் எழுவதாகும். எனவே, நீதியை வழங்குவது தாய்மொழியில்தான் அமைதல் வேண்டும் என்பதை அறிஞர்கள் அனைவரும் ஆதரிக்கின்றனர். தமிழிலேயே நீதி வழங்கவேண்டு மெனில், சட்ட நூல்கள் பல தமிழில் இயற்றப்பெறவேண்டும்; சட்டத் தமிழ் இலக்கியம் வளர்ந்து பெருகவேண்டும். இந்த முயற்சியில் எழுந்ததே இந் நூல்.

வளருந் தமிழ்மொழி வளம் பெறவேண்டும் என்பதில் ஆர்வம் மிகக் கொண்டவர் தமிழக முதலமைச்சர் பெருந் தகை, கனம் மீ. பக்தவத்சலம் அவர்கள். தமிழ் வெளி யீட்டுக் கழகத்திற்கென்று, 'குற்ற இயல் சட்டம்', 'சான்றியல் சட்டம்' இரண்டையும் தமிழில் எழுதுமாறு அவர்கள் என்னைப் பணித்தார்கள். அதை ஒரு புனிதப் பணியாகப் போற்றி அதில் முனைந்தேன். இந்த நன் முயற்சியில் என்னை ஈடுபடுத்தி ஊக்குவித்த அன்னாருக்கு என் நன்றியும் வணக்கமும் என்றும் உரியன.

இப் புதிய முயற்சியில் எனக்கு வழிகாட்டுபவர் சென்னை உயர் நீதிமன்றத் தலைமை நீதிபதி கனம் மா. அனந்தநாராயணன் அவர்கள். ஆங்கிலச் சட்டச் சொற்களுக்கேற்ற தமிழ்ச்சொற்களை உருவாக்குவதில் அவர் களே எனக்கு உற்ற ஆசிரியராவார்கள். பேச்சு வழக்கில் 'இலஞ்சம்' என்று கூறுவதைச் சட்டத்தில் 'Illegal Gratification' என்கிறோம். 'Gratification' என்பதற்கு ஏற்ற தமிழ்ச் சொல்லைத் தேடிக்கொண்டிருந்தேன். தலைமை நீதிபதியவர்களைக் கண்டபொழுது இதைக் கூறி னேன். நான் கூறி முடித்த அடுத்த விநாடியே, "'Gratifi-cation' என்பதை 'அவா நிறைவு' எனலாம்; 'Illegal gratification' என்பதைச் 'சட்ட முரணான அவாநிறைவு' என்று தமிழாக்கலாம்" என்று அவர்கள் சொன்னார்கள். இவ்வாறு அவர்கள் போதித்த சொற்கள் பலவுண்டு. சட்டத் தமிழ் இலக்கியத்திற்கு அடிப்படையான 'சட்டச் சொல்லகராதியை' உருவாக்குவதில் முனைந்துள்ள ஆட்சி மொழிச் சட்டக் குழுவின் தலைவராகவும் அவர்கள் அரும்

பணியாற்றிவருகிறார்கள். அவர்களது புலமை மிக்க தலைமையிலே சட்டத் தமிழ் இலக்கியம் வளர்ந்து வளம் பெறும் என்பதில் ஐயமில்லை. இந் நூலிற்கு அரியதோர் அணிந்துரையை அன்புடன் அளித்த உயர் நீதிமன்ற நீதிபதி கனம் இரா. சதாசிவம் அவர்கள், 'குற்ற இயல் சட்டத்தில்', 'Master of Laws' என்ற பட்டத்தோடு பரிசும் பெற்றவர்கள். இந் நூலில் உள்ள 'கொலைக் குற்றம்' முதலிய அத்தியாயங்களை அச்சேற்றுவதற்குமுன் அவர்களிடம் காட்டினேன். பொறுமையுடன் அவற்றைப் படித்துச் சில திருத்தங்களும் செய்து உதவினார்கள். தமிழிலே சட்ட இலக்கியம் வளரவேண்டும் என்பதில் அவர்களுக்குள்ள ஆர்வம் அளவற்றது. முதன்முதலாக நான் எழுதிய 'சட்ட இயல்' (Jurisprudence) என்ற நூலைப் பாராட்டி ஊக்கமளித்தவர்கள் உயர் நீதிமன்ற முன்னாள் நீதிபதி திரு. சு. கணபதியா பிள்ளை அவர்கள். தமிழார்வமிக்க இந் நீதிபதிகளுக்கு என் நன்றியும் வணக்கமும் உரியன.

புது முயற்சியான இந் நூலிலே குறைபாடுகளைக் கண்டால், அதற்குக் காரணம் எழுதியவனின் இயலாமை என்றே கொள்ளவேண்டும்; அன்றி, 'சொல்லுந் திறமை தமிழ்மொழிக்கில்லை' என்று கொள்ளுதல் தகாது. இதுவே, இந் நூலைப் படிப்போரிடம் நான் விழையும் கைம்மாறு.

வளருந் தமிழ் வளம்பெற்றோங்குக!

சென்னை,
30-9-1966

மா. சண்முகசுப்பிரமணியம்

# பொருளடக்கம்

முதற் பாகம் — பக்கம்

இரண்டாம் பாகம்

# குற்ற இயல் சட்டம்

(முதல் பாகம்)

## 1. நீதிமுறை

## (Administration of Justice)

முறைசெய்தலின் சிறப்பு—நீதிமுறை நிர்வாகம்—உரிமை இயல் நீதிமுறை, குற்ற இயல் நீதிமுறை—உரிமை வழக்கு, குற்ற வழக்கு.

**முறைசெய்தலின் சிறப்பு**

'அறத்தான் வருவதே இன்பம்' என்பது பொய்யாமொழி. அறத்தின்வழி மக்கள் நின்ருல்தான் அவர்கள் வாழ்வில் இன்பம் நிலைபெற முடியும். இன்பத்திற்கு அடிப்படையாக அறநெறியே அமைகின்றது.

அறமல்லாத செயல்களால் விளைவது துன்பம். அழுக்காறு, அவா, வெகுளி முதலிய தீய குணங்களினல் உந்தப்பட்டு, சிலர் அற நெறியிலிருந்து விலகி நடக்கின்றனர். தம் இன்பத்தைப் பெருக்கும் நோக்கத்துடன் பிறர் இன்பத்திற்கு அவர்கள் கேடுசெய்கின்றனர். இதனல் மக்கள் வாழ்வில் துன்பம் விளைகின்றது.

சமுதாய வாழ்வில் ஒழுங்கையும் அமைதியையும் நிலைநிறுத்தி, குடிமக்களின் இன்பத்தைப் பாதுகாப்பது அரசின் தலையாய கடனகும். அறத்தின் அடிப்படையிலேயே இன்பம் அமைவதால், மக்கள் அனைவரும் அறநெறியில் நின்று ஒழுகுமாறு அரசு செய் கின்றது. 'அறனிழுக்காது அல்லவை நீக்கி' ஆட்சியை நடத்து கின்றது அரசு.

இவ்வாறு, அறநெறியில் மக்களை நிறுத்தி அவர்கள் இன்பத்தைப் பேணும் முறையை 'முறை செய்தல்' (Administration of Justice) என்று நம் பண்டைய நூல்கள் கூறுகின்றன.

## நீதிமுறை நிர்வாகம்

முறைசெய்யும் தனிச் சிறப்பு அரசுக்கே உரியதாகும்; அது 'இறை மாட்சி'யாகும். முறைசெய்யும் அரசு இல்லையெனில், மக்கள் வாழ்வில் இன்பம் இல்லை. எனவே, 'முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு இறை' என்று போற்றப்பெற்ருன். கோனுட்சி மறைந்து குடியாட்சி நிலவும் இன்றும், அரசின் கடமைகளுள் 'முறைசெய்யும்' கடன் முதலிடம் பெறுகின்றது.

மக்களுள், ஒருவருக்கு மற்ரெருவரால் விளைந்த துன்பத்தைப் போக்குவதற்கென 'அறங் கூறும் அவையங்கள்' அந் நாளில் இருந்தன. இந் நாளில் அவை 'நீதிமன்றங்கள்' என்ற பெயரால் இயங்குகின்றன. நீதிமன்றங்கள் வாயிலாகவே மக்களுக்குள் ஏற்படும் வழக்குகளை அரசு தீர்த்துவைக்கின்றது.

நீதிமன்ற நடுவர்கள் 'அறநெறி பிழையா அன்புடை நெஞ்சொடு' (மதுரைக்காஞ்சி-472) தொழில் புரிகின்றனர். தம்முன் கொண்டு வரப்பட்ட வழக்குகளின் தன்மையை நன்கு ஆராய்ந்து பார்க்கின்றனர். வழக்கில் சம்பந்தப்பட்டவர்களிடம் அவர்கள் கண்ணேட்டம் காட்டுவதில்லை. துலாக்கோலையொத்த நடுநிலைமையிலிருந்து அவர்கள் சிறிதும் விலகுவதில்லை. வழக்கிலுள்ள சூழ்நிலைகளுக்குத் தக்கவாறு தீர்ப்புகளைத் தேர்ந்து கூறுகின்றனர். வழக்கின் கூறுகளை ஓர்தல், கண்ணேட்டங் காட்டாமை, நடுநிலை பிறழாமை, தீர்ப்புகளைத் தேர்ந்து கூறுதல் இந் நான்கும் நீதிமுறைக்குரிய தனிச் சிறப்புகள். முறைசெய்தலுக்கு இலக்கணம் கூறும் வள்ளுவர் இந் நான்கு கூறுகளையும் வற்புறுத்துகின்ருர்:

> 'ஓர்ந்துகண் ணேடாது இறைபுரிந்து யார்மாட்டும்
> தேர்ந்துசெய் வஃதே முறை.' (குறள், 541)

நாகரிகம் அடைந்து நல்லாட்சி நிலவும் நாடுகளில் எல்லாம் இந்த முறையிலேயே நீதி வழங்கப்படுகின்றது.

இவ்வாறு, அரசு நீதி வழங்குவதை, 'நீதிமுறை நிர்வாகம்' (Administration of Justice) என்று கூறுகின்ருேம்.

## உரிமை இயல் நீதிமுறை, குற்ற இயல் நீதிமுறை

நீதிமுறை இருவகைப்படும். ஒன்று, உரிமை இயல் நீதிமுறை (Administration of Civil Justice); மற்ரென்று, குற்ற இயல் நீதிமுறை (Administration of Criminal Justice).

மக்களின் இன்ப வாழ்விற்குச் சாதனங்களாக இருப்பவைகளை 'வாழ்க்கை நலன்கள்' அல்லது 'நன்மைகள்' என்கிருேம். எனக்குச் சொந்தமான சொத்தை அனுபவித்தல் எனது நலன்.

உடல் நலன், இன்ப வாழ்விற்கு இன்றியமையாதது. புகழுடன் வாழ்தல் ஒருவருக்குரிய நலன். இவ்வாறு, உடல், பொருள், புகழ் இவை குறித்த நலன்களே ஒருவருடைய நல்வாழ்விற்குச் சாதனங்களாக அமைகின்றன. இந்த நலன்களைச் (interests) சட்டம் பாதுகாக்கின்றது. சட்டத்தால் பாதுகாக்கப்படும் இந் நலன்களை 'உரிமைகள்' (rights) என்று கூறுகிறோம்.

நம் உரிமைகளுக்குப் பிறர் கேடு விளைவித்தால், நாம் நீதிமன்றத்தில் வழக்கிடுகின்றோம். நம் உரிமைக்கு ஊறு விளைவிக்க இருப்பவர்களை நீதிமன்றம் தடை செய்கின்றது; அல்லது ஊறு விளைவித்தவர்களை அதற்கான நட்ட ஈடு கொடுக்கும்படி உத்தரவிடுகின்றது.

ஒருவரின் நிலத்தை மற்றொருவர் ஆக்கிரமித்துக்கொள்கின்றார். இதனால் நிலச்சொந்தக்காரரின் உரிமை பாதிக்கப்படுகின்றது. நிலத்திற்கு உடையவர் நீதிமன்றத்தில் வழக்கிட்டு ஆக்கிரமித்தவரை நிலத்திலிருந்து அகற்றுகின்றார்; ஆக்கிரமிப்பால் தமக்கு விளைந்த நட்டத்தையும் ஆக்கிரமித்தவரிடமிருந்து பெறுகின்றார். இவ்வாறு, அவருக்கு நிலத்தின்மீதுள்ள உரிமை பாதுகாக்கப்படுகிறது. நான் கொடுத்த கடனைத் திரும்பப் பெறுதல் என் உரிமை. என்னிடம் கடன் வாங்கியவர் அதை உரிய காலத்தில் திரும்பச் செலுத்தத் தவறினால், அவர்மீது நான் வழக்கிட்டு, கடனை வரப்பற்றுகிறேன். இவ்வாறு கடனைத் திரும்பப் பெறும் உரிமையை நீதிமன்றம் பாதுகாக்கின்றது. எனது புகழுக்கு மாசு ஏற்படும்படி ஒருவர் அவதூறு இழைக்கின்றார். அவர்மீது வழக்கிட்டு எனது புகழுக்கு ஊறு விளைந்ததற்கான நட்ட ஈட்டைப் பெறுகின்றேன்.

இவ்வாறு, மக்களின் உரிமைகளைப் பாதுகாக்கும் நோக்குடன் நீதி வழங்கும் முறையை 'உரிமை இயல் நீதிமுறை' (Administration of Civil Justice) என்று கூறுகிறோம். அவைகுறித்த வழக்குகள் 'உரிமை வழக்குகள்' (Civil Cases) எனப்படுவன. இவைகளுக்கான நீதிமன்றங்களை 'உரிமை இயல் நீதிமன்றங்கள்' (Civil Courts) என்கின்றோம்.

பகையின் காரணமாக ஒருவரை மற்றொருவர் அடித்துக் காயப்படுத்திவிடுகின்றார். காயப்படுத்தியவரை நீதிமன்றம் தண்டிக்கின்றது. பிறர் பொருளைத் திருடியவன் தண்டனை பெறுகின்றான். உடலுக்கு ஊறு விளைத்தல், திருடுதல் போன்ற செயல்களைக் குற்றங்கள் எனக் கொண்டு, அக் குற்றங்கள் புரிந்தவர்களுக்குத் தண்டனையளிக்கப்படுகிறது. இவ்வாறு, குற்றம் செய்தவர்களை ஒறுத்து, நீதி வழங்கும் முறை 'குற்ற இயல் நீதிமுறை' (Administration of Criminal Justice) எனப்பெறும். குற்றவாளிகள்பேரில் தொடரப்பெறும் வழக்குகளைக் 'குற்ற வழக்குகள்' (Criminal Cases)

என்றும், அவ்வழக்குகளை விசாரிக்கும் நீதிமன்றங்களைக் 'குற்ற இயல் நீதிமன்றங்கள்' (Criminal Courts) என்றும் கூறுகிறோம்.

இவ்வாறு, உரிமைகளைப்பற்றிய வழக்குகள் தீர்க்கப்படும் முறையை 'உரிமை இயல் நீதிமுறை' (Civil Justice) என்றும், குற்றம்பற்றிய வழக்குகளில் நியாயம் வழங்கும் முறையை 'குற்ற இயல் நீதிமுறை' (Criminal Justice) என்றும் பிரித்துக் கூறுவார்கள்.

உரிமை வழக்கு, குற்ற வழக்கு என்ற வேறுபாடு நம் நாட்டில் பண்டை நாளிலேயே நடைமுறையில் ஓரளவு இருந்துவந்தது என்பதை நம் பழைய நூல்களிலே காண்கிறோம்.

திருக்குறளுக்கு உரை எழுதி உயர்வுபெற்ற புலவர் பரிமேலழகர் தமது உரைப் பாயிரத்தில் உரிமை வழக்கு முறையை 'வழக்கு' என்றும், குற்ற வழக்கு முறையைத் 'தண்டம்' என்றும் குறிப்பிடுகின்றார்.

'வழக்காவது, ஒரு பொருளைத் தனித்தனியே எனதுஎனது என்றிருப்பார், அது காரணமாகத் தம்முள் மாறுபட்டு அப் பொருள் மேற் செல்வது. அது கடன்கோடல் முதற் பதினெட்டுப் பதத்ததாம்.

'தண்டமாவது, அவ்வொழுக்க நெறியினும் வழக்கு நெறியினும் வழீஇயினாரை அந் நெறி நிறுத்தற்பொருட்டு, ஒப்பநாடி அதற்குத்தக ஒறுத்தல்' என்று பரிமேலழகர் நீதிமுறையின் இருவகைகளையும் விளக்கியிருக்கிறார்.

# 2. சட்டத்தின் ஆட்சி

## (Rule of Law)

சட்டத்தின் அடிப்படையில் நீதி வழங்கப்படுதல்—சட்ட முறையான நீதி—சட்டத்தின் மேலாட்சி—'சட்டம் தன்வழிச் செல்கை கடன்,' என்ற கொள்கை விளக்கம்—சட்டத்தின் ஆட்சி.

அந் நாளில் அறநூல்களும் தொன்றுதொட்ட நெறிகளும் முறைசெய்வதற்கு உதவியாக அமைந்தன. தரும சாத்திரங்களின் அடிப்படையில் நீதி வழங்கப்பட்டுவந்தது.

'அரசன் விழிப்பு மிக்க மனத்தையுடையனாய், அறநூல்களைத் தழுவி, அறநூல் முறையை மேற்கொண்டு, அவ் வழியே வழக்குகளை ஆராய்ந்து முறைசெயல்வேண்டும்' என்று சுக்கிர நீதி கூறுகின்றது.

இந் நாளில் நீதி வழங்குவதற்குக் கருவியாகச் சட்டம் (Law) அமைகின்றது.

ஒரு வழக்கில் தீர்ப்புச் சொல்லுவதற்குமுன், அந்த வழக்கில் எழும் பிரச்சினைகள்குறித்துச் சட்டம் என்ன கூறுகின்றது என்பதை நீதிமன்ற நடுவர்கள் ஆய்கின்றனர். ஒப்பந்தத்தை மீறியதால் தமக்கு நட்டம் விளைந்தது என்று கூறி ஒருவர் மற்றொருவர்மீது வழக்கிடுகின்றார். இந்த வழக்கைத் தீர்ப்பதற்கு இன்றியமையாத துணையாக இருப்பது 'இந்திய ஒப்பந்தச் சட்டம்' (Indian Contract Act) என்பதாகும். இச் சட்டத்திலுள்ள விதிகளின்படியே வழக்கில் தீர்ப்பளிக்கப்படுகின்றது. பிறர் உடலைத் தாக்கிக் கொடுங்காயம் விளைவித்தவர்களுக்கும், கொலை, கொள்ளை போன்ற கொடுங் குற்றங்கள் செய்தவர்களுக்கும் இந்தியக் குற்றவியல் சட்டப்படி (Indian Penal Code) தண்டனை அளிக்கப்படுகிறது. இவ்வாறு, அந்தந்த வழக்குகள் சம்பந்தப்பட்ட சட்டங்களில் காணப்படும் விதிகளின்படியே வழக்குகள் தீர்க்கப்படுகின்றன.

வாழ்வில் பலதிறப்பட்ட வழக்குகள் எழுகின்றன. எல்லா வழக்கு களுக்கும் ஏற்ற முறையில் விதிகளைக் கூறும் சட்டங்கள் இருப்பதற் கில்லை. இயற்றப்பட்ட சட்டங்களில் (Legislative Enactments) ஒரு குறிப்பிட்ட வழக்கில் உள்ள சிக்கல்களைத் தீர்ப்பதற்கு வழி காணப்படவில்லையெனில், நீதிமன்ற நடுவர் தம் நியாய உணர்வை யொட்டி ஒரு கொள்கையை வகுத்து, அக் கொள்கையின் அடிப் படையில் வழக்கைத் தீர்க்கின்றார். இவ்வாறு நீதிபதிகளால் வகுக்கப் பட்டு, தீர்ப்புகளில் பயன்படுத்தப்படும் கொள்கைகள், அவை களுக்குப்பின் வரும் வழக்குகளில் தீர்வு காண்பதற்கு வழிகாட்டிக ளாக அமைகின்றன. இவ்விதத் தீர்ப்புக் கொள்கைகளை 'முன் தீர்ப்பு முறைமைகள்' (Judicial Precedents) என்று கூறுவார்கள். தொன்றுதொட்டு மக்களிடை நிலவிவரும் வழக்க நெறியை (Custom) ஒட்டியும் நியாயம் வழங்கப்படுகின்றது. இயற்றப்பட்ட சட்டங்கள், முன்தீர்ப்பு முறைமைகள், வழக்க நெறி இவையனைத் துமே நீதி வழங்குவதற்குக் கருவிகளாக அமைகின்றன. எனவே, சட்டம் (Law) என்ற சொல்லில் இவையனைத்தும் அடங்கும்.

நீதி வழங்குவதற்கு எந்தெந்த விதிகளை நீதிமன்றங்கள் ஏற்றுக் கையாளுகின்றனவோ அவையனைத்தையும் 'சட்டம்' என்ற சொல் குறிக்கின்றது. இவ்வாறு, சட்டத்தின் அடிப்படையிலேயே நீதிபதிகள் வழக்குகளைத் தீர்த்து நியாயம் வழங்குகின்றனர். இதைச் 'சட்ட முறையான நீதி' (Justice according to Law) என்று கூறுகின்றோம்.

ஆதிகால நீதிமுறையில் தருமத்தின்முன் அனைவரும் சமமாகக் கருதப்பட்டனர். ஆளும் அரசனும் ஆளப்படும் மக்களும் தருமத் திற்கு அடங்கியே நடந்தனர். இதை 'அறத்தின் ஆட்சி' என் பார்கள். இன்று, அரசால் இயற்றப்படும் சட்டங்களுக்கு அடங்கி மக்கள் நடக்கின்றனர். அரசின் அதிகாரங்களையும் அறுதியிட்டுக் கூறும் 'அரசியல் அமைப்புச் சட்டம்' (Constitution) இருக் கின்றது. அரசியலமைப்புச் சட்ட விதிகளுக்கு உட்பட்டே அரசு இயங்க வேண்டும். இவ்வாறு, மக்களையும் அரசையும் கட்டுப் படுத்தி இயங்குகிறது சட்டம். சட்டத்தின் மேலாட்சிக்கு (Supremacy of Law) உட்பட்டு அரசும் மக்களும் இயங்கி நல்லாட்சி நடைபெறும் முறை 'சட்டத்தின் ஆட்சி' (Rule of Law) எனப் படும்.

சட்ட ஆட்சியின் அடிப்படைக் கொள்கை 'சட்டத்தின்முன் அனைவரும் சமம்' என்பதாகும். இதை ஆங்கிலத்தில் 'Equality before Law' என்பார்கள். நம் அரசமைப்புச் சட்டத்தின் 14ஆம் பிரிவு இதை ஓர் அடிப்படை உரிமையாகக் (Fundamental right)

கூறுகின்றது. நீதிமன்றத்திற்கு வந்தவர்களின் தகுதியைக் கவனி யாது, வலியார் மெலியார் என்ற வேற்றுமை காட்டாது, ஒருபாற் கோடாது, சட்டப்படி நீதி வழங்கப்படுகின்றது. குற்றம் இழைத்த வர்கள் யாராக இருந்தாலும், அக் குற்றத்திற்குச் சட்டம் விதிக்கும் தண்டனையை அடைந்தேயாகவேண்டும். எவரும் தம் செல் வத்தையோ செல்வாக்கையோ பயன்படுத்தி, சட்ட விதிகளி லிருந்து தப்புவதற்கு முடியாது. சட்டம் வகுக்கும் வழியில் செல்லும் நீதியை எவரும் மாற்ற இயலாது. சட்டம் தனக்கு உரிய வழியி லேயே செல்லுகின்றது. அப்பொழுதுதான் அனைவருக்கும் பொது வான, பாரபட்சம் இல்லாத, வேற்றுமை காட்டாத நீதிமுறையை நிலைநிறுத்துவது இயலும். 'சட்டம் தன்வழிச் செல்லுகிறது' என்பதை ஆங்கிலத்தில் 'Law takes its own course' என்று கூறுவார்கள். 'சட்டம் தன்வழிச் செல்லவேண்டும்' என்ற விதி நீதிமுறையின், நல்லாட்சி முறையின் அடிப்படை விதியாகும்.

'சட்டம் தன்வழிச் செல்லவேண்டும்' என்ற நீதிக்கொள்கை நம் நாட்டு அரசியல் முறையில் நீண்ட நாட்களாகப் போற்றப்பட்டு வந்திருக்கிறது. 'தருமம் தன்வழிச் செல்கை கடன்' என்றும், இதுவே 'அறநெறியின் செவ்விய உண்மைத் திறம்' என்றும் சேக்கிழார் பாடுகின்றார்.

கன்றை இழந்து அலறி நின்ற பசுவின் துயரத்தைத் துடைக்க இயலாத நிலையில், 'பசுவின் துயரத்தை நானும் படுகிறேன்; அப் பசுவைப்போல் என் மகனை இழந்து நானும் நிற்பேன்' என்று கூறிய மனுநீதிச் சோழன் தன் ஒரே மகன்மீது தேரைச் செலுத்தி அவனை மடியச் செய்தான். இதைக் கூறும் சேக்கிழாரின் பாடலில் இன்றைய நீதிமுறையின் அடிப்படை விதி அமைந்திருப்பதைக் காண்கின்றோம்:

> 'ஒருமைந்தன் தன்குலத்துக் குள்ளான்என் பதும்உணரான்
> *தருமம்தன் வழிச்செல்கை கடனென்று தன்மைந்தன்
> மருமம்தன் தேராழி உறவூர்ந்தான் மனுவேந்தன்
> அருமந்த அரசாட்சி அரிதோமற் றெளிதோதான்!'

* 'தருமம், தன்வழிச் செல்கை கடன்' என்றும், 'தருமந்தன் வழிச் செல்கை கடன்' என்றும் இரு பொருள்பட இவ்வடி நிற்பதைக் கவனித்தல் வேண்டும். இவ் விரு பொருள்களும் முறையே 'Law takes its own course' என்றும், 'Rule of Law' என்றும் பொருள்பட நிற்றல் காண்க.

அரசியலில் ஈடுபட்டிருந்த அமைச்சரடிகள் சேக்கிழார் 'தருமம் தன் வழிச்செல்கை கடன்' என்று கூறியதிலிருந்து, அந் நாளிலேயே நம் நாட்டில் இருந்துவந்த நீதிமுறையின் செப்பத்தை நாம் அறிகின்றோம்.

சட்டம்தன் வழிச்செல்லுதலும், அரசும் மக்களும் சட்டத்தின் வழி நடத்தலும் உள்ள ஆட்சி முறையே 'சட்டத்தின் ஆட்சி' (Rule of Law) என்று கூறப்படுகிறது. நாகரிகம் அடைந்த நாடுகளில் எல்லாம் சட்டத்தின் ஆட்சியே நடைபெறுகின்றது.

# 3 சட்டமும் அறமும்

## (Law and Ethics)

'அறத்திற்கும்' 'சட்டத்திற்கும்' உள்ள தொடர்பு—மக்கள் இன்பத்தை நோக்கியே இரண்டும் இயங்குவன—ஆனால், செயல்முறையில் வேறுபடுவன—செயலைத் திருத்துகிறது சட்டம், சிந்தனையை உயர்த்துகிறது அறம்—கட்டாயப்படுத்துவது சட்டம், காரணங்காட்டுவது அறம்—அச்சுறுத்துவது சட்டம், அறிவுறுத்துவது அறம்—இயற்றப்படுவது சட்டம், இயல்பாய் அமைவது அறம்—மாறும் தன்மையுடையவை சட்ட விதிகள், மாறாத் தன்மை கொண்டவை அறநெறிகள்.

உலகில் இன்ப வாழ்விற்கு அறநெறியே அடிப்படை என்றும், அறத்தை நிலைநாட்டுவதே 'முறைசெய்தல்' என்றும், முறை செய்வதற்கு முன்னின்று உதவுவது 'சட்டம்' என்றும் கண்டோம்.

அறநெறியை நிலைநிறுத்துவது 'முறைசெய்தல்', முறை செய்தலுக்குக் கருவியாக அமைவது 'சட்டம்' என்றால், அறமும் சட்டமும் ஒன்றுதானா என்ற கேள்வி எழுகின்றது.

**அறத்திற்கும் சட்டத்திற்கும் உள்ள உறவு என்ன ?**

மக்களின் இன்ப வாழ்வையே குறிக்கோளாகக் கொண்டு அறமும் சட்டமும் செயற்படுகின்றன. எனவே, இரண்டிற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. கற்பு காக்கப்படவேண்டும் என்று அறம் கூறுகின்றது; கற்பு அழிக்கப்படுவது குற்றம் எனக் கொள்கிறது சட்டம். வஞ்சனையும் வன்முறையும் அறத்திற்கும் சட்டத்திற்கும் மாறுபட்ட செயல்கள். இவ்வாறு அறமும் சட்டமும் ஓரளவு ஒன்றியிருக்கின்றன. பெரும்பாலான சட்ட விதிகள் அறக்கொள்கைகளின் அடிப்படையில் எழுந்தவையே.

ஆயினும், அறவிதிகள் அனைத்தும் சட்ட விதிகள் ஆகிவிடுவதில்லை. ஈதலும் இரக்கமும், ஒழுக்கமும் ஒப்புரவும் அறக்கொள்கைகள்; ஆனால், அவை சட்ட விதிகளல்ல. இதுபோன்றே அறத்

தோடு தொடர்பில்லாத சட்ட விதிகளும் பலவுண்டு. வரிகளைப் பற்றிய பல சட்டங்களும், சாலைப் போக்குவரத்து விதிகளைக் கூறும் சட்டங்களும் அறநெறியோடு சம்பந்தம் இல்லாதவை.

சமுதாய நலன், தனி மனிதனின் ஏற்றம் இந்த இரண்டிற்கும் வேண்டிய விதிகளை அறநூல்களிற் காணுகிறோம். அன்புடைமை, அருளுடைமை, அவா அறுத்தல் போன்ற அறநெறிகள் தனி மனிதனின் உயர்வுக்கு உற்றவை. இன்னா செய்யாமை, பிறனில் விழையாமைபோன்றவை சமூக வாழ்விற்கு இன்றியமையாத அற நெறிகள். சமூக நலனையே நோக்கமாகக்கொண்டு 'சட்டம்' இயங்குவதால், அறவிதிகள் பலவற்றையும் சமுதாயக் கண்கொண்டு ஆய்ந்து, சமுதாயப் பொது வாழ்விற்கு அவசியமான அறநெறிகளை அரசு சட்டமாக அமல் நடத்துகின்றது. எனவே, அன்புடைமையும் அருளுடைமையும் சட்ட விதிகள் ஆவதில்லை; பிறனில் விழையாமை சமூக நலனுக்கு அவசியமாவதால், அது சட்ட விதியாகவும் இருக்கிறது.

"'அயலான்மீது அன்பு காட்டு' என்ற அறவிதியே 'பிறருக்குத் தீங்கிழைக்காதே' என்ற சட்ட விதியாக மாறுகின்றது" என்று ஆட்கின் (Lord Atkin) என்ற நீதிபதி கூறுகின்றார். [Donoghue *v.* Stevenson (1932) A.C. 562].

'அன்புடையவனாக இரு' என்று சட்டம் எவரையும் கட்டாயப் படுத்துவதில்லை. ஏனெனில், அன்புணர்வு உள்ளத்தைப் பொறுத்தது. 'பிறருக்குத் தீங்கிழைக்காதே' என்று சட்டம் ஆணை யிடுகின்றது. காரணம், தீங்கிழைத்தல் புறச்செயலைப் பொறுத்தது.

சமுதாயத்தைப் பாதிப்பது மனிதனுடைய செயல்கள்தாம். எனவே, அவன் செயல்களைச் சீர்மையாக்க முயலுகிறது சட்டம். செயல்களுக்கு ஆதாரமானது மனித உள்ளம். அந்த உள்ளத்தை உயர்த்த முற்படுகிறது அறம். 'உள்ளத்தால் உள்ளலும் தீது' என்றும், 'மனத்துக்கண் மாசிலன் ஆதல் வேண்டும்' என்றும் அறம் கூறுகிறது. இவ்வாறு, சட்டம் மக்களின் செயல்களைச் சீர்ப்படுத்துகிறது. அறம் செயல்களுக்கு அடிப்படையான சிந்தனை யைச் செம்மைப்படுத்துகிறது.

அரசு தன் வலிமையால் சட்ட விதிகளுக்கு மக்கள் பணிந்து நடக்குமாறு செய்கின்றது. ஆனால், அறவிதிகளை மக்கள் ஏற்று நடக்கவேண்டும் என்று அரசு கட்டாயப்படுத்துவது இயலாது. 'ஒழுக்கம் விழுப்பம் தரும்', 'நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம்,' 'நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம்' என்று காரணத்தோடு நன்னெறியை அறம் எடுத்துக்கூறுகின்றது; ஆனால், கட்டாயப் படுத்துவதில்லை. இவ்வாறு, நல்வழியில் மனிதனைக் கட்டாயப்

படுத்தி நிற்கச் செய்கிறது சட்டம்; காரணங் காட்டி நிற்கச் செய்கிறது அறம். சட்டம் அச்சுறுத்துகிறது; அறம் அறிவுறுத்துகிறது.

பச்சிளங் குழந்தையை ஆசையுடன் அள்ளி அணைக்கிருள் ஏழு வயதுகூட நிரம்பாத சிறுமி; தன் காலில் மிதிபட்ட எறும்பு ஒன்று துள்ளித் தவிப்பதைக் கண்டு அவள் இரக்கங் கொள்கிருள்; வாசலில் நிற்கும் யாசகனுக்கு ஏதாவது கொடுக்கவேண்டும் என்று ஓடுகின்ருள். இந்த நற்பண்புகள் அவளுக்கு எவ்வாறு வந்தன? அன்பையும் இரக்கத்தையும் யாரும் அந்தக் குழந்தைக்குப் போதிக்கவில்லை. இயற்கையாகவே இந்த அறப்பண்புகள் அதனிடம் அமைந்திருக்கின்றன. அற உணர்வுகள் மக்கள் உள்ளத்தில் இயல்பாய் எழுபவை. அன்பும் அருளும், ஈகையும் இரக்கமும் மனித குலத்தின் இயல்பான அருங் குணங்கள். ஆனல், சட்ட விதிகளை நாம் கற்றுக்கொள்ளவேண்டியிருக்கிறது. சமுதாய நலனுக்கென்று இயற்றப்பட்டவையே சட்ட விதிகளாகின்றன. எனவே, அறவுணர்வுகள் மக்கள் உள்ளத்தில் இயல்பாக எழுபவை; சட்ட விதிகள் மக்களால் இயற்றப்படுபவை.

அறம் அல்லது தருமம் என்பது மனிதனின் தூய மனச்சான்றிலே நன்மை, தீமை என்ற இயல்பான பாகுபாட்டின் பயனுக எழும் உயர் உணர்வாகும். இந்த அறவுணர்வு மக்கள் அனைவருக்கும் பொதுவானது. நாட்டைப் பொறுத்தோ, காலத்திற்குத் தக்கபடியோ அது அதிகமாக மாறுவதில்லை. அத்தகைய அறங்களை 'அடிப்படை அறம்' எனக் கூறுகிறேம். அன்புடைமையும் அருளுடைமையும், வாய்மையும் சான்ருண்மையும் உலக மக்கள் அனைவருக்கும் உறுதி பயப்பன. அடிப்படை அறக்கொள்கைகள் எல்லா நாட்டினருக்கும் எல்லாக் காலத்திற்கும் பொதுவானவை. எனவேதான், சிறந்த அறநூல்கள் காலங் கடந்து நிற்பனவாக, வாழ்வென்னும் கடலிலே வழிகாட்டும் கலங்கரை விளக்கங்களாக ஒளிவீசி நிற்கின்றன.

ஆனல், சட்டவிதிகள் சமுதாயத்தின் தேவைக்கேற்ப, சூழ்நிலைகளுக்குத் தக, காலத்தையொட்டி மாறுகின்றன. சாலையில் இடப்புறமாக வண்டிகள் செல்லவேண்டும் என்று ஒரு நாட்டிலும், வலப்புறமாகப் போகவேண்டும் என்று மற்ருெரு நாட்டிலும் சட்ட விதிகள் இருக்கின்றன. 'வரதட்சிணை' வாங்குவது குற்றம் என்று கூறும் இன்றைய சட்டம் இருபது ஆண்டுகளுக்குமுன் நம் நாட்டில் இல்லை. பெண்களுக்குச் சொத்துரிமை கிடையாது என்று இருந்த சட்டம் இன்று மாறிவிட்டது. இவ்வாறு, நாட்டிற்கு நாடு, காலத்திற்குக் காலம் சட்டங்கள் மாறுபடுகின்றன. சமுதாயத்தின் தேவைகளுக்கேற்பப் புதியபுதிய சட்டங்கள் தோன்றுகின்றன,

எனவே, சட்டம் மாறும் விதிகளைக் கொண்டது; அறம் என்றும் மாருத விதிகளைக் கொண்டிருக்கிறது.

இவ்வாருக, மக்களின் இன்பத்தை நாடியே அறமும் சட்டமும் இயங்கினுலும், அவை வெவ்வேறு வழிகளைப் பின்பற்றுகின்றன. சட்டம் மனிதனைக் கட்டாயப்படுத்தி நல்வழி நிறுத்துகிறது; அறம் காரணம் காட்டி நல்வழிப்படுத்துகிறது. சட்டம் அச்சுறுத்துகிறது; அறம் அறிவுறுத்துகிறது. செயல்களைத் திருத்துகிறது சட்டம்; சிந்தனையை உயர்த்துகிறது அறம். தீமையைத் தடுக்கின்றது சட்டம்; நன்மைகளை வளர்க்கின்றது அறம். இயற்றப்படுவது சட்டம்; இயல்பாய் அமைவது அறம். மாறும் தன்மையுடையவை சட்ட விதிகள்; மாருத் தன்மை கொண்டவை அறநெறிகள்.

இவ்வாறு, அறத்திற்கும் சட்டத்திற்கும் செயல்முறையில் வேறு பாடுகள் இருந்தாலும் நோக்கத்தில் மாறுபாடுகள் இல்லை. மனிதன் மனிதனுக வாழ அறம் உதவுகிறது; சமூகத்தில் உறுப்பினனுக வாழச் சட்டம் உதவுகிறது. அறத்தைக் காத்து நிற்கிறது சட்டம்; சட்டத்திற்கு அடிப்படையாக அமைகிறது அறம்.

இந்த முறையில் சட்டமும் அறமும் ஒன்றியிருக்கின்றன; ஆனுல், ஒன்ருக இல்லை. இணைந்து நிற்கின்றன; ஆயினும், இரண்டாகவே இருக்கின்றன.

# 4. குற்றமும் குற்ற இயல் சட்டமும்
## (Crime and Criminal Law)

'சட்டம்' என்பது என்ன ?—குற்ற இயல் சட்டம்—'குற்றம்' என்றால் என்ன ?—'குற்றம்' என்ற சொல்லில் அடங்கியுள்ள சட்டக் கருத்து—குற்ற வழக்கிற்கும் உரிமை வழக்கிற்கும் உள்ள வேறுபாடு—சமூகத்திற்குத் தீங்கு பயப்பது, அரசால் தடைசெய்யப்படுவது, தண்டனைக்குரியது இம் மூன்று கூறுகளையும் கொண்ட செயலே 'குற்றம்' எனப்படும்.

சமுதாயத்தின் நலத்திற்கென வகுக்கப்பட்ட விதிகளைக் கொண்டது 'சட்டம்'. அவ் விதிகளுக்கு அடங்கி மக்களை நடக்கச் செய்யும் பொறுப்பு அரசிற்கு உண்டு என்றும், அந்த விதிகளின்படியே தான் நீதி வழங்கப்படுகிறது என்றும் கூறப்பட்டது.

"சமுதாய நலனுக்கு அவசியமென்று சமுதாயத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்டு அமல் செய்யப்படும் விதிகளையே 'சட்டம்' என்ற சொல் குறிப்பிடுகின்றது." இவ்வாறு, பேட்டன் (Paton) என்ற சட்ட இயல் (Jurisprudence) வல்லுநர் சட்டத்திற்கு இலக்கணம் கூறுகின்றார்.

சட்டம் பல பிரிவுகளைக்கொண்டது. உரிமை இயல் சட்டங்கள் (Civil Laws), குற்ற இயல் சட்டங்கள் (Criminal Laws), அரசியலமைப்புச் சட்டங்கள் (Constitutional Laws), சர்வதேசச் சட்டங்கள் (International Laws), நடைமுறைச் சட்டங்கள் (Procedural Laws) என்று சட்டங்களைப் பல வகைகளாகப் பிரித்துக் கூறுவதுண்டு.

நாம் இந்த நூலில் காண இருப்பது 'குற்ற இயல் சட்டம்' (Criminal Law) பற்றியேயாகும்.

குற்றமான செயல்கள் எவையெவை என்று வகைப்படுத்தி, குற்றங்களுக்கு உரிய தண்டனையையும், குற்றம் புரிந்தவர்கள் விசாரிக்கப்படும் முறைகளையும் கூறும் சட்டத்தைக் 'குற்ற இயல் சட்டம்' (Criminal Law) என்று அழைக்கிறோம்.

'குற்றம்' என்றால் என்ன என்றும், 'குற்ற இயல் சட்டம்' செயற்படும் விதம் என்ன என்றும் இனிக் காணலாம்.

**'குற்றம்' என்றால் என்ன ?**

'பிழை', 'தவறு', 'குறை', 'பழி', 'பாவம்', 'குற்றம்' என்ற சொற்களை நாம் ஒரே பொருளைக் குறிக்கும் வகையில் சாதாரண மாகப் பயன்படுத்துகிறோம். செருக்கும், சினமும், சிறுமையும் குற்றங்கள் என்று அறநூல் கூறுகிறது. ஆனால், 'குற்றம்' (Crime) என்ற சொல் சட்டத்தில் தனிப் பொருள் உடையது.

ஒருவரைக் 'குற்றவாளி' என்று எப்பொழுது கூறுகிறோம்? சட்டப்படி தண்டனைக்குரிய செயலைச் செய்தவர் குற்றவாளியாகிறார். திருடியவர் குற்றவாளி; கொலை செய்தவர் குற்றவாளி. திருடிய வரையும் கொலைசெய்தவரையும் சட்டம் தண்டிக்கின்றது. எனவே, திருட்டும் கொலையும் குற்றச் செயல்களாகின்றன. சட்டப்படி தண்டனைக்குரிய செயல்களே 'குற்றங்கள்' ஆகின்றன.

குற்றமான செயல் பழிச்செயலாகவோ, பாவச் செய லாகவோ இருக்கலாம். ஆனால், 'பழி', 'பாவம்', 'குற்றம்' என்ற சொற்கள் வெவ்வேறு பொருள்களைக் கொண்டவை. அறத்திற்கு மாறான செயலைப் பழிச்செயல் என்கிறோம். பெற்றோரைப் பேணு தல் அறம்; பெரியாரைப் பிழையாமை அறம். பெற்றோரைப் பேணாதிருப்பது பழிச்செயல். சமயத்திற்கு மாறான செயல்களைப் பாவங்கள் என்று கூறுகிறோம். இஸ்லாமிய மதக் கொள்கைப்படி வட்டி வாங்குவது கூடாது. எனவே, வட்டிப் பணம் வாங்குவதை முகமதியர் பாவச்செயலாகக் கருதுகின்றனர். சட்டத்திற்கு மாறான செயல் 'குற்றம்' எனப்படுகிறது. திருடுவதும் வஞ்சித்து ஏமாற்று வதும் சட்டம் விலக்கும் செயல்கள். இவைகள் குற்றங்களாகின்றன. எனவே, அறநெறிக்கு மாறான செயலைப் 'பழி' என்றும், சமயக் கொள்கைகளுக்கு மாறான செயலைப் 'பாவம்' என்றும், சட்ட விதிகளுக்கு மாறான செயலைக் 'குற்றம்' என்றும் கூறுதல் பொருந்தும்.

சட்டத்திற்கு மாறான செயல்கள் எல்லாம் 'குற்றங்கள்' ஆகின் றனவா? ஆவதில்லை.

வாங்கிய கடனைத் திரும்பக்கொடுக்கவேண்டுமென்பது சட்டம். குறித்த தவணைப்படி கடனைச் செலுத்தாதவர்மீது வழக்கிடப் படுகிறது. அவரிடமிருந்து வரவேண்டிய தொகையை வரப்பற்று வதற்கு நீதிமன்றம் உதவுகிறது. ஆனால், கடனைச் செலுத்தத் தவறியவரைச் சட்டம் தண்டிப்பதில்லை. பகையினால் ஒருவர்

கையை மற்றவர் வெட்டிவிட்டார் என்றால், அவ்வாறு வெட்டியவர் தண்டிக்கப்படுகின்றார். கடனைச் செலுத்தாதிருந்ததும், கையை வெட்டியதும் சட்டத்திற்கு மாறுபட்ட செயல்கள்தாம். எனினும், கடனைச் செலுத்தத் தவறியவரைச் சட்டம் தண்டிப்பதில்லை; கையை வெட்டியவருக்குத் தண்டனை அளிக்கப்படுகிறது. கடனைச் செலுத்தத் தவறியது குற்றமான செயல் அன்று; ஆனால், கையை வெட்டியது குற்றச் செயல் ஆகிறது. இரண்டு செயல்களும் சட்டத்திற்கு மாறான செயல்களாக இருந்தும், எதனால் ஒன்றுமட்டும் குற்றமான செயல் என்றும், மற்றொன்று குற்றம் ஆவதில்லை என்றும் கருதப்பெறுகிறது?

மக்களின் இன்பத்தைப் பேணவேண்டும்; இதற்கு அடிப்படையான உரிமைகளைப் பாதுகாக்கவேண்டும் என்ற குறிக்கோளைக் கொண்டு சட்டம் இயங்குகின்றது. மக்கள் உரிமைகளைப் பாதிக்கும் செயல்களைச் சட்டத்திற்கு மாறான செயல்களாகக் கொள்ளுகிறோம். மக்களுக்குள்ள உரிமைகள் பலவகைப்படுவன. சில உரிமைகளை மக்கள், நீதிமன்றங்கள்மூலம் நிலைநாட்டுகின்றனர். இதற்குச் சட்டம் உதவுகிறது. சில உரிமைகளுக்குத் தீங்கு விளையாமல் சட்டம் தடைசெய்கிறது.

கொடுத்த கடனைத் திரும்பப் பெறுதல் ஒருவரின் உரிமை. அந்த உரிமையை நிலைநிறுத்தும் வகையில் கொடுக்கவேண்டிய கடனைச் செலுத்தும்படி கடனாளிக்கு நீதிமன்றம் உத்தரவிடுகின்றது. இவ்வாறு உரிமையை நிலைநிறுத்துவதற்கென நீதி வழங்குவது 'உரிமை நிறுத்தல் முறை' (உரிமை இயல் நீதிமுறை—Civil Justice) எனப்படும். உடல்நலத்துடன் வாழ்வது ஒருவருக்குள்ள உரிமை. இந்த உரிமைக்கு எவரும் தீங்கு செய்தல் கூடாது என்று சட்டம் தடை விதிக்கிறது. இந்தத் தடையை மீறி அந்த உரிமைக்கு ஊறு விளைவிப்போரைச் சட்டம் தண்டித்து நீதி வழங்குகிறது. இவ்வாறு தடைசெய்யப்பட்ட செயல்கள் புரிந்தவர்களை ஒறுத்து நீதி வழங்கும் முறையை 'ஒறுத்தல் முறை' (குற்ற இயல் நீதிமுறை—Criminal Justice) என்பார்கள். 'உரிமை நிறுத்தல் முறை'யில் மக்கள் உரிமைகள் பாதுகாக்கப்பட்டு நிலைநிறுத்தப் படுகின்றன. 'ஒறுத்தல் முறை'யில் தடைசெய்யப்பட்ட செயல்களைப் புரிந்தவர் தண்டிக்கப்படுகிறார்.

வரவேண்டிய கடனை வரப்பற்றுவதற்கு இடப்படும் வழக்கு உரிமை நிறுத்தல் முறைப்படி தீர்க்கப்படுகிறது. உடலுக்கு ஊறு விளைவித்தவர்மீது இடப்படும் வழக்கு ஒறுத்தல் முறைப்படி தீர்க்கப்படுகிறது. ஆதலால், உடலுக்குக் காயம் விளைவித்தது குற்றமான செயல் என்று கூறுகிறோம்.

எனவே, சட்டத்திற்கு மாறுன செயல்கள் அனைத்தையுமே குற்றங்களாகச் சட்டம் கொள்வதில்லை. சட்ட மாறுன செயல்களில் சிலவற்றைச் சட்டம் தடைசெய்கிறது. இவ்வாறு, சட்டத்தால் தடைசெய்யப்பட்ட செயல்களே 'குற்றங்கள்' ஆகின்றன.

ஒரு செயலைச் சட்டம் தடைசெய்துவிட்டு, தடையை மீறு வோரை ஏதும் செய்யாமல் இருந்தால், சட்டத்தால் விதிக்கப்பட்ட தடை பொருளற்றதாகிவிடும்; பயனற்றதாகிவிடும். தடையை மீறுவோர் தண்டிக்கப்படுவது அவசியமாகிறது. ஆதலால், தடை செய்யப்பட்ட செயல்களைத் தண்டனைக்குரிய செயலாகவும் சட்டம் ஆக்குகிறது. இவ்வாறு, சட்டத்தால் தடைசெய்யப்பட்ட தண் டனைக்குரிய செயல்களையே ' குற்றங்கள் ' என்கிறோம்.

ஒருவர் சட்டம் விதித்திருக்கும் தடையை மீறிக் குற்றமான செயலொன்றைச் செய்தால், அவரை நீதிமன்றத்தின் முன் நிறுத்தித் தண்டனையைப் பெறச் செய்யவேண்டுமே, அந்தப் பொறுப்பு யாரைச் சேர்ந்தது? குற்றத்தால் தீங்கடைந்தவரே குற்றம் இழைத்தவர்மீது வழக்கிட வேண்டும் என்று கூறிச் சட்டம் வாளா இருப்பதில்லை. அரசாங்கமே வாதியாக இருந்து குற்றம் செய்தவர்மீது வழக்குத் தொடர்ந்து, அவருக்கு நீதிமன்றத்தின் வாயிலாகத் தண்டனையை அளிக்கின்றது. ஒரு பொருளைத் திருட்டில் இழந்தவர் போலீசாரிடம் அதுபற்றிக் கூறிவிட்டால் போதும். போலீசாரே துப்புத் துலக்கித் திருடனைக் கண்டுபிடித்து, அரசாங்கத்தின் சார்பில் அவன்மீது குற்ற நீதிமன்றத்தில் வழக் கிட்டு, அவனுக்குத் தண்டனை கிடைக்கும்படி செய்கின்றுர்கள்.

வாங்கிய கடனைச் செலுத்தாதவர்மீது வழக்கிடும் பொறுப்புக் கடன் கொடுத்தவரைச் சேர்ந்தது. கடன் கொடுத்தவர் தம் விருப் பப்படி வழக்கிடலாம்; அல்லது வழக்கிடாமல் இருக்கலாம். ஆனல், திருடியவன்மீது வழக்கிடும் பொறுப்பு அரசாங்கத்தைச் சேர்ந்தது. அது திருட்டில் பொருளை இழந்தவரின் விருப்பத்தைப் பொறுத்தது அன்று. எனவே, குற்றம் இழைத்தவர்மீது அரசாங்கமே வழக்கிட்டுத் தண்டனை கிடைக்குமாறு செய்கிறது.

' குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் தொழில் ' (குறள், 549)

என்றபடி, குற்றங் கடிதல் அரசின் தொழிலாய், கடமையாய் அன்றும் இருந்தது; இன்றும் இருக்கிறது. குற்ற வழக்கிடும் செயலை, அக் குற்றத்தால் கேடடைந்தவரிடம் அரசு விடுவதில்லை. அரசே முன்னின்று வழக்கை நடத்திக் குற்றம் இழைத்தவர் களுக்குத் தண்டனை கிடைக்கும்படி செய்கின்றது. எனவே, குற்றங் கடிதல் அரசின் தொழிலாக, கடமையாக இருக்கிறது.

உரிமை வழக்கில் வாதிக்கு ஏற்பட்ட நட்டத்தை ஈடுசெய்வதே எதிர்வாதியின் பொறுப்பாகிறது. குற்ற வழக்கில், பொதுவாக, வாதிக்கு நட்ட ஈடு எதுவும் அளிக்கப்படுவதில்லை. குற்றவாளியைத் தண்டிப்பதே குற்ற வழக்கின் குறிக்கோளாகும். வாதியையும் அவர் கோரும் உரிமையையும்பற்றியது உரிமை வழக்கு; எதிர்வாதியையும் அவர்மீது சாட்டப்பட்ட குற்றத்தையும்பற்றியது குற்ற வழக்கு.

இவ்வாறு, உரிமை வழக்கில் பாதிக்கப்பட்ட நபரே வழக்கிட்டுத் தம் உரிமையைப் பாதுகாத்துக்கொள்கிறார். குற்ற வழக்கில் அரசே வழக்கிட்டுக் குற்றவாளியைத் தண்டனைக்கு ஆளாக்குகிறது.

சட்டத்தால் விலக்கப்பட்ட செயல், தண்டனைக்குரிய செயல் —இது 'குற்றம்' எனக் கண்டோம்; குற்றம் புரிந்தவர்மீது அரசாங்கமே வழக்கிட்டு, குற்றவாளிக்குத் தண்டனை கிடைக்குமாறு செய்கிறது என்றும் பார்த்தோம்.

குற்றத்தின் இந்தச் சிறப்பியல்புகளை நாம் கூறினாலும், இது குற்றத்தின் இலக்கணமாக அமையவில்லை. குற்றச் செயல்களின் பொதுவான தன்மையைக் கண்டு, அதன் அடிப்படையில் இலக்கணம் கூறமுடியுமா என்று ஆராய்வோம்.

அறத்திற்கு மாறான செயல்களைக் குற்றங்கள் என்று கூறுதல் பொருந்துமா? பொருந்தாது. ஈதலும் இரக்கமும் அறம். ஆனால், இந்த நற்குணங்கள் இல்லாதவர்களைக் குற்றவாளிகள் என்று கொள்வது சரியன்று. அறத்தொடு தொடர்பு இல்லாத பல செயல்களைச் சட்டம் குற்றங்களாகக் கூறுகிறது. சில பொருள்களைக் கொண்டு வாணிபம் நடத்துவதற்கு அரசாங்கத்தின் அனுமதி வேண்டும் எனச் சட்ட விதி இருக்கலாம். அவ்வாறு அனுமதி பெறாமல் வியாபாரம் நடத்துவோரைச் சட்டம் தண்டிக்கிறது. குறித்த தேதிக்குள் ஒருவரின் வருட வருமானத்தைக் குறிக்கும் பட்டியலை அரசாங்கத்துக்கு அனுப்பவில்லையெனில் அது குற்றம் என வருமான வரிச் சட்டம் (Income Tax Act) கூறுகிறது. அரசாங்க அனுமதியின்றி வாணிபம் நடத்துவதும் வருமானப் பட்டியல் அனுப்பத் தவறியதும் அறநெறிகளுக்கு மாறான செயல்களல்ல; ஆயினும், அவை குற்றங்கள். எனவே, அறத்தொடு இணையாத செயல்கள் எல்லாம் குற்றங்கள் ஆவதில்லை என்பதையும், பலவிதக் குற்றங்கள் அறநெறிக்கு மாறுபட்டவை அல்ல என்பதையும் நாம் நினைவிற் கொள்ளவேண்டும். ஆதலால், அறநெறியின் அடிப்படையில் குற்றத்தை அளவிட்டுக் கூறுதல் முடியாது.

தீங்கான செயல்கள்தாம் குற்றங்கள் என்று கூறுதல் சரியா என்று காண்போம். பெரும்பாலான குற்றச் செயல்களால் பிறருக்குத்

தீங்கு விளைகிறது என்பது உண்மைதான். திருடும் குற்றத்தால் திருட்டில் பொருளை இழந்தவருக்குத் தீங்கு விளைகிறது; கொலைக் குற்றத்தால் மரணமே விளைகின்றது. ஆனால், தீங்கு விளைவிக்காத குற்றங்களும் இருக்கின்றன. சாலைப் போக்குவரத்து விதிகளின்படி, சாலையின் வலப்புறமாக மோட்டார் வண்டியை ஓட்டிச் செல்வது குற்றமாகிறது. வலப்புறமாக ஓட்டிச் செல்லுவதால்மட்டும் எவருக்கும் தீங்கு விளைவதில்லை. எனினும், அது குற்றம் எனச் சட்டம் விதிக்கிறது. ஆதலால், விளையும் தீங்கின் அடிப்படையில் குற்றத்திற்கு இலக்கணம் காணுவதும் பொருந்துவதாக இல்லை.

குற்றம் என்பது பொது அமைதிக்கும் ஒழுங்கிற்கும் (general peace and order) பங்கம் விளைக்கும் செயல் என்று கூறலாமா எனப் பார்ப்போம். வாங்கிய கடனை ஒருவர் திருப்பிக் கொடுக்கவில்லை என்பதால் சமுதாய வாழ்விலுள்ள அமைதிக்கு எந்த விதமான பாதகமும் ஏற்படுவதில்லை. ஆனால், ஒருவர் கையிலுள்ள பணத்தை மற்றொருவர் தட்டிப் பறிக்கின்றார் எனில், அது பொது அமைதியைக் குலைக்கும் செயலாகிறது. ஏனெனில், பணத்தை இழந்தவர் அதை மீட்க முயலுவார். அதனால், வன்முறையில் செயல்கள் நடைபெற்றுப் பொது அமைதி குலைந்துவிடுகிறது. கலகம் விளைவித்தல், கொலை, கொள்ளை போன்ற செயல்கள் பொது அமைதியைக் கெடுக்கும் செயல்கள்தாம் என்பதில் ஐயமில்லை.

நாட்டில் பொது அமைதியும் ஒழுங்கும் நிலவினால்தான் அரசு இயங்கமுடியும். மக்கள் ஒவ்வொருவரும் தங்கள் சொந்த வலிமையைப் பயன்படுத்தி ஒருவரோடு ஒருவர் மோதிக்கொண்டால், நாட்டையாளும் அரசு நாளடைவில் நலிந்துவிடும்; அதற்கு மதிப்பின்றிப் போய்விடும். ஆதலால், பொது அமைதியைக் குலைக்கும் செயல்களை அரசு தடை செய்கிறது. உடற்காயம் விளைத்தலும், வழிப்பறியும், கொள்ளையும், கொலையும், பொது அமைதியையும் ஒழுங்கையும் குலைக்கும் செயல்கள். பண்டைய நாட்களில் இவை போன்ற வன்முறைச் செயல்களே பெரும்பாலான குற்றங்களாக இருந்தன.

பொது அமைதியையும் ஒழுங்கையும் பாதுகாப்பதே அரசின் முக்கியக் கடனாக அன்று இருந்தது. இன்று, அரசின் கடமைகள் பெருகியுள்ளன. கல்வியைப் பரப்புவது, உடல் நோயை ஒழிப்பது, வறுமையை அகற்றுவது, வாணிபத்தைப் பெருக்குவது இவைபோன்ற பல கடமைகளை இன்றைய அரசுகள் மேற்கொண்டிருக்கின்றன. மக்களின் நல்வாழ்விற்கு வேண்டிய பல காரியங்களைச் செய்வது அரசின் கடனாகிறது. மக்கள் நலனுக்கு வழிவகைகளைப் பெருக்கும் நோக்கத்துடன் இயங்கும் அரசை 'மக்கள் நல

அரசு' (Welfare State) `என்பார்கள். பள்ளிகளை நிறுவுவது, மருத்துவமனைகளை ஏற்படுத்துவது, ரெயில் பாதைகள் போடுவது, விளைச்சலைப் பெருக்குவது போன்ற நல்வாழ்விற்கான காரியங்களை இன்றைய அரசு செய்துகொண்டிருக்கிறது. இந்தக் கடமைகளைச் செய்வதற்கெனச் சட்டங்கள் இயற்றப்படுகின்றன. இச் சட்டங்களை யொட்டி மக்களை நடக்கச் செய்யவேண்டியிருக்கிறது. அவ்வாறு நடக்காதவர்களைத் தண்டிக்க வேண்டியதும் அவசியமாகிறது. எனவே, இச் சட்டங்களால் புதியபுதிய குற்றங்கள் தோற்றுவிக்கப் படுகின்றன.

அம்மை நோய் ஒழிக்கப்படவேண்டும் எனில், பிறந்த குழந்தை களுக்கு ஒரு வயது ஆவதற்குள் அம்மை குத்திக்கொள்ளவேண்டியது அவசியம். அவ்வாறு அம்மை குத்திக்கொள்ளத் தவறினல் குழந்தை யின் பெற்ருேர்கள் தண்டிக்கப்படுகின்றனர். உணவுப் பொருள்கள் கலப்படமின்றி விற்கப்படவேண்டும். இல்லையெனில், பொதுமக்க ளின் உடல்நலம் குன்றுகிறது. எனவே, பாலிலே நீர் கலந்து விற்பது குற்றம் எனச் சட்டம் விதிக்கிறது.

குழந்தைக்கு அம்மை குத்தத் தவறியதும், பாலில் நீர் கலந்து விற்பதும் பொது அமைதியைக் குலைக்கும் செயல்கள் அல்ல. ஆயினும், அவை இன்று குற்றங்களாகின்றன.

ஆதலால், பொது அமைதியையும் ஒழுங்கையும் குலைக்கும் செயல்கள்தாம் குற்றங்கள் என்று கூறுவதும் பொருந்துவதில்லை.

ஒருவர் மற்ருெருவருக்கு மரணம் விளைத்தால் அதைக் கொலைக் குற்றம் என்கிருேம். இரு நாடுகளுக்கிடையே நடக்கும் போரில் ஒரு நாட்டு வீரன் பகைநாட்டுப் படைவீரனைக் கொல்லுகிருன். போரில் கொல்லுவது குற்றம் ஆவதில்லை. அது போற்றத்தக்க வீரச் செயலாகிறது. இவ்வாறு மரணம் விளைவிக்கும் ஒரே செயல், ஒரு சூழ்நிலையில் கொலையாகவும், மற்ருெரு சூழ்நிலையில் வீரச் செயலாகவும் மாறுகின்றது.

குற்றங்கள் எல்லாம் சட்டத்திற்கு மாருன செயல்கள்தாம்; ஆனல், சட்டத்திற்கு மாருன செயல்கள் அனைத்தும் குற்றங்கள் ஆவ தில்லை. சில குற்றங்கள் அறத்திற்கு மாருனவை; சில தீங்கு விளை விப்பவை; சில சமூக வாழ்வில் அமைதியையும் ஒழுங்கையும் குலைப் பவை. ஆனல், அறத்தொடு மாறுபடாத, தீங்கு விளைவிக்காத, பொது அமைதியைக் குலைக்காத நிலையில் உள்ள பல செயல்களையும் 'குற்றங்கள்' எனச் சட்டம் கூறுகிறது. எனவே, ஒரு செயலின் தன்மையைமட்டும் வைத்து அது குற்றமா இல்லையா என்று கூறுவது இயலாது.

சட்டம் விதிக்கும் குற்றங்களும் நாட்டுக்கு நாடு, காலத்திற்குக் காலம் மாறுதலடைகின்றன. முன்னர்க் கூறியபடி, பலதார மணம் குற்றமாகிறது என்ற சட்டம் சில ஆண்டுகளுக்குமுன்தான் நம் நாட்டில் இயற்றப்பட்டது. அதற்குமுன் அது குற்றமான செயல் அன்று. வேறு சில நாடுகளில் பலதார மணம் குற்றம் ஆவதில்லை. அந்தந்த நாடுகளில் அந்தந்தக் காலத்தில் நிலவும் கொள்கைகளுக் கேற்பவே சில செயல்களைக் குற்றங்கள் எனச் சட்டம் விதிக்கின்றது.

ஒரு செயல் குற்றமானதா என்பதைக் காண்பதற்கு உள்ள உரைகல் ஒன்றே ஒன்றுதான்; அதாவது, அச் செயல் சட்டப்படி தண்டனைக்குரிய செயலா என்று காண்பதுதான். சட்டம் ஒரு செயலைத் தண்டனைக்குரியது என்று விதித்தால் அது குற்றம்; அவ்வாறு விதிக்கவில்லையெனில் அது குற்றம் ஆவதில்லை. அரசாங்கத்தின் கொள்கைகளின்படி குற்றங்கள் எவையென்று சட்டம் கூறுவதால், குற்றத்திற்கான இலக்கணத்தை வேறுவிதமாகச் சொல்லுவதற் கில்லை.

அரசாங்கம் ஒரு செயலை எந்தச் சூழ்நிலையில் தண்டனைக்குரிய தாக்குகிறது?

சமுதாய நலனைக் கருத்திற்கொண்டே சட்டம் இயங்குகிறது எனக் கண்டோம். சமுதாய நலனுக்குத் தீங்கு விளைவிக்கும் செயல் களைச் சட்டம் தடைசெய்கிறது. அந்தத் தடையை மீறி அச் செயல் களைச் செய்பவர்களைச் சட்டம் தண்டிக்கிறது.

சாலையில் வலப்புறமாகக் காரை ஓட்டிச் செல்வது, அளவிற்கு அதிகமான வேகத்தில் காரை ஓட்டுவது இவை அறத்திற்கு மாறு படாத, பொது அமைதியைக் குலைக்காத செயல்களாக இருக்கலாம். ஆயினும், அவை பொது நலனுக்கு இயைந்த செயல்கள் அல்ல. அளவுக்கு மீறிய வேகத்தில் மோட்டாரை ஓட்டுவதால் விபத்துகள் விளைவதற்கு ஏதுவாகிறது. எனவே, சமுதாயத்திற்குத் தீங்கு விளை விக்கும் விபத்துகளைத் தடுக்கவேண்டும் எனில், குறித்த அளவுக்கு அதிகமான வேகத்தில் காரை ஓட்டாதிருப்பது அவசியமாகும். ஆதலால், அதிக வேகத்தில் ஓட்டுவதும், சாலைப் போக்குவரத்து விதிகளைப் புறக்கணிப்பதும் சமுதாயத்திற்குத் தீங்கு விளைவிக்கும் செயல்களாகின்றன. உணவுப் பொருள்களில் பிற பொருள்களைக் கலந்து விற்பது, பாலில் தண்ணீர் கலந்து விற்பது போன்ற செயல்கள் பொதுமக்களின் ஆரோக்கியத்திற்கு இசைந்தன அல்ல. எனவே, இவையும் சமூகத்திற்குத் தீங்கு விளைவிக்கும் செயல்கள். அரசு தன் பணிகளைச் செய்வதற்கு நிதி திரட்டவேண்டியதாகிறது. இதற்கென விதிக்கப்பட்ட வரிகளை மக்கள் ஒழுங்காகக் கொடுத்தால் தான் அரசு நன்கு நடைபெறமுடியும். எனவே, வரியைச் செலுத்

தாமல் தப்பிக்க முயலுவதும், வருமானத்தை மறைப்பதற்கென்று பொய்க்கணக்கு வைத்திருப்பதும் சமுதாயத்தின் நலனுக்கு எதிரான செயல்கள். சாலை விதிகளைப் புறக்கணித்து மோட்டார் காரை ஓட்டுவது, கலப்பட உணவுப் பொருள்களை விற்பது, வரியைச் செலுத்தாமல் தப்புவதற்கு முயலுவதுபோன்ற செயல்களை அறக் கொள்கைகளுக்கு மாறுனவை என்றோ, பொது அமைதியைக் குலைப் பவை என்றோ கூறமுடியாவிட்டாலும், சமுதாய நலனுக்குத் தீங்கு விளைவிப்பவை என்று நிச்சயமாகக் கூறலாம்.

ஒரு மனிதனின் கையை மற்றொருவர் வெட்டினுல் அது கையை இழந்தவருக்குத்தானே தீங்காகிறது ; அதனுல் சமுதாயத்திற்குக் கேடு ஏதும் இல்லையே என்ற ஐயம் எழலாம். தனி மனிதர்கள் அனை வரின் நலன்களே சமுதாயத்தின் கூட்டு நலமாகிறது. மக்களின் தனித்தனி நலன்கள்தாம் சமுதாயத்தின் பொதுநலனுகத் திகழ் கிறது. எனவே, கையை இழந்தவர் படும் துயரம் அவர் வாழும் சமுதாயத்திற்கும் விளையும் தீங்காகும். ஆதலால், உடலுக்கு ஊறு விளைத்தல், திருடுதல் போன்ற செயல்களால் தனிப்பட்டவர் களுக்கே கேடு விளைந்தாலும், அவை சமுதாயத்திற்கும் தீங்கு விளைவிப்பவைதாம்.

தனி நபருக்குத் தீங்கு விளைக்கும் குற்றங்களும் உண்டு; அவ்வாறு தீங்கு விளைக்காத குற்றங்களும் உண்டு.

பிறர் உடலுக்குக் காயம் விளைத்தல் தனி நபருக்குத் தீங்கு விளைப்பது; அதாவது, உடலுரிமைக்குத் தீங்கு செய்வது. எனவே, அது ஓர் உரிமைத் தீங்கு (Tort) ஆகிறது. காயம் விளைவித்தலைச் சட்டமும் தடை செய்வதால் அது குற்றமாகும். காயமடைந் தவர் உரிமை நீதிமன்றத்தில் (Civil Courts) வழக்கிட்டுத் தமக்குக் காயத்தால் ஏற்பட்ட கேட்டிற்கான நட்ட ஈட்டுத் தொகையைக் (damages) காயப்படுத்தியவரிடமிருந்து பெறலாம். காயப்படுத் தியவர் குற்ற நீதிமன்றத்தில் (Criminal Courts) தண்டனையும் பெறுகின்ருர். இவ்வாறு, ஒரு செயல் தனி நபரின் உரிமையைப் பாதிக்கும் உரிமைத் தீங்காகவும் (Tort) குற்றமாகவும் (Crime) இருப்பதுண்டு.

கள்ள நாணயம் அடிப்பதுபோன்ற செயல்கள் குறிப்பிட்ட தனி நபரைப் பாதிப்பது இல்லை. அவை குற்றங்களாகமட்டுமே இருக்கின்றன ; உரிமைத் தீங்கு ஆவதில்லை.

எனவே, குற்றமான செயல்களில் பல, தனி நபர்களின் உரிமைகளைப் பாதிக்கும் உரிமைத் தீங்குகளாகவும் (Torts) இருக் கலாம்; அவ்வாறு இல்லாமலும் இருக்கலாம். ஆனுல், குற்றங்கள் எல்லாம் சமூகத்திற்குத் தீங்கு விளைவிப்பனவாகவே இருக்கின்றன.

ஒரு செயலைச் சமுதாயத்திற்குத் தீங்கானது என்று எந்த அடிப்படையில் கூறுகிறோம்? வளரும் சமுதாயத்தின் மாறுபடும் கருத்துகளுக்கேற்பவே ஒரு செயல் சமூக நலனுக்கு ஏற்றதா, இல்லையா என்பது உறுதி செய்யப்படுகிறது. பல நூற்றாண்டுகளாகத் தீண்டாமை வழக்கம் நம் நாட்டில் நிலைத்திருந்தது. ஜனநாயக ஆட்சி நிலவும் இந்நாளைய சமுதாயத்தில் தீண்டாமையைப் பயிலுவது குற்றம் என்று சட்டம் விதிக்கிறது. அவ்வாறே, உயிரினங்களைப் பலியிட்டு வழிபாடு செய்வது சட்டத்தால் தடை செய்யப்பட்டு, குற்றமான செயலாக இன்று கருதப்படுகிறது. இருபது ஆண்டுகளுக்குமுன் தீண்டாமையும் பலி வழிபாடும் சமூகத்தில் தீங்குகளாகக் கருதப்படவில்லை. இன்று இவை சமூகத் தீங்குகளாகக் கருதப்படுகின்றன. இவ்வாறு, வளரும் சமுதாயத்தின் மாறும் கொள்கைகளுக்கேற்பவே சமூகத் தீங்குகள் எவை என்பது நிச்சயிக்கப்படுகின்றன. இந்தச் சமூகத் தீங்குகளே குற்றங்கள் ஆகின்றன.

சமுதாய நலனைப் போற்றி வளர்ப்பதை இலட்சியமாகக் கொண்டுள்ள சட்டம் அந்த நலனுக்குத் தீங்கு விளைவிக்கும் செயல்களைச் சமூகத் தீங்குகள் (public wrongs) எனக் கொண்டு அவைகளைத் தடைசெய்கின்றது. இந்தத் தடையை மீறுபவர்களைத் தண்டிக்கிறது.

சமுதாயத்திற்குத் தீங்கு பயப்பது, அரசால் தடைசெய்யப்பட்டது, தண்டனைக்குரியது, இந்த மூன்று கூறுகளையும் கொண்டுதான் 'குற்றம்' என்பதற்கு நாம் விளக்கங்கூற இயலும். இவ்வாறு கூறுவது குற்றத்தின் விளக்கமேயன்றி (description) அதன் இலக்கணம் (definition) அன்று.

சமுதாயத்திற்குத் தீங்கு பயப்பதாய், அரசால் தடை செய்யப்பட்டதாய், தண்டனைக்குரியதாய் உள்ள செயல்களைக் 'குற்றங்கள்' (Crimes) என்று கூறலாம்.

அரசாங்கத்தின் மாறுபடும் கொள்கைகளுக்கேற்ப, குற்றங்களை விதிக்கும் சட்டங்கள் இயற்றப்படுவதால், 'குற்றம்' என்பதற்கு மேலே கூறியவாறு விளக்கம் கொடுப்பதுதான் முடியுமே தவிர, குற்றம் என்பதை வரையறுத்து இலக்கணம் கூறுவது இயலாது.

'குறிப்பிட்ட காலத்தில் எந்தெந்தச் செயல்களைக் குற்றங்கள் என்று அரசு அறிவிக்கின்றதோ அச் செயல்களைப்பற்றி ஆய்வது தான் குற்ற இயல் சட்டத்தின் அலுவல் ஆகும். அச் செயல்கள் அரசால் தடைசெய்யப்பட்டவை, அவைகளைச் செய்வோர் தண்டிக்கப்படுகின்றனர் என்ற இந்த இரு கூறுகள்மட்டுமே குற்றமான

செயல்களின் பொது இயல்பாகக் காணப்படுகின்றன.' இவ்வாறு, குற்றத்திற்கான விளக்கத்தை லார்டு அட்கின் (Lord Atkin) என்ற நீதிபதி கூறியிருக்கிறார். [Proprietory Articles Trade Association and Others v. Attorney General of Canada & Others (1931) A.C. 310].

இதுவரையில் நாம் கண்டது என்ன?

அந்தந்தக் காலத்தில் நிலவிவரும் சமுதாயக் கொள்கைகளின் படி, சமுதாயத்திற்குத் தீங்கு விளைவிப்பன என்பதால் அரசால் தடை செய்யப்பட்டு, தண்டனைக்குரிய செயல்களே குற்றங்கள். இதுவே, குற்றம் (Crime) என்ற கலைச்சொல்லில் அடங்கி நிற்கும் சட்டக் கருத்தாகும்.

# 5. இந்தியக் குற்ற இயல் தொகுப்புச் சட்டம்
## (Indian Penal Code)

தண்டனைக்குரிய செயல்களைக் கூறும் சட்டங்கள் பல உண்டு. வரிச் சட்டங்கள் (Tax Laws), பொதுச் சுகாதாரச் சட்டங்கள் (Laws relating to Public Health) இவைகளில் விதிக்கப்பட்டவைகளைச் செய்யவில்லையானாலும், விலக்கப்பட்டவைகளைச் செய்தாலும் மக்களுக்குத் தண்டனை என்று அச் சட்டங்களில் கூறப் படுகிறது.

இவைகளைத் தவிர, குற்றங்களைக் குறித்துமட்டும் கூறும் சட்டம் இருக்கிறது. இது, நம் நாட்டில் கி. பி. 1860ஆம் ஆண்டில் இயற்றப் பட்டது. 'இந்தியக் குற்றவியல் தொகுப்புச் சட்டம்' (Indian Penal Code) என்பது அச் சட்டத்தின் பெயர். பலவகைப்பட்ட குற்றங்களையும், அவற்றிற்கான தண்டனையையும் தொகுத்துக்கூறுவதால் அச் சட்டத்திற்குக் 'குற்ற இயல் தொகுப்பு' (Penal Code) என்று பெயரிட்டிருக்கின்றனர்.

இங்கிலாந்தில் நிலவிவந்த குற்றவியற் கொள்கைகளின் அடிப்படையிலேயே நம் நாட்டுச் சட்டம் இயற்றப்பட்டது. இதற்கு முக்கியமாகப் பொறுப்பாக இருந்தவர் ஆங்கில மொழியில் வல்லுநரான லார்டு மெக்காலே (Lord Macaulay) என்ற பேரறிஞர். அவருடைய திண்ணிய மதி நுட்பத்தையும், ஆங்கில உரைநடை ஆற்றலையும் இச் சட்டத்தில் நாம் காணுகிறோம்.

இங்கிலாந்தில் குற்றவியல் சட்டம் என்று பொதுவான சட்டம் ஏதும் தொகுத்து இயற்றப்படவில்லை. பொதுச் சட்டக் கொள்கைகளின் (Common Law) அடிப்படையிலேயே குற்ற வழக்குகள் தீர்க்கப்படுகின்றன. குறிப்பிட்ட சில குற்றங்கள் குறித்துமட்டும் தேவை கருதிச் சில சட்டங்களை அங்கு இயற்றியிருக்கின்றனர். ஆனால், நம் நாட்டில் ஆங்கிலேயர்கள் தங்கள் ஆட்சியை நிலையாகத்

தொடங்கும் காலத்திலேயே குற்றவியல் சட்டத்தைச் சிறந்த முறையில் தொகுத்துவிட்டனர்.

முன்னர்க் கூறியபடி, தண்டனைக்குரிய செயல்களைப் பல்வேறு சட்டங்கள் கூறுகின்றன. புதிய சூழ்நிலைகளுக்கும் தேவைகளுக்கும் ஏற்பப் பல செயல்களைச் சட்டம் தடை செய்கிறது. தடைகளை மீறுவது குற்றங்கள் ஆகின்றன. எனவே, புதிய குற்றங்களை அறிவிக்கும் சட்டங்கள் இயற்றப்பட்டுக்கொண்டே யிருக்கின்றன. ஆயினும், அடிப்படைக் குற்றங்களைக்குறித்துக் கூறுவது 'குற்றவியல் தொகுப்புச் சட்டமே' யாகும். குற்றவியற் கொள்கைகளைக் கூறி, பொதுவான குற்றங்கள் எவை என்று வகைப்படுத்தி, அக் குற்றங்களின் தன்மையை விளக்கி இலக்கணம் வகுத்து, அவைகளுக்குரிய தண்டனையையும் குறிக்கும் சட்டம் 'குற்றவியல் தொகுப்புச் சட்டம்'. எனவே, இச் சட்டத்தை ஆதாரமாக வைத்தே குற்றவியலைப்பற்றி நாம் ஆராய இருக்கிறோம்.

# 6. குற்ற மனம்

## (Mens rea)

குற்றத்தின் கூறுகள்—குற்ற மனம் (**Mens rea**), குற்றச் செயல் (**actus reus**)—'குற்ற மனம்' என்பது என்ன?—'குற்ற மனம் இன்றிக் குற்றம் இல்லை'—கருத்து (**Intention**)—கருத்தைக் காண்பது எப்படி? கருதிய செயல்கள் எல்லாம் முன்னறியத்தக்க செயல்கள்—முன்னறிதல் (**foresight**) இன்றிக் கருத்து இல்லை—விருப்பம் (**desire**) இன்றிக் கருத்து இல்லை—'முன்னறிதல்', 'விருப்பம்' இரண்டும் சேர்ந்தே கருத்து ஆகின்றது—தெரிந்து செய்தல் (**done knowingly**), அசட்டைத் துணிவு (**recklessness**), கவனமின்மை (**negligence**).

பலவகைக் குற்றங்களைப்பற்றி நாம் விரிவாகக் காண்பதற்கு முன், குற்றவியல் சட்டத்தின் அடிப்படைக் கொள்கைகளைத் தெரிந்துகொள்வது அவசியமாகும்.

குற்றத்திற்கான பொறுப்பு எவ்வாறு உறுதி செய்யப்படுகிறது, குற்ற முயற்சி என்பது என்ன, குற்றத்திற்கும் அதற்குப் பொறுப்பானவர்களுக்கும் தொடர்பு எவ்வாறு இருக்கலாம், எந்தெந்தச் சூழ்நிலைகளில் தீங்கு விளைவிக்கும் செயலைச் சட்டம் குற்றமாகக் கருதுவதில்லை, யார்யார் குற்றம் இழைக்க இயலாதவர்கள் எனச் சட்டம் கொள்கிறது, குற்றவாளிக்குத் தண்டனை அளிப்பதன் நோக்கம் என்ன என்பனபற்றி நாம் காணவேண்டும். இந்தக் கொள்கைகளே குற்ற இயல் சட்டத்தின் ஆதாரக் கொள்கைகள் ஆகின்றன.

முதலாவதாக, குற்றத்திற்கான பொறுப்பு, குற்றப் பொறுப்பு (criminal liability) எவ்வாறு நிச்சயிக்கப்படுகிறது என்று ஆராய்வோம்.

ஒருவரைக் குற்றவாளி என்றும், எனவே தண்டனை பெறத் தக்கவர் என்றும் எவ்வாறு சட்டம் தீர்மானிக்கிறது?

குற்றத்தை இழைத்தவர் குற்றவாளி ஆகின்றார். குற்றவாளி என்று ஒருவரைக் கொள்வதற்குமுன் அவர் செய்தது குற்றமா என்பதை ஆராயவேண்டியது அவசியமாகிறது. எனவே, 'குற்றம்'

என்ற சொல்லின் உட்பொருள் என்ன, குற்றத்தின் கூறுகள் எவை என்பதைப்பற்றி நாம் விரிவாகக் காணவேண்டும். அப்பொழுது தான் ஒருவர் 'குற்றம்' இழைத்தவரா என்பதைக் காணமுடியும்.

## குற்றத்தின் கூறுகள்

'குற்றம்' என்பது ஒரு செயலைக் குறிக்கின்றது. 'கொலைக் குற்றம்' என்ருல் மரணத்தை விளைவிக்கும் செயல் என்பதாகும். மரணத்தை விளைவிக்கும் செயலைக் 'குற்றச் செயல்' என்கிருேம். இந்தச் செயல் மரணத்தை விளைவிக்கவேண்டும் என்ற தீய கருத் தோடு செய்யப்பட்டிருத்தல்வேண்டும். இந்தத் தீய கருத்தைக் 'குற்ற மனம்' என்கிருேம். குற்ற மனத்தோடு கூடிய குற்றச் செயலைத்தான் 'குற்றம்' என்று சட்டம் சொல்லுகிறது. எனவே, குற்றம் என்பதில் இரண்டு கூறுகள் உண்டு; ஒன்று 'குற்ற மனம்'; மற்ருென்று 'குற்றச் செயல்'. இந்த இரு கூறுகளைப்பற்றியும் விரி வாகக் காணவேண்டும்.

## குற்ற மனம் (Guilty mind - Mens rea)

பகையின் காரணமாக ஒருவர் கையை மற்ருெருவர் அரிவாளால் வெட்டிவிடுகிருர். கையை வெட்டியவருக்கு தகுந்த தண்டனை அளிக்கப்படுகிறது. சிறு காயத்தால் புரையோடியிருந்த நோயாளி யின் கையை வைத்தியர் இரண சிகிச்சை செய்து அறுத்து அகற்று கிருர். நோயாளியின் கையை அகற்றிய வைத்தியரைக் குற்றவாளி யெனச் சட்டம் கருதுவதில்லை. ஒருவரின் கையை அறுக்கும் செயலை அரிவாளால் வெட்டியவரும் செய்திருக்கிருர்; அறுவை வைத்திய ரும் செய்திருக்கிருர். ஆனுலும், ஒரு செயல் குற்றம் ஆகிறது; மற்ருென்று நற்செயல் ஆகிறது. எதனுல் ?

பகையின் காரணமாகச் செயல் புரிந்தவர், தம் எதிரிக்குத் தீங்கு இழைக்கவேண்டும் என்ற தீய எண்ணத்துடன் கையை வெட்டினுர். அறுவை வைத்தியர் நோயாளியின் நோயைக் குணப் படுத்தவேண்டும் என்ற நல்ல எண்ணத்தால் கையை வெட்டி அகற்றினுர். குற்ற மனத்துடன், தீய எண்ணத்துடன் செய்யப் பட்டது முதற் செயல்; குற்ற மனமின்றி, நல்ல எண்ணத்துடன் செய்யப்பட்டது இரண்டாவது செயல். தீய எண்ணத்துடன் கூடிய செயல் குற்றமாகிறது; நல்ல எண்ணத்தில் எழுந்த செயல் குற்றம் ஆவதில்லை.

ஐந்து வயதுச் சிறுவன் ஒரு கல்லை எடுத்து நம்மீது வீசுகிருன்; நமக்கு அதனுல் காயம் விளைகிறது. அந்தச் சிறுவனைக் குற்றவாளி எனச் சட்டம் கொள்வதில்லை. அதே செயலால் வயதுவந்த மற்ருெருவர் நமக்குக் காயம் விளைத்தால் அவரைச் சட்டம் தண்டிக் கிறது. ஏன்? தீங்கு செய்யவேண்டும் என்ற எண்ணம்

எழமுடியாத இளமைப் பருவத்தில் உள்ளது குழந்தை. தான் செய்யும் செயல் என்ன, அதன் விளைவு என்ன என்பதைப் புரிந்து கொள்ள முடியாத நிலையில் இருப்பது ஐந்து வயதுக் குழந்தை. எனவே, குழந்தையின் செயலைச் சட்டம் 'குற்றம்' எனக் கருதுவதில்லை.

விருந்திற்குச் சென்றுவிட்டு வெளியே வரும்பொழுது, ஒருவர் தம்முடைய குடைதான் என்று நினைத்துக்கொண்டு மற்றொருவரின் குடையை எடுத்துச் சென்றுவிடுகிறார். இவ்வாறு தவறுதலாகப் பிறர் குடையை எடுத்துச்சென்றவர்மீது திருட்டுக் குற்றம் சாட்டப்படுவது இல்லை. ஏன்? அவர் திருடவேண்டும் என்ற தீய எண்ணத்துடன் எடுக்கவில்லை.

இதிலிருந்து தெரிவதென்ன? ஒரு செயலைச் சட்டம் குற்றம் எனக் கொள்ளுவதற்குமுன் அச் செயல் தீங்கெண்ணத்துடன், குற்ற மனத்துடன் செய்யப்பட்டதா என்பதை ஆராய்கின்றது. குற்ற மனத்துடன் கூடிய செயலையே குற்றமாகச் சட்டம் கருதுகிறது. தீய எண்ணம் ஏதுமின்றிச் செய்யப்பெற்ற செயலால் ஒருவருக்குத் தீங்கு விளைந்தாலும், அதைக் குற்றமாகச் சட்டம் கொள்ளுவது இல்லை. குற்ற மனம் இல்லாத குற்றச் செயலைச் சட்டம் தண்டனைக்குரியதாக்குவது இல்லை. (The act alone does not amount to guilty; it must be accompanied by a guilty mind: Salmond.) எனவே, குற்றத்திற்கு அடிப்படையாக அமைவது 'குற்ற மனம்'; இதை ஆங்கிலத்தில் 'guilty mind' என்றும், இலத்தீன் மொழியில் 'Mens rea' என்றும் கூறுவார்கள்.

**'குற்ற மனம் இன்றிக் குற்றம் இல்லை'**

'குற்ற மனத்துடன் செய்யப்படாத செயல் குற்றமாவது இல்லை' என்ற விதியை இலத்தீன் மொழியில் 'Actus non facit reum, nisi mens sit rea' என்று கூறுவதுண்டு. 'குற்ற மனம் இன்றிக் குற்றம் இல்லை' என்ற இந்தக் கொள்கை குற்றவியல் சட்டத்தின் ஆதார விதியாகும்.

குறிப்பிட்ட ஒரு குற்றத்திற்குக் குற்ற மனம் தேவையில்லை என்று குறிப்பிட்ட சட்டம் கூறினாலொழிய, பொதுவாக ஒருவரைக் குற்றவாளி என்று தீர்மானிப்பதற்கு முன் அவர் குற்ற மனத்துடன் குற்றமான செயலைச் செய்தாரா என்பதைப் பார்க்கவேண்டும். குற்ற மனம் இல்லாதவரைக் குற்றவாளி என்று கொள்ளுதல் கூடாது. குடிமக்களின் சுதந்தரத்தைக் காப்பதற்கு வேண்டிய முக்கியமான விதியாகும் இது என்று 'Goddard' என்ற நீதிபதி கூறுகிறார்.

'It is of utmost importance for the protection of the liberty of the subject that a court should always bear in mind, that

unless a statute either clearly or by necessary implication, rules out mens rea as a constituent part of a crime, the court should not find a man guilty of an offence against the criminal law unless he has a guilty mind'—Goddard, L. J. in Brend v. Wood (1946), 62 T.L.R. 462.

சிந்தனை இன்றிச் செயல் இல்லை. கருத்தில் விளைவதே கருமம். எனவே, கருமத்தைவிட கருத்தே முக்கியமாகிறது. செயல்களுக்கு மூலமாகச் சிந்தனை அமைவதால், புறச்செயல்களை விட அச்செயல்களுக்குக் காரணமாயிருக்கும் மனநிலையைச் சட்டம் ஆராய்கின்றது. மனநிலை குற்றமானதா என்று கண்டு, அதன் பின்னரே, அந்த மனநிலையால் எழுந்த செயலைச் செய்தவர் தண்டனைக்குரியவரா என்று தீர்மானிக்கிறது. தீய எண்ணத்தில் எழுந்த செயலையே தீச்செயலென அறம் விதிக்கிறது. குற்ற மனத்தோடு புரிந்த செயல்களையே 'குற்றங்கள்' எனச் சட்டமும் கொள்ளுகிறது.

தம் மனம் ஒன்றிச், செய்யாத செயலுக்கு ஒருவரைப் பொறுப் பாக்கித் தண்டனை அளிப்பது நியாயம் அன்று என்று நம் அற வுணர்வே உணர்த்துகிறது. 'மனத்தால் எவருக்கும் தீமை செய் யாதே' என்றுதான் அறநூல்களும் அறிவுறுத்துகின்றன.

> எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானும்
> மாணாசெய் யாமை தலை. (குறள் 317)

'மனத்தானும்' என்ற சொல்லுக்கு விளக்கம் கூறும் பரிமேலழகர், 'ஈண்டு மனத்தான் ஆகாதவழிப் பாவமில்லை என்பது பெற்றும்' என்று தெளிவாக எடுத்துக்காட்டுகிறார். மனத்தால் ஆகாதவழிப் பாவம் இல்லை என்பதுபோல், மனத்தால் ஆகாதவழிக் குற்றமும் இல்லை என்று கூறலாம். 'உள்ளத்தாற் பொய்யாது ஒழுக' வேண்டும், 'மனத்தொடு வாய்மை' வேண்டும், என்று அற நூல்கள் கூறுவது வெளிச்செயல்களைவிட உள் எண்ணமே முக்கியமானது என்பதைக் குறிப்பதாகும். எனவே, [ 'குற்ற மன மின்றிக் குற்றம் இல்லை' என்பது, அறவிதியின் அடிப்படையில் எழுந்த சட்ட விதியாகும்.] (Attention was thus more strongly directed to the mental element in crime, and the moral notion gradually crystallised into a rule of law.—Kenny.)

**'குற்ற மனம்' என்பது என்ன?**

மனத்தில் நிகழும் எண்ணங்களை 'மனம்' என்று குறிப்பிடு கிறோம். 'மனம்' என்று எந்த உறுப்பும் நம் உடம்பில் இல்லை. எண்ணத்தைக் குறிப்பதற்கு 'மனம்' என்ற சொல் பயன்படுகிறது.

நல்ல எண்ணங்கள் உடையவரை நல்ல மனமுடையவர் என்கிறோம்; தீய எண்ணங்கள் கொண்டவரைக் கெட்ட மனம் உடையவர் என்கிறோம். குற்றச் செயல்களுக்குக் காரணமான எண்ணங்களைக் குறிப்பதற்குக் 'குற்ற மனம்' என்று கூறுகின்றோம்.

**கருத்து (Intention)**

ஒரு பாம்பைப் பார்த்ததும் அதைக் கொன்றுவிடவேண்டும் என்ற எண்ணம் தோன்றுகிறது. அந்த எண்ணத்தை நிறைவேற்றும் இச்சையும் எழுந்தவுடன் அது கருத்தாக மாறுகிறது. கருத்திலிருந்து செயல் எழுகின்றது. கம்பை எடுத்துப் பாம்பை அடித்துக் கொன்ற செயல், அதைக் கொல்லவேண்டும் என்ற கருத்திலிருந்து தோன்றியதுதான். எத்தனை எத்தனையோ எண்ணங்கள் மனக்கடலிலே எழுந்துஎழுந்து ஓய்கின்றன. அந்த எண்ணங்கள் அனைத்தும் கருத்துகளாகி வருவதில்லை. எந்த எண்ணத்தை நிறைவேற்ற வேண்டுமென்று விரும்புகிறோமோ, அந்த எண்ணமே கருத்தாக மாறுகின்றது. எண்ணத்தைச் செயற்படுத்தவேண்டும் என்ற இச்சை எழுந்தவுடன் கருத்து உதயமாகிறது. எண்ணமும் இச்சையும் கூடியே கருத்தாகின்றது. இவ்வாறு தோன்றும் கருத்து உடலை இயக்குகிறது. உடல் இயக்கத்தால் செயல் விளைகிறது. இந்தச் செயலைக் 'கருதிய செயல்' என்று கூறுகிறோம்.

கருதிய செயலை ஆங்கிலத்தில் 'intended act' என்றும், 'கருத்து' என்பதை 'intention' என்றும் கூறுகிறோம்.

கருத்தினால் வெளிப்படும் செயலைப் பிறர் பார்க்கின்றனர். புறச்செயலை அனைவரும் காணமுடிகிறது. புறச்செயலை ஊக்கியது அகநிகழ்வான கருத்து. அந்தக் கருத்தை எவ்வாறு காண்பது?

**கருத்தைக் காண்பது எப்படி?**

கருத்து என்பது மனநிகழ்வு. எனவே, கருத்தைக் காண்பது இயலாது. பின், என்ன கருத்துடன் ஒரு செய்கை செய்யப்பட்டது என்பதை எப்படி அறிவது? கருத்திலிருந்து எழும் செய்கையிலிருந்துதான் கருத்தை ஊகித்து அறிகிறோம். அகத்தில் கருவாக இருக்கும் கருத்து, புறத்தில் உருவாகும்பொழுதே 'செய்கை' பிறக்கிறது. கருத்தின் புற உருவாகச் செய்கை தோன்றுகிறது. புற உருவான செய்கையை ஆராய்ந்து, அச் செய்கைக்குக் கருவான கருத்தை அறிகின்றோம்.

கம்பை எடுத்து ஒருவர் பாம்பை அடித்தால், பாம்பைக் கொல்ல வேண்டும் என்ற கருத்துடன் அடிக்கின்றார் என்பது தெளிவாகிறது. நீண்ட கத்தியை ஒருவர் மற்றொருவர் நெஞ்சில் பாய்ச்சினால்,

கொல்லவேண்டும் என்ற கருத்துடன் அச் செய்கை செய்யப் பட்டது என்று அறிகிறோம். ஒருவருடைய பணப் பையை மற்றவர் எடுத்துக்கொண்டு ஓடினால், திருடும் கருத்துடன் பணப் பை எடுக்கப்பட்டது என்பது வெளிப்படை. இவ்வாறு, கண்களுக்குப் புலப்படும் செய்கை, அச் செய்கைக்குக் காரணமான உள்ளக் கருத்தைக் காட்டுகிறது.

சில சமயம் ஒருவரின் கருத்துக் கைகூடாமல் போவதும் உண்டு. ஒருவர் மற்றொருவரை நோக்கிக் குறிபார்த்துத் துப்பாக்கியால் சுடுகின்றார். குறி தவறிவிடுகின்றது. எவரை நோக்கிச் சுடப் பட்டதோ அவருக்குக் காயங்கூட ஏற்படவில்லை. இப்பொழுது, சுட்டவர்மீது என்ன குற்றம் சாட்டப்படுகிறது? கொலை செய்ய முயன்றதாகக் குற்றம் சாட்டப்படுகிறது. எவருக்கும் மரணம் விளையவில்லையே, பின் ஏன் கொலை முயற்சிக் குற்றம் என்று வினவலாம். ஒருவர் நெஞ்சிலோ, தலையிலோ துப்பாக்கிக் குண்டு பாய்ந்தால் இயற்கையாக விளைவது மரணம். இந்த இயற்கை விளைவான மரணத்தை விளைவிக்கவேண்டும் என்ற கருத்துடன் அவர் சுட்டார் என்பது தெளிவு. ஒரு செய்கையின் இயல்பான விளைவைக் கருதியே அச் செயல் செய்யப்படுகிறது. இவ்வாறு ஒரு செய்கையின் (செய்வினையின்) தன்மையையும் அதன் இயல்பான விளைவையும் வைத்து, அச் செய்கை என்ன கருத்துடன் செய்யப் பட்டது என்பதைக் கண்டறிகின்றோம்.

எனவே, செய்கையிலிருந்தும், செய்கையின் இயல்பான விளைவிலிருந்தும், அச் செய்கையில் அடங்கியுள்ள கருத்தை நாம் அறிகிறோம்.

## கருதிய செயல்கள் எல்லாம் முன்னறியத்தக்க செயல்கள்

சாதாரண அறிவுள்ள ஒரு மனிதன் தன் செய்கையின் இயல் பான விளைவுகளை அறிவான். ஒருவர் அடுத்தவரைத் தடியால் அடித்தால் அதனால் அடிபட்டவருக்குக் காயம் ஏற்படும் என்பதை அடித்தவர் அறிவார். தடியால் அடித்ததன் இயல்பான விளைவு காயம் ஏற்படுதல்; எனவே, காயம் ஏற்படும் என்பது அடித்தவர் முன்னறியும் (foreseeable) செயல். இந்த முன்னறியத்தக்க செயலைக் கருதித்தான் அடித்தவர் அடித்திருக்கிறார். எனவே, கருதிய செயல்கள் எல்லாம் முன்னறியத்தக்க செயல்களாகவே இருக்கின்றன.

## முன்னறிதல் இன்றிக் கருதுதல் இல்லை

முன்னறிய முடியாத விளைவை ஒருவர் கருதிச் செய்ததாகச் சொல்ல முடியாது. கோடரியால் வெட்டிக்கொண்டிருந்தவரின்

கையிலிருந்து கோடரி வழுக்கிப்போய்த் தூரத்தில் நின்றவர்மீது விழுந்து காயம் விளைவிக்கிறது. இவ்வாறு காயம் ஏற்பட்டதை முன்னறியமுடியாத விளைவு (unforeseen consequence) என்கிறோம். ஏனெனில், வெட்டிக்கொண்டிருந்தவர் இதைச் சற்றும் எதிர்பார்க்க வில்லை. ஆதலால், முன்னறிய முடியாத விளைவைக் 'கருதிய விளைவு' என்று கூறமுடியாது. எனவே, முன்னறிதல் இன்றிக் கருதுதல் இல்லை. (It will be noted that there cannot be intention unless there is also foresight—Kenny.)

**விருப்பம் இன்றிக் கருதுதல் இல்லை**

முன்னறிதல்மட்டும் இருந்தாலும் அது கருதியது ஆகாது. சில வேளைகளில் ஒருவர் விரும்பாத விளைவை முன்னறிதலும் உண்டு. ஒரு நோயாளிக்கு அறுவை வைத்தியம் செய்வது அவசியமானது என்று வைத்தியர் கருதுகிறார். ஆனால், அறுவையைத் தாங்க முடியாமல் நோயாளி ஒருவேளை இறந்துபோகலாம் என்ற நிலையில் நோயாளி இருக்கிறார். அவசியத்தின் காரணமாக ஆபரேஷன் நடத்தப்படுகிறது. நோயாளி இறந்துவிடுகிறார். இப்பொழுது நோயாளியின் மரணத்தைக் கருதியே ஆபரேஷன் செய்தார் என்று கூறலாமா? கூடாது. ஆபரேஷனால் நோயாளியின் மரணம் விளைய லாம் என்பது வைத்தியர் முன்னறிந்ததுதான்; ஆனாலும், மரணத்தை அவர் விளைவிக்க விரும்பவில்லை. விரும்பாத விளைவை அவர் முன் னறிந்தாலும், அவர் கருதிய விளைவாக அதைக் கொள்ளமுடியாது. முன்னறியும் விளைவை விரும்பி ஒரு செயலைச் செய்தால்தான், அது விளைவைக் கருதிச் செய்த செயலாகும். (Again a man cannot intend to do a thing unless he desires it—Kenny.)

முன்னறியும் விளைவுகள் எல்லாம் கருதிய விளைவுகள் ஆவதில்லை; முன்னறிதலுடன் விருப்பமும் சேரவேண்டும். அப்பொழுதுதான் கருத்துத் தோன்றுகிறது.

மேலே கூறிய உதாரணத்தில் அறுவை வைத்தியர், மரணம் ஏற்படலாம் என்பதை முன்னறிகின்றார்; ஆனால், அவர் அதை விரும்பவில்லை. போர்க்களத்தில் படைகளை முன்னேறும்படி சேனைத்தலைவர் உத்தரவிடுகிறார். வீரர்கள் நிச்சயமாக மடிவார்கள் என்பது அவருக்குத் தெரியும். அவர்களுக்கு ஏற்படவிருக்கும் மர ணத்தை சேனைத்தலைவர் முன்னறிகின்றார். இருப்பினும், வீரர்களின் மரணத்தை அவர் கருதினார் (intended) என்று கூறுதல் சரியன்று. ஏனெனில், அவர்களின் மரணத்தை அவர் விரும்பவில்லை. ஒரு விளைவு நிச்சயமாக ஏற்படும் என்பதை நாம் அறிந்திருந்தாலும் அந்த விளைவை நாம் விரும்பவில்லை எனில், அதை நாம் கருதிய விளைவு

என்று கூற முடியாது. எனவே, விருப்பம் (இச்சை) இன்றிக் கருத்து இல்லை என்பது தெளிவாகும்.

(On the other hand, a consequence may be almost inevitable and yet not intended. A doctor may undertake an operation although it is almost certain to cause death......... A general may order his troops to attack a strongly fortified port although he knows that it is inevitable that thousands will be killed —Patton's 'Jurisprudence'.)

**'முன்னறிதல்', 'விருப்பம்' இரண்டும் சேர்ந்தது 'கருத்து'**

ஒரு செய்கையின் விளைவை நாம் முன்னறிந்திருக்கவேண்டும். அந்த விளைவை நாம் விரும்பவும்வேண்டும். விருப்பத்தினால் உந்தப் பட்டு அச் செய்கையைச் செய்யவேண்டும். இவ்வாறு, ஒரு செய்கை யின் விளைவை முன்னறிந்து, அந்த விளைவை விரும்பி, அச் செய்கை யைச் செய்தால், அது 'கருதிய செயல்' எனப்படுகிறது.

கல்லை எடுத்து ஒருவர்மீது எறிந்தால், எறியப்பட்டவருக்குக் காயம் விளையும் என்பதை நாம் அறிவோம். இவ்வாறு, ஒருவரைக் காயப்படுத்தவேண்டும் என்று விரும்புகிறோம். இந்த விருப்பத்தால் தூண்டப்பட்டு ஒருவர்மீது கல்லை எறிகின்றோம். அதன் பயனாகக் காயமும் விளைகின்றது. கல்லை அவர்மீது எறிந்தால் காயம் விளையும் என்ற முன்னறியத்தக்க விளைவை விரும்பிக் கல்லை எறிந்த செயலைக் 'கருதிய செயல்' என்று சட்டம் கொள்ளுகிறது. அது 'வேண்டு மென்றே காயம் விளைவித்தல்' (voluntarily causing hurt) என்ற குற்றம் ஆகின்றது. இவ்வாறு, முன்னறிதல் (foresight), விருப்பம் (desire) இரண்டும் சேர்ந்தே கருத்து ஆகின்றது.

('Intent will be found to resolve itself into two things; fore-sight that certain consequences will follow from an act, and the wish for those consequences working as a motive which induces the act'—Holmes, 'Common Law'.)

எனவே, முன்னறிதல் இல்லையெனில் கருத்து இல்லை; முன் னறிதல் இருந்தும் விருப்பம் இல்லை யென்றாலும் கருத்து இல்லை. முன்னறிதல், விருப்பம் இரண்டும் இருந்தால்தான் கருத்துத் தோன்றுகிறது. கருதிய விளைவு (intended consequence) என்றால், அது முன்னறிந்த விளைவாகவும் (foreseeable consequence) விரும்பிய விளைவாகவும் (desired consequence) இருத்தல் வேண்டும். தம் நடத்தையினால் நிகழக்கூடிய விளைவுகளை முன் னறிந்து அவைகளை விரும்பி நிற்கும் ஒருவரின் மனநிலையைத்தான் 'கருத்து' என்ற சொல் குறிக்கின்றது.

[The noun 'intention' in the present connection is used to denote the state of mind of a man who not only foresees but also desires (wills) the possible consequences of his conduct—Kenny.]

இதுவரை 'கருதிய செயல்' (intended act) என்றால் என்ன என்று கண்டோம். குற்றமான செயலைக் கருதிச் செய்தால் அது குற்றம் ஆகின்றது. கருத்து, குற்றத்திற்கு அடிப்படையாக இருக்கின்றது.

**குற்றமான செயலைத் தூண்டிய கருத்தைக் 'குற்ற மனம்' என்கிறோம். வேறு சில மனநிலைகளையும் 'குற்ற மனம்' என்று சட்டம் கொள்ளுகின்றது.**

சட்டப்படி, குற்ற மனத்துடன் கூடிய செயல் என்றால், அது கருதிய செயலாகத்தான் இருக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை. 'குற்ற மனம்' என்பது வேறு சில மனநிலைகளையும் குறிப்பதாகும். தெரிந்து செய்தல் (done knowingly), அசட்டைத் துணிவு (recklessness or rashness), கவனமின்மை (negligence) இவைகளால் ஒருவருக்கு மரணம் விளைந்தால் அதுவும் குற்றம் ஆகின்றது.

**தெரிந்து செய்தல்** (Done knowingly)

ஒருவரைக் கொல்லவேண்டும் என்ற கருத்தோடு அவரது மரணத்தை விளைவிப்பது எவ்வாறு கொலைக்குற்றம் ஆகிறதோ, அவ்வாறே, ஒருவருக்கு ஒரு செயலால் மரணம் விளையலாம் என்பதைத் தெரிந்தும் அந்தச் செயலைச் செய்தல் கொலைக் குற்றமாகும். உதாரணம்: ஒருவர் துப்பாக்கியால் மற்றொருவரைச் சுட்டுக் கொன்றுவிடுகிறார். இது மரணத்தை நேரடியாகக் கருதிச் செய்த செயல். ஒருவருக்கு அடிவயிற்றில் கட்டி இருக்கிறது. அதனால் வயிற்றில் இலேசாக உதைத்தாலும் அவருடைய உயிருக்கு ஆபத்து விளையலாம் என்பது மற்றவருக்குத் தெரியும். இருந்தும் கட்டி உள்ளவரின் வயிற்றின்மீது மற்றவர் உதைக்கின்றார். இதனால் உதைபட்டவர் இறந்துவிடுகிறார். இப்பொழுது உதைத்தவர் கொலைக்குற்றத்திற்கே ஆளாகின்றார். தான் உதைத்த செயலால், உதைபட்டவர் இறந்துவிடலாம் என்பதைத் தெரிந்திருந்தும் அவர் உதைத்ததால், அது கொலையேயாகிறது. அவர் மரணம் விளைவிக்கவேண்டும் என்ற கருத்துடன் (intention) உதைக்கவில்லை; ஆனால், மரணம் விளையலாம் என்பதைத் தெரிந்திருந்தும் உதைத்ததால் (knowing), அது கொலைக்குற்றமாகும். இவ்வாறு உதைத்தவருக்குள்ள 'குற்ற மனம்' என்ன? மரணம் விளையக்கூடும் என்று தெரிந்திருத்தல். துப்பாக்கியால் சுட்டவர் மரணம் விளைவிக்கவேண்டும் என்று கருதிச் சுட்டார்; வயிற்றில் உதைத்தவர் மரணம் விளையலாம் என்பது தெரிந்தும் உதைத்தார். இருவர் செய்த செயல்களும் கொலைக்குற்றமே

ஆகின்றன. மரணம் விளைவிக்கவேண்டும் எனக் கருதி ஒரு செயலைச் செய்தல் குற்ற மனத்தோடு கூடிய செயல்; மரணம் விளையலாம் எனத் தெரிந்தும் ஒரு செயலைச் செய்தலும் குற்ற மனத்தோடுள்ள செயலேயாகும்.

கொலைக்குற்றத்திற்குச் சட்டம் கூறும் இலக்கணப்படி, மரணத்தைக் கருதி விளைவித்தாலும் கொலைக்குற்றந்தான். ஒரு செய்கையால் மரணம் விளையலாம் என்பது தெரிந்தும் அச் செய்கையைச் செய்து மரணத்தை விளைத்தலும் குற்றந்தான். இரண்டு வகையாகவும் கொலைக்குற்றம் செய்யப்படலாம்.

மரணத்தை விளைவிக்கவேண்டும் என்ற கருத்து (intention) ஒருவகை மனநிலை; மரணம் விளையலாம் என்று தெரிதல் (knowledge) மற்றொருவகை மனநிலை. இந்த இரண்டில் எந்த மனநிலை யோடு மரணம் விளைத்தாலும் அது குற்ற மனத்தோடு கூடிய செயலாகிறது.

பலவகைக் குற்றங்களுக்கு இலக்கணம் கூறும் குற்றவியல் சட்டம், அந்தக் குற்றங்களுக்கு வேண்டிய மனநிலையைக் கூறுகின்றது. இவ்வாறு, அந்தந்தக் குற்றங்களுக்கு எந்தெந்த வகை மனநிலையைச் சட்டம் கூறுகிறதோ அந்த மனநிலையே, குறிப்பிட்ட குற்றத்திற்கான 'குற்ற மனம்' ஆகின்றது.

ஒருவருடைய அசட்டைத் துணிவாலோ, கவனமின்மையாலோ மரணம் விளைவிக்கப்பட்டால், அது குற்றம் எனச் சட்டம் விதிக்கிறது (Sec. 304 A of I. P. C.).

### அசட்டைத் துணிவும் (Rashness) கவனமின்மையும்(Negligence)

அசட்டைத் துணிவுக்கும் (rashness or recklessness) கவனம் இன்மைக்கும் (negligence) உள்ள வேறுபாடு என்ன? நெருக்கமாக மக்கள் நடமாடும் வீதியில் வேகமாகக் காரை ஓட்டினால் விபத்து கள் விளையலாம்; அதனால் மரணமும் விளையலாம் என்பதைக் காரை ஓட்டுபவர் அறிவார். இருந்தும், விளையத்தக்க ஆபத்தைப் பொருட்படுத்தாது அசட்டை செய்து, ஆபத்து விளையாது என்ற துணிச்சலுடன் காரை வேகமாக ஓட்டுபவரை அசட்டைத் துணி வுடன் காரை ஓட்டினார் என்கிறோம். அசட்டைத் துணிவான மன நிலையுடன் ஒருவருக்கு மரணத்தை விளைவிப்பது குற்றமாகும்.

அசட்டைத் துணிவான செயலில் விளையவிருக்கும் ஆபத்தைப் பற்றிக் கவனம் (advertence) உண்டு. இருப்பினும், ஆபத்து விளையாது என்ற துணிவுடன் செயல் செய்யப்படுகிறது. 'கவனம் இன்மை'யான செயலில் (negligence) விளையவிருக்கும் ஆபத்தைப்பற்றிக் கவனம் இருப்பதில்லை. எனவே, எடுத்துக்

கொள்ளவேண்டிய எச்சரிக்கைகளை மேற்கொள்ளாமல் செயல் செய்யப்படுகின்றது. இருட்டு நேரத்தில் மோட்டார் காரைச் செலுத்தும்பொழுது காரின் விளக்குகள் ஏற்றப்பட்டிருக்கவேண்டும். இது மோட்டார் ஓட்டுபவரின் கடமை. இந்தக் கடமையில் தவறி, விளக்குகளைப் போடாமல் மோட்டார் காரை ஓட்டியதால் தெருவில் சென்றுகொண்டிருந்தவர்மீது மோட்டாரை மோதி மரணத்தை விளைவித்தால், அது கவனமின்மையால் மரணத்தை விளைவித்தல் ஆகும். அசட்டைத் துணிவாலோ, கவனமின்மையாலோ மரணம் விளைந்தால் குற்றம் என்று சட்டம் கூறுவதால், அசட்டைத் துணிவும் கவனமின்மையும் குற்ற மனநிலையாகிறது.

ஒருவர்மீது குறிபார்த்துச் சுடப்படுகிறது. ஆனால், குறி தவறி அடுத்தவர்மீது குண்டு பாய்ந்து மரணம் விளைகிறது. இப்பொழுது இறந்தவரின் மரணத்தைச் சுட்டவர் கருதவேயில்லை. எவரை நோக்கிச் சுட்டாரோ அவரது மரணத்தையே சுட்டவர் கருதினர். இருப்பினும், சுட்டவர் கொலைக்குற்றத்திற்கே ஆளாகின்றார். ஒருவரைக் கொலைசெய்யவேண்டும் என்ற எண்ணம் இருந்தது. இந்த எண்ணத்துடன் செய்த செயல், மற்றவரின் மரணத்தை விளைத்தது. எப்படியும் மரணத்தை விளைவிக்கவேண்டும் என்ற கருத்து இருந்ததால், அதுவே 'குற்ற மனம்' ஆகிறது.

எனவே, 'குற்ற மனம்' (mens rea) என்பது கருதுதல் (intention,) தெரிதல் (knowledge), அசட்டைத் துணிவு (recklessness or rashness), கவனமின்மை (negligence) போன்ற மனநிலைகளையும் குறித்து நிற்கிறது. அந்தந்தக் குற்றங்களுக்கு ஏற்பட்ட மனநிலையுடன் குற்றச் செயல் செய்யப்பட்டால் அது குற்றம் ஆகிறது. அந்த மனநிலையைக் 'குற்ற மனம்' என்கிறோம்.

இந்தியக் குற்றவியல் சட்டத்தில் பல்வகைக் குற்றங்களின் கூறுகள் கூறப்பட்டிருக்கின்றன. குற்றங்களுக்கு இலக்கணம் கூறும் சட்டப் பிரிவுகளில் அந்தந்தக் குற்றத்திற்கு வேண்டிய 'குற்ற மனம்' கூறப்பட்டிருக்கிறது.

தாம் அதைப் பெறவேண்டும் அல்லது பிறர் அதை இழக்கவாவது வேண்டும் என்ற நேர்மையற்ற கருத்தோடு பிறர் உடைமையில் இருக்கும் அசைபொருள் ஒன்றை அவர் சம்மதம் இன்றி ஒருவர் அகற்றினல், அது திருட்டுக் குற்றம் எனச் சட்டம் கூறுகிறது. 378ஆவது பிரிவிலுள்ள 'intending to take dishonestly' என்ற சொற்றொடர் திருட்டுக் குற்றத்திற்கு வேண்டிய 'குற்ற மனம்' எது என்பதைக் குறிக்கிறது. 'தாம் அதைப் பெறவேண்டும், அல்லது பிறர் அதை இழக்கவாவது வேண்டும் என்ற நேர்மையற்ற கருத்து'

இன்றிப் பிறர்வசம் உள்ள அசைபொருளை ஒருவர் அகற்றினுல், அது திருட்டுக் குற்றம் ஆவதில்லை. ஏனெனில், அது 'குற்ற மனம்' இன்றிச் செய்யப்பட்ட செயல்.

இவ்வாறு, இந்தியக் குற்றவியல் சட்டத்தில் கூறப்பட்டிருக்கும் ஒவ்வொரு குற்றத்திற்கும் வேண்டிய 'குற்ற மனம்' என்ன என்பதைச் சட்ட வாசகத்திலேயே காணுகின்ருேம்.

இதுவரை 'குற்ற மனம்' (mens rea) என்ருல் என்ன என்று ஆராய்ந்தோம்.

# 7. குற்றச் செயல்

## (Actus reus)

**குற்றச் செயல் என்பது என்ன?—செய்வினை, சூழ்நிலை, விளைவு மூன்றும் சேர்ந்தே 'குற்றச் செயல்' ஆகின்றது—செயலும் செய்யாமையும் —இச்சைக்கடங்கிய செயல்—செய்கைக்கும் விளைவிற்கும் உள்ள காரண காரியத் தொடர்பு—குற்ற மனம், குற்றச் செயல் இரண்டுமின்றிக் குற்றம் இல்லை.**

'குற்ற மனம் இல்லையெனில் குற்றம் இல்லை' என்று கண்டோம். குற்ற மனம்மட்டுமே குற்றமாகிவிடுவதும் இல்லை. குற்ற எண்ணம் செயலாக வெளிப்பட்டபின்தான் அது சட்டத்தின் பார்வையில் படுகின்றது.

ஒருவர் மற்றொருவரைக் கொல்லவேண்டும் என்று கருதுகிறார். அந்தக் கருத்தே குற்றமாகிவிடுவதில்லை. கொலை செய்யவேண்டும் என்ற கருத்து கொலைச்செயலாக வெளிப்படும்பொழுதுதான் அது கொலைக் குற்றம் ஆகின்றது. ஒரு பொருளை ஒருவர் திருட வேண்டும் என்று கருதுகிறார். ஆனால், திருடவில்லை. திருட வேண்டும் என்ற கருத்து குற்றமாவது இல்லை. உள்ளத்தில் எழுந்த தீய கருத்து, செயலாக உருவெடுத்த பின்னர்தான் அதைக் குற்றம் எனச் சட்டம் கொள்ளுகிறது. அந்தச் செயலை ஒருவர் மீண்டும் செய்யாதிருக்க வேண்டும் என்று அவரைச் சட்டம் தண்டிக்கின்றது. இவ்வாறு, சட்டம் தடை செய்வது குற்றச் செயல்களைத்தான், குற்ற எண்ணங்களை அன்று.

தீயவைகளை 'உள்ளத்தால் உள்ளலும் தீது' என்று அறநூல்கள் கூறுகின்றன. உள்ளத்தை உயர்த்துவது அறத்தின் குறிக்கோள்; எனவே, தீய எண்ணங்களையும் அறம் விலக்குகிறது. 'மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்து அறன்' என்பது உயர்ந்த அறநெறி. ஆனால், ஒருவர் மனத்தில் தீய எண்ணங்கள் இருக்கின்றனவா என்பதைக் கண்டறிவது எப்படி? தீய எண்ணம் தீய செயலாக வெளிப்பட்ட பின்னர்தான் அந்தச் செயலை ஊக்கிய

தீய எண்ணம் மனத்தில் இருந்திருக்க வேண்டும் என்று ஊகித்து அறிகின்றோம். கருத்து கருத்தாகவே இருக்கும்பொழுது, அது வெளித் தெரிவதில்லை. அது காரியமாக, புறச்செயலாக உரு வெடுத்த பின்னரே கருத்தை நாம் தெரியமுடிகிறது. 'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்பார்கள். ஆனால், சட்டம் முகத்தின் வழி அகத்தைக் காண முயலுவதில்லை; கருமத்தின்வழியேதான் கருத்தைக் காணுகின்றது; செய்கையில் இருந்தே சிந்தனையை அளக்கின்றது. குற்றச் செயலினால் குற்ற மனத்தை ஊகித்தறி கின்றது. குற்றச் செயல் இல்லையேல் சட்டம் ஏதும் செய்வதற்கில்லை. குற்றச் செயல் புரியாத ஒருவரைச் சட்டம் குற்றவாளியாகக் கொள்ளுவது இல்லை.

தீய கருத்தாலும் தீய செயலாலும் பாவம் விளையலாம் என்பது அறம்; தீய செயல் இன்றிக் குற்றம் இல்லை என்பது சட்டம். (Sins may be committed in thought and deed; crimes only in deed —Fitzgerald.)

குற்ற மனம், குற்றச் செயல் இரண்டும் இருந்தால்தான் 'குற்றம் பிறக்கிறது. குற்ற மனத்தை 'mens rea' என்று இலத்தீன் மொழி யில் கூறுவதுபோல், குற்றச் செயலை 'actus reus' என்பார்கள்

**'குற்றச் செயல்' (Actus reus) என்பது என்ன?**

மனம், வாக்கு, காயம் மூன்றிலும் ஏற்படும் இயக்கத்தைச் 'செய்கை' என்கிறோம். எண்ணுதல் செய்கை, பேசுதல் செய்கை, உடலை இயக்குதல் செய்கை. உள்ளுதலும், உரைத்தலும், உடலை யசைத்தலும் செய்கைகள்தாம். ஆனால், நாம் இங்கு அகநிகழ்வு களைச் செய்கைகளாகக் கொள்ளுவதில்லை. தீய எண்ணங்கள் தோன்றுவதைக் 'குற்ற மனம்' என்று முன்பகுதியில் சேர்த்து விட்டோம். உடல் இயக்கம், உரையாற்றல் இவைகளைப்பொறுத்தே 'செய்கை' என்ற சொல் இங்குப் பயன்படுகிறது. செய்கையைச் 'செய்வினை' என்றும் கூறலாம்.

செய்வினையால் ஏற்படும் பயனை, விளைவு (result) என்கிறோம். வினையும் விளைவும் தொடர்பு கொண்டவை. நான் கம்பினால் ஒரு வரை அடிக்கிறேன்; அடித்தல் ஒரு வினை. அதன் பயனாக அடி பட்டவருக்குக் காயம் ஏற்படுகின்றது; காயம் விளைவு. வினையாகிய அடித்தலும் விளைவாகிய காயமும் சேர்ந்து 'காயம் விளைத்தல்' என்ற செயல் ஆகின்றது. ஒருவர் செய்யும் வினையும் அதன் விளைவும் சேர்ந்து அவருடைய 'செயல்' (act) ஆகின்றது. எனவே, 'காயம் விளைத்தது' என்னுடைய செயலாகும்.

ஒருவர் மற்றொருவரை நோக்கிச் சுடுகின்றார். ஆனால், குறி தவறிவிடுகின்றது. எவரை நோக்கிச் சுடப்பட்டதோ அவர் இறக்கவில்லை. இப்பொழுது அச் செயலைக் 'கொலை முயற்சி' என்கிறோம். குறி சரியாக இருந்து, சுடப்பட்டவர்மீது குண்டு பாய்ந்து அவர் இறந்துவிட்டால், அந்தச் செயலைக் 'கொலை' என்கிறோம். சுட்டவரின் உடல் இயக்கம் இரண்டிலும் ஒன்றுதான்; ஆனால், அதன் விளைவுகள் வேறுபட்டவை. ஒன்றில் மரணம் விளையவில்லை; ஒன்றில் மரணம் விளைந்தது. முன்னதைக் 'கொலை முயற்சி' என்றும், பின்னதைக் 'கொலை' என்றும் கூறுகிறோம். 'கொலை முயற்சி' என்ற செயலில் அடங்குவன, சுட்டது, மரணம் விளையாத நிலை இரண்டும். 'கொலை' என்ற செயலில் அடங்குவன சுட்டது, மரணம் விளைந்தது இரண்டும். வினைகள் ஒன்றாக இருந்தாலும் விளைவுகள் வேறாக இருந்ததால், செயல்கள் மாறுகின்றன. சுடுதல் என்ற வினை இரண்டிலும் ஒன்றுதான். ஆனால், விளைவுகள் வேறுபட்டவை. எனவே, செயல்களும் வேறாகின்றன. ஒன்று 'கொலை முயற்சி' என்ற செயல், மற்றொன்று 'கொலை' என்ற செயல்.

எனவே, ஒருவரின் உடல் இயக்கத்தை, செய்வினையைமட்டும் வைத்துச் செயலை நிச்சயிக்கமுடியாது. வினையின் விளைவையும் கண்டுதான் செயலைக் கணிக்கின்றோம்.

## செய்வினை, விளைவு, சூழ்நிலை மூன்றும் சேர்ந்தே 'குற்றச் செயல்' ஆகின்றது

செய்வினை, விளைவு இந்த இரண்டைத் தவிர, இன்னும் ஒரு முக்கியமான கூறு ஒன்று உண்டு. அதுதான் சூழ்நிலை. வினையும் விளைவும் ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் நிகழ்ந்தால்தான் அது குற்றச் செயல் ஆகின்றது.

மரண தண்டனை விதிக்கப்பட்ட குற்றவாளியைச் சிறைச்சாலை அதிகாரி தூக்கிலிடுகின்றார். ஆனால், அந்த அதிகாரி கொலைக் குற்றத்திற்கு ஆளாவதில்லை. அவர் குற்றவாளியைத் தூக்கிலிட்டது சட்டப்படியான செயலாகும். அவர் தூக்கிலிட்ட செய்வினையும் அதனால் குற்றவாளிக்கு விளைந்த மரணமும் இருந்தும், அது 'கொலைக் குற்றம்' இல்லை. ஏன்? குற்றவாளி மரணதண்டனை விதிக்கப்பட்டவர். சிறை அதிகாரியின் கடமை குற்றவாளிக்கு விதிக்கப் பட்ட தண்டனையை நிறைவேற்றுவதாகும். இந்தச் சூழ்நிலையால், சிறை அதிகாரி தண்டனை பெற்றவரின் மரணத்தை விளைவித்த செயல் குற்றமற்ற செயலாகிறது. நம்மை ஒருவர் கொல்ல முயற்சி செய்கையில் நாம் தப்புவதற்கு வேறு வழியில்லையெனில், நாம் அவ

ரைக் கொல்லலாம். இது சட்டம் நமக்கு அளிக்கும் தற்காப்பு உரிமை. இவ்வாறு, தற்காப்பு நடவடிக்கையாக ஒருவர் மற்ெருருவருக்கு மரணம் விளைவித்தால் அதுவும் கொலைக்குற்றம் ஆகாது.

எனவே, வினையையும் விளைவையும்மட்டும் வைத்துக் குற்றச் செயலை நிர்ணயித்தல் முடியாது. சட்டத்தால் விலக்கப்பட்ட சூழ்நிலையில் அவை நிகழ்ந்தனவா என்பதை ஆராய்ந்தே சட்டம் அவற்றைக் குற்றச் செயல் என்று கொள்ளுகிறது. பகைமையின் காரணமாக ஒருவர் மற்ெருருவருக்கு மரணத்தை விளைவித்தல் குற்றச் செயல். பகையைப் போக்குவதற்கு ஒருவர் மற்ெருருவரைக் கொல்லலாம் என்று சட்டம் அனுமதிப்பதில்லை. ஆனால், மேலே கூறப்பட்ட நிலையில் தம் உயிரைக் காப்பதற்கு அவசியமானல் ஒருவர் மற்ெருருவரைக் கொல்லுவதைச் சட்டம் தடுப்பதில்லை. ஆதலால், ஒரு வினையும் அதன் விளைவும் சேர்ந்து குற்றச் செயல் ஆகின்றதா என்று தீர்மானிப்பதற்குமுன் அவை எந்தச் சூழ்நிலையில் நிகழ்ந்தன என்பதைச் சட்டம் கவனிக்கிறது.

சட்டத்தால் தடை செய்யப்பட்ட செயல் என்ருல், செய்வினை மட்டும், அல்லது விளைவுமட்டும் தடைசெய்யப்பட்டது என்று பொருள் கொள்ளலாகாது. செய்வினை, சூழ்நிலை, விளைவு அனைத்தும் அடங்கிய 'செயல்' தடைசெய்யப்பட்டது என்பதே பொருளாகும். ஒருவர் செய்யும் வினை, சூழ்நிலைகள், அதனால் நேரும் விளைவு இம் மூன்றும் சேர்ந்தே 'குற்றச் செயல்' ஆகின்றன.

(Every act is made up of three distinct factors or constituent parts. These are (i) its origin in some mental or bodily activity, (ii) its circumstances, and (iii) its consequences—Salmond.)

**செயலும் (Act) செய்யாமையும் (Omission)**

பொதுவாகச் சட்டம் ஒரு செயலைத்தான் தடைசெய்து அதைக் குற்றம் என்று கூறுகிறது. சாதாரணமாக, ஒரு செயலைச் செய்யாமையைக் (omission) குற்றமாகச் சட்டம் கொள்ளுவதில்லை.

ஒருவருடைய செய்யாமையாலும் பிறருக்குக் கேடு விளையலாம். ஆனால், அதற்கு அவரைப் பொறுப்பாக்குவதில் சிக்கல்கள் எழுகின்றன. ஒருவர் மற்ெருருவரை நதிக்குள் தள்ளி மூழ்கடித்து விடுகிருர் என்ருல், மூழ்கி இறந்தவரின் மரணத்திற்கு மூழ்கடித்தவரைப் பொறுப்பாக்குகிருேம். இதில் எந்தச் சிக்கலும் இல்லை. ஒருவர் தவறி நதியில் விழுந்து நீந்தமுடியாமல் தவிக்கிருர். அப்பொழுது கரையில் நான்கைந்து பேர்கள் நின்றுகொண்டிருக்கிருர்கள். அவர்களுக்கு நன்ருக நீந்தவும் தெரியும். எனினும்,

அவர்களில் எவரும் நதியில் இறங்கி விழுந்து தவித்துக்கொண்டிருந் தவரைக் காப்பாற்ற முயலவில்லை. எனவே, நதியில் விழுந் தவர் இறந்துவிடுகிறார். இப்பொழுது, இந்த மரணத்திற்கு யாரைப் பொறுப்பாக்குவது? கரையில் நின்றுகொண்டிருந்தவர்கள் அனைவர் மீதும் குற்றம் சாட்டமுடியுமா? கரையில் இருந்தவர்கள் எவருமே நதியில் விழுந்தவரைக் காப்பாற்ற முயலவில்லை. எனவே, அவர்கள் எல்லோரும் கொலைக்குற்றம் செய்தவர்கள் என்று சட்டம் கொள்ளுவது சரியாகுமா? சரியாகாது. குற்றவியல் சட்டம், ஒன்றைச் செய்தல்கூடாது என்று தடுக்கின்றதே தவிர, ஒரு காரியத்தைச் செய்யவேண்டுமென்று பொதுவாகக் கட்டளை யிடுவதில்லை.

'பிறரைக் கொல்லாதே' என்று சட்டம் தடை விதிக்கின்றது. 'மற்றவரை ஆபத்தினின்றும் காப்பாற்று' என்று சட்டம் விதிப்ப தில்லை.

நீரில் மூழ்கித் தவித்துக்கொண்டிருந்தவரின் உதவிக்குச் செல் லாதது அறத்தின் கண்ணோட்டத்தில் பாவமான செயல்தான். ஆனால், அது சட்டத்தின் கண்ணோட்டத்தில் குற்றமான செயல் அன்று. 'பல காரியங்களை ஒரு மனிதன் செய்யவேண்டும்; இல்லை யேல் அது குற்றமாகும்' என்று சட்டம் விதித்தால், அது மக்களின் சுதந்திரத்தைக் கெடுப்பதாகும். ஒரு காரியத்தைச் செய்யக்கூடாது என்று சட்டம் தடை செய்வது மனிதனின் சுதந்திரத்தை ஓரளவு பாதிக்கின்றது. எனினும், மக்களின் பொதுநலனைக் கருதி, அந் நலனைப் பாதிக்கும் செயல்களைச் சட்டம் தடை செய்கிறது. ஆனால், குறிப்பிட்ட ஒரு காரியத்தை ஒருவர் செய்யவேண்டுமென்று சட்டம் கட்டளையிட்டால், அவர் வேறு ஒன்றையும் செய்ய இயலாத நிலை யில் சுதந்திரத்தை இழந்தவராகின்றார். எனவே, தீய காரியங்களைச் சட்டம் தடை செய்கிறதே தவிர, நல்ல காரியங்களை அவசியம் செய்யவேண்டும் எனக் கட்டளையிடுவதில்லை.

ஆயினும், சில வேளைகளில் சட்டம் குறிப்பிட்ட காரியங்களை மக்கள் செய்யவேண்டும் என விதிக்கிறது. இதை மீறி அக் காரியங்களைச் செய்யாவிடில் அது குற்றமாகும்.

குற்ற வழக்கு நடைமுறைச் சட்டம் (Criminal Procedure Code) 42ஆம் பிரிவுப்படி, போலீசு அதிகாரியோ, மாஜிஸ்ட்ரேட்டோ கைது செய்யப்படவேண்டிய ஒருவரைக் கைது செய்ய முயலும் போது, அவர்கள் கேட்கும் உதவியைப் பிறர் செய்யவேண்டும். அவ்வாறு செய்யத் தவறினால் அது குற்றமாகும். 44ஆம் பிரிவுப்படி கொலை, கூட்டுக் கொள்ளைபோன்ற கொடுங்குற்றங்கள் செய்யப்

பட்டால், அதுபற்றி மாஜிஸ்ட்ரேட்டுக்கோ, போலீசுக்கோ தகவல் தெரிவிக்கவேண்டும். இதுபோன்ற குறிப்பிட்ட கட்டளைகளை மீறி நடந்தால் அது குற்றச் செயலாகிறது.

சட்டம் விதிக்கும் கடமைகளைச் செய்யாமல் விடுவது, வெறும் செய்யாமை அன்று; அது சட்ட முரணான செய்யாமை (illegal omission) ஆகிறது. சட்ட முரணான செய்யாமையைக் 'குற்றம்' எனச் சட்டம் கொள்ளுகிறது. சட்ட முரணான செய்யாமையும் 'குற்றச் செயல்' ஆகிறது.

இந்த விதியை இந்தியக் குற்றவியல் சட்டத்தின் 32ஆம் பிரிவில் காணுகிறோம். சட்டத்தில் எங்கெங்குச் 'செயல்கள்' குறிக்கப்படுகின்றனவோ அங்கெல்லாம் 'சட்ட முரணான செய்யாமையும்' குறிக்கப்படுவனவாகக் கொள்ளுதல்வேண்டும் என்று அப் பிரிவு கூறுகின்றது.

(In every part of this Code, except where a contrary intention appears from the context, words which refer to acts done extend also to illegal omissions—Sec. 32 I.P.C.)

சட்டத்தால் விதிக்கப்பட்டதைச் செய்யத் தவறுவதும் குற்றச் செயல் ஆகிறது என்ற கொள்கை, குறள் ஒன்றை நினைவிற்குக் கொண்டுவருகிறது:

> செய்தக்க அல்ல செயக்கெடும்; செய்தக்க
> செய்யாமை யானும் கெடும். (கு. 466)

செய்யத்தகாத செயல்களைச் செய்தால் ஒருவன் கெடுவான், செய்யத் தக்க செயல்களைச் செய்யாமல் விடுவதாலும் ஒருவன் கெடுகிறான் என்ற குறள் நெறியும், சட்டத்தால் விலக்கப்பட்டதைச் செய்பவன் குற்றம் இழைக்கிறான், சட்டத்தில் விதிக்கப்பட்டதைச் செய்யாதவனும் குற்றம் புரிந்தவனாகிறான் என்ற சட்ட நெறியும் ஒரே கொள்கையில் பிறந்தவை.

### இச்சைக்கடங்கிய செயல்கள்(Voluntary Acts)

ஒருவருடைய உடல் இயக்கம் அவருடைய சுயேச்சையை மீறியதாக இருந்தால், அதை அவர் தன்னிச்சையுடன் செய்தது என்று கூறமுடியாது. ஒருவர் தம் கையில் கத்தியை வைத்துக் கொண்டிருக்கிறார். திடீரென்று அருகில் இருந்த இரண்டாவது நபர், அவர் கையைப் பிடித்து இழுத்து மூன்றாவது நபர் ஒருவரைக் குத்தும்படி செய்துவிட்டால், குத்திய செயலைச் செய்தது யார்? கத்தியை வைத்திருந்தவருடைய கைதான் மூன்றாவது நபரைக்

குத்தியது. ஆனால், அந்தக் கை அவருடைய தன்னிச்சைப்படி குத்தவில்லை. அடுத்திருந்தவருடைய பலாத்காரத்திற்கு உட்பட்டு அந்தக் கை இயங்கியது. எனவே, குத்திய செயலுக்குப் பொறுப் பாளி இரண்டாவது நபர்தான். கத்தியால் குத்திய 'குற்றச் செயல்' இரண்டாவது நபருடையதாகும்.

சிலர் தூக்கத்தில் நடப்பார்கள்; தூக்கத்திலேயே எழுந்து ஏதாவது செய்துவிடுவார்கள். இது உடல் வியாதியால் நிகழும் செயல்கள். வலிப்பு நோயாலும் தன்னிச்சைமீறிய உடலசைவுகள் சிலருக்கு ஏற்படுவதுண்டு. இந்த உடலசைவுகளால் தீங்கு விளைந்தாலும் அவைகள் 'குற்றச் செயல்கள்' ஆவதில்லை.

ஒருவரின் தன்னிச்சைக்கு மீறிய வினைகளால் தோன்றும் விளைவுகளைக் 'குற்றச் செயல்க'ளாகச் சட்டம் கொள்ளுவதில்லை.

**காரணகாரியத் தொடர்பு** (Causal Relationship)

செய்வினையும் அதன் விளைவும் சேர்ந்து குற்றச் செயல் ஆகிறது எனக் கண்டோம். எனவே, செய்கைக்கும் விளைவிற்கும் தொடர்பு இருக்கவேண்டும். குறிப்பிட்ட செய்கையிலிருந்து விளைவு நேர்ந்திருக்க வேண்டும். அப்பொழுதுதான் ஒரு வினையை யும் அதன் விளைவையும் ஒன்றுசேர்த்துக் குற்றச் செயல் என்று நாம் கூறமுடியும்.

ஒருவர் மற்றொருவரை அடித்துக் காயப்படுத்துகிறார். காயம் அடைந்தவர் உடற்காயத்திற்கு மருந்து போடுவதற்கென்று மருத்துவ மனைக்குச் செல்கிறார். அங்கு வழுக்கி விழுந்து காலை ஒடித்துக் கொள்ளுகிறார் என்று வைத்துக்கொள்வோம். இப்படிக் கால் ஒடிந்ததற்கு அடித்தவரைப் பொறுப்பாக்க முடியுமா? முடியாது. அடித்ததால் ஏற்பட்ட காயத்திற்கு அடித்தவர் பொறுப்பு. ஆனால், மருத்துவமனையில் வழுக்கி விழுந்தது அடித்த வினையின் நேரடி விளைவன்று. எனவே, அடித்த வினைக்கும் கால் ஒடிந்ததற்கும் காரணகாரியத் தொடர்பு இல்லை.

செய்வினையும் அதன் இயல்பான நேரடி விளைவும் சேர்ந்தே செயல் எனப்படுகிறது. தொடர்பு இல்லாத விளைவை வினையுடன் சேர்த்துக் கூறுதல் சரியன்று.

ஒருவரால் விளைக்கப்பட்ட கொடுங்காயத்தை ஆற்றுவதற்காக ஆபரேஷன் செய்யப்படுகிறது. ஆபரேஷனைத் தாங்க முடியாமல் காயமடைந்தவர் இறந்துவிட்டார். காயமடைந்தவரின் மரணத் திற்கு உடனடியான காரணம் ஆபரேஷனாக இருந்தாலும், காயம் விளைவித்தவரே அதற்குப் பொறுப்பாகின்றார்.

ஒருவர் மற்றொருவருக்குக் கொடுங்காயம் ஒன்றை விளைவிக் கிறார். காயம் பெற்றவரைச் சிகிச்சை செய்வதற்கு உடனே வைத்

திய வசதி கிடைக்கவில்லை. காயத்தின் பயனுகக் காயமடைந்தவர் இறந்துவிடுகிருர். காயம் விளைவித்தவர் கொலைக் குற்றத்திற்கு இப்பொழுது பொறுப்பாகின்ருர். வைத்திய வசதி கிடைத்திருந்தால் காயம் பெற்றவர் பிழைத்திருப்பார் என்ற சமாதானத்தைக் கூறி, காயம் விளைவித்தவர் தப்ப முடியாது. காயம் அடைந்தவர் சரியான முறையில் மருத்துவ சிகிச்சை பெற மறுத்திருக்கலாம். அதனுல் அவர் மரணம் விளைந்தாலும், அந்தக் கொலைக்குற்றம் காயம் விளை வித்தவரையே சாரும்.

## குற்றச் செயலில் நேரடியாகப் பங்கெடுக்காமலும் இருக்கலாம்

குற்றச் செயலில் நேரடியாக ஒருவர் பங்கெடுக்காமல் இருக் கலாம். இன்னொருவரைத் தூண்டிவிட்டு ஒரு குற்றத்தை அவர் மூலமாகவே ஒருவர் செய்யலாம். இப்பொழுது தூண்டிவிட்டவரும் குற்றத்திற்குப் பொறுப்பாகின்ருர். தூண்டிவிடப்பட்டு நேரடியாகக் குற்றம் இழைத்தவர், அவரைத் தூண்டிவிட்டவர் இருவருமே குற்றச் செயலுக்குப் பொறுப்பாகின்றனர்.

சில வேளைகளில் குற்றச் செயலில் நேரடியாகப் பங்கு கொள் பவர் குற்றத்திற்குப் பொறுப்பாகாமல், தூண்டிவிட்டவர் மட்டுமே பொறுப்பாவதும் உண்டு. சிறு குழந்தையை அல்லது சித்த சுவாதீனம் இல்லாத ஒருவரைத் தூண்டிவிட்டு, ஒருவர் குற்றச் செயலைச் செய்தால், அதற்குத் தூண்டிவர்மட்டுமே பொறுப் பாகின்ருர். ஏனெனில், குழந்தைகளையும் பைத்தியங்களையும் 'குற்ற மனம் இல்லாதவர்கள்' எனச் சட்டம் கொள்ளுகிறது.

## குற்ற மனம், குற்றச் செயல் இரண்டுமின்றிக் குற்றம் இல்லை

இவ்வாறு, குற்ற மனம், குற்றச் செயல் இரண்டுமின்றிக் குற்றம் இல்லை. இரண்டில் ஒன்றுமட்டும் இருந்தால் குற்றம் பிறப்பது இல்லை. ஓர் உதாரணம் இக் கொள்கையைத் தெளிவாக்கும்.

ஒருவருடைய சமையற்காரன் தன் எசமானரை நஞ்சிட்டுக் கொல்லவேண்டும் என்று நினைக்கிருன். விஷத்தையும் கடையி லிருந்து வாங்கிவந்துவிட்டான். வெண்மை நிறத் தூளாக இருந்த விஷத்தை ஒரு புட்டியில் வைத்திருந்தான். எசமானருக்குக் கொடுக்கும் பாலிலே புட்டியில் இருந்த வெண்மை நிறத் தூளைக் கலந்து கொடுத்துவிட்டான்; எசமானரும் பாலைக் குடித்தார். ஆனுல், அவர் இறக்கவில்லை! பிறகுதான் வேலையாளுக்குத் தெரிந்தது, தான் பாலில் கலந்த வெண்மை நிறத் தூள் விஷமன்று, வெண்மை நிறச் சீனிதான் என்று. அருகில் இருந்த புட்டியில் உள்ள சீனியை விஷத்தூள் என்று தவறுதலாக நினைத்துச் சீனியையே பாலில்

கலந்திருக்கிருன். இப்பொழுது வேலையாளைக் கொலை செய்ய முயற்சி செய்தான் என்று தண்டிக்க முடியுமா? முடியாது. ஏன்? அவனுக்குக் 'குற்ற மனம்' இருந்தது. தன் எசமானரைக் கொல்ல வேண்டும் என்ற தீய கருத்து அவனை இயக்கியது. இதில் ஐயம் இல்லை. ஆனால், அவன் செயல் 'குற்றச் செயல்' அன்று. பாலிலே விஷத்தைக் கலக்கிய செய்வினை இல்லை, மரணம் என்ற விளைவும் இல்லை. எனவே, 'குற்றச் செயல்' இல்லை. 'குற்றச் செயல்' இல்லாததால், அவனைக் குற்றவாளி என்று சட்டம் கொள்ளு வதில்லை.

இந்த விஷப்பொடி இருந்த புட்டி சீனிப்புட்டிக்குப் பக்கத்தில் இருந்தது. வேருெரு வேலையாள் எசமானருக்குப் பால் கொடுக்கும் பொழுது, விஷப்பொடியைச் சீனிதான் என்று எண்ணிப் பாலுடன் கலந்து கொடுத்துவிடுகிருன். எனவே, எசமானரின் மரணம் விளைகின்றது. இப்பொழுது பாலைக் கொடுத்த வேலையாள் கொலைக்குற்றத்திற்கு ஆளாகின்ருனு? இல்லை. அவன் குற்றச் செயல் செய்தான். ஆனால், 'குற்ற மனம்' அவனுக்கு இல்லை. பாலிலே கலந்தது சர்க்கரைதான் என்று நினைத்தே அவன் நஞ்சுத் தூளைக் கலந்துவிட்டான். குற்ற மனம் இன்றிச் செய்த செயலால் மரணமே விளைந்தாலும் அது குற்றமாவது இல்லை.

எனவே, குற்ற மனம் இன்றிக் குற்றம் இல்லை; குற்றச் செயல் இன்றிக் குற்றம் இல்லை. குற்ற மனம், குச்றச் செயல் இரண்டும் கூடியதைத்தான் 'குற்றம்' என்று கூறுகிறோம்.

(The general principles of the Criminal Law might be summed up in two propositions : (ii) no one is guilty of a crime without performing an act of some sort: (ii) and an act by itself unaccompanied by criminal intent does not suffice to render a person guilty of an offence—Fitzgerald.)

குற்ற மனமும் குற்றச் செயலும் சேர்ந்தால்தான் குற்றம் பிறக்கிறது என்பது குற்றவியல் சட்டத்தின் ஆதாரக் கொள்கை யாகும்.

# 8. கருத்தும் நோக்கமும்

## (Intention and Motive)

கருத்து, நோக்கம இரண்டிற்கும் உள்ள வேறுபாடு—செயலின் காரணம் கருத்து, கருத்தின் காரணம் நோக்கம்—ஒரு செயலின் குற்றத் தன்மையை நிர்ணயிப்பது அதன் கருத்தை வைத்துத்தான், நோக்கத்தை வைத்தன்று—மனத்தூய்மை, செய்வினைத் தூய்மை.

ஒருவருடைய செய்கையிலிருந்து கருத்தைக் காணுகிறோம் என்றும், அக் கருத்திலிருந்து அவருடைய குற்ற மனத்தை அறிகிறோம் என்றும் கூறப்பட்டது.

### கருத்தும் நோக்கமும்

கருத்து (intention) என்ற சொல்லிற்கும் நோக்கம் (motive) என்ற சொல்லிற்கும் உள்ள வேறுபாட்டை நாம் இங்குக் காண வேண்டும்.

நான் எழுத வேண்டும் என்று விரும்புகிறேன்; அதற்காகப் பேனாவைக் கையில் எடுக்கிறேன். நான் பேனாவைக் கையில் எடுக்கவேண்டும் என்று மனத்தில் கருதி அதை எடுத்தது 'கருதிய செயல்'. எதற்காக எடுத்தேன்? எழுதுவதற்காக. எழுதவேண்டுமென்பது எனது 'நோக்கம்.' 'என்ன செய்தேன்?' என்பதற்கு விடை 'பேனாவைக் கையில் எடுத்தேன்' என்பதாகும். இது கருத்தைக் குறிக்கிறது. 'ஏன் செய்தேன்?' என்பதற்கு விடை 'எழுதுவதற்காக' என்பதாகும். இது நோக்கத்தைக் குறிக்கிறது.

ஒரு செயலிலிருந்து அதைச் செய்தவரின் கருத்தை அறிய வேண்டுமெனில், என்ன செய்தார் என்பதை நாம் பார்க்கவேண்டும். அதைச் செய்தவரின் நோக்கத்தை அறிய வேண்டுமெனில், ஏன் செய்தார் என்பதைக் காணவேண்டும்.

எழுதும் நோக்கம் தூண்டியதால் பேனவை எடுத்தேன். பேனவை எடுத்ததற்குக் காரணம் எழுதும் நோக்கம். எனவே, கருத்தின் காரணம் நோக்கமாகிறது.

பகையின் காரணமாக ஒருவர் கையை மற்றவர் வெட்டி விடுகின்றார். கையை வெட்டியது கருதிய செயல். கையை வெட்டித் துன்பத்தை விளைவிக்க வேண்டும் என்பது கருத்து. அதற்குக் காரணமாக உள்ளது பகைமை, பழிதீர்க்கும் எண்ணம். எனவே, வெட்டிய செயலுக்கான நோக்கம் பகைமை என்கிறோம்.

கருத்தின் கருத்தாக, உட்கருத்தாக இருப்பது 'நோக்கம்' எனப்படுகிறது.

ஒரு பெண் அணிந்திருந்த நகைகளைக் கைப்பற்ற வேண்டும் என்ற ஆசையால் அவளை ஒருவன் கொலைசெய்கிறான். இப்பொழுது கொலைச்செயலின் குறிக்கோள் நகையை அடைவது. நகையை அடைய வேண்டும் என்ற தீய விருப்பத்தைக் கொலையின் நோக்கம் என்கிறோம். ஒரு செயலின் காரணம் கருத்து; கருத்தின் காரணம் நோக்கம்.

எதைக் குறியாகக்கொண்டு ஒரு செயல் செய்யப்படுகிறதோ, அதை அச் செயலின் நோக்கம் என்று கூறுகிறோம்.

ஒரு செயலைச் செய்தவரின் கருத்தை அறிவதற்கு அச் செயலின் தன்மையை ஆராய்கின்றோம். அவரின் நோக்கத்தை அறிவதற்கு இதர சூழ்நிலைகளை ஆராய வேண்டும். செயலிலிருந்து கருத்து வெளிப்படும்; ஆனால், நோக்கம் வெளிப்படுவதில்லை. செயலின் தன்மையைக் காட்டுவது கருத்து, கைகூடவேண்டிய காரியத்தைக் குறிப்பது நோக்கம். செயலில் அடங்கியிருப்பது கருத்து. செயலுக்கு அப்பாற்பட்டு அதன் குறிக்கோளாக இருப்பது நோக்கம்.

(Intention is that which relates to the wrongful act itself; the motive is that which passes beyond the wrongful act ..... ..... Salmond.)

### குற்றத்தன்மையை நிர்ணயிப்பது கருத்தை வைத்துதான்

செயலையும், அச் செயலிலிருந்து காணப்படும் கருத்தையும் தாம் சட்டம் கவனிக்கின்றது; செயலுக்குக் காரணமான நோக்கத்தைச் சட்டம் பொருட்படுத்துவதில்லை. தீய செயல் கருதிச் செய்யப்பட்டதா என்பதையே சட்டம் கணக்கில் எடுக்கிறது. தீச்செயல் எந்த நோக்கத்துடன் செய்யப்பட்டது என்பதைப் பற்றிச் சட்டம் அக்கறை செலுத்துவது இல்லை.

குற்ற வழக்கு விசாரணைகளில் நோக்கத்தைப்பற்றியும் ஓரளவு கவனிப்பதுண்டு. ஒருவர் மற்றொருவரைக் கொலை செய்தாரா என்பதை முடிவு செய்வதற்கு, அவர்கள் இருவருக்கும் உள்ள பகைமையைப்பற்றியும் ஆராயலாம். மரணத்தை விளைவித்த செய்கையைக் குற்றம் சாட்டப்பட்டவர் செய்தார் என்பதற்குத் தகுந்த சாட்சியம் இருந்தால், அவர் மரணத்தை விளைவிக்க வேண்டும் என்ற கருத்துடன்தான் அச் செய்கையைச் செய்தாரா என்று காண்பதற்கு அவர்களிடை இருந்த முற்பகைமையையும் சட்டம் கவனிக்கிறது. ஆனால், அவர் கொலை செய்ததை நேரில் பார்த்த, நம்புதற்குரிய சாட்சிகள் இருந்துவிட்டால், கொலைக்கான நோக்கம் ஏதும் இல்லை என்றாலும் அவர் குற்றவாளிதான். கொலைச்செயலைக் குற்றம் சாட்டப்பட்டவர்தான் செய்தார் என்பதற்குப் போதிய சாட்சியம் இல்லையெனில், குற்றம் சாட்டப்பட்டவருக்கும் கொலை யுண்டவருக்கும் கொடிய பகைமை இருந்தது என்பதை மட்டும் வைத்து, அவரைக் குற்றவாளியாகச் சட்டம் கொள்ளுவது இல்லை. எனவே, நோக்கத்தைமட்டும் வைத்து ஒருவரைக் குற்றவாளி எனச் சட்டம் கருதுவது இல்லை. குற்றச் செயல் என்ன கருத்துடன் செய்யப்பட்டது என்பதை வைத்தே குற்றவாளியின் பொறுப்பு தீர்மானிக்கப்படுகின்றது.

நல்ல நோக்கத்தோடு ஒரு குற்றமான செயல் செய்யப்படலாம் ; நோக்கம் நல்லது என்பதற்காகக் குற்றமான செயலைச் சட்டம் மன்னிப்பது இல்லை. தீய நோக்கத்தோடு குற்றமற்ற செயல் செய்யப்படலாம் ; நோக்கம் தீயதாக இருப்பதால் அச் செயல் குற்றமானதாக மாறுவதும் இல்லை. எனவே, நோக்கத்தின் அடிப்படையில் ஒரு செயலின் தன்மை தீர்மானிக்கப்படுவதில்லை.

[It is certainly a general rule of our law that an act *prima facie* lawful is not unlawful and actionable on account of the motives which dictated it—Lord Herschell in 'Allen V. Flood (1898)' A. C. 123.]

ஒருவர் ஓர் ஆட்டைக் கொல்லுவதற்காகக் கசாப்புக் கடைக்கு இட்டுச் செல்லுகிறார். கொல்லாமை விரதம் பூண்ட ஒருவருக்கு இதைத் தடுக்கவேண்டும் என்ற எண்ணம் உதிக்கிறது. எனவே, ஆட்டை வலுக்கட்டாயமாகக் கைப்பற்றித் தம் வீட்டிற்குக் கொண்டு போய்விடுகிறார். இவ்வாறு செய்தது குற்றமா, இல்லையா ? ஒருவர் பொருளை அவர் சம்மதம் இன்றி எடுத்துச் செல்லுவது திருட்டுக் குற்றமாகும். எனவே, ஆட்டை, அதற்கு உடையவரின் சம்மதம் இன்றிக் கைப்பற்றிச் சென்றது குற்றமான செயல் ஆகிறது.

குற்றம் இழைத்ததற்குக் காரணம் கொல்லாமையை நிலைநாட்ட வேண்டுமென்ற நன்னோக்கம்தான். ஆட்டைத் தனதாக்கிக் கொள்ள வேண்டுமென்ற தீய கருத்து ஏதுமின்றிதான் அவர் ஆட்டை அகற்றிச் சென்றார். ஆட்டைக் காப்பாற்ற வேண்டும் என்ற நல்ல நோக்கத்துடனேயே இச் செயல் செய்யப்பட்டது. இருந்தும், அதைத் திருட்டுக் குற்றம் என்றுதான் சட்டம் கொள்ளுகிறது. ஆட்டை வல்லந்தமாக எடுத்துச் சென்றது வேண்டுமென்றே கருதிச் செய்த செயல்தான். எனவே, அது வினைத்தூய்மையற்ற செயல். ஆதலால், அதைக் குற்றம் எனவே சட்டம் கொள்ளுகிறது.

(The Law will judge a man by what he does, not by the reasons for which he does it........Salmond.)

ஒரு செயலின் குற்றத் தன்மையைத் தீர்மானிப்பதற்குச் சட்டம் அதைச் செய்தவரின் நோக்கத்தையும் கவனிப்பது என்றால், நீதி தவறிவிடும். பல குற்றவாளிகள் தங்கள் குற்றச் செயல்களுக்குக் காரணமாக நல்ல பல நோக்கங்களைக் காட்ட ஆரம்பித்துவிடுவார்கள். தாம் கொள்ளை அடித்தது கோவில் கட்டுவதற்கு என்பார் ஒருவர்; பிறர் பணத்தைக் கையாடல் செய்தது பிழைப்பு இல்லாதவர்களுக்கு உதவுவதற்கு என்பார் மற்றொருவர்! செய்த குற்றங்களுக்கு இவ்வாறு சமாதானம் கூறுவதற்குச் சட்டம் இடமளித்தால், குற்றவாளிகள் எவரையுமே தண்டித்தல் இயலாது போய்விடும்.

**மனத்தூய்மை, செய்வினைத் தூய்மை**

ஒருவர் பையிலுள்ள பணத்தைத் திருடிப் பிடிபட்ட ஒருவன், 'என் தாயார் பசித்திருக்கிறாள், அவளுக்கு உணவு வாங்கப் பணம் இல்லாததால் திருடினேன்' என்று கூறினால், அதைச் சட்டம் ஏற்றுத் திருடிய செயலை மன்னிப்பது இல்லை; தாயின் பசியைப் போக்குவது ஒருவனுடைய தலையாய கடன் என்பதில் ஐயம் இல்லை. ஈன்றாள் பசி போக்கவேண்டும் என்ற நோக்கம் உயர்ந்ததுதான். எனினும், அந்த உயர்ந்த நோக்கத்திற்காகப் பழிச்செயலை ஒருவன் செய்தல் தகாது என்றே அறநூலும் கூறுகிறது.

> ஈன்றாள் பசிகாண்பா னாயினும் செய்யற்க
> சான்றோர் பழிக்கும் வினை. (குறள், 656)

இதையே சட்டமும் கூறுகின்றது.

நோக்கம் நல்லதாக இருக்கலாம் ; அந் நோக்கங் குறித்து எழும் செயலும் நல்லதாக இருக்க வேண்டும். நோக்கம் நல்லதாக இருந்தால் மனம் தூய்மையாக இருக்கிறது என்கிறோம். ஆனால், உள்ளத் தூய்மை மட்டும் போதாது ; செய்யும் வினையும் தூய்மை யானதாக இருத்தல் வேண்டும். மனத் தூய்மை, செய்வினைத் தூய்மை இரண்டும் அவசியமாகும். இனந் தூய்மையால்—நல்ல இணக்கத்தால்—மனந்தூய்மை, செய்வினைத் தூய்மை இரண்டும் வரும் என்கின்றார் வள்ளுவர் :

> மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்
> இனந்தூய்மை தூவா வரும். (குறள், 455)

மனத் தூய்மை வேறு, செய்வினைத் தூய்மை வேறு என்பதை எடுத்துக்காட்டி, இரண்டும் வேண்டும் என்று கூறும் குறள் நெறி சட்ட நெறியாகவும் இருக்கிறது.

செய்வினைத் தூய்மையை வைத்தே ஒரு செயலின் தன்மை தீர்மானிக்கப்படுகின்றது.

இவ்வாறு, நோக்கமும் கருத்தும் வேறுபட்டவை. ஒரு செயலுக்குக் காரணமாக உள்ளது நோக்கம்; அச் செயலின் தன்மையைக் காட்டுவது கருத்து. நோக்கத்தின் அடிப்படையில் ஒரு செயலின் தன்மை தீர்மானிக்கப்படுவது இல்லை ; கருத்தின் அடிப்படையிலேயே செயலின் குற்றத் தன்மை நிச்சயிக்கப் படுகிறது.

# 9. கடும் பொறுப்பு
## (Strict Liability)

'கடும் பொறுப்பு' என்ருல் என்ன?—'குற்ற மனம் இன்றிக் குற்றம் இல்லை' என்ற பொது விதியை அமல் செய்வதில் உள்ள சிக்கல்கள்—எல்லா வகைக் குற்றங்களுக்கும் இயற்றப்பட்ட சட்டத்தில் இலக்கணம் உண்டு—'குற்ற மனம்' தேவையில்லாத குற்றங்கள்—சட்ட வாசகத்தின் அடிப்படையிலேயே 'குற்ற மனம்' அவசியமா இல்லையா என்பது தீர்மானிக்கப்படுகிறது.

'குற்ற மனம் இன்றிக் குற்றம் இல்லை' என்ற விதியைக் கண்டோம். ஒருவரைக் குற்றவாளி என்று தீர்மானித்துத் தண்டனையளிப்பதற்குமுன் அவர் அக் குற்றத்தை வேண்டுமென்றே, தீய கருத்தோடு செய்தாரா என்பதைச் சட்டம் கவனிக்கின்றது. தீய கருத்துடன் செய்யப்பட்ட செயல்களுக்கே ஒருவர் பொறுப்பாகின்ருர். இது பொது விதி. ஆனல், இந்தப் பொது விதியை எல்லா வகைக் குற்றங்களுக்கும் பொருந்துமாறு செய்வதில் சிக்கல்கள் எழுகின்றன.

### கடும் பொறுப்பு என்ருல் என்ன ?

'குற்ற மனம்' தேவையில்லாத பலவகைக் குற்றங்கள் உண்டு. ஒருவர் அக் குற்றங்களை வேண்டுமென்றே தீய கருத்தோடு செய்தாலும் சரி அல்லது தீய கருத்து ஏதும் இன்றிச் செய்தாலும் சரி, அவர் அதற்குப் பொறுப்பாகின்ருர். கருதிச் செய்யாத குற்றங்களுக்கும் ஒருவர் பொறுப்பாவதைக் 'கடும் பொறுப்பு' (strict liability) என்பார்கள்.

'கருதாப் பிழைக்கு' ஒருவரைப் பொறுப்பாக்குவது அறத்திற்கு மாறுபட்டதல்லவா என்று நாம் வினவலாம். குற்ற மனம் இல்லாதவரைக் குற்றவாளியாக்குவது நியாயமாகத் தோன்றவில்லையே என்று நாம் எண்ணுவது இயல்புதான். ஆனல், 'குற்ற மனம் இன்றிக்

குற்றம் இல்லை' என்ற பொது விதியை எல்லாச் சந்தர்ப்பங்களிலும் நடைமுறைப்படுத்துவது சாத்தியமாவது இல்லை.

கலப்படமான உணவுப் பொருள்களை விற்பது குற்றம் என்று சட்டம் இருக்கிறது. அதன்படி பாலிலே நீர் கலந்து விற்றால் அது குற்றமாகும். ஒரு கடைக்காரர் விற்கும் பாலில் நீர் கலந்திருக்கிறது. குற்றம் சாட்டப்பட்ட கடைக்காரர், 'விற்கப்பட்ட பாலில் நான் நீர் கலக்கவில்லை. நான் இன்னொருவரிடம் விலைக்கு வாங்கி அந்தப் பாலை வியாபாரம் செய்கிறேன். எனக்கு விற்றவர் நீரைக் கலந்திருக்கலாம். அது எனக்குத் தெரியாது. எனவே, நான் வேண்டுமென்றே நீர் கலந்த பாலை விற்கவில்லை' என்று வாதாடுகின்றார். இந்த வாதம் உண்மையானது என்று வைப்போம். நீர் கலந்த பாலை விற்றவர் தீய கருத்துடன் விற்கவில்லை. இப்பொழுது அவரைக் குற்றவாளியல்லர் என்று தீர்மானித்தால் அதன் விளைவு என்ன ஆகும்? எல்லாருமே, இதுபோன்ற வாதத்தை மேற்கொள்ளுவார்கள். பொதுமக்களின் உடல்நலனுக்காக இயற்றப்பட்ட சட்டம் கலப்படமான பாலை விற்பதைத் தடைசெய்கிறது. மேலே கூறப்பட்ட வாதத்தைச் சட்டம் ஏற்றுக்கொள்ளுவதென்றால், கலப்படப் பாலை விற்பனை செய்வதைத் தடுப்பதற்குச் சட்டத்தால் இயலாது போய்விடும். நீர் கலந்த பாலை விற்பவர்கள் ஒவ்வொருவருமே தமக்கு அது நீர் கலந்த பால் என்று தெரியாது என்று கூறிக் குற்றத்திலிருந்து தப்பிவிடுவார்கள். எனவே, இதுபோன்ற குற்றங்களுக்கு 'குற்ற மனம்' இன்றியமையாதது என்று சட்டம் விதித்தால், எவர் குற்றம் செய்தார் என்று மெய்ப்பிப்பது இயலாதுபோகும்; சட்டத்தின் நோக்கம் நிறைவேறாதுபோய்விடும்.

ஆதலால், ஒருவர் நீர் கலந்த பாலை விற்றால், அவருக்கு அந்தப் பாலில் நீர் கலந்திருக்கிறது என்று தெரிந்தாலும் தெரியாவிட்டாலும் அவர் குற்றம் செய்தவரேயாகின்றார் என்று சட்டம் கூறுகின்றது. தீய மனம் ஏதுமின்றியும் கலப்பட உணவை விற்பவர்கள் அவ்வாறு விற்ற குற்றத்திற்குப் பொறுப்பாகின்றனர். கலப்பட உணவுப்பொருள்களை விற்பவர்களுக்கு இன்ன தண்டனை என்று அதற்குரிய சட்டம் கூறுகின்றது. ஆனால், இந்தக் குற்றத்திற்கான இலக்கணத்தில் 'தெரிந்தே', 'தீய கருத்தோடு', 'மோசடியாக' என்பன போன்ற சொற்கள் இருப்பதில்லை. ஆதலால், கலப்பட உணவுப் பொருளை விற்ற செயலே குற்றமாகிவிடுகிறது. எனவே, நீதிமன்றம் விசாரித்து அறிவது, குற்றம் சாட்டப்பட்டவர் அப் பொருளை விற்றாரா என்பதைத்தான். அந்தப் பொருள் கலப்படமானது என்பதைத் தெரிந்தே விற்றாரா அல்லது தீய கருத்தோடு விற்றாரா என்பதுபற்றி நீதிமன்றம் கவனிப்பது இல்லை. ஏனெனில், அக் குற்றத்திற்குச் சட்டம் கூறும் இலக்கணத்தில் 'குற்ற மனம்' இடம்பெறவில்லை. குற்ற மனம் ஏது

மின்றி விற்றவரும் இவ்வாறு அக் குற்றத்திற்குப் பொறுப்பாகின்றார். குற்ற மனம் இன்றியே தோன்றும் இப் பொறுப்பைக் 'கடும் பொறுப்பு' (strict liability) என்கிறோம்.

ஒருவர் இன்ன காலத்திற்குள் வரியைச் செலுத்தவேண்டும். இல்லையேல், அதற்கு அபராதம் விதிக்கப்படும் என்று வரிச் சட்டங்கள் (Tax Laws) கூறுகின்றன. ஒருவர் வரி செலுத்தாததற்குக் காரணம், தான் அந்த மாதம் ஊரில் இல்லை என்றும், வரி செலுத்தாதது வேண்டு மென்றே செய்த காரியம் இல்லை என்றும் ஒருவர் வாதாடினால், அதைச் சட்டம் ஏற்றுக்கொள்வதில்லை. எனவே, வரி செலுத்துவதில் தவறியதற்கான பொறுப்பைக் 'கடும் பொறுப்பு' என்பார்கள்.

வியாபாரத்தில் கள்ளச் சந்தையை (Black Market) ஒழிப்ப தற்காக வியாபாரப் பொருள்களின் விலைப்பட்டியலைக் கடைகளில் எல்லோருக்கும் தெரியும்படி தொங்கவிடவேண்டும் என்று சட்ட விதிகள் ஏற்படுவது உண்டு. ஒரு கடைக்காரர்மீது, அவ்வாறு விலைப்பட்டியல் வைக்கப்படவில்லை என்று குற்றம் சாட்டப்பட்டால், தமது வேலையாள் அதைச் செய்யத் தவறிவிட்டார் என்று கூறி அவர் தப்புவது முடியாது. உண்மையில் அது வேலையாள் செய்த தவறாகவே இருக்கலாம். இருந்தாலும், அதற்குக் கடையின் சொந்தக்காரரே பொறுப்பாகின்றார். பொதுவாக ஒருவர் செய்த குற்றத்திற்கு மற் றொருவர் பொறுப்பாவது இல்லை. ஆனால், 'கடும் பொறுப்பு' உள்ள குற்றங்களில், ஒருவர் செயலுக்கு மற்றவர் பொறுப்பாகும் நிலை உண்டு. இது 'பகரப் பொறுப்பு' (vicarious liability) எனப்படும்.

'மானேஜர்' அல்லது 'ஏஜெண்டு' இவர்கள் செய்யும் செயலுக்கு எசமானரைப் பொறுப்பாக்கும் கொள்கையைக்கொண்ட குற்றம் ஒன்றை இந்தியக் குற்றவியல் சட்டத்தின் (Indian Penal Code) 154ஆம் பிரிவு கூறுகின்றது.

ஒரு நிலத்தில் சட்ட விரோதமான கூட்டம் அல்லது கலகம் நடந்தால், அந்த நிலத்தின் சொந்தக்காரர் அல்லது அந்த நிலம் எவர் வசம் இருக்கின்றதோ அவர், அது நடந்ததுபற்றியோ அல்லது நடக்கப்போவதுபற்றியோ தெரிந்த உடனேயே அருகிலுள்ள போலிசு நிலையத்திற்குத் தகவல் கொடுக்கவேண்டும். இவ்வாறு கொடுக்கத் தவறினால், ஆயிரம் ரூபாய் அபராதம் என்று 154ஆம் பிரிவு கூறுகிறது. நிலச் சொந்தக்காரர் அல்லது நிலத்தை உடையவ ரின் மானேஜர், ஏஜெண்டு இவர்களும் அந்தக் கலகம்பற்றித் தெரிந்த தும் அவ்வாறு தகவல் கொடுக்கவேண்டும். இல்லையெனில், அதற்கும் நிலச் சொந்தக்காரர் அல்லது நிலத்தின் உடைமை ஏற்றவர் பொறுப் பாகின்றார். அந்த நிலத்தில் சட்ட விரோதமான கூட்டம் கூடுவதை

யும் கலகம் நடப்பதையும் தங்கள் சக்திக்கேற்றபடி சட்டப்படியான முறைகளைக் கையாண்டு தடுக்க முயலவேண்டும். இவ்வாறு, ஒருவரின் ஏஜென்டு அல்லது மானேஜர் தடுக்கவில்லையெனில், நிலச் சொந்தக்காரருக்கு அபராதம் விதிக்கப்படுகிறது.

சட்ட விரோதக் கூட்டம், கலகம் இவை நடப்பதை எவ்வாற்றானும் தடுக்கவேண்டும் என்பது சட்டத்தின் நோக்கம். எனவே, அது ஒரு நிலத்தில் நடப்பதைத் தடுப்பதற்கு நிலச் சொந்தக் காரரைச் சட்டம் பொறுப்பாக்குகிறது. நிலச் சொந்தக்காரரின் மானேஜர் அல்லது ஏஜென்டு அவ்வாறு செய்யத் தவறினாலும், அதற்கான பொறுப்பு நிலச் சொந்தக்காரரைச் சேருகின்றது.

தனது நிலத்தில் நடந்த கலகம்பற்றி ஒருவருக்குத் தெரியாமல் இருக்கலாம். இருந்தும், தன் மானேஜர் அல்லது ஏஜென்டு இவர்கள் செய்த செயலுக்கு அவர் பொறுப்பாகின்றார். 'குற்ற மனம்' ஏதுமின்றி நிலச்சொந்தக்காரர்மீது ஏற்படும் இந்தக் குற்றப்பொறுப்பைக் 'கடும் பொறுப்பு' என்றும், பிறர் செயலுக்கு அவர் பொறுப்பாவதைப் 'பகரப் பொறுப்பு' என்றும் கூறுவார்கள். கடும் பொறுப்புக் கொள்கையையும், பகரப் பொறுப்புக் கொள்கையையும் இந்தியக் குற்றவியல் சட்டத்தில் மேலே கூறப்பட்ட 154ஆம் பிரிவில் காணுகிறோம்.

இம்மாதிரி, 'குற்ற மனம்' தேவையில்லாத குற்றங்களைக் கூறும் சட்டங்கள் பல இருக்கின்றன. சமூகத்தின் பொதுநலனைக் கருத்திற் கொண்டு அச் சட்டங்கள் இயற்றப்பட்டிருக்கின்றன. கருதாப் பிழைக்கு ஒருவர்மீது கடும் பொறுப்பைச் சுமத்துவது நியாயம் இல்லை என்று நாம் கருதினாலும், சமூகத்தின் பொதுநலனுக்காக அத்தகைய 'கடும் பொறுப்புள்ள' குற்றங்கள் தடுக்கப்படவேண்டியது அவசியமாகின்றது. இவ்வாறு, குற்ற மனம் இன்றிக் குற்றம் இல்லை என்ற விதியை, பொது நலனுக்காகச் சில சூழ்நிலைகளில் சட்டம் அமல் நடத்துவதில்லை.

### இந்தியாவில் எல்லாவகைக் குற்றங்களுக்கும் இலக்கணங்கள் உண்டு

இங்கிலாந்து நாட்டில் எல்லா வகைக் குற்றங்களையும் வகைப் படுத்தித் தொகுத்துக் கூறும் பொதுவான குற்றவியல் சட்டம் இயற்றப் படவில்லை. எனவே, நாட்டு நடைமுறையில் உள்ள இயற்றப்படாத பொதுச் சட்டத்தின்படி (Common Law) பல குற்றங்கள் இங்கிலாந்தில் உண்டு. அவைகளுக்கான இலக்கணம் கூறும் இயற்றப்பட்ட சட்டங்கள் இல்லையாதலால், அந்தந்தக் குற்றங்களுக்கான பொறுப்பை ஒருவர்மீது ஏற்றிச் சொல்லுவதற்குமுன் அவர் அந்தக் குற்றத்தைக் 'குற்ற மனத்துடன்' செய்தாரா என்பதை நீதிமன்றம் ஆய்கின்றது.

ஆனால், இந்தியாவில் உள்ள நிலை வேறு. எல்லாவகைக் குற்றங்களுக்கும் இலக்கணம் கூறும் இயற்றப்பட்ட சட்டங்கள் நம் நாட்டில் இருக்கின்றன. இயற்றப்பட்ட சட்டங்களில் இலக்கணம் கூறப்படாத குற்றங்கள் நம் நாட்டில் இல்லை. எந்தச் செயலும் ஒரு சட்டத்தில் குற்றமாகக் கூறப்பட்டிருந்தால்தான் அதைக் குற்றம் என நீதிமன்றம் கொள்ளுகிறது. இல்லையேல் அச் செயல் குற்றமாவதில்லை.

பொதுவான குற்றங்களைத் தொகுத்துக் கூறும் இந்தியக் குற்றவியல் சட்டத்தில், பல்வேறு குற்றங்களின் இலக்கணத்தைக் கூறும் பிரிவுகள் அந்தந்தக் குற்றங்களுக்குரிய குற்ற மனத்தையும் குறிக்கின்றன. கருதியே (intentionally), வேண்டுமென்றே (wantonly), மோசடியாக (fraudulently)—இவைபோன்ற சொற்கள் சட்டப் பிரிவுகளில் கையாளப்பட்டுக் குற்றங்களுக்குரிய குற்ற மனத்தைக் குறிப்பிடுகின்றன. எனவே, குற்றவியல் சட்டத்தில் கூறப்படும் குற்றங்களுக்கு எந்தவிதமான குற்ற மனம் வேண்டும் என்று காண்பதற்கு அச் சட்டத்தில் உள்ள வாசகத்தையே நாம் ஆராய்கின்றோம். குற்றவியல் சட்டத்தைத் தவிர இன்னும் பல்வேறு சட்டங்கள் பல் வகைக் குற்றங்கள்பற்றிக் கூறுகின்றன. பொதுச் சுகாதாரம், வாணிபம், வரிவிதிப்பு முதலியவைபற்றிய சட்டங்கள் பலவற்றிலும் குற்றங்கள் பல கூறப்பட்டிருக்கின்றன். இவ்வாறு, நம் நாட்டில் பல்வகைக் குற்றங்களனைத்திற்கும் உள்ள இலக்கணங்கள், இயற்றப்பட்ட சட்டங்களில் கூறப்பட்டிருக்கின்றன.

எனவே, ஒரு குற்றத்திற்குக் 'குற்ற மனம்' வேண்டுமா என்பதைக் காண்பதற்கு நாம் அக் குற்றத்திற்கு இலக்கணம் கூறும் சட்டத்தையே பார்க்கவேண்டும். சட்டத்தில் அக் குற்றத்திற்குக் 'குற்ற மனம்' வேண்டும் என்று கூறப்பட்டிருந்தால், குற்றம் சாட்டப்பட்டவர் சட்டத்தில் குறிக்கப்பட்ட குற்ற மனத்துடன் குற்றச் செயலைச் செய்தாரா என்று நீதிமன்றம் ஆராய்கின்றது. அவ்வாறு சட்டத்தில் கூறப்படவில்லை எனில், குற்றச் செயலை ஒருவர் செய்தாரா என்பதைமட்டுமே நீதிமன்றம் பார்க்கிறது. அச் செயலைச் செய்தவரின் குற்ற மனத்தைப்பற்றிக் கவனிப்பதில்லை. குற்ற மனம் தேவையில்லாத குற்றங்களுக்கான பொறுப்பைக் 'கடும் பொறுப்பு' என நீதிமன்றம் கொள்ளுகிறது.

'குற்ற மனம் இன்றிக் குற்றம் இல்லை' என்பது பொது விதியாக இருந்தாலும், நம் நாட்டில் குற்றங்கள் அனைத்திற்கும் இலக்கணம் கூறும் இயற்றப்பட்ட சட்டங்கள் இருப்பதால், அந்தந்தச் சட்டங்களிலுள்ள வாசகங்களின் அடிப்படையிலேயே, விசாரணையில் இருக்கும் குற்றத்திற்குக் 'குற்ற மனம்' அவசியமா, இல்லையா என்பதை நீதிமன்றத்தினர் தீர்மானிக்கின்றனர்.

# 10. குற்ற முயற்சி

## (Criminal Attempt)

'குற்ற முயற்சியும்' தண்டனைக்குரிய தனிக் குற்றமாகிறது—குற்ற மனமே குற்ற முயற்சியில் முக்கிய இடம் பெறுகிறது—ஒரு செயலைக் 'குற்ற முயற்சி' என்று எப்படித் தீர்மானிப்பது?—'குற்ற மனத்தைப் புலப்படுத்தும் செய்கை' என்பது எது?—முன்னேற்பாடும் முயற்சியும்—குற்ற விளைவிற்கு வேண்டிய கடைசிச் செய்கை, குற்ற மனம் திருந்தும் வாய்ப்பு இல்லாத செய்கை, இவை குற்ற முயற்சிகள்—கருதிய குற்ற விளைவு கைகூடுவதற்கென உள்ளதாய், குற்றக் கருத்தையும் புலப் படுத்துவதாய் உள்ள செய்கையே 'குற்ற முயற்சி'யாகிறது—கருதிய குற்ற விளைவு கைகூட முடியாத நிலையிலும் குற்ற முயற்சி செய்யப் படலாம்—தற்கொலை முயற்சி—தண்டனைக்குரிய முன்னேற்பாட்டுச் செயல்கள்.

### குற்ற முயற்சியும் தண்டனைக்குரிய தனிக் குற்றமாகும்

சிந்திப்பதையெல்லாம் செயலாக்கிவிட முடிவதில்லை ; கருதுவ தெல்லாம் கைகூடுவதில்லை. எனவே, குற்றங்கள் புரிய முனைபவர் களும் தங்கள் முயற்சியில் தோல்வியுறுவது உண்டு. குற்ற முயற்சி யில் தோல்வியடைந்தவர்களைச் சட்டம் தண்டிக்காமல் இருந்தால், அவர்கள் மீண்டும்மீண்டும் அம் முயற்சிகளில் இறங்குவதற்கு ஏது வாகும். குற்ற முயற்சிகளைப்பற்றிச் சட்டம் கவனிக்காவிடில், அம் முயற்சிகளுக்கு ஊக்கமளிப்பதாகிவிடும். எனவே, குற்ற முயற்சியை ஒரு தனிக் குற்றமாகச் சட்டம் கொள்ளுகிறது. திருடுவது குற்றம் என்றால், திருட முயலுவதும் குற்றம்; கொலை செய்வது கொடுங்குற்றம் எனில், கொலை செய்ய முயலுவதும் கொடுங்குற்றமாகும்; பிறர் உட லுக்குக் காயம் விளைவிப்பது குற்றம் ; காயம் விளைவிக்க முயலுவதும் குற்றம். இவ்வாறு, ஒரு குற்றத்தைச் செய்ய முயலுவதும் தண்டிக்கத் தக்க தனிக் குற்றம் ஆகிறது.

ஒரு குற்றம் எவ்வாறு தண்டனைக்குரியதோ அவ்வாறே குற்ற முயற்சியையும் தண்டனைக்குரியதாகச் சட்டம் கொள்ளுகிறது.

'குற்ற மனம்', 'குற்றச் செயல்' இரண்டும் சேர்ந்தே 'குற்றம்' ஆகிறது என்றும், 'செயல்' என்பது செய்வினை, சூழ்நிலை, விளைவு மூன்றும் கொண்டது என்றும் முன்னர்க் கண்டோம். சில வேளை களில் விரும்பிய விளைவு நேராமற்போகலாம். ஒரு செய்கையால் குற்ற விளைவு நேர்ந்துவிடில், குற்றச் செயல் முடிவடைந்துவிடுகிறது. முடிவடைந்த குற்றச் செயலைப் பொதுவாகக் 'குற்றம்' என்கிறோம். குற்ற விளைவு நேராமல், முடிவடையாத குற்றச் செயலைக் 'குற்ற முயற்சி' என்று கூறுகிறோம்.

**குற்ற மனமே குற்ற முயற்சியில் முக்கிய இடம் பெறுகின்றது**

குற்ற முயற்சியில், குற்றத்திற்கு அடிப்படையான குற்ற மனம் இருக்கிறது. அந்தக் குற்ற மனம் ஒரு செய்வினையாகவும் வெளிப்பட்டு விட்டது. ஆனால், அந்த வினையின் பயனாகக் குற்ற விளைவு நேர வில்லை. குற்ற விளைவு நேரவில்லை எனினும், செய்வினையிலிருந்து குற்ற மனம் வெளிப்படுவதால், அதைச் சட்டம் தண்டனைக்குரிய குற்றம் எனக் கொள்ளுகிறது. குற்ற முயற்சியைத் தண்டிப்பதன் நோக்கம், அந்த முயற்சிக்குக் காரணமான குற்ற மனம் திருந்த வேண்டும் என்பதுதான். எனவே, குற்ற முயற்சியில் குற்ற மனமே முக்கிய இடம் பெறுகிறது.

ஒருவருடைய மார்பில் மற்றொருவர் நீண்ட கத்தியால் குத்தி விடுகிறார். காயமுற்றவர் வைத்திய சிகிச்சையின் பயனாகப் பிழைத் துக்கொள்ளுகிறார். இப்பொழுது கத்தியால் குத்தியவர் செய்த குற்றம் என்ன? 'கொலை முயற்சி'க் குற்றம். குத்தப்பட்டவர் இறந்துவிட் டால் குத்தியவர் கொலைக்குற்றம் செய்தவர் ஆகிறார். அவருக்கு மரணம் விளையவில்லையாதலால், குத்தியவர் கொலை செய்ய முயன்ற குற்றத்திற்கு ஆளாகின்றார். ஒருவருடைய நெஞ்சில் நீண்ட கத்தி யால் குத்தினால் இயல்பாக விளைவது மரணமேயாகும். ஆதலால், குத்தியவரின் கருத்து மரணத்தை விளைவிப்பதுதான் என்பது தெளி வாகிறது. ஆனால், சிகிச்சையின் பயனாக மரணம் விளையவில்லை. எனவே, கத்தியால் மார்பில் குத்தியது 'கொலை முயற்சி'க் குற்றம் ஆகிறது.

ஒருவர் கத்தியைக் கையில் எடுத்து ஓங்கிக்கொண்டு மற்றொருவ ருடைய நெஞ்சில் குத்த வருகின்றார். கடைசி வேளையில் அவரை அருகில் இருந்தவர்கள் தடுத்துவிட்டனர் என்று வைப்போம். எவரைக் குத்தவேண்டுமென்று எண்ணினாரோ அவர்மீது சிறு காயம்

கூட ஏற்படவில்லை. இப்பொழுது குத்த வந்தவர் என்ன குற்றத்திற்கு ஆளாகின்றார்? கொலை முயற்சிக் குற்றத்திற்குத்தான்.

முதல் உதாரணத்தில் தாக்கப்பட்டவர் குத்துப்பட்டும் பிழைத்துக்கொண்டார்; இரண்டாவதில் குத்துப்படாமலே தப்பித்துக் கொண்டார். குற்றவாளியைப் பொறுத்தவரை, குத்திய செய்கையும் குத்தவந்த செய்கையும் அவருடைய கருத்தை நன்கு வெளிப்படுத்துகின்றன. அடுத்தவரைக் கொல்லவேண்டும் என்ற கருத்துடன்தான் குற்றவாளி நடந்தார் என்பதை அவர் குத்திய செய்கையிலிருந்தும் அறிகின்றோம்; குத்துவதற்குக் கத்தியை ஓங்கிக்கொண்டு வந்த செய்கையிலிருந்தும் அறிகின்றோம். இரண்டாவது உதாரணத்தில், குற்றவாளி எவரைக் கொல்லவேண்டும் என்று கருதினாரோ அவர்மீது கத்தி படவில்லை என்பதும், அவருக்கு எந்தவிதமான உடற்காயமும் ஏற்படவில்லை என்பதும் உண்மைதான். ஆயினும், குற்றவாளி கத்தியுடன் கையை ஓங்கிக்கொண்டு குத்துவதற்கு வந்த செய்கை குற்றவாளியின் கருத்தை நன்கு புலப்படுத்துவதால், அதையும் 'கொலை முயற்சி' என்றே கொள்ளுகிறோம்.

குற்ற முயற்சியில் நாம் கவனிப்பது குற்றவாளியின் கருத்தைத்தான். எந்த விளைவைக் கருத்திற்கொண்டு ஒரு செய்கை செய்யப்படுகிறது என்று பார்க்கிறோம். நெஞ்சில் குத்தியதும் மரணத்தை விளைக்கவேண்டும் என்ற கருத்துடன் செய்யப்பட்டது. கத்தியை ஓங்கிக்கொண்டு வந்ததும் மரணத்தை விளைக்கவேண்டும் என்ற கருத்துடன் செய்யப்பட்டது. எனவே, இந்த இரு வகைச் செய்கைகளுமே 'கொலை முயற்சிக் குற்றங்கள்' ஆகின்றன.

எனவே, குற்ற முயற்சியின் அடிப்படை, குற்றக் கருத்தைப் பொறுத்ததேயாகும்; அதாவது, குற்ற முயற்சிக்கு ஆதாரமாக இருப்பது குற்ற மனமேயாகும்; குற்ற விளைவன்று.

(In the offence of attempt the gravamen is measured by the kind of crime intended, and this means that the essence of attempt lies in the intention rather than in the acts done in furtherence thereof. In other words, the criminality is constituted more by the mens rea than by the actus reus—Kenny.)

### ஒரு செயலைக் குற்ற முயற்சி என்று தீர்மானிப்பது எப்படி ?

குற்ற மனத்தைக் காண்பது முடியாது. தீய கருத்து கருத்தாகவே இருந்தால், அதுபற்றிச் சட்டம் ஏதும் செய்வதற்கில்லை. எனவே, அக் கருத்து ஏதாவது ஒரு செய்கையாக வெளிப்பட வேண்டும். அச் செய்கையிலிருந்து அச் செய்கைக்குக் காரணமான

குற்ற மனம் புலப்படவேண்டும். இவ்வாறு குற்ற மனத்தைப் புலப் படுத்தும் செய்கையைக் 'குற்ற முயற்சி' என்றுகூறுகிறோம்.

**'குற்ற மனத்தைப் புலப்படுத்தும் செய்கை' என்பது எது?**

ஒரு வேலையாள், தன் முதலாளியை நஞ்சிட்டுக் கொல்ல வேண்டும் என்று கருதுகிறான். அதற்காகக் கடைக்குப் போய் நஞ்சை வாங்கிவருகிறான். வரும் வழியில் அவனைப் போலீசார் பிடித்துக் கொள்ளுகின்றனர் என்று வைப்போம். இப்பொழுது அவனைக் கொலை செய்ய முயன்ற குற்றம் புரிந்தவன் என்று கூறுவது சரியா? இல்லை. அவன் நஞ்சை வாங்கியது மனிதர்களைக் கொல்ல வும் இருக்கலாம், அல்லது வீட்டிலுள்ள எலிகளைக் கொல்லவும் இருக்கலாம். எனவே, அவன் விஷத்தை வாங்கிவைத்திருப்பதை மட்டும் வைத்து, அவன் கொலை செய்யவேண்டுமென்ற கருத்துடன் தான் விஷத்தை வாங்கியிருக்கிறான் என்பதை நாம் துணிந்து கூற முடியாது. விஷத்தை வாங்கிவைத்திருக்கும் செய்கையிலிருந்து அவன் 'குற்ற மனம்' புலப்படுவது இல்லை.

பிறகு, முதலாளியின் வீட்டிற்கு வந்து அவர் குடிக்க இருக்கும் பாலில் விஷத்தைக் கலக்கிப் பாலைத் தன்னிடமே வைத்திருக்கிறான். இந் நிலையிலும் அவனது 'குற்ற மனம்' தெளிவாகத் தெரிவதில்லை. ஒருவேளை, அவன் மனம் மாறி விஷங் கலந்த பாலைத் தூரக் கொட்டி விடலாம். எனவே, பாலில் விஷத்தைக் கலந்து வைத்திருக்கும் செயலும் அவனது குற்ற மனத்தைப் புலப்படுத்துவதில்லை.

இனி, அந்தப் பாலை முதலாளியின்முன் இருக்கும் மேசைமீது வைத்துவிடுகிறான் என்று கொள்வோம். இப்பொழுது, அவனது குற்ற மனம் தெளிவாகிவிட்டது. முதலாளியை நஞ்சிட்டுக் கொல்லுவ தற்கு இனி அவன் வேறு எந்தச் செய்கையும் செய்யவேண்டியது இல்லை. முதலாளி, அந்தப் பாலை எடுத்துக் குடிக்கவேண்டியதுதான் இனி நடக்கவேண்டியது. இந் நிலையில்தான், வேலையாள் கொலை முயற்சிக் குற்றம் செய்தான் என்று கூறுகிறோம். நஞ்சு கலந்த பாலை முதலாளியின்முன் வைத்தவுடன் வேலையாளின் நச்சு எண்ணமும் தெளிவாகிவிடுகிறது. முதலாளி பாலைக் குடித்து இறந்துவிட்டால், வேலையாள் கொலைக் குற்றத்திற்கு ஆளாகின்றான்; பாலில் நஞ்சு இருப்பது தெரிந்து முதலாளி பாலைக் குடிக்காமல் இருந்துவிட்டால், வேலையாள் கொலை முயற்சிக் குற்றத்துக்கு ஆளாகின்றான்.

எனவே, நஞ்சு கலந்த பாலை முதலாளிமுன் மேசைமீது வைத்த செய்கைதான் குற்ற முயற்சிச் செய்கையாகிறது. விஷத்தை வாங்கி

யதும், அதை முதலாளி வீட்டிற்குக் கொண்டுவந்ததும், அதைப் பாலில் கலந்ததும் முன்னேற்பாடான (preparation) செயல்கள்தாம்; முயற்சிச் செயல்கள் அல்ல.

**கருதுதல், முன்னேற்பாடு, முயற்சி, முடிவு**

ஒருவர் கருதிய விளைவு கைகூடவேண்டும் எனில், அதில் நான்கு நிலைகள் அடங்கியிருக்கின்றன. ஒன்று, அந்த விளைவைக் கருதுதல் (intention); இரண்டு, அதற்கான முன்னேற்பாடு (preparation); மூன்று, விளைவு கைகூடுவதற்கான முயற்சி (attempt); நான்கு, விளைவு அல்லது முடிவு (Completion). கருத்து, முன்னேற்பாடு, முயற்சி, முடிவு என்ற நான்கு நிலைகளில் முதல் இரண்டு நிலைகளைச் சட்டம் தண்டிப்பது இல்லை. கருத்து கருத்தாகவே இருக்கும் பொழுது எவருக்கும் அது தெரிவதில்லை. எனவே, சட்டம் அதைப் பொருட்படுத்துவது இல்லை. முன்னேற்பாட்டுச் செய்கைகளையும் சட்டம் பொதுவாகத் தண்டிப்பது இல்லை. ஆனால், முயற்சி நிலை அடைந்துவிட்டாலும் சரி, அது முடிவு பெற்றுவிட்டாலும் சரி, அது குற்றம் ஆகிவிடுகிறது.

**முன்னேற்பாடும் முயற்சியும் (Preparation and Attempt)**

முடிவுபெற்ற குற்றங்கள் தெளிவாகத் தெரிகின்றன. அக் குற்றங்களைத் தீர்மானிப்பதில் சிரமம் ஏதுமில்லை. கருதிய விளைவு கைகூட வேண்டும் என்பதற்காகப் பல காரியங்கள் செய்யப்படுகின்றன. அவை முன்னேற்பாடான காரியங்களாகவும் இருக்கலாம்; குற்ற விளைவை ஏற்படுத்தத்தக்க முயற்சிகளாகவும் இருக்கலாம். இவை களில் எது முன்னேற்பாட்டுச் செய்கை, எது முயற்சிச் செய்கை என்று தீர்மானிப்பதில் சிக்கல்கள் எழுகின்றன.

ஒரு செயலைச் செய்து முடிப்பதற்குமுன் பல காரியங்களைச் செய்யவேண்டியது அவசியமாகிறது. அச் செயலுக்கு அவசியமான கருவிகளையும் இதர பொருள்களையும் சேர்ப்பது, அதற்கான ஆயத்தங்களைச் செய்வது போன்ற காரியங்களைச் செய்த பின்னர்தான் குறித்த செயலைச் செய்யமுடிகிறது. ஒருவன் ஒரு வீட்டில் கன்னமிட்டு நுழைந்து திருடத் திட்டமிட்டிருக்கிறான் என வைப்போம். கன்னமிட்டு நுழைவது குற்றமான செயலாகும். அச் செயலைச் செய்வதற்கு முன்னேற்பாடாக அவன் சுவரில் கன்னம் வைப்பதற்கு அவசியமான கருவிகளைச் சேகரிக்கிறான். வீட்டிற்குள் இருக்கும் பெட்டிகளைத் திறப்பதற்குப் பலவிதத் திறவுகோல்களைச் சேகரிக்கிறான். இருட்டில் பிறர் எளிதில் காணமுடியாதபடி இருப்பதற்காகக் கறுப்பு உடைகளைத் தயார்செய்துகொள்ளுகிறான். இவையனைத்தும் முன்னேற்பாட்டுச் செயல்கள். இவைகளில் எதை வைத்தும் அவனைத் தண்டிக்கமுடியாது. கடப்பாரை வாங்குவோரெல்லாம்

பிறர் வீட்டில் கன்னம் வைப்பதற்கென்று வாங்குவதில்லை. நம் பெட்டிகளுக்குச் சாவி போட்டுத்தருபவனும் பலவிதத் திறவுகோல் களை வைத்திருக்கிறுன். எனவே, பலவகைத் திறவுகோல்கள் அவனிடம் இருப்பதிலிருந்தும் அவனது நோக்கத்தை நாம் அறிய முடிவதில்லை. அம்மாதிரியே கருப்புத் துணியில் உடைகளை வைத் திருப்பதைக் கொண்டும் அவன் குற்ற மனத்தை நாம் கண்டறிய முடியாது. எனவே, இவையெல்லாம் முன்னேற்பாட்டுச் செயல்கள் தாம். அவன் அந்த வீட்டின் அருகில் உட்கார்ந்து ஆயுதங்களை எடுத்துச் சுவரில் துளையிட ஆரம்பித்துவிட்டான் என்ருல், அது 'குற்ற முயற்சி' நிலையை அடைந்துவிடுகின்றது. அதுவரை அக் குற்றச் செயல் ஆரம்பமாகவில்லை. எனவே, அதற்கு முந்திய காரியங் களையெல்லாம் முன்னேற்பாடுகளாகத்தான் கொள்ளுகிருேம் ; முயற்சியாக அன்று. வீட்டுச் சுவரின் அருகில் உட்கார்ந்து ஆயுதங் களை விரித்தவுடன் அவனது குற்றக் கருத்துத் தெளிவாகத் தெரி கின்றது. அவன் அந் நிலையில் இருப்பது சுவரில் துளையிட்டு வீட்டிற் குள் நுழைவதற்காகத்தான் என்பதைத் தெளிவாக நாம் அறிகிருேம். வேறு எந்த நோக்கத்துடனும் அச் செய்கை செய்யப்படுவது இல்லை. எனவே, அச் செய்கையைக் 'குற்ற முயற்சி' என்கிருேம்.

'முன்னேற்பாடு' என்பது குற்றத்தைச் செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் ஆயத்தங்களையும் செய்வது; 'முயற்சி' என்பது முன்னேற்பாடுகள் எல்லாம் முடிந்தபின், அக் குற்றச் செயலை நேரடி யாகச் செய்யும் வாயிலாக ஒரு செய்கையைச் செய்வதாகும். குற்ற முயற்சி நிலையில் குற்றச் செயலே ஆரம்பமாகிவிட்டது என்று கூறலாம். குற்ற முயற்சிச் செய்கை அல்லது செய்கைகள் தொடர்ந்து நடந்தால் குற்ற விளைவு நிகழ்ந்துவிடும். இவ்வாறு முன்னேற்பாடும் முயற்சியும் வேறுபட்டு நிற்கின்றன.

இருப்பினும், சில வேளைகளில் எது முன்னேற்பாடு, எது முயற்சி என்று காண்பது எளிதன்று. குற்றச் செயலுக்காகச் செய்யப்படும் செய்கைகளின் தொடரில் எதுவரை முன்னேற்பாடாகக் கொள்ளு வது, எதிலிருந்து முயற்சியாகக் கருதுவது என்பதற்குத் திட்டமான விதிகள் எதுவும் இல்லை. அந்தந்தச் சூழ்நிலைகளுக்குத் தக்கபடியே நாம் அதை நிர்ணயிக்கவேண்டியிருக்கிறது.

**குற்ற விளைவிற்கு வேண்டிய கடைசிச் செய்கை**

குற்றத்தைச் செய்வதற்குக் கடைசியாக எந்தச் செய்கை அவ சியமோ அதையே முயற்சி என்று கொள்ளவேண்டும் என்று கூறுவ துண்டு. விஷமிடும் வேலையாள் உதாரணத்தை எடுத்துக்கொண் டால், அவன் நஞ்சு கலந்த பாலை முதலாளியின் முன் வைத்த

செய்கை, அவன் நஞ்சிட்டுக் கொல்லுவதற்குச் செய்யவேண்டிய கடைசிச் செய்கையாகும். நஞ்சைக் கடையில் வாங்குவதும், தன்வசம் வைத்திருப்பதும், பாலில் கலப்பதும் கொலை செய்வதற்கு வேண்டிய கடைசிச் செயல் அன்று. நஞ்சு கலந்த பாலை மேசையின் மீது வைத்தபிறகு வேலையாள் செய்யவேண்டியது எதுவும் இல்லை. பாலை எடுத்துக் குடிக்கவேண்டிய வேலை முதலாளியுடையது. வேலையாள் செய்யவேண்டிய காரியங்கள் எல்லாவற்றையும் செய்து விட்டான். அவன் செய்யவேண்டிய வேலைகளில் கடைசி வேலை, பாலை முதலாளியின் மேசைமீது வைப்பதாகும். அந்தக் கடைசி வேலையைத்தான் 'முயற்சி' என்கிறோம். இதற்கு முந்திய செய்கைகள் எல்லாம் முன்னேற்பாட்டுச் செய்கைகள்தாம். விஷத்தை வாங்குவது முன்னேற்பாட்டுச் செய்கை. அதை வைத்திருப்பது, முதலாளி வீட்டிற்குக் கொண்டுவருவது எல்லாமே முன்னேற்பாடான செய்கைகள்தாம்.

விரும்பிய விளைவு கைகூடவேண்டும் எனில், எந்தச் செய்கை கடைசியாகச் செய்யப்படவேண்டியது அவசியமோ அச் செய்கை தான் முயற்சியாகும் என்று சில சட்ட அறிஞர்கள் கூறுவதுண்டு.

(It seems that the act of the accused is necessarily proximate if, though it is not the last act that he intended to do, it is the last that is legally necessary for him to do if the result desired by him is afterwards brought about without further conduct on his part. —Prof. Glanville Williams.)

### குற்ற மனம் திருந்தும் வாய்ப்பு இல்லாத செய்கை

குற்ற மனம் மாறுவதற்கு வழி இருக்கும்வரை, ஒருவரது செய்கை களைக் குற்ற முயற்சியாகக் கொள்ளலாகாது என்பது மற்றொரு கொள்கை. தம் எதிரியைத் துப்பாக்கியால் சுட்டுக் கொல்லவேண்டு மென்ற கருத்துடன் ஒருவர் துப்பாக்கியை விலைக்கு வாங்குகிறார்; துப்பாக்கியை எடுத்துக்கொண்டு எதிரி இருக்கும் இடத்திற்குச் செல்லுகிறார்; அங்கு ஓர் இடத்தில் மறைவாகப் பதுங்கி இருக்கிறார்; இந்த மூன்று செயல்களையுமே முன்னேற்பாடுகள் என்றுதான் கொள்ளமுடியும். ஏனெனில், முடிவில் எதிரியைச் சுடாமலேயே அவர் இருந்துவிடலாம். அவர் மனம் மாறுவதற்கு இன்னும் சந்தர்ப் பம் இருக்கிறது. எதிரியை நோக்கிச் சுட்டுவிட்டார்; ஆனால், குறி தவறிவிடுகிறது எனில், சுட்ட செய்கை குற்ற முயற்சி (கொலை முயற்சி) ஆகிறது. துப்பாக்கியை விலைக்கு வாங்கிய பின்னும், எதிரியிடத்திற்குச் சென்ற பின்னும், பதுங்கி இருந்த பின்னுங்கூட, குற்றம் இழைக்கக் கருதிய மனம் திருந்தி, அதைச் செய்யாமல்

அவர் இருப்பதற்கு வாய்ப்பு இருக்கிறது. அந்த வாய்ப்பு இருக்கும் வரை அவர் செய்கைகள் முயற்சி நிலையை அடைவதில்லை. சுட்ட பிறகு அதற்கான வாய்ப்பே இல்லை. எனவே, சுட்டது குற்ற முயற்சி யாகும். இவ்வாறு, குற்ற மனம் திருந்தும் வாய்ப்பு (Doctrine of *locus penitentiae*) இருப்பதை வைத்துக் குற்ற முயற்சியைத் தீர்மானிக்க லாம் என்பது ஒரு கொள்கை.

பொதுவாக, ஒரு செய்கையைக் குற்ற முயற்சி என்று கொள்ள லாமா என்பதற்கு நீதிமன்றங்கள் கையாளும் விதியைக் காண் போம். குற்றம் என்றால் 'குற்ற மனம்' 'குற்றச் செயல்' இரண்டும் வேண்டும் என்று கண்டோம். இது அடிப்படை விதி. குற்றச் செயல் என்பதில் செய்கை, சூழ்நிலை, விளைவு இம் மூன்றும் அடங்கு வன. குற்றம் முடிவுபெற்றதாக இருந்தால், செய்கையின் விளைவு நேர்ந்துவிட்டது. செய்கையின் விளைவு நேராத பொழுதுதான் அது முயற்சி நிலையில் உள்ளது. விளைவு நேர்ந்துவிட்டால், இந்த விளைவைக் கருதிச் செய்யப்பட்ட செய்கை என்று கொண்டு, அதற்கு அச் செய்கையைச் செய்தவரைப் பொறுப்பாக்குகிறோம். முயற்சி நிலையில் விளைவு நேரவில்லையாதலால், விளைவு நேராத செய்கையி லிருந்தும் சூழ்நிலைகளிலிருந்தும், அச் செய்கை எந்த விளைவைக் கருதிச் செய்யப்பட்டது என்பதை நாம் ஊகித்தறியவேண்டும். குற்ற விளைவைக் குறித்து நிற்கும் செயலாக அச் செய்கை இருந்தால்தான் நாம் அவ்வாறு ஊகித்தல் முடிகிறது. ஒரு செய்கையிலிருந்து அச் செய்கை இன்ன விளைவினைக் குறித்துதான் செய்யப்பட்டிருத்தல் வேண்டும் என்பதை நாம் தெளிவாக அறிய முடிந்தால், அந்தச் செய்கையை அந்த விளைவுக்கான முயற்சி என்று நாம் கொள்ளலாம். எனவே, ஒரு செய்கையைச் செய்பவரின் குற்ற மனம், அச் செய்கை யில் நன்கு புலப்படவேண்டும். விளைவை விரும்பிப் பல செய்கைகள் தொடர்ச்சியாகச் செய்யப்படலாம். ஆனால், ஒவ்வொரு செய்கையும், விரும்பிய விளைவை வெளிப்படுத்துவது இல்லை. அந்தச் செய்கை களில் எந்தச் செய்கை தீய கருத்தை, குற்ற மனத்தை வெளிக் காட்டுகிறதோ, அதைக் குற்ற முயற்சி என்று நாம் கொள்ளலாம். மற்றச் செய்கைகள் எல்லாம் முன்னேற்பாட்டுச் செய்கைகள்தாம். எனவே, அவை தண்டனைக்குரியன அல்ல.

துப்பாக்கியை வாங்கிய செய்கையை மட்டும் வைத்து ஒருவர் எதிரியைச் சுடுவதற்குக் கருதுகிறார் என்று நாம் ஊகித்தல் முடியாது. துப்பாக்கியை வாங்கியது வேட்டையாடுவதற்கும் இருக்கலாம், அல்லது தற்காப்பிற்காகவும் இருக்கலாம். எதிரி வீட்டிற்குத் துப்பாக்கியோடு அவர் செல்லுவதை வைத்தும் அவரது குற்ற மனத்தை நாம் காண முடிவதில்லை. துப்பாக்கியோடு ஒருவர் தம்

எதிரியிடம் சென்ருல், எதிரியைச் சுட்டுக் கொல்லுவதற்குத்தான் என்று நாம் உறுதியாகக் கொள்ளமுடியாது. ஆனுல், எதிரியை நோக்கித் துப்பாக்கியால் குறிவைத்தார் எனிலோ, அல்லது சுட்டார் எனிலோ, அச் செய்கை சுட்டவரின் கொலைக்கருத்தை நன்கு புலப்படுத்திவிடுகிறது. எனவே, துப்பாக்கியால் குறிவைத்தது அல்லது சுட்டது இச் செய்கைகளைக் 'கொலை முயற்சி' என்று கொள்ளுகிருேம். எந்தச் செய்கை ஒருவரின் குற்ற மனத்தை வெளிப்படுத்துகிறதோ, அந்தச் செய்கையே 'குற்ற முயற்சி' ஆகின்றது. (A criminal attempt bears criminal intent upon its face—Salmond.)

கொலை முயற்சியின் கருத்து மரணத்தை விளைவிக்க வேண்டும் என்பதுதான். மரணம் என்ற விளைவைக் கருதிச் சுடுதல் என்ற செய்கை செய்யப்படுகிறது. விரும்பிய விளைவு மரணம். அந்த விளைவு நிறைவேறுவதற்குச் சுடுதல் என்ற செய்கை இன்றியமையாதது. ஒருவர் துப்பாக்கியை விலைக்கு வாங்குவதால்மட்டும் எதிரியின் மரணம் விளைவதில்லை. அவர் எதிரியின் வீட்டை நோக்கிச் செல்லுவதாலும் எதிரியின் மரணம் விளைவதில்லை. மரணம் விளையவேண்டுமெனில், எரியை நோக்கிச் சுடவேண்டும். அவ்வாறு சுடும் செயலே, விரும்பிய விளைவான மரணத்தை நிறைவேற்றுவதற்கு உள்ள செயல். கருதிய விளைவு கைகூடுவதற்கு உள்ள செய்கையாக உள்ளது குறிபார்த்துச் சுட்ட செய்கை. அவ்வாறு சுட்ட செய்கை மரணம் விளைவிக்கவேண்டும் என்ற சுட்டவரின் கருத்தையும் வெளிப்படுத்தி நிற்கிறது.

எனவே, கருதிய குற்ற விளைவு கைகூடுவதற்கெனச் செய்யப்படுவது குற்ற முயற்சி; கருதிய குற்ற விளைவு என்ன என்பதைக் காட்டி நிற்பதும் குற்ற முயற்சி. இந்த இரு கூறுகளும் குற்ற முயற்சியில் இருத்தல் வேண்டும்.

(In other words, the accused must have actually done things which are steps intentionally taken in furtherance of some specific aim, and which themselves are enough to suggest clearly what the specific aim was—Kenny.)

குற்ற முயற்சியில், குற்ற மனமே முக்கிய இடம் பெறுகின்றது என்று கண்டோம். குற்ற மனம் இருந்தது என்பதற்கு ஆதாரம் வேண்டுமே? ஒரு செய்கையால் குற்ற விளைவு நேர்ந்துவிட்டால், அந்த விளைவைக் கருதிச் செய்யப்பட்ட அச் செய்கை குற்ற மனத்துடன்தான் செய்யப்பட்டிருக்க வேண்டும் என்று அறிந்து கொள்ளுகிருேம். குற்ற முயற்சியிலோ, குற்ற விளைவு நேரவில்லை.

பின் எவ்வாறு குற்ற மனத்தைக் காண்பது? குற்றக் கருத்து ஒரு செய்கையாக வெளிப்பட வேண்டும். கருதிய விளைவு கைகூடச் செய்வதற்கென உள்ள செய்கையாக அது இருக்க வேண்டும். அதாவது, எந்த விளைவைக் கருதிச் செய்யப்பட்டது என்பதை அறிவிக்கும் வகையில் அச் செய்கை அமையவேண்டும். அப்போது தான் அச் செய்கை என்ன கருத்தோடு செய்யப்பட்டது என்பதை நாம் அறிந்துகொள்ள முடியும். எனவே, கருதிய விளைவு கைகூடுவ தற்கெனச் செய்யப்பட்டது, கருத்தையும் நன்கு புலப்படுத்தி நிற்பது—இவ்வாறுன ஒரு செய்கையை 'முயற்சி' என்று கூறுகிறேம். கருதிய குற்ற விளைவு கைகூடுவதற்கெனச் செய்யப்பட்டதாகவும், குற்றக் கருத்தையும் நன்கு புலப்படுத்தி நிற்பதாகவும் உள்ள செய்கையே 'குற்ற முயற்சி' ஆகின்றது.

(It is true tha the criminality of the attempt lies in the intention, the 'mens rea', but this 'mens rea' must be evidenced by what the accused has actually done towards the attainment of the ultimate objective. Thus, the 'actus reus' of attempt is reached in such act of performance as first gives clear *prima facie* evidence of the 'mens rea'—Kenny.)

**கருதிய குற்ற விளைவு கைகூட முடியாத நிலையிலும் குற்ற முயற்சி செய்யப்படலாம்.**

கருதிய விளைவு கைகூடுவதற்கென உள்ளதாக ஒரு செய்கை இருக்கிறது. ஆனல், அந்த விளைவு கைகூட முடியாத நிலை இருக் கலாம். எனினும், அச் செய்கை குற்றக் கருத்தை வெளிப்படுத்தி நின்ருல், அது குற்ற முயற்சியேயாகும். கருதிய குற்ற விளைவு கைகூட முடியாத நிலை இருந்தாலும், அச் செய்கையின் குற்றத் தன்மை மாறுவதில்லை.

மற்றவருடைய பெட்டியில் நகை இருக்கும், அதைத் திருட வேண்டும் என்று கருதி ஒருவர், அப் பெட்டியைக் கள்ளத் திறவு கோல் போட்டுத் திறக்கின்ருர். திறந்துபார்த்தால் பெட்டியில் நகை இல்லை. இப்பொழுது பெட்டியைத் திறந்த செய்கை குற்றமானதா, இல்லையா? குற்றந்தான். அடுத்தவர் சட்டைப் பையில் பணம் இருந்தால் அதைத் திருட வேண்டும் என்ற கருத்தோடு ஒருவர் அந்தப் பையில் மெதுவாகக் கையை விடுகின்ருர். ஆனல், பையில் பணம் இல்லை. பையில் கையை விட்டவரைப் பிடித்துக் கேட்டால், 'அடுத்தவர் கையில்தான் பணம் இல்லையே, நான் எப்படியும் திருடியிருக்க முடியாதே. ஆதலால், நான் ஒரு குற்றமும் செய்ய வில்லை' என்று அவர் கூறுகிருர். இப்போது அவரைத் தண்டிப் பதா, இல்லையா? அவர் தண்டிக்கத்தக்கவர்தான்.

ஒரு செய்கை குற்றக் கருத்தைப் புலப்படுத்துவதாக, கருதிய குற்ற விளைவு கைகூடுவதற்கெனச் செய்யப்பட்டதாக இருக்கிறதா என்பதையே சட்டம் கவனிக்கிறது. அந்த விளைவு கைகூடும் சூழ்நிலை இருக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை. பிறருடைய பெட்டியைத் திறந்ததும், அடுத்தவர் பைக்குள் கைவிட்டதும் பிறர் பொருளைக் கவருவதற்கெனச் செய்யப்பட்ட செய்கைகள் தாம் என்பது தெளிவு. எனவே, அவை 'திருடுவதற்கான குற்ற முயற்சிகள்' ஆகின்றன. பெட்டியில் நகை இல்லை என்பதாலோ, பையில் பணம் இல்லை என்பதாலோ அச் செய்கைகளின் குற்றத் தன்மை மறைந்துவிடுவதில்லை. ஆதலால், முடியாத செயல்களைக் குறித்தும் முயற்சிகள் இருக்கலாம் என்பதை நாம் நினைவிற் கொள்ள வேண்டும்.

இந்தியக் குற்றவியல் சட்டத்தின் 511ஆவது பிரிவுப்படி, குற்ற முயற்சிகள் எல்லாம் குற்றங்கள் ஆகின்றன. முடிந்த குற்றத்திற்கு எவ்வளவு காலம் சிறைத்தண்டனையோ அதில் பாதிக் காலத் திற்குக் குற்ற முயற்சிக்கும் தண்டனை விதிக்கலாம் என்று அந்தப் பிரிவு கூறுகின்றது. கொலைமுயற்சிபோன்ற கொடுங்குற்றங்களுக்கு உரிய தண்டனைகள் தனித்தனியாக அச் சட்டத்தில் கூறப்பட்டிருக் கின்றன.

## தற்கொலை முயற்சி

முடிவடைந்த செயல் குற்றமாவதில்லை. ஆனால், அதற்கான முயற்சி குற்றமாகிறது. ஒரு செயல் நிறைவேறிவிட்டால், அது குற்ற மன்று; முயற்சியாகமட்டும் இருந்தால் அது குற்றம் என்று கூறினால், அது நமக்கு வியப்பாக இருக்கலாம். அப்படிப்பட்ட குற்றம் ஒன்றே ஒன்று உண்டு. அதுதான் 'தற்கொலை முயற்சி' (Attempt to commit suicide) என்பது. ஒருவர் தற்கொலை செய்துகொண்டபின் அவர் சட்டத்தின் அதிகாரவரம்பிற்கு அப்பால் போய்விடுகிறார்; ஏனெனில், இறந்துவிடுகிறார். ஆனால், தற்கொலை முயற்சியில் வெற்றி பெறாமல் அவர் பிழைத்துக்கொண்டால், அவரைச் சட்டம் குற்றவாளி யாக்கித் தண்டனையளிக்கிறது. தற்கொலை முயற்சிக் குற்றத்தின் தனிச் சிறப்பு, முயற்சிமட்டும் குற்றமாகிறது, முடிந்த செயல் குற்றமாக முடியாது என்பதுதான். 309ஆம் பிரிவில் கூறப்படும் இக் குற்றம்பற்றிப் பின்னால் விரிவாகக் காணலாம்.

## தண்டனைக்குரிய முன்னேற்பாட்டுச் செய்கைகள்

சட்டம் பொதுவாக முன்னேற்பாட்டுச் செயல்களைத் தண்டிப் பது இல்லை எனக் கண்டோம். ஆனால், இந்தியக் குற்றவியல் சட்டப்படி மூன்று குற்றங்கள் முன்னேற்பாட்டு நிலையிலேயே

தோன்றிவிடுகின்றன. ஒன்று கூட்டுக் கொள்ளை, இரண்டாவது அரசாங்கத்திற்கு எதிராகப் போர் தொடுத்தல், மூன்ருவது நேச நாடுகளில் கொள்ளையிடுதல். இந்தக் குற்றங்களைச் செய்தாலும் சரி, இதற்கான ஆயத்தங்களையும் முன்னேற்பாடுகளையும் செய்தாலும் சரி, அதற்குத் தண்டனை உண்டு. இம் மூன்று குற்றங்களைக் கூறும் 122, 126, 399 பிரிவுகளைப் பின்னுல் விரிவாகக் காணுவோம்.

எனவே, குற்ற முயற்சியும் தண்டனைக்குரிய ஒரு தனிக் குற்றமாகிறது என்பதை நாம் நினைவிற் கொள்ளவேண்டும்.

# 11. குற்ற உடந்தை

## (Abetment)

'குற்ற உடந்தை' என்பது என்ன? — தூண்டுதல், சதி செய்தல், உதவியாக இருத்தல் — தூண்டப்பட்ட குற்றத்திற்கே தூண்டியவர் பொறுப்பாகின்றார் — தூண்டியவர் மட்டுமே குற்றத்திற்கு ஆளாக லாம் — தூண்டப்பட்டவர் குற்றத்தைச் செய்யவேண்டும் என்ற அவசியம் இல்லை—குற்ற உடந்தைச் சதி — குற்றச் செயலுக்கு உதவி யாக இருத்தல்—செய்யவேண்டிய கடமையைச் செய்யாதிருப்பதும் உத வியளிப்பதாகிறது — குற்ற உடந்தைக்கு உடந்தையாக இருப்பதும் குற்றமாகும் — குற்ற உடந்தைக்கு உரிய தண்டனை — குற்றங்கள் இழைக்கப்படவில்லை எனினும், உடந்தையாக இருந்தவருக்குத் தண்டனை உண்டு.

பலர் சேர்ந்து ஒரு குற்றத்தை நேரடியாகச் செய்தால் அவர்கள் அக் குற்றத்திற்கு ஆளாகும் வகையைக் 'கூட்டுக் குற்றப் பொறுப்பு' என்ற தலைப்பில் காணவிருக்கிறோம்.

செல்வமும் செல்வாக்கும் படைத்த ஒருவர் ஒரு குற்றம் இழைக்க விரும்பினால், அவரே அதை நேரடியாகச் செய்யவேண்டியதில்லை. தமது வேலையாளை வைத்தோ அல்லது மற்றொருவருக்குப் பணத்தைக் கொடுத்தோ அக் குற்றத்தை இழைப்பதற்கு ஏற்பாடு செய்யலாம். இப்பொழுது, நேரடியாகக் குற்றத்தைச் செய்தவர் தண்டனைக்கு ஆளாகின்றார். ஆனால், அந்தக் குற்றம் செய்யப் படுவதற்குக் காரணமாக இருந்தாரே அவரைச் சட்டம் தண்டிக் காமல் விடுவதா? கூடாது. குற்றத்தைச் செய்யும்படி தூண்டி, அதற்குக் காரணமாக இருந்தவர் தண்டிக்கப்படவில்லையெனில், செல்வாக்கு உள்ளவர்கள் பிறரைக் கருவிகளாகக்கொண்டு குற்றங் கள் புரிந்துவிட்டுத் தாங்கள் தப்பிவிடுவார்கள். எனவே, சட்டம் குற்றம் இழைப்பதைத் தூண்டிவிடுபவர்களையும் தண்டிக்கிறது.

சில கொடுங்குற்றங்களைச் செய்வதற்குத் தனித்த ஒருவர் அஞ்சி நிற்கலாம் அல்லது ஆற்றல் இன்றி இருக்கலாம். ஆனால், பலர்

சேர்ந்து சதித்திட்டமிட்டோ, அல்லது ஒருவருக்கொருவர் உதவியாக இருந்தோ அக் குற்றங்களைச் செய்துவிடுவது எளிதாகிறது. ஆதலால், குற்றங்களைச் செய்வதில் ஒருவருக்கொருவர் துணையாக இருப்பதைச் சட்டம் தடைசெய்வது அவசியமாகிறது. எனவே, குற்றங்கள் இழைப்பதற்குத் தூண்டுபவர்களையும், சதி செய்பவர்களையும், உதவி செய்பவர்களையும் 'குற்றத்திற்கு உடந்தையாக இருப்பவர்கள்' எனக் கொண்டு சட்டம் அவர்களைத் தண்டனைக்குள்ளாக்குகிறது.

குற்றத்திற்கு உடந்தையாக இருப்பது ஒரு தனிக் குற்றமாகிறது.

**'குற்ற உடந்தை' (abetment) என்பது என்ன?**

குற்றத்தைச் செய்யும்படி தூண்டுதல் (instigation), இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நபர்கள் ஒன்றைச் செய்யவேண்டுமென்று சதிசெய்து செயலில் இறங்குதல் (conspiracy), ஒரு குற்றத்தைச் செய்வதற்கு உதவியாக இருத்தல் (aiding)— இந்த மூன்று செயல்களும் 'குற்ற உடந்தை' (abetment) என்பதில் அடங்குவன (*107*ஆவது பிரிவு).

குற்றத்திற்கு உடந்தையாக இருப்பதைச் சட்டம் ஒரு தனிக் குற்றமாகக் கருதுகிறது. குற்றத்தைச் செய்யும்படி தூண்டுதல் தனிக் குற்றமாகும்; சதிசெய்து செயலில் இறங்குதல் தனிக் குற்றம்; குற்றம் இழைப்பதற்கு உதவியாக இருத்தல் ஒரு குற்றம். இந்தச் செயல்களில் எதைச் செய்தாலும், 'குற்ற உடந்தை' என்ற தனிக் குற்றம் பிறக்கிறது.

தூண்டுதல், சதி, உதவியளித்தல் இவைபற்றிக் காண்போம்.

(i) **தூண்டுதல்** (Instigation ; Abetment by instigation)

**ஊக்கமளித்துத் தூண்டுதல்:** ஒருவர் தம் வேலையாளிடம் மூன்றாவது நபர் ஒருவரைப் போய் அடித்துக் காயப்படுத்திவிட்டு வரச் சொல்லுகிறார். வேலையாளும் அவ்வாறே செய்கின்றான். இப்பொழுது நேரில் சென்று அடித்த வேலையாளுக்குத் தண்டனை உண்டு. அதுபோலவே, அவனைத் தூண்டிவிட்ட எஜமானருக்கும் தண்டனை உண்டு. ஏனெனில், குற்றம் செய்வதற்குத் தூண்டிவிடுதல் 'குற்ற உடந்தை' என்னும் குற்றமாகும்.

**உள்ளதை மறைத்துத் தூண்டுதல்:** வேட்டையாடச் சென்ற ஒருவர் காட்டில் ஒரு புதருக்குள் பதுங்கியிருந்துகொண்டு அங்கு

வரும் விலங்குகளுக்காகக் காத்திருக்கின்ருர். இவர் புதருக்குள் இருப்பதைத் தெரிந்த ஒருவர், இன்னெருவரிடம் அந்தப் புதரை நோக்கிச் சுடச் சொல்லுகிருர். புதரை நோக்கிச் சுட்டவருக்குப் புதருக்குள் ஆள் இருப்பது தெரியாது. புதருக்குள் இருந்தவர் இறந்துவிடுகிருர். இப்பொழுது, புதரை நோச்கிச் சுடுமாறு கூறியவர் கொலைக்குற்றத்தைத் தூண்டியவர் ஆகின்ருர். இது உள்ளதை மறைத்துக் கூறிக் குற்றம் செய்வதைத் தூண்டுதல் ஆகும்.

**தூண்டப்பட்ட குற்றத்திற்கே தூண்டியவர் பொறுப்பாகின்ருர்:** ஒருவர் இன்னெருவரை மூன்ருமவர் வீட்டிற்குள் நுழைந்து திருடி வரச் சொல்லுகிருன். திருடுவதற்குச் சென்றவர் வீட்டிற்குள் இருந்த ஒருவரைக் கொலைசெய்துவிட்டார் எனில், இந்தக் கொலைக்குத் திருடத் தூண்டியவர் பொறுப்பல்லர். ஏனெனில், அவர் கொலை செய்யும்படி தூண்டவில்லை.

ஒருவரை விஷமிட்டுக் கொல்லும்படி, ஓர் எஜமானர் தம் வேலையாளைத் தூண்டிவிடுகிருர். வேலையாள் கத்தியால் குத்திக் கொலை செய்துவிடுகிருன். இப்பொழுது அந்தக் கொலைக்கு உடந்தையாக இருந்த குற்றத்திற்கு எஜமானர் ஆளாகின்ருர். 'நான் நஞ்சிட்டுத் தானே கொல்லச் சொன்னேன். குத்திக் கொல்லும்படி கூற வில்லையே' என்று அவர் வாதாட முடியாது. ஏனெனில், அவர் தூண்டிய செயல் கொலை செய்ய வேண்டும் என்பதுதான். அது எந்த வகையில் செய்யப்பட்டாலும் அதற்கான பொறுப்புத் தூண்டியவரைச் சேருகிறது.

இவ்வாறு, ஒரு குற்றத்தை நேரடியாகச் செய்தவர், அக் குற்றத்தைத் தூண்டிவிட்டு அதற்கு உடந்தையாக இருந்தவர்— இருவருமே அக் குற்றத்திற்கு ஆளாகித் தண்டனை பெறுகின்றனர்.

**தூண்டியவர்மட்டும் குற்றத்திற்கு ஆளாகலாம்:** சில வேளைகளில், குற்றத்தை நேரடியாகச் செய்தவருக்குத் தண்டனை இல்லாமலிருக்க, அதைத் தூண்டியவருக்குமட்டும் தண்டனை அளிக்கப்படுவது உண்டு. நேரடியாகக் குற்றத்தைச் செய்தவர் தண்டனை பெருமலிருக்க, அதைச் செய்யும்படி தூண்டியவர்மட்டும் தண்டனை பெறுவது சிறிது வியப்பாக இருக்காலம். இந்தச் சூழ்நிலை எப்பொழுது ஏற்படுகிறது எனக் காண்போம்.

ஒருவர் ஐந்து வயதுள்ள ஒரு குழந்தையிடம் நஞ்சுப் பொடியை ஒரு காகிதத்தில் மடித்துக் கொடுத்து, அதை இன்னெருவர் உண்ணவிருக்கும் உணவில் போட்டுவிடும்படி சொல்லிக் கொடுத்துவிட்டு, தான் போய்விடுகிருர். அதன்படி அக் குழந்தை செய்கின்றது;

அந்த உணவை அருந்தியவர் இறந்துவிடுகின்றார். இப்பொழுது, இறந்தவரின் உணவில் நஞ்சைக் கலந்தது ஐந்து வயதுக் குழந்தை தான். ஆனால், ஏழு வயதிற்குக் குறைந்த குழந்தைகள் 'குற்ற மனம்' இல்லாதவர்கள் என்பது சட்டம். அந்த இளம் பருவத்தில் உள்ள குழந்தைகள் தாம் செய்யும் செயல்களின் தன்மையை அறியாத நிலையில் உள்ளவை. எனவே, அக் குழந்தைகளைச் சட்டம் எந்தவிதக் குற்றத்திற்கும் ஆளாக்குவதில்லை. ஆதலால், உணவில் நஞ்சைக் கலந்த அந்த ஐந்து வயதுக் குழந்தையைக் குற்றவாளி எனச் சட்டம் கொள்ளுவதில்லை. ஆனால், குழந்தையைத் தூண்டி நஞ்சைக் கலக்கச் செய்தவர், 'கொலைக்கு உடந்தையாக' இருந்த குற்றத்திற்கு ஆளாகின்றார். 'நஞ்சைக் கலந்த குழந்தை குற்றவாளி இல்லையே, அதைத் தூண்டிய நான்மட்டும் எப்படிக் குற்றவாளி?' என்று குழந்தையைத் தூண்டியவர் வாதாட முடியாது. இந்தச் சூழ்நிலையில் கொலைக் குற்றத்திற்குக் குழந்தை ஆளாவதில்லை எனினும், 'கொலை உடந்தை'க் (abetment of murder) குற்றத்திற்குத் தூண்டியவர் ஆளாகின்றார்.

பைத்தியம் பிடித்தவர்களுக்கு எது நல்லது, எது கெட்டது என்பதே தெரிவதில்லை; பகுத்து அறியும் மனத்திறமின்றி அவர்கள் இருக்கின்றனர். தான் செய்வது என்ன என்றே தெரியாத நிலையில் உள்ள ஒரு பைத்தியக்காரனை ஒரு வீட்டிற்குத் தீவைக்கும்படி ஒருவர் தூண்டுகிறார் என வைப்போம். பைத்தியம் பிடித்தவரும் அந்த வீட்டைத் தீக்கிரையாக்குகிறார். இப்பொழுது, பைத்தியத்தைச் சட்டம் தண்டிப்பது இல்லை; ஆனால், அவரைத் தூண்டி விட்டவரைத் 'தீவைப்பதற்கு உடந்தையாக' இருந்த குற்றத்திற்குத் தண்டிக்கின்றது.

இவ்வாறு, குற்றத்தை நேரடியாகச் செய்தவர் குற்றத்திற்கு ஆளாகாவிட்டாலும், அக் குற்றத்தைத் தூண்டியவர் 'குற்ற உடந்தை' என்ற குற்றத்திற்கு ஆளாகின்றார் என்பதை நாம் நினைவிற் கொள்ளவேண்டும்.

**தூண்டப்பட்டவர் குற்றத்தைச் செய்ய வேண்டும் என்ற அவசியம் இல்லை :** கோவிந்தன் என்பவரைக் கொலைசெய்யும்படி, நல்ல பெருமாளை நரசிம்மன் தூண்டுகிறார். நல்ல பெருமாள் அதற்கு இணங்கவில்லை. கொலைச்செயலில் ஈடுபட முடியாதென்று நல்ல பெருமாள் மறுத்துவிடுகின்றார். இப்பொழுது, நரசிம்மன் குற்றவாளியா, இல்லையா? குற்றவாளிதான். கொலைபுரியத் தூண்டிய குற்றத்திற்கு, 'கொலை உடந்தை'க் குற்றத்திற்கு நரசிம்மன் ஆளாகின்றார்.

குற்றத்தைத் தூண்டுவதே ஒரு குற்றமான செயல் ஆவதால், தூண்டுதலால் ஏற்பட்ட பயனைப்பற்றிச் சட்டம் ஆராய்வது இல்லை. தூண்டியதால் எந்தப் பயனும் ஏற்படாமல் இருக்கலாம்; இருப்பினும், தூண்டிய செயல் குற்றமானதேயாகும்.

எனவே, தூண்டப்பட்டவர் குற்றத்தைச் செய்தாலும் செய்யா விட்டாலும், தூண்டியவர்மீது 'குற்ற உடந்தை'க் குற்றம் ஏற்படுகிறது.

நல்ல பெருமாள், நரசிம்மனின் தூண்டுதலின்பேரில் கோவிந்தனைக் கொலை செய்யும் கருத்துடன் கத்தியால் குத்திவிடுகின்றார் என வைப்போம். குத்துண்ட கோவிந்தன் இறக்கவில்லை; குணமடைந்து பிழைத்துக்கொள்ளுகிறார். இப்பொழுது, குத்திய நல்ல பெருமாள் மீது 'கொலை முயற்சிக் (attempt to murder) குற்றம்' சாட்டப்படுகிறது. ஆனால், நரசிம்மன் 'கொலை உடைந்தைக் (abetment of murder) குற்றத்'திற்கே ஆளாகின்றார்; 'கொலை முயற்சி உடந்தை'க் (abetment of attempt to murder) குற்றத்திற்கன்று.

நரசிம்மன் தூண்டியது எந்தச் செயலை? கொலைச் செயலைத் தான். எனவே, நல்ல பெருமாளின் செயலால் மரணம் விளைந்தாலும் விளையாவிட்டாலும், தூண்டிய நரசிம்மன் 'கொலை உடந்தை'க் குற்றத்திற்கே ஆளாகின்றார்.

நரசிம்மனால் தூண்டப்பட்ட நல்ல பெருமாள் துப்பாக்கியால் கோவிந்தனைச் சுடுகின்றார் என்றும், ஆனால், குறி தவறியதால் கோவிந்தன் தப்பித்துக்கொள்கிறார் என்றும் வைப்போம். இப்பொழுதும், நல்ல பெருமாள் இழைத்தது 'கொலை முயற்சி'க் குற்றமேயாகும். ஆனால், நரசிம்மன்மீது ஏற்படுவது 'கொலை உடந்தை'க் குற்றந்தான்; 'கொலை முயற்சி உடந்தை'க் குற்றம் அன்று.

எனவே, தூண்டப்பட்டவர் குற்றத்தைச் செய்ய வேண்டும் என்பதோ, தூண்டப்பட்ட செயலால் விரும்பியது விளையவேண்டும் என்பதோ அவசியமன்று. இருந்தும், குற்றமான செயலைத் தூண்டியவர் அவ்வாறு தூண்டிய குற்றத்திற்குப் பொறுப்பாகின்றார். அதுபோன்றே, தூண்டப்பட்டவர் தண்டனை விலக்குள்ள குழந்தையாக, பித்தராக இருந்தாலும், தூண்டியவர்மீது குற்றம் உண்டு.

### (ii) குற்ற உடந்தைச் சதி (Abetment by conspiracy)

இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நபர்கள் அவர்களுக்குள் கூடிப் பேசி ஒரு குற்றத்தைச் செய்வதென்று சதி செய்து, அந்தச் சதியின் விளைவாக ஏதாவது ஒரு செயல் செய்யப்பட்டால், அது

'குற்ற உடந்தை'க் குற்றமாகும். ஒரு குற்றத்தைச் செய்ய வேண்டும் என்று அவர்கள் ஒப்புக்கொண்டவுடனேயே இக் குற்றம் எழுவதில்லை. அந்த உடன்பாட்டின் பயனாக, சதியின் விளைவாக ஏதாவது ஒரு செயலும் செய்யப்பட வேண்டும். புறச்செயல் ஏது மின்றி, உடன்பாட்டு நிலையிலேயே சதி நின்றுவிட்டதெனில், 'குற்ற உடந்தை'க் குற்றம் எழுவதில்லை.

குற்றம் செய்வதென்ற உடன்பாடு, அதன் விளைவாகச் செயல்—இவை இரண்டும் இருந்தால்தான் 'குற்ற உடந்தைச் சதி' (abetment by conspiracy) என்ற குற்றம் தோன்றுகிறது.

சட்டப்படி செய்யவேண்டிய ஒன்றைச் செய்யத் தவறுவதும் குற்றச் செயலேயாகும். குற்றம் இழைப்பதென்ற உடன்பாட்டின் படி ஒருவர் தாம் சட்டப்படி செய்யவேண்டிய ஒன்றைச் செய்யா திருக்கலாம். இப்பொழுதும், 'குற்ற உடந்தைச் சதி' என்ற குற்றம் எழுகின்றது.

சதியில் ஈடுபடும் அனைவரும் ஒருவரையொருவர் நேரில் சந்தித்தோ அல்லது நேரடியாகத் தொடர்பு கொண்டோதான் குற்ற உடன்பாடு ஏற்படவேண்டும் என்ற அவசியம் இல்லை.

இராமனும் கோவிந்தனும், நடராசன் என்பவனை நஞ்சிட்டுக் கொல்லவேண்டும் என்ற சதியில் ஈடுபட்டிருக்கின்றனர். இந்தச் சதிபற்றிக் கோவிந்தன் கோபாலனிடம் கூறி, அவன் சம்மதத்தை யும் பெற்று, கோபாலன்மூலமாக நஞ்சைப் பெறுகிறான். கோபா லனுக்கு இராமனைத் தெரியவேண்டும் என்றோ, அல்லது இராமன் தான் நஞ்சை உணவில் கலந்து நடராசனைக் கொல்லப்போகின் றான் என்றோ தெரியாமல் இருக்கலாம். இந்தச் சதியின் விளைவாக நடராசன் இறந்துவிட்டால், அந்தக் கொலை உடந்தைக் குற்றத் திற்குக் கோபாலனும் பொறுப்பாகின்றான். கோபாலன் கொலைக் குற்றத்தைச் செய்த இராமனைச் சந்தித்து இராமனுடன் குற்றச் சதிக்கு ஒப்புக்கொள்ளவில்லையெனினும், கோபாலன் கொலைச்சதி யில் ஈடுபட்டவனே ஆகின்றான்.

இவ்வாறு, குற்றச் சதியில் ஈடுபட்ட ஒவ்வொருவரும் 'குற்ற உடந்தை'க் குற்றத்திற்கு ஆளாகின்றனர்.

### (iii) குற்றச் செயலுக்கு உதவியாக இருப்பது (Abetment by aiding)

ஒருவர் குற்றம் இழைப்பதற்கான உதவியை மற்றவர் எத் தனையோ வழிகளில் செய்யலாம்.

ஒருவர் மற்றொருவரை அடிப்பதற்கு உதவியாக மூன்றாவது மனிதர் கம்பை எடுத்துக் கொடுக்கலாம். இது குற்றத்திற்கு உதவு

வதாகும். அடிபட இருப்பவர் ஓடமுடியாதபடி அவரைப் பிடித்து நிறுத்தி அடிபடும்படி வைக்கலாம். இதுவும் அடிப்பதற்கு உதவு வதாகும்.

அளிக்கப்படும் உதவி குற்றம் இழைப்பதற்கு அவசியமாவ தாக இருக்கவேண்டும்.

ஒரு தாரம் இருக்க மறுதாரம் ஏற்பது குற்றமாகும். எனவே, இரண்டாவது மணச்சடங்கை நடத்தும் குருக்கள் 'குற்ற உடந் தை'க் குற்றத்திற்கு ஆளாகலாம். ஏனெனில், குற்றமான இரண் டாவது மணம் நடைபெறச் செய்வதற்கு அவர் உதவியளிக்கிறார். ஆனால், அந்த இரண்டாவது மணநிகழ்ச்சிக்கு வந்திருந்தோரனை வரும் குற்ற உடந்தைக்குப் பொறுப்பானவர்கள் என்று கூறமுடி யாது. அவர்கள் வந்தாலும் வராவிட்டாலும் இரண்டாவது மணச் சடங்கு நடக்கலாம். எனவே, மணநிகழ்ச்சிக்கு வந்திருந்தவர்கள் அதற்கு உதவியளித்தவர்கள் ஆவதில்லை.

### செய்யவேண்டிய கடமையைச் செய்யாதிருப்பதும் உதவியளிப்பதாக ஆகிறது

ஒருவர் இன்னொருவரை அடித்துத் துன்புறுத்துகிறார். இதை அருகில் நின்று பார்த்துக்கொண்டே ஒரு போலீசுக்காரர் சும்மா இருக்கிறார் என வைப்போம். இப்பொழுது போலீசுக்காரர் தமது கடமையில் தவறிவிட்டார். அவரது கடமை ஒருவர் மற்றொரு வரைத் துன்புறுத்துவதைத் தடுப்பதாகும். அவ்வாறு தடுக்காமல் அவர் இருந்தது, தம் கடமையில் தவறியதாகிறது. இவ்வாறு கட மையில் தவறுவதால், துன்புறுத்துவோருக்கு அவர் உதவியளிப்ப வராக மாறிவிடுகிறார். எனவே, கடமையில் தவறிய போலீசுக்கா ரையும் அடித்துத் துன்புறுத்திய குற்றத்திற்கு உதவியாக, உடந் தையாக இருந்தவர் என்றே சட்டம் கொள்ளுகிறது. அந்தக் குற்ற உடந்தைக் குற்றத்திற்குப் போலீசுக்காரர் பொறுப்பா கின்றார்.

எனவே, சட்டம் விதித்துள்ள கடமைகளைச் செய்யத் தவறுவ தாலும் குற்றம் இழைக்கப்படுவதற்கு உதவியளிக்கலாம்.

இவ்வாறு, குற்றம் இழைப்பதற்கு உதவியளிப்பவர்களும் 'குற்ற உடந்தை'க் குற்றத்திற்கு ஆளாகின்றனர்.

### குற்ற உடந்தைக்கு உடந்தையாக இருப்பதும் குற்றமேயாகும் (Abetment of an abetment is also an offence)

குற்றம் செய்யுமாறு தூண்டுவது 'குற்ற உடந்தை' என்ற தனிக் குற்றமாகிறது எனக் கண்டோம். குற்ற உடந்தை ஒரு தனிக்

குற்றம் ஆவதால், ஒருவரை மற்றொருவர் குற்ற உடந்தையாக இருக்கும்படி தூண்டுவதும் குற்றமாகிறது. அதாவது, குற்றத்தைத் தூண்டுவதற்குத் தூண்டினால் அதுவும் ஒரு குற்றமாகும்.

நல்லபெருமாளைக் கொலைக்குற்றம் செய்யத் தூண்டுமாறு இராமனிடம் நரசிம்மன் கூறுகிறார் என வைப்போம். முதலாவதாக, நரசிம்மன் இராமனைத் தூண்டுகிறார். என்ன தூண்டுகிறார்? நல்ல பெருமாளைக் கொலைக்குற்றம் செய்யுமாறு இராமன் தூண்ட வேண்டும் என்று. அதன்படி இராமனும் நல்ல பெருமாளைத் தூண்டுகிறார். அதன் பயனாக நல்லபெருமாள் கொலைக் குற்றம் செய்துவிடுகிறார் என்று வைப்போம். இப்பொழுது, நல்லபெருமாள் கொலைக்குற்றத்திற்கு ஆளாகின்றார். நல்ல பெருமாளைத் தூண்டிய இராமன் 'கொலை உடந்தை'க் குற்றத்திற்குப் பொறுப்பாகின்றார். இராமனைத் தூண்டிய நரசிம்மனும் அவ்வாறே 'கொலை உடந்தை'க் குற்றத்திற்கு ஆளாகின்றார்.

எனவே, ஒரு குற்றத்தைத் தூண்டுமாறு தூண்டுவது குற்றமாகும். குற்ற உடந்தைக்கு உடந்தையாக இருப்பது குற்றமாகிறது. (The abetment of an offence being an offence, the abetment of such an abetment is also an offence—Explanation 4 to Sec. 108.)

### குற்ற உடந்தைக்குரிய தண்டனை

தூண்டுதல், சதி செய்தல், உதவியளித்தல்—இவ்வாறு உடந்தையாக இருந்ததன் பயனாகக் குற்றம் இழைக்கப்பட்டால், அந்தக் குற்றத்தை இழைத்தவருக்கு என்ன தண்டனையோ, அதே தண்டனை உடந்தையாக இருந்தவருக்கும் உண்டு.

சில குறிப்பிட்ட குற்றங்களுக்குமட்டும் உடந்தைக்கு வேறு வகையான தண்டனை என்ன என்பதுபற்றிக் குற்றவியல் சட்டத்தில் கூறப்பட்டுள்ளது.

இராமனும் கிருஷ்ணனும் சேர்ந்து கோபாலனை நஞ்சிட்டுக் கொல்லுவதென்று சதி செய்கின்றனர். இராமன் நஞ்சை விலைக்கு வாங்கிவந்து கிருஷ்ணனிடம் கொடுக்கிறார். கிருஷ்ணன் கோபாலன் குடிக்க இருக்கும் பாலில் நஞ்சைக் கலந்து கொடுத்துவிடுகிறார். இதனால் கோபாலனின் மரணம் விளைகின்றது. இப்பொழுது கிருஷ்ணன் நேரடியாக விஷமிட்டுக் கொன்றதால் கொலைக் குற்றத்திற்கு ஆளாகின்றார். இராமன் கொலை உடந்தைக் குற்றத்திற்கு ஆளாகிக் கொலைக்குற்றத்திற்கான தண்டனையையே பெறுகின்றார்.

சில வேளைகளில் குற்ற உடந்தையாள் கருதிய குற்றம் ஒன்றாக இருக்கலாம்; ஆனால், நிகழ்ந்த குற்றம் வேறாக இருக்கலாம். இப்பொழுதும், நிகழ்ந்த குற்றத்திற்கே உடந்தையாள் பொறுப்பாகின்றார்.

கோபாலன் என்பவரைச் சுட்டுக் கொல்லும்படி கிருஷ்ணனை இராமன் தூண்டிவிட்டார் என்று வைப்போம். ஆனால், கிருஷ்ணன் தவறுதலால் கோபாலனுக்குப் பதிலாகக் கோவிந்தன் என்பவரைச் சுட்டுக் கொன்றுவிடுகிறார். இப்பொழுது கோவிந்தனின் கொலைக்கு இராமன் பொறுப்பானவரா, இல்லையா? பொறுப்பானவர் தான். அவர் தூண்டியது கோபாலனைக் கொல்ல வேண்டும் என்றுதான். ஆயினும், அவர் தூண்டியதன் பயனாகவே கோவிந்தனின் மரணமும் விளைந்தது. எனவே, கோவிந்தன் கொலை செய்யப்பட்டதற்கும் இராமன் பொறுப்பாகின்றார்; அதாவது, கொலை உடந்தைக் குற்றத்திற்கு ஆளாகின்றார்.

இவ்வாறு, உடந்தைச் செயலால் நிகழத்தக்க விளைவுகள் அனைத்திற்கும் உடந்தையாக இருப்பவர் பொறுப்பாகின்றார்.

கொடுங்காயம் விளைவிக்கும்படி ஒருவர் மற்றொருவரைத் தூண்டலாம். ஆனால், அந்தக் காயத்தின் பயனாகக் காயமுற்றவர் இறந்துவிட்டார் எனில், அந்த மரணத்திற்கும் தூண்டியவரே பொறுப்பாகின்றார்.

எனவே, உடந்தையாக இருந்து கருதிய செயல் ஒன்றாகவும், உருவாகி விளைந்த செயல் வேறொன்றாகவும் இருக்கலாம். அவ்வாறு விளைந்த செயலுக்கும் உடந்தையாக இருந்தவரே 'குற்ற உடந்தைப்' பொறுப்பேற்கவேண்டும் என்பது சட்டம்.

குற்றத்திற்கு உடந்தையாக இருந்தவர் அந்தக் குற்றம் இழைக்கப்படும்பொழுது இழைப்பவருடன் கூடவே இருந்தால், உடந்தையாக இருந்தவரும் சேர்ந்து நேரடியாகக் குற்றத்தைச் செய்தார் என்று சட்டம் கருதுகிறது.

**குற்றங்கள் இழைக்கப்படவில்லை எனினும், உடந்தையாக இருந்தவருக்குத் தண்டனை உண்டு**

மரண தண்டனை அல்லது ஆயுள் சிறைவாசம் அளிக்கப்படத்தக்க குற்றங்களுக்கு உடந்தையாக இருந்தவர்கள், அக் குற்றங்கள் இழைக்கப்படவில்லை யெனினும், ஏழு ஆண்டுகள்வரை சிறைத் தண்டனைக்கு ஆளாகின்றனர். அத்தகைய குற்றங்களுக்கு உடந்தையாக இருந்ததன் விளைவாக எவருக்காவது உடற்காயம்

ஏற்பட்டால், உடந்தையாக இருந்தவருக்குப் பதினான்கு ஆண்டுகள் வரை சிறைத்தண்டனை விதிக்கப்படலாம்.

சிறைத்தண்டனைக்குரிய இதர குற்றங்களுக்கு உடந்தையாக இருந்தவருக்கு, அக் குற்றங்கள் இழைக்கப்படவில்லையெனினும், அக் குற்றத்திற்கு எவ்வளவு காலம் சிறைத்தண்டனை விதிக்கப்படலாமோ, அதில் நான்கில் ஒரு பங்கு காலத்திற்குச் சிறைத் தண்டனை விதிக்கப்படலாம். குற்றத்தைச் செய்யும்படி தூண்டியவரோ, தூண்டப்பட்டவரோ அரசாங்க ஊழியர் எனில், குற்றங்கள் இழைக்கப்படவில்லை எனினும், அக் குற்றத்திற்கான சிறைத் தண்டனைக் காலத்தில் அரைப்பங்கு காலத் தண்டனை அவருக்கு அளிக்கப்படலாம்.

ஒருவர் ஓர் அரசாங்க ஊழியருக்கு இலஞ்சம் கொடுக்கிறார். ஆனால், அந்த ஊழியர் வாங்க மறுத்துவிடுகிறார். இப்பொழுது இலஞ்சம் கொடுக்க முயன்றவருக்கு, இலஞ்சம் வாங்கினால் எவ்வளவு கால அளவு சிறைத்தண்டனை உண்டோ, அதில் பாதிக்கால அளவிற்குச் சிறைத்தண்டனை விதிக்கப்படலாம். பொதுமக்களையோ அல்லது பத்து நபர்களுக்கு அதிகமான ஒரு குறிப்பிட்ட வகுப்பினரையோ குற்றங்களை இழைக்கும்படி தூண்டுபவருக்கு மூன்று ஆண்டுகள்வரை சிறைத்தண்டனை அளிக்கப்படலாம்.

இம்மாதிரியே குற்றங்கள் இழைக்கப்படுவதற்கு உதவியாக இருப்பதற்கென்று இது சம்பந்தமான தகவல்களை மறைப்பவர்களும், பொய்த் தகவல்களைக் கூறுவோர்களும் தண்டனைக்கு ஆளாகின்றனர்.

இவ்வாறு, குற்றம் புரிவோர்களைச் சட்டம் தண்டிப்பது போலவே, அக் குற்றத்திற்கு உடந்தையாக இருப்பவர்களையும் சட்டம் தண்டிக்கின்றது.

# 12. சதிக்குற்றம்
## (Criminal Conspiracy)

சதிக்குற்றத்தைத் தடுப்பதன் அவசியம் — 'சதிக்குற்றம்' என்றால் என்ன ? — சதிக்குற்றத்தை மெய்ப்பிக்கும் முறை — 'குற்ற உடந்தைச் சதிக்கும்' 'சதிக்குற்றத்திற்கும்' உள்ள வேறுபாடு — 'சதிக்குற்றத் திற்கு'ரிய தண்டனை.

குற்ற இயல் சட்டத்தின் முக்கிய நோக்கம் குற்றங்கள் நடை பெறாது தடுக்கப்பட வேண்டும் என்பதாகும். குற்றத்தை ஒருவர் இழைத்தபின் அவரைத் தண்டிப்பது மீண்டும் அவர் குற்றத்தைச் செய்யாதிருத்தல் வேண்டும் என்ற நோக்கத்தை யும் கொண்டுதான். எனவேதான், குற்ற முயற்சிகளில் ஈடு படுவோரையும் சட்டம் தண்டனைக்காளாக்குகிறது. குற்றங்களை இழைக்க இருப்பவர்களும் குற்றங்களைச் செய்யாதிருப்பதற்கான நடவடிக்கைகளைச் சட்டம் எடுக்கின்றது. அத்தகைய நடவடிக்கை களில் ஒன்றாகும் சதியில் ஈடுபடுபவர்களைச் சட்டம் தண்டிப்பது.

**சதிக்குற்றத்தைத் தடுப்பதன் அவசியம்.**

ஒரு செயல் முதலில் உருவாவது கருத்தில்தான். கருத்தாகவே அது நின்றுவிடில், சட்டம் அதுபற்றி ஏதும் செய்வதற்கில்லை. கருத்தைக் களைவது, தீய கருத்துகளை மனத்திலிருந்து விலக்குவது சட்டத்தால் ஆகாத காரியம். தீய கருத்தை ஐயத்திற்கிடமின்றிப் புலப்படுத்தும் வகையில் ஏதாவது ஒரு செயல் நடந்துவிட்டால், உடனே சட்டம் செயற்பட ஆரம்பித்துவிடுகிறது.

இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நபர்கள் ஒரு தீய காரி யத்தைச் செய்வதென்று உடன்படுகின்றனர் என்று வைப்போம். இந்த உடன்பாட்டிலிருந்து அவர்களது தீய கருத்து நன்கு வெளிப் படுகிறது. எனவே, சட்டம் உடனே நடவடிக்கை எடுக்கிறது. உடன்படுபவர்களின் தீய எண்ணத்தை, குற்ற மனத்தை

அவர்களிடை எழுந்த உடன்பாடு தெளிவாகக் காட்டுவதால், அந்த உடன்பாடு ஏற்பட்ட பின்னரும் சட்டம் வாளா இருப்பதற்கில்லை. எனவே, அந்த உடன்பாட்டில் சம்பந்தப்பட்டவர்களைச் சட்டம் தண்டனைக்குள்ளாக்குகின்றது. இத்தகைய உடன்பாடு 'சதி' (conspiracy) எனப்படும். அந்தச் சதியையே ஒரு குற்றமாகச் சட்டம் கொள்ளுகிறது. இந்தச் சதிக் குற்றத்தில் (criminal conspiracy) சேர்ந்தவர்களைச் சதிகாரர்கள் (conspirators) என்று குறிப்பிடுகின்றோம்.

சாதாரணமாக, ஒருவரால் தனித்துப் பெரிய குற்றங்களைச் செய்ய முடிவதில்லை. எனவே, பெருங் குற்றங்களை இழைக்க விரும்புவோர் தம்மையொத்த பிறரின் உதவியை, ஒத்துழைப்பை நாடுகின்றனர். இவ்வாறு, பலர் கூடித் தங்கள் ஒத்துழைப்பால் தீச்செயல்களைச் செய்வதென்று உடன்படுகின்றனர். இப்படிப் பலர் சேர்ந்து தீய காரியங்களைச் செய்வதற்கென்று இயங்குவது நாட்டிற்கும் சமூகத்திற்கும் பெருங்கேடு பயப்பதாகும். எனவே, அவ்வாறு ஏற்படும் உடன்பாட்டை ஒரு தனிக் குற்றமாகக் கொண்டு, உடன் பாட்டு உறுப்பினர்களைச் சட்டம் தண்டிக்கிறது. இவ்வாறு, சதித்திட்டங்களை முளையிலேயே கிள்ளி எறியவில்லையெனில், தீயோர்கள் சேர்ந்து இயங்கவும், பல பெரிய தீச்செயல்கள் விளையவும் ஏதுவாகும்.

## சதிக்குற்றம் (Criminal conspiracy) என்றால் என்ன?

தண்டனைக்குரிய ஒரு குற்றத்தைச் செய்வதென்று இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நபர்கள் தம்முள் உடன்படும் செயலைச் 'சதிச்செயல்' என்கிறோம். உடன்படும் செயலே 'சதிக்குற்றமா'கிறது. இந்த உடன்பாட்டிற்குப் பிறகு அக் குற்றத்தைச் செய்வதற்கென்று நடவடிக்கைகளில் சதியாளர்கள் இறங்குகின்றனரா என்பதுபற்றிச் சட்டம் கவனிப்பது இல்லை. உடன்பட்டபடி குற்றத்தைச் செய்யாமலே அவர்கள் இருக்கலாம். இருப்பினும், உடன்பட்ட செயலே குற்றம் ஆவதால், உடன்பட்ட ஒவ்வொருவரும் தண்டனைக்கு ஆளாகின்றனர். இது ஒரு குற்றமான செயலைச் (offence) செய்ய வேண்டும் என்ற உடன்பாட்டில் எழும் சதியாகும்.

தண்டனைக்குரிய குற்றமில்லாத பிறவகைத் தீச்செயல்களும் இருக்கின்றன. ஒருவர் மற்றொருவருடன் செய்துகொண்ட ஒப்பந்தத்தை மீறுவது சட்ட விரோதமான செயலாகும்; எனினும், அது குற்றமாவதில்லை. அரசின் பணியாளராக இருப்பவர் அந்தப் பணிக்குரிய விதிகளைக் கடைப்பிடித்தல் வேண்டும். அவ்வாறு கடைப்பிடிக்கவில்லையெனில், அது சட்ட முரணான செயல்

ஆகிறது. ஆனாலும், அது தண்டிக்கத்தக்க குற்றம் ஆவ தில்லை. எனவே, சட்ட விரோதமான காரியங்கள் (illegal acts) அனைத்துமே குற்றங்கள் (offences) ஆவதில்லை. சட்ட விரோத மான காரியங்களையும் பலர் கூடிச் செய்வது சமூகத்திற்குத் தீமை பயப்பதாகும். சட்ட முரணான காரியங்களைச் செய்வதற்கென்று பலர் கூடி உடன்படுதலும் சமூகத்திற்கு நல்லதன்று. எனவே, இவ்வித உடன்பாட்டையும் சட்டம் தடைசெய்கிறது. சட்ட விரோத மான செயல்களைச் செய்வதற்கு உடன்படுவதையும் 'சதி' என்று சட்டம் விதிக்கிறது.

ஒரு செயல் சட்ட விரோதமில்லாததாக இருக்கலாம். ஆனால், அதைச் செய்வதற்குச் சட்ட விரோதமான சாதனங்களை (illegal means) நாம் பின்பற்றலாம். சட்ட முரணான சாதனங்களைக் கைக்கொள்ளுவதும் கூடாது என்பது சட்டம். குறிக்கோள் நல்ல தாக இருந்தால்மட்டும் போதாது; அதற்கான வழிமுறையும் நல்ல தாக இருத்தல் வேண்டும். மனத்தூய்மை, செய்வினைத் தூய்மை இரண்டும் அவசியமானவை. நல்ல காரியத்தைச் செய்வதற்கென்று தீய வழிகளைப் பின்பற்றுவதென்றால், நற்செயல் எது, தீச்செயல் எது என்ற பாகுபாடே தெரியாமற்போய்விடும். தீச்செயல்களில் ஈடுபடுவோர் அனைவருமே அவை நல்ல நோக்கங்களைக் கருதிச் செய்யப்பட்டன என்று வாதிட ஆரம்பிப்பார்கள். ஆதலால், சட்ட முரணான காரியங்களைச் செய்ய உடன்படுதல் எவ்வாறு கூடாதோ, அவ்வாறே சட்ட இசைவான காரியங்களைச் சட்ட முரணான வழி களைப் பின்பற்றிச் செய்வதென்ற உடன்பாடும் கூடாது என்று சட்டம் கூறுகிறது. எனவே, சட்டத்திற்கு இசைவான செயல்களைச் செய்வ தற்குச் சட்ட முரணான சாதனங்களைக் கையாளுவது என்று பலர் கூடி உடன்படுதலும் கூடாது என்று சட்டம் விதிக்கிறது.

சட்ட முரணான செயல்களையோ (illegal acts), அல்லது சட்ட இசைவான செயல்களைச் சட்ட முரணான வழிகளிலோ (acts not illegal by illegal means) நிறைவேற்றுவதென்று இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நபர்கள் உடன்படுதலையும் சதியாகவே சட்டம் கொள்ளுகிறது. ஆனால், இந்த உடன்பாட்டையொட்டி ஏதாவது ஒரு செயலை அந்தச் சதியாளர்களில் எவராகிலும் ஒருவர் செய்திருக்க வேண்டும். இவ்வாறு உடன்பாடு, அதையொட்டிய ஒரு செயல், இரண்டும் இருந்தால், அதுவும் சதிக்குற்றம் ஆகிறது.

எனவே, சதிக்குற்றம் இருவகைப்படும். தண்டனைக்குரிய ஒரு குற்றத்தைச் (offence) செய்வதற்கென்று இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நபர்கள் உடன்படுவது—இது ஒரு வகை.

சட்ட முரணான செயலைச் (illegal act) செய்வதென்றோ, அல்லது சட்ட முரணில்லாத செயலைச் சட்ட முரணான வழிகளில் (act which is not illegal by illegal means) செய்வதென்றோ உடன்பட்டு, அதன்படி ஏதாவது ஒரு செயலைச் சதியாளரில் எவரேனும் ஒருவர் செய்தல்—இது இரண்டாவது வகை.

இதுவே, சதிக்குற்றத்திற்கு, குற்றவியல் சட்டத்தின் 120-A பிரிவு கூறும் இலக்கணமாகும்.

உடன்பாடு குற்றமான செயலைச் (offence) செய்வதற்கு என்றால், அந்த உடன்பாடே சதிக்குற்றமாகிவிடுகிறது. உடன்பாட்டை யொட்டிய செயல் எதுவும் நடந்திருக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை. ஆனால், அந்த உடன்பாடு சட்ட முரணான செயல்களையோ அல்லது சட்ட முரணில்லாத செயல்களைச் சட்ட முரணான வழிகளிலோ செய்வதற்கென்றால், அந்த உடன்பாட்டை யொட்டிய ஒரு செயலும் வேண்டும். இதுதான் சதிக்குற்றத்தின் சாரமாகும்.

**சதிக்குற்றத்தை மெய்ப்பிக்கும் முறை**

சாதாரணமாக, சிலர் கூடிச் சதி செய்கின்றனர் எனில், அது பலரும் அறியும்படியாகவோ, வெளிப்படையாகவோ நடப்பதில்லை. மறைவாக, பிறர் அறியாதவாறே சதித்திட்டங்கள் உருவாக்கப் படுகின்றன. பின் சதித்திட்டத்தைச் சட்டம் எவ்வாறு கண்டறிகின்றது? நீதிமன்றத்தில் சதித்திட்டத்தை மெய்ப்பிப்பது எவ்வாறு?

சதித்திட்டம் ஒன்று இருந்தது என்பதும், அந்தச் சதியில் குற்றம் சாட்டப்பட்டவர்கள் சம்பந்தப்பட்டிருந்தனர் என்பதும் மெய்ப்பிக்கப்படவேண்டும். எனவே, சதியாளர்களிடை ஏற்பட்டிருந்த உடன்பாட்டை மெய்ப்பித்தால்தான் சதிக்குற்றம் எழுகின்றது. அந்த உடன்பாட்டை நேரடியான சாட்சியம் (direct evidence) அளித்துதான் நிரூபிக்கவேண்டும் என்று அவசியம் இல்லை. சூழ்நிலைச் சாட்சியங்கள் (circumstantial evidence) வழியாக அத்தகைய உடன்பாட்டை மெய்ப்பிக்கலாம்.

சதியாளர்களிடையே நடந்த கடிதப் போக்குவரத்து, அவர்களின் செயல்கள், அச் செயல்களில் உள்ள ஒற்றுமை, அவை செய்யப்பட்ட விதம்—இவைகளிலிருந்து அந்த உடன்பாடு ஊகிக்கப்படலாம்.

சதியாளர்கள் அனைவரும் ஒரே இடத்தில் ஒன்றுகூடி ஒரே நேரத்தில் சதித்திட்டத்தை வகுக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை. பல சதியாளர்கள் இருந்தால், அவர்களில் சிலர் ஒருவருக்கொருவர் அறிமுகமாகாதவர்களாகக்கூட இருக்கலாம்.

கள்ள நாணயம் அடிப்பதற்கென்று சென்னையிலுள்ள இராமனும் கிருஷ்ணனும் முதலில் சதி செய்யலாம். இதற்கான கருவிகளை வாங்குவதற்கென்று இராமன் கல்கத்தா செல்லுகிறார். அங்கு இருந்த கோவிந்தன் என்பவர் இந்தச் சதியில் சேர்ந்து கருவிகளை வாங்கிக் கொடுக்கலாம். பம்பாயில் உள்ள மற்றொருவர் இன்னும் சில கருவிகளை வாங்கி உதவலாம். நாணயங்கள் அடித்த பிறகு அவைகளைச் சிறிது சிறிதாக வெளியிட இரண்டு மூன்று நபர்கள் ஒப்புக்கொண்டு, அவ்வாறே அந்த நாணயங்களைக் கடைகளில், சந்தைகளில் செலாவணியாகும்படி விநியோகிக்கின்றனர். இப்பொழுது இந்தச் செயல்களில் ஈடுபட்ட அனைவருமே கள்ள நாணயம் அடிக்கும் சதிக்குற்றத்திற்கு ஆளாகின்றனர். பம்பாயிலிருந்து கருவிகளை வாங்கி அனுப்பியவருக்குச் சென்னையில் இருக்கும் இராமனை நேரில் தெரியாமல் இருக்கலாம். சதித்திட்டத்தில் வெவ்வேறு நாட்களில், வெவ்வேறு நிலைகளில் சதியாளர்கள் சேரலாம். எனவே, சதியாளர்கள் அனைவரும் ஒரே இடத்தில் கூடி ஒரே நேரத்தில் சதித்திட்டத்தை ஒப்புக்கொள்ளவேண்டியது இல்லை.

## குற்ற உடந்தைச் சதிக்கும் (Abetment by conspiracy) சதிக்குற்றத்திற்கும் (Criminal conspiracy) உள்ள வேறுபாடு

குற்ற உடந்தைச் சதிபற்றியும் (abetment by conspiracy), சதிக்குற்றம் (criminal conspiracy) பற்றியும் கண்டோம். இரண்டிற்குமுள்ள வேறுபாடுகளை நாம் தெரிந்துகொள்ளவேண்டும்.

ஒரு குற்றமான செயலைச் (offence) செய்வதென்று சதி செய்வது தான் 'குற்ற உடந்தைச் சதி'யாகிறது. குற்றமல்லாத, ஆனால், சட்ட முரணான செயல் (illegal act) குறித்தும், சட்ட முரணான வழிகளைப் (illegal means) பின்பற்றுவது குறித்தும் சதி செய்யப்பட்டாலும், அது 'சதிக்குற்ற'மாகிவிடுகிறது; இது 'குற்ற உடந்தைச் சதி' ஆவதில்லை. அதாவது, 'குற்ற உடந்தைச் சதியில்' செய்வதற்கென ஒப்புக்கொள்ளப்பட்ட செயல் தண்டனைக்குரிய குற்றமாக (offence) இருக்கவேண்டும். ஆனால், 'சதிக்குற்றத்தில்', செய்வதற்கென ஒப்புக்கொள்ளப்பட்ட செயல் சட்ட முரணான காரியங்களாக (illegal acts) இருந்தாலே போதுமானது.

'குற்ற உடந்தைச் சதி'யில், சதியின் விளைவாக ஏதாவது ஒரு செயல் செய்யப்பட்டிருத்தல் வேண்டும்; இல்லாவிடில், 'குற்ற

உடந்தைச் சதி' எழுவதில்லை. குற்றங்களைச் செய்வதற்கான சதிக் குற்றத்தில், அந்தச் சதியே குற்றமாகிவிடுகிறது; சதியின் பயனாக எந்தவிதச் செயலும் செய்யப்படவேண்டிய அவசியம் இல்லை.

**சதிக்குற்றத்திற்குரிய தண்டனை**

மரண தண்டனை அல்லது இரண்டு ஆண்டுகளுக்கு அதிகமான சிறைத்தண்டனைக்குரிய குற்றங்களைப் புரிவதற்கென்று சதியில் ஈடு படுபவர்கள், அக் குற்றங்களைச் செய்தால் என்ன தண்டனை பெறு வார்களோ, அதே தண்டனைக்கு ஆளாகின்றனர்.

இரண்டு ஆண்டுகளுக்குக் குறைவான சிறைத்தண்டனைக் குரிய குற்றங்களைப் புரிவதற்கென்று சதியில் ஈடுபடுபவர்களுக்கு ஆறு மாதம்வரை சிறைத்தண்டனை அளிக்கப்படலாம். (120-பி பிரிவு.)

பல நல்ல காரியங்களைத் தனிப்பட்டவர்களால் தனித்துச் செய்தல் முடியாது. எனவே, பலர் சேர்ந்து கூட்டுறவோடு செயற் பட்டு அக் காரியங்களைச் சாதிக்கின்றனர். பலர் கூடி இயங்கும் பொழுது அவர்கள் ஆற்றல் மிக்கவர்களாக ஆகின்றனர். ஆனால், இதே கூட்டுறவு தீய வழிகளுக்குப் பயன்படுத்தப்பட்டால், சமூக வாழ்வு சீர்கெட்டுவிடும். எனவேதான், தீச்செயல்களையும் குற்றங் களையும் செய்வதற்கென்று பலர் கூடி இயங்குவதைச் சட்டம் தடுக் கின்றது. அவ்வாறு, குற்றங்களையும் சட்ட முரணான செயல்களையும் செய்வதற்கென உடன்படுவதையே குற்றமெனக் கொண்டு அதற்குத் தண்டனை விதிக்கப்படுகிறது.

# 13. கூட்டுக் குற்றப் பொறுப்பு
## (Joint Criminal Liability)

'கூட்டுக் குற்றப் பொறுப்பு' என்றால் என்ன? கூட்டுக் குற்றப் பொறுப்புக் கொள்கையின் கூறுகள்—பொதுவாகக் கருதிய குற்றம்—அக் குற்றத்தைச் செய்வதில் நேரடியாகப் பங்கெடுத்து ஈடுபடுதல்—கூட்டாகக் குற்றம் இழைப்போர்.

எந்த ஒரு செயலையும் தனித்து ஒருவர் செய்வதைவிட, பலர் கூடி இணைந்து செய்வது எளிதாகிறது. இது நற்செயல்களுக்கும் தீச்செயல்களுக்கும் பொருந்துவதாகும்.

நல்ல செயல்களைப் பலர் கூடிச் செய்வதைச் சட்டம் வரவேற்கிறது. ஆனால், தீமையான செயல்களைச் செய்வதில் பலர் இணைந்து நின்றால், அதனால் விளைவது பெருங்கேடாகும். எனவே, சட்டம் அதைத் தடுக்கின்றது.

ஒன்றுக்கு மேற்பட்ட பேர்கள் ஒரு தீய காரியத்தைச் செய்வதென்று சேர்ந்துவிட்டால், ஒருவருக்கொருவர் துணையாக நிற்கின்றனர். தனித்து அதே தீச்செயல்களைச் செய்வதற்கு ஒருவர் அஞ்சலாம். ஆனால், துணைவர்கள் இருக்கும்பொழுது அவருக்குத் துணிவு ஏற்பட்டுவிடுகிறது. தனித்தனியாகச் செய்ய முடியாத ஒரு குற்றத்தை இரண்டு அல்லது மூன்று பேர்கள் சேர்ந்து எளிதில் செய்துவிடலாம். இவ்வாறு கூடி இயங்கிக் குற்றங்கள் புரிவதைத் தடுக்கும் பொருட்டுச் சட்டம் கூடி இயங்கும் ஒவ்வொருவரையும் அந்தக் குற்றத்திற்குப் பொறுப்பாக்கித் தண்டிக்கின்றது.

### (i) 'கூட்டுக் குற்றப் பொறுப்பு' (Joint criminal liability) என்றால் என்ன?

இரண்டு நபர்கள் கூடி ஒரு வீட்டில் நுழைந்து திருடவேண்டும் என்று கருதுகின்றனர். இந்தப் பொதுக் கருத்தை (common intention) நிறைவேற்றும் வகையில் அந்த ஒருவர் வீட்டு வாசலருகில்

நின்றுகொண்டு தெருவில் யாராகிலும் வருகின்றனரா என்று பார்த்துக்கொள்கிருர். ஒருவர், பூட்டை உடைத்து வீட்டிற்குள் சென்று பணத்தையோ, நகைகளையோ எடுத்துவருகிருர்.

இப்பொழுது அந்த இரண்டு பேர்களுமே வீட்டில் நுழைந்து திருடிய குற்றத்திற்கு ஆளாகின்றனர். தெருவில் நின்றுகொண்டிருந்தவர் 'நான் வீட்டிற்குள் சென்று திருடவில்லையே; எனவே, நான் திருடியதற்குப் பொறுப்பாகவில்லை' என்று கூறினுல், அதைச் சட்டம் ஏற்பதில்லை. வீட்டிற்குள் நுழைந்து நகையைத் திருடிய செயலைத் தெருவில் நின்றுகொண்டிருந்தவரும் செய்ததாகத்தான் சட்டம் கொள்கிறது. ஏன்? இருவருடைய பொதுக் கருத்தும் திருட வேண்டும் என்பதுதான். அந்தக் கருத்தை நிறைவேற்றும் வகையில்தான் ஒருவர் தெருவில் நின்று எவரும் வந்துவிடாதபடி பார்த்துக்கொண்டிருந்தார். எனவே, அவரும் திருடிய செயலுக்குப் பொறுப்பாகின்ருர். இவ்வாறு, பலர் கூடிச் சேர்ந்து செய்த குற்றத்திற்கு ஒவ்வொருவருமே பொறுப்பாவதைக் 'கூட்டுக் குற்றப் பொறுப்பு' என்கிருேம்.

இந்தக் கொள்கையை இந்தியக் குற்றவியல் சட்டம் 34ஆம் பிரிவு தெளிவாகக் கூறுகிறது:

'பொதுவான கருத்தை (common intention) நிறைவேற்றும் வகையில் பலர் கூடி ஒரு குற்றத்தைச் செய்தனர் எனில், அவர்கள் தனித்தனியே அக் குற்றத்தைச் செய்திருந்தால் எவ்வாறு பொறுப்பாவார்களோ, அவ்வாறே அவர்கள் ஒவ்வொருவரும் பொறுப்பாகின்றனர்.'

**கூட்டுக் குற்றப் பொறுப்புக் கொள்கையின் கூறுகள்**

(1) இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நபர்களின் கருத்துப் பொதுவானதாக (common intention) இருத்தல் வேண்டும்; (2) அந்தப் பொதுக் கருத்தை நிறைவேற்றும் நோக்கத்தோடு அவர்கள் கூடிச் சேர்ந்து ஒரு குற்றத்தைச் செய்திருக்கவேண்டும். இந்த இரண்டு கூறுகளும்—பொதுக் கருத்து, அக் கருத்தை நிறைவேற்றுவதற்கென ஒரு குற்றத்தைச் சேர்ந்து செய்தல்—இருந்தால், அந்தக் குற்றத்திற்கான பொறுப்பு அவர்கள் ஒவ்வொருவரையும் சேருகின்றது. இதைக் 'கூட்டுக் குற்றப் பொறுப்பு' (Joint criminal liability) என்று கூறுவார்கள்.

**பொதுவான கருத்து**

மூன்று நபர்கள், இரவில் ஒரு வீட்டில், திருடுவதற்கு என்று நுழைகின்றனர். ஒருவன் பெட்டியைத் திறந்து நகைகளை எடுக்

கிறான். வீட்டில் தூங்கிக்கொண்டிருந்த வீட்டுக்காரர் விழித்துக் கொண்டு எழுந்துவிட்டார். திருடர்களில் ஒருவன் தன் கையிலிருந்த கம்பியால் அவரை மண்டையில் அடித்ததால், அவர் இறந்துவிடு கின்றார். இப்பொழுது, வீட்டுக்காரரின் மரணத்திற்குத் திருடவந்த மூவருமே பொறுப்பாகின்றனரா? ஆவதில்லை. ஏன்?

அவர்களுடைய பொதுக் கருத்து (common intention) திருட வேண்டும் என்பதுதான்; வீட்டுக்காரரைக் கொலைசெய்யவேண்டும் என்பதன்று. எனவே, கம்பியால் அடித்தவர்மட்டுமே கொலைக் குற்றத்திற்கு ஆளாகின்றார். மற்ற இருவரும் வீடு புகுந்து திருடிய குற்றத்திற்கே பொறுப்பாகின்றனர்.

இதே உதாரணத்தைச் சிறிது மாற்றிப் பார்ப்போம். திருடச் சென்ற மூவரில் ஒருவனிடம் கைத்துப்பாக்கி இருக்கிறது. இதை மற்ற இருவரும் அறிவார்கள். கைத்துப்பாக்கி வைத்திருப்பதன் கருத்து, யாராவது விழித்து அவர்களைப் பிடிக்க வந்துவிட்டால், அவர்களைத் துப்பாக்கியால் சுட்டுக் கொன்றுவிடுவது என்று வைப்போம். இப்பொழுது அவர்களது பொதுக் கருத்து என்ன? திருடுவது; அவசியம் ஏற்பட்டால், எதிர்த்தவர்களைக் கொலை செய்வது. இந்த நிலையில், வீட்டுக்காரர் விழித்து எழுந்தவுடன் கைத்துப்பாக்கிக்காரர் அவரைச் சுட்டுக் கொன்றுவிட்டார் எனில், அந்தக் கொலைக்குற்றத்திற்கு மூவருமே பொறுப்பாகின்றனர்.

### இன்னோர் உதாரணம்

நான்கு பேர்கள் தடிகளை எடுத்துக்கொண்டு, மற்றொருவர் வசமுள்ள நிலத்தைப் பலாத்காரமாக மீட்டுத் தம் வசப்படுத்தும் நோக்கத்தோடு செல்லுகின்றனர். இப்பொழுது அவர்களின் பொதுக் கருத்து நிலத்தின் உடைமையைக் கைப்பற்றவேண்டும் என்பதுதான். ஆனால், அந்த நிலத்தை வைத்திருந்தவர் உடைமையை விடுவதற்கு மறுத்ததால், நான்கு பேர்களில் ஒருவர் தம்மிடமிருந்த தடியால் அவரை அடித்துக் காயத்தை விளைவித்து விடுகின்றார். இவ்வாறு காயத்தை விளைத்ததற்கு அந்த நால்வருமே பொறுப்பாகின்றனர். ஏன்?

அவர்கள் தடிகளை எடுத்துச் சென்ற செயல், நிலத்தில் நுழைவதற்கு எதிர்ப்பு இருந்தால் எதிர்த்தவர்களை அடிக்கவேண்டும் என்ற திட்டம் அவர்களுக்கு இருந்ததை எடுத்துக்காட்டுகிறது. எதிர்த் தவர்களை அடிக்கவேண்டும் என்பது முக்கியப் பொதுக் கருத்தாக இல்லாவிடினும், நிலத்தின் உடைமையை எடுப்பதற்குத் தடியையும் பயன்படுத்தலாம் என்ற திட்டம் இருந்தது என்பது தெளிவு.

எனவே, ஒருவர் அடித்த செயலுக்கு அனைவருமே பொறுப்பா கின்றனர்.

தடியால் அடிபட்டு விழுந்தவரை எல்லோருமாகச் சேர்ந்து, 'கொல்லுங்கள்' என்று கூறிக்கொண்டு மண்டையில் பலமாகத் தடியால் அடித்தனர் என வைப்போம். இவ்வாறு அடிபட்டதன் பயனாக அவர் இறந்துவிட்டால், இந்த நால்வரும் கொலைக்குற்றத் திற்கு ஆளாகின்றனர். ஏனெனில், நால்வரும் சேர்ந்து அடித்த செயலிலிருந்து, அவர்களின் பொதுவான கருத்து மரணத்தையும் விளைவிக்கவேண்டும் என்பதுதான் ~~என்பது~~ தெளிவாகின்றது.

எனவே, பொதுவாகக் கருதிய குற்றம் என்ன என்பதைக் கண்டு, அக் கருத்தை நிறைவேற்றும் வகையில் எவர்எவர் அக் குற்றத்தைச் செய்வதில் நேரில் ஈடுபடுகின்றனரோ, அவர்கள் எல்லாம் அக் குற்றச் செயலுக்குப் பொறுப்பாக்கப்படுகின்றனர்.

கூட்டாகக் குற்றங்கள் புரிவோர்களின் பொதுக் கருத்து என்ன என்பதை அவர்கள் செயல்களிலிருந்தே அறிகின்றோம். குற்றச் செயலில் ஈடுபடுவதற்குமுன் அவர்கள் கூடி என்ன திட்டமிட்டிருந் தனர், என்ன பொதுக் கருத்தை ஏற்றுக்கொண்டிருந்தனர் என்பதைக் காட்டுவதற்கான சாட்சியம் கிடைப்பது அரிது. எனவே, அவர்களின் செயல்களிலிருந்து அவர்களது பொதுக் கருத்தைச் சட்டம் ஊகித்தறிகின்றது. பொதுவான கருத்துக் கொண்டவர்கள், அந்தக் கருத்தை நிறைவேற்றுவதற்கென இணைந்து இயங்குவார்கள். இந்த இணைந்த இயக்கத்திலிருந்தே அவர்களின் பொதுக் கருத்தை நாம் தெரிந்துகொள்ள முடிகிறது.

### பொதுக் கருத்தான குற்றத்தைச் சேர்ந்து செய்திருக்கவேண்டும்

ஒரு குற்றத்தைச் செய்யவேண்டும் எனச் சில பேர்கள் கூடித் திட்டமிடலாம். ஆனால், அவர்களில் சிலர் குற்றச் செயலில் ஈடுபட வில்லையெனில், அவர்களைக் கூட்டுக் குற்றப் பொறுப்பின்படி தண்டனைக்கு உள்ளாக்க முடியாது. குற்றச் செயலை நேரடியாகக் கூடிச் செய்தவர்கள்மட்டுமே, இக் கொள்கையின்படி குற்றத்திற்கு ஆளாகின்றனர். எனவே, பொதுக் கருத்தான குற்றத்தைச் செய்வதில் நேரடியாகப் பங்கெடுத்து ஈடுபடாதவர்கள், மேலே கூறிய 34ஆம் பிரிவுப்படி குற்றத்திற்குப் பொறுப்பாவது இல்லை.

குற்றத்தைச் சேர்ந்து செய்வதில் ஈடுபட்டிருக்கவேண்டும் எனில், ஒவ்வொருவரும் ஒரேவிதச் செயலைச் செய்திருக்கவேண்டும் என்பதன்று. குற்றத்தைச் செய்வதில் நேரில் பங்கெடுத்திருக்க

வேண்டும் என்பதுதான் முக்கியமானது. நேரில் பங்கெடுப்பது எனில், குற்றம் செய்யப்படும்பொழுது கூட இருந்து, அக் குற்றம் இழைக்கப்படுவதற்கு வேண்டிய அவசியமான செயல்களில் எதை யாவது ஒன்றைச் செய்வதாகும். குற்றம் இழைக்கப்படும்பொழுது அந்த இடத்தில் அவர் இருத்தல் அவசியம்.

கூட்டுக் குற்றப் பொறுப்பிற்கு உள்ளாகிறவர்கள், பொதுவான குற்றக் கருத்தையுடையவர்களாக இருக்கவேண்டும்; அக் கருத்தை நிறைவேற்றும் நோக்கத்தோடு அக் குற்றமான செயலைச் செய்வதில் நேரடியாகப் பங்கெடுத்து ஈடுபட்டிருக்கவேண்டும். இந்த இரண்டு கூறுகளும் இருந்தால்தான் மேலே கூறியபடி கூட்டுப் பொறுப்பு எழுகின்றது.

### (ii) கூட்டாகத் திட்டமிட்டுக் குற்றமிழைப்போர்

ஒரு குற்றத்தைச் செய்வதற்குப் பல செயல்களைச் செய்வது அவசியமாகலாம். அந்தச் செயல்களில் ஏதாவது ஒன்றைத் தனித்தோ, பிறருடன் கூடியோ செய்தவர், அந்தக் குற்றத்தைத் தானே செய்தவராகின்றார்.

இரண்டு வேலைக்காரர்கள் தம் எஜமானரை விஷமிட்டுக் கொல்லத் திட்டமிடுகின்றனர். ஒரே நாளில் நஞ்சைக் கலந்து உணவில் கொடுத்துவிட்டால், அது கொலை என்று தெரிந்துவிடும் என்ற அச்சம் அவர்களுக்கு ஏற்படுகிறது. எனவே, நாளாவட்டத்தில் சிறிது சிறிதாக அவரது உணவிலே நஞ்சைக் கலந்து பல நாட்கள் கொடுத்துவந்தால், முடிவில் எஜமானர் நோய்வாய்ப்பட்டு இறந்துவிடுவார் என்ற ஏற்பாட்டை ஏற்றுக்கொண்டு, அந்தந்த நாட்களில் அந்த இரு வேலைக்காரரில் ஒவ்வொருவரும் சிறிய அளவில் நஞ்சை உணவில் கலந்து கொடுக்கின்றார். இவ்வாறு, அந்த இருவரும் கூடிச் செய்த செயல்களின் விளைவாக எஜமானர் இறந்துவிடுகின்றார். இப்பொழுது, வேலைக்காரர்கள் இருவருமே அந்தக் கொலைக்குற்றத்திற்கு ஆளாகின்றனர்.

இன்னுமோர் உதாரணம்: ஒரு கைதி சிறையில் அடைபட்டிருக்கின்றார். சிறைக் காவலர் மூவர் அந்தக் கைதிக்கு உணவு கொடுக்காமல் கொன்றுவிடவேண்டுமென்று திட்டமிடுகின்றனர். சிறைக்காவலர்கள் மூவரில் ஒவ்வொருவரும் தினம் எட்டு மணி நேரம் சிறையைக் காவல் செய்யவேண்டும். அவரவர் வேலை பார்க்கும் அந்த எட்டு மணி நேரத்தில் கைதிக்கு உணவு கொடுக்காமல் பட்டினிபோடுகின்றனர். இவ்வாறு, அவர்கள் ஒத்துழைத்துக் கைதியின் மரணத்தை விளைவிக்கின்றனர். இப்பொழுது,

அந்தக் கைதியின் மரணத்திற்கான பொறுப்பு, சிறைக்காவலர் மூவரையும் சேருகின்றது. அவர்கள் ஒவ்வொருவருக்கும் கொலைக் குற்றத்திற்கான தண்டனை உண்டு.

இவ்வாறு, கூட்டுறவோடு ஒன்றுக்கு மேற்பட்ட நபர்கள் இணைந்து ஒரு குற்றத்தைச் செய்தாலும் 'கூட்டுக் குற்றப் பொறுப்பு' எழுகின்றது.

இந்தக் கொள்கையை இந்தியக் குற்றவியல் சட்டம் 37ஆம் பிரிவு கூறுகிறது:

'பல செயல்களைச் செய்து ஒரு குற்றம் செய்யப்பட்டால், அச் செயல்களில் ஏதாவது ஒன்றைத் தனித்தோ, பிறருடன் சேர்ந்தோ செய்வதன் வாயிலாக அக் குற்றத்தை இழைப்பதற்குக் கூட்டுறவாக இருப்பவர்கள் ஒவ்வொருவரும் அந்தக் குற்றத்தைச் செய்தவர் ஆகின்றனர்.'

சிறைக் காவலர்கள் கைதியைக் கொல்லவேண்டுமென்ற திட்டத்தை நிறைவேற்றுவதற்கெனக் கூடி இயங்குகின்றனர்; கூட்டாகச் செயற்படுகின்றனர். ஒவ்வொருவரும் எட்டு மணி நேரம் தான் உணவளிக்காமல் இருக்கின்றனர். எட்டு மணி நேரம்மட்டும் உணவளிக்காததால் கைதி இறப்பது இல்லை. ஆனால், அவ்வாறு எட்டு மணி நேரம் உணவளிக்காமல் இருந்தது, கைதியை முழுவது மாகப் பட்டினி போட்டுக் கொல்லவேண்டும் என்ற நோக்கத்தோடு அவர்கள் மூவரும் கூடி இயங்கியதன் பயனாகும்; கூட்டாக ஒரு குற்றச் செயலைச் செய்வதன் வகையாகும். எனவே, விளைந்த மரணத்திற்கான பொறுப்பு, சிறைக் காவலர் ஒவ்வொருவரையும் சேருகின்றது.

இவ்வாறு, கூடி இயங்கிக் கூட்டாகச் செயற்பட்டுப் பல காரியங் களைச் செய்வதன்மூலம் ஒரு குற்றத்தைச் செய்பவர்கள் ஒவ்வொரு வரும் அந்தக் குற்றத்தை இழைத்தவர்களாகின்றனர். தனித்து ஒருவர் அக் குற்றத்தைச் செய்தால் என்ன தண்டனையோ, அதே தண்டனை அவர்கள் ஒவ்வொருவருக்கும் அளிக்கப்படுகிறது.

கருதிய ஒரு குற்றத்தைப் பலர் கூடிப் பங்கெடுத்துச் செய்தாலும் சரி, பலர் ஒரு குற்றத்தைச் செய்யவேண்டுமெனக் கருதிக் கூட்டாக அக் குற்றத்தை நிறைவேற்றுவதற்கான பல செயல்களைச்செய்தாலும் சரி, 'கூட்டுக் குற்றப் பொறுப்பு' எழுகின்றது. எனவே, அவர்கள் ஒவ்வொருவரும் அக் குற்றத்தைத் தனித்துச் செய்தால் என்ன தண்டனை பெறுவார்களோ, அதே தண்டனைக்கு ஆளாகின்றனர்.

# 14. குற்றப் பொறுப்பிலிருந்து விலக்களிப்பு
## (Exemptions from Criminal Liability)

ஏழு வயதிற்குட்பட்ட குழந்தைகள்—ஏழு வயதிற்கு மேற்பட்டுப் பன்னிரண்டு வயதிற்கு உட்பட்ட சிறுவர்கள்—மனநோய் உடையவர்கள் —குடிவெறியிலுள்ளோர்.

குற்றங்கள் இழைத்தவர்களைத் தண்டிப்பதற்குமுன், அச் செயல்கள் செய்யப்பட்ட சூழ்நிலைகளையும், அதைச் செய்தவர்களின் மனநிலையையும் சட்டம் ஆராய்கின்றது.

குற்றங்களைச் செய்தவர்களின் மனநிலையை ஆராய்ந்து, சிலரைக் குற்றப் பொறுப்பிலிருந்து சட்டம் விலக்குகிறது. இவ்வாறு விலக்கப்படுபவர்கள் எவர் எனக் காண்போம்.

### (1) ஏழு வயதிற்குட்பட்ட குழந்தைகள் (Children under Seven Years of Age)

ஏழு வயதுக்குக் குறைந்த குழந்தைகள் எந்தவிதக் குற்றத்திற்கும் ஆளாவது இல்லை.

ஐந்து வயதுக் குழந்தை ஒன்று கீழே கிடந்த கத்தியை எடுத்து அருகில் நின்றவர்மீது விட்டெறிந்தால், அவருக்குக் காயம் ஏற்படலாம். இதை வைத்துக் குழந்தையைத் தண்டிக்கலாமா? 'கூடாது' என்று கூறுகிறது சட்டம். இதே செயலை வயதுவந்தவர் செய்தால், அவர் காயம் விளைவித்த குற்றத்திற்குப் பொறுப்பாகின்றார்; அதற்குரிய தண்டனையும் பெறுகின்றார். ஆனால், குழந்தையைக் குற்றவாளி எனச் சட்டம் கொள்ளுவதில்லை.

தான் செய்யும் செயலின் தன்மையை அறியக்கூடிய திறன் இல்லாதது இளங்குழந்தை. ஏற்கெனவே நாம் கண்டோம், 'குற்ற மனத்'தோடு கூடிய செயல்தான் குற்றமாகிறது என்று. குழந்தைக்கு

ஏது 'குற்ற மனம்'? குற்ற மனமில்லாக் குழந்தையைக் குற்றவாளி எனச் சட்டம் கொள்ளுவதில்லை.

நன்மை எது, தீமை எது, ஒரு செயலின் தன்மை என்ன, அதன் விளைவு என்ன என்பதுபற்றிக் குழந்தைக்குத் தெரிவதில்லை. இதற்கான அறிவுத்திறன் இன்னும் அதற்கு வரவில்லை. எனினும், குழந்தைகளின் செயல்களால் பெரிய தீமைகள் பொதுவாக விளைவதில்லை. இது தெய்வத்தின் திருவருள் போலும்!

சட்டம் ஏழு வயதிற்குட்பட்ட குழந்தைகளுக்குக் குற்றப் பொறுப்பிலிருந்து பூரண விலக்கு அளிக்கிறது. எந்தவிதச் செயல்களுக்கும் அக் குழந்தைகளைப் பொறுப்பாக்க முடியாது.

[இந்தியக் குற்றவியல் சட்டத்தின் 82ஆம் பிரிவு, 'ஏழு வயதிற்குட்பட்ட குழந்தையின் செயல் எதுவும் குற்றமாவது இல்லை' என்று தெளிவாகக் கூறுகிறது.]

கத்தியை எடுத்து வீசிக் காயப்படுத்திய ஐந்து வயதுக் குழந்தை குற்றவாளியாவதில்லை; ஆனால், அக் குழந்தையை அவ்வாறு வீசும்படி வயதுவந்த இன்னொருவர் தூண்டி, அதன் பயனாகக் குழந்தை கத்தியை வீசியது என்றால், தூண்டியவர் அக் குற்றத்திற்குப் பொறுப்பாகின்றார். 'கத்தியை வீசிய குழந்தை குற்றவாளி இல்லையே, தூண்டிய நான்மட்டும் எவ்வாறு குற்றவாளி ஆகமுடியும்?' என்று அவர் வாதாட முடியாது. இதைக் 'குற்ற உடந்தை' என்ற தலைப்பில் முன்னரே கண்டோம்.

### (2) ஏழு வயதிற்கு மேற்பட்டுப் பன்னிரண்டு வயதிற்கு உட்பட்ட சிறுவர்கள் (Children above Seven and under Twelve Years)

ஏழு வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்குச் சட்டம் அளிக்கும் முழுமையான குற்ற விலக்கு, ஏழு வயதுக்கு மேற்பட்ட, ஆனால், பன்னிரண்டு வயதிற்கு உட்பட்ட சிறுவர்களுக்கு இல்லை. ஏழு வயதிற்கு மேற்பட்ட சிறுவர்கள், ஐந்து வயதுக்குழந்தைகளைப்போல், செயல்களின் தன்மையைத் தெரியாதவர்கள் அல்லர். நல்லது எது, கெட்டது எது என்று ஓரளவு அவர்களுக்குத் தெரிகிறது; முழுமையாகவே அவர்களுக்கு அவைபற்றி ஏதும் தெரியாது என்று கூறுவதற்கில்லை.

எனவே, செயலைச் செய்யும் அந்தச் சூழ்நிலையில், தன் நடத்தையின் தன்மையையும் அதன் விளைவையும்பற்றிப் (nature and consequences of his conduct) புரிந்துகொள்ளும் அளவிற்கு அறிவு வளர்ந்திருக்கிறதா (sufficient maturity of understanding) என்பதை

ஆராய்ந்து, அதன் அடிப்படையில் அவர்களைச் சட்டம் பொறுப்பாக்குகின்றது. ஒரு செயலின் தன்மையையும் விளைவையும் புரிந்து கொள்ளக்கூடிய அறிவு வளர்ச்சி இல்லையெனில்; ஏழு வயதிற்கும் பன்னிரண்டு வயதிற்கும் இடையிலுள்ள சிறுவனையோ சிறுமியையோ அச் செயலுக்குச் சட்டம் பொறுப்பாக்குவது இல்லை. அத்தகைய அறிவு வளர்ச்சி இருந்தது எனில், அவர்கள் குற்றத்திற்குப் பொறுப்பாகின்றனர். (குற்றவியல் சட்டம் 83ஆம் பிரிவு.)

எட்டு வயது சிறுவன், ஒரு வயதுக் குழந்தைமீது கொதிக்கும் நீரை ஊற்றிவிடுகிறான். சுடுகின்ற நீரை ஊற்றினால் குழந்தை அழும், வேடிக்கை பார்க்கலாம் என்பதுதான் அவன் எண்ணம். ஆனால், கொதிநீர் மேலெல்லாம் பட்டதால் குழந்தை இறந்து விடுகிறது. இப்பொழுது அந்தச் சிறுவன்மீது கொலைக் குற்றம் சாட்டுவது சரியன்று. ஏனெனில், கொதிநீரால் குழந்தையின் மரணம் விளையும் என்பதை அவன் அறியவில்லை. தன் செயலின் தன்மையையும் விளைவையும் புரிந்துகொள்ளும் அறிவு அவனிடம் வளர்ச்சி பெறவில்லை. எனவே, அச் சிறுவன் எந்தவிதக் குற்றத்திற்கும் ஆளாவது இல்லை.

அதே எட்டு வயது சிறுவன் அடுத்த வீட்டில் இருந்த தங்க நகை ஒன்றை எவருக்கும் தெரியாமல் திருடிக்கொண்டு வந்து, அதை மறைவாக வைத்திருக்கிறான் என வைப்போம். நகையை அவன் மறைவாக வைத்ததிலிருந்து, அச் செயல் தவறானது என்பதை அவன் அறிகிறான் என்பது புலனாகிறது. எவருக்கும் தெரியாமல் அவன் நகையை அகற்றியதிலிருந்து, அவன் தன்னுடைய செயலின் தன்மையைப் புரிந்துதான் செய்தான் என்பதும் தெளிவாகிறது. எனவே, அந்தத் திருட்டுக் குற்றத்திற்கு அவன் பொறுப்பாளி ஆகிறான்.

பதினொரு வயது சிறுவன் ஒருவன், கூரிய கத்தியைக் கையில் எடுத்து வைத்துக்கொண்டு, 'குத்திக் கொன்றுவிடுவேன்' என்று கூறியவாறே ஒருவரைப் பல முறை குத்தினான். குத்துப்பட்டவர் இறந்தார். அவன் கொலைக்குற்றத்திற்குப் பொறுப்பானவன்தான் என்று தீர்ப்பளிக்கப்பட்டது. ஏனெனில், அவன் தன் செயலின் தன்மையையும் விளைவையும் புரிந்திருந்தான் என்பதை அவனது நடத்தை புலப்படுத்துகிறது. ஆதலால், சட்டம் அவனுக்குக் குற்ற விலக்களிப்பது இல்லை.

இவ்வாறு, ஏழு வயதுக்கு மேலும் பன்னிரண்டு வயதிற்கு உட்பட்டும் உள்ள குழந்தைகளின் அறிவு வளர்ச்சியை ஆய்ந்து, அவர்

களுக்குக் குற்றவிலக்கு அளிக்கப்படுகின்றது. பன்னிரண்டு வய திற்கு மேற்பட்டவர்களுக்கு எவ்வித விலக்கும் இல்லை.

எனவே, பன்னிரண்டு வயது வரையுள்ள குழந்தைகளைச் சட்டம் இருவகைகளாகப் பிரிக்கின்றது. ஏழு வயதிற்குக் குறை வான குழந்தைகள் ஒரு வகை. இவர்களுக்குக் குற்றப் பொறுப்பி லிருந்து முழு விலக்கு அளிக்கப்படுகிறது. ஏழு வயதிற்கும் அதிக மான, ஆனால், பன்னிரண்டு வயதிற்கும் குறைவான குழந்தைகள் இரண்டாவது வகை. இவர்களுக்கு முழு விலக்கு இல்லை. அவர்கள் செய்த குற்றமான செயல்களின் தன்மையையும் விளைவையும் உணர்ந்துகொள்ளும் அறிவு வளர்ச்சி அவர்களுக்குக் குறிப்பிட்ட சூழ் நிலைகளில் இருந்ததா என்பதைக் கண்டு, அவ்வாறு இல்லையெனில் மட்டுமே குற்றப் பொறுப்பிலிருந்து விலக்களிக்கப்படுகிறது.

### (3) உளநோயுடையவர்கள் (Persons of Unsound Mind)

பருவத்தின் காரணமாக அறிவு முதிராதவர்கள் இளஞ் சிறுவர் கள். உளநோயின் காரணமாக அறிவு முதிராதவர்களும், அறிவு குலைந்தவர்களும் இருக்கின்றனர். அவர்களைப் பைத்தியம் என் கிறோம்; பித்தர்கள் என்றும், சித்த சுவாதீனம் இல்லாதவர்கள் என்றும் அழைக்கிறோம்; கிறுக்கர்கள் என்று கேலி செய்கிறோம். தாம் செய்யும் காரியம் என்ன என்பது பைத்தியம் பிடித்தவர்களுக் குத் தெரிவதில்லை. திடீரென்று சிரிப்பார்கள், அழுவார்கள், பேசிக் கொண்டே யிருப்பார்கள். அவர்கள் என்னதான் செய்வார்கள், செய்யமாட்டார்கள் என்பதை நம்மால் நிச்சயிக்க முடியாது. இவ்வாறு, பைத்தியமாக உள்ளவர்களின் செயல்களுக்குச் சட்டம் அவர்களை எந்த வகையில் பொறுப்பாக்குகிறது என்று காண்போம்.

பைத்தியங்களில் பல வகையுண்டு. பிறவிப் பைத்தியம், பின் வந்த பைத்தியம், இடையிடையே வந்துபோகும் பைத்தியம் என்றெல்லாம் அதை வகைப்படுத்துவார்கள். சில வேளைகளில் பைத்தியம் பிடித்தவர்கள் நல்ல முறையில் நடந்துகொள்வதுமுண்டு; செயல்களையும் அதன் இயல்புகளையும் தெரிந்து நடப்பதுமுண்டு. இவ்வாறு இடையிடையே வரும் சித்தத் தெளிவை 'lucid intervals' என்று ஆங்கிலத்தில் கூறுவார்கள். இந்த நிலையில் அவர்கள் சாதாரண மக்களைப்போலவே நடந்துகொள்ளுகின்றனர். எனவே, ஏழு வயதுக்குக் குறைந்த குழந்தைகளுக்குச் சட்டம் முழுமையான குற்ற விலக்களிப்பதுபோல், பைத்தியம் பிடித்தவர்களுக்குச் சட்டம் முழு விலக்களிப்பது இல்லை.

பைத்தியம் பிடித்தவர் ஒரு குற்றமான செயலைச் செய்தால், அதைச் செய்தபொழுது அவருக்கிருந்த மனநிலை என்ன? அந்தச்

செயலின் தன்மையை அவரால் தெரிந்துகொள்ள முடிந்ததா? அவர் செய்தது தீங்கானது என்றோ, சட்டத்திற்கு விரோதமானது என்றோ அவருக்குத் தெரிந்துகொள்ளும் மனத்திறன் இருந்ததா?—என்ற இந்தக் கூறுகளையெல்லாம் ஆய்ந்த பின்னர்தான் குற்றச் செயலுக்கான பொறுப்பு நிச்சயிக்கப்படுகிறது.

அவர் செய்த செயலின் தன்மை என்ன என்றோ, அவர் செய்தது தீங்கு அல்லது சட்டத்திற்கு மாறானது என்றோ தெரிந்து கொள்ள முடியாத மனநிலையில், பைத்தியமாக உள்ளவர் இருந்தார் எனில் (incapable of knowing the nature of the act, or that he is doing what is either wrong or contrary to law), அவரை அச் செயலுக்குச் சட்டம் பொறுப்பாக்குவது இல்லை. அவர் அந்தச் செயலைச் செய்யும் வேளையில் அவருக்கு அத்தகைய மனநிலை இருந்திருக்க வேண்டும். அந்த மனநிலை, செயலைச் செய்வதற்கு முன்னோ, அதற்குப் பின்னோ இருந்து பயனில்லை. (குற்றவியல் சட்டம் 84ஆம் பிரிவு.)

தான் செய்த செயலின் தன்மையை அறியாத மனநிலைக்கு ஒரு நல்ல உதாரணத்தை, குற்றவியல் சட்டத்தைத் தொகுப்பதில் பங்கு கொண்ட ஆங்கில அறிஞர் சர் ஜேம்சு ஸ்டீஃபன் (Sir James Stephen) கூறுகிறார்: தூங்கிக்கொண்டிருந்த ஒருவரின் தலையை வெட்டி அகற்றிவிட்டான் ஒரு பைத்தியக்காரன். 'ஏன் இவ்வாறு வெட்டினாய்?' என்று கேட்டால், 'தலையை இழந்தவர் தூங்கி விழித்ததும் தன் தலை எங்கே போயிற்று என்று தேடுவார். அதை வேடிக்கை பார்க்கவேண்டும் என்றுதான் அவர் தலையை வெட்டி அகற்றி விட்டேன்' என்று அந்தப் பைத்தியக்காரன் கூறினானாம்! தலையை வெட்டிவிட்டால் வெட்டுப்பட்ட மனிதன் இறந்துவிடுவான் என்பது தெரியாத மனநிலை அந்தப் பைத்தியத்திற்கு இருந்ததை இது காட்டுகிறது. இதைத்தான் செயலின் இயல்பையோ, விளைவையோ அறியாத மனநிலை என்கிறோம்.

மனநோயால் வாடும் சிலருக்கு மற்ற மனிதர்களைக் காணும் போது திடீரென்று ஏதேதோ தோன்றுவதுண்டு. அயலார் ஒருவரைக் கண்டதும், அவர் ஒரு கத்தியை ஓங்கிக்கொண்டு தம்மைக் குத்திக் கொல்ல வருவதுபோல் தோன்றுகிறது, பைத்தியக்காரரின் கண்களுக்கு. உடனே அந்தப் பைத்தியக்காரன் ஒரு தடியை எடுத்து அடுத்தவரின் மண்டையில் ஓங்கி அடித்துக் கொன்றுவிடுகிறான். தடியை எடுத்து மற்றவரின் மண்டையில் அடிப்பதால் அடிபட்டவர் இறந்துபோகலாம் என்பது அடித்த பைத்தியத்திற்குத் தெரிகிறது. ஆனால், தன்னைக் காத்துக்கொள்ளுவதற்காக அப்படி அடிக்கவேண்டியிருந்தது என அந்தப் பைத்தியம் நினைக்கிறது.

எனவே, மண்டையில் தடியால்அடித்த செயலை ஒரு தீங்குச் செயலாக அடித்த பைத்தியக்காரர் எண்ணவில்லை. ஆதலால், மண்டையில் அடித்துக் கொன்ற பித்தர் கொலைக்குற்றத்திற்கு ஆளாவது இல்லை. இந்த உதாரணத்தில் செயலின் தன்மை பைத்தியத்திற்குத் தெரிந்திருக்கிறது; ஆனால், அது கொலைச் செயல் என்று தெரியவில்லை. எனவே, குற்ற விலக்கு அளிக்கப்படுகிறது.

திடீரென்று ஒருவன் கத்தியால் தெருவில் எதிரில் வந்தவர்கள் எல்லோரையும் குத்திவிட்டு ஓடினான் என்றோ, அல்லது ஒரு போலீசுக்காரர் தம் துப்பாக்கியால் கண்டகண்ட பேர்களைச் சுட்டுக் கொன்றுவிட்டார் என்றோ பத்திரிகைகளில் படிக்கிறோம். ஏதோ அடக்கமுடியாத ஆவேச உணர்ச்சியால் இவ்வாறு நடைபெறுகின்றன என்று விளக்கம் கூறுகின்றனர். அடக்கமுடியாத ஆவேசத்தால் (irresistible impulse or impulsive insanity) இக் குற்றங்கள் நிகழ்ந்தன என்பதால், சட்டம் இக் குற்றங்கள் இழைத்தவர்களை விட்டுவிடுவதில்லை. அவர்கள் தாம் இழைத்த செயல்களின் தன்மையை அறிந்துகொள்ளும் மனநிலையில் இருந்தார்களா என்ற சோதனையின் அடிப்படையிலேயே அவர்களின் பொறுப்பு நிச்சயிக்கப்படுகிறது.

சிலர் தூங்கிய நிலையிலேயே பல செயல்களைச் செய்துவிடுகின்றனர். இதை ஆங்கிலத்தில் 'somnambulism' என்பார்கள். தூக்கத்தில் என்ன செய்கின்றோம் என்பது தெரியாமலேயே அவர்களின் உடல் இயக்கம் நடைபெறுகிறது. எனவே, இவர்களைச் சட்டம் குற்றத்திற்குப் பொறுப்பாக்குவது இல்லை.

தூங்கிக்கொண்டிருந்த ஒருவர் திடீரென்று விழித்துக்கொள்ளுகிறார். ஒரு பயங்கரமான உருவம் ஒன்று அவர் கண்களுக்குத் தோன்றுகிறது. 'நீ யார்?' என்று அவர் கேட்கிறார். பதில் இல்லை. உடனே அருகில் கிடந்த கோடரியை எடுத்து அந்தப் பேய் உருவத்தைத் தாக்குகிறார். ஆனால், உண்மையில் அவர் தாக்கியது அருகிலே படுத்திருந்த மனைவியைத்தான்! மனைவி அதனால் மரணமடைகிறாள். 'என்ன செய்தோம்' என்ற தன்னுணர்வு இன்றி இது செய்யப்பட்டதால், தூக்கத்தில் இவ்வாறு செய்தவருக்கு நீதிமன்றம் விடுதலை அளித்தது.

சென்ற நூற்றாண்டில் இங்கிலாந்து நாட்டில் மக்நாட்டன் (McNaghten) என்பவர், அந் நாட்டின் முதன் மந்திரியாக இருந்த சர் ராபர்ட்டு பீல் (Sir Robert Peel) தம்மை இடைவிடாது துன்பப்படுத்துகிறார் என்ற 'மனப்பிராந்தியால்' உந்தப்பட்டு, ராபர்ட்டு

பீலக் கொலைசெய்யக் கருதினர். ஆனால், முதன் மந்திரியின் காரியதரிசியாக இருந்த டிரம்மாண்ட் (Drummond) என்பவரைத் தவறுதலாகக் கொன்றுவிட்டார். அவர் சித்த சுவாதீனம் இல்லாதவர் என்று தீர்மானித்து அவரை நீதிமன்றம் விடுதலை செய்தது. இந்த விடுதலை மக்களிடையே மிகுந்த பரபரப்பை ஏற்படுத்தியது. எனவே, 1843ஆம் ஆண்டு பதினைந்து நீதிபதிகள்கொண்ட குழு ஒன்று இங்கிலாந்தில் நியமிக்கப்பட்டது. மனநோய் உடையவர்களை எந்த அடிப்படையில் குற்றங்களுக்குப் பொறுப்பாக்குவது என்பது பற்றி ஆய்ந்து, அதற்கான விதிகளை அந்த நீதிக்குழுவினர் இயற்றினர். இந்த விதிகளின் அடிப்படையிலேயே இந்தியக் குற்ற இயல் சட்டத்தின் 84ஆம் பிரிவு ஆக்கப்பட்டிருக்கிறது.]

எனவே, மன நோயுடன் இருப்பவர்கள் அனைவரும் குற்றச் செயல்களுக்கான பொறுப்பிலிருந்து விலக்குப் பெறுவதில்லை. குற்றச் செயலைச் செய்தபொழுது அதைச் செய்தவரின் மனநிலை என்ன? மனநோயின் காரணமாக, அச் செயலின் தன்மையைத் தெரிந்து கொள்ளமுடியாத நிலையில் அவர் இருந்தாலோ, அல்லது அச் செயல் தீங்கானது, சட்ட விரோதமானது என்பதைத் தெரிந்துகொள்ள முடியாத நிலையில் இருந்தாலோமட்டுமே, அவருக்கு அந்தக் குற்றப் பொறுப்பிலிருந்து விலக்கு அளிக்கப்படுகிறது.

### 4) குடிவெறியிலுள்ளோர் (Intoxicants)

கள் குடித்தல் இன்று குற்றமான செயலாகும். மதியை மயக்கும் குடியால் விளையும் கேடுகள் எண்ணற்றவை. கள்ளுண்பது விரும்பத்தகாத பெரிய குற்றம். 'பேணுப் பெருங் குற்றம்' என்கிருர் வள்ளுவர்:

> 'நாணென்னும் நல்லாள் புறங்கொடுக்கும் கள்ளென்னும்
> பேணுப் பெருங்குற்றத் தார்க்கு.' —(குறள், 924)

பொருள் கொடுத்துக் கள்ளுண்டு மதிமயக்கம் பெற்றுத் தந்நிலை தடுமாறுகின்றனர், குடிப்பதற்கு அடிமைப்பட்டவர்கள். தந்நிலை மறந்து நிற்பதை, தம் உடம்பைத் தாம் அறியாத நிலையை, 'மெய்யறியாமை' என்கிறது அறநூல். பொருள் கொடுத்து மெய்யறியாமையைக் கொள்ளும் செயல், அச் செயல் இன்னதென்று அறியாத அறியாமையுடையதாகிறது:

> 'கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து
> மெய்யறி யாமை கொளல்.' (குறள், 925)

செயலறியாக் காரணத்தால் மெய்யறியா நிலையைப் பொருள் கொடுத்துப் பெறுகின்றனர் கள்ளுண்போர்! மெய்யறியா அந் நிலையில் மீண்டும் செயலறியாச் செயல்கள் பலவற்றைச் செய்துவிடுகின்றனர்! இவ்வாறு செய்யப்படும் செயலறியாச் செயல்கள் சில வேளைகளில் குற்றங்களாகலாம். இக் குற்றங்களுக்கு, 'மெய்யறியா' நிலையிலிருந்த குடிவெறியர்களைச் சட்டம் பொறுப்பாக்குகின்றதா என்பதைக் காண்போம்.

குடித்தலே ஒரு குற்றமாகும்பொழுது, குடியால் விளைந்த பிற குற்றச் செயல்களைச் சட்டம் மன்னிப்பது முறையன்று. மது அருந்தியதால் ஏற்பட்ட போதையின் பயனாகவே குற்றச் செயல்கள் செய்யப்பட்டிருக்கலாம். இருப்பினும், அக் குற்றச் செயல்களுக்கு மது அருந்தியவர் பொறுப்பாகின்றார்.

சட்டம் இவ்வாறு இல்லையெனில், பெருங் குற்றங்கள் செய்ய வேண்டும் என்று விரும்புவோர், போதை தரும் பொருள்களை உட்கொண்டுவிட்டு அக் குற்றங்களைச் செய்ய முயலலாம். இது, குற்றங்களை இழைத்தவர்கள், அதற்கான பொறுப்பிலிருந்து தப்புவதற்குச் சட்டமே வழிவகுத்துக் கொடுப்பதாகிவிடும்! எனவே, தம் செயலால் கள்வெறி கொண்டவர்களுக்குச் சட்டம் சிறிதும் பரிவு காட்டுவது இல்லை.

ஆனால், தன்னிச்சைக்கு மாறாகவோ, தான் அறியாதபடியோ போதையூட்டப்பெற்ற ஒருவர், அந்தப் போதை நிலையில் குற்றச் செயல்களைச் செய்துவிட்டால், சட்டம் அவர்மீது இரக்கம் காட்டுகிறது. குடிவெறியின் பயனாக அச் செயலின் தன்மையைத் தெரியாதவராய் அச் செயல் தீங்கானது என்றோ, சட்டத்திற்கு மாறானது என்றோ அறிய முடியாத மனநிலையில் அவர் இருந்திருக்க வேண்டும். இப்பொழுது அவர் அக் குற்றச் செயலுக்குப் பொறுப்பாவது இல்லை. (85ஆம் பிரிவு.)

ஒருவர் சோடா நீர் என்று நினைத்துத் தன் நண்பர் கொடுத்ததைக் குடிக்கின்றார். ஆனால், அது மதுநீராக இருக்கிறது அல்லது வெறியூட்டும் பொருள் கலந்த நீராக இருக்கிறது. இதனால், அதை அருந்தியவர் போதைக்கு ஆளாகின்றார். இப்பொழுது அவரடைந்த நிலைக்கு அவர் பொறுப்பல்லர். ஒருவருடைய விருப்பத்திற்கு மாறாக அவரை பலாத்காரமாகக் கட்டாயப்படுத்திப் பலர் சேர்ந்து குடிக்கவைக்கலாம். இதனாலும் அவர் குடிவெறி நிலையை அடையலாம். இதற்கும் அவர் பொறுப்பில்லாதவர். இவ்வாறு, தாமறியாமலோ, தம் விருப்பத்திற்கு மாறாகவோ போதையூட்டப்பெற்றவர்களுக்குமட்டும் சட்டம் சலுகை காட்டுகிறது. (The thing which

intoxicated him was administered to him without his knowledge or against his will.)

தாமறியாமலோ, தம் விருப்பத்திற்கு மாருகவோ வெறியூட்டப் பட்டவர்களின் மாறுபட்ட மனநிலையைச் சட்டம் கவனிக்கிறது. குற்றமான செயலைச் செய்யும்பொழுது, அச் செயலின் தன்மையைத் தெரியாத அல்லது அச்செயல் தீங்கானது என்பதைத் தெரியாத மன நிலை இருந்திருக்கவேண்டும். ஊட்டப்பட்ட வெறியின் பயனுய் இத்தகைய மனநிலை ஏற்பட்டிருந்தால்மட்டுமே, அவர்களைக் குற்றப் பொறுப்பிலிருந்து சட்டம் விலக்குகிறது.

இவ்வாறு, சட்டம் ஏழு வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்குக் குற்றப் பொறுப்பிலிருந்து முழுமையான விலக்களிக்கிறது; ஏழு வயதுக்கு மேற்பட்ட, ஆனல், பன்னிரண்டு வயதுக்குக் குறைந்த சிறுவர்களுக்குத் தம் நடத்தையின் தன்மையையும் விளைவையும் புரிந்துகொள்ளும் அறிவுத்திறன் இருந்ததா என்பதை ஆய்ந்து, அவ்வாறு இல்லையெனில்மட்டும் குற்ற விலக்களிக்கிறது. உள நோயால் பீடிக்கப்பட்டவர்களையும், தாமறியாமலோ, தம் இச்சைக்கு மாருகவோ வெறியூட்டப்பெற்றவர்களையும் குறிப்பிட்ட செயல் களைச் செய்கையில் அச் செயல்களின் தன்மையையோ, அவை தீங்கானவை என்பதையோ புரிந்துகொள்ளும் மனநிலை அவர் களுக்கு இருந்ததா என்பதைக் கண்டு, அவ்வாறு இல்லையெனில் மட்டும், குற்றப் பொறுப்பிலிருந்து விலக்குகிறது.

# 15. குற்றமாகாச் சூழ்நிலைகள்

## (Acts not amounting to Offence)

எதிர்பாரா விளைவு—சட்டப்படியான கடமையைச் செய்தல்—நீதி முறைச் செயல்கள்—நீதிமன்ற ஆணைகளை நிறைவேற்றுதல்—சட்ட இசைவான செயல்கள்—தவறுதலால் விளையும் செயல்கள்—தவிர்க்க முடியாத செயல்கள்—இசைவு பெற்ற செயல்கள்--அச்சுறுத்தலுக்கு அஞ்சிச் செய்யும் செயல்கள்—அற்பமான தீங்குகள் குற்றங்களாகக் கருதப் படுவதில்லை.

குற்றமான செயல்களைச் செய்பவர்களின் நிலையைப் பொறுத்துச் சட்டம் அவர்களைக் குற்றப் பொறுப்பிலிருந்து விலக்கும் விவரங் களைக் கண்டோம். இனி, எந்தெந்தச் சூழ்நிலைகளில் ஒரு செயல் குற்றம் ஆவதில்லை என்று ஆராய்வோம்.

### (1) எதிர்பாரா விளைவு (Accident)

ஒருவர் கோடரி ஒன்றினல் மரத்தை வெட்டிக்கொண்டிருக் கிருர். அந்தக் கோடரியின் இரும்புத் தலைப்பு, கைப்பிடியினின்று பிரிந்து சென்று, அருகில் நின்றவரின் மண்டையில் பலமாக மோதி விட்டது. அதனல் அருகில் நின்றவர் காயமுற்று இறந்துவிடுகிருர். இப்பொழுது, கோடரியால் மரத்தை வெட்டிக்கொண்டிருந்தவர்மீது கொலைக்குற்றம் சாட்டலாமா?

அருகில் நின்றவரின் மரணத்தை, மரத்தை வெட்டிக்கொண் டிருந்தவர் விரும்பவில்லை. மரத்தை வெட்டியது சட்ட இசைவான செயல். அதை அவர் கவனத்துடன்தான் செய்துகொண்டிருந்தார். கோடரியின் தலைப்பு கைப்பிடியிலிருந்து கழன்று சென்றது, வெட்டிக் கொண்டிருந்தவரின் கவனக் குறைவாலன்று. துரதிருஷ்டவசமாக நிகழ்ந்த செயல் இது. எனவே, மரவெட்டியைக் கொலைக்குற்றத் திற்கு ஆளாக்குவது நியாயம் அன்று. சட்டமும் இந் நிகழ்வை

எதிர்பாரா விளைவு (accident) என்று கொள்ளுகிறதே தவிர, குற்ற மாகக் கொள்வதில்லை. மரவெட்டி எந்தக் குற்றத்திற்கும் ஆளாவது இல்லை.

எதிர்பாரா விளைவை, சாதாரணமாக 'விபத்து' என்று குறிப்பிடுகின்றோம். இயற்கையில் நிகழும் இடர்களையும் 'விபத்து' என்ற சொல் குறிக்கின்றது. இடி விழுந்து மரணமேற்பட்டால் அதையும் 'விபத்து' என்கிறோம். மனிதனின் செயல்களால் விளையும், ஆனால், எதிர்பாராதபடி விளையும் இடர்கள்பற்றியே இங்கு நாம் ஆராய்கிறோம். எனவே, அவைகளை 'எதிர்பாரா விளைவுகள்' என்று கூறுதல் பொருந்தும்.

அதிகமாக மக்கள் நடமாட்டம் உள்ள வீதியில் ஐம்பது மைல் வேகத்தில் ஒருவர் மோட்டாரை ஓட்டிச் செல்வது கவனமின்மைச் செயலாகும். இவ்வாறு, அதிக வேகமாக மோட்டாரை ஓட்டியதால், மோட்டார் ஒருவர்மீது மோதி மரணத்தை விளைவிக்கிறது என வைப்போம். இதை எதிர்பாராத விளைவு எனச் சட்டம் ஏற்பதில்லை. இது கவனமின்மையால் (negligence) விளைந்த குற்றமாகும்.

மோட்டாரை ஓட்டுவதற்கு லைசென்சு (driving licence) பெறாத ஒருவர் ஒரு மோட்டாரை ஓட்டிச் சென்று தெருவில் நடந்து சென்றவர்மீது மோதிக் காயப்படுத்திவிட்டால், அதுவும் எதிர்பாரா விளைவு ஆகாது. ஏனெனில், லைசென்சு பெறாத ஒருவர் மோட்டார் காரை ஓட்டிச் சென்றது சட்ட விரோதமான (unlawful) செயலாகும்.

என்னுடைய பகைவர் வீதியில் நடந்து செல்லுகிறார். நான் அவரைக் காயம் விளைவிக்க வேண்டும் என்ற கெட்ட எண்ணத்துடன் என் காரை அவர்மீது மோதும்படி ஓட்டிக் காயத்தை விளைவித்தேன் என்றால், இதுவும் எதிர்பாரா விளைவு ஆகாது. ஏனெனில், நான் அவர்மீது மோதும்படி செலுத்தியது குற்ற எண்ணத்தோடு (criminal intention) கூடிய செயலாகும்.

தன் பகைவரைக் கொல்லவேண்டுமென்று ஒருவர் அவரை நோக்கித் துப்பாக்கியால் சுடுகின்றார். ஆனால், குண்டு குறிதவறிப் போய் இன்னொருவர்மீது பாய்ந்து அவருக்கு மரணத்தை விளைவிக்கிறது. சாதாரணமாகக் கூறினால், இது எதிர்பாராத விளைவு எனலாம். ஆனால், சட்டம் இதை எதிர்பாராத விளைவாகக் கொள்ளுவதில்லை. ஏனெனில், ஒருவரைக் கொல்லவேண்டும் என்ற கருத்துடன் சுட்ட செயலே குற்றமான செயலாகும். ஆகையால், இந்தக் கொலைக்குற்றம் சுட்டவரைச் சேருகிறது.

எனவே, 'எதிர்பாரா விளைவு' (accident) என்று ஒரு செயலைச் சட்டம் கொள்ளவேண்டுமெனில், கீழ்க்கண்ட கூறுகள் இருக்க வேண்டும் :

(i) சட்டப்படியான செயலாக இருக்க வேண்டும் ;

(ii) அது சட்டப்படியான முறையில் செய்யப்பட வேண்டும் ;

(iii) போதிய கவனத்துடன் அது செய்யப்பட வேண்டும் ;

(iv) தீய எண்ணம் ஏதும் இன்றிச் செய்யப்பட வேண்டும்.

இப்படிப்பட்ட ஒரு செயல் செய்யப்படும்பொழுது, எதிர்பாராத விதமாக ஏற்படும் விளைவே 'எதிர்பாரா விளைவா'கிறது.

இக் கொள்கையைக் குற்றவியல் சட்டத்தின் 80ஆம் பிரிவு கூறுகிறது.

சட்ட இசைவான செயலை, சட்ட இசைவான முறையில், போதிய கவனத்துடனும் விழிப்புடனும், எவ்விதக் குற்றக் கருத்தும் எண்ணமும் இன்றிச் செய்யும்பொழுது தற்செயலாகவோ, துரதிருஷ்டவசமாகவோ விளையும் செயலே 'எதிர்பாரா விளைவா'கும். அது குற்றமாவதில்லை. (80ஆம் பிரிவு).

இவ்வாறு, மனிதன் கருத்திற்கும் கவனத்திற்கும் அப்பாற்பட்ட விளைவுகளுக்குச் சட்டம் யாரையும் பொறுப்பாக்குவதில்லை.

(2) **சட்டப்படியான கடமையைச் செய்தல்** (Act done by a person bound by law)

சட்டப்படியான கடமைகளைச் செய்வது குற்றமாகாது.

போலீசார் குற்றவாளியைக் கைதுசெய்வது குற்றமாவதில்லை.

சட்ட விரோதமான கூட்டத்தினர்மீது சுடும்படி போலீசாருக்கு உத்தரவிடப்படுகிறது. அந்த உத்தரவின்படி அவர்கள் கூட்டத்தினரை நோக்கிச் சுடுகின்றனர். கூட்டத்தில் இருந்தவர்களின் மரணத்திற்குச் சுட்ட போலீசார் பொறுப்பாவதில்லை. ஏனெனில், சட்டப்படியான கடமைகளை நிறைவேற்றுவதற்காகவே போலீசார் சுட்டனர்.

**கடமையைச் செய்வதில் தவறு ஏற்படுதல்**

கடமை என்று ஒன்றை நினைத்துச் செய்கையில் தவறு ஏற்படலாம்.

முருகன் என்பவரைக் கைதுசெய்யுமாறு நீதிமன்றம் உத்தர விட்டிருக்கிறது. அந்தக் கைதாணையை (Warrant of arrest) நிறை வேற்றும் போலீசு அதிகாரி முருகன் என்பவர் யார் என்று விசாரித்து அதன்பின் ஒருவரைக் கைதுசெய்கிறார். அவ்வாறு கைதுசெய்யப் பட்டவரின் பெயரும் முருகன்தான். ஆனால், கைதாணையில் குறிப் பிட்ட முருகன் வேறு ஒருவர்.

இவ்வாறு, கைதாணையில் குறிப்பிடப்படாத ஒருவர் கைதாகி விட்டார். எனினும், இது குற்றச் செயல் ஆவதில்லை. ஏனெனில், போலீசு அதிகாரி விசாரித்து, கைதாணையில் காட்டப்பட்டவரைத் தான் கைதுசெய்கிறோம் என்று நேர்மையாக நம்பி (believing in good faith) இன்னொருவரைக் கைது செய்கிறார். இந்தத் தவறு, கடமையை நல்லெண்ணத்தோடு செய்வதில் விளைந்ததாகும். எனவே, இது குற்றமன்று.

### (3) நீதிமுறைச் செயல்கள் (Acts done when acting judicially)

நீதிமுறை நிர்வாகம் திறம்பட நடைபெற வேண்டும் எனில், நீதிபதிகள் எவ்வித அச்சமும் இன்றித் தங்கள் கடமைகளைச் செய்தல் வேண்டும். எவ்வாற்றானும் நடுநிலை தவறாது முறை செய்வதில் முனைந்து நிற்றல் வேண்டும். தங்கள் மனத்திலே நீதியென்று உணர்ந்ததை அவர்கள் கூறி, நியாயம் வழங்கவேண்டும்.

எனவே, நீதிபதிகள் அவர்கள் கடமையை ஆற்றுவதற்குச் சட்டம் பூரணப் பாதுகாப்பளிக்கிறது. நீதிமுறைச் செயல் (judicial act) எதுவும் குற்றப் பொறுப்பிற்கு உட்படுவதில்லை.

திருடனை நீதிபதி சிறைத்தண்டனை அளித்துத் தண்டிக்கின்றார். சாதாரணமாக ஒருவரை மற்றொருவர் சிறையிலடைப்பது குற்றமான தாகும். ஆனால், குற்றம் செய்தவர் என்று தீர்மானிக்கப்பெற்ற ஒருவரை நீதிபதி சிறையிலடைக்க உத்தரவிடுவது குற்றச் செயல் ஆவதில்லை. அதுமட்டுமன்று; சிறைத்தண்டனை பெற்றவர், மேல் நீதிமன்றத்திற்கு மேல்முறையீடு (appeal) செய்கின்றார். மேல் நீதிமன்றம் அந்தச் சிறைத்தண்டனையை ரத்து செய்து அவரை விடுதலை செய்யலாம். முதல் நீதிமன்றத்தில் சிறைத் தண்டனை பெற்றவர் குற்றவாளியல்லர் என்று மேல்நீதிமன்றம் தீர்ப்பளிக்க லாம். இதிலிருந்து முதல் நீதிபதி அளித்த சிறைத் தண்டனை சரியன்று என்ற முடிவு ஏற்படுகிறது. உடனே, முதல் நீதிபதியின் மீது குற்றம் சாட்ட முடியுமா? முறைதவறி ஒருவரைச் சிறைக்கு அனுப்பிவிட்டார் என்று அவர்மீது குற்ற வழக்கிட (prosecution) முடியுமா? முடியாது. நீதிமுறையான செயல்கள் எதுவும் குற்றம் ஆவதில்லை.

வழக்குகளை விசாரித்துத் தீர்ப்புக் கூறும் நீதிமன்ற நடுவர்களைத் தவிர, நீதிமுறை அதிகாரம் பெற்ற வேறு அதிகாரிகளும் உள்ளனர். மாஜிஸ்ட்ரேட் (Magistrate), மாவட்டக் கலெக்டர் (District Collector), உதவிக் கலெக்டர்போன்றவர்களும் சில அலுவல்களை நீதிமுறைப்படி (judicial) செய்ய வேண்டியவர்களாயுள்ளனர். அவர்கள் செயல்களுக்கும் இந்தப் பாதுகாப்பு உண்டு.

நீதிமுறையாக அதிகாரத்தைப் பயன்படுத்துவோர் அனைவரின் நீதிமுறைச் செயல்களுக்கும் குற்றப் பொறுப்பிலிருந்து விலக்கு உண்டு.

நீதிபதியோ, நீதிமுறை அதிகாரம் உடைய அதிகாரிகளோ செய்யும் எல்லாச் செயல்களுக்கும் சட்டம் பாதுகாப்புஅளிக்கவில்லை. நீதிமுறை அதிகாரத்தின்படி இயங்கும்பொழுது செய்யப்படும் நீதிமுறைச் செயல்களுக்குமட்டுமே குற்ற விலக்கு உண்டு; வேறு செயல்களுக்குப் பாதுகாப்பு இல்லை.

நீதிபதி ஒருவர் தம் வேலைக்காரனை அடித்துவிட்டார் என்றாலோ, கவனமின்மையாகக் காரை ஓட்டி இன்னொருவர்மீது காரை மோதிவிட்டார் என்றாலோ, அதற்கான பொறுப்பு அவருக்கு உண்டு. ஏனெனில், இச் செயல்கள் அவரது நீதிமுறையான அலுவலைச் சேர்ந்ததன்று. சட்டம் அளிக்கும் பாதுகாப்பு பதவிக்கான பாதுகாப்பேயன்றி, நபர்களுக்கான பாதுகாப்பன்று.

அதிகாரத்திற்கு மீறிய செயல் நன்னம்பிக்கையுடன் செய்யப்பட்டால் பாதுகாப்பு உண்டு. நீதிபதி ஒருவர் தமது அதிகார வரம்பை மீறி ஒன்றைச் செய்துவிடலாம். இவ்வாறு அதிகார வரம்பை மீறிய செயலை, தம் அதிகாரத்துக்குட்பட்ட செயல்கள்தாம் என்ற நன்னம்பிக்கையில் (believing in good faith) அவர் செய்திருந்தால், அதற்கும் சட்டம் பாதுகாப்பளிக்கிறது. ஆனால், ஒரு செயல் அதிகாரம் மீறியதுதான் என்பதைத் தெளிவாகத் தெரிந்திருந்தும், அதை அவர் செய்தால், குற்றப் பொறுப்பிலிருந்து விலக்கு இல்லை.

இவ்வாறு, நீதிபதிகள் தங்களுக்குரிய அதிகாரத்தின்படியோ, அல்லது தங்களுக்கு அதிகாரம் இருக்கிறதென்ற நன்னம்பிக்கையுடனே செய்யும் நீதிமுறைச் செயல்கள் எதுவும் குற்றமாவதில்லை.

(Nothing is an offence which is done by a judge when acting judicially in the exercise of any power which is, or which in good faith, he believes to be, given to him by law —Sec. 77, I. P. C.)

## (4) நீதிமன்ற உத்தரவுகளை நிறைவேற்றுதல்

நீதிமன்றங்களின் தீர்ப்புகளும் உத்தரவுகளும் நிறைவேற்றப் படுகின்றன. இவ்வாறு நிறைவேற்றப்படும் வாயிலாகச் செய்யப் படும் செயல்களும் குற்றங்கள் ஆவதில்லை.

நீதிமன்றத் தீர்ப்புப்படி மரணதண்டனை பெற்ற கைதியைச் சிறை அதிகாரி தூக்கிலிடுகின்றார். குற்றவாளியைச் சிறை அதி காரி தூக்கிலிட்டுக் கொன்ற செயல் 'கொலைச்செயல்' ஆவதில்லை. ஏனெனில், அது நீதிமன்றத்தின் உத்தரவுப்படியான செயலாகும். நீதிமன்ற உத்தரவின்படி கோர்ட் அமீனா ஒரு சொத்தை ஜப்தி செய்கின்றார்; அல்லது, ஒருவரைக் கைதுசெய்கின்றார். கோர்ட்டின் உத்தரவு பெற்று, ஒருவர் வீட்டை அதிகாரிகள் சோதனையிடு கின்றனர். இவையெல்லாம் குற்றங்கள் ஆவதில்லை.

சில வேளைகளில் நீதிமன்றம் பிறப்பித்த உத்தரவு அதன் அதிகார வரம்பிற்குப் புறம்பானதாக இருக்கலாம். இருப்பினும், அந்த உத்தரவை நிறைவேற்றுபவர், அது அந்த நீதிமன்றத்தின் அதிகாரவரம்பிற்கு உட்பட்ட உத்தரவுதான் என்ற நன்னம்பிக்கை யோடு அதை நிறைவேற்றினார் எனில், அவர் எந்தக் குற்றத்திற்கும் ஆளாவதில்லை.

இவ்வாறு, நீதிபதிகளையும், நீதிமுறைக் கடமைகளைச் செய்யும் அதிகாரிகளையும், நீதிமன்ற உத்தரவுகளை நிறைவேற்றுபவர்களையும் சட்டம் பாதுகாத்துக் குற்றப் பொறுப்பிலிருந்து விலக்குகிறது. (குற்ற இயல் சட்டம் 78ஆம் பிரிவு).

## (5) சட்ட இசைவான செயல்கள் (Acts justified by law)

குற்றமாகத் தோன்றும் சில செயல்களை நாம் செய்வதற்குச் சட்டம் அனுமதிக்கின்றது.

திருடுதல், கொடுங்காயம் விளைத்தல் முதலிய குற்றங்கள் செய்தவர்களைப் பொதுமக்களில் எவரும் கைது செய்யலாம்; இதைச் சட்டம் அனுமதிக்கின்றது. நமக்குக் காயம் விளைவிக்க வருபவரிடமிருந்து தப்புவதற்கென நாம் அவருக்குக் காயத்தை விளைவிக்கலாம். பள்ளி ஆசிரியர் மாணவர்களின் ஒழுங்கை நிலை நிறுத்துவதற்கென்று, ஒழுங்கு தவறிய மாணவனைத் தண்டிக்கலாம்; அடித்துத் திருத்தலாம். இதுபோன்று சட்டம் அனுமதிக்கும் செயல்களை நாம் செய்தால் அவை குற்றங்கள் ஆவதில்லை.

சட்டம் அனுமதிக்கும் செயல்கள் என்ற நன்னம்பிக்கையோடு நாம் செய்யும் செயல்களும் குற்றங்களாகா. விலையுயர்ந்த பொருள்

களை வைத்துக்கொண்டிருந்த ஒருவனைப் போலீசுக்காரர் திருடன் என்று சந்தேகப்படுகின்றார். அந்தப் பொருள்களை அவன் திருடியிருப்பான் என்ற சந்தேகத்தால், அவனைக் கைது செய்து போலீசு நிலையத்திற்கு இட்டுச் செல்லுகிறார். மேலும், விசாரணை நடத்தியதில் அவன் திருடன் அல்லன் என்று தெரியவருகிறது. இப்பொழுது, போலீசு அதிகாரி காரணம் இல்லாமல் கைது செய்துவிட்டார் என்று அவர்மீது குற்றம் சாட்டமுடியாது. ஏனெனில், அவரது சந்தேகம் உண்மையாகவே ஏற்பட்டதாகும். அந் நிலையில் போலீசு அதிகாரி அவனைக் கைது செய்தது சட்டம் அனுமதிக்கும் செயலாகும். அவருடைய சந்தேகம் உண்மையன்று என்று தெரிந்ததும் அவனைப் போலீசு அதிகாரி விட்டுவிடுகின்றார். இவ்வாறு, சட்டம் அனுமதிக்கும் செயல் என்ற நன்னம்பிக்கையுடன் செய்யும் செயல்களும் குற்றங்கள் ஆவதில்லை.

**(6) தவறுதலால் விளையும் செயல்கள்** (Acts done owing to mistake of facts)

வாழ்வில் நாம் எல்லோரும் எதையும், எப்பொழுதும் சரியாகவே செய்கின்றோம் என்று கூற இயலாது. அறியாமையால் இழைக்கும் பிழைகளைத் தவிர, தெரியாமையால் இழைக்கும் தவறுகளும் இருக்கின்றன.

ஒன்றை நினைத்து இன்னொன்று செய்யப்பட்டால், அது தவறுதலாகச் செய்யப்பட்டது என்று கூறுகிறோம். இது பழுதையைப் பாம்பு என்று கருதுதல்போன்ற செயல்.

இரவில் நம் வீட்டில் புகுந்து குற்றம் புரிய வருபவர்களுக்கு நாம் மரணங்கூட விளைவிக்கலாம். இதைச் சட்டம் அனுமதிக்கிறது. நள்ளிரவில், இருட்டில், என் வீட்டினுள் சந்தேகம் தோன்றும் முறையில் நுழைந்த ஓர் உருவத்தைத் திருடன் என்று நினைத்துத் துப்பாக்கியால் சுட்டுவிட்டேன். ஆனால், அந்த உருவம் என் வேலையாள்தான்! நான் சுட்டதன் பயனாய் வேலையாள் இறந்துவிட்டான்; எனினும், நான் கொலைக்குற்றத்திற்கு ஆளாவது இல்லை. ஏனெனில், இது உண்மையான தவறுதலின் காரணமாக நிகழ்ந்த செயல்.

சீனி என்று நினைத்து, சீனிக் குப்பிக்கு அருகில் வைக்கப்பட்டிருந்த பூச்சி மருந்துப் பொடியைப் பாலில் கலந்து வேலையாள் தன் எசமானருக்குக் கொடுத்துவிடுகிறான். இதனால் எசமானர் இறந்துவிட்டால், வேலையாளைக் கொலைக்குற்றத்திற்கு ஆளாக்குவதில்லை.

இந்த உதாரணத்தைச் சிறிது மாற்றிப் பார்ப்போம். வேலையாள் பூச்சி மருந்து என்று தெரிந்தேதான் பாலில் கலந்து கொடுக்கிறான். ஆனால், பூச்சி மருந்து ஆளைக் கொன்றுவிடும் என்று அவன் நினைக்கவில்லை. இந்த அறியாமையின் காரணமாகப் பூச்சி மருந்தைப் பாலில் கலந்து எசமானருக்குக் கொடுக்கிறான். அதைக் குடித்த எசமானர் இறந்துவிடுகிறார். இப்பொழுது, வேலையாள், 'பூச்சி மருந்து மரணத்தை விளைவிக்கும் என்று எனக்குத் தெரியாது; எனவே, நான் கொலைக்குற்றத்திற்குப் பொறுப்பல்லன்' என்று வாதாடினால் சட்டம் ஏற்குமா? ஏற்காது. ஏன்?

### அறியாமை வேறு, தெரியாமை வேறு

அறியாமை என்பது ஒன்று ; தெரியாமை என்பது மற்றொன்று. பூச்சி மருந்து ஆளையும் கொல்லும் என்பதை வேலையாள் அறியாமல் இருந்திருக்கலாம். ஆனால், சாதாரண அறிவுள்ள எவரும் இதை அறிந்திருக்க வேண்டும். இதை அறியாதிருந்தது வேலையாளின் குறையேயன்றி வேறில்லை. இந்த அறியாமையைக் காரணங்காட்டி வேலையாள் குற்றப் பொறுப்பிலிருந்து தப்ப முடியாது. ஆனால், பூச்சி மருந்தைச் சீனி என்று நினைத்தது தெரியாமையால் விளைந்தது. பாலில் கலக்கப்பட்ட பொடி, பூச்சி மருந்து என்பதே வேலையாளுக்குத் தெரியாது ; அது சீனி என்று நினைத்தே அதைக் கலந்தான். எனவே, வேலையாள் நினைத்த செயல் ஒன்று, செய்த செயல் மற்றொன்று. சீனியைக் கலப்பதாக நினைத்துக் கலந்தான் ; ஆனால், கலக்கப்பட்டது பூச்சி மருந்து. பூச்சி மருந்து என்று தெரிந்ததும், அதைக் கலந்த செயல் ஒன்றை நினைத்து மற்றொன்றைச் செய்வது ஆகாது. அவன் நினைத்ததைத் தான் செய்தான். அச் செயலின் விளைவுபற்றி அவன் நினைத்தது ஒன்று, நடந்தது மற்றொன்று. எனவே, சீனியென்று நினைத்துப் பூச்சி மருந்தைப் பாலில் கலந்தது தெரியாமை; பூச்சி மருந்து ஆளைக் கொல்லாது என்று நினைத்துப் பாலில் கலந்தது அறியாமை. தெரியாமையைத் 'தவறுதலா'கச் சட்டம் கொள்ளுகிறது ; அறியாமையைத் 'தவறுதல்' என்று சட்டம் ஏற்பதில்லை. தெரியாமையைச் சட்டம் மன்னிக்கின்றது; அறியாமையைச் சட்டம் மன்னிப்பது இல்லை. (While genuine mistake as to circumstance is a defence, genuine mistake as to the general way that things behave is only a defence in so far as such mistake would be shared by reasonable men—Fitzgerald.)

### 'தவறுதல்' (mistake of fact) என்று எதைக் கூறுகிறோம்?

'நான் தவறுதலாக எண்ணிச் செய்துவிட்டேன். அதைக் குற்றக் கருத்துடன் செய்யவில்லை' என்று ஒருவர் வாதாடினால்

அதன் பொருள் என்ன? தவறுதலாக அவர் எண்ணியது உண்மையாக இருந்தால், அது குற்றச் செயல் அன்று என்பதுதான். பூச்சி மருந்தைப் பாலில் கலந்தவர் அதைச் சீனி என்று தவருக நினைத்தார். அந்தப் பூச்சி மருந்து உண்மையிலேயே சீனியாக இருந்தால், அவர் அதைப் பாலில் கலந்து கொடுத்த செயல் குற்றமாவதில்லை. இம்மாதிரியே, வேலையாளைச் சுட்டுக் கொன்ற செயலிலும், வேலையாளை நான் திருடன் என்று தவறுதலாக நினைத்தேன். இரவில் வீடு நுழைந்தது திருடனுக இருந்திருந்தால், அவனைச் சுட்டுக் கொன்றது கொலைக்குற்றமாவதில்லை.

இவ்வாறு, தவருக ஒன்றை எண்ணிச் செயல் புரிகிரேம். அந்தத் தவருன எண்ணம் தவருக இன்றி உண்மையாக இருந்துவிட்டால், நம் செயல் குற்றமாகக் கூடாது. இந்த வகையில் நம் தவறு இருந்தால்தான் அதைச் சட்டம் ஏற்றுக்கொள்ளுகிறது.

‘நான் இராமனைக் கொல்ல வேண்டும் என்று சுட்டேன்; ஆனுல், அது முருகன்மீது பாய்ந்து, அவன் இறந்துவிட்டான். எனவே, முருகன் இறந்தது தவறுதலால் விளைந்தது. இதனுல் நான் குற்றவாளி அல்லன்’ என்று ஒருவன் வாதாட முடியாது. ஏனெனில், அவன் எண்ணப்படி இராமனைக் கொன்றிருந்தாலும் அதுவும் கொலைக்குற்றமேயாகும்.

‘நான் கோபாலனுடைய வீட்டில் நுழைந்து திருட எண்ணினேன். தெரியாமல் கோவிந்தன் வீட்டில் நுழைந்துவிட்டேன்’ என்று ஒரு திருடன் சமாதானம் கூறமுடியாது. ஏனெனில், கோவிந்தன் வீட்டில் திருடுவதும் குற்றம்தான். இந்த உதாரணங்களில், தவறுதலாக எண்ணியது உண்மையாக மாறினுலும், அச் செயல்கள் குற்றங்களேயாகின்றன; ஆதலால், ‘தவறுதல்’ (mistake of fact) என்ற சமாதானம் கூறிக் குற்றப் பொறுப்பிலிருந்து ஒருவர் தப்ப முடியாது.

எனவே, ஒரு குற்றமான செயல் தவறுதலால் விளைந்தது என்று சட்டம் ஏற்றுக்கொள்ளுவதற்குரிய முக்கியமான நிபந்தனை, தவறுதலாக எது கருதப்பட்டதோ அது உண்மையாக இருந்தால், செய்யப்பட்ட காரியம் குற்றமாக இருத்தல் கூடாது என்பதுதான். இதுவே உண்மையான தவற்றுக்கு உரைகல்லாகும்.

இரண்டாவதாக, அந்தத் தவறு பகுத்தறிவுக்கு இசைந்ததாக இருத்தல் வேண்டும். வெள்ளை நிறத்தோடு சீனி போன்றிருந்த பூச்சி மருந்தைச் சீனி என்று ஒருவர் தவறுதலாக நினைக்கலாம். இரவில் வீட்டிற்குள் எவருக்கும் தெரியாமல் நுழைந்தவரைத் திருடன் என்று ஒருவர் நினைப்பது இயல்பானது.

ஒரு பெண்ணுக்குப் பேய் பிடித்திருப்பதாக எண்ணி, மாந்திரீக முறையில் பேயை விரட்டக் கருதினர். பேய் பிடித்த பெண்ணைக் கம்பினுல் நன்ருக அடித்து, பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கம்பிகளினுல் உடம்பெல்லாம் சூடுகள் போட்டு, மிளகாய் வற்றலை நெருப்பில் போட்ட புகையைப் பெண்ணின் முகத்திலே நீண்டநேரம் காட்டி, இரண்டு நாட்கள் உணவு எதுவும் கொடுக்காமல் மந்திரவாதி போட்டுவிட்டான். அதன் பலனுக அந்தப் பெண் மாண்டாள். இப்போது அந்த மந்திரவாதியைத் தண்டிப்பதா இல்லையா? அவன் கொலைக் குற்றத்திற்குப் பொறுப்பாளியாவன். பேயை விரட்டுவதற்கென்று ஒரு பெண்ணைச் சித்திரவதை செய்வதைத் 'தவறுதல்' என்று கொள்ளுவது பகுத்தறிவுக்கு உகந்ததன்று. எனவே, மந்திரவாதிக்குக் கொலைக் குற்றத்திற்கான தண்டனை அளிக்கப்படுகிறது.

தவற்ருல் நேர்ந்த செயல் ஒழுக்கத்திற்கு உகந்ததாக இருத்தல் வேண்டும். பதினெட்டு வயதிற்குக் குறைந்த ஒரு பெண்ணை அவளுடைய பெற்ரேர்களின் பாதுகாப்பிலிருந்து அகற்றிச் செல்வது குற்றமான செயலாகும். ஒரு பெண்ணைக் கடத்திச் சென்றவன், 'அந்தப் பெண்ணின் வயதை இருபது என்று தவறுதலாக எண்ணிவிட்டேன்' என்று கூறினுல், அதைச் சட்டம் ஏற்றுக் கொள்ளுவதில்லை. ஏனெனில், கடத்திச் செல்லுதலே ஒழுக்கக் கேடான (immoral) செயல். இவ்வாறு ஒழுக்கத்திற்கு மாருன செயலைச் செய்தவன் 'தவறுதல்' என்ற பெயரால் குற்றப் பொறுப்பிலிருந்து தப்ப முடியாது. இவ்வாறு, 'R.V. Prince (1875) L. R. 2-C.C.R. 154' என்ற ஆங்கில நாட்டு வழக்கில் தீர்ப்பளிக்கப் பட்டது. இதுவே நம் நாட்டில் ஏற்கப்பட்ட விதியுமாகும்.

**சட்டத்தை அறியாமை 'தவறுதல்' ஆவதில்லை**

'சட்டத்தை அறியாமையைச் சட்டம் மன்னிப்பது இல்லை' என்பது சட்டத்தின் அடிப்படை விதியாகும். இதை ஆங்கிலத்தில் 'Ignorance of Law is no excuse' என்பார்கள். லத்தீன் மொழியில் இதைக் கூறும் சூத்திரம் 'Ignorantia Juris neminem excusat' என்பதாகும்.

'நான் செய்த செயல் சட்டப்படி குற்றமானது என்று எனக்குத் தெரியாது; ஆதலால், அதைச் செய்துவிட்டேன். சட்டம் எனக்குத் தெரியாதாகையால் நான் குற்றவாளி அல்லன்' என்று ஒருவர் வாதாடினுல், நீதிமன்றம் அதை ஏற்றுக்கொள்ளாது. சட்டத்தை அறியாமையைக் காரணமாக ஏற்றுக்கொண்டு குற்றப் பொறுப்பிலிருந்து விலக்குவது என்று ஏற்பட்டால், நீதி வழங்குவது

இயலாததாகிவிடும்; எந்தக் குற்றவாளியையும் தண்டிப்பது முடியாது என்ற நிலை ஏற்பட்டுவிடும். குற்றம் புரிந்தவர்கள் பலரும் தங்களுக்குச் சட்டம் தெரியாது என்ற காரணத்தைக் காட்டித் தப்பிக்க முயலுவார்கள். 'சட்டம் தெரியாது' என்று கூறுபவர்களுக்கு உண்மையிலேயே தெரியுமா தெரியாதா என்பதைக் கண்டுபிடிப்பதும் எளிதன்று. எனவே, 'எல்லோரும் சட்டம் தெரிந்தவர்களாகவே கருதப்படுகின்றனர்' (Everyone is presumed to know the law) என்ற அடிப்படையிலேதான் சட்டங்கள் நடைமுறைப் படுத்தப்படுகின்றன.

உண்மையிலேயே ஒருவருக்குச் சட்டம் தெரியாமல் இருக்கலாம். இருப்பினும், சட்டத்தை மீறிக் குற்றம் இழைத்தவர் சட்டத்தை அறியவில்லை என்ற காரணத்தைக் கூறிக் குற்றப் பொறுப்பிலிருந்து விடுபெறுவதற்கில்லை.

மேலே கூறப்பட்ட விதிகளின் அடிப்படைக் கொள்கையை இந்தியக் குற்றவியல் சட்டத்தின் 79ஆம் பிரிவு கூறுகின்றது:

'Nothing is an offence which is done by any person who is justified by law, or who, by reason of mistake of fact and not by reason of mistake of law, in good faith, believes himself to be justified by law, in doing it.'

(7) **தவிர்க்க முடியாத செயல்கள்** (Acts done under necessity)

'ஆபத்திற்குப் பாவம் இல்லை' என்பது பழமொழி. ஓர் ஆபத்தில் இருப்பவர் அதைத் தடுப்பதற்குச் செய்யும் செயல்களால் பாவம் விளைவதில்லை என்ற கொள்கை நடைமுறை அனுபவத்தின் அடிப்படையில் எழுவதாகும். சட்டமும் இக் கொள்கையை ஓரளவு ஏற்றுக்கொள்ளுகிறது.

நமது உடலுக்கு அல்லது பொருளுக்கு ஆபத்து விளையவிருக்கும் இக்கட்டான நிலைமை ஏற்படலாம். இந்த நிலையில், அந்த ஆபத்தைத் தவிர்ப்பதற்கெனச் செய்யப்படும் செயல்களைக் குற்றங்கள் எனச் சட்டம் கருதுவதில்லை.

ஒரு வீடு தீப்பற்றி எரிகின்றது. அந்தத் தெரு முழுவதும் தீ பரவிவிடக்கூடாது என்பதற்காகப் பற்றி எரியும் வீட்டுக்கு அடுத்திருந்த வீட்டின் கூரைகளைச் சிலர் பிரித்துப்போடுகின்றனர். இப்பொழுது, அடுத்திருந்த வீடுகளின் கூரைகளைப் பிரித்து எறிந்தது தீ பரவுவதைத் தடுப்பதற்காகத்தான். அந்தத் தெரு முழுவதும் தீ பரவினால் பெருங்கேடு விளைகிறது. இந்தப் பெருங்கேட்டைத் தடுப்

பதற்கெனச் சில வீடுகளின் கூரைகள் பிரித்து அகற்றப்பட்டன. இவ்வாறு அகற்றப்பட்ட செயல் எவ்விதத் தீய எண்ணமும் இன்றிச் செய்யப்பட்டதாகும். ஒரு பெரிய கேட்டைத் தவிர்க்க வேண்டும் என்ற நோக்கத்தோடு செய்யப்பட்டது. எனவே, இச் செயல் குற்ற மாகாது.

இவ்வாறு, பெருந்தீங்கு ஒன்றைத் தவிர்ப்பதற்கென மற்ெருரு தீங்கைச் செய்யவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. பெரிய தீங் கைத் தடுப்பதற்கு, மற்ெருரு தீங்கைச் செய்வது தவிர்க்க முடி யாதது ஆகின்றது. இச் செயல்களைத் 'தவிர்க்க முடியாத செயல்கள்' (Acts done under necessity) என்கிறோம்.

கடலில் ஒரு கப்பல் வந்துகொண்டிருக்கிறது. திடீரென்று அந்தக் கப்பலுக்குச் சிறிது தூரம் முன்னால் ஒரு படகு தென்படு கிறது. அதில் 20 அல்லது 30 பேர்கள் இருக்கின்றனர். கப்பலை வலப்புறமாகத் திருப்பிச் செலுத்தவில்லையெனில், அந்தப் படகுமீது கப்பல் மோதிப் படகு கவிழ்ந்துவிடும் நிலை ஏற்படுகிறது. கப்பலுக்கு வலப்புறத்தில் இரண்டு பேர்களைக்கொண்ட சிறிய படகு ஒன்று இருக்கிறது. இப்பொழுது கப்பல் தலைவர் என்ன செய்வார்? முப் பது பேர்கள் கொண்ட படகை மூழ்கும்படி மோதுவதா? அல்லது இரண்டு பேர்களைக் கொண்ட படகின்மீது கப்பல் மோதினாலும் சரி யென்று கப்பலை வலப்புறமாகத் திருப்புவதா? முப்பது பேர்களின் உயிருக்கு விளையவிருக்கும் ஆபத்தைத் தவிர்ப்பதற்காகக் கப்பலை வலப் புறமாகத் திருப்பிச் செலுத்துகிறார். அதனால், இரண்டு பேர்கள் கொண்ட படகு கப்பலோடு மோதியதால், அந்தப் படகும் இருவரும் கடலில் மூழ்கிவிடுகின்றனர். இப்பொழுது, கப்பல் தலைவர் குற்றவாளி ஆவதில்லை.

வலப்புறம் இருந்த படகுமீது கப்பல் தலைவர் தெரிந்துதான் கப் பலை மோதவிட்டார். ஆனால், அவ்வாறு மோதும்படி விட்டது, எதிரில் வந்துகொண்டிருந்த பெரிய படகின்மீது கப்பல் மோது வதைத் தவிர்ப்பதற்காகச் செய்யப்பட்ட செயலாகும். முப்பது பேர் களைக் காப்பாற்றும் நோக்கத்தால் இரண்டு நபர்கள் இறந்தாலும் சரி என்ற எண்ணத்துடன் எழுந்த செயல் இது. சிறிய படகில் இருந்த இரண்டு பேர்களைக் கொல்ல வேண்டும் என்ற தீய எண்ணம், குற்ற மனம் கப்பல் தலைவருக்கு இல்லை. ஆனால், அந்த இரண்டு பேர்களின் உயிருக்கும் ஆபத்து விளையலாம் என்பது அவருக்குத் தெரிகிறது. என்றாலும், ஒரு பெரிய கேட்டைத் தவிர்ப்பதற்கு இதைச் செய்வது அவசியம் என்ற நிலையில் கப்பல் தலைவர் அவ்வாறு செய்தார். எனவே, இரண்டு பேர்கள் உள்ள படகின்

மீது கப்பலை மோதும்படி செலுத்திய குற்றத்திற்குக் கப்பல் தலைவர் பொறுப்பல்லர்.

இவ்வாறு, ஒரு தீங்கைத் தவிர்ப்பதற்கென்று மற்றொரு தீங்கைத் தெரிந்தே (with knowledge), ஆனால், குற்ற மனம் ஏதுமின்றி (without criminal intention) செய்தால், அது குற்றமாவதில்லை. ஒரு தீங்கைத் தவிர்ப்பதற்கு இன்னொன்றைச் செய்யும் இன்றியமையா நிலை ஏற்பட்டதா என்பதை அந்தந்தச் சூழ்நிலையை வைத்து முடிவு செய்யவேண்டும். இந்தக் கொள்கை குற்றவியல் 81ஆம் பிரிவில் கூறப்பட்டிருக்கிறது.

## தன் உயிரைப் பேணுவதற்கு இன்னொருவரைக் கொல்லலாமா?

'நம்மைக் கொல்லவரும் பசுவையும் நாம் கொல்லலாம்' என்பது பண்டைய விதி. எனவே, நம்மை மற்றொருவர் கொல்லுவதற்கு வந்தால், நம்மைக் காத்துக்கொள்ளுவதற்காக அவரைக் கொன்றுவிடலாம். ஆனால், நாம் உயிர்வாழவேண்டும் என்பதற்காக இன்னொரு நபரைக் கொல்லலாமா என்பது ஒரு சிக்கலான பிரச்சினை. தற்காப்பிற்கெனக் கொல்லுவது ஒன்று, உயிர் வாழ்வதற்கெனக் கொல்லுவது வேறொன்று. தற்காப்பிற்குக் கொல்லுவதைச் சட்டம் அனுமதிக்கின்றது; ஏனெனில், தற்காப்பிற்கெனக் கொல்லப்படுபவர் குற்றமிழைத்தவர்; (இதை அடுத்த அத்தியாயத்தில் விரிவாகக் காணலாம்). ஆனால், ஒருவர் உயிர் வாழ்வதற்குக் குற்றமற்ற இன்னொருவரைக் கொல்ல வேண்டிய அவசியம் ஏற்படுகிறது என்ற காரணத்தால், இன்னொருவரைக் கொல்லுவதைச் சட்டம் மன்னிப்பது இல்லை.

சென்ற நூற்றாண்டில் ஆங்கில நாட்டில் ஒரு வழக்குத் தோன்றியது. ஒரு கப்பல் நடுக்கடலில் கவிழ்ந்துவிட்டது. அக் கப்பலில் இருந்த மூன்று மாலுமிகளும் ஒரு சிறுவனும் சிறு படகொன்றில் ஏறிக் கடலில் மிதந்துகொண்டிருந்தனர். பல நாட்கள் உணவும் நீரும் இன்றி அவர்கள் தவித்தனர். பசி தாங்காமல் இரு மாலுமிகள் உடனிருந்த சிறுவனைக் கொன்று, அவனது உடலைப் புசித்துவிட்டனர். அவ்வாறு அவர்கள் அச் சிறுவனைக் கொன்று தின்னவில்லை எனில், அவர்களும் மடிந்துபோயிருக்கலாம். சில நாட்களில் மற்றொரு கப்பல் தலைவர் அவர்களைக் காப்பாற்றிக் கரை சேர்த்தார். சிறுவனைக் கொன்று தின்ற இரு மாலுமிகள் மீதும், பிறகு கொலை வழக்குத் தொடரப்பட்டது. 'எங்கள் உயிரைக் காப்பதற்கான அவசியத்தால் சிறுவனைக் கொன்றோம். எனவே, நாங்கள் குற்றவாளியல்லர்' என்று அவர்கள் கூறிய வாதத்தை நீதிமன்றம் ஏற்கவில்லை. அவர்களுக்குக் கொலைக்

குற்றத்திற்கான மரண தண்டனை விதிக்கப்பட்டது. ஆனால், அத் தண்டனையை ஆறு மாதச் சிறைத் தண்டனையாக அரசாங்கம் மாற்றியது. (R. V. Dudley and Stephens—14. Q.B.D. 273)

இந்த வழக்கை ஐந்து உயர் நீதிபதிகளைக் கொண்ட மன்றம் விசாரித்து முடிவு கூறியது. அவர்களில் முதல் நீதிபதி கால்ரிட்ஜ் (Coleridge, C.J.) என்பார் சட்டத்தின் தத்துவத்தை எடுத்துக் கூறித் தீர்ப்பளித்துள்ளார். தீர்ப்பில் அவர் கூறியதைக் காணலாம்:

"ஒருவரின் உயிரைப் பேணுவது அவருடைய கடமைதான்; ஆனால், அதைத் தியாகம் செய்வதும் உயர்ந்த கடமையாகியது: போரில் தோன்றும் பல சூழ்நிலைகளில் மனிதனின் கடமை வாழ்வதன்று; மடிந்து வீழ்வதுதான். ஒரு கப்பல் மூழ்கிவிட்டால் கப்பல் தலைவனின் கடமை என்ன? கப்பலில் உள்ள பெண்களும் குழந்தைகளும் முதலில் காப்பாற்றப்பட வேண்டும்; பிறகு கப்பல் சிப்பந்திகள் கப்பலை விட்டு அகலுகின்றனர்; கடைசியாகவே கப்பல் தலைவன் கப்பலைவிட்டு வெளியேறுகிறன். தன் உயிரையும் மதியாது பிறரைக் காக்கும் கடமை அவனுக்கு உண்டு. இப்பொழுது எழும் அவனது ஒழுக்கக் கடமை (Moral duty) என்ன? தன் உயிரை அர்ப்பணிப்பதே கடமையாகும். இந்தக் கடமையில் இருந்து எந்த நாடும், அதிலும் இங்கிலாந்து, எந்நாளும் தவறுவதில்லை. இதுவரை தவறியதும் இல்லை.

சட்டம் வேறு, ஒழுக்கம் வேறுதான்; ஒழுக்கக்கேடான பல செயல்கள் சட்ட முரணனவையாக இல்லையென்பது உண்மைதான். இருப்பினும், சட்டத்தையும் ஒழுக்கத்தையும் முழுதும் வெவ்வேருகப் பிரிப்பது முடியாது. இரண்டிற்கும் இணைப்பு உண்டு. இந்த இணைப்பு இல்லையென்றல், புலன்வழிச் செல்லும் புல்லியனுக மனிதன் மாறுவதைச் சட்டம் ஏற்கவேண்டிய நிலை ஏற்படும். வேட்கையால் எழும் பல வெறிச் செயல்களைச் சட்டம் மன்னிக்க வேண்டிய இக்கட்டான நிலை எழுந்து விடும்......

இந்த வழக்கிலே, குற்றவாளிகளுக்கு இருந்த வேட்கையின் வேகத்தை நாங்கள் மறந்துவிடவில்லை; அவர்கள் பட்ட கொடுந் துயரத்தை நாங்கள் உணராமல் இல்லை; அந்த நெருக்கடியான, சோதனை மிகுந்த வேளையில் ஒழுங்காக முடிவு செய்து நேர்மையாக நடப்பது எவ்வளவு கடினம் என்பதை நாங்கள் நன்கு அறிவோம். ஆயினும், நம் நடத்தையின் தரத்தை நாம் குறைத்துக்கொள்வதற்கில்லை. சீலத்தின் சீர்மையைச் சிதைத்துக்கொள்வது சரியன்று. நமக்கு நாமே வகுத்துக்கொள்ளும் உயர்ந்த ஒழுக்கத்

தின்படி நம்மால் நடக்க முடியாமல் இருக்கலாம். ஆயினும், அந்த ஒழுக்கத்தின் உயர்நிலையைத் தாழ்த்துவது நன்மையாகாது. ஒரு நீதிபதியே கூட இவ்வித வேட்கையைத் தடுக்கும் ஆற்றல் இன்றி இருக்கலாம். ஆனாலும், அந்த வேட்கையில் எழுந்த குற்றம் மன்னிக்கத் தக்கது என்று கூறும் உரிமை அந்த நீதிபதிக்கு இல்லை. குற்றம் இழைத்தவர்மீதுள்ள இரக்கத்தால், குற்றத்திற்குச் சட்டம் கூறியிருக்கும் இலக்கணத்தை மாற்றவோ, குறைக்கவோ நீதிபதிக்கு அதிகாரம் இல்லை."

இவ்வாறு கூறி, அந்த மாலுமிகளுக்கு நீதிபதிகள் மரண தண்டனையை விதித்தனர்! ஆங்கில நாட்டில் அன்றெழுந்த இந்தத் தீர்ப்பிலே நீதிபதிகளின் நேர்மையையும், ஒழுக்கத்தையொட்டி நீதி இயங்கும் முறையையும் நாம் காணுகிறோம். இதனால்தான் ஆங்கிலேயர்கள் என்றுமே தங்கள் நீதிமுறைத் திறனைப்பற்றிப் பெருமை கொள்கின்றனர்.

எனவே, தான் உயிர் வாழ வேண்டும் என்ற அவசியத்திற்காகக் குற்றமற்ற இன்னொருவரைக் கொல்லுவது குற்றமான செயலே யாகும்.

இனி, இன்னோர் உதாரணத்தைக் காண்போம். கவிழ்ந்த கப்பல் மாலுமிகள் இருவர் கடலில் நீந்திக்கொண்டிருக்கின்றனர் என்று வைப்போம். இருவரும் களைத்துப் போய் நீந்திக்கொண்டி ருக்கின்றனர். அப்பொழுது ஒரு மரக்கட்டை மிதந்து வருகிறது. அந்தக் கட்டைமீது ஒருவர் மட்டும் ஏறி உட்கார்ந்துகொள்ளலாம். இருவரும் ஏறினால் அக் கட்டை பாரம் தாங்காது நீரில் அமிழ்ந்து விடுகிறது. இருவருமே அந்தக் கட்டையைப் பிடித்து ஏறுகின் றனர். இந்த இக்கட்டான நிலையில், ஒருவர் மற்றொருவரைக் கட்டையிலிருந்து தள்ளிவிட்டுத் தான் மட்டும் தப்புகிறார் என்று கொள்ளுவோம். கட்டையிலிருந்து தள்ளப்பட்டவர் முடிவில் நீரில் மூழ்கி இறந்துவிடுகிறார். இப்பொழுது கட்டையில் ஏறித் தப்பி வந்தவர்மீது கொலைக் குற்றம் சாட்டுவது சரியா? இதைத் தவிர்க்க முடியாத அவசியத்தால் விளைந்த செயல் என்று சட்டம் கொள்ளலாம். எனவே, அவர் குற்றவாளியாவதில்லை.

பையனைக் கொன்று தின்று உயிர் பிழைத்ததற்கும், கட்டையி லிருந்து அடுத்தவரைத் தள்ளிவிட்டு, அதனால்தான் பிழைத்ததற்கும் வேறுபாடு இருக்கிறது. கட்டையில் ஏறித் தப்புவதில் ஒருவர் மற்றொருவருக்கு இடைஞ்சலாக இருந்தார். அந்த இடைஞ்சலை அகற்றவில்லையெனில் இருவருமே மூழ்கியிருக்க வேண்டியதுதான். ஆனால், மாலுமிகள் உயிர் வாழ்வதற்குப் பையன் ஒன்றும் இடைஞ்ச

லாக இல்லை. உயிர் தப்புவதற்கு இடைஞ்சலாக இருந்ததை அகற்றும் செயல் போன்றதன்று, பையனை மாலுமிகள் கொன்ற செயல். எனவே, இந்த இரண்டிற்கும் வேறுபாடு உண்டு.

ஒரு தீங்கைத் தவிர்ப்பதற்கென இன்னொரு தீங்கை விளைவிக்கலாம் என்ற கொள்கையில் நாம் கவனிக்க வேண்டிய கூறுகள் மூன்று உள்ளன: (1) தவிர்க்கப்பட்ட தீங்கு, செய்யப்பட்ட தீங்கைவிடப் பெரியதாக இருந்திருக்க வேண்டும். (2) அந்தப் பெரிய தீங்கைத் தவிர்ப்பதற்கு வேறு வழிகள் இல்லாது இருந்திருக்க வேண்டும். (3) பெரிய தீங்கைத் தவிர்ப்பதற்கு எந்த அளவுக்கு அவசியமாகிறதோ, அந்த அளவிற்கே செய்யப்பட்ட தீங்கு அமைதல் வேண்டும்.

நாம் நம் காரை வீதியில் ஓட்டிக்கொண்டு போகிறோம். திடீரென்று நாய் ஒன்று குறுக்கே வந்துவிடுகின்றது. நாய்மீது மோட்டார் ஏறிவிடக்கூடாது என்று, வீதி ஓரத்தில் மேடை மீது நின்றுகொண்டிருந்த ஒரு மனிதர்மீது ஏற்றுவது சரியன்று. மனிதர் மீது கார் ஏறிவிடாமல் தவிர்க்கும் முயற்சியில் நாய்மீது காரை ஏற்றிவிடலாம்; ஆனால், நாயைக் காப்பாற்றும் நோக்கத்தில் இன்னொரு மனிதரின் உயிருக்கு ஆபத்து விளைத்தல் கூடாது.

இவ்வாறு, தவிர்க்க முடியாத செயல்களைச் சட்டம் மன்னிக்கின்றது.

### 8. இசைவு பெற்ற செயல்கள் (Acts done with Consent)

இடர்கள் பலவற்றை நாம் இசைந்து ஏற்கிறோம். ஆபத்தான சில விளையாட்டுகளில் நாம் ஆர்வத்துடன் ஈடுபடுகிறோம். இந்தச் சூழ்நிலைகளில் ஒருவரால் பிறருக்கு விளையும் தீங்குகளைக் குற்றமாகச் சட்டம் கொள்வதில்லை. ஏனெனில், தீங்கு யாருக்குச் சேருகிறதோ, அவர் சம்மதத்துடன் அது செய்யப்படுகிறது. ஆனால், இவ்விதத்தில் செய்யப்படும் தீங்குகள் மரணம், கொடுங்காயம்(Grievous hurt) இவைகளை விளைவிப்பதாக இருத்தல் கூடாது.

இரண்டு நபர்கள் விளையாட்டுப் போட்டியில் குத்துச் சண்டை (Boxing) இடுகின்றனர். குத்துச் சண்டையில் ஒருவருடைய குத்துதலால் மற்றவருக்குக் காயம் விளையலாம். இந்தக் காயத்திற்குக் குத்தியவர் பொறுப்பாவதில்லை. குத்துச் சண்டை விளையாட்டில் ஈடுபடும் இருவரும் விளையாட்டில் காயங்கள் விளையலாம் என்பதைத் தெரிந்து, அதற்குச் சம்மதித்தே அந்த விளையாட்டில் இறங்குகின்றனர். எனவே, இதனால் விளையும் காயம் இசைந்து

பெற்றதாகிறது. காயத்தை விளைவித்தவர் குற்றவாளியாவதில்லை.

இதற்குச் சம்மதம் அளிப்பவர் பதினெட்டு வயதைத் தாண்டியவராக இருக்க வேண்டும். பருவம் எய்தாத சிறுவர்களும் குழந்தைகள் அளிக்கும் சம்மதத்தை வைத்துக்கொண்டு அவர்களுக்குக் காயத்தை விளைவித்தல் கூடாது.

ஒருவரின் சம்மதத்தைப் பெற்றாலும் அவருக்கு மரணத்தையோ கொடுங் காயத்தையோ விளைவிப்பது கூடாது.

இவ்வாறு, பதினெட்டு வயதிற்கு மேற்பட்டவரின் சம்மதத்தைப் பெற்றுச் செய்யப்படும் செயல், மரணம், கொடுங்காயம் இவற்றை விளைவிக்கக் கருதியோ, அல்லது விளைவிக்கலாம் என்று தெரிந்தோ, செய்யப்படாத செயலாக இருந்தால் அது குற்றமாவதில்லை.

சில வேளைகளில் ஒருவரின் நன்மைக்காக அவருடைய சம்மதத்துடன் செய்யப்படும் செயல்களால் தீங்கு விளையலாம்.

ஒருவர் கொடிய வயிற்று நோயால் வருந்துகிறார். அதற்கு அறுவை சிகிச்சை செய்ய வேண்டியது அவசியமாகிறது. ஆனால், அந்த ஆபரேஷனால் நோயாளிக்கு மரணம் ஒருவேளை விளைந்தாலும் விளையலாம் என்பது வைத்தியருக்குத் தெரியும். இதை நோயாளிக்கு அவர் அறிவிக்கின்றார். நோயைத் தவிர்க்க வேண்டும் என்பதால் நோயாளியும் அந்த ஆபத்தான ஆபரேஷனைச் செய்துகொள்ளுவதற்குச் சம்மதிக்கின்றார். டாக்டர் செய்த ஆபரேஷனால் நோயாளி இறந்துவிடலாம். இதற்கு டாக்டர் பொறுப்பாவது இல்லை. ஏனெனில், டாக்டர் நோயாளியின் மரணத்தைக் கருதி ஆபரேஷன் செய்யவில்லை. நோயாளியைக் குணப்படுத்தும் நல்லெண்ணத்துடன் அது செய்யப்பட்டதாகும். அதற்கு நோயாளியும் சம்மதித்தார். எனவே, மரணம் விளையலாம் என்பதைத் தெரிந்தும் அறுவை சிகிச்சை செய்ததைச் சட்டம் குற்றமாகக் கொள்ளுவதில்லை. இவ்வாறு, ஒருவருடைய நன்மைக்காக, அவருடைய சம்மதம் பெற்று, மரணம் விளையலாம் என்று தெரிந்துங்கூட, ஒரு செயலைச் செய்தல் குற்றமாவதில்லை.

'நன்மை' என்பது என்ன? இங்கு 'நன்மை' என்று கூறுவதில் உடல் நலனுக்கான நன்மை—உயிரைக் காப்பதற்கான நன்மையையே குறிப்பிடுகிறோம். பணம் அல்லது பொருள் பெறலாம் என்ற நன்மையைக் குறிப்பதில்லை. 'எனக்குப் பத்தாயிரம் ரூபாய் கொடுத்துவிடுங்கள்; ஏன் கையை வெட்டி எடுத்துக்

கொள்ளுங்கள்' என்று ஒருவர் சம்மதித்தால், அந்தச் சம்மதம் அவரது 'நன்மைக்கான' சம்மதம் அன்று.

சில சூழ்நிலைகளில், எவருடைய நன்மைக்காக ஒரு செயல் செய்யப்படுகிறதோ, அவருடைய சம்மதத்தைப் பெறுவது இயலாத தாகிவிடலாம். இந்நிலையில் என்ன செய்வது?

மோட்டார் விபத்தில் அகப்பட்ட ஒருவர் வைத்திய சாலைக்குக் கொண்டுவரப்படுகின்றார். அவருக்கு ஏற்பட்ட காயத்தினால் அவரது நிலை மிகவும் ஆபத்தாக இருக்கிறது. அவருக்குத் தம் நினைவு இல்லை. ஓர் ஆபரேஷன் செய்தால்தான் அவர் பிழைக்க முடியும். அந்த ஆபரேஷனால் அவர் ஒருவேளை இறந்தாலும் இறக்கலாம். தம் நினைவின்றி மயக்கமாக இருப்பவரிடம் இதற்கான சம்மதத்தை எப்படிப் பெறுவது? எனவே, அவருடைய சம்மதம் பெறாமலே ஆபரேஷனை வைத்தியர் செய்கின்றார். இச்செயல் குற்ற மாகாது. ஆபரேஷனால் மரணம் விளைந்தாலும் அது குற்றமா வதில்லை.

இம்மாதிரி மயக்கமாக இருக்கும் ஒருவரின் காலை வெட்டி எடுத் தால்தான் அவர் பிழைப்பார் என்ற நிலை ஏற்படுகிறது. டாக்டர் நோயாளியின் காலை ஆபரேஷன் செய்து அகற்றுகிறார். இவ்வாறு, நோயாளியின் சம்மதம் இன்றிக் காலை வெட்டி அகற்றிய செயலும் குற்றமாவதில்லை.

காட்டில் வேட்டையாட இருவர் செல்லுகின்றனர். அதில் ஒருவர் ஒரு புலியிடம் அகப்பட்டுவிடுகிறார். புலி அவரைத் தூக்கிச் செல்கிறது. அவரின் நண்பர் புலியைக் குறிபார்த்துச் சுடுகிறார். அவ்வாறு சுடுவது தமது நண்பரின்மீது பட்டு, அவரது மரணத்தை விளைவிக்கலாம் என்பதை அவர் அறிவார். இருந்தும், நண்பரைக் காப்பாற்ற வேறு வழி இல்லாததால் புலியை நோக்கிச் சுட்டார். குறி தவறித் துப்பாக்கி ரவை புலி மீது படாமல், புலியிடம் அகப்பட்டிருந்த நண்பர் மீது பட்டு அவருக்கு மரணத்தை விளைவிக் கிறது; இப்பொழுது, சுட்டது குற்றச் செயலாவதில்லை. ஏனெனில், நண்பர் சுட்டது நண்பரைக் காப்பாற்றும் கருத் துடன், நல்லெண்ணத்தோடு செய்யப்பட்ட செயலாகும். நண்பரின் சம்மதத்தை அவர் பெறவில்லை என்பதால் அச்செயல் குற்றமாகிவிடுவதில்லை. ஏனெனில், அந்தச் சூழ்நிலையில் புலி வாயில் அகப்பட்டுத் தவிப்பவரின் சம்மதத்தைப் பெற இயலாது.

தீப்பற்றி எரியும் ஒரு மாடியில் ஒரு குழந்தை அகப்பட்டுக் கொண்டது. அதைக் காப்பாற்றும் நோக்கத்துடன் ஒருவர் மாடிக் குச் செல்லுகிறார். குழந்தையைக் கையில் எடுத்துக் கொண்டார்.

ஆனால், படி வழியாக இறங்குவதற்கு இயலவில்லை. எனவே, கீழே நிற்பவர்களை ஒரு சமுக்காளத்தைப் பிடித்து விரித்து நிற்கும் படி சொல்லி அந்த விரித்த சமுக்காளத்தின்மீது குழந்தை விழும்படி குழந்தையைப் போடுகிறார். ஆனால், குழந்தை ஏந்தப்பட்ட சமுக்காளத்தை விட்டு விலகித் தரையில் விழுந்ததால் இறந்து விட்டது. இப்பொழுது, குழந்தையை எறிந்தவர்மீது கொலைக் குற்றம் சாட்டமுடியாது. ஏன்? குழந்தை ஒருவேளை தரையில் விழுந்து இறந்துவிடலாம் என்பதை அவர் தெரிந்துதான் அவ்வாறு செய்தார். எனினும், அவர் அக் குழந்தையைக் காப்பாற்றுவதற்கு வேறு வழியின்றி அவ்வாறு மாடியிலிருந்து எறிந்தார். எனவே, இது குற்றமாவதில்லை.

இவ்வாறு, ஒருவரின் சம்மதம் இன்றிச் செய்யப்படும் செயல் வேண்டுமென்றே மரணத்தை விளைவிக்கும் செயலாக இருக்கக் கூடாது. மரணத்தையோ, கொடுங் காயத்தையோ தவிர்க்கும் நோக்கத்தாலோ, அல்லது கொடுங்காயத்தையும் உடல் ஊனத்தையும் குணப்படுத்தும் நோக்கத்தாலோ, மரணம் விளையலாம் என்று தெரிந்த செயலையும் ஒருவர் செய்யலாம். இது குற்றமாவதில்லை.

பன்னிரண்டு வயதிற்கு உட்பட்ட சிறுவர்கள், உளநோய் உள்ளவர்கள் இவர்களுடைய நன்மைக்காக ஒன்றைச் செய்ய வேண்டுமெனில் யாருடைய சம்மதத்தைப் பெறுவது? இவர்கள் அளிக்கும் சம்மதத்தைச் சட்டம் ஏற்பதில்லை. எனவே, இவர்கள் யாருடைய பாதுகாப்பில் இருக்கின்றனரோ, அவருடைய சம்மதத்தைப் பெற வேண்டும்.

இசைவு பெற்றுச் செய்யப்படும் செயல்கள் எவ்வாறு குற்றம் ஆவதில்லை என்று கண்டோம்.

தீங்கை அடைபவர் அளித்த இசைவு, தீங்கின் தன்மையை அவர் நன்கு உணர்ந்தபின் அளிக்கப்பட்டதாக இருக்க வேண்டும். தான் இசைவதால் தமக்கு நேரவிருக்கும் ஆபத்து என்ன, அதன் விளைவு என்ன என்பதை அவர் அறிந்திருக்க வேண்டும். அச்சத்தாலோ, அல்லது தவறான கருத்தாலோ, ஒருவரது இசைவு பெற்று அவருக்குத் தீங்கு விளையக்கூடிய செயல்களைச் செய்தல் கூடாது. குடி மயக்கத்தில் இருப்பவரிடமோ, உளநோய் உள்ளவரிடமோ இசைவு பெறுவதில் பயனில்லை.

இசைந்து ஒருவர் ஒரு தீங்கை ஏற்றுக்கொள்ளலாம். அவருக்கு விளையும் தீங்கு ஒரு புறமிருக்க, அச் செயல் சில வேளைகளில் ஒரு தனிப்பட்ட குற்றமாகிறது.

கருவைக் கலைப்பது குற்றமான செயலாகும். கருப்பவதியாக இருக்கும் பெண் இதற்குச் சம்மதித்தாலும்கூட, அது குற்றமான செயல்தான். கர்ப்பத்தைக் கலைக்கும் முயற்சியில் அந்தப் பெண்ணிற்கு, அவள் உடலுக்கு, ஏதாவது தீங்கு விளைந்தால் அது குற்றமாகாதிருக்கலாம். ஏனெனில், அதற்கு அவள் சம்மதித்திருக்கிறாள். ஆனால், கருவைச் சிதைப்பது தனிப்பட்ட குற்றமாதலால், அப் பெண்ணின் சம்மதம் இருந்தாலும் அது குற்றமேயாகும்.

## 9. அச்சுறுத்தலுக்கு அஞ்சிச் செய்யும் செயல்கள்
(Acts done under compulsion by threats)

ஒரு குற்றத்தைச் செய்யுமாறு ஒருவர் மற்றொருவரை அச்சுறுத்துகிறார். அச்சுறுத்தப்பெற்றவர் அக் குற்றச் செயலைச் செய்கின்றார். அச்சுறுத்தலுக்கு அஞ்சி அவர் செய்த செயலைச் சட்டம் மன்னித்து விடுகிறதா?

ஒரு வீட்டில் நுழைந்து திருடியவன், 'என்னை இவ்வாறு திருடும்படி இன்னொருவர் அச்சுறுத்தி வற்புறுத்தினார். திருடவில்லையெனில் என் கையை வெட்டிவிடுவதாகப் பயமுறுத்தினார். இதற்கு அஞ்சியே நான் திருடினேன்' என்று கூறினால், இதை வைத்து, அவனைக் குற்றப் பொறுப்பிலிருந்து சட்டம் விலக்கலாமா? விலக்கினால் விளைவு என்ன ஆகும்? இந்த வாதத்தைச் சட்டம் ஏற்பதென்றால், குற்றவாளிகள் அனைவருமே இத்தகைய சமாதானங்களைக் கூற முற்படுவார்கள். குற்றம் இழைக்க விரும்புபவர்கள் ஒருவருக்கொருவர் உதவியளிக்கும் முறையில் மறைவாகத் திட்டமிட்டுக் குற்றங்களைச் செய்வதற்கு சட்டமே வழி வகுத்துக் கொடுக்கும் நிலை ஏற்பட்டுவிடும். எனவே, பிறர் அச்சுறுத்தலுக்கு அஞ்சித் தீங்கு இழைக்கப்பட்டாலும் அது குற்றமேயாகும்; அக் குற்றத்தைச் செய்தவர் தண்டனைக்கு ஆளாகின்றார்.

மக்கள் குற்றச் செயல்களில் ஈடுபடக்கூடாது என்று அச்சுறுத்தும் வகையிலேயே சட்டம் தண்டனையை அளிக்கின்றது. 'நீ பிறருக்குத் தீங்கு இழைத்தால் சட்டம் உன்னைச் சிறையிலிட்டோ, அபராதம் விதித்தோ தண்டிக்கும்' என்று சட்டம் குற்றம் இழைக்க இருப்பவர்களை அச்சுறுத்துகிறது. சட்டம் இவ்வாறு குற்றங்கள் செய்யக்கூடாது என்று அச்சுறுத்தி நிற்க, குற்றத்தைச் செய்யுமாறு ஒருவர் மற்றொருவரை அச்சுறுத்தினால் நிலைமை என்ன? தனி நபர் ஒருவரின் பயமுறுத்தலுக்கு முன் சட்டத்தின் பயமுறுத்தல் பணிந்து போவதா? கூடாது. எனவே, தனி நபரின் அச்சுறுத்தலுக்கு அஞ்சி ஒருவர் சட்டத்தின் அச்சுறுத்தலைப் புறக்கணித்துக் குற்றங்கள் புரிவதைச் சட்டம் மன்னிப்பது இல்லை.

**உடன் மரணம் உற்றுவிடும் என்ற அச்ச நிலை**
(Threat causing fear of instant death)

சட்டம் ஒரே ஒரு நிலையில் மட்டும் பரிவு காட்டுகிறது. உடனடியாக மரணம் விளையலாம் என்ற அச்சத்தில் உள்ளவர், அந்த நிலையில் இழைக்கும் தீங்குகளைக் குற்றமாகக் கொள்ளுவதில்லை. ஒரு தீங்கைச் செய்யவில்லையெனில் சில மணி நேரங் கழித்து அல்லது சில நாட்கள் கழித்துத் தம்மை அச்சுறுத்தியவர் கொன்று விடலாம் என்ற பயம் தண்டனையிலிருந்து பாதுகாப்பளிப்பது இல்லை. அந்தத் தீங்கைச் செய்யவில்லையெனில், அங்கேயே, அப்பொழுதே, தம்மை மற்றவர் கொன்றுவிடுவார் என்ற மரண பயம் அவருக்கு உண்மையிலேயே இருந்து, உடன் மரணம் உற்றுவிடும் என்ற உண்மையான அச்சத்தால், ஒருவர் செய்யும் செயல்களைச் சட்டம் குற்றங்களாகக் கொள்வதில்லை.

**கொலையும், அரசுக்கெதிரான போர்ச் செயலும் எந்நிலையிலும் கூடாது**

உடன் மரணம் உற்றுவிடும் என்ற உண்மையான அச்ச நிலையிலும் இருவகைக் குற்றங்கள் இழைக்கப்படுவதைச் சட்டம் பொறுப்பதில்லை. ஒன்று கொலை, மற்றொன்று, அரசுக்கெதிரான குற்றங்கள். இந்திய அரசுக்கெதிரான போர்ச் செயலில் ஈடுபடுவது 121ஆம் பிரிவுப்படி கொடுங் குற்றமாகும். இக்குற்றம், கொலை இந்த இரண்டு குற்றங்களையும், தன் உயிர் இழக்கவிருக்கும் தருணத்திலிருந்து தப்புவதற்கு என்றுங்கூடச் செய்தல் கூடாது என்பது சட்டம்.

கொலைக் குற்றம் செய்தால் தூக்கிலிடப்படுவாய் என்று சட்டம் அச்சுறுத்துகிறது. கொலையைச் செய்யாவிடில் நான் உன்னைச் சுட்டுக் கொன்றுவிடுவேன் என்று ஒருவர் மற்றவரை அச்சுறுத்துகிறார். எந்த அச்சுறுத்தல் வலிமை மிக்கது? சட்டத்தின் அச்சுறுத்தல்தான். எனவே, தன் உயிரே போவதாக இருந்தாலும் ஒருவர் கொலைக் குற்றத்தைச் செய்தல் கூடாது என்று சட்டம் விதிக்கின்றது. இம்மாதிரியே அரசுக்கெதிரான போர் நடவடிக்கைகளில் இறங்குவதும் கூடாது. இந்த இரு குற்றங்களைத் தவிர, வேறு எந்தக் குற்றத்தையும், உடன் மரணம் உற்றுவிடும் என்ற உண்மையான அச்சுறுத்தலுக்கு அஞ்சிய நிலையில் உள்ளவர் செய்தால் அந்தச் சட்டம் மன்னித்துவிடுகின்றது.

இரும்புப் பெட்டிகளைத் திறக்கத் தெரிந்த ஒரு தொழிலாளியைக் கொள்ளைக் கூட்டத்தினர் வலுக்கட்டாயமாகப் பிடித்துவந்து, ஒரு பெட்டியைத் திறக்கச் சொல்லுகின்றனர். திறக்கவில்லை

யெனில் உடனே கொன்றுவிடுவதாகக் கத்தியைக் காட்டி அச்சுறுத்துகின்றனர். இவ்வாறு, உற்ற உடன் மரண அச்சத்தால், அத் தொழிலாளி பெட்டியைத் திறந்து கொடுக்கின்றார். இப்பொழுது அந்தத் தொழிலாளியின் செயலைக் குற்றமெனச் சட்டம் கொள்ளுவதில்லை.

ஆனால், இந்தத் தொழிலாளி அவராக விரும்பி ஒரு கொள்ளைக் கூட்டத்தோடு சேர்ந்து செயற்பட்டுவந்தாரென வைப்போம். கொள்ளைக் கூட்டத்தில் ஒருவர் என்ற நிலையில், அவர் மேலே சொன்னவாறு அச்சுறுத்தப்பட்டு, அவர் அப் பெட்டியை உடைத்துக் கொடுத்தால் அச் செயலைச் சட்டம் மன்னிப்பதில்லை. ஏனெனில், அச்சுறுத்தப்படும் நிலையை, சூழ்நிலையை அவரே தேடிக் கொண்டார்.

எனவே, உடன் மரணம் விளைவிக்கும் அச்சுறுத்தலுக்கு ஆளாகியிருக்கும் ஒருவர் அந் நிலையில் செய்யும் செயல்கள் குற்றங்கள் ஆவதில்லை. ஆனால், அந் நிலையிலும், கொலைச் செயலையோ, அரசுக்கு எதிரான போர்ச் செயலையோ செய்தால் அது குற்றமேயாகும். இவ்வித அச்சுறுத்தலுக்கு ஆளான நிலையை அவரே தேடிக்கொண்டதாக இருத்தலும் கூடாது.

அச்சுறுத்தலுக்கு அஞ்சிக் குற்றங்களைச் செய்வோருக்கு, இந்த அளவிற்குத்தான் சட்டம் பரிவு காட்டுகிறது. இந்தக் கொள்கையைக் குற்றவியலில் 94 ஆம் பிரிவில் காணுகிறோம்.

"குற்றத்தைச் செய்வதற்கான தூண்டுதல் எப்பொழுது பலமாக இருக்கிறதோ, அப்பொழுதுதான் குற்றத்தைத் தடுக்கும் சட்டத்தின் திறன் தெளிவாகவும் உறுதியோடும் இயங்கவேண்டும்.

கொலை செய்யக் கருதுபவனைச் சட்டம் எச்சரிக்கின்றது, 'நீ கொலை செய்தால் உன்னைத் தூக்கில் இடுவேன்' என்று. 'நீ கொலை செய்யாவிட்டால் உன்னைச் சுட்டுவிடுவேன்' என்று ஒருவனை மற்றொருவன் அச்சுறுத்துகிறான். இந்தத் தனி நபரின் பயமுறுத்தலுக்கு முன் சட்டத்தின் அச்சுறுத்தல் பின்வாங்குவதா? கூடாது. சட்டம் இவ்வாறு இல்லையெனில், குற்றம் இழைக்க விரும்புவோர் மற்றவர்களை அச்சுறுத்திக் குற்றங்களைச் செய்துவிட்டுத் தாம் தப்பிவிடுவார்கள். இவ்வாறு சர் ஜேம்ஸ் ஸ்டீபென் (Sir James Stephen) என்ற சட்ட அறிஞர் கூறுகிறார். (The law says to a man intending to commit murder, 'If you do it, I will hang you.' Is the law to withdraw its threat if some one else says, 'If you do not do it, I will shoot you.'

Surely, it is at the moment when the temptation to commit crime is the strongest, that the law should speak most clearly and emphatically to the contrary)—Sir James Stephen.

### (10) அற்பமான தீங்குகள் குற்றங்களாகக் கருதப்படுவதில்லை (Acts causing slight harm)

ஒருவரின் சம்மதம் இன்றி அவரை மற்றொருவர் தொடுவதே 'தாக்குதல்' என்ற குற்றமாகிவிடுகிறது. இரு சகோதரர்களுக்குள் வாக்குவாதம் முற்றிய நிலையில் ஒருவர் மற்றொருவர் மீது கைவைத்துச் சிறிது தள்ளுகிறார். உடனே தள்ளியவர்மீது குற்றத்தைச் சாட்டி, குற்ற நீதிமன்றத்தில் வழக்குத் தொடுப்பதா? கூட்டமாக ரெயிலில் ஏறும்பொழுது ஒருவரையொருவர் இடித்துத் தள்ளிக் கொண்டுதான் ஏறுகிறோம். எல்லோரும் குற்றத்திற்காளாவதா? இவை போன்ற செயல்கள் குறித்துச் சாதாரண மனநிலையில் உள்ளவர் எவரும் குற்ற வழக்கிடமாட்டார். எனவே, இந்த அற்பச் செயல்களைக் குற்றங்களாகச் சட்டம் கொள்ளுவதில்லை.

'அற்பச் செயல்களில் சட்டம் அக்கறை கொள்வதில்லை' (Law does not care about trifles) என்பது பொது விதி. இதை லத்தீன் மொழியில் de minimis non curat lex என்பார்கள்.

ஒரு செயலால் விளையும் தீங்கு அற்பமானதா என்பது அந்தந்தச் சூழ்நிலையைப்பொறுத்துத் தீர்மானிக்க வேண்டியதாகும். ஒரு வீட்டிலுள்ள பொருள்களை 'ஜப்தி' செய்வதற்கு வரும் கோர்ட்டு அமீனாவை அச்சுறுத்தும்வகையில் ஒருவர் அவரைத் தொட்டாலும் அது குற்றமாகும். ஆனால், இரு நண்பர்களிடை எழுந்த வாக்குவாதத்தில் ஒருவர் மற்றொருவரைத் தொட்டு இலேசாகத் தள்ளினார் எனில், அது குற்றமாவதில்லை. என் வீட்டிற்கு வந்திருந்த நண்பர் என் மேசைமீதிருந்த புத்தகம் ஒன்றை என்னைக் கேட்காமலே எடுத்துச் செல்லுகிறார். உடனே இது திருட்டுக் குற்றம் ஆகிவிடுவதில்லை. ஆனால்; இதே செயலை எனக்கு அறிமுகம் இல்லாத ஓர் அயலார் செய்தால் அது திருட்டேயாகும். நம் வீட்டுச் செடியிலிருந்த மலரை ஒருவர் தெருவில் இருந்து பறிக்கின்றார். உடனே அவர்மீது திருட்டுக் குற்றம் சாட்டமுடியாது.

எனவே, சாதாரண மனநிலையில் உள்ளவர்கள் அற்பமானதென்று கருதும் தீங்குகளைச் சட்டம் குற்றங்களாகக் கொள்ளுவதில்லை. இக் கொள்கை 95 ஆம் பிரிவில்கூறப்படுகிறது.

# 16. காப்புரிமை

## (Right of Private Defence)

'காப்புரிமை' என்பது என்ன? நம் உடலையும் பொருளையும் காப்பது நம் உரிமை—பிறர் உடலையும் பிறர் பொருளையும் பேணுவதும் நம் உரிமை—குற்றங்களுக்கெதிராகவே காப்புரிமை எழுகின்றது — 'உடற் காப்புரிமையும்' 'பொருள் காப்புரிமையும்', — காப்புரிமைச் செயலாக மரணத்தையும் விளைவிக்கலாம்—உடற் காப்புரிமைச் செயலாக மரணம் விளைத்தல் — பொருள் காப்புரிமைச் செயலாக மரணம் விளைத்தல்—சித்த சுவாதீனமற்றோர், குடி வெறியிலுள்ளோர் இவர்களுக்கெதிராகவும் காப் புரிமை உண்டு—குற்றமிழையாதவரும் காப்புரிமைச் செயலால் பாதிக்கப் படலாம்

காப்புரிமைக்குள்ள கட்டுப்பாடுகள்—(1) ஆபத்து விளையும் என்ற அச்சம் உள்ளவரையில்தான் காப்புரிமை உண்டு. (2) தேவையான அளவிற்கே காப்புரிமை செயல்பட வேண்டும். (3) பொது அதிகாரிகளின் பாதுகாப்புப் பெறுவதற்கு வாய்ப்பு இருந்தால் காப்புரிமை எழுவதில்லை. (4) பொது ஊழியர்களின் வரம்பு மீறிய செயல்களும் காப்புரிமையும்,— காப்புரிமை நமக்கு உண்டென்ற கவனம் வேண்டும்.

குற்றம் இழைத்தவர்கள் தண்டிக்கப்படுகின்றனர். குற்றச் செயல் முடிந்த பிறகுதான் தண்டனை அளிக்கப்படுகிறது. சமுதாயத் தைக் குற்றச் செயல்களிலிருந்து பாதுகாக்கும் நோக்கத்துடன் குற்ற வாளிகளை அரசு தண்டிக்கின்றது.

தனி மனிதர்களும் குற்றச் செயல்களுக்குத் தாங்கள் இலக்கா காதவாறு பாதுகாத்துக்கொள்ளுவது இன்றியமையாததாகும். ஒரு குற்றத்திற்கு இலக்கானவரின் உடல், பொருள் இவைகளுக்கு ஊறு விளைகிறது. குற்றவாளிகளைத் தண்டித்ததால்மட்டும் குற்றத்தின் பயனாக விளைந்த சேதம் மாறிவிடப் போவதில்லை. எனவே, உட லுக்கும் பொருளுக்கும் கேடு விளையாதவாறு பாதுகாத்துக் கொள்ளும் உரிமை நம் ஒவ்வொருவருக்கும் உண்டு. சமுதாயத்தில் வாழும் ஒவ் வொருவரையும் பாதுகாப்பதற்கென்று, நம் ஒவ்வொருவருக்கும்

தனித்தனியாக ஒரு போலீசாரை அரசாங்கம் நியமித்தல் இயலாது. எனவே, நாமே நமக்குத் துணையாக இருக்கவேண்டும்.

**'காப்புரிமை' என்பது என்ன?**

நம்மைக் கத்தியால் குத்துவதற்கு ஒருவர் முயலுகிருர். நம்மைக் குத்திஞல் அவருக்குத் தண்டனைதான் கிடைக்கிறதே என்று கருதி நாம் வாளா இருக்க முடியாது. நம் கையில் உள்ள பொருள் ஒன்றை மற்ருெருவர் பறித்துக்கொள்ள முயலுகிருர். பொருளைப் பறி கொடுத்துவிட்டுப் பிறகு போலீசில் புகார் செய்துகொள்ளலாம் என்று நாம் இருப்பதற்கில்லை. குற்றங்கள் இழைக்கப்படுதற்கு உட்பட்டு இருந்துவிட்டு, அதற்குப் பின்னர் போலீசாரிடம் முறையீடு செய்து கொள்ள வேண்டும் என்று சட்டம் கூறுவதில்லை. குற்றங்களால் விளையவிருக்கும் தீங்குகளிலிருந்து பாதுகாத்துக்கொள்ளும் உரிமையைச் சட்டம் நமக்கு அளிக்கிறது.

பொதுவாகக் குற்றச் செயல்களிலிருந்து காத்துக்கொள்ளும் இந்த உரிமையைக் 'காப்புரிமை' (Right of Private Defence) என்கிருேம்.

கத்தியால் நம்மைத் தாக்க வருபவரைத் தடுத்து நிறுத்துவது நம் உரிமை. பிறர் பறித்துக்கொண்டு போய்விடாமல் நம் பொருளைப் பாதுகாப்பது நமது உரிமை. இந்த உரிமையை நாம் செயற்படுத்தும் பொழுது, இதனுல் குற்றம் இழைக்க இருந்தவருக்குத் தீங்கு விளையலாம். இதைச் சட்டம் அனுமதிக்கிறது.

நம்மை அடிப்பதற்கென்று ஒருவர் தடியை ஓங்கிக்கொண்டு வருகிருர். இப்பொழுது நம்மை எப்படிப் பாதுகாத்துக்கொள்வது? அவர் கையிலுள்ள தடியை நாம் வன்முறையில் பிடுங்க வேண்டும்; அல்லது நாமும் ஓர் ஆயுதங்கொண்டு அவரைத் தாக்கி அவரது செயலைத் தடுக்கவேண்டும். இதற்கு பலாத்காரத்தையே நாம் பயன்படுத்த வேண்டியதிருக்கிறது. வன்முறைச் செயலைத் தடுப்பதற்கு வன்முறையையே நாமும் கையாளவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. நாம் அவ்வாறு செய்தால், நம்மை அடிக்க வந்தவருக்குக் காயம் ஏற்படலாம். அவருக்குக் காயத்தை விளைத்து நம்மைக் காத்துக்கொள்கிருேம். இப்பொழுது, நம்மை அடிக்க வந்தவருக்கு நாம் காயத்தை விளைத்த செயல் குற்றம் ஆவதில்லை. நம்மைத் தாக்க வந்தவரை நாம் தாக்கியது நம்மைக் காத்துக்கொள்ளுவதற்காகவே தான். எனவே, அது 'காப்புரிமைச்' செயல் (Act done in Private Defence) ஆகிறது. காப்புரிமைச் செயலால் விளையும் தீங்கு குற்றம் ஆவதில்லை.

எனவே, குற்றச் செயல்களிலிருந்து காத்துக்கொள்ளும் உரிமையை—‘காப்புரிமை’யைச் சட்டம் நம் ஒவ்வொருவருக்கும் அளிக்கிறது: காப்புரிமைச் செயல்களால் விளையும் தீங்குகள் குற்றங்களாவதில்லை எனவும் கூறுகிறது. காப்புரிமைச் செயல்களைச் சட்டம் அனுமதிப்பதோடு மட்டுமன்றி, இச் செயல்களுக்கு ஊக்கமும் அளிக்கிறது.

தனி மனிதர்களின் பாதுகாப்புக்கென்று உள்ள இந்தக் ‘காப்புரிமை’, சட்டம் நமக்களிக்கும் முக்கியமான உரிமையாகும்.

காப்புரிமைபற்றிய விவரங்களை நாம் நன்கு தெரிந்துகொள்ளுவது, குற்றச் செயல்கள் குறைவதற்கும், சமூகத்தில் அமைதி நிலவுவதற்கும் அவசியமானதாகும்.

**நம் உடலையும் பொருளையும் காப்பது நம் உரிமை**

நாம் உயிர் வாழ்வதற்கு இன்றியமையாதது உடல் நலம். அதற்கு அடுத்துள்ளது நம் உடைமைப் பொருள்கள். எனவே, நம் உடலுக்குப் பிறர் ஊறு விளைவிக்காமல் பாதுகாத்துக்கொள்ளுவதுபோல் நம் உடைமைப் பொருள்களையும் பாதுகாப்பது முக்கியமானது.

இயல்பாகவே, ஒருவரை மற்றவர் அடிக்கின்றார் என்றால் அடிபடுபவர் அடிகளைப் பட்டுக்கொண்டு வாளா இருப்பது இயலாததாகும். புலன்களை வென்ற ஞானிகளால் அவ்வாறு பொறுமையுடன் இருக்க முடியலாம். சாதாரண மனிதன், ஒன்று, அடியைத் தாங்க முடியாமல் ஓடவேண்டும்; அல்லது தம் உடலைப் பாதுகாப்பதற்கு நடவடிக்கை எடுக்க வேண்டும். அடிக்க வருபவர்களுக்கு அஞ்சி ஒருவன் ஓடவேண்டும் என்று சட்டம் கூறவில்லை. அது கோழைத்தனமாகும்; மேலும், அது மோழைச் செயலாகும். குற்றம் புரிபவர்களை வீரர்களாக்குவதாகும், நாம் அவர்களுக்கு அஞ்சி ஓடும் செயல்.

உடலுக்கு ஊறு விளையாமல் தடுக்கும் இயல்பு இயற்கையாகவே மனிதனுக்கு உண்டு. அந்த இயல்பைச் சட்டம் ஏற்று அதை அனுமதிக்கின்றது. எனவே, உடலுக்கு ஊறு விளையாமல் காப்பதற்கான செயல்கள் காப்புரிமைச் செயல்கள் ஆகின்றன.

உடல் நலனுக்கு அடுத்தபடி முக்கியமானது உடைமைப் பொருள்கள். இப் பொருள்களைப் பிறர் நம்மிடமிருந்து பறித்துச் செல்லுவதை நாம் பார்த்துக்கொண்டிருக்க முடியாது; அவ்வாறு வேண்டாம் என்றே சட்டமும் கூறுகிறது. நம் உடைமைப் பொருள்கள் இருவகைப்படுவன. பணம், நகைபோன்ற அசையும் பொருள்கள் (சங்கம சொத்துகள்) ஒருவகை; வீடு, நிலம்போன்ற அசையாப் பொருள்கள் (தாவர சொத்துகள்) மற்றொரு வகை.

நம் கையில் வைத்திருக்கும் பணப்பையை ஒருவர் திருடிக் கொண்டு போவதைத் தடுக்கும் உரிமை நமக்கு உண்டு. இதுபோல் நம் உடைமையிலுள்ள வீட்டுக்குள் அல்லது நிலத்திற்குள் பிறர் நுழைந்து ஆக்கிரமிப்பதைத் தடுக்கும் உரிமையும் நமக்கு உண்டு. நம் உடைமைப் பொருள்களைக் காப்பாற்றிக் கொள்ளும் செயல்களும் காப்புரிமைச் செயல்களாகின்றன.

இவ்வாறு, நம் உடல், நம் சொத்து இவ்விரண்டிற்கும் பிறரால் தீங்கு விளையாமல் பாதுகாக்கும் உரிமை நமக்கு இருக்கின்றது.

**பிறர் உடலும், பிறர் பொருளும் பேணுவதும் நம் உரிமை:** சமுதாய வாழ்வில் நம்மைமட்டும் நாம் பாதுகாத்துக்கொண்டால் போதுமா? வயது முதிர்ந்த கிழவனை ஒருவன் அடிக்கின்றான். உதவியற்ற ஒரு பெண்ணை ஓர் அயலான் கற்பழிக்க முயலுகிறான். இப்பொழுது நாம் இதைப் பார்த்துக்கொண்டு எதுவும் செய்யாமல் இருக்க முடியுமா? முடியாது. அவ்வாறு இருப்பதும் முறையாகாது. இதைத் தடுக்க வேண்டும் என்று நம் உள்ளுணர்ச்சி நம்மை ஊக்குவிக்கிறது. வயது முதிர்ந்த கிழவனை மற்றவன் அடியாதிருக்குமாறு தடுப்பது நம் ஒழுக்கக் கடமை. பெண்ணின் கற்பைக் காப்பாற்ற உதவுவது நமது பெருங்கடமை. எனவே, மற்றவர்களுடைய உடலுக்கு ஊறு விளைக்காமல் தடுத்துப் பாதுகாக்கும் செயல்களையும், காப்புரிமைச் செயல்களாகவே சட்டம் கொள்ளுகிறது.

இது போன்றே, அடுத்தவரது சொத்தை அயலான் ஒருவன் பறித்துக்கொண்டு போவதை வேடிக்கையாக நாம் பார்த்துக் கொண்டு இருப்பது மனிதப் பண்பு ஆகாது. நாம் அதைத் தடுக்க முயலுகிறோம். அடுத்தவரின் சொத்தைப் பாதுகாப்பதற்கு நாம் நடவடிக்கை எடுத்தால் அதுவும் காப்புரிமைச் செயலேயாகிறது.

மனிதனின் நல்லறிவு பிறருக்கு ஏற்படவிருக்கும் இன்னல்களையும் விலக்குவதாகும்.

> அறிவினால் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்
> தந்நோய்போல் போற்றாக் கடை —(குறள், 315)

என்பது வாழ்வின் அறம். எனவே, பிறர்க்குற்ற துன்பத்தைத் துடைக்க முற்படுதலே அறிவினாலாய பயன். துன்பத்திற்கு உள்ளாவோர் நம் உற்றாராகவோ, உறவினராகவோ இருக்கவேண்டும் என்பதில்லை. இரத்த உறவு உள்ளவர்களிடம் மட்டும் நாம் இரக்கம் காட்டுவதில்லை. எவருக்குத் துன்பம் விளைந்தாலும், அதைப்போக்க முயலுவது நம் இயல்பான நற்பண்பாகிறது. ஆதலால், நாம் நம்முடைய உடலையும் உடைமைச் சொத்துகளையும் பாதுகாக்கும்

முறையில் எடுக்கும் செயல்களைப்போலவே, பிறருடைய உடலுக்கும் சொத்துகளுக்கும் தீங்கு விளையாதபடி தடுக்கும் செயல்களும் காப்புரிமைச் செயல்கள் ஆகின்றன.

'காப்புரிமை என்பது நம் உடல், பொருள் இவைகளைக் காப்பதற்கு மட்டுமன்றிப் பிறருடைய உடலையும் பொருளையும் காப்பதற்கும் உள்ள உரிமையாகும். ஆதலால்தான் அதைத் 'தற்காப்புரிமை' எனக் கூருமல், 'காப்புரிமை' என்று குறிக்கிறோம்.

**குற்றங்களுக்கெதிராகவே 'காப்புரிமை' எழுகின்றது**

நம்மைப் போலீசார் கைது செய்கிருர். இது நம் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்தும் செயலாகும். எனினும், போலீசார் நம்மைக் கைது செய்வது குற்றச் செயலாகாது. எனவே, போலீசார் கைது செய்வதைத் தடுக்கும் உரிமை நமக்கு இல்லை. நம்மிடம் உள்ள பொருளைக் கோர்ட்டு அமீனு 'ஜப்தி' செய்து அகற்றுகிருர். இதற்கு எதிராக நாம் பாதுகாப்பு நடவடிக்கை எடுப்பது கூடாது. ஏனெனில், அமீனு ஜப்தி செய்து நம் பொருளைக் கொண்டுபோவது சட்டப்படியான செயல்; குற்றச் செயல் அன்று. எனவே, குற்றச் செயல்களுக்கு எதிராகவே நாம் காப்பு நடவடிக்கைகள் எடுக்க முடியும். ஆதலால், 'காப்புரிமை' என்பது குற்றச் செயல்களில் இருந்துமட்டும் காத்துக் கொள்ளும் உரிமை என்பதை நாம் கவனத்திற் கொள்ள வேண்டும்.

உடலுக்குக் காயம் விளைவித்தல், முறையின்றிச் சிறை வைத்தல், மரணம் விளைவித்தல், இன்னும் பலவகைகளில் உடலுக்கு ஊறுகள் செய்யப்படலாம். திருடியோ, கொள்ளையடித்தோ அசை பொருள்கள் நம்மிடமிருந்து பறிக்கப்படுகின்றன. நம் வசமுள்ள வீடு, நிலம் போன்ற தாவர சொத்துகளில் பிறர் வன்முறையிலோ அல்லது சட்ட விரோதமாகவோ நுழைவதை 'ஆக்கிரமிப்பு' என்கிறோம். நம் பொருள்களைப் பிறர் வேண்டுமென்றே அழிப்பதைச் 'சொத்தழித்தல்' என்கிறோம். இதுபோன்ற குற்றங்களிலிருந்து நம்மையும் பிறரையும் காத்துக்கொள்ளும் உரிமையே 'காப்புரிமை' யாகும்.

**உடற்காப்புரிமையும், பொருள்காப்புரிமையும்**

(1) தன்னையும் பிறரையும் உடலுக்கு ஊறு விளைவிக்கும் குற்றச் செயல்களிலிருந்து பாதுகாத்துக்கொள்ளும் உரிமை; இதை 'உடற்காப்புரிமை' எனலாம் (Right of private defence of body).

(2) திருட்டு (theft), கொள்ளை (robbery), சொத்தழிப்பு (mischief), குற்றமான ஆக்கிரமிப்பு (criminal trespass) இந்தக்

குற்றங்களுக்கு எதிராகத் தன்னுடைய அல்லது பிறருடைய தாவர, சங்கமப் பொருள்களைப் பாதுகாத்துக்கொள்ளும் உரிமை; இதைப் பொருள் காப்புரிமை எனலாம் (Right of private defence of property).

'உடற்காப்புரிமை' எனில், தன் உடல், பிறர் உடல் இரண்டையும் காக்கும் உரிமை; 'பொருள் காப்புரிமை' எனில், தன் பொருள், பிறர் பொருள் இரண்டையும் காக்கும் உரிமை என்பதை நாம் கவனத்திற் கொள்ளவேண்டும்.

'உடற் காப்புரிமை', 'பொருள் காப்புரிமை' இந்த இருவகை உரிமைகளும் 'காப்புரிமை' என்பதில் அடங்குவன. இந்த உரிமைகளை நிலைநாட்டும் செயல்களைக் 'காப்புரிமைச் செயல்கள்' (Acts done in private defence) என்கிறோம். இச் செயல்கள் குற்றங்களாவதில்லை (96, 97 ஆம் பிரிவுகள்).

## காப்புரிமைச் செயலாக மரணத்தையும் விளைவிக்கலாம்

### 1. உடற்காப்புரிமைச் செயலாக மரணம் விளைத்தல்

'உடற்காப்புரிமைச்' செயலாக மரணத்தையும் விளைவிக்கலாம் எனச் சட்டம் கூறுகிறது.

நம்மையோ, அடுத்தவரையோ மற்றொருவர் தாக்குகிறார். தாக்குபவருக்கு மரணத்தை விளைவித்தால்தான் அதிலிருந்து தப்ப முடியும் என்ற நிலை ஏற்படுகிறது. இப்பொழுது நாம் மரணத்தை விளைவிக்கலாம்.

அத்தகைய தாக்குதல்கள் எவை என்பதைச் சட்டம் கூறுகிறது.

1. தாக்குதலால் மரணம் விளையலாம் என்ற உண்மையான அச்சத்தை உண்டாக்கும் தாக்குதல்.

2. அத் தாக்குதலால் கொடுங்காயம் விளையலாம் என்ற உண்மையான அச்சத்தை உண்டாக்கும் தாக்குதல்.

3. பலவந்தப் புணர்ச்சி (வன்முறைப் புணர்ச்சி) இழைக்கும் கருத்துடன் தாக்குதல்.

4. காம வேட்கையைத் தீர்க்கும் கருத்துடன் தாக்குதல்.

5. கடத்திச் செல்லுதல் (abduction), கவர்ந்து செல்லுதல் (kidnapping) இக் கருத்தோடு தாக்குதல்.

6. பொது அதிகாரிகளிடம் முறையிட்டு வெளிவர இயலாத நிலையில் ஒருவரை முறையின்றிச் சிறைவைக்கும் கருத்தோடு தாக்குதல்.

மேலே கண்ட அறுவகைத் தாக்குதல்களுக்கும் நாமோ, பிறரோ ஆளானால், அவ்வாறு தாக்குபவரை நாம் கொல்லலாம் அல்லது அவருக்கு எந்தவிதமான உடற் காயத்தையும் விளைவிக் கலாம். நம் உடலையோ, பிறர் உடலையோ மேலே கூறியவகையில் தாக்குபவருக்கு மரணத்தை விளைவித்தாவது காத்துக்கொள்ளலாம் என்பது சட்டம். இந்தச் சூழ்நிலைகளில் தாக்குபவருக்கு மரணத்தை விளைவிப்பதோ, வேறு எவ்வித உடற் காயங்களை விளைவிப்பதோ குற்றமாவதில்லை.

இவ்வாறு, 'உடற் காப்புரிமை'ச் செயலாக மரணத்தையும் விளைவிக்கலாம் என்று குற்றவியல் சட்டத்தில் 100ஆம் பிரிவு கூறுகிறது.

## 2. 'பொருட் காப்புரிமைச்' செயலாக மரணம் விளைத்தல்

பொருட் காப்புரிமைச் செயலாக எப்பொழுது மரணத்தை விளைவிக்கலாம் என்பதை 103ஆம் பிரிவு கூறுகிறது:

1. கொள்ளை அடித்தல் (robbery).

2. இரவில் வன்முறை வீடு புகுதல் (house-breaking by night)

3. குடி இருப்பதற்கோ அல்லது பண்டகசாலையாகவோ பயன்படுத்தப்பெறும் கட்டடம், கூடாரம், நாவாய் முதலியவற் றிற்குத் தீவைத்தல்.

4. காப்பு நடவடிக்கைகள் எடுக்கவில்லையெனில் மரணம் அல்லது கொடுங்காயம் விளையலாம் என்ற அச்சமேற்படும் சூழ்நிலையில், திருட்டு, சொத்தழிப்பு, வன்முறை வீடு புகுதல்—இக் குற்றங்களைச் செய்தல்.

மேலே கூறப்பட்ட குற்றங்கள் இழைப்பவர்களுக்கு மரணத்தை விளைவித்தாவது நமது பொருள்களையோ, அடுத்தவர் பொருள் களையோ காப்பாற்றிக்கொள்ளலாம்.

மேலே விவரிக்கப்பட்ட சூழ்நிலைகளில், உடற் காப்புரிமைச் செயலாகவும், பொருட் காப்புரிமைச் செயலாகவும் மரணத்தைக் கூட நாம் விளைவிக்கலாம். அது குற்றமாவதில்லை.

## மரணம் விளைவிக்காத இதர காப்புரிமைச் செயல்கள்

வேறு வகையாக உடலுக்கு ஊறு விளைவிப்பவர்களுக்கும், திருட்டு, சொத்தழிப்பு, சொத்தில் அத்துமீறி நுழைதல் என்ற குற்றங் களைச் செய்பவர்களுக்கும் மரணத்தைத் தவிர்த்து வேறு எந்த விதக் காயத்தையும் விளைவித்து நம் காப்புரிமையைச் செயற் படுத்தலாம்.

நம்மையும் பிறரையும், நம் பொருள்களையும் பிறர் பொருள் களையும் மற்றவர்களின் குற்றச் செயல்களிலிருந்து காத்துக்கொள்ளு வதற்குச் சட்டம் எத்தகைய உரிமையை நமக்கு அளித்திருக்கிறது என்பதை நாம் நன்கு அறிந்துகொள்ளுவது சமூக வாழ்விற்கு நல்லதாகும்.

நம்மைக் குத்துவதற்கென்று கத்தியை ஓங்கிக்கொண்டு ஒருவன் வருகிறான். நாம் நம் கைத்துப்பாக்கியால் அவனைச் சுட்டு வீழ்த் தலாம், அல்லது நம் கத்தியால் அவனைக் குத்தி வீழ்த்தலாம். நம் அருகிருப்போரை அடித்துக் கொல்லுவதற்கென்று ஒருவன் ஒரு பெரிய தடியால் அவரை அடிக்க நெருங்குகிறான். அப்பொழுதும் நாம் அவனைக் கொல்லலாம். ஒரு பெண்ணை பலவந்தமாகக் கற்பழிக்க முயலுபவனை நாம் கொல்லுவதைச் சட்டம் அனுமதிக் கிறது. இரவு நேரத்தில் நம் வீட்டிற்குள் ஒரு திருடன் நுழைந்து விடுகிறான். நாம் அவனை அடித்ததாலோ, துப்பாக்கியால் சுட்ட தாலோ அவன் இறந்துவிட்டான் எனில், அது குற்றமாவதில்லை. நம்வசமுள்ள அல்லது அடுத்தவர்வசமுள்ள பொருளைக் கொள்ளை யடிக்க முயலுபவனையும் நாம் கொல்லலாம்.

## சித்த சுவாதீனமற்றோர், குடிவெறியிலுள்ளோர் இவர்களுக்கு எதிராகவும் காப்புரிமை உண்டு

குற்றங்கள் இழைப்பவர்களுக்கு எதிராகவே நாம் காப்புரிமைச் செயல்களைச் செய்யலாம் எனக் கண்டோம். குற்றமற்ற செயல் களைச் செய்பவர்களுக்கு எதிராக எவ்விதக் காப்புரிமையும் நமக்கு இல்லை. வயது வராத இளைஞர்கள், பைத்தியம் பிடித்தோர், குடி வெறியிலுள்ளோர் இவர்கள் செய்யும் தீங்குச் செயல்களைச் சட்டம் குற்றங்களாகக் கொள்ளுவதில்லை. இவர்களுக்கெதிராகக் காப்புரிமை நமக்கு உண்டா?

ஒரு பைத்தியக்காரர் நம்மீது ஒரு பெரிய கல்லைத் தூக்கிப் போட வருகின்றார். இப்பொழுது அந்த ஆபத்திலிருந்து தப்பு வதற்கு நமக்கு வேறு வழியில்லை எனில் என்ன செய்வது?

நல்லறிவுள்ள மனிதர் அந்தக் குற்றத்தைச் செய்தால் நாம் எவ்வாறு காப்பு நடவடிக்கை எடுக்கலாமோ அவ்வாறே அந்தப் பைத்தியக் காரருக்கு எதிராகவும் நாம் காப்பு நடவடிக்கை எடுக்கலாம். எனவே, நம்மைக் கொல்லவரும் பைத்தியத்தையோ, குடிவெறியி லுள்ள நபரையோ நாம் கொல்லலாம்.

சித்த சுவாதீனமில்லாத நிலையிலோ, குடிவெறி நிலையிலோ ஒருவர் செய்யும் செயல் குற்றமாகாதிருக்கலாம். ஆனால், அச் செயல் களுக்கு எதிராகக் காப்பு நடவடிக்கை எடுக்கும் உரிமை நமக்கு இருக்கிறது. அவர்கள் செயல் குற்றமாகாதிருந்தாலும், அச் செயல் களுக்கு எதிராகக் காப்புரிமை உண்டு. (98ஆவது பிரிவு.)

**குற்றமிழையாதவரும் காப்புரிமைச் செயலால் பாதிக்கப்படலாம்**

பிறருடைய தாக்குதலால் தமக்கோ அல்லது அடுத்தவருக்கோ மரணம் விளையலாம் என்ற உண்மையான அச்சத்துடன் ஒருவர் இருக்கிறார். ஆனால், காப்புரிமைச் செயலை அவர் செய்தால் ஒரு குற்றமுமறியாத மற்றொருவர் பாதிக்கப்படலாம் என்ற நிலை ஏற்படுகிறது. இந் நிலையிலும் ஒருவர் காப்புரிமைச் செயலைச் செய்யலாமா? செய்யலாம் என்று சட்டம் அனுமதிக்கிறது. இச்செய லால் எந்தக் குற்றமும் செய்யாத ஒரு மூன்றாவது நபருக்குத் தீங்கு விளைந்தாலும் அது குற்றமாவதில்லை. (106ஆவது பிரிவு.)

ஒருவரைக் கொல்லவேண்டும் என்று, இருபது அல்லது முப்பது பேர்கள் கொண்ட கூட்டத்தினர் முனைந்து நிற்கின்றனர். அந்தக் கூட்டத்தினரை நோக்கித் துப்பாக்கியால் சுட்டால்தான் அவர் தப்பமுடியும் என்ற நிலை ஏற்படுகிறது. ஆனால், அந்தக் கூட்டத்தில் நான்கைந்து குழந்தைகளும் தற்செயலாக நிற்கின் றனர். துப்பாக்கியால் சுட்டதால் அந்தக் குழந்தைகளில் ஒன்று இறந்துவிட்டது என்று வைப்போம். இறந்த குழந்தை ஒரு குற்றமு மறியாததுதான். எனினும், இந்தச் சூழ்நிலையில் குழந்தைக்கு மரணத்தை விளைத்தது குற்றமாவதில்லை.

மரண பயத்தில் இருப்பவரின் நிலையைக் குறித்துச் சட்டம் இச் சலுகையை அளிக்கிறது. இந்த விதி, மரணம் விளையலாம் என்ற உண்மையான அச்ச நிலை ஏற்படும்பொழுதுதான் பொருந்தும் என்பதை நாம் கவனிக்கவேண்டும். மற்றச் சூழ்நிலை களில் எழும் காப்புரிமைச் செயல்களுக்கு இந்த விதி பொருந்து வதில்லை.

## 2. காப்புரிமைக்குள்ள கட்டுப்பாடுகள்

குறிப்பிட்ட சூழ்நிலைகளில் உடலையும் பொருளையும் குற்றச் செயல்களிலிருந்து காத்துக்கொள்வதற்கெனவே 'காப்புரிமை'யை நமக்குச் சட்டம் அளிக்கின்றது; குற்றவாளிகளைத் தண்டிக்கும் நோக்கத்துடன் இந்த உரிமை நமக்கு அளிக்கப்படவே இல்லை. எனவே, இந்த உரிமையின் பெயரால் நாம் குற்றவாளியைத் தண்டிக்க முற்படுவது கூடாது.

### 1. ஆபத்து விளையும் என்ற அச்சம் இருக்கும் வரையில்தான் 'காப்புரிமை' உண்டு

நம்மைக் கத்தியால் ஒருவர் குத்த வருகிறார். அவர் குத்திவிடலாம் என்ற ஆபத்து எவ்வளவு நேரம்வரை நீடிக்கின்றதோ அவ்வளவு நேரம்வரைதான் நம் காப்புரிமையும் நீடிக்கின்றது. அந்த ஆபத்து நீங்கியபின் காப்புரிமை நமக்கு இல்லை. அவர் நம்மைக் குத்த வரும்பொழுது அதைத் தவிர்ப்பதற்கென நாம் அவருக்கு மரணத்தை விளைவிக்கலாம், அல்லது கொடுங்காயத்தை விளைவிக்கலாம். நம்மைக் குத்தவந்தவர் நம்மிடமும் கத்தி இருப்பதைக் கண்டோ, அல்லது நமக்கு உதவியாகப் பிறர் வருவதை அறிந்தோ அவர் ஓடுவிடுகிறார் என வைப்போம். அவ்வாறு ஓடுபவரைத் துரத்திப் பிடித்துக் கொல்லுவதோ, கொடுங்காயம் விளைவிப்பதோ கூடாது. அவ்வாறு செய்வது காப்புரிமைச் செயலாகாது. ஏன்? அவர் ஓட ஆரம்பித்த பிறகு, நமக்கு எந்தவித ஆபத்தும் இல்லை. ஆபத்து நீங்கியபின் 'காப்புரிமை' இல்லை.

ஓட ஆரம்பித்தவரைப் பிடித்துப் போலிசில் ஒப்படைக்கலாம். ஆனால், நாம் அவருக்குக் காயம் விளைத்தல் முறையன்று.

நம்மை பலவந்தமாக ஒருவர் ஓர் அறையில் போட்டுப் பூட்டி அடைக்க முயலுகிறார். அப்பொழுது நாம் அவருக்கு எந்தவித உடற்காயத்தையும் விளைத்து அதைத் தடுக்க முயலலாம். நம்மை அவர் பூட்டிச் சென்றபின் எப்படியோ நாம் தப்பித்து வந்து விடுகிறோம். பிறகு, அவரைப் போய்த் தாக்குவது காப்புரிமைச் செயல் அன்று.

ஒரு பெண்ணை பலவந்தமாக ஒருவன் கற்பழிக்க முயலுகிறான். அந்தச் செயலைத் தடுப்பதற்கென நாம் அவனைக் கொல்லவும் செய்யலாம். ஆனால், கற்பழித்தபின் ஓடிப்போனவனைத் தேடிப் பிடித்துக் கொல்லுவது கூடாது.

உடலுக்கு ஊறு செய்யும் குற்றத்தாலோ, குற்ற முயற்சியாலோ, உடலுக்கு ஆபத்து விளையலாம் என்ற அச்சம் எப்பொழுது ஆரம்ப

மாகிறதோ, அப்பொழுதிருந்து அந்த அச்சம் நீங்கும்வரைதான் 'உடற் காப்புரிமை' நமக்குண்டு. அதற்குப்பின் அவ்வுரிமை இல்லை.

இம்மாதிரியே, ஒரு பொருளுக்கு ஆபத்து விளையலாம் என்ற அச்சம் எப்பொழுது தோன்றுகிறதோ, அப்பொழுதிருந்து அந்த அச்சம் நீங்கும்வரைமட்டுமே 'பொருட் காப்புரிமை' உண்டு.

நம் கையிலிருந்த பொருளை ஒருவன் திருடிக்கொண்டு ஓடுகிறன் எனில், அவனைப் பிடித்து நம் பொருளை மீட்டுக் கொள்ளலாம். அவ்வாறு மீட்பதற்கு வேண்டிய பலாத்காரத்தை நாம் பயன்படுத்தலாம். பொருளை மீட்டுக்கொண்டபின்னும், திருடனை அடித்துத் துன்புறுத்துவது காப்புரிமைச் செயலாகாது. திருடிய பொருளோடு அவன் ஓடி மறைந்துவிட்டான் எனில், அதற்குப்பின் நமக்குக் 'காப்புரிமை' இல்லை. போலிசில்தான் புகார் செய்யலாம்.

இரவில் நம் வீட்டுக்குள் கள்ளத்தனமாக நுழைந்தவனைக் கொல்லலாம் எனக் கண்டோம். வீட்டில் நுழைந்தவன் வீட்டை விட்டு வெளியேறி ஓடிவிட்டான் என்றால், அவனைத் துரத்திச் சென்று கொல்லுதல் கூடாது.

நம் சொத்தில் குற்றமாக ஆக்கிரமித்திருப்பவர், அவ்வாறு ஆக் கிரமிப்பில் இருக்கும்வரை நம் காப்புரிமைக்கு உட்பட்டவராகிறார். ஆக்கிரமிப்பு அகன்றபின் அவருக்கெதிராக நமக்குக் 'காப்புரிமை' இல்லை.

இவ்வாறு, உடலுக்கோ, பொருளுக்கோ பிறரால் ஆபத்து விளையவிருக்கிறது என்ற அச்சம் நம் மனத்தில் இருக்கும்வரைதான் நமக்குக் 'காப்புரிமை' உண்டு என்பது முக்கியமான சட்ட விதியாகும்.

## 2. தேவையான அளவிற்கே 'காப்புரிமை' செயற்பட வேண்டும்

நம்மைக் காத்துக்கொள்ள உதவுவதே காப்புரிமையாகும். ஒரு குற்றச் செயலிலிருந்து பாதுகாத்துக்கொள்ளுவதற்கு ஏற்ற வகையிலேயே காப்புரிமைச் செயல் அமைதல் வேண்டும். காத்துக் கொள்ளுவதற்கு அவசியமான செயலாக அது இருத்தல் வேண்டும். அதற்கு மிஞ்சிய செயலாக அது இருக்கக்கூடாது.

நம் பொருளைத் திருடுபவனுக்கு எதிராக நமக்குக் காப்புரிமை உண்டு. அதைத் தடுப்பதற்கென, திருட முயலுபவனுக்கு எந்த

விதக் காயத்தையும் நாம் விளைவிக்கலாம் என்பது சட்டம். ஆனால், 'பஸ்' நிலையத்தில் நிற்கும் நம்முடைய பெட்டி ஒன்றைத் திருட ஒருவன் முயலுகிறானெனில், உடனே ஒரு பெரிய தடியை எடுத்து அவன் மண்டையில் அடித்தால் அது அளவு மீறிய செயலாகும்; அது காப்புரிமையைக் கடந்த செயலாகும். நம்மை ஒருவர் கையால் அடிக்க வருகின்றார் என்றால், உடனே ஒரு கத்தியை எடுத்து அவருடைய கையை வெட்டுவது காப்புரிமைச் செயலாகாது; அது குற்றச் செயலாகும். கையால் அடிக்க வரும்வரை நாமும் கையால் தடுக்கலாம் அல்லது கையால் அடிக்கலாம். ஆனால், அவர் ஒரு கத்தியை எடுத்துக் குத்த வந்தார் எனில், நாம் அவரைக் கைத்துப்பாக்கியால் சுட்டு வீழ்த்தலாம்.

இவ்வாறு, நமக்குத் தீங்கு நிகழாதவாறு தடுப்பதற்குத் தேவையான அளவிற்கே நாம் காப்புரிமையைப் படுன்படுத்த வேண்டும். கையிகந்த முறையில் நாம் 'காப்புரிமை'யைப் பயன்படுத்தல் கூடாது எனச் சட்டம் கூறுகிறது. அவ்வாறு, செய்தால் அது காப்புரிமையைக் கடந்த குற்றச் செயலாகிவிடும்.

### 3. பொது அதிகாரிகளின் பாதுகாப்புப் பெறுவதற்கு வாய்ப்பு இருந்தால் காப்புரிமை எழுவதில்லை

குற்றங்களைத் தடுப்பதும், குற்றவாளிகளைத் தண்டிப்பதும் அரசின் முக்கியக் கடனாகும். எனவே, ஒருவரால் நமக்கு ஆபத்து விளையவிருக்கிறது என்று நாம் போலிசுக்கு அறிவித்தால், போலிசார் நமக்குத் தக்க பாதுகாப்பு அளிக்கின்றனர். நம் சொத்தை அழிக்கப் பிறர் முற்படுகின்றனர் என்பது அவர்களுக்கு அறிவிக்கப்பட்டால், அது நிகழாதவாறு போலிசார் தடுக்கின்றனர். இவ்வாறு, பிறர் குற்றச் செயல்களிலிருந்து நம்மைப் பாதுகாக்கும் பொறுப்பை அரசாங்கமே ஏற்று நடத்துகிறது. அவ்வாறின்றி, ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் வலிமையைப் பயன்படுத்தி உடலையோ, பொருளையோ பாதுகாக்கவேண்டும் என்ற நிலை இருந்தால், நாட்டில் ஒழுங்கின்மையும் அமைதிக்குலைவும் பரவிவிடும்.

ஆனால், பொது அதிகாரிகளின் பாதுகாப்புப் பெறுவதற்கு வாய்ப்பு இல்லாத சூழ்நிலைகளில் நம் பலத்தையே நாம் நம்பியிருக்க வேண்டியதிருக்கிறது. திடீரென்று நம்மைத் தாக்க வருபவரிடமிருந்து நம்மைக் காத்துக்கொள்ளுவதற்குப் போலிசாரால் உதவ முடியாது. இரவில் நம் வீட்டிற்குள் கள்ளமாக நுழைந்து திருடுபவனுக்கு எதிராக, அவ் வேளையில் போலிசாரின் உதவி நமக்குக் கிடைப்பதற்கு வழியில்லை. இவ்வாறு, பொது அதிகாரிகளின் உதவியும் பாதுகாப்பும் கிடைக்க இயலாத வேளையில், நாமேதாம்

நம்மைக் காத்துக்கொள்ளவேண்டும் என்ற கட்டாயம் ஏற்படுகிறது. இந்த நிலையில்தான் நமக்குக் 'காப்புரிமை' உண்டு. பொது அதிகாரிகளின் உதவி நமக்குக் கிடைக்கும் வாய்ப்புள்ளபொழுது நம் பலத்தைப் பயன்படுத்துவதைச் சட்டம் அனுமதிப்பதில்லை. எனவே, அந் நிலையில் 'காப்புரிமை' நமக்கில்லை.

என் உடைமையில் ஒரு நிலம் இருக்கிறது. இந்த நிலத்தை வன்முறையில் என்னிடமிருந்து கைப்பற்ற வேண்டும் என்று என் பகைவர் கருதுகிறார். அவர் பத்துப் பதினைந்து பேர்களைச் சேர்த்துக் கொண்டு, வேல், கம்பு முதலிய ஆயுதங்களோடு என் நிலத்தில் புகுந்து ஆக்கிரமித்துக்கொள்கிறார். வீட்டில் இருக்கும் எனக்கு இந்தத் தகவல் கிடைக்கிறது. நான் இப்பொழுது என்ன செய்வது? போலிசில் புகார் கொடுக்கவேண்டும். போலிசார் தக்க பலத்துடன் வந்து நிலத்தை மீட்டு என் வசம் ஒப்புவிப்பார்கள். இந்த முறையைக் கைவிட்டு, நானும் பத்துப் பேர்களை ஆயுதபாணிகளாகச் சேர்த்துக்கொண்டு, நிலத்திற்குப் போய் என் பகைவரின் ஆட்களோடு சண்டையிட்டால், அது 'கலகம்' (rioting) விளைவிக்கும் குற்றமேயாகும்; 'காப்புரிமை'ச் செயலாகாது.

ஆனால், நானும் என் ஆட்களும் அந்த நிலத்தை உழுது கொண்டிருக்கும்பொழுது, என் பகைவரும் அவரது ஆட்களும் நிலத்தில் புகுந்து ஆக்கிரமிக்க முற்பட்டால், நான் பலாத்காரத்தைப் பயன்படுத்தி அவர்களை வெளியேற்றலாம். அது 'காப்புரிமை'ச் செயலாகிறது. ஏனெனில், நிலத்தை உழுதுகொண்டிருக்கும் எனக்கு ஆக்கிரமிப்பைத் தடுப்பதற்கான உதவியைப் போலிசாரிடமிருந்து பெறும் வாய்ப்பு இல்லை. ஆக்கிரமிப்பாளர்கள் நிலத்தில் நுழைந்ததும், நான் நிலத்தை விட்டுவிட்டு ஓடிப் போலிசில் புகார் செய்யவேண்டும் என்ற அவசியம் இல்லை.

நம் வீட்டிலிருந்து காரியாலயத்திற்குச் செல்லும் வழியில் ஓரிடத்தில் நம்மைத் தாக்குவதற்கென்று இருவர் காத்திருக்கின்றனர் என்று நமக்குச் செய்தி கிடைக்கிறது. உடனே நாமும் சிலரைச் சேர்த்துக்கொண்டு சண்டைக்கு ஆயத்தமாகக்கூடாது. போலிசில் இதுபற்றித் தகவல் கொடுத்து அவர்கள் உதவியையே நாடவேண்டும். நம் பகைவர் அவ்வாறு அங்கிருப்பது தெரியாமல் நாம் அந்த வழியே சென்று, அவர்கள் நம்மைத் திடீரெனத் தாக்க முற்பட்டால், அந்த வேளையில் நம்மைக் காப்பதற்கு நாமும் அவர்களைத் தாக்கலாம்.

எனவே, பொது அதிகாரிகளின் உதவியையும் பாதுகாப்பையும் நாம் பெறுவதற்கு அவகாசம் அல்லது வாய்ப்பு இருந்தால்,

'காப்புரிமை' எழுவதில்லை. காப்புரிமைக்கான கட்டுப்பாட்டில் இது ஒரு முக்கியமான விதியாகும்.

## 4. பொது ஊழியர்களின் வரம்பு மீறிய செயல்களும் காப்புரிமையும்

நீதி இலாக்காவினர், போலிசு அதிகாரிகள், இவர்கள் போன்ற அரசாங்க அதிகாரிகளையும், இவர்கள் அதிகாரம் பெற்று இயங்கு பவர்களையும் சாதாரணமாக நாம் 'பொது ஊழியர்கள்' (public servants) என்று கூறுகிறோம். இவர்கள் சட்டத்தை அமல் நடத்தவும், நீதி வழங்கவும், அமைதி நிலவச் செய்யவும், இதர அரசாங்க அலுவல்களை நடத்தவும் உதவுகின்றனர். இவர்கள் செயற்படுவது சமூகத்தின், பொதுமக்களின் நன்மைக்காகவேதான். இவர்களது செயல்களுக்கெதிராக மக்கள் வன்முறையில் ஈடுபடுவதைச் சட்டம் அனுமதிப்பதில்லை.

சாதாரணமாக, பொது ஊழியர்களின் செயல்கள் சட்டப்படி யானதாகவும், அவர்களது அதிகார வரம்பிற்குட்பட்டதாகவுமே இருக்கின்றன. எனவே, இச் செயல்களுக்கு எதிராகக் 'காப்புரிமை' எவருக்கும் இல்லை.

சில வேளைகளில் பொது ஊழியர்கள் தங்கள் அதிகார வரம்பைக் கடந்து செயல்கள் புரிவது உண்டு. எனவே, அவை சட்ட முறையான செயல்கள் ஆவதில்லை. இப்பொழுது, இச்செயல்களுக்கு எதிராகக் 'காப்புரிமை' ஒருவருக்கு உண்டா?

நீதிமன்றம் விடுத்துள்ள ஒரு கைதாணையை (arrest warrant) நிறைவேற்றும் வகையில் ஓர் அமீனா ஒருவரைக் கைது செய்ய முயலுகிறார். கைதாணையின்மீது நீதிமன்றத்தின் முத்திரை பதிக்கப் படவில்லை. முத்திரையிடப்படாத கைதாணை சட்டப்படி செல்லாத தாகும். எனவே, கைது செய்யப்பட வேண்டியவர் அமீனாவைப் பிடித்துக் கீழே தள்ளிவிட்டுத் தப்பிவிடுகிறார். இப்பொழுது அமீனாவைத் தாக்கிய செயலைக் 'காப்புரிமைச் செயல்' என்று கொள்ளலாமா? கூடாது என்கிறது சட்டம்.

கைதாணை உத்தரவில் நீதிமன்ற முத்திரை இல்லாததால் அந்தக் கைதாணை செல்லாததுதான். செல்லாத கைதாணையின் அடிப் படையில் ஒருவரைக் கைது செய்வது கூடாதுதான். எனவே, பொது ஊழியரான அமீனா கைது செய்ய முயன்றது சட்ட முறை யற்ற செயலேயாகும். இருந்தாலும், அமீனாவின் கருத்தென்ன? நீதிமன்ற உத்தரவை, சட்டப்படியான கைதாணையை நிறைவேற்று கிறோம் என்ற நேர்மையான நம்பிக்கையோடுதான் (good faith)

அவர் கைது செய்ய முனைந்தார். கைதாணையில் இருந்த குறைபாடு அவருக்குத் தெரியாது. நீதிமன்ற உத்தரவுப்படி நபர்களைக் கைது செய்யும் அதிகாரம் அவருக்குண்டு. கைதாணையும் கையில் இருக்கிறது. எனவே, அவரது நடத்தை நேர்மை எண்ணத்தோடு கூடிய செயல். ஆதலால், சட்டம் அச் செயலுக்குப் பாதுகாப்பளிக்கிறது. அமீனாவைக் கீழே தள்ளிய செயலைக் குற்றம் எனக் கொண்டு சட்டம் தண்டிக்கிறது.

இந்த அமீனா கைதாணையைக் கையில் வைத்துக்கொண்டு அதன் அடிப்படையில் ஒருவருடைய அசைபொருள்களை 'ஜப்தி' செய்கின்றார் என வைப்போம். இதை நேர்மை எண்ணத்தோடு செய்யப்பட்ட செயல் என்று கொள்ளுவதற்கில்லை. ஏனெனில், கைதாணையில் உள்ள உத்தரவு அதில் குறிப்பிட்டவரைக் கைது செய்யவேண்டும் என்பதுதான்; ஜப்தி செய்யவேண்டும் என்பதன்று. எனவே, 'ஜப்தி' செய்வதைத் தடுக்கும் உரிமை பிறருக்கு உண்டு. அவ்வாறு தடுத்தால் அது 'காப்புரிமை'ச் செயலேயாகும்; குற்றம் ஆவதில்லை.

ஒரு போலிசு அதிகாரி ஒருவரைக் குற்றம் இழைத்தவர் என உண்மையாகச் சந்தேகப்பட்டுக் கைது செய்கிறார். கைது செய்யப்படுவதைத் தடுக்கும் வகையில் போலிசாரைக் கைது செய்யப்பட்டவர் தாக்கிவிடுகிறார். கைது செய்யப்பட்டவர்மீது ஏற்பட்ட சந்தேகம் பொய்த்துவிட்டது என வைப்போம். இருந்தாலும், அவர் போலிசாரைத் தாக்கிய செயல் குற்றமானதேயாகும். ஏனெனில், போலிசு அதிகாரி நேர்மையான எண்ணத்தோடுதான் கைதுசெய்தார்.

பொது ஊழியர் செய்யும் செயல் அவரது பதவிக்குரிய செயலாக இருக்க வேண்டும். வரி இலாகா அதிகாரிக்கு எவரையும் கைது செய்யும் அதிகாரம் இல்லை. அதனால் அவர் எவரையேனும் கைது செய்ய முயன்றால், அது அவரது பதவிக்குரிய செயல் அன்று. பொது ஊழியரின் பதவிக்குரிய செயல்களைத்தான் சட்டம் பாதுகாக்கிறது; மற்றச் செயல்களுக்குச் சட்டப் பாதுகாப்பு இல்லை.

எனவே, ஒரு பொது ஊழியர் தமது பதவிக்குரிய செயலை நேர்மை எண்ணத்தோடு செய்கையில், அது சட்ட நிறைவுற்ற செயலாக இல்லாதிருந்தாலும், அதற்கெதிராகக் 'காப்புரிமை' இல்லை. (99ஆவது பிரிவு.)

இந்த விதிக்கு முக்கிய விலக்கு ஒன்று உண்டு. பொது ஊழியரின் செயல் மரணத்தையோ, கொடுங்காயத்தையோ விளைக்

கலாம் என்ற அச்சந்தரும் செயலாக இருப்பது கூடாது. அவ்வாறு இருந்தால் அதற்கெதிராகக் காப்புரிமை உண்டு.

மேலே கூறியவாறு, பொது ஊழியரின் நேரடிச் செயலைப் போன்றே, பொது ஊழியரின் உத்தரவு பெற்றவரின் செயலுக்கும் சட்டம் பாதுகாப்பளிக்கிறது.

ஒரு பொது ஊழியர் இது போன்ற செயல்களைச் செய்யும் பொழுது, அவர் பொது ஊழியர் என்பது தெரியும் முறையில் இருத்தல் வேண்டும். பதவிக்குரிய உடையில்லாத போலிசார் கைதுசெய்வதை, அவர் போலிசார் என்று அறியாத ஒருவர் தடுக்கலாம்.

எனவே, ஒருவரைப் பொது ஊழியர் என்று அறியாத, அல்லது அறிந்துகொள்வதற்குக் காரணம் இல்லாத ஒருவர் அந்த ஊழியரின் செயல்களுக்கு எதிராகக் 'காப்புரிமை' கொண்டாடலாம்.

இந்த முறையில், பொது ஊழியர்களின் செயல்களைக் குறித்துக் 'காப்புரிமை' கட்டுப்படுத்தப்படுகிறது.

இதுவரை, 'காப்புரிமை' என்பது என்ன; தன்னையும் பிறரையும், தம் பொருளையும் பிறர் பொருளையும் குற்றச் செயல்களிலிருந்து காத்துக்கொள்ளும் உரிமையே காப்புரிமை; உடற் காப்புரிமை, பொருட் காப்புரிமை இவைகளைக் கொண்டாடும் விதத்தில் எப்பொழுது மரணத்தையும் விளைவிக்கலாம்; காப்புரிமைக்குள்ள கட்டுப்பாடுகள் எவை' என்பனபற்றி விரிவாகக் கண்டோம்.

இந்த விதிகள் குற்றவியல் சட்டத்தில் 96—106 பிரிவுகளில் கூறப்பட்டிருக்கின்றன. இந்தக் காப்புரிமைபற்றி நாம் நன்கு தெரிந்து அந்த உரிமையைப் பேணும் விதத்தில் நடந்துகொண்டால், பொதுவாகப் பல குற்றங்கள் குறைவதற்கு ஏதுவாகும். மேலும், சமுதாய வாழ்வின் அமைதியைக் காப்பதற்கு இத்தகைய 'காப்புரிமை' அவசியமானதாகும்.

**'காப்புரிமை' நமக்கு உண்டென்ற கவனம் வேண்டும்**

நடைமுறையில் காப்புரிமைபற்றிய கவனம் நம்மில் பலருக்கு இருப்பதில்லை.

'நாற்பது பேர்கள் பிரயாணம் செய்துகொண்டிருந்த பஸ் ஒன்று நிறுத்தப்பட்டு, இரண்டு நபர்கள் கத்திகளைக் காட்டி அச்சுறுத்தி, பஸ்ஸில் இருந்த பெண்களின் நகைகளை அகற்றிச் சென்

றனர். இரண்டு மைல்களுக்கு அப்பால் இருந்த போலிசு நிலை யத்தில் இது சம்பந்தமாகப் புகார் கொடுக்கப்பட்டிருக்கிறது. புலன் விசாரணை நடந்துகொண்டிருக்கிறது'—இது போன்ற செய்திகளை நாம் சில வேளைகளில் செய்தித் தாள்களில் படிக்கின்றோம். அந்த பஸ்ஸில் இருந்த ஆண்கள் ஊக்கத்தோடு தலையிட்டுக் கத்தியைக் காட்டி அச்சுறுத்திய திருடர்களைப் பிடித்திருக்கலாம். ஆனால், அவ்வாறு செய்வதில்லை. ஏன்? 'நமக்கென்ன?' என்ற மனப் பான்மை; 'இதில் நாம் தலையிடலாமா?' என்ற சந்தேகம். முடிவில் பஸ்ஸில் இருந்த ஆண்கள் ஒன்றுக்கும் உதவாமல், தம் கண்முன் நடக்கும் கொடுங்குற்றங்களைப் பார்த்தும் வாளாவிருக்கும் பரிதாப நிலையைப் பார்க்கிறோம்! இது இழிந்த ஒரு நிலையாகும்! இந் நிலைக்குச் சட்டம் பொறுப்பன்று; நாமேதாம் பொறுப்பு.

நம் நாட்டு மக்கள் தங்களுக்குத் தாங்களே செய்துகொள்ள வேண்டியவைகளைச் செய்வதில்லை. 'காப்புரிமை' உண்டென்ற கவனம் நமக்கிருப்பதில்லை. ஒரு திருடன் கத்தியைக் காட்டி நம் பொருளைப் பறித்துச் செல்லுகிறான். அதைத் தடுப்பதற்கு நாம் முயலுவதில்லை. காரணம் நம்மில் பெரும்பாலோர் இயல்பாகவே பிறருக்குத் தீங்கிழைக்காத பண்பினைக் கொண்டிருக்கிறோம். எனவே, நமக்குத் தீங்கிழைப்போரையும் விட்டுவிடுகிறோம்! இது பல தீச்செயல்கள் நடப்பதற்கு ஊக்கம் அளிப்பதாகிறது.

இந்தியக் குற்ற இயல் சட்டத்தைத் தொகுத்த ஆங்கில அறிஞர்கள் நூறு ஆண்டுகளுக்கு முன்னரே நம் நாட்டு நிலையைக் கூறியிருக்கின்றனர். 'வழிப்பறி செய்வோரிடமும், சொத்துரிமை களைப் பறிப்போரிடமும் மக்கள் பணிந்துபோவதை இந்த நாட்டில் காண்கிறோம். இதைத் தடுத்து, மக்களிடை தைரியத்தையும் ஆண்மையையும் பெருக்குவதற்கென இந்தக் காப்புரிமைகளை அளிப்பது அவசியமாகிறது' என்று அவர்கள் எடுத்துக்காட்டியிருக் கின்றனர். நூறு ஆண்டுகள் கடந்த பின்னும் நம் நிலை அதிகமாக மாறிவிடவில்லை!

எனவே, இந்தக் காப்புரிமை (right of private defence) சட்டம் நமக்களிக்கும் ஒரு முக்கியமான உரிமையாகும். இந்த உரிமையை நாம் நன்குணர்ந்து பயன்படுத்துவது சமுதாய நல்வாழ்விற்கு அவசியமாகும்.

# 17. தண்டனை
## (Punishment)

'குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் தொழில்' (குறள், 549)

'தண்டனை' என்பது என்ன?—தண்டனை அளிப்பதன் நோக்கங்கள்—'அச்சுறுத்துவது தண்டனை' என்ற கொள்கை—'பழி வாங்குவது தண்டனை' என்ற கொள்கை—'குற்றங்களைத் தடுப்பது தண்டனை' என்ற கொள்கை—'சீர்திருத்துவது தண்டனை' என்ற கொள்கை.

குற்றச் செயல்களை நாட்டின் நல்வாழ்விற்குத் தீங்கென அரசு கருதுகின்றது. எனவே, மக்கள் இச் செயல்களில் ஈடுபடுவது கூடாது. தீய செயல்களைச் செய்யாதவாறு மக்களைத் தடுப்பது எவ்வாறு?

### 'தண்டனை' என்பது என்ன?

குற்றச் செயல்களை அரசு கண்டனம் செய்தால் மட்டும் போதாது. கண்டனத்திற்குள்ளான காரியங்களைச் செய்வோர் தண்டனைக்கு ஆளாவார்கள் என்று சட்டம் இருந்தால்தான் தீச் செயல்களைத் தடுப்பது இயலும். தண்டனை இல்லாத வெறும் கண்டனத்தால் யாதொரு பயனும் இல்லை. ஆதலால், குற்றம் இழைப்பவர்களை அரசு துன்பத்திற்குள்ளாக்குகிறது. குற்றவாளிகளை அரசு துன்பமுறும்படி செய்வதை ஒறுத்தல் அல்லது தண்டனை அளித்தல் (punishment) என்கிறோம். எனவே, குற்றம் என்று அரசு ஒன்றைக் கூறினால் அதற்குரிய தண்டனை உண்டு என்பது பொருளாகும். தண்டனையில்லாத குற்றம் இருப்பதில்லை. அரசால் விலக்கப்பட்ட செயல் தண்டனைக்கும் உரியதாக இருக்கும்பொழுதுதான், அதைக் குற்றம் (offence) என்று அழைக்கின்றோம். எனவே, 'குற்றம்' என்ற சொல்லிலேயே தண்டனை என்ற பொருளும் கலந்திருக்கின்றது. இவ்வாறு, குற்றவியல் சட்டத்தின் அடிப்படையாகத் தண்டனை முறை அமைகின்றது.

'குற்றம் செய்யாதவர்கள் உலகில் இருப்பது அருமை. எல்லா உயிர்களும் தண்டனைக்கு அஞ்சியே ஒழுகுகின்றன. தண்ட முறையின் பயனுகவே வாழ்வதற்கு உகந்த இடமாக உலகம் அமைகிறது. தண்டனையினுலேயே உலகம் திருத்தப்படவேண்டும்'— மனுநீதி, (அத். 7, விதி 22).

தண்டனை முறை எவ்வாறு தவிர்க்க முடியாதது என்பதை அந்த நாளிலேயே நம் முன்னேர்கள் கூறியிருக்கின்றனர்.

எனவே, குற்றவியல் சட்டம் அந்தந்தக் குற்றங்களுக்கு ஏற்ற தண்டனையையும் கூறுகிறது. குற்றங்களைக் கூறும் ஒவ்வொரு சட்டத்திலும் அக்குற்றத்திற்குரிய தண்டனையைக் காண்கின்ருேம்.

> 'நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்
> நோயின்மை வேண்டு பவர்' (குறள், 320)

என்ற பொய்யா மொழியின் மெய்யினை உணர்த்துகின்றது, தண்டனை முறை. பிறருக்குத் துன்பம் இழைத்தவர்கள் அந்தத் துன்பத்தின் பயனைத் தாமும் பெறுகின்றனர். நோயின் பயன் நோய் செய்தவரையே சேரும்படி செய்வது தண்டனை முறையாகும்.

உலகில் எங்கு, எவர் குற்றம் இழைத்தாலும், நாம் அதில் அக்கறை காட்டுகிருேம். குற்றம் புரிந்தவர்கள் தண்டனையைப் பெறவேண்டும் என்று விரும்புகின்ருேம். குற்றங்கள்பற்றிய புலன் விசாரணை, குற்ற வழக்குகளில் வரும் சாட்சியங்கள், அந்த வழக்குகளில் ஏற்படும் தீர்ப்பு இவைகள் பற்றி அறிவதில் பொதுமக்கள் மிகுந்த நாட்டம் காட்டுகின்றனர். எனவே, செய்திப் பத்திரிகைகளில் சிவில் வழக்குகளைவிடக் கிரிமினல் வழக்குகள்பற்றிய செய்திகளே அதிகமாக இடம்பெறுகின்றன. கோரமான கொலை, துணிகரக் கொள்ளை, மோசடி இவைபோன்ற குற்றங்கள்பற்றிய செய்திகளையே மக்கள் அக்கறையுடனும் ஆர்வத்துடனும் படிக்கின்றனர். பத்து இலட்ச ரூபாய் பெறுமான சொத்துபற்றிய சிவில் வழக்கு, பத்திரிகைச் செய்தியாவதில்லை. ஆனுல், பத்து ரூபாயை அடுத்தவர் பையிலிருந்து திருடியது பத்திரிகைச் செய்தியாகிறது. எதனுல்?

பொதுவாக, நாம் அனைவருமே குற்றச் செயல்களை வெறுக்கின்ருேம். ஒரு குற்றத்தால் துன்பமடைந்தவர் தனிப்பட்ட ஒருவராக இருந்தாலும், அந்தக் குற்றச் செயலை நாம் அனைவரும் கூடி வாழும் சமுதாயத்திற்கு எதிரான செயல் என்று எண்ணுகிருேம்.

நமக்கு எதிரான செயலாகவே நாம் அதைக் கருதுகிறேம். உண்மையான குற்றவாளி பிடிபடவேண்டும். அவனுக்கு உரிய தண்டனை கிடைக்கவேண்டும் என்று நம் மனம் இயல்பாகவே ஏங்குகிறது. குற்றவாளிக்கு உரிய தண்டனை கிடைத்தவுடன் நமக்கு ஒரு மனநிறைவு ஏற்படுகிறது. இத் தன்மையை மனித உள்ளத்தின் உயரிய பண்பு என்று கூறலாம்.

நீதிக் கதைகளிலும், புராணங்களிலும் நாம் முக்கியமாகக் காண்பது என்ன? நன்மை தீமையை வெல்லுகிறது, தீயோரால் வாட்டப்பட்ட நல்லோர்கள் முடிவில் வெற்றிபெறுகின்றனர் என்பது தான். நல்லோர்கள் அல்லலுற்றுலும் இறுதியில் பெறும் இன்பம், தீயோர்கள் முதலில் வெற்றி கண்டாலும் முடிவில் அடையும் துன்பம் —இவைகளே மனித உள்ளத்திற்கு மாருமல் இதந்தருகின்றன. 'தீமை ஒழியவேண்டும்; தீயோர் நலியவேண்டும்' என்ற கொள் கையையே 'குற்றங்கள் குறைய வேண்டும்; குற்றவாளிகள் தண்டனை பெறவேண்டும்' என்று கூறுகிறேம். எனவேதான், தண்டிப்பது ஒரு தருமம் என்றும், குன்றங்கடிவது வேந்தன் தொழில் என்றும் நம் முன்னேர்கள் கொண்டனர்.

'அரசன் கடமையைச் செய்யும்பொருட்டும், அனைத்துயிர்களை யும் காப்பாற்றும்பொருட்டும் தருமமே உருவான தெய்விக ஒளியுடன் கூடிய தண்டனையைக் கடவுள் படைத்தார்' — மனுநீதி, (அத். 7 விதி 14).

'அரசர்களுக்குத் தண்டத்தோடு கூடிய நீதியினுலேயே எல்லாக் காரியங்களும் நிறைவேறுகின்றன. ஆதலின், அறங்கள் எல்லாவற்றிற்கும் தண்டமே சிறந்த புகலிடமாக எண்ணப் படும்' — சுக்கிர நீதி.

இவ்வாறு, தண்டனையின்றித் தருமம் இல்லை; ஒறுத்தல் முறை யின்றி உயரிய நெறியில்லை என்ற கொள்கை மனித இயல்பை யொட்டி எழுந்ததாகும்.

### தண்டனை அளிப்பதன் நோக்கங்கள்

குற்றம் இழைத்தோரைத் தண்டிப்பதன் நோக்கங்கள் என்ன என்பதுபற்றிக் காண்போம்.

### 'அச்சுறுத்துவது தண்டனை' என்ற கொள்கை

இன்ன குற்றம் செய்தால் இன்ன விதமான தண்டனை கிடைக்கும் என்று சட்டம் கூறுகிறது. இவ்வாறு, தண்டனையைக் கூறிச் சட்டம் மக்களைக் குற்றங்கள் புரியாமல் செய்வதற்கு முயலு

கிறது. எனினும், பேராசையாலோ, கோபத்தாலோ உந்தப்பட்ட வர்கள் தமக்கு வரவிருக்கும் தண்டனையையும் பொருட்படுத்தாது குற்றச் செயல்களில் இறங்குகின்றனர். இந்த நிலையில் சட்டம் தண்டனையை நிறைவேற்றித் தீரவேண்டியிருக்கிறது. அந்தத் தண்டனையால் இரண்டுவிதப் பயன்கள் எழுகின்றன. அளிக்கப் படும் தண்டனை குற்றவாளியின் உடலுக்கு வேதனையையும், உள்ளத் திற்கு அச்சத்தையும் அளிக்கிறது. எனவே, தண்டனையை அனுப வித்தவன் இனி எதிர்காலத்தில் குற்றங்கள் செய்வதற்கு அஞ்சு கிறான். குற்றவாளி தண்டனையில் உழல்வதைச் சமூகத்தில் உள்ள பிறரும் பார்க்கின்றனர். குற்றமிழைத்தால் இதுபோன்ற தண்டனை தமக்கும் கிடைக்கும் என்ற அச்சம் அவர்கள் மனத்திலும் எழுகிறது. குற்றம் செய்வதில் ஓரளவு நாட்டமுள்ளவர்களும், குற்றவாளி படும் தண்டனையைக் கண்டு மனம் திருந்தலாம். இவ்வாறு அளிக்கப் படும் தண்டனை, அதைப் பெற்ற குற்றவாளியையும் அச்சுறுத்து கிறது; பிறரையும் அச்சுறுத்தி நல்வழி நிற்கச் செய்கிறது.

இந்த வகையில், தண்டனை அச்சுறுத்தி நல்வழிப்படுத்துகிறது; 'அச்சுறுத்துவது தண்டனை' என்ற கொள்கையை ஆங்கிலத்தில் 'Deterrent Theory of Punishment' என்று கூறுவார்கள்.

**'பழிவாங்குவது தண்டனை' என்ற கொள்கை**

'வினை விதைத்தவன் வினை அறுக்கவேண்டும்.' 'பழிக்குப் பழி வாங்கவேண்டும்' என்ற எண்ணம் எழுவது இயல்பானதாகும். தீமையை அகற்றவேண்டும், தீயோரை ஒறுக்கவேண்டும் என்று கொதித்து எழுகின்றது நம் உணர்ச்சி. குற்றம் செய்தவன் தண்டனை பெறாமல் தப்பிவிடக்கூடாது என்று இயற்கையாகவே நம் மனம் ஏங்குகிறது. குற்றத்திற்குத் தக்க தண்டனை அளிக்கப்பட்டவுடன் நம் மனத்தில் ஒரு நிம்மதி பிறக்கிறது. இவ்வாறு, அநீதிக்கு எதிராக ஆத்திரங்கொள்ளுதல் மனிதனின் மாண்பாகும்.

முன்னேற்றமடைந்த சமுதாயத்தில் இத்தகைய உணர்ச்சி மக்களிடையே நிலவுவது சமூக நல்வாழ்விற்கு உகந்ததாகும். குற்றம் இழைத்தவன் தண்டனை அனுபவிப்பது அவனுடைய கடன். தண்டனையை அனுபவித்து அந்தக் கடனைத் தீர்த்தவனை, குற்றத்தால் விளைந்த பழியைத் தீர்த்துக்கொண்டவன் என்று கருது கின்றோம். செய்ததீங்கிற்குப் பிராயச்சித்தமாகத் தண்டனை விதிக்கப் படுகிறது.

ஒரு சிறுவன் மற்றொரு சிறுவனை அடிக்கிறான். உடனே அடிபட்ட சிறுவன் தன்னை அடித்தவனைத் திருப்பி அடிக்கிறான்.

தன்மீது கல்லெறிந்தவன்மீது திருப்பிக் கல்லை எறிகிருன் மற்ருெரு சிறுவன். இவ்வாறு, தனக்குப் பிறர் தீங்கு இழைத்தால், அதே தீங்கைப் பிறருக்குச் செய்யவேண்டும் என்ற எண்ணம் எழுவது இயல்பேயாகும். இந்த இயல்பையொட்டியேதான் அந்த நாட்களில் ஒருவன் மற்ருெருவன் கையை வெட்டினுல், அதற்குரிய தண்டனை அக் குற்றம் செய்தவனின் கையை வெட்டுவது என்ற முறை சில நாடுகளில் இருந்துவந்தது. இவ்வாறு, குற்றவாளிமீது பழிவாங்கும் முறையில் தண்டனை அமைகிறது என்பது ஒரு கொள்கை.

ஒருவன் செய்த குற்றத்தால் தீங்கு அடைந்தவர் தனி நபராக இருந்தாலும், அக் குற்றம் சமூகத்திற்கு எதிரான செயலேயாகும். எனவே, சமூகம் அக் குற்றவாளிக்குத் தண்டனை அளித்து அவன் மீது வஞ்சம் தீர்த்துக்கொள்கிறது. சமூகத்திற்கு எதிராகக் குற்ற வாளி இழைத்த குற்றச் செயலுக்குப் பழிவாங்கும் வகையில் அவனுக்குத் தண்டனை விதிக்கப்படுகிறது.

இவ்வாறு, குற்றவாளிமீது வஞ்சம் தீர்க்கும் வகையில் தண்டனை அளிக்கப்படுகிறது; 'பழிவாங்குவது தண்டனை' என்ற கொள்கையை ஆங்கிலத்தில் 'Retributive Theory of Punishment' என்பார்கள்.

### 'குற்றங்களைத் தடுப்பது தண்டனை' என்ற கொள்கை

தண்டனையால் குற்றவாளிகளுக்கு அச்சம் ஏற்படுகிறது என்பது உண்மைதான். 'பழிக்குப் பழி வாங்கவேண்டும்' என்ற வேட்கை தணிகிறது என்பதும் உண்மைதான். எனினும், குற்றவியல் சட்டத்தின் நோக்கம் என்ன? சமுதாயத்தில் குற்றங்கள் நிகழாத வாறு தடுக்கவேண்டும் என்பதேயாகும். குற்றங்கள் நிகழாமல் தடுப்பது எவ்வாறு?

தண்டனை, குற்றங்கள் நிகழ்வதைத் தடுக்கும் முறையாகவும் அமைகிறது. குற்றம் செய்த ஒருவர் மீண்டும் அக் குற்றத்தைச் செய்ய இயலாத நிலையில் வைக்கப்படவேண்டும். திருடியவனைச் சிறையில் அடைத்தால், சிறையில் இருக்கும்வரை திருடும் வாய்ப்பு அவனுக்கு இல்லை. சிறையில் அடைக்கப்பட்டதால் ஏற்பட்ட துன்பம் அவன் மனத்தைத் திருத்தி மீண்டும் திருடாதவாறு தடுக் கின்றது.

நச்சுப் பாம்பை நாம் ஏன் அடித்துக் கொல்லுகிருேம்? அதை உயிருடன் விட்டால் நம்மைக் கடித்துவிடும் என்பதால்தான். இந்த அடிப்படையிலேயே கொலைக்குற்றம் செய்தவனுக்குத் தூக்குத் தண்டனை விதிக்கப்படுகிறது. கொலையாளியைக் கொன்றுவிட்டால்

அவன் மீண்டும் அதே குற்றத்தைச் செய்யும் வாய்ப்பு ஏது? அவன் வாழ்ந்தால் மீண்டும் ஒரு கொலையை அவன் புரிந்துவிடலாம். அது முழுதுமாகத் தடுக்கப்படவேண்டும் என்பதற்காகக் கொலைக் குற்ற வாளியின் வாழ்வே மரண தண்டனையின் வாயிலாக முடிக்கப்படு கிறது.

நல்ல பயிருக்கு ஊறு விளையாமல் தடுக்கும்பொருட்டு உழவன் களைகளை எடுத்து எறிகிறான். அதுபோல், சமுதாயம் என்ற பயிர் கேடு அடையாமல் தடுப்பதற்குக் குற்றவாளிகள் என்ற களைகள் அகற்றப்படவேண்டியிருக்கின்றன. பயிருக்குக் கேடு விளையாமல் தடுப்பதற்காகக் களையெடுப்பது போன்றது, குற்றவாளிகளைத் தண்டிப்பதாகும் என்ற உண்மையை வள்ளுவர் கூறுகிறார்:

> 'கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
> களைகட் டதனொடு நேர்' (குறள், 550

இவ்வாறு, குற்றங்களால் விளையும் கேடுகளைத் தடுக்கும்பொருட்டுத் தண்டனை அளிக்கப்படுகிறது. 'குற்றங்களைத் தடுப்பது தண்டனை' என்ற கொள்கையை ஆங்கிலத்தில் 'Preventive Theory of Punishment' என்பார்கள்.

**'சீர்திருத்துவது தண்டனை' என்ற கொள்கை**

தண்டனை என்பது உடலை வருத்துவதாக இல்லாமல் உள்ளத்தைத் திருத்துவதாக இருக்கவேண்டும் என்ற கொள்கை தற்காலத்தில் பலராலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது.

'குற்ற மனம் இன்றிக் குற்றம் இல்லை' என்ற கொள்கையை முன்னர் விரிவாகக் கண்டோம். செய்யும் செயலைவிட அச் செயல் என்ன கருத்துடன் செய்யப்பட்டது என்பதே முக்கியமானதாகும். தீய கருத்து இன்றித் தீச்செயல் எழுவதில்லை. தீய கருத்து எதனால் குற்றவாளியின் மனத்தில் தோன்றியது என்பதை அறிந்து, அத் தீய கருத்து இனி அவன் மனத்தில் தோன்றாதவாறு செய்தல் வேண்டும். இதுவே தண்டனையின் நோக்கமாக இருக்கவேண்டும் என்பதை உளநூல் அறிஞர்கள் பலரும் வற்புறுத்திக் கூறுகின்றனர்.

உள்ளத்தில் நோயுள்ளவர்களின் செயலே பிறருக்கு நோயை விளைவிக்கிறது. மாசற்ற மனத்திலே மறுவுற்ற எண்ணங்கள் உதிப்பதில்லை. தூய உள்ளத்தில் தீய கருத்துகள் தோன்றுவ தில்லை. அழுக்காறு, அவா, வெகுளி முதலிய தீய குணங்களால் மனம் பீடிக்கப்பட்டிருக்கும் பொழுதுதான் தீச்செயல்கள்

எழுகின்றன. எனவே, குற்றவாளிகளில் பெரும்பாலோர் நோயுற்ற மனத்தோடு உள்ளவர்கள். உடல் நோயுள்ளவர்களுக்கு நாம் மருந்து கொடுத்துக் குணப்படுத்துகிறோம். அதுபோல் உள நோயுள்ள குற்றவாளிக்கு அளிக்கப்படும் தண்டனை அவர்களுடைய உள்ளத்தைக் குணப்படுத்தித் திருத்தவேண்டும். தண்டனையின் குறிக்கோள் குற்றவாளியின் உடலை வருத்துவதாக இன்றி, அவன் உள்ளத்தைத் திருத்துவதாக அமைதல் வேண்டும்.

குற்றவாளிகள் அனைவரும் கொடியவர்கள் என்று கூறுதல் தகாது. சதாரணமாக, நல்ல உள்ளம் படைத்தவர்களும் சூழ்நிலைகளின் காரணமாகக் குற்றங்களைச் செய்துவிடுகின்றனர். வறுமையால் வாடுவோரும், வஞ்சினத்தால் சாடுவோரும் தந்நிலை தடுமாறிக் குற்றங்களை இழைக்கின்றனர். பேராசை என்ற பேய்ச் சுழலால், அழுக்காறு என்ற அடுக்காத எண்ணத்தால் மதிமயங்கி ஈனச் செயல்களிலே இறங்கிவிடுகின்றனர் சிலர். அழுக்காறு, அவா, வெகுளி முதலிய தீய குணங்கள் நம் எல்லோரிடமும் ஓரளவு இருக்கின்றன. இவையில்லாத அருங்குணம் படைத்தவர்களை உலகத்தில் காண்பது அருமை. எனவே, தொற்றுநோய் உள்ளவர்களைக் கண்டு நாம் தூர விலகுவதுபோல், குற்றவாளிகளைக் கொடியவர்கள் என்று விலக்குவது முறையன்று.

குற்றவாளிகளின் மனத்தை மாற்றிச் செம்மைப்படுத்துவதற்கான முயற்சிகள் எடுப்பது அவசியமாகிறது. குற்றம் புரிந்தவர்களும் நாட்டின் குடிமக்கள்; சமுதாயத்தின் உறுப்பினர்கள். நலிந்த உள்ளத்தால் நன்மை எது, தீமை எது என்று அறியாத நிலையில் உள்ளவர்கள். உடல் மெலிந்தால் ஊட்டம் கொடுக்கிறோம். அதுபோல் உள்ளம் நலிந்தால் அதற்கான ஊக்கம் அளிக்கவேண்டும். நோயுற்ற உடலை மருந்து எவ்வாறு குணப்படுத்துகிறதோ அவ்வாறே குற்றவாளியின் நோயுற்ற மனத்தைச் சீர்படுத்தும் முறையில் நாம் முயலுதல் வேண்டும்.

உடலை வருத்துவதால்மட்டும் உள்ளம் திருந்துவதில்லை என்பதைக் காணுகிறோம். திருடிய குற்றத்திற்கெனச் சிறைத்தண்டனை பெற்றவர்கள், விடுதலை பெற்றவுடன் மீண்டும் திருடுகின்றனர். பத்துமுறை, பதினைந்துமுறை திருடிச் சிறைசென்றவர்கள் பலருண்டு. எனவே, சிறைவாசம் அவர்களைச் சீர்திருத்தவில்லை என்பது தெளிவு. ஆதலால், குற்றவாளிகளின் உள்ளத்தை உயர்த்துவதே உரியதொரு மாற்றுகும்.

ஒளி பிறந்தால்தான் இருள் அகலும் என்பது உலகியல் விதி. ஒழுக்கம் என்ற ஒளி உள்ளத்தில் உதித்துவிட்டால் இழுக்கம்

என்ற இருள் இல்லாதுபோய்விடும். ஒழுக்கத்தின் உயர்வைக் குற்றம் புரிந்தோர்களுக்கு உணர்த்தவேண்டும். 'அழுக்காறு என்பது ஒரு பாவி', 'சினமென்பது சேர்ந்தாரைக் கொல்லி' என்ற அறநெறி உண்மைகளை ஒருவன் உணர்ந்துகொண்டால், ஒழுக்கம் அவன் உள்ளத்தில் நிலைத்து நிற்க ஏதுவாகும்.

தாம் செய்யும் குற்றச் செயல்கள் எவருக்கும் தெரியாதுபோய் விடும் என்ற துணிவால் சிலர் தீச்செயல்களில் இறங்குகின்றனர். பிறரறியா வகையில் நாம் ஒன்றைச் செய்யலாம்; ஆயினும், நம் மன மறியா வகையில் நாம் அதைச் செய்ய இயலாது. நம் மனத்திலே மறைந்துள்ள மனச்சான்று, நம் உள்ளத்தில் உறைகின்ற அந்த உயரிய செம்பொருள், நாம் செய்வதனைத்தையும் அறியும் என்ற அறிவு நமக்கு வந்துவிடில், 'பிறரறியார் நம் செயலை' என்ற பேதமை நீங்கிவிடும். 'அவரறிவார் அனைத்தையுமே' என்பதே மெய்யறிவு. இந்த மெய்யறிவு மிகுந்துவிடில் ஐயுறுதல் அகன்றுவிடும். இவ்வாறு மனநோயுள்ள குற்றவாளிகளுக்கு மெய்யறிவைப் புகட்டவேண்டும்.

பிழைப்பதற்கு வழியின்றிப் பெருங் குற்றங்கள் செய்வோர் பலர். அவர்கள், கையால் தொழில் செய்து கண்ணியமாய் வாழ் வதற்குக் கைத்தொழில்கள் பலவற்றைக் கற்பித்தல் நலமாகும். 'சமூகத்தினர் நம்மைச் சரியாக மதிப்பதில்லை' என்றதோர் ஏக்கத் தால் ஏதம் புரிவோர் சிலர். சமுதாய வாழ்வில் அவர்களுக்குத் தக்கதோர் இடங்காட்டி நல்வாழ்வில் அவர்களை நாட்டமுறச் செய்தல் வேண்டும்.

இந்த முறையில், தண்டனை, அச்சுறுத்துவதாகமட்டுமன்றி அறிவுறுத்துவதாகவும், பழிவாங்குவதாகமட்டுமன்றிப் பண்பூட்டுவ தாகவும் அமைகிறது. இதுவே குற்றவியல் சட்டத்தின் குறிக் கோளுக்கு உகந்ததாகும். உடலை வருத்தும் ஒறுத்தல் முறை, உள்ளத்தைத் திருத்தும் உயர்ந்த முறையாக மாறுகிறது. தண்டனை என்பது நீதியோடு கருணையும் நிலவி நிற்கும் செயலாக ஒளிர்கின்றது.

இவ்வாறு, குற்றவாளியைச் சீர்திருத்தும் அடிப்படையில் தண்டனை அமையவேண்டும். 'சீர்திருத்துவது தண்டனை' என்கிற கொள்கை 'Reformation Theory of Punishment' எனப்படும்.

('Crimes are to be treated as infirmities, and the culpable ones as diseased subjects whose fury might be subdued in solitude...and to enlighten their minds by means of instruction, if ignorance had led them astray. By this means law from

being vindictive had become just, and from being just, it became charitable; and it completed the act of punishing by the art of healing'—Prof. Lioy : 'The Philosophy of Right.')

அச்சுறுத்துவது, பழிவாங்குவது, குற்றங்களைத் தடுப்பது, சீர்திருத்துவது என்ற நான்கு வகைக் கொள்கைகளின் அடிப்படையில் தண்டனை முறை இயங்குகிறது எனக் கண்டோம். இவை ஒவ்வொன்றும் முரண்பட்டவை அல்ல. குற்றவாளியைச் சீர்திருத்த வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் தண்டனை அளிக்கப்படுவதில்லை. கொலைக் குற்றவாளியைத் தூக்கிலிட்டபின் அவனைச் சீர்திருத்தும் பிரச்சினையே எழுவதில்லை. கொலையாளிக்கு அளிக்கப்படும் தூக்கு தண்டனை பிறரை அச்சுறுத்துவதாகவும், கொலையாளியைப் பழிவாங்குவதாகவுமே அமைகிறது. ஆனால், சிறிய குற்றங்கள் செய்தோரைச் சீர்திருத்த வேண்டும் என்ற நோக்கத்துடன்தான் சிறையிலடைக்கின்றோம். எனவே, அச்சுறுத்துவதோடு அறிவுறுத்துவதும், பழி வாங்குவதோடு பண்பூட்டுவதும் தண்டனை முறையின் கொள்கைகளாக அமைகின்றன.

# 18. தண்டனையின் அளவு

## (Measure of Punishment)

தண்டனையின் வகைகள்—குற்றத்தின் தன்மை, குற்றம் செய்யப்பட்ட சூழ்நிலை, குற்றவாளியின் நிலை இவைகளை ஆய்ந்தே தண்டனையின் தன்மை நிச்சயிக்கப்படுகிறது—இளங் குற்றவாளிகளும் முதற் குற்றவாளிகளும்.

'தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்
ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து'

(குறள், 561)

''குற்றவாளி செய்த குற்றத்தை ஆராய்ந்து மீண்டும் அக் குற்றத்தை அவன் செய்யாதபடி, அக் குற்றத்திற்குத் தகுந்த முறையில் அரசன் தண்டனையை அளிக்கவேண்டும்' என்பது இக் குறளின் கருத்து.

'குற்றத்தின் தன்மை, அது செய்யப்பட்ட இடம், காலம் இவற்றோடு குற்றவாளியின் வலிமை, வயது, செல்வம் முதலியவற்றையும் ஆராய்ந்து தான் தண்டனை விதிக்கப்படுதல் வேண்டும்' —யாக்ஞவல்கியர் (அத்.1; பிரிவு 13; விதி 368).

தண்டனை முறையில் இன்று கையாளப்படும் கொள்கைகள் அத்தனையும் மேலே கூறப்பட்ட குறளிலும், யாக்ஞவல்கியரின் வாக்கிலும் அடங்கியுள்ளன.

ஆதிகால நீதிமுறையில் அளிக்கப்பட்ட தண்டனைகள் கொடுமை நிறைந்தனவாக இருந்தன. குற்றவாளிகளின் உடல் உறுப்புகளை வெட்டிவிடுவதுபோன்ற சித்திரவதைத் தண்டனைகள் உலகில் பல நாடுகளிலும் கையாளப்பட்டுவந்தன. இங்கிலாந்தில் கான்யூட் (Canute) மன்னன் காலத்தில் கற்பிழந்த பெண்ணின் மூக்கையும் காதுகளையும் அரிந்துவிடுவது வழக்கமாக இருந்தது. வேதியர்களைப் பழிப்போர்களின் காதுகளிலும் வாய்களிலும்

கொதிக்கும் எண்ணெயைக் கொட்டுவது என்ற தண்டனை முறையை மனுநீதியில் காணுகிறோம். நாகரிகம் வளர்ந்த சமுதாயத்தில் இதுபோன்ற கொடிய தண்டனைகள் அகற்றப்பட்டுவிட்டன. சவுக்கடி கொடுக்கும் தண்டனை நம் நாட்டுச் சட்டத்தில் இடம் பெற்றிருந்தது. 1955ஆம் ஆண்டில்தான் அந்தத் தண்டனையை நீக்கினார்கள்.

**தண்டனையின் வகைகள்**

இப்போது குற்றவியல் சட்டத்தின்படி கீழ்க்கண்ட தண்டனைகள் விதிக்கப்படலாம்:

1. மரண தண்டனை (Death)
2. ஆயுட்காலச் சிறைத்தண்டனை (Imprisonment for life)
3. சிறைத்தண்டனை (குறிப்பிட்ட காலத்திற்கு). இது,

    (i) கடுஞ் சிறைத்தண்டனை (Rigorous imprisonment)

    (ii) வெறுஞ் சிறைத்தண்டனை (Simple imprisonment)

என்று இருவகைப்படும். கடுஞ் சிறைத்தண்டனையில் தண்டிக்கப்பட்டவர் சிறையில் கடும் வேலைகள் செய்யவேண்டும்.

4. சொத்துப் பறிமுதல் (Forfeiture of properties)
5. அபராதம் (Fine)

கொலைக்குற்றத்தைத் தவிர பிற குற்றங்களுக்குக் குறைந்த அளவாக இவ்வளவு தண்டனைதான் கொடுக்கவேண்டும் என்று சட்டம் கூறுவதில்லை. திருட்டுக் குற்றம் செய்தவனுக்கு மூன்று ஆண்டுகள்வரை சிறைத் தண்டனை அளிக்கலாம் என்று சட்டம் கூறுகிறது. வழக்கை விசாரித்துத் தண்டனை அளிக்கும் நீதிபதி குற்றவாளிக்கு இரண்டு மாதச் சிறைத்தண்டனையோ, ஆறு மாதத் தண்டனையோ அளிக்கலாம். அது நீதிபதியின் கருத்தைப் பொறுத்தது. இவ்வாறு, தண்டனையின் அளவை நிர்ணயிப்பதில் நீதிபதிகளுக்குப் பெரும் பொறுப்பு உண்டு.

தண்டனையின் அளவு எந்த அடிப்படையில் நிர்ணயிக்கப்படுகிறது? செய்யப்பட்ட குற்றம் என்ன? எந்தச் சூழ்நிலையில் அது செய்யப்பட்டது? குற்றவாளியின் நிலை என்ன? இந்தக் கூறுகளையெல்லாம் ஆராய்ந்தே தண்டனையின் அளவும் தன்மையும் தீர்மானிக்கப்படவேண்டும்.

குற்றத்தின் தன்மை, குற்றம் செய்யப்பட்ட சூழ்நிலை, குற்றவாளியின் நிலை இவைகளை ஆய்ந்தே தண்டனையின் தன்மை நிச்சயிக்கப்படுகிறது.

## குற்றத்தின் தன்மை

சாதாரணக் காயம் விளைவித்தால் ஓர் ஆண்டுவரை சிறைத் தண்டனை, கொடுங்காயம் விளைத்தால் ஏழாண்டுவரை சிறைத் தண்டனை, கொடிய ஆயுதங்கொண்டு கொடுங்காயம் விளைத்தால் ஆயுட்காலச் சிறைத்தண்டனை, கொலைசெய்தால் மரண தண்டனை என்று இவ்வாறு குற்றத்தின் கொடுமைக்கேற்பத் தண்டனையின் அளவும் அதிகமாகும் முறையில் ஒவ்வொரு குற்றத்திற்கும் தண்டனையின் அளவைச் சட்டம் விதிக்கிறது. எல்லாவிதக் குற்றத்திற்கும் ஒரே அளவான தண்டனை என்றால், அது குற்றங்கள் செய்யப்படுவதைத் தடுப்பதாக அமையாது. திருடுபவனுக்கும் மரண தண்டனை, கொலைபுரிபவனுக்கும் மரண தண்டனை என்று சட்டம் இருந்தால், திருடத் துணிபவன் கொலை செய்யவும் துணிந்து விடுவான். எனவே, குற்றத்திற்குத் தக்கபடி தண்டனையைச் சட்டம் அமைக்கிறது.

## குற்றங்கள் செய்யப்பட்ட சூழ்நிலை

சாதாரணமாகக் குற்றம் செய்யாதவர்களும் சூழ்நிலையின் விளைவாகக் குற்றங்களைச் செய்துவிடுகின்றனர். தமக்கு நேர்ந்த அவமானத்தால் திடீரென்று ஆத்திரம் மிகக்கொண்டு அடுத்தவரைக் கத்தியால் குத்துவதும், வேண்டுமென்றே திட்டமிட்டுப் பகைவரைக் கத்தியால் குத்துவதும் கொடுங்காயம் விளைத்தல் என்ற ஒரே மாதிரியான விளைவை உண்டாக்கலாம். இருந்தாலும், அக் குற்றங்கள் நிகழும் சூழ்நிலைகள் வேறுபட்டவை. ஆத்திரத்தால் குத்தியவருக்குக் குறைந்த தண்டனை அளிக்கப்படுகிறது. ஏனெனில், அவர் உணர்ச்சி வயப்பட்டு நின்ற நிலையில் செய்ததாகும் அக் குற்றம். அவமானத்தால் ஆத்திரப்படுவது மனிதனின் இயல்பாகும். எனவே, இவர்மீது சட்டம் இரக்கம் காட்டுகிறது.

திடீரென்று விளைந்த சண்டையில் ஒருவர் மற்றொருவரைக் கொன்றுவிட்டால் அதற்கு மரண தண்டனை அளிப்பதில்லை; ஆயுட்காலச் சிறைத்தண்டனையே அளிக்கப்படுகிறது. ஏன்? வேண்டுமென்றே திட்டமிட்டுக் கொல்லுதல் கொடிய செயல். ஆனால், திடீரென்று ஏற்பட்ட சண்டையில் தம் செயலின் விளைவு என்று அறியாத நிலையில் கொலைக்குற்றம் செய்யப்படுகிறது. எனவே, திட்டமிடாத திடீர்க் கொலைக்குரிய தண்டனையைச் சட்டம் குறைக்

கிறது. இம்மாதிரியே திடீரென்று பெருங் கோபமூட்டப்பட்டதால் தன்னிலை இழந்து ஒருவர் செய்யும் கொலைக்குற்றத்திற்கு உரிய தண்டனையும் மரண தண்டனை அன்று.

இவ்வாறு, திடீரென்று விளைந்த ஆத்திரத்தால் அறிவிழந்தோர், மதிமயங்கிச் செயல் புரிவோர், கோபத்தால் குமுறி நிற்போர் இவர்கள்மீது சட்டம் இரக்கம் காட்டிக் குறைந்த தண்டனையை விதிக்கிறது.

**குற்றவாளிகளின் நிலை**

குற்றவாளிகளின் உடலை வருத்துவதைவிட உள்ளத்தைத் திருத்துவதே தண்டனையின் நோக்கமாக இருத்தல் வேண்டும் எனக் கண்டோம். எவ்விதமான தண்டனை குறிப்பிட்ட குற்றவாளிக்குப் பலன் தருவதாக இருக்கும் என்பதை ஆய்ந்து நீதிபதி தண்டனையை அளிக்கவேண்டியிருக்கிறது. நோயாளிக்குத் தக்க மருந்தை வைத்தியர் கொடுப்பதுபோல், குற்றவாளியின் நிலைக்கேற்ற முறையில் நீதிபதி தண்டனையை விதிக்கவேண்டும். இதுவே 'தக்காங்கு நாடி'த் தண்டனை விதிக்கும் முறையாகும். ('The Judge stands to the criminal in the position of the doctor who selects his remedy after diognosing the disease and the resources of the patient's organisation'—Vinogradoff: 'Historical Jurisprudence.')

ஒரே குற்றத்தைப் பலர் வேறுபட்ட சூழ்நிலைகளில் புரியலாம். எல்லோருக்கும் ஒரேவிதத் தண்டனையை அளிப்பது தண்ட முறையின் தத்துவத்தை அறியாததாகிவிடும். குற்றத்தை மட்டும் பார்த்துத் தண்டிக்காமல் குற்றவாளியைக் கருத்திற்கொண்டு தண்டிக்கவேண்டும். (There is, however, a welcome recognition of the need to individualise the penalty, not to let the punishment fit the crime but the particular criminal.)

நோய் ஒன்றுக இருக்கலாம், அதற்கான மருந்தும் ஒன்றுக இருக்கலாம். ஆயினும், அந்த மருந்தின் அளவை நோயாளி களின் உடற் கூறுகளுக்குத் தக்கபடியே வைத்தியர் கொடுக் கின்றுர். அதுபோல், தண்டனையின் தரமும் அளவும் குற்றவாளி களின் தனித்தன்மையைப் பொறுத்து அளிக்கப்படுதலே முறையாகும். (Modern criminology considers that the personality of the offender is as important as his act, and emphasises that the wrong doer is not only a criminal to be punished but a patient to be treated—Paton.)

அரை ரூபாய் கைக்கூலி வாங்கிய காவலாளிக்கு ஆறு மாத சிறைத் தண்டனை அளித்தால், விளைவு என்ன? காவலாளி ஓர் ஏழை. ஏழ்மையின் பயனாக ஏதோ குற்றத்தைச் செய்துவிட்டான். அவன் மீண்டும் இலஞ்சம் வாங்கும் குற்றத்தைச் செய்யாதவாறு தடுப்பது அவசியந்தான். அவனைக் காவலாளி வேலையிலிருந்து நீக்கிவிட்டால் அதுவே அவனுக்குப் பெருந் தண்டனையாகிவிடும். மீண்டும் கைக்கூலி வாங்குவதற்கும் அவனுக்கு வாய்ப்பு இல்லாது போய்விடும். இதைவிட்டு, திருட்டு, கொள்ளை முதலிய கொடுங் குற்றங்களைச் செய்த குற்றவாளிகள் அடைந்து கிடக்கும் சிறையில் ஆறு மாதம் இவனையும் அடைத்தால், இவனும் குற்ற மனமுடைய வனாக மாறுவதற்கு வாய்ப்பு அளிப்பதாகும். காவலாளியாய்ச் சிறை சென்றவன் கள்வனாக வெளியே வருகிறான். சிறையிலே கொடுங்குற்றவாளிகளுடன் கூடிப் பழகுவதால் சமூகத்திற்குத் தீங்கு விளைக்கும் நிலைக்கு அவன் மனம் மாறிவிடுகிறது. சீர்திருத்த வேண்டிய தண்டனை அவனைச் சீர்குலைத்துவிடுகிறது. சிறு குற்றங் களுக்கு நீண்ட சிறைத்தண்டனை அளிப்பது குற்ற இயல் சட்டத்தின் அடிப்படைத் தத்துவங்களை அறியாமையால் விளைவதாகும். இம் மாதிரியான தவறுகள் நிகழாமல் நீதிபதிகள் பொதுவாகக் கவனத் துடன் செயற்படுகின்றனர்.

கைக்கூலி வாங்கினால் கடுந்தண்டனை என்று சட்டம் கூறலாம்; அவ்வாறு கூறுவதும் அவசியமேயாகும். ஆனால், அதைச் செயல் முறைப்படுத்தும்பொழுது, தம்முன் நிற்கும் குற்றவாளியின் நிலையை நீதிபதி ஆய்ந்தறிதல் வேண்டும். தண்டனை என்பது 'கடிதோச்சி மெல்ல எறி'வதாக இருத்தல் வேண்டும் என்றார் வள்ளுவர். சட்டத்தில் விதிக்கப்பட்ட தண்டனை கடுமையாக இருப்பது முறை யாகும். ஆனால், அத் தண்டனை குற்றவாளியை அழித்துவிடுதல் கூடாது. விதிக்கப்படும் தண்டனை தக்க அளவுடையதாய் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் அரசின் ஆக்கம் நீங்காமல் நிற்கும் என்பது வள்ளுவர் அறிவுரை.

> 'கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்
> நீங்காமை வேண்டு பவர்'
>
> (குறள், 562)

ஒரேவிதக் குற்றங்கள் செய்தாலும் அந்தந்தக் குற்றவாளி களுக்குத் தக்க தண்டனையை நீதிபதி அளிப்பதற்கு ஏது இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் ஒவ்வொரு குற்றத்திற்கும் உயர்ந்த அளவு தண்டனையைமட்டும் சட்டம் கூறுகிறது. அந்த உயர்ந்த அளவின் எல்லைக்குள் எந்த அளவிலும் நீதிபதி தண்டனையை

அளிக்கலாம். குற்றவாளியின் தன்மைக்குத் தக்கவாறு தண்டனையின் அளவை நீதிபதி நிர்ணயித்து விதிக்கிறார். சில குற்றங்களுக்குச் சிறைத்தண்டனையோ, அபராதமோ இரண்டில் ஒன்று விதிக்கலாம் என்று சட்டம் கூறுகிறது. அதனால்தான் முதல் முறையாகச் சிறு குற்றங்கள் செய்வோரைச் சிறைக்கு அனுப்பாமல் நீதிமன்றத்தினர் அபராதமே விதிக்கின்றனர்.

'குற்றவாளி மீண்டும் குற்றம் செய்யாமல் தடுப்பது, சீர்திருந்திய குடிமகனாக அவனைச் சமுதாயத்தில் சேர்ப்பது—இவை இரண்டும் சிறைச்சாலைகளின் நிர்வாகத்தின் இலட்சியங்களாக இருக்க வேண்டும்' என்று இந்தியச் சிறைக் குழுவினர் (Indian Jails Committee) கூறியிருக்கின்றனர்.

**இளங் குற்றவாளிகளும் முதற் குற்றவாளிகளும்**

சிலவகைக் குற்றங்களை முதல் முறையாகச் செய்தவர்களை நீதிபதிகள் சிறைக்கனுப்பாமல் நன்னடத்தை ஜாமீன் பெற்று விடுவிப்பதற்குக் குற்றவியல் நடைமுறைச் சட்டமும் (Criminal Procedure Code), குற்றவாளிகள் கண்காணிப்புச் சட்டமும் (Probation of Offenders Act) வழிசெய்கின்றன. இன்னும், திருட்டு முதலிய சிறு குற்றங்கள் செய்தவர்களை எச்சரித்தே விடுவிக்கலாம் என்றும் சட்டம் கூறுகிறது. இவ்வாறு முதல் முறையாகச் சிறிய குற்றங்களைச் செய்தவர்கள்மீது சட்டம் மிகுந்த இரக்கம் காட்டுகிறது.

பதினாறு வயதிற்குக் குறைந்த இளங்குற்றவாளிகளைச் சாதாரண சிறைக்கு அனுப்பாமல் திருத்தப் பள்ளிகளுக்கு அனுப்பி அவர்களுக்குப் பயிற்சி அளிப்பதற்குச் சட்டம் (The Madras Children Act,1920) வகைசெய்கிறது. இளங்குற்றவாளிகளை நல்வழிப்படுத்துவதற்கென பார்ஸ்டல் பள்ளிகள் (Borstal Schools) நடத்தப்படுகின்றன. அதற்கெனத் தனிச் சட்டம் (The Madras Borstal Schools Act, 1926) இயற்றப்பட்டிருக்கிறது. வயதுவந்த குற்றவாளிகளை விசாரணை செய்யும் குற்ற நீதிமன்றங்களில் இளங்குற்றவாளிகள் விசாரிக்கப்படுவதில்லை. இவர்களுக்கென்று தனி நீதிமன்றங்கள் (Juvenile Courts) நிறுவப்பட்டிருக்கின்றன. முறை தவறிய சிறுவர்களுக்குப் பயிற்சி அளித்து அவர்களைச் சமுதாயத்திற்குப் பயனுள்ள உறுப்பினர்கள் ஆக்கும் கடமை அரசுக்கு உண்டு. எனவே, இளங்குற்றவாளிகளுக்கு அளிக்கும் தண்டனை அவர்களை நல்வழியில் திருத்தி வாழ்வில் வழிகாட்டும் முறையில் அமைகிறது.

தண்டனை முறையில் அடங்கியுள்ள கொள்கைகளையும், தண்டனை விதிக்கும்பொழுது கையாளப்படும் நெறிகளையும் இதுவரை கண்டோம்.

தண்டனை முறையின் அடிப்படையான நோக்கம் குற்றங்கள் நிகழாமல் தடுப்பதேயாகும்.

'தலைச்செல்லா வண்ணத்தால்' ஒறுத்தல் வேண்டும் என்கிறார் வள்ளுவர். 'தலைச் செல்லா வண்ணத்தால்' எனில், 'மீண்டும் அக் குற்றத்தைச் செய்யாதவாறு' என்பது பொருள். குற்றத்தைத் தடுப்பதே தண்டனையின் குறிக்கோள் என்பதை இங்குக் காண்கிறோம். குற்றத்திற்குத் தக்கபடி தண்டனை என்பது 'தக்காங்கு நாடி' ஒறுத்தல் வேண்டும் என்று கூறப்படுகிறது. குற்றவாளிக்கும் சூழ்நிலைக்கும் ஏற்ற தண்டனை வேண்டும் என்பதை 'ஒத்தாங்கு ஒறுத்தல்' என்பது வலியுறுத்துகிறது. செய்யப்பட்ட குற்றத்தையும், குற்றவாளியின் நிலையையும், இதர சூழ்நிலைகளையும் கருத்திற்கொண்டு தண்டனை அளிக்கவேண்டும்; அத் தண்டனையின் குறிக்கோள் குற்றத்தைத் தடுப்பதாக அமைதல் வேண்டும் என்பது இன்றைய குற்றவியல் சட்டக் கொள்கையாகும். இந்த அத்தியா யத்தின் ஆரம்பத்தில் கூறப்பட்ட குறள் , இதை நன்கு காட்டி நிற்கிறது. இதிலிருந்து நம் முன்னோர்கள் எவ்வாறு தண்டனை முறையின் தகைமையை அறிந்திருந்தார்கள் என்பது தெளிவாகும். மீண்டும் அக் குறளை நினைவிற் கொள்ளுவோம்:

'தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்
ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து'

(குறள், 561)

## இரண்டாம் பாகம்

# 1. பொருள் குறித்த குற்றங்கள்

## (Offences against Property)

திருட்டு — அச்சுறுத்தி அபகரித்தல் — கொள்ளை — கூட்டுக் கொள்ளை — கையாடல் — நம்பிக்கை மோசம் — கள்ளப் பொருளைக் கரவுடன் பெறுதல் — ஏமாற்றுதல்—ஆள்மாருட்டம் செய்து ஏமாற்றுதல் —ஏமாற்றிப் பொருள் கவர்தல்—சொத்தழித்தல்— தீயிட்டுச் சொத்தழித் தல் — குற்றங் கருதி அத்துமீறுதல் — அத்துமீறி வீடு புகுதல் — ஒளிந்து வீடு புகுதல் — வலிந்து வீடு புகுதல் — பெட்டகத்தை நேர்மையின்றித் திறத்தல் — மோசடியான சொத்து மாற்றங்கள்.

மக்களின் இன்ப வாழ்விற்கு இன்றியமையாதன உடல்நலம், பொருள், புகழ் என்பன. ஒருவர் புகழுக்கு மற்றவர் ஊறு விளைத்தல் அவதூறு (defamation) என்ற குற்றம் ஆகிறது. ஆனால், உடலுக்கும் பொருளுக்கும் விளைக்கப்படும் ஊறுகள் பலதிறப்படுவன. ஆதலால், உடலைப் பொறுத்த குற்றங்களனைத்தையும் ஒரு பெயரால் குறித்தல் இயலாது; அது போன்றே பொருளைக் குறித்த பலவகைக் குற்றங் களையும் ஒரே பெயரால் குறிப்பிடுதல் முடியாது.

இந்தப் பிரிவில் பொருள் குறித்த குற்றங்களைப்பற்றிய விவரங் களைக் காண்போம்.

பொருள் இருவகைப்படும். ஒன்று அசைபொருள், மற்றொன்று அசையாப் பொருள். பணம், தானியம், நகை, ஆடுமாடுகள் முதலியன அசைபொருள்கள் (movables). வீடு, கட்டடம், நிலம், நிலத்திலுள்ள பயிர், மரம் முதலியன அசையாப் பொருள்கள் (immovables). அசை பொருள்களைத் தாவரப் பொருள்களெனவும், அசையாப் பொருள்களைச் சங்கமப் பொருள்களெனவும் கூறுவது உண்டு. அசை பொருள்களைப்பற்றிய குற்றங்கள் ஒருவகை யானவை; அசையாப் பொருள்களைக் குறித்த குற்றங்கள் மற்றொரு வகையானவை.

முதலாவதாக அசை பொருளுக்கெதிரான குற்றங்களைப்பற்றி ஆராயலாம்.

## (1) திருட்டு (Theft)

திருட்டுக் குற்றத்தின் இலக்கணம்—நேர்மையின்றிக் கைப்பற்றும் கருத்து—கட்டடம், கூடாரம், படகு இவற்றில் திருடுவது——வேலையாள் திருடுவது—மரணம், காயம் இவைகளை விளைவிக்க ஆயத்தம் செய்து விட்டுத் திருடுவது,

அசைபொருளைக் குறித்த குற்றம் என்றதும் நம் நினைவிற்கு முதலில் வருவது திருட்டுக் குற்றம்தான். 'திருட்டு' (theft) என்ருல் என்ன, அக் குற்றத்தின் கூறுகள் யாவை என்று காண்போம்:

பொதுவாக, நமக்குத் தெரியாமல் நம் பொருளைப் பிறர் எடுத்துச் செல்வதையே 'திருட்டு' என்று எண்ணுகிறோம். நாம் தூங்கிக் கொண்டிருக்கும்பொழுதோ, நாம் பொருள் இருக்கும் இடத்தில் இல்லாதிருக்கும்பொழுதோ, நமக்குத் தெரியாதபடி நம் பொருளைப் பிறர் எடுத்துச் சென்றிருந்தால், 'பொருள் திருட்டுப்போய்விட்டது' என்கிறோம். இவ்வாறு, கரவாக, மறைவாகப் பொருளை எடுத்தவனைக் 'கள்வன்' என்கிறோம்; அவன் செயலைக் 'களவு' என்கிறோம். ஆனல், சட்டத்தில் நம் கண் முன்னலேயே நமது பொருளை மற்றொருவர் திருடலாம். நம்முடைய கைப்பெட்டியைக் கீழே வைத்துவிட்டுச் சிறிது விலகிச் சென்று ஒரு கடையில் ஏதோ ஒரு பொருள் வாங்கிக்கொண்டிருக்கிறோம். அப்பொழுது, பெட்டி நம் பார்வையில்தான் இருக்கின்றது. அதை ஒருவன் எடுத்துக் கொண்டு ஓடுகிருன் எனில், 'திருடன் பெட்டியை எடுத்துக் கொண்டு ஓடுகிருன்' என்றுதான் குரலெழுப்புகிறோம். அவன் செயலும் திருட்டுக் குற்றமேயாகும். ஆதலால், நமக்குத் தெரியாமல் செய்யப்படுவதுதான் 'திருட்டு' என்பது சரியன்று. எனவேதான், கரவான செயலை உணர்த்தும் 'களவு' என்ற சொல்லை விட்டு, 'theft' என்ற ஆங்கிலச் சொல்லிற்குத் 'திருட்டு' என்ற சொல்லையே பயன்படுத்துகிறோம்.

### திருட்டுக் குற்றத்தின் இலக்கணம்

'திருட்டு' என்ற குற்றத்திற்கான இலக்கணம் சட்டத்தின் 378ஆம் பிரிவில் கூறப்பட்டிருக்கின்றது.

நேர்மையின்றிக் கைப்பற்றும் கருத்துடன் ஒருவர் உடைமையிலுள்ள அசைபொருள் ஒன்றை, அவரது சம்மதமின்றி, அவர்

உடைமையிலிருந்து எடுப்பதற்கென நகர்த்துதல் (அசைத்தல்) 'திருட்டு' என்ற குற்றமாகும். 'திருட்டு'க் குற்றத்தில் ஐந்து கூறுகள் உள்ளன :

(1) நேர்மையின்றிக் கைப்பற்றும் கருத்து

(2) அசைபொருளாக இருத்தல்

(3) ஒருவர் உடைமையில் உள்ள அசைபொருளாக இருத்தல்

(4) உடையவரின் சம்மதம் இன்மை

(5) பிறர் உடைமையிலிருந்து எடுப்பதற்கென அப் பொருளை நகர்த்துதல்

இந்த ஐந்து கூறுகளைப்பற்றி ஆராய்வோம்.

**(1) நேர்மையின்றிக் கைப்பற்றும் கருத்து:** எந்தக் குற்றத்திற்கும் பொதுவாகக் 'குற்ற மனம்' வேண்டுமென்று கண்டோம். திருட்டுக் குற்றம் செய்பவனின் குற்றக் கருத்து 'நேர்மையின்றி ஒரு பொருளைக் கைப்பற்ற வேண்டும்' என்ற கருத்தாகும். 'நேர்மையின்மை' என் பதை ஆங்கிலத்தில் 'dishonesty' என்கிறோம்.

நமது பணப்பையைத் திருடுபவன், தான் அந்தப் பணத்தை அடையவேண்டும் என்ற குற்ற மனத்தோடு திருடுகின்றான். நம் பணத்தை அவன் திருடுவதால் அவனுக்கு முறையற்ற ஆதாயம் (wrongful gain) கிடைக்கின்றது. பணத்தை இழந்த நமக்கு முறை யற்ற இழப்பு (wrongful loss) ஏற்படுகின்றது. இவ்வாறு ஒருவருக்கு முறையற்ற ஆதாயமோ அல்லது மற்றொருவருக்கு முறையற்ற இழப்போ விளைவிக்கும் செயலே நேர்மையின்மையான (dishonesty) செயல் ஆகிறது. (24ஆவது பிரிவு.) இவ்வாறு, நேர்மை யின்மைக் கருத்தோடு ஒரு பொருளைக் கைப்பற்றுவதைத்தான் திருட்டு என்கிறோம். இந்த நேர்மையின்மையான கருத்து இல்லை யேல் திருட்டுக் குற்றம் விளைவதில்லை.

**குற்ற மனம் இல்லாத செயல்கள்:** நம் வீட்டு மேசைமீதிருந்து புத்தகம் ஒன்றை நமது நண்பர் நம்மைக் கேளாமலே எடுத்துச் செல்கிறார்; படித்துவிட்டுத் திருப்பிக் கொடுத்துவிடலாம் என்ற எண்ணத்தில் எடுத்தார். இப்பொழுது இவர் திருடினார் என்று சொல்லுவது சரியன்று. ஏனெனில், முறையற்ற வகையில் அந்தப் புத்தகத்தைத் தாமே வைத்துக்கொள்ளவேண்டும் என்ற கருத்து அவருக்கில்லை. ஒரு திருமண வீட்டிற்குச் சென்றுவிட்டு வெளியே வருகையில், நம் குடைபோன்றிருந்த வேறொருவரின் குடையை நம்முடையதுதான் என்று நினைத்து எடுத்துவந்துவிடுகிறோம்.

உடனே, அந்தக் குடையின் சொந்தக்காரர் நம்மீது திருட்டுக் குற்றம் சாட்டுவது முடியாது. பிறர் குடையைத் தமதாக்கிக் கொள்ளவேண்டும் என்ற நேர்மையற்ற கருத்தோடு நாம் அக் குடையை எடுக்கவில்லை. தவறுதலால் அவ்வாறு எடுத்தோம். வேடிக்கையாகக்கூட ஒரு நண்பரின் பொருளை மற்றொருவர் மறைத்துவைக்கலாம். அதையும் திருட்டு என்று சொல்லுதல் பொருந்தாது.

**முறையற்ற ஆதாயம் திருடுபவருக்குக் கிடைக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை:** திருடுபவருக்கு ஆதாயம் கிடைக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை. ஒருவர் மற்றவரின் தானியத்தைத் திருடிக்கொண்டு போய் ஆற்று வெள்ளத்தில் எறிந்துவிட்டுச் சென்றாலும், அது குற்றந் தான். திருடியவருக்கு எந்த ஆதாயமும் இல்லையென்பதால் அது குற்றமற்ற செயலாகிவிடுவதில்லை. திருட்டுக் கொடுத்தவருக்கு முறை யற்ற நட்டம் ஏற்பட்டிருப்பதால் அது குற்றமேயாகும். ஒருவர் கடையிலுள்ள பழங்களை அவர் சம்மதம் இன்றி எடுத்துச் சென்று அருகில் இருந்த பிச்சைக்காரர்களுக்கு விநியோகித்தாலும், பழத்தை எடுத்த செயல் குற்றமானதுதான். எனவே, திருடிய வருக்கு ஆதாயம் ஏதும் இல்லையென்றாலும், திருட்டுக் கொடுத் தவருக்கு முறையற்ற நட்டம் ஏற்பட்டால் அது குற்றச் செயலே யாகும். ஏனெனில், 'நேர்மையின்மை'யான செயல் என்பதில், முறையற்ற நட்டம் ஒருவருக்கு விளைவிப்பதும் அடங்குகிறது (24ஆம் பிரிவு).

**திருடிய பொருளைத் தமதாக்கிக்கொள்ளவேண்டும் என்ற கருத்து வேண்டியதில்லை:** இராமனிடம் இருந்த நகை ஒன்றைக் கோபாலன் இராமனுக்குத் தெரியாமல் எடுத்து வைத்திருக்கிறான். அவ்வாறு கோபாலன் எடுத்ததன் நோக்கம் நகையைத் தானே வைத்துக் கொள்ளவேண்டும் என்பதன்று; ஆனால்,காணாமற்போன நகையை மீட்டுக்கொடுப்பதற்கு என்று இராமனிடமிருந்து பணம் பெறவேண் டும் என்பதுதான். இப்பொழுது கோபாலனின் செயல் நேர்மை யற்றது. முறையற்ற ஆதாயத்தைப் பெறவேண்டும் என்ற கருத்தோடு நகை எடுக்கப்பட்டதால், அதுவும் திருட்டுக் குற்றமேயாகிறது. இவ்வாறு திருடிய பொருளைத் தனதாக்கிக்கொள்ள வேண்டும் என்ற கருத்து இன்றியுங்கூட வேறு வகையில் நேர்மையின்மையான கருத்து இருக்கலாம்.

**ஒரு பொருளின் சொந்தக்காரரே அப் பொருளைத் திருடலாம்:** பொதுவாக நமது பொருளை நாமே திருடுவதில்லை. அந்தப் பொருள் நம்முடையதாகவே இருக்கும்பொழுது திருடுவதற்கான

காரணம் இருப்பதில்லை. இருந்தாலும், சில சூழ்நிலைகளில் நேர்மையின்மைக் கருத்தோடு ஒரு பொருளின் சொந்தக்காரர் செயற்பட்டால், அவர்மீது அப் பொருளைத் திருடிய குற்றம் ஏற்படலாம்.

ஒருவர் தம்முடைய நகையைத் தமக்குத் தெரிந்தவரிடம் கொடுத்துவைத்திருக்கின்றார். அவ்வாறு நகையை வைத்திருப்பவரிடமிருந்து அவருக்குத் தெரியாமல் அதை அகற்றிவிட்டு, அவரிடமிருந்து மறைந்துபோன நகைக்கான விலையைப் பெற வேண்டும் என்ற நேர்மையற்ற கருத்தோடு நகையின் சொந்தக்காரரே அதை வைத்திருப்பவரின் உடைமையிலிருந்து அகற்றலாம். இப்பொழுது நகையின் சொந்தக்காரரே அதைத் திருடிய குற்றத்திற்கு ஆளாகின்றார்.

ஒருவர் தமது கைக்கடிகாரத்தைப் பழுதுபார்ப்பதற்கென்று ஒரு கடைக்காரரிடம் கொடுக்கிறார். கடைக்காரர் அதைப் பழுது பார்த்துவிட்டுப் பழுதுபார்த்த கூலிக்கு ஈடாகக் கடிகாரத்தைத் தம்மிடம் வைத்திருக்கின்றார். இந்தக் கூலியைக் கொடுக்காமல் கடிகாரத்தின் சொந்தக்காரர் கடைக்காரரின் சம்மதமின்றி அவரிடமிருந்து கடிகாரத்தை எடுத்துச் சென்றால், அது திருட்டுக் குற்றமேயாகும். ஏனெனில், தமக்கு வரவேண்டிய கூலிக்கு ஈடாகக் கடைக்காரர் கடிகாரத்தைத் தம்மிடம் வைத்திருந்தார். அது சட்டப்படியான செயல். கூலிக்கு ஈடாக இருந்த பொருளை, அதை வைத்திருந்தவரின் சம்மதமின்றி எடுத்துச் செல்லுதல் நேர்மையற்ற செயலேயாகும். ஆதலால், தம் கடிகாரத்தைத் தாமே திருடிய குற்றத்திற்கு அக் கடிகாரத்தின் சொந்தக்காரர் ஆளாகின்றார்!

ஒருவர் தமது மோதிரத்தை மற்றொருவரிடம் அடகு வைத்துக் கடன் வாங்குகிறார். இவ்வாறு வாங்கிக் கடனைத் திரும்பக் கொடுக்காமலே கடன் கொடுத்தவரிடமிருந்து அந்த மோதிரத்தை அவருடைய சம்மதமின்றி மோதிரத்தின் சொந்தக்காரர் எடுத்துச் செல்லலாமா? கூடாது. அவ்வாறு எடுத்தால் அது திருட்டுக் குற்றமேயாகும். கடன் கொடுத்தவர் அந்த மோதிரத்தின் சொந்தக்காரர் இல்லைதான்; அடகுதாரர் என்ற நிலையில்தான் அவர் அந்த மோதிரத்தைத் தம்மிடம் வைத்திருக்கின்றார். ஆனாலும், கடன் திரும்பச் செலுத்தப்படும்வரை அடகுப் பொருளான மோதிரத்தைத் தம்மிடம் வைத்திருக்கும் உரிமை அவருக்கு உண்டு. அந்த உரிமையைப் பாதிக்கும் விதத்தில், அடகு மோதிரத்தை அதன் சொந்தக்காரரே அடகுதாரரின் சம்மதமின்றி எடுத்துச் செல்லுவது, அடகுதாரருக்கு முறையற்ற நட்டத்தை ஏற்படுத்தும் செயலாகும்.

அச் செயல் நேர்மையற்றதாகும். எனவே, அது திருட்டுக் குற்றமாகிறது.

இவ்வாறு, நேர்மையின்றி ஒருவர் உடைமையிலுள்ள அசை பொருளை அகற்றும்பொழுது, அப் பொருளின் சொந்தக்காரர்மீதே கூட அப் பொருளைத் திருடிய குற்றம் ஏற்படலாம் என்பதை நாம் கவனத்திற் கொள்ளவேண்டும்.

## 2. அசைபொருளாக இருத்தல் (Movable property)

அசை பொருள்களைத்தான் ஒருவர் திருடுதல் இயலும். அசையாப் பொருள்களான 'நிலம் திருட்டுப்போயிற்று, வீடு திருட்டுப் போயிற்று' என்று நாம் கூறுவதில்லை.

'அசைபொருள்' (movable property) என்றால் என்ன என்பதைச் சட்டத்தின் 22 ஆம் பிரிவு கூறுகின்றது.

'நிலம், நிலத்தோடு இணைந்திருக்கும் பொருள்கள், அப் பொருள்களோடு நிலையாகப் பிணைந்திருப்பவை, இவைகள் நீங்கிய இதர பருப்பொருள்கள் எல்லாம் 'அசைபொருள்கள்'—(22ஆம் பிரிவு).

எனவே, பூமியில் நிற்கும் மரங்களும் பயிர்களும் அசையாப் பொருள்கள். கட்டடங்களும், கட்டடங்களில் நிலையாகப் பதிக்கப் பட்டிருக்கும் சாமான்களும் அசையாப் பொருள்கள்.

அறுவடையாகாத பயிர் அசையாப் பொருள்தான் என்றாலும், அது அறுக்கப்பட்டவுடன் அசைபொருளாகிவிடுகிறது. ஒரு மரம் வெட்டப்பட்டதும் அதுவும் அசைபொருளேயாகும். ஆதலால், நேர்மையின்றிக் கைப்பற்றும் கருத்தோடு ஒருவர் பயிரை மற்றொருவர் அறுத்தல் திருட்டு ஆகிறது. இதே கருத்தோடு ஒருவர் நிலத்திலுள்ள மரத்தை மற்றொருவர் வெட்டுவதும் திருட்டுக் குற்றமாகும். ஒருவர் நிலத்திலிருந்து அறுத்த பயிரை அப்புறப்படுத்தி அகற்றிய பின்னர்தான் திருட்டுக் குற்றம் பூர்த்தியாகிறது என்பதில்லை; நிலத்தில் நிற்கும் பயிரை அறுக்கும் செயலே அந்தப் பயிரை உடையவரின் உடைமையிலிருந்து அகற்றும் செயலாகவும் கருதப் படுகிறது. நேர்மையின்றிக் கைப்பற்றவேண்டும் என்ற கருத்தோடு மற்றொருவர் நிலத்திலுள்ள மரத்தை ஒருவர் வெட்டிச் சாய்த்துவிடுகிறார். அந்த நிலையில் அவர் பிடிபட்டாலும் அவர் திருட்டுக் குற்றத்திற்கே ஆளாகிவிடுகின்றார். 'வெட்டிய மரத்தை நான் எடுத்துச் செல்லவில்லையே' என்று அவர் வாதாட முடியாது. ஏனெனில், அம் மரத்தை வெட்டிய செயலே மரத்தை உடையவரின் உடைமையிலிருந்து அகற்றிய செயலாகவும் கொள்ளப்படுகின்றது. (378-ஆம் பிரிவின் முதல் இரண்டு விளக்கங்கள்.)

ஒருவர் நிலத்திலுள்ள களிமண்ணேயோ, கற்களேயோ எடுத்தாலும் அது திருட்டுதான். மண்ணும் கல்லும் பூமியிலிருந்து அகற்றப்பட்டவுடன் அவை அசைபொருள்களாகிவிடுகின்றன; திருட்டுக்குரிய பொருள்களாகின்றன.

ஆடுமாடு போன்ற விலங்குகளும், கோழி, மயில் போன்ற பறவைகளும் அசைபொருள்கள். பொது மந்தையில் மேய்ந்து கொண்டிருந்த ஒருவருடைய மாடுகளை மற்றொருவர் கள்ளத் தனமாக ஓட்டிச் செல்வது குற்றமாகும்.

ஒருவர்வசமுள்ள நாயை, அவர் வசத்திலிருந்து அகற்ற வேண்டும் என்ற கருத்துடன், அந்த நாய்க்கு ஆசையூட்டும் உணவுப் பொருள்களைக் காட்டி, அது தன்னைப் பின்தொடரச் செய்வதும் திருட்டுக் குற்றமே.

ஒருவர் உடைமையிலுள்ள குளத்திலிருந்து மீன்களைப் பிடித்தல் திருட்டாகும். அந்தக் குளம் எவர் உடைமையிலிருக்கிறதோ அவர் உடைமையிலேயே அதிலுள்ள மீன்களும் இருக்கின்றன. ஆனால், அந்தக் குளத்திற்கு நீர் வருவதற்கென்று ஒரு வாய்க்கால் இருந்து, அந்த வாய்க்கால் வழி குளத்திற்குள் வரும் மீன்கள் மீண்டும் வாய்க்கால் வழியாகவே குளத்திலிருந்து வெளியே செல்லுகின்றன என்றால், குளத்திலுள்ள மீன்களை ஒருவரின் தனி உடைமையில் இருப்பதாகக் கொள்வதற்கில்லை, எனவே, அவை திருட்டுக்குரிய பொருளாவதில்லை.

சங்குகள் பெரும்பாலும் கரையோரக் கடலடியில் வாழ்கின்றன. அச் சங்குகளை எடுக்கும் உரிமையை அரசாங்கத்தினர் ஏலம் விட்டு, ஏலதாரருக்கு வழங்குகின்றனர். வேறொருவர் அச் சங்குகளை எடுத்தால் அது திருட்டுக் குற்றமாகும். ஆனால், நடுக்கடலில் சங்கு எடுப்பது குற்றமாகாது.

நீர், மின்சாரம் இவைகளும் அசை பொருள்கள். மின்சாரம் பெறுவோர்கள் உபயோகிக்கும் அளவுக்குத் தக்கவாறு கட்டணம் செலுத்துகின்றனர். அவர்கள் பயன்படுத்தும் மின்சாரத்தின் அளவைக் காட்டுவதற்கென்று 'மீட்டர்கள்' அமைக்கப்பட்டிருக்கின்றன. அந்த மீட்டரில் தெரியாதவாறு ஏற்பாடு செய்து, மின்சாரத்தை எடுத்துப் பயன்படுத்தி, மின்சாரம் கொடுக்கும் கம்பெனிக்கு அல்லது அரசாங்கத்திற்கு நட்டம் விளைவிப்பது மின்சாரத்தைத் திருடிய குற்றமாகிறது.

### 3. 'உடைமை' (Possession) என்றால் என்ன?

'திருட்டு' என்பதே ஒருவருடைய 'உடைமைக்கு' எதிரான குற்றமாகும். திருட்டுக் குற்றத்தால் ஒரு பொருளின் உடைமைக்கு

உரியவர் அந்த உடைமையை இழக்கின்றார். எனவே, எவருடைய உடைமையிலும் இல்லாத பொருள் எதுவும் திருட்டுக் குற்றத்திற்கு உரியதன்று. காட்டு விலங்குகளை ஒருவர் திருடிக்கொண்டார் என்று சொல்லுவதில்லை. ஏனெனில், காட்டு விலங்குகள் எவருடைய உடைமையிலும் இல்லை. எவருடைய உடைமையிலும் இல்லாத கடல் நீரையோ, காட்டாற்று மணலையோ எவர் எடுத்தாலும் அது திருட்டு ஆவதில்லை.

வீதியிலே கிடந்த தங்க மோதிரம் ஒன்றை ஒருவர் எடுத்து வைத்துக்கொண்டார் எனில், அது திருட்டுக் குற்றம் ஆகாது. ஏனெனில், அந்த மோதிரம் குறிப்பிட்ட எவருடைய உடைமையிலும் அப்பொழுது இல்லை. மோதிரத்தைப் போலீசில் ஒப்படைக்காமல் தாமே வைத்துக்கொள்வது 'கையாடல்' குற்றம் ஆகலாம்; திருட்டுக் குற்றமாகாது.

எனவே, ஒருவர் உடைமையில் உள்ள ஓர் அசைபொருளை அகற்றுவதுதான் குற்றச் செயலாகிறது. ஓர் அசைபொருள் ஒருவரது உடைமையில் எப்பொழுது இருக்கிறது? 'உடைமை' (possession) என்ற சொல்லில் அடங்கியுள்ள பொருள் என்ன?

நான் என்னுடைய புத்தகத்தை என் கையில் வைத்துக் கொண்டிருக்கிறேன். புத்தகம் எனக்குச் சொந்தமானது; அதன் உடைமையும் என்னிடமே இருக்கிறது. இப்பொழுது அப் புத்தகத்தின் உடைமைபற்றிய சிக்கல் ஏதுமில்லை. புத்தகத்தின் உடைமை என்னிடம் இருக்கிறது என்று எளிதில் கூறிவிடலாம். புத்தகத்தை வீட்டில் வைத்துவிட்டு அலுவலகத்திற்கு வருகிறேன். இப்பொழுது இப் புத்தகத்தின் உடைமை யாரிடம் இருக்கிறது? என்னிடமேதான். புத்தகம் என் கையில் இல்லை என்பதால் அதன் உடைமை என்னிடம் இல்லை என்று கொள்வது சரியன்று. என் வீட்டிலுள்ள புத்தகம், இன்னும் இதர பொருள்கள் எல்லாமே என் ஆளுகையில் இருப்பதால், நான் அலுவலகத்தில் இருந்தாலும்—வேறெங்கு இருந்தாலும், அவைகளின் உடைமை என்னிடமேதான் இருக்கின்றது. எனவே, என் வீட்டிலுள்ள புத்தகத்தை என் சம்மதம் பெறுமல் அதைத் தனதாக்கிக்கொள்ளவேண்டும் என்ற கள்ள மனத்துடன் ஒருவர் எடுத்துக்கொண்டார் எனில், அது குற்றமாகும்; எனது உடைமையிலிருந்த புத்தகத்தைத் திருடிய குற்றமாகும்.

நான் ஒரு புத்தகத்தைக் கடையில் வாங்குகிறேன். ஆனல், அதைக் கடைக்காரரிடம் ஒப்படைத்துவிட்டு, என் வேலையாளிடம் கொடுத்து அனுப்பும்படி கூறிவிட்டு வீட்டிற்கு வருகிறேன். வீட்டிற்கு வந்தபின் வேலையாளைக் கடைக்கனுப்பிப் புத்தகத்தை எடுத்துவரச் சொல்லுகிறேன். வேலையாள் கடையிலிருந்து புத்தகத்தைப் பெற்று

வீடு திரும்பிக்கொண்டிருக்கிறார். இப்பொழுது அப் புத்தகம் எனது வேலையாளின் கையில் இருக்கிறது. எனினும், புத்தகத்தின் உடைமை என்னிடம்தான் இருக்கிறது. புத்தகம் வேலையாளின் கைவசம் இருப்பது (custody) உண்மைதான். கைவசம் வைத்திருப்பது என்பது வேறென்று. எனக்காக அப் புத்தகத்தை வேலையாள் தம்கைவசம் வைத்திருக்கிறார். எனவே, வேலையாளின் உடைமை என்னுடைய உடைமையேயாகும்.

இரயில்வே நிலையத்தில் என் பெட்டியைத் தலையில் தூக்கிக் கொண்டு கூலியாள் வருகிறார்; ஆனால், பெட்டியின் உடைமை கூலியாளிடம் இல்லை; அது என்னிடமே இருக்கிறது. பெட்டி கூலியாள்வசம் இருந்தாலும் அதன் உடைமை என்னிடந்தான் இருக்கிறது. எனவே, எனது பெட்டியைச் சுமந்து செல்லும் கூலியாள் அந்தப் பெட்டியை எடுத்துக்கொண்டு தீய கருத்துடன் மறைந்துவிட்டால், அது என் உடைமையில் இருந்த பெட்டியைத் திருடியதாகும். அதுபோன்றே, எனது வேலையாள் கடையிலிருந்து வாங்கிவரும் புத்தகத்துடன் மறைந்துவிட்டால், அதுவும் எனது உடைமையிலுள்ள புத்தகத்தைத் திருடுவதேயாகும்.

ஒருவருடைய பொருள் அவரது மனைவி, எழுத்தர் (clerk), வேலையாள் இவர்களின் உடைமையில் இருந்தாலும், அவரது உடைமையில் இருப்பதாகவே ஆகும். இவ்வாறு சட்டத்தின் 27ஆம் பிரிவு கூறுகின்றது.

நான் என் வீட்டில் நண்பர்களுக்கு விருந்து வைக்கின்றேன். உணவை உண்ணுவதற்குப் பயன்படும் கரண்டிகள் விருந்தினர் களின் கைகளில் இருந்தாலும், அவற்றின் உடைமை என்னிடந்தான் இருக்கிறது என்பதில் ஐயமில்லை.

என் வீட்டிற்கு வந்த விருந்தினர் தாம் கொண்டுவந்த பெட்டியை எனது வீட்டில் வைத்துவிட்டு வெளியே சென்றிருக் கிறார். அவருடைய பெட்டி என் வீட்டில் இருப்பதால் அதன் உடைமை என்னிடம் இருக்கிறது என்று கொள்ளுவது சரியன்று. பெட்டி என்வசம் இருக்கிறது; ஆனால், அதன் உடைமை என் நண்பரிடமே இருக்கிறது. எனவே, அந்தப் பெட்டியிலிருந்து ஒரு பொருளை நான் கள்ள மனத்துடன் எடுத்துக்கொண்டேன் என்றால், அது என் நண்பர் உடைமையில் உள்ள பொருளைத் திருடுவதாகும்.

எனவே, நம் உடைமையில் உள்ள பொருள்கள் எல்லாம் நம் பார்வையிலோ, நாம் எட்டிப் பிடிக்கும் நிலையிலோ இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. ஒருவருடைய ஆடுமாடுகள் அவருடைய வீட்டிலிருந்து ஐந்து மைல்களுக்கு அப்பாலுள்ள

மந்தையில் மேய்ந்துகொண்டிருந்தாலும், அவை அவரது உடைமை யில்தான் உள்ளன. சென்னையிலுள்ள எனது வீட்டிலுள்ள பொருள் கள் நான் டில்லியில் இருக்கும்பொழுதும் என் உடைமை யிலேயே இருக்கின்றன.

நமது நகையை ஒருவரிடம் அடகு வைக்கிறோம். வாங்கிய கடனைக் கொடுக்கும்வரை அடகுதாரர் நமது நகையைத் தம் உடைமையில் வைத்துக்கொள்ளும் உரிமை பெற்றவர். எனவே, கடனைக் கொடுக்காமல் நம் நகையை அடகுதாரரிடமிருந்து வலுவந்தமாகவோ, அவருக்குத் தெரியாமலோ நாம் எடுத்துக் கொண்டால் அதுவும் திருட்டேயாகும். நாம் நகையின் சொந்தக் காரராக இருந்தாலுங்கூட, அந்த நகையின் அப்போதைய உடைமைதாரர் அடகுபிடித்தவர்தாம். அவருடைய முறையான உடைமைக்கு எதிரான செயல் திருட்டுக் குற்றமேயாகிறது.

## இரவல் பெற்றவர், திருடியவர் இவர்களின் உடைமை

ஒருவர் மற்றொருவரிடமிருந்து இரவலாக ஒரு நகையை வாங்கி அணிந்திருக்கின்றார். இப்பொழுது நகையை அணிந்திருப் பவரிடம் நகையின் உடைமை இருக்கிறது. உடைமை பெறுவ தற்கு அந்தப் பொருளின்மீது வேறுவிதமான உரிமை எதுவும் இருக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை. ஒருவரது நகையை மற்றொருவர் திருடிவைத்திருக்கலாம். இப்பொழுது திருடியவரிடம் அந்த நகையின் உடைமை இருக்கிறது. இரவல் வாங்கி அணிந் திருப்பவரிடமிருந்தோ, திருடி அணிந்திருப்பவரிடமிருந்தோ அந்த நகையைக் கள்ள மனத்துடன் வேறொருவர் அகற்றினால், அவர் திருட்டுக் குற்றம் செய்தவரேயாகின்றார். 'இரவல் வாங்கியவருக்கு அந்த நகைமீது என்ன உரிமை இருக்கிறது? திருடியவருக்கு நகைமீது உரிமை என்ன?' என்று, அவர்களிடமிருந்து திருடியவர் வாதாடு வதற்கில்லை. எந்த முறையில் ஒருவருக்கு ஒரு பொருள்மீது உடைமை கிடைத்தாலும் அந்த உடைமையைச் சட்டம் பாதுகாக் கின்றது. அந்த உடைமையை அகற்றும் செயலை ஒருவர் கள்ள மனத்தோடு செய்தால் அவரைத் தண்டிக்கின்றது. திருடிய பொருளின்மீது திருடியவருக்குள்ள உடைமையைத் திருட்டுக் கொடுத்தவர் மதியாதிருக்கலாம். ஆனால், மற்றவர்கள் அதை மதித்தேயாகவேண்டும்.

## ஜப்தி செய்யப்பட்ட பொருள்கள்

ஒருவருடைய அசைபொருள்கள் கோர்ட்டு உத்தரவுப்படி ஜப்தி (attachment) செய்யப்பட்டிருக்கலாம். ஜப்தி செய்யப்பட்ட பொருள்கள் கோர்ட்டின் உடைமையில் இருப்பதாகவே சட்டம்

கருதுகிறது. எனவே, அப் பொருள்களை அவற்றின் சொந்தக்காரர் கோர்ட்டு உத்தரவின்றி எடுத்தால் அது திருட்டுக் குற்றமாகிவிடும்.

மற்றொருவர் நிலத்தை வாரத்திற்கு விவசாயம் செய்யும் குடியானவர், நிலச்சொந்தக்காரருக்குக் கொடுக்கவேண்டிய விகிதா சாரப்படி நெல்லைக் கொடுக்காமல் பூராப் பயிரையும் அறுவடை செய்து எடுத்துக்கொண்டாரெனில், அவர்மீது திருட்டுக் குற்றம் சாட்டுவது செல்லாது. அச் செயல் 424ஆம் பிரிவுப்படி குற்ற மாகும்.

'உடைமை' என்பதன் உட்பொருளைக் கண்டோம். 'உடைமை' என்பது ஒரு சிக்கலான கருத்தைத் தெரிவிக்கும் சொல்லாகும். 'உடைமை' என்பது இதுதான் என்று திட்டவட்டமாக வரையறுத்துச் சொல்லுதல் எளிதன்று. அந்தந்தச் சூழ்நிலைகளைப் பார்த்து, 'உடைமை' எவரிடம் உள்ளது என்பதை நாம் உறுதி செய்ய வேண்டியிருக்கிறது. ஆனல், பல சூழ்நிலைகளிலும் உடைமை பற்றி உறுதி செய்வது எளிதேயாகும்.

### 4. உடைமைதாரரின் சம்மதம் (consent) இன்மை

ஒருவர்வசம் உள்ள அசைபொருளை அவருடைய சம்மதத்துடன் எடுப்பது குற்றமாகாது. ஒருவருடைய சம்மதத்தை மோசடியாகப் பெற்று அவருடைய பொருளை மற்றொருவர் அகற்றலாம். அது 'ஏமாற்றுதல்' (cheating) என்ற குற்றமே தவிரத் திருட்டுக் குற்ற மாகாது. எனவே, ஒரு பொருளை உடையவரின் சம்மதமின்றி அவரிட மிருந்து அகற்றுவதுதான் திருட்டுக் குற்றமாகும்.

### சட்டப்படியான சம்மதமாக இருத்தல் வேண்டும்

பன்னிரண்டு வயதிற்குக் குறைந்த குழந்தையின் சம்மதம் சட்டப் படியான சம்மதம் ஆகாது. அம்மாதிரியே, தவறுதலாகவோ, அச் சத்தாலோ அளிக்கும் சம்மதம் சரியான சம்மதம் ஆகாது. சித்தப் பிரமை உடையவர்கள், குடிவெறியில் உள்ளவர்கள் இவர்களிடம் பெறும் இசைவும் சம்மதமாகாது. (90ஆம் பிரிவு.)

பத்து வயதுக் குழந்தை அணிந்திருக்கும் நகையை அதனிடம் கேட்டு வாங்கி அதைக் கள்ள மனத்துடன் எடுத்துக்கொள்பவர், குழந்தையின் சம்மதத்துடன்தான் நகையைக் குழந்தையிடமிருந்து எடுத்தேன் என்று கூறுவது பொருந்தாது. அது, அக் குழந்தையின் பெற்றோர்களின் உடைமையிலிருந்து அந்த நகையைத் திருடிய குற்றமேயாகும்.

அளிக்கப்படும் சம்மதம் வெளிப்படையாகவும் இருக்கலாம்; உட்கிடையாகவும் இருக்கலாம். வீட்டில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் போடப்பட்டிருக்கும் துணிகளை வண்ணான் வெளுப்பதற்கென்று எடுத்துச் செல்லுகிறான். ஒவ்வொரு முறையும் வீட்டுக்காரரிடம் சம்மதத்தைக் கேட்டு அதன்பின்தான் அழுக்குத் துணிகளை அகற்ற வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. ஒருவர் தமது நண்பரின் புத்த கத்தை அவர் வீட்டிலிருந்து அவரைக் கேளாமல் எடுத்துச் செல்கிறார் என்றால், நண்பர் என்ற முறையில் புத்தகத்தை உடைய வரின் சம்மதம் இருப்பதாகக் கருதி எடுத்துச் செல்லுகிறார். ஆதலால், அது குற்றமாவதில்லை.

உடைமைதாரர்தாம் நேரடியாக சம்மதம் அளிக்கவேண்டும் என்று அவசியம் இல்லை. உடைமைதாரருக்குப் பதிலாக அவரது ஏஜென்டோ அல்லது அதிகாரம் பெற்றவரோ சம்மதம் அளிக்கலாம்.

பிச்சை கேட்டு நிற்கும் ஒருவருக்கு, கணவரது உடையை மனைவி அளிக்கின்றாள். கணவர் அப்பொழுது வீட்டில் இல்லை. பிச்சை வாங்கியவர் கணவரது சம்மதத்தைப் பெற்றுத் துணியை எடுக்கவில்லை. ஆனால், மனைவி அளித்த சம்மதம் கணவரின் அதிகாரம் பெற்றது என்று சட்டம் கொள்கிறது. எனவே, துணிக்கு உடையவரது சம்மதத்தைப் பெறவில்லையாயினும், பிச்சைக்காரர் குற்றவாளி ஆவதில்லை.

எனவே, 'சம்மதம்' என்பது சட்டப்படி அளிக்கப்பட்டதாக இருத்தல் வேண்டும். ஆனால், அது வெளிப்படையாகவோ உட்கிடையாகவோ, நேராகவோ பிறர்மூலமாகவோ அளிக்கப் படலாம்.

## 5. பிறர் உடைமையிலிருந்து எடுப்பதற்கெனப் பொருளை நகர்த்துதல்

திருட்டுக் குற்றத்தின் ஐந்தாவது கூறு, பிறர் உடைமையி லிருக்கும் அசைபொருளை அந்த உடைமையிலிருந்து அகற்றுவதற் கென நகர்த்துவதாகும்.

பிறர் உடைமையிலிருந்து ஒரு பொருளை எடுத்துக்கொள்ளுவது தான் குற்றக் கருத்து; ஆயினும், 'எடுப்பது' என்ற செயல் எந்த நிலையில் பூர்த்தியாகிறது என்பதை நிச்சயிப்பது எளிதன்று. ஒரு பெண் அணிந்திருந்த நகையை அறுத்து எடுத்துக்கொண்டு ஒருவன் ஓடுகின்றான். அவனைச் சிலர் துரத்திப் பிடிக்கின்றனர். இவ்வாறு, அவன் கையுங்களவுமாக உடனேயே பிடிபட்ட பொழுதும் அவனது செயலைத் 'திருட்டு' என்கிறோம். நகையை

அணிந்திருப்பவருக்குத் தெரியாமல் அது திருடப்படுகிறது. இரண்டு அல்லது மூன்று வாரங்கள் கழிந்து போலீசார் திருடனைக் கண்டு பிடிக்கின்றனர். அதற்குள், திருடியவன் நகையை உருக்கி விற்று விட்டான். விற்றதால் வந்த பணத்தையும் செலவழித்துவிட்டான். இவ்வாறு, திருடியவன் நகையைத் தன் உடைமைப் பொருளாக்கி அதனால் பலனும் அடைந்திருக்கிறான். இதையும் 'திருட்டு' என்று தான் கூறுகிறோம். ஒருவர் கழுத்தில் அணிந்திருக்கும் சங்கிலியைத் திருடன் மெதுவாகக் கத்தரித்துவிடுகின்றான். சங்கிலி கீழே விழுகின்றது. அதைக் கவனித்தவுடன் சங்கிலியை அணிந்திருந் தவர் திருடனைப் பிடித்துவிடுகிறார். இப்பொழுது சங்கிலியை அறுத் தவன் என்ன குற்றம் செய்தான்? திருட்டுக் குற்றம்தான். அறுபட்ட சங்கிலியை இன்னும் அவன் கையில் எடுக்கவில்லைதான். இருந் தாலும் திருட்டுக் குற்றம் பூர்த்தியாகிவிட்டது. நகையைப் பறித்து ஓடிய செயலும், தெரியாமல் நகையை அகற்றிய செயலும், அகற்று வதற்கெனச் சங்கிலியைக் கத்தரித்த செயலுமே திருட்டுக் குற்றச் செயல்கள்தாம்.

இது போன்றே ஒருவர் உடைமையில் இருக்கும் நிலத்தில் உள்ள பயிரை அறுத்தவுடனேயே குற்றம் பூர்த்தியாகிவிடுகின்றது. அறுத்த பயிரை அந்த இடத்திலிருந்து அகற்றிச் செல்லவேண்டும் என்ற அவசியம் இல்லை.

பணப்பெட்டியை ஏற்றிக்கொண்டு காளைகள் பூட்டிய வண்டி வருகின்றது. பணப்பெட்டியை அபகரிக்கவேண்டும் என்ற தீய கருத்தோடு, வண்டியை இழுத்துவரும் காளைகளை ஒருவர் தாம் விரும்பிய திசையில் விரட்டுகிறார். இப்பொழுதும் திருட்டுக் குற்றம் நிறைவேறிவிட்டது. திருடுபவர் பணப்பெட்டியை இன்னும் கையால் தொடவில்லை என்பதும், அதை அவர் எடுத்துக்கொள்ளவில்லை என்பதும் உண்மைதான். ஆயினும், பெட்டி அவர் விரும்பிய திசைக்கு நகர்த்தப்பட்டதால் குற்றம் நிறைவேறியதாகவே சட்டம் கருதுகின்றது.

வாடகைக்குத் தங்கியிருந்த விடுதியில் கொடுக்கப்பட்ட போர் வையைத் தாம் எடுத்துக்கொள்ளவேண்டும் என்ற நேர்மையில்லாக் கருத்துடன் அதைத் தம் படுக்கையோடு சேர்த்து ஒருவர் சுருட்டி வைத்துக்கொள்கிறார். அந்த விடுதி அறையைவிட்டு இன்னும் அவர் படுக்கையை எடுத்துக்கொண்டு வெளியே வரவில்லை. அந்த நிலையில் குற்றம் கண்டுபிடிக்கப்படுகிறது. 'போர்வையை எடுத்துக் கொண்டு நான் புறப்படவில்லையே' என்று அவர் கூறித் தப்புவது முடியாது. தம் படுக்கையில் அதை வைத்துச் சுருட்டிய செயலி லேயே திருட்டுக் குற்றம் முழுமை பெற்றுவிட்டது. எனவே, அவர் திருட்டுக் குற்றத்திற்கே ஆளாகின்றார்.

என் நண்பர் வீட்டு மேசைமீது ஒரு மோதிரத்தை நான் பார்க்கிறேன். அதை அபகரிக்கவேண்டும் என்ற தீய கருத்து என் மனத்தில் எழுகின்றது. உடனே அதை எடுத்து என் பையில் போட்டுக்கொண்டால் என் திருட்டுச் செயல் தெரிந்துவிடும் என்று அஞ்சுகிறேன். எனவே, அந்த மோதிரத்தை நண்பரின் வீட்டுக் கூரையில் இருந்த பொந்தில் ஒளித்துவைத்துவிடுகிறேன். நண்பர் அந்தப் பொந்தில் இருக்கும் மோதிரத்தைக் கண்டுபிடிப்பது எளிதில் முடியாது. சில நாட்கள் கழிந்து அந்தப் பொந்திலிருந்து மோதிரத்தை எடுத்துக்கொள்ளலாம் என்பது என் திட்டம். இப்பொழுது, பொந்தில் வைப்பதற்கென மோதிரத்தை எடுத்த செயலே திருட்டாகிவிடுகிறது. மோதிரம் நண்பர் வீட்டிற்குள்தான் இன்னும் இருக்கிறது. இருந்தாலும், தீய கருத்தோடு நான் அதை நகர்த்திய செயல் குற்றமேயாகும் (378ஆம் பிரிவு—விளக்கம்.)

ஒருவர் சட்டைப்பையில் பணப்பை (மணிபர்ஸ்) இருக்கும் எனக் கருதி அதை எடுப்பதற்கெனச் சட்டைப்பைக்குள் திருடன் கைவிடுகிறுன். ஆனல், சட்டைப் பையில் பணப்பை இல்லை. கையைவிட்ட திருடன் பிடிபட்டுவிடுகிறுன். இப்பொழுது அவன் செய்த குற்றம் என்ன? 'திருட முயன்ற' (attempt to commit theft) குற்றமாகும். குற்ற முயற்சிக்கும் தண்டனை உண்டு என்பதை முன்னர் கண்டோம். எனவே, திருட முயன்ற குற்றத்திற்கு அவன் தண்டிக்கப்படுகிறுன். ஆனல், இந்த உதாரணத்தில், சட்டைப் பைக்குள் பணப்பை இருந்தது என்றும், அதைத் திருடன் சட்டைப் பைக்குள்ளிருந்து வெளியில் எடுக்கும்பொழுது அது தவறிக் கீழே விழுந்துவிட்டது என்றும் வைப்போம். இந்த நிலையில் திருடன் பிடிபட்டுவிடுகிறுன். இப்பொழுது அவன் செய்த குற்றம் என்ன? பணப்பை திருடன் கைக்குச் சேரவில்லைதான். அவன் அதை எடுக்க முயலும்பொழுதே அது கீழே விழுந்துவிட்டது. எனினும், திருட்டுக் குற்றம் நிறைவேறிவிட்டது. ஏனெனில், பணப்பையை எடுக்கவேண்டும் என்ற தீய கருத்தோடு அது உடையவரின் உடைமையிலிருந்து அகற்றும் வகையில் நகர்த்தப்பட்டுவிட்டது.

'நகர்த்தல்' (moving) என்றுல் பொருளை நேரடியாக நகர்த்த வேண்டும் என்பதன்று. அப் பொருள் நகராமல் இருப்பதற்கென்று உள்ள தளையை அல்லது தடையை நீக்கிவிட்டாலே அதை நகர்த்தியதாகும். ஒருவரது படகு, துறையில் கட்டப்பட்டிருக்கிறது. அதைத் திருடிக்கொள்ளவேண்டும் என்ற கருத்துடன் ஒருவர் படகைக் கட்டியிருந்த கயிற்றை அறுத்துவிடுகின்றுர். படகு நீரில் மிதந்து நீரோட்டத்தின் வேகத்தில் நகர ஆரம்பிக்கின்றது.

இப்பொழுது படகைப் பிணைத்திருந்த கயிற்றை அறுத்தது, படகை நகர்த்திய செயலேயாகும். இம்மாதிரியே, ஒரு மாட்டைத் திருடவேண்டும் என்ற கருத்தோடு அதைக் கட்டியிருக்கும் கயிற்றை அவிழ்த்துவிடுவதே அம் மாட்டை நகர்த்திச் செலுத்திய செயலாகக் கருதப்படுகிறது.

இந்த உதாரணங்களிலிருந்து தெரிவது என்ன? பிறரது உடைமையிலிருந்து அசைபொருள் ஒன்றை எடுக்கும் வகையில் அதைச் சிறிது நகர்த்தினாலும் போதும், திருட்டுக் குற்றம் பூர்த்தியாகி விடுகிறது. அப் பொருளை நகர்த்துவதே குற்றச் செயலாகிவிடுகிறது. திருடன் அப் பொருளை எடுத்துக்கொண்டுபோய்த் தனது உடைமையாக்கிக்கொண்ட பிறகுதான் திருட்டுக் குற்றம் நிறைவேறுகிறது என்பது சரியன்று.

இதுவரை, 'திருட்டுக்' குற்றத்தில் அடங்கும் ஐந்து கூறுகளை— 'நேர்மையின்மை', 'அசைபொருள்', 'உடைமை', 'சம்மதம்', 'நகர்த்துதல்' என்ற சொற்களின் விளக்கத்தை—விரிவாகக் கண்டோம். இக் கூறுகள் அனைத்தையும் உள்ளடக்கியே சட்டத்தின் 378ஆம் பிரிவு திருட்டுக் குற்றத்தின் இலக்கணத்தைக் கூறுகின்றது.

திருட்டுக் குற்றத்திற்குத் தண்டனையாக மூன்று ஆண்டுகள் வரை சிறை, அபராதம் இவை விதிக்கப்படலாம். (379ஆம் பிரிவு.)

குற்றம் செய்யப்படும் இடம், குற்றத்தைச் செய்பவர், குற்றம் செய்வதற்கான ஆயத்தம் இவற்றிற்குத் தக்கபடி திருட்டுக் குற்றத்தின் தன்மை மாறுகின்றது; அதற்கான தண்டனை அதிகப்படுகின்றது.

**கட்டடம், கூடாரம், படகு இவற்றில் திருடுவது**

ஒரு வீட்டிற்குள் அல்லது கட்டடத்திற்குள் புகுந்து அங்குள்ள பொருளைத் திருடுபவர்களுக்குச் சட்டம் அதிக தண்டனை விதிக்கின்றது. பொதுவாக நம் பொருள்களை வீட்டிலோ அல்லது பண்டகசாலைகளிலோ வைக்கின்றோம். எனவே, அப் பொருள்களுக்கு அதிகப் பாதுகாப்பு அளிக்கவேண்டுமெனச் சட்டம் கருதுகிறது. அந்தக் கட்டடங்களுக்குள் புகுந்து திருடுவது சாதாரணத் திருட்டைவிட அதிகமான குற்றத்தன்மையுடையதாகச் சட்டம் விதிக்கின்றது.

குடியிருப்பதற்கென்றோ அல்லது பொருள்களை வைப்பதற்கென்றோ உள்ள கட்டடம், கூடாரம் (tent), படகு இவைகளில் திருடுபவர்களுக்கு ஏழு ஆண்டுக் காலம்வரை சிறைத்தண்டனையும், அபராதமும் விதிக்கலாம். (380 ஆம் பிரிவு.)

**வேலையாள் திருடுவது**

தம்முடைய எசமானரிடம் உள்ள பொருளை ஓர் எழுத்தரோ, வேலையாளோ திருடினால், அதற்கும் ஏழு ஆண்டுகள்வரை சிறைத் தண்டனை விதிக்கலாம் (381 ஆவது பிரிவு).

வேலையாள் என்றால் ஒழுங்காக மாதாமாதம் சம்பளம் பெறுப வர்தாம் என்பதன்று. ஒருவருடைய உத்தரவுப்படி ஒரு வேலையைச் செய்பவரும், ஒருவருடைய மேற்பார்வையில் ஒரு வேலையைச் செய்பவரும் அவருடைய வேலையாள்தாம். வேலையாள் முழு நேரமும் வேலை செய்யாதவராகவும் இருக்கலாம். எனவே, ஒரு குறிப்பிட்ட காரியத்தைச் செய்வதற்கென்று அமர்த்தப்படுபவரும் வேலையாள்தாம்.

நம் வீட்டிற்குச் சுண்ணும்பு பூசுவதற்கென ஒருவனை அமர்த்து கிறோம். வீட்டிற்குள் இருந்த பொருளை அவன் திருடினால் அவன் இந்தப் பிரிவின்கீழ்க் கூறப்படும் தண்டனைக்கு ஆளாகின்றான்.

நம் வேலையாட்களை நம்பி அவர்களை வீட்டிற்குள் புழங்கவும், நம் பொருள்களைக் கவனித்துக்கொள்ளவும் நாம் அனுமதிக்கிறோம். அவர்கள் அந்த நம்பிக்கையை மதியாமல் குற்றம் செய்தால் சட்டம் அவர்களைக் கடுமையாகத் தண்டிக்கிறது.

**மரணம், காயம் இவைகளை விளைவிக்க 'ஆயத்தம் செய்துவிட்டுத்' திருடுவது**

திருடுவதற்குச் சாதகமாக இருக்கும்பொருட்டு ஒருவருக்கு மரணம் (death) அல்லது காயம் (hurt) அல்லது தடை (restraint) இவைகளை விளைப்பதற்கெனவோ அல்லது இவை விளையலாம் என்று அச்சமேற்படுத்துவதற்கெனவோ ஏற்பாடுகளைச் செய்து விட்டுத் திருடுவது கொடுங்குற்றமாகும். திருடிய பிறகு தப்பித்துப் போவதற்காகவோ அல்லது திருட்டுப் பொருளைத் தம்வசம் நிறுத்திக் கொள்வதற்காகவோ மேலே கண்டபடி ஏற்பாடு செய்துவிட்டுத் திருடுவதும் கொடுங்குற்றமாகும். இந்த வகையில் திருடுபவர் களுக்குப் பத்து ஆண்டுக் காலம்வரை சிறைத்தண்டனை உண்டு (382ஆம் பிரிவு.)

ஒருவர் கையிலுள்ள பெட்டியை மற்றவன் திருடுகின்றான். அப்பொழுது பெட்டியை உடையவர் எதிர்த்தால் அவரை உடனே குத்திவிடுவதற்கென்று ஒரு கத்தியையும் அவன் வைத்திருக் கின்றான். இந்த வகையில் பொருளை உடையவருக்குக் காயம் அல்லது மரணம் விளைவிப்பதற்கென ஆயத்தம் செய்துகொண்டு திருடுபவன், இந்தப் பிரிவின் கீழ் அதிகத் தண்டனைக்கு ஆளாகின்றான்.

பஸ் நிலையத்தில் நின்றுகொண்டிருப்பவரின் பணப்பையைத் திருடுவதற்குமுன், அவர் தன்னைத் துரத்திவந்து பையை மீட்டுக் கொள்ளாதவாறு தடுக்கவேண்டும் என்பதற்காக நாலைந்து பேர்களைத் தயார்செய்து அவருக்கு அருகில் நிறுத்திவிட்டு ஒருவன் திருடினால், அது இந்தப் பிரிவின்கீழ் அதிகப்படியான தண்டனைக்குரிய குற்றமாகும்.

இவ்வாறு, திருட்டுக் குற்றம் நடைபெறும் இடம், அதைச் செய்பவர்கள், அதற்கான ஆயத்தம் இவற்றைக் கவனித்து அதற்கேற்ப அதிகத் தண்டனையைச் சட்டம் அளிக்கின்றது.

## 2. அச்சுறுத்தி அபகரித்தல்

## (Extortion)

ஒருவரைப்பற்றி அவதூருன செய்தியை வெளியிடப்போவதாக அவரிடம் மற்ருெருவர் கூறுகின்ருர். அவ்வாறு வெளியிடாமல் இருக்கவேண்டுமெனில் தமக்குப் பணம் கொடுக்கவேண்டும் என்றும் கூறுகின்ருர். வெளியிட இருக்கும் அவதூற்றுக்கு அஞ்சி முன்னவர் பணம் கொடுக்கின்ருர். இந்த வகையில் ஒருவர் மற்ருெருவரை அச்சுறுத்திப் பணம் பெறுவது குற்றமாகும்.

இராமன் என்பவனை ஒரு வீட்டிற்குள் பூட்டி வைத்துவிட்டு, அவன் இரண்டாயிரம் ரூபாய்க்குப் புரோநோட்டு எழுதிக்கொடுத்தால்தான் அவனை வெளியில் விடப்போவதாக முருகன் அச்சுறுத்துகின்ருன். இதற்கு அஞ்சி இராமன் ஒரு புரோநோட்டு எழுதிக் கொடுக்கின்ருன். இவ்வாறு அச்சுறுத்திப் புரோநோட்டுப் பெற்றது குற்றமான செயலாகும்.

இராமனை ஒரு வீட்டிற்குள் பூட்டிவைப்பதற்குப் பதிலாக இராமனுடைய மகனை முருகன் ஓர் அறையில் பூட்டிவைத்துக் கொண்டு, இராமன் புரோநோட்டு எழுதிக் கொடுத்தால்தான் இராமனின் மகன் வெளியில் விடப்படுவான் என்று இராமனை அச்சுறுத்தி, இராமனிடமிருந்து புரோநோட்டைப் பெறுவதும் குற்றமேயாகும்.

ஒருவருக்குக் கொடுங்காயம் விளைவிக்கப்போவதாக அவரை அச்சுறுத்தி அவரிடமிருந்து பணம் பெறுவதும் அல்லது ஒரு தானப்பத்திரத்தில் (gift-deed) அல்லது மதிப்புள்ள பத்திரத்தில் கையெழுத்து வாங்குவதும் குற்றம்.

ஒன்றும் எழுதப்படாத ஒரு காகிதத்தில் அச்சுறுத்தப்பட்டவரிடமிருந்து கையெழுத்தை வாங்கிக்கொள்ளலாம். அதன்பின் அந்தக் காகிதத்தை ஒரு புரோநோட்டாகவோ அல்லது மதிப்புள்ள பத்திரமாகவோ (valuable security) மாற்றிக்கொள்ளலாம்.

இவ்வாறு, மாற்றுவதற்கென்று ஒரு காகிதத்தில் அச்சுறுத்தப்பட்டவரிடமிருந்து கையெழுத்துப் பெறுவதும், புரோநோட்டில் அல்லது மதிப்புள்ள பத்திரத்தில் கையெழுத்துப் பெறுவதும் குற்றமாகிறது.

## 'அச்சுறுத்தி அபகரித்தல்' குற்றத்தின் இலக்கணம்

ஒருவரை, அவருக்கோ அல்லது அவரைச் சேர்ந்த மற்றவருக்கோ தீங்கு விளைவிக்கப்போவதாக அச்சுறுத்தி, அந்த அச்சத்தின் விளைவாக ஒரு பொருளையோ அல்லது மதிப்புள்ள பத்திரத்தையோ, அல்லது மதிப்புள்ள பத்திரமாக மாற்றத்தக்க ஒன்றையோ அவர் அளிக்கும்படி நேர்மையின்றித் தூண்டுதல் 'அச்சுறுத்தி அபகரித்தல்' (extortion)என்ற குற்றமாகும்.

உடையவரின் இசைவின்றி எடுத்தல் திருட்டுக் குற்றம்; அச்சுறுத்தி அதனால் ஏற்பட்ட இசைவுடன் பெறுதல் 'அச்சுறுத்தி அபகரித்தல்' என்ற குற்றம்.

'தீங்கு' (injury) விளைவிப்பதாக அச்சுறுத்தல் இருக்கவேண்டும். 'தீங்கு' என்றால் என்ன என்பதை 44 ஆம் பிரிவு விளக்குகிறது. ஒருவருடைய உடல் (body), உள்ளம் (mind), புகழ் (reputation), பொருள் (property) இவைகளுக்கு ஊறு விளைவிப்பதையே 'தீங்கு' என்கிறோம். எனவே, உடலுக்குக் காயம் விளைவிப்பதாகவோ, புகழ், பொருள் இவைகளுக்குக் கேடு விளைவிப்பதாகவோ, உள்ளத்தைப் புண்படுத்துவதாகவோ அமைவது 'தீங்கு' ஆகின்றது. இதில் ஏதாவது ஒரு வகையில் தீங்கு ஏற்படுத்தப்போவதாக ஒருவரை அச்சுறுத்தி, அதனால் அவரிடமிருந்து பொருளைப் பெறுதல் 'அச்சுறுத்தி அபகரித்தல்' என்ற குற்றமாகும்.

உரிமையை (right) உண்டாக்குவது, மாற்றுவது, விரிவடையச் செய்வது, உரிமையை அழிப்பது, விட்டுக்கொடுப்பது, சட்டப்படியான பொறுப்பையோ உரிமையின்மையையோ ஒப்புக்கொள்வது இவற்றிற்கான பத்திரங்களெல்லாம் 'மதிப்புள்ள பத்திரங்கள்' (valuable security) எனப்படுவனவாகும். (30 ஆம் பிரிவு). விற்பனைப் பத்திரம், விடுதலைப் பத்திரம், புரோநோட்டுகள் இவை போன்றவை 'மதிப்புள்ள பத்திரங்கள்' ஆகும்.

அச்சுறுத்தலின் பயனாய் அச்சுறுத்தப்பட்டவரின் மனத்தில் பயம் ஏற்படுகிறது. விளைந்திருக்கும் இடர்ப்பாட்டிலிருந்து தப்ப வேண்டும் என்ற இக்கட்டான வேளையில், அவர் மனம் குழம்பி நிற்கும் நிலையில், அவர் செய்யும் செயல்கள் அவரது சுயேச்சையான செயல்கள் ஆவதில்லை. அந் நிலையில் தம் பொருளை அவர்

பிறரிடம் கொடுப்பது அவராக இசைந்து கொடுப்பதாகாது. அவர், தமக்கு விளையவிருக்கும் இடர்ப்பாட்டிற்கு அஞ்சியே தம்முடைய பொருளைப் பிறரிடம் கொடுக்கின்றார். இவ்வாறு, அச்சத்தால் அவர் கொடுத்த பொருளைப் பிறர் பெறுதல், அவரது இசைவின்றிப் பிறர் அதை எடுத்துக்கொள்ளும் செயலையே ஒக்கும். எனவே, ஒருவரது இசைவின்றி எடுத்துக்கொள்ளும் திருட்டுக் குற்றத்திற்குரிய தண்டனையையே (மூன்று ஆண்டுக் காலம்வரையான சிறைத் தண்டனையையே) 'அச்சுறுத்தி அபகரித்தல்' என்ற குற்றத்திற்குற்ற தண்டனையாகச் சட்டம் விதிக்கிறது (384 ஆம் பிரிவு).

அச்சுறுத்தியவரின் செயலால் ஒருவருக்கு அச்சம் விளைந்திருக்குமா என்பதைக் காண்பதற்கு அச்சுறுத்தப்பட்டவரின் வயது, சூழ்நிலை இவற்றை நாம் கவனிக்கவேண்டும். வல்லமை இல்லாத ஒருவன் வலிமை மிக்க மற்றொருவனை அச்சுறுத்தல் இயலாது. அந்தந்தச் சூழ்நிலைகளில் அச்சுறுத்தப்பட்டவர் அச்சத்தால் மனங் குலைந்து அதன் பயனாகப் பொருளைக் கொடுத்தாரா என்பதை நீதி மன்றம் ஆராய்ந்து, அச்சுறுத்தியவரின் குற்றப் பொறுப்பைத் தீர்மானிக்கின்றது.

அச்சுறுத்தியவர் ஒருவராக இருக்கலாம்; அச்சுறுத்தப்பட்டவரிடமிருந்து பொருளைப் பெறுபவர் மற்றொருவராக இருக்கலாம். அச்சுறுத்தியவரேதான் பொருளைப் பெறவேண்டும் என்ற அவசியம் இல்லை.

நம்மிடம் கடன் பெற்றவரிடமிருந்து கடனைத் திரும்பப் பெறுவதற்கென்று, அவர்மீது வழக்கிடப்போவதாக அச்சுறுத்திக் கடனை வசூலிக்கலாம். இது குற்றமாவதில்லை. எனெனில், இதில் நேர்மையின்மையான கருத்து ஏதும் இல்லை.

அச்சுறுத்துபவர் நேருக்கு நேராக நின்று இன்னொருவரை அச்சுறுத்தவேண்டியதில்லை. தபால்மூலம் கடிதத்தை அனுப்பி ஒருவர் மற்றொருவரை அச்சுறுத்தலாம். தொலைபேசி மூலமாகப் பேசி அச்சுறுத்தலாம். தீங்கை உடனே விளைவிக்கப்போவதாக அச்சுறுத்த வேண்டியதில்லை. சில நாட்கள் கழிந்து தீங்கு விளைவிக்கப்போவதாகக் கூறியும் அச்சுறுத்தலாம். அச்சுறுத்திய அதே வேளையில் பொருளைப் பெறவேண்டும் என்பதும் அவசியமன்று. அச்சுறுத்தப்பட்டுச் சில நாட்கள் கழிந்த பின்னும், அச்சுறுத்தப்பட்டவர் பொருளைக் கொடுக்கலாம்.

ஒருவர்மீது குற்றம் சாட்டப்போவதாகக் (criminal accusation) கூறி அச்சுறுத்தலும், தீங்கு விளைவிப்பதாகக் கூறி அச்சுறுத்தலேயாகும். ஒருவர் ஒரு குற்றத்தைச் செய்திருக்கலாம். அதை வெளிப்

படுத்திக் குற்ற வழக்கிடப்போவதாகக் கூறுவதும் முறையற்ற அச்சுறுத்தலேயாகும்.

தமக்கோ அல்லது தம்மைச் சேர்ந்தவருக்கோ மரணம் அல்லது கொடுங்காயம் விளையலாம் என்று அஞ்சும்படி ஒருவரை வைத்து, 'அச்சுறுத்தி அபகரித்தல்' குற்றத்திற்குப் பத்தாண்டுக் காலம்வரை சிறைத்தண்டனை உண்டு (386ஆம் பிரிவு).

மரண தண்டனையோ, ஆயுட்காலச் சிறைத் தண்டனையோ விதிக்கத்தக்க குற்றங்கள் செய்ததாக ஒருவர்மீது குற்றம் சாட்டப் போவதாக 'அச்சுறுத்தி அபகரித்தல்' குற்றத்திற்குப் பத்தாண்டுக் காலம்வரை சிறைத்தண்டனை உண்டு (388ஆம் பிரிவு).

அச்சுறுத்தப்பட்டவரிடமிருந்து எந்தப் பொருளையும் அச்சுறுத்தியவர் பெறாமல் இருக்கலாம்; அச்சுறுத்தப்பட்டவர் எந்தப் பொருளையும் அளிக்காமல் இருக்கலாம். இருப்பினும், அச்சுறுத்திப் பொருள் பெறவேண்டும் என்ற நோக்கத்தோடு ஒருவருக்கு மற்றொருவர் அச்சத்தை விளைத்தலும் குற்றச் செயலாகிறது (385ஆம் பிரிவு).

# 3. கொள்ளை

## (Robbery)

கொள்ளைக் குற்றத்தின் இலக்கணம்—திருட்டும் கொள்ளையும்—அச்சுறுத்தி அபகரித்தலும் கொள்ளையும்—கொள்ளையடிக்கையில் காயம் விளைத்தல்—கொள்ளைக் குற்ற முயற்சி.

காட்டு வழியே செல்லும் ஒரு பெண்ணைத் திருடன் ஒருவன் வழி மறிக்கிறான். கத்தியைக் காட்டி அவளைக் கொன்றுவிடுவதாகப் பயமுறுத்தி, அவள் அணிந்திருக்கும் நகைகளையும் அவளிடமுள்ள பணத்தையும் அவன் கேட்கிறான். உயிருக்கு நேரவிருக்கும் ஆபத்திற்கு அஞ்சிய அந்தப் பெண், தன் நகைகளை ஒவ்வொன்றாகக் கழற்றித் திருடனிடம் கொடுக்கிறாள். கைவளைகளை அவள் கழற்றிக்கொண்டிருக்கும்போதே அவள் காதணிகளைத் திருடனே கழற்றிக்கொள்ளுகிறான். அவள் கையிலிருந்த பையையும் பணத்தையும் திருடனே எடுத்துக்கொள்ளுகிறான். சில நகைகளைமட்டும் அந்தப் பெண்ணே கழற்றிக் கொடுத்துவிடுகிறாள். இப்பொழுது, அந்தப் பெண்ணின் இசைவின்றிச் சில நகைகளைத் திருடன் எடுத்திருக்கிறான். அது திருட்டுக் (theft) குற்றமாகிறது. அவளை அச்சுறுத்தியதால் சில நகைகளை அவள் கொடுக்கத் திருடன் பெற்றிருக்கிறான். இது 'அச்சுறுத்தி அபகரித்தல்' (extortion) என்ற குற்றமாகிறது. எனவே, அந்தப் பெண்ணின் நகைககளையும் பணத்தையும் பறித்த செயலில் திருட்டுக் குற்றமும், அச்சுறுத்தி அபகரித்த குற்றமும் அடங்குகின்றன. ஆனால், திருடன் எந்த நகைகளைத் திருடினான், எந்த நகைகளை அச்சுறுத்திப் பெற்றான் என்று திட்டவட்டமாகக் கூறுதல் இயலாது. இவ்வாறு, பெரும்பாலும் திருட்டும் அச்சுறுத்தி அபகரித்தலும் கலந்தே நிகழுகின்றன. இந் நிலையில், எந்தச் செயலைத் திருட்டாகக் கொள்வது, எதை 'அச்சுறுத்தி அபகரித்தல்' எனக் கொள்வது என்று தீர்மானிப்பது இயலாத காரியம். எனவே, 'கொள்ளையடித்தல்' (robbery) என்று ஒரு தனிக் குற்றத்தைக் குற்றவியலில் காண்கிறோம்.

கொள்ளைக் குற்றத்தில் திருட்டு, அச்சுறுத்தி அபகரித்தல் என்ற இரண்டு குற்றங்களும் அடங்கியுள்ளன.

**கொள்ளைக் குற்றத்தின் இலக்கணம்**

திருட்டுக் குற்றத்தைச் செய்வதற்கென்றே, திருட்டுக் குற்றத்தைச் செய்யும்பொழுதோ, திருடிய பொருளை எடுத்துச் செல்லும் பொழுதோ அல்லது எடுத்துச் செல்ல முயலும்பொழுதோ, குற்றம் கைகூடுவதற்கென ஒருவருக்கு மரணம்(death) அல்லது உடற்காயம் (hurt) அல்லது முறையற்ற தடை (wrongful restraint) இவற்றில் ஒன்றை விளைவித்தல் அல்லது விளைவிக்க முயலுதல், அல்லது மரணம், உடற்காயம், முறையற்ற தடை இவை உடனே நேரலாம் என்ற அச்சத்தை ஏற்படுத்துதல் அல்லது ஏற்படுத்த முயலுதல்—இது 'கொள்ளை' என்ற குற்றமாகும். இந்தச் சூழ்நிலைகளில் திருட்டுக் குற்றம் கொள்ளைக் குற்றமாக மாறுகின்றது.

அச்சுறுத்தி அபகரித்தல் என்ற குற்றத்தைச் செய்யும்பொழுது குற்றவாளி, அச்சுறுத்தப்படுபவரின் முன்னிலையில் இருந்துகொண்டு அச்சுறுத்தப்பட்டவருக்கோ அல்லது அவரைச் சேர்ந்தவருக்கோ மரணம், காயம், அல்லது முறையற்ற தடை இவற்றிலொன்று உடனே விளையலாம் என்ற அச்சத்தை ஏற்படுத்தி, அதன் விளைவாக அங்கேயே, அப்பொழுதே ஒரு பொருளைக் கொடுக்கும்படி தூண்டுதல் கொள்ளை என்ற குற்றம் ஆகும் (*390* ஆம் பிரிவு).

**திருட்டும் கொள்ளையும்** (Theft and Robbery)

ஒருவர் கையிலுள்ள பணப்பையை அவர் சம்மதமின்றிப் பிடுங்கிக்கொண்டு ஒருவன் ஓடுகிறான். இது திருட்டுக் (theft) குற்றம். தனியாகப் பணப்பையுடன் நின்றுகொண்டிருந்தவரிடம் திருடன் கத்தியைக் காட்டி அவரைக் கொன்றுவிடப் போவதாக அச்சுறுத்திப் பணப்பையைப் பிடுங்குகிறான். இது கொள்ளைக் (robbery) குற்றம். ஏனெனில், மரணம் விளையலாம் என்ற அச்சத்தை (fear of death) ஏற்படுத்திப் பணப்பையை வைத்திருந்தவரிடம் இருந்து அதைத் திருடன் எடுத்தான். ஒரு கம்பை ஓங்கிக்கொண்டு பையை வைத்திருப்பவரை அடித்துவிடுவதாகப் பயமுறுத்தியோ அல்லது அடித்துக் காயம் (hurt) ஏற்படுத்தியபின்னரோ பணப்பையைத் திருடன் பறித்துக்கொண்டாலும் அதுவும் கொள்ளை தான். பணப்பையை வைத்திருப்பவர் திருடனைக் கண்டதும் ஓடித் தப்ப முயலுகிறார். ஓடியவரைப் பிடித்து நிறுத்தி வலுவந்தமாகப் பணப்பையைத் திருடன் எடுக்கிறான். இதுவும் கொள்ளைக் குற்றம். ஏனெனில், பணப்பை வைத்திருந்தவரைப் பிடித்து நிறுத்தியது, அவருக்கு முறையற்ற தடையை (wrongful restraint) ஏற்படுத்தியதாகும்.

பணப்பையைத் திருடிக்கொண்டு ஓட முயலும் திருடனை அருகில் நின்ற மற்றொருவர் பிடித்து நிறுத்த முற்படுகின்றார். அவரைத் திருடன் கத்தியால் குத்திவிடுகிறான். இதுவும் கொள்ளை யடித்த லாகும். திருடிய பொருளை எடுத்துச் செல்லுவதற்கெனக் காயத்தை விளைத்தலால் இது கொள்ளையடித்தல்தான். திருட்டுக் கொடுத்த வருக்குத்தான் காயத்தை விளைத்திருக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை. திருடிய பொருளுடன் ஓடிக்கொண்டிருக்கும் திருடனைத் துரத்திச் சென்ற மற்றொருவர்மீது அத்திருடன் கற்களை விட்டெறிந்து அவருக்குக் காயத்தை விளைத்தால் அதுவும் கொள்ளையடிக்கும் குற்ற மாகும்.

ஒரு வீட்டிற்குள் புகுந்து ஒருவன் திருடுகிறான். வீட்டில் இருந் தவர்களுக்குத் தெரியாமலோ அல்லது அவர்கள் பார்த்துக்கொண் டிருக்கும்பொழுதே சட்டென்று பொருளை எடுத்துக்கொண்டோ அவன் அகன்றுவிட்டால் அது வெறும் திருட்டுக் குற்றம்தான். வீட்டில் இருந்தவரை ஒரு தூணில் கட்டிப்போட்டுவிட்டுத் திருடன் பொருள்களை எடுத்துச் சென்றால் அது கொள்ளைக் குற்றம். ஏன்? திருட்டுக் குற்றத்தைச் செய்வதற்கென்று இன்னொருவருக்கும் முறை யற்ற தடையை (wrongful restraint). திருடன் ஏற்படுத்தினான். அதுபோன்றே வீட்டில் இருந்தவரிடம் ஆயுதத்தைக் காட்டி அச் சுறுத்தியோ அல்லது அவருக்குக் காயத்தை விளைவித்தோ பொருளை அகற்றிச் சென்றாலும் அது கொள்ளைக் குற்றமாகும்.

இவ்வாறு, வன்முறையோடு கூடிய திருட்டுக் குற்றம் கொள்ளைக் குற்றமாகின்றது. வன்முறையால் விளைவது மரணம், உடற்காயம், முறையற்ற தடை. இந்த மூன்றில் ஒன்றைச் செய்தோ அல்லது செய்யப்போவதாக அச்சுறுத்தியோ, ஒருவர் திருடினாலும் சரி, திருட்டுப் பொருளைக் கொண்டுசென்றாலும் சரி, அந்தத் திருட்டுக் குற்றம் கொள்ளைக் குற்றமாக மாறிவிடுகின்றது.

| A | B |
|---|---|
| 1. திருடுவதற்கு ஏற்பாடாக, | 1. மரணம் விளைத்தல் அல்லது விளைக்க முயலுதல்; |
| 2. திருடும்பொழுது, | 2. காயம் விளைத்தல் அல்லது விளைக்க முயலுதல்; |
| 3. திருடியதை எடுத்துச் செல்லும் பொழுது, | 3. தடை விளைத்தல் அல்லது விளைக்க முயலுதல்; |
| 4. திருடியதை எடுத்துச்செல்ல முயலும் பொழுது, | 4. மரணம் அல்லது காயம் அல்லது தடை உடனே விளையும் என்ற அச்சத்தை ஏற்படுத்துதல். |

'A' என்பதன் கீழ்க்காணும் நான்கு செயல்களில் ஒன்ருேடு 'B' என்பதன் கீழ்க்காணும் நான்கு செயல்களில் ஏதாவது ஒன்று சேர்ந்தவுடன் அது கொள்ளைக் குற்றமாகிவிடுகிறது. இவ்வாறு திருட்டுக் குற்றம் கொள்ளைக் குற்றமாக மாறுகின்றது.

**அச்சுறுத்தி அபகரித்தலும் கொள்ளையும் (Extortion and Robbery)**

இராமன் முருகனுக்கு ஒரு கடிதம் எழுதுகிருன். அக் கடிதத்தில் முருகன் இராமனுக்கு ஆயிரம் ரூபாய் கொடுக்கவேண்டும் என்றும், ஒரு வாரத்திற்குள் இவ்வாறு முருகன் கொடுக்கவில்லையெனில், முருகன் சுட்டுக் கொல்லப்படுவான் என்றும் கண்டிருக்கிறது. இந்தக் கடிதத்தின்மூலமாக, இராமன் முருகனை அச்சுறுத்தித் தனக்குப் பணம் கொடுக்குமாறு செய்கின்ருன். இது 'அச்சுறுத்தி அபகரித்தல்' (extortion) என்ற குற்றம் என்று கண்டோம்.

முருகன் பணப்பையோடு வீதியில் வந்துகொண்டிருக்கிருன். இராமன் அவனைச் சந்தித்துக் கைத்துப்பாக்கியைக் காட்டி முருகனைக் கொன்றுவிடுவதாக அச்சுறுத்திப் பணப்பையைத் தன்னிடம் தருமாறு கேட்கிருன். அச்சுறுத்தப்பட்ட முருகன் பணப்பையை இராமனிடம் கொடுத்துவிடுகிருன். இப்பொழுது இராமனின் செயல் கொள்ளையடித்த (robbery) குற்றமாகிறது. ஏன்? ஒன்று, மரணம் உடனே விளையலாம் என்ற அச்சம் முருகனுக்கு ஏற்பட்டது. இரண்டு, இந்த அச்சத்தை விளைத்த இராமன் முருகனுக்கு நேரிலேயே நின்று அச்சத்தை விளைவித்தது. மூன்று, பணப்பையை அங்கேயே, அப்பொழுதே கொடுக்கும்படி தூண்டியது. முதலில் கூறப்பட்ட அச்சுறுத்தி அபகரித்தல் குற்றத்தில் அச்சத்தை விளைத்த இராமன் முருகனுக்கு எதிரில் நேராக வந்து அச்சத்தை விளைக்கவில்லை. கடிதத்தின்வழியேதான் முருகன் அச்சுறுத்தப்பட்டான். மேலும், விளைக்கப்பட்ட அச்சம் மரணம் உடனே விளையும் என்பதன்று. ஒரு வாரத்திற்குள் பணம் கொடுக்கப்படாவிடில், முருகன் சுட்டுக் கொல்லப்படுவான் என்றுதான் முருகன் அச்சுறுத்தப்பட்டான்.

மரணம் உடன் விளையும் என்ற அச்சுறுத்தல் இருந்ததாலும், அச்சுறுத்தும் இராமன் நேரில் நின்று அச்சுறுத்தியதாலும், பணம் அங்கேயே அப்பொழுதே கொடுக்கப்பட்டதாலும் 'அச்சுறுத்தி அபகரித்தல்' (extortion) என்ற குற்றம் 'கொள்ளைக்' (robbery) குற்றமாகிவிட்டது.

இவ்வாறு, மரணமோ, காயமோ, தடையோ உடனே ஏற்படலாம் என்று ஒருவரை நேரில் அச்சுறுத்தி, அங்கேயே, அப்பொழுதே அவரைப் பொருளைக் கொடுக்கும்படி தூண்டுதல் கொள்ளைக் குற்றமாகும்.

அச்சுறுத்தப்படுபவருக்குத்தான் மரணம், காயம், தடை விளைய இருப்பதாக அச்சுறுத்தல் இருக்கவேண்டியதில்லை. அவரைச் சேர்ந்த மற்றொருவருக்கு மரணத்தையோ, காயத்தையோ, தடையையோ உடனே விளைக்கப்போவதாகவும் ஒருவர் அச்சுறுத்தப் படலாம்.

முருகன் தன் குழந்தையுடனும் பணப்பையுடனும் காட்டு வழியே செல்லுகையில், அவன் குழந்தையைப் பிடுங்கிக்கொண்டு அதை ஒரு பாறைமீது மோதிக் கொன்றுவிடப்போவதாக அச்சுறுத்தி, முருகனிடமிருந்து பணப்பையைப் பெறுவது கொள்ளையடித்தலாகும்.

இவ்வாறு, திருட்டுக் குற்றமும், அச்சுறுத்தி அபகரிக்குங் குற்றமும் கொள்ளைக் குற்றமாக மாறுகின்றன.

### கொள்ளைக் குற்றத்திற்குத் தண்டனை

கொள்ளைக் குற்றத்திற்குப் பத்தாண்டு காலம் வரை சிறையும் அபராதமும் தண்டனையாகும். இரவு நேரத்தில் நெடுஞ்சாலைகளில் (highways) கொள்ளையடிப்பவர்களுக்கு பதினான்கு ஆண்டுகள் வரை சிறைத் தண்டனை (392 ஆம் பிரிவு).

### கொள்ளையடிக்கையில் காயம் விளைத்தல்

கொள்ளையடிக்கும்பொழுது ஒருவருக்கு காயம் விளைவித்தால் அதற்கு ஆயுட்கால சிறைத் தண்டனை அல்லது பத்தாண்டுவரை தண்டனை. கொள்ளையடிக்க முயலும்பொழுது ஒருவருக்கு காயம் விளைத்தாலும் இதே தண்டனைதான் (394 ஆம் பிரிவு).

கொடிய ஆயுதங்களைப் பயன்படுத்திக்கொண்டு கொள்ளையடித்தல், கொடுங்காயத்தை விளைத்துக் கொள்ளையடித்தல், கொள்ளையடிக்கையில் மரணம், கொடுங்காயம் இவற்றை விளைக்க முயற்சி செய்தல் இக் குற்றங்களுக்கு ஏழு ஆண்டுகளுக்குக் குறையாத காலத்திற்குச் சிறைத்தண்டனை (397 ஆம் பிரிவு).

### கொள்ளைக் குற்ற முயற்சி

கொள்ளையடிக்க முயற்சி செய்த குற்றத்திற்கு ஏழாண்டு காலம் வரை சிறையும் அபராதமும் உண்டு (393 ஆம் பிரிவு). கொடிய ஆயுதங்களை வைத்துக்கொண்டு கொள்ளையடிக்க முயற்சி செய்தால் ஏழாண்டு காலத்திற்குக் குறையாமல் சிறை (398 ஆம் பிரிவு).

# 4. கூட்டுக்கொள்ளை
## (Dacoity)

கூட்டுக் கொள்ளை—கூட்டுக் கொள்ளையில் கொலை—கூட்டுக்கொள்ளைக்கு முன்னேற்பாடு செய்தல்—கூட்டுக் கொள்ளைக் கூட்டத்தைச் சேர்ந்தவராயிருத்தல்—கூட்டுக் கொள்ளைக்கெனக் கூடியிருத்தல்—கொடிய ஆயுதங்களோடு கூட்டுக் கொள்ளை.

ஐந்து அல்லது அதற்கு மேற்பட்ட நபர்கள் சேர்ந்து இணைந்து (conjointly) கொள்ளைக் குற்றத்தைச் செய்தாலும், கொள்ளையடிக்க முயற்சி செய்தாலும், அது கூட்டுக் கொள்ளை (dacoity) என்ற குற்றமாகிறது.

ஒருவரிடமிருந்து பொருளை வன்முறையில் கொள்ளையிட்டு நேரடியாக எடுப்பவர்கள் இரண்டு பேர்களாகவும், அந்த இரண்டு பேர்களுக்கு உதவியாக உள்ளவர்கள் மூன்று பேர்களாகவும் இருக்கலாம். மொத்தம் ஐந்து பேர்கள் கொள்ளைக் குற்றச் செயலில் ஈடுபடுவதால் அது கூட்டுக் கொள்ளையாகிவிடுகிறது.

ஐந்து அல்லது மேற்பட்டவர்கள் சேர்ந்து கூட்டாகக் கொள்ளையிடுதல், கொள்ளையிட முயற்சி செய்தல், அல்லது கொள்ளையிடுவோரும் அதற்கு முயலுவோரும், அவர்களுக்கு உதவியாக இருப்போருமாகச் சேர்ந்து ஐந்து அல்லது அதற்கு மேற்பட்டிருத்தல்—இது, 'கூட்டுக் கொள்ளை' ஆகிறது. கொள்ளையிடுபவர், அதற்கு முயலுபவர், அதற்கு உதவியாக இருப்பவர் ஒவ்வொருவரும் அக் குற்றத்திற்கு உள்ளாகின்றனர் (391 ஆம் பிரிவு).

ஒரு குற்றத்தைத் தனித்து ஒருவர் இழைத்தல் ஒருவகை; பலர் கூடி அதைச் செய்தல் மற்றொரு வகை. பொதுவாகக் கொள்ளையடிப்பது போன்ற கொடுங்குற்றங்களைத் தனியாக ஒருவர் மட்டும் செய்வதற்குத் துணிவு வருவதில்லை. பலர் கூடி இணைந்து அக் குற்றத்தைச் செய்வதற்குத் திட்டமிட்டு, ஒருவர் மற்றொருவருக்குத் துணை நின்று உதவி செய்வதால் அவர்கள் துணிந்து அக் குற்றச்

செயலில் இறங்கிவிடுகின்றனர். ஒரு கட்டடத்திற்குள் நுழைந்து, பூட்டப்பட்டிருக்கும் பெட்டிகளை உடைத்து, அங்குக் காவலுக்கிருப்போரை மடக்கிப் பொருளைக் கொள்ளையடிப்பது என்றால், அது ஒருவர் அல்லது இருவரால் செய்ய முடியாததாகும். எனவே, பலர் கூடி இச் செயலில் ஈடுபடுகின்றனர். பலர் சேர்ந்து இணைந்து செயற்படும்பொழுதுதான் இத்தகைய கொள்ளைக் குற்றம் சாத்தியமாகிறது. ஆதலால், சட்டம் இவ்வாறு பலர் கூடிக் கொள்ளையடிக்கும் செயலில் ஈடுபடுவதைக் கொடுங்குற்றமாகக் கொள்ளுகிறது. அதற்குக் கடுமையான தண்டனையையும் விதிக்கின்றது. ஐந்து பேர்கள் கூடிக் கொள்ளையடிக்க முயலுவதையும் கூட்டுக் கொள்ளைக் குற்றமெனச் சட்டம் விதிக்கின்றது.

கூட்டுக் கொள்ளைக் குற்றத்தில் சம்பந்தப்பட்ட ஒவ்வொருவரும் அக் குற்றத்திற்குப் பொறுப்பாகின்றனர். கொள்ளையடிப்பதற்கு என்று ஒரு கட்டடத்திற்குள் நுழைந்து வேலையாள்களை அச்சுறுத்தியவர் ஒருவராக இருக்கலாம். பொருள்கள் இருந்த பெட்டியை உடைத்தவர் ஒருவராக இருக்கலாம். எடுக்கப்பட்ட பொருளை அகற்றியவர் மற்றொருவராக இருக்கலாம். இச் செயலுக்கு உதவியாக இரண்டு பேர்கள் கட்டடத்திற்கு வெளியில் நின்றுகொண்டிருக்கலாம். இப்பொழுது இந்த ஐந்து பேர்களும், அவர்கள் ஒவ்வொருவரும், கூட்டுக் கொள்ளையடித்த குற்றத்திற்குப் பொறுப்பாகின்றனர்.

### தண்டனை

ஆயுட்காலச் சிறைத் தண்டனை அல்லது பத்தாண்டு காலம் வரை தண்டனையும் அபராதமும் கூட்டுக் கொள்ளைக் குற்றத்திற்கு விதிக்கப்படலாம் (395 ஆம் பிரிவு).

### கூட்டுக் கொள்ளையில் கொலை

கூட்டுக் கொள்ளைக் குற்றத்தில் ஈடுபட்டிருப்பவர்களில் எவரேனும் ஒருவர், அக் குற்றத்தைச் செய்கையில், கொலை செய்துவிட்டாரெனில், அந்தக் கொலைக் குற்றத்திற்குக் கூட்டுக் கொள்ளையில் ஈடுபட்ட ஒவ்வொருவரும் பொறுப்பாகின்றனர். அவர்கள் ஒவ்வொருவருக்கும் மரண தண்டனை விதிக்கப்படலாம் (396 ஆம் பிரிவு).

மேலே நாம் கண்ட உதாரணத்தில், கட்டடத்தில் இருந்த வேலையாளை அச்சுறுத்தியவருக்கும் வேலையாளுக்கும் சண்டை வந்து, வேலையாள் கொலைசெய்யப்பட்டார் என்று வைப்போம். கட்டடத்திற்கு வெளியே உதவியாக நின்றுகொண்டிருந்தவர்களும், பெட்டியை உடைத்தவரும், பொருள்களை அகற்றியவரும்

அந்தக் கொலைக் குற்றத்திற்கு ஆளாகின்றனர். அவர்களுக்கும் மரண தண்டனை விதிக்கப்படலாம். 'நான் கொள்ளையடிக்கும் நோக்கத்தோடு மட்டும்தான் கூட்டத்தில் சேர்ந்தேன். கொலை நடக்கும் என்று எனக்குத் தெரியாது. அது என் கருத்துமன்று. எனவே, நான் மற்றவர் செய்த கொலைக்குப் பொறுப்பில்லை' என்று எவரும் வாதாடுவதற்கில்லை. ஒருவர் கொள்ளைக் கூட்டத்தில் சேர்ந்த பெருங்குற்றம், மற்றக் குற்றப் பொறுப்புகளுக்கும், பிறர் செய்த கொலைக் குற்றத்திற்கும் கூட அவரைப் பொறுப்பாக்கி விடுகிறது.

**கூட்டுக் கொள்ளைக்கு முன்னேற்பாடு செய்தல்**

பொதுவாக, செய்து முடிக்கப்பட்ட குற்றங்களுக்கும், குற்ற முயற்சிகளுக்குமே ஒருவருக்குத் தண்டனை அளிக்கப்படுகிறது. 'குற்ற முயற்சி' (criminal attempt) என்று எதைக் குறிப்பிடுகின்றோம் என்று முன்னர்க் கண்டோம். முயற்சி (attempt) நிலையை அடையாத முன்னேற்பாடான (preparation) செயல்களைச் சட்டம் தண்டிப்பதில்லை என்றும் விளக்கப்பட்டது. ஆனால், கூட்டுக் கொள்ளைக் குற்றத்தைப் பொறுத்தவரை முன்னேற்பாடான நிலையில் (stage of preparation) இருக்கும்பொழுதே அதைச் சட்டம் குற்றமெனக் கொள்ளுகிறது.

ஐந்து பேர்கள் சேர்ந்து நெடுஞ்சாலையில் சென்றுகொண்டிருந்த ஒருவரை வழிமறித்துக் கத்தியைக் காட்டி அவரைக் கொன்றுவிடுவதாக அச்சுறுத்தி, அவரிடமிருந்த பணப்பையையோ, நகைகளையோ பறித்தல் கூட்டுக் கொள்ளைக் குற்றமாகிறது. இவர்களைக் கண்டதும் பணப்பையை வைத்துக்கொண்டு சென்றவர் ஓடித் தப்பிவிடுகிறார் என்று வைப்போம். இப்பொழுது இந்த ஐந்து பேர்களும் கூட்டுக் கொள்ளை முயற்சி என்ற குற்றத்திற்கு ஆளாகின்றனர். இந்த முயற்சி 391 ஆம் பிரிவுப்படி கூட்டுக் கொள்ளைக் குற்றமேயாகும். நெடுஞ்சாலையில் ஒருவரை மறித்துக் கொள்ளையடிக்க வேண்டும் என்ற திட்டத்தோடு, இந்த ஐந்து பேர்களும் கூடிச் சென்றுகொண்டிருக்கின்றனர்; அல்லது, திட்டப்படி வழிப்போக்கரை அச்சுறுத்துவதற்கு அல்லது வழிப்போக்கர் வருவார் என்று எதிர்பார்த்து ஓர் இடத்தில் காத்துக்கொண்டிருக்கின்றனர். இந்த நிலைகளிலும் அவர்கள் குற்றவாளிகள் ஆகின்றனர். ஏன்? கூட்டுக் கொள்ளைக்கு முன்னேற்பாடான செயல்களில் அவர்கள் ஈடுபட்டுவிட்டனர்.

இவ்வாறு, கூட்டுக் கொள்ளைச் செயலுக்கான முன்னேற்பாடுகளைச் செய்வோருக்கும் பத்தாண்டு காலம் வரை சிறைத் தண்டனையும் அபராதமும் உண்டு (399 ஆம் பிரிவு).

கூட்டுக் கொள்ளைக்கான முன்னேற்பாட்டுச் செயலை ஐந்து பேர்களும் சேர்ந்துதான் செய்யவேண்டும் என்பதன்று. எவரேனும் ஒருவர் செய்தாலும் அது குற்றந்தான். கூட்டுக் கொள்ளைக்கென ஒருவர் ஆயுதம் வாங்குகிறார். என்றால் அவர் இந்தப் பிரிவுப்படி குற்றவாளி ஆகின்றார்.

கூட்டுக் கொள்ளை கொடுமையான குற்றமாவதால், முன்னேற்பாட்டு நிலையிலேயே அந்தச் செயல் தடுக்கப்படவேண்டும் என்ற நோக்கத்தோடு, அதற்கென்று முன்னேற்பாடு செய்வோரையும் சட்டம் தண்டிக்கின்றது.

### கூட்டுக்கொள்ளைக் கூட்டத்தைச் சேர்ந்தவராயிருத்தல்

கூட்டுக் கொள்ளையடிப்பதைத் தொழிலாகக்கொண்டு பலர் கூடி இயங்குவதைச் சட்டம் அனுமதிப்பதற்கில்லை. எனவே, வழக்கமாகக் கூட்டுக் கொள்ளையடிக்கும் கூட்டத்தைச் சேர்ந்தவர் ஒவ்வொருவரும் தண்டனைக்கு ஆளாகின்றனர் (400 ஆம் பிரிவு). ஆயுட்காலச் சிறைத் தண்டனைகூட அவருக்கு விதிக்கப்படலாம்.

### கூட்டுக் கொள்ளைக்கெனக் கூடியிருத்தல்

கூட்டுக் கொள்ளையடிப்பதற்கெனக் கூடியிருப்பவர்களில் ஒருவராக இருப்பதும் குற்றமாகும். இதற்கு ஏழு ஆண்டுகள் வரை சிறைத் தண்டனை உண்டு (402 ஆம் பிரிவு).

### கொடிய ஆயுதங்களோடு கூட்டுக் கொள்ளை

கூட்டுக் கொள்ளையடிக்கும்பொழுது கொடிய ஆயுதங்களைப் பயன்படுத்தல், கொடுங் காயத்தை விளைத்தல், மரணம், கொடுங் காயம் இவற்றை விளைக்க முயற்சி செய்தல் இவற்றிற்கு ஏழாண்டு காலத்திற்குக் குறையாத சிறைத் தண்டனை உண்டு (397 ஆம் பிரிவு). கொடிய ஆயுதங்களைத் தாங்கிக்கொண்டு கூட்டுக் கொள்ளைக்கு முயற்சி செய்தாலும் ஏழாண்டுக்குக் குறையாத காலத்திற்குச் சிறை உண்டு (398 ஆம் பிரிவு).

**இதுவரை 'திருட்டு' (theft) என்றால் என்ன? 'அச்சுறுத்தி அபகரித்தல்' (extortion) என்றால் என்ன? திருட்டும், அச்சுறுத்தி அபரித்தலும் எவ்வாறு கொள்ளைக் (robbery) குற்றம் ஆகிறது? கொள்ளைக் குற்றம் எப்பொழுது 'கூட்டுக் கொள்ளை'க் (dacoity) குற்றம் ஆகின்றது என்பவைபற்றி விரிவாகக் கண்டோம்.**

இந்தக் குற்றங்கள் எல்லாவற்றிற்கும் நேர்மையின்மை (dishonesty) அடிப்படையாகும். அதுவே, குற்ற மனத்தைக் குறிக்கிறது. எனவே, நேர்மையற்ற கருத்தோடு, ஒருவர் வசமுள்ள பொருளை அவர் இசைவின்றி எடுத்தல் 'திருட்டா'கிறது. அவரைப் பயமுறுத்தி அப் பொருளை அளிக்கச் செய்தல், 'அச்சுறுத்தி அபகரித்தல்' என்ற குற்றமாகிறது. திருட்டும், அச்சுறுத்தி அபகரித்தலும் வன்முறையாகச் செய்யப்பட்டால், 'கொள்ளை'க் குற்றம் பிறக்கிறது. ஐந்து அல்லது அதிகப்பட்டபேர்கள் சேர்ந்து கூட்டாகக் கொள்ளைக் குற்றத்தைச் செய்தால் அது 'கூட்டுக்கொள்ளை'யாகி விடுகிறது.

# 5. கையாடல்

## (Misappropriation of Property)

கையாடல் — திருட்டும் கையாடலும் — கையாடல் குற்றத்திற்கு உதாரணங்கள் — பொருளைக் கண்டெடுப்பவரின் கடமை — குறுகிய காலக் கையாடலும் குற்றமேயாகும்—பொதுச் சொத்தைக் கையாடல் செய்வது—இறந்தவர் பொருளைக் கையாடல் செய்வது

அசைபொருள் ஒன்றை ஒருவர் நேர்மையின்றித் தமதாக்கிக் கொள்ளுதல், அல்லது தன்னலத்திற்குப் பயன்படுத்துதல் 'கையாடல்' (Misappropriation) என்ற குற்றமாகும் (403 ஆவது பிரிவு).

'ஒருவர் பொருளுக்குப் பிறர் உரியரல்லர்' என்ற நேர்மையான எண்ணத்தை 'நடுவு' என்று குறிக்கின்றோம். நடுவுணர்வு இன்மையை dishonesty என்று ஆங்கிலத்தில் கூறுகிறோம். இந்த நடுவு எண்ணம் இன்றிப் பிறர் பொருளைக் கைப்பற்ற வேண்டும் என்ற கருத்தை வெஃகுதல் என்கிறார் வள்ளுவர். வெஃகுதலால் விளைவதே கையாடல் என்னுங் குற்றம்.

பிறர் பொருள் நம் வசம் இருக்கிறது. அந்தப் பொருளை நாம் நம் வசத்தில் எடுக்கும்பொழுது நல்ல எண்ணத்தோடுதான் எடுக்கிறோம். அவ்வாறு, எடுத்ததற்குப்பின் நம் மனநிலையில் ஏற்படும் மாறுதலால்தான் இக் குற்றம் பிறக்கிறது. குற்றமற்ற வகையில் நம் வசம் இருக்கும் பிறர் பொருளை நம்முடையதாக்க வேண்டும் என்ற கருத்து நமக்குத் தோன்றுகிறது. அந்தத் தீய கருத்தோடு அப் பொருளை நம்முடையதாக்கிக்கொள்கிறோம்; அல்லது அப் பொருளை நம் நலனுக்குப் பயன்படுத்திக்கொள்ளுகிறோம். இது கையாடல் என்னும் குற்றச் செயலாகும்.

பிறர் பொருள் நம் முறையான உடைமையில் இருக்கிறது. அதை நம் பொருளாக ஆக்கிக்கொள்ள வேண்டும் என்ற நேர்மையற்ற கருத்துத் தோன்றியவுடன், நம் உடைமையின் தன்மை மாறி-

விடுகின்றது. அது முறையற்ற உடைமையாகிவிடுகிறது; கையாடல் குற்றமாகிறது.

**திருட்டும் கையாடலும்**

திருட்டுக் குற்றத்தில், பிறர் பொருளை நாம் எடுக்கும்பொழுதே நேர்மையற்ற கருத்தோடு எடுக்கிறோம். எனவே, அங்கு எடுக்கும் செயலே குற்றமாகிவிடுகிறது. கையாடல் குற்றத்தில், பிறர் பொருளை நாம் நம் வசப்படுத்தும்பொழுது நல்லெண்ணத்தோடு தான் செயற்படுகிறோம். ஆனால், நம் வசம் அந்தப் பொருள் வந்த பிறகு அந்தப் பொருளை நம்முடையதாக்கிக்கொள்ள வேண்டும் என்ற நேர்மையற்ற எண்ணம் உதிக்க, அதன் பயனாக அப் பொருளை நம்முடையதாக்குகிறோம் அல்லது நம் நலனுக்கு அதைப் பயன்படுத்திக்கொள்ளுகிறோம். இதுவே, திருட்டுக் குற்றத்திற்கும் கையாடல் குற்றத்திற்கும் உள்ள வேறுபாடு.

**கையாடல் குற்றத்திற்கு உதாரணங்கள்**

நான் எனது நண்பர் வீட்டிற்குச் சென்று அவருடன் பேசிக் கொண்டிருந்தேன். அப்பொழுது அவர் மேசைமீதிருந்த அவருடைய பேனாவை என்னுடையது என்று தவறாக எண்ணிக் கொண்டு எடுத்து வந்துவிட்டேன். நண்பரின் பேனாவை நான் எடுக்கும்பொழுது என் மனத்தில் தீய எண்ணம் ஏதும் இல்லையாதலால், அவ்வாறு எடுத்தது திருட்டுக் குற்றம் ஆவதில்லை. என் வீட்டிற்கு வந்த பிறகு, அது நண்பருடைய பேனா என்று எனக்குத் தெரிகின்றது. இது தெரிந்த பின்னும் நான் பேனாவை நண்பரிடம் திருப்பிக் கொடுக்காமல், நேர்மையற்ற எண்ணத்துடன் அதை என்னுடையதாக்கிக்கொள்ளுகிறேன். இவ்வாறு செய்வது 'கையாடல்' என்ற குற்றமாகும்.

நான் தெருவில் நடந்து செல்லும்பொழுது ஒரு ரூபாய் நாணயம் ஒன்றைத் கண்டெடுக்கிறேன். அந்த நாணயம் யாருடையது என்பது எனக்குத் தெரியாது. எனவே, அந்த நாணயத்தை நானே வைத்துக்கொள்ளுதல் குற்றமாவதில்லை. நான் அந்த நாணயத்தை எடுத்து வைத்துக்கொண்ட சிறிது நேரத்திற்கெல்லாம், தமது ரூபாயை தவறிப் போட்டுவிட்டதாகக் கூறிக்கொண்டு அங்கு வந்து ஒருவர் அந்த நாணயத்தைத் தேடுகின்றார் என வைப்போம். இப்பொழுது, நான் கண்டெடுத்த ரூபாய் இவருடையதுதான் என்று எனக்குத் தெரிகின்றது. இது தெரிந்த பின்னும் ரூபாயை அவரிடம் கொடுக்காமல் நானே வைத்துக்கொண்டால் அது கையாடல் குற்றம்.

## பொருளைக் கண்டெடுப்பவரின் கடமை

ஒரு பொருளைக் கண்டெடுப்பவர் அது யாருடையது என்பதை விசாரித்தறிய முயற்சி செய்ய வேண்டும். அவ்வாறு தக்க முயற்சி செய்தும் பொருளின் சொந்தக்காரரைத் தெரிந்துகொள்ள முடியவில்லை எனில், அப் பொருளைக் கண்டெடுத்தவர் தமதாக்கிக்கொள்ளலாம். அல்லது தன்னலத்திற்கு அதை பயன்படுத்திக்கொள்ளலாம். ஆனால், பொருளுக்கு உரியவர் எவர் என்பதை அறிந்துகொள்ளுவதற்குத் தக்க முயற்சி ஏதும் எடுக்காமல், பொருளை அவர் தமதாக்கிக்கொண்டால் அது கையாடல் செய்ததாகும்.

ஒருவர் ஒரு தங்க மோதிரத்தைக் கண்டெடுக்கின்றார். அந்த மோதிரம் யாருடையது என்பதை அறிவதற்கு எந்த முயற்சியும் எடுக்காமல் கண்டெடுத்த உடனேயே அதை அவர் விற்றுவிட்டார் எனில் அது கையாடலேயாகும்.

தெருவில் கிடந்த 'மணிபர்ஸ்' ஒன்றை ஒருவர் கண்டெடுக்கிறார். அதில் பணம் இருக்கிறது. அந்த மணிபர்சில் இருந்த சீட்டில் அதற்குச் சொந்தக்காரரின் பெயரும் விலாசமும் எழுதி இருக்கிறது. அதைக் கண்டெடுத்தவர் அதற்குரியவரிடம் அதைச் சேர்ப்பதற்கு முயலாமல் தாமே வைத்துக்கொண்டார் எனில் அது குற்றம்.

எனவே, எவருடைய உடைமையிலும் இல்லாத பொருள் ஒன்றை நாம் அதற்கு உரியவரிடம் சேர்க்க வேண்டும் என்ற கருத்தோடு எடுப்பது குற்றமாவதில்லை. ஆனால், அது எவருடையது என்பது தெரிந்தபின்னும், அல்லது அதற்கு உரியவர் எவர் என்பதைத் தெரிந்துகொள்ளுவதற்கு நமக்கு வழிவகைகள் இருந்தும், அவரைத் தெரிந்துகொள்ளுவதற்குத் தக்க முயற்சி செய்து அவருக்கு அறிவித்து அவர் நம்மிடமிருந்து பொருளை எடுத்துச் செல்லுவதற்கு அவகாசம் கொடுக்காமலும், அப்பொருளை நமதாக்கிக்கொள்ளுவது குற்றமாகும். பொருளின் உரிமையாளரைக் கண்டுபிடிப்பதற்கு எது தக்க முயற்சி என்பதும், எவ்வளவு காலம் அவர் பொருளை எடுத்துக்கொள்ளுவதற்கு அவகாசம் கொடுக்க வேண்டும் என்பதும் அந்தந்தச் சூழ்நிலைகளைப் பொறுத்தது.

## குறுகியகாலக் கையாடலும் குற்றமேயாகும்

நம் வசம் உள்ள பிறர் பொருளை நம் நலனுக்கு என்று நேர்மையின்றிச் சிறிதுகாலம் மட்டும் பயன்படுத்தினாலும் அது குற்றந்தான்.

நான் கண்டெடுத்த தங்க நகை ஒன்று எவருடையது என்பதை நான் அறிகிறேன். அவரிடம் அதைச் சேர்ப்பிக்க வேண்டும் என்

பதுதான் என் கருத்து. ஆனால், என் குடும்பச் செலவிற்கு உடனே பணம் தேவைப்பட்டதால் அந்த நகையை வட்டிக்கடையில் அடகு வைத்து கடன் பெறுகிறேன். சில நாட்கள் கழித்துக் கடனை அடைத்தபின் நகையை மீட்டி அதன் சொந்தக்காரரிடம் கொடுத்து விடவேண்டும் என்பதுதான் என் எண்ணம். இருப்பினும், நான் பிறர் பொருளை அடகு வைத்த செயல் குற்றமாகிறது. பிறர் பொருளை நேர்மையின்றிச் சில நாட்கள் மட்டும் தமதாக்கிக் கொண்டாலும் அது குற்றந்தான். எனவே, குறுகிய காலத்திற்கு மட்டும் ஒருவர் 'கையாடல்' செய்தாலும் அவர் குற்றவாளியே ஆகின்றார்.

**பொதுச் சொத்தைக் கையாடல் செய்வது**

ஒரு அசைபொருள் இரண்டுபேர்களுக்குப் பொதுவானதாக இருக்கலாம். எனவே, அவர்களில் எவரும் அதைப் பயன்படுத்தலாம். ஆனால், அந்தப் பொருளை அவர்களில் ஒருவர் விற்றுவிட்டு, அந்தப் பணம் முழுவதையும் தாமே வைத்துக்கொண்டால், அது குற்றச் செயலாகும்.

இங்கிலாந்து நாட்டில் ஒரு சுவையான வழக்கு எழுந்தது. ஓர் ஏலக்கடையிலிருந்து ஒரு பெட்டியை ஒருவர் ஏலத்தில் வாங்கி வீட்டிற்குக் கொண்டுவந்தார். பெட்டியைச் சோதித்துப் பார்க்கையில் அதில் ஒரு மறைவான இழுப்பறை (drawer) இருந்தது. அதற்குள் பணமும் இருந்தது. ஏலத்தில் அதை விற்கும் பொழுது அந்தப் பெட்டியில் பணம் இருந்தது எவருக்கும் தெரியாது. இந்நிலையில், பெட்டியை விலைக்கு வாங்கியவர் அந்தப் பணத்தைத் தமதாக்கிக்கொண்டது குற்றமாகுமா என்ற கேள்வி எழுந்தது. பெட்டியை விலைக்கு விற்கும்பொழுது அந்தப் பெட்டி மட்டுமே விலைக்கு விற்கப்படுகிறது என்பது தெளிவாகக் கூறப்பட்டிருந்தால், பெட்டியை மட்டும் விலைக்கு வாங்கியவர் அதற்குள் இருந்த பணத்தின்மீது எவ்வித பாத்தியதையும் கொண்டாடுவதற்கில்லை. பெட்டியை மட்டுமே தாம் வாங்குவதாக எண்ணி அதை வாங்கியவருக்கு அதற்குள் இருந்த பணத்தைத் தமதாக்கிக் கொள்ளும் உரிமை கிடையாது. ஆனால், அவர் அதை வாங்கும் பொழுது, பெட்டியையும் அதற்குள் ஏதாவது பொருள் இருந்தால் அதையும் சேர்த்து வாங்குவதாக அவர் எண்ணுவதற்குக் காரணம் இருந்து, அவரும் அவ்வாறு எண்ணியிருந்தால், பெட்டியில் கண்டு எடுத்த பணத்தை அவரே எடுத்துக்கொள்ளலாம். அது குற்றமாகாது. இவ்வாறு அந்த வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டது.

ஒருவர் தம்முடைய மாதச் சம்பளத்தை அலுவலகத்திலிருந்து பெறுகின்றார். மாதச் சம்பளப் பணமான ரூ. 300/– ஒரு

கவரில் போட்டு அவரிடம் கொடுக்கப்படுகிறது. அவருக்குச் சேர வேண்டிய தொகை ரூ. 300/ – என்பதும் அந்தக் கவரின்மேல் எழுதப்பட்டிருக்கிறது. அந்தக் கவரை அப்படியே வாங்கிக் கொண்டு வீட்டிற்கு வந்து பணத்தை எண்ணிப் பார்க்கும்பொழுது அதில் ரூ. 400/ – இருக்கின்றது. அவருக்குக் கிடைக்க வேண்டிய தொகையான ரூ.300/ஐவிட நூறு ரூபாய் அதிகமாக அந்தக் கவரில் வைக்கப்பட்டிருந்தது. இப்பொழுது அவருடைய கடமை என்ன? அதிகமாக இருந்த பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும். அவ்வாறு செய்யாமல் அவர் அந்த ரூபாய் நூறையும் தாமே வைத்துக்கொண்டால் அது 'கையாடல்'' செய்த குற்றமாகிறது. கவரில் இருந்த ரூ. 400/–ஐயும் அவர் வீட்டிற்கு எடுத்து வந்த செயல் குற்றமாவதில்லை. ஏனெனில், அவரும் கவரில் ரூ. 300/–தான் இருக்கும் என்ற எண்ணத்தோடுதான் அதை வீட்டிற்கு எடுத்துவந்தார். ஆனல், வீட்டிற்கு வந்து பணத்தை எண்ணிப் பார்த்த பிறகும், தவருக வைக்கப்பட்டிருந்த அதிகப் பணத்தைக் தமதாக்கிக் கொண்டது குற்றந்தான்.

எனவே, பிறரது பொருளை ஒருவர் குற்ற மனமின்றி எடுப்பதும், தம்வசம் வைத்திருப்பதும் குற்றமன்று. நேர்மையின்றி அதைத் தம்முடையதாக்கிக்கொள்வதுதான் குற்றமாகிறது.

கையாடல் குற்றத்திற்கு இரண்டு ஆண்டுகள் சிறை, அபராதம் தண்டனையாகும் (403 ஆம் பிரிவு).

### இறந்தவர் பொருளைக் கையாடல் செய்வது

ஒருவர் இறந்துபோகிருர். அவருடைய பொருள்கள் இன்னும் அவருடைய வாரிசுகளின் கைக்குச் சேரவில்லை. இந்நிலையில் அந்தப் பொருள்களை ஒருவர் நேர்மையின்றித் தமதாக்கிக்கொள்ளுதலோ, தம் நலனுக்குப் பயன்படுத்துவதோ குற்றமேயாகும்.

மரணம் ஒருவருக்கு எப்பொழுது, எங்கு, எவ்வாறு விளையும் என்று தெரிவதில்லை. எதிர்பாராத விதத்தில் திடீரென்று ஒருவர் இறந்துவிட்டால், அவருடைய வாரிசுகள் வந்து அவர் விட்டுச் சென்ற அசைபொருள்களை எடுத்துக்கொள்ளுவதற்குச் சிறிது காலமாகலாம். இந்த இடைவேளையில் இறந்தவர் விட்டுச்சென்ற பொருள்களைப் பாதுகாப்பது முக்கியமானதாகும். எனவே, அப் பொருள்களைப் பிறர் நேர்மையின்றித் தமதாக்கிக்கொள்வது 'கையாடல்' குற்றம் என்று சட்டம் விதிக்கிறது (404 ஆம் பிரிவு).

ஒரு பஸ்ஸோ, இரயிலோ விபத்துக்குள்ளாகிறது. அதில் இருந்த பிரயாணிகளில் சிலர் இறந்துவிடுகின்றனர். இவ்வாறு, மரித்தவர் உடலிலுள்ள பொருள்களை—பணத்தையோ, நகையையோ

இதர பொருள்களையோ—அவர் விட்டுச்சென்ற பெட்டியையோ ஒருவர் அகற்றித் தமதாக்கிக்கொண்டார் எனில் அது குற்றம். அப்பொருள்களை அகற்றியவர் தமது நலனுக்குப் பயன்படுத்திக் கொள்ளுவதும் குற்றம். இறந்தவர்களின் பிணங்களை எரிப்பதற்கோ, புதைப்பதற்கோ முன்னால், அந்தப் பொருள்களை உடல்களிலிருந்து அகற்றி, அவற்றிற்கு உடையவர்களிடம் சேர்க்கவேண்டும் என்ற கருத்தோடு வைத்திருக்கலாம். இவ்வாறு, வைத்திருப்பது குற்றமாகாது. அவற்றை நேர்மையின்றித் தம்முடையதாக்கிக் கொள்வதுதான் குற்றமாகும்.

இறந்தவர் பொருளைக் கையாடும் குற்றத்திற்கு மூன்றாண்டு காலம் சிறை, அபராதம் தண்டனையாகும். இவ்வாறு, கையாடல் செய்தவர் இறந்தவரிடம் எழுத்தராகவோ, வேலையாளாகவோ இருந்தார் எனில் அவருக்கு ஏழு ஆண்டு காலம்வரை சிறைத் தண்டனை விதிக்கப்படலாம் (404 ஆம் பிரிவு).

ஒருவர் மற்றவரை நம்பியே தமது வேலையாளாக வைத்திருக்கின்றார். திடீரென்று அவர் இறந்தபின், எசமானரின் வீட்டிலுள்ள அசைபொருள்களை வேலையாள் கையாடல் செய்வது மிகவும் எளிதாகின்றது. இறந்தவர் வீட்டிலேயே இருக்கும் நேர்மையில்லாத வேலையாளுக்கு, இந்தக் குற்றமான செயலைச் செய்யலாம் என்ற மனத் தூண்டுதல் அதிகமாக இருப்பது இயல்பு; அதைத் துணிந்து அவர் செய்வதும் இயல்பு. இந்த மனத் தூண்டுதலையும் துணிவையும் அடக்கவேண்டும் என்றே, அதிகமான தண்டனையைச் சட்டம் இக் குற்றத்தைச் செய்யும் வேலையாளுக்கு விதிக்கின்றது.

இவ்வாறு, நடுவின்றி, பிறருடைய அசைபொருள்களைத் தமதாக்கிக்கொள்ளுவதைச் சட்டம் தண்டிக்கின்றது.

# 6. நம்பிக்கை மோசம்
## (Criminal Breach of Trust)

பிறர் தம்மீது வைத்த நம்பிக்கைக்கு மாறாகக் குற்றவாளியின் செயல் உள்ளது—நம்பிக்கையில் எழுந்த ஒப்பந்தங்களுக்கு மாறாகப் பொருளைப் பயன்படுத்துதல்—நம்பிக்கைப் பொறுப்புகளை நிறைவேற்று வதில் சட்ட விதிகளை மீறிப் பொருள்களை அபகரித்தல்—கடமையில் தவறுதல்—நேர்மையின்றிப் பொருளைப் பயன்படுத்தல்—பிறர் கையாடல் செய்வதற்கு வேண்டுமென்றே இணங்கியிருத்தல் — குற்றவாளிமீது பிறர் வைத்த நம்பிக்கையும், குற்றவாளியின் நேர்மையின்மையும்—குற்றத்தின் இலக்கணம்—பொது ஊழியர் நம்பிக்கை மோசம் செய்தால் கடுந்தண்டனை.

நம் உடைமையில் உள்ள பிறரது அசைபொருளை நமதாக்கிக் கொள்ளுதல் 'கையாடல்' என்ற குற்றம் என்று கண்டோம். அந்தப் பொருள் நம்மிடம் பிறரால் ஒப்படைக்கப்பட்டது என வைப்போம். அந்த ஒப்படைப்பின் பயனாக நம் வசம் அந்தப் பொருள் இருக்கிறது. இவ்வாறு நம்மிடம் நம்பி ஒப்படைக்கப்பெற்ற பொருளை நேர்மையின்றி நமதாக்கிக்கொள்ளுதல் அல்லது நம் நலனுக்குப் பயன்படுத்துதல் 'நம்பிக்கை மோசம்' (Criminal breach of trust) என்ற குற்றமாகும்.

ஒருவரை நம்பி அவரிடம் மற்றொருவர் தமது பொருளை ஒப்பு விக்கின்றார். இந்த நம்பிக்கைக்குத் துரோகம் செய்யும் வகையில் பொருள் ஒப்படை பெற்றவர் பொருளைத் தம்முடையதாக்கிக் கொண்டால், அது 'நம்பிக்கை மோசம்' ஆகிறது.

எனது நகை ஒன்றைப் பழுதுபார்ப்பதற்கென்று ஒரு பொற் கொல்லரிடம் ஒப்படைக்கின்றேன். அவர் அதை விற்றுவிட்டார் என வைப்போம். அது 'நம்பிக்கை மோசமான' செயல். பொற் கொல்லரை நம்பியே நான் எனது நகையை அவரிடம் கொடுத்தேன். அந்த நம்பிக்கைக்கு மாறாக நம்பிய என்னையே மோசடி செய்யும் வகையில் பொற்கொல்லர் எனது நகையை விற்ற செயல் 'நம்பிக்கை மோசக்' குற்றம் ஆகிறது.

சரக்குகளை ஏற்றிச் செல்லும் லாரிகளை வைத்திருப்பவரிடம் சென்னையிலிருந்து மதுரைக்குக் கொண்டுசேர்ப்பதற்கென எனது சாமான்களை ஒப்புவிக்கின்றேன். அவர் அச் சாமான்களை மதுரைக்குக் கொண்டுசேர்க்காமல் தாமே வைத்துக்கொண்டார் எனில், அது நம்பிக்கை மோசக் குற்றம் ஆகின்றது.

நம்மிடமிருந்து ஒரு பொருளை ஒருவர் இரவலாக வாங்கிச் செல்லுகின்ருர். அதை அவர் விற்றுவிட்டார் எனில், அதுவும் நம்பிக்கை மோசமாகும். வாடகைக்கு என்று சைக்கிள் ஒன்றைக் கடையிலிருந்து எடுத்துக் சென்றவர், அதைக் கடைக்காரரிடம் திருப்பிக் கொடுக்காமல் விற்றுவிட்டால் அது குற்றமாகிறது. இவ்வாறு, தம்மிடம் ஒப்படைக்கப்பட்ட பொருளை ஒருவர் நேர்மையின்றித் தமதாக்கிக்கொள்ளுதலைச் சட்டம் தண்டிக்கின்றது.

### தம்மீது பிறர் வைத்த நம்பிக்கைக்கு மாருகக் குற்றவாளியின் செயல் உள்ளது

ஒரு பொருள் ஒருவரால் மற்ருெருவரிடம் ஒப்படைக்கப்பட்டதன் பயனாக, ஒப்படைக்கப்பெற்றவர் அப் பொருளின் உடைமையை மட்டுமே பெறுகின்ருர். ஆனால், அந்தப் பொருள்மீதுள்ள சொத்துரிமை (ownership) ஒப்படைத்தவரிடமே இருக்கிறது. சில வேளைகளில், ஒப்படைத்தவரும் பொருளின் சொந்தக்காரராக இருப்பதில்லை. மற்ருெருவர் சொந்தக்காரராக இருக்கலாம். எப்படியும், பொருளை ஒப்படை பெற்றவருக்கு அந்தப் பொருள்மீது சொத்துரிமை இல்லை; அப் பொருளின் உடைமைமட்டுமே அவரிடம் இருக்கிறது. ஒப்படைத்தவர் அந்தப் பொருள் குறித்து என்ன செய்யவேண்டும் என்று கூறியிருந்தாரோ, அதையேதான் பொருளைப் பெற்றவர் செய்தல் வேண்டும். பொருள் பெற்றவர் அவ்வாறு செய்வார் என்ற நம்பிக்கையின்பேரில்தான் அது அவரிடம் ஒப்படைக்கப்படுகிறது. அந்த நம்பிக்கைக்கு மாருக, ஒப்படைக்கப்பெற்றவர் அப் பொருளைப் பயன்படுத்தும் பொழுது, தம்மீது நம்பிக்கை வைத்தவரை மோசம் செய்கின்ருர். எனவே, குற்றவாளியாகின்ருர்.

### பொருளைப் பெறுவதற்கான அதிகாரம், பொருள்மீது ஆதிக்கம்—இவை அளிக்கப்பட்டாலும், அது பொருளை ஒப்படைத்தலே ஆகும்

'பொருள் ஒப்படைத்தல்' என்ருல் பொருளுக்குரியவர் நேரடியாக மற்றவரிடம் ஒப்படைத்திருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. அந்தப் பொருளைப் பெறுவதற்கான அதிகாரத்தை அளித்திருந்தாலோ, அல்லது பொருள்மீது ஆதிக்கத்தை

அளித்திருந்தாலோ போதுமானது. ஒருவருக்குச் சொந்தமாகப் பல கட்டடங்கள் இருக்கின்றன. அக் கட்டடங்களின் வாடகைகளை மாதாமாதம் வசூலித்து, அப்போதைக்கப்போது வசூலித்த தொகைகளை பாங்கியில் கட்டிவிடவேண்டும் என்று கட்டளையிட்டு, ஒரு வேலையாளை அவர் வைத்திருக்கின்றார். அந்த வேலையாள் வசூல் செய்த வாடகைப் பணத்தை பாங்கியில் கட்டாமல் தாமே அபகரித்துக்கொண்டால், அது நம்பிக்கை மோசக் குற்றமாகும்.

### நம்பிக்கையில் எழுந்த ஒப்பந்தங்களுக்கு மாருகப் பொருளைப் பயன் படுத்துதல்

தொழில், வாணிபம் இவை நடைபெறும் வகையில் ஒருவருக் கொருவர் ஒப்பந்தங்கள் ஏற்படுகின்றன. நம்பிக்கையின் அடிப் படையில் எழும் அத்தகைய ஒப்பந்தங்கள் வெளிப்படையாக ஏற்படுவதுண்டு, அல்லது அவை ஏற்பட்டதாகச் சட்டம் கருதும் சூழ்நிலைகளும் உண்டு. அந்த ஒப்பந்தங்களின்படி நடக்காமல், அதற்கு விரோதமாக ஒருவர் நேர்மையின்றிப் பிறர் பொருளைத் தமதாக்கிக்கொள்ளுதல் அல்லது அதைப் பயன்படுத்துதல் குற்ற மாகும்.

தில்லியில் இருக்கும் வியாபாரி சென்னையில் ஓர் ஏஜென்டை நியமித்திருக்கிறார். தில்லி வியாபாரி அப்போதைக்கப்போது அனுப்பும் பணத்தை வைத்துச் சரக்குகளை வாங்கிச் சென்னை ஏஜென்டு தில்லிக்கு அனுப்பவேண்டும். அந்த ஏஜென்டு தில்லியி லிருந்து பெற்றுக்கொண்ட பணத்தைத் தாமே வைத்துக்கொள்ளு கிறார். சரக்குகளை வாங்கித் தில்லிக்கு அனுப்பவில்லை; அந்தப் பணத்தைத் தமது வியாபாரத்தில் முடக்கிக்கொள்ளுகிறார். இவ்வாறு, சென்னை ஏஜென்டு செய்தால் அது நம்பிக்கை மோசடி யாகும்.

### நம்பிக்கைப் பொறுப்புகளை நிறைவேற்றுவதில் சட்ட விதிகளை மீறிப் பொருள்களை அபகரித்தல்

நம்பிக்கைப் பொறுப்புகளை (trust) இன்ன முறையில் ஒருவர் நிறைவேற்றவேண்டும் என்று சட்ட விதிகள் இருக்கின்றன. இச் சட்ட விதிகளுக்கு முரணாக அவர் பிறர் பொருளைப் பயன்படுத்துவது குற்றம்.

ஒருவர், தமது சொத்துகளை இன்னின்னவாறு பகிர்ந்து அளித்துப் பயன்படுத்தவேண்டும் என்று கண்டு உயில் (will) எழுதிவைத்து, அந்த உயிலை நிறைவேற்றுவதற்கென்று ஓர் எக்சி

கியூட்டரையும் (executor) நியமித்துவிட்டு இறந்துபோகின்ருர். இப்பொழுது, எக்சிகியூட்டரின் கடமை உயிலில் கண்டபடி சொத்தைப் பகிர்ந்தளித்துப் பயன்படுத்துவதாகும். உயிலில் உள்ளதற்கு மாருக, எக்சிகியூட்டர் இறந்தவன் சொத்துகளை நேர்மையின்றிப் பயன்படுத்திஞர் எனில், அதுவும் குற்றச் செயலேயாகும். எக்சிகியூட்டர் எந்தவகையில் தமக்கு அளிக்கப்பட்ட நம்பிக்கைப் பொறுப்பை நிறைவேற்ற வேண்டும் என்று சட்ட விதிகள் இருக்கின்றன. அந்த விதிகளை மீறி அவர் நடந்து இறந்தவரின் பொருளைப் பயன்படுத்துவது குற்றச் செயலாகின்றது.

**கடமையில் தவறுதல்:** வரி வசூல் செய்வதற்கென்று அரசாங்க ஊழியர் நியமிக்கப்பட்டிருக்கிருர். அவர் வசூலித்த வரிப் பணத்தை அரசாங்க கஜாஞவில் செலுத்தாமல் தாமே பயன் படுத்திக்கொண்டார் எனில், அவர் நம்பிக்கை மோசம் செய்த குற்றத்திற்கு ஆளாகின்ருர். வரிப்பணத்தை வசூலிப்பதற்கென அவருக்கு அளிக்கப்பட்ட அதிகாரத்தின் வழி, வசூலித்த பணத்தை அரசாங்கம் அவரிடம் ஒப்படைக்கின்றது. இவ்வாறு, ஒப்படை பெற்ற பணத்தைக் கையாடல் செய்வது நம்பிக்கை மோசடியாகிறது.

நாம் ஒருவரிடம் வெள்ளியைக் கொடுத்துப் பாத்திரங்கள் செய்யச் சொல்லுகிருேம். நம்மிடமிருந்து வெள்ளியைப் பெற்றுக் கொண்டவர், அந்த வெள்ளியில் பாதியைத் தாமே எடுத்துக் கொண்டு அதற்குப் பதிலாகச் செம்பைக் கலந்து பாத்திரங்களைச் செய்து நம்மிடம் கொடுத்தார் எனில், அது நம்பிக்கை மோசம் ஆகிறது. நாம் வெள்ளியைக் கொடுத்துப் பாத்திரம் செய்யச் சொன்னதை அவர் ஒப்புக்கொண்டதிலிருந்து சட்டப்படியான ஓர் ஒப்பந்தம் எழுகின்றது. அந்த ஒப்பந்தத்தின் உள்ளுறையான நிபந்தனை (implied condition) வெள்ளியில் எந்த உலோகத்தையும் கலக்காமல் பாத்திரங்களைச் செய்யவேண்டும் என்பதாகும். ஆனுல், அந்த நிபந்தனையை மீறி அவர் வெள்ளியுடன் செம்பைக் கலந்து வெள்ளியையும் எடுத்துக்கொண்ட செயல் குற்றமாகும்.

**நேர்மையின்றிப் பொருளைப் பயன்படுத்துதல்:** கோவிலில் உள்ள விக்கிரகங்களுக்குப் போடுவதற்கென ஆக்கப்பெற்ற நகைகள் கோவில் டிரஸ்டியிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கின்றன. அதில் ஒரு நகையைத் தம் குடும்பத்தினர் அணிந்துகொள்ளுவதற்கு டிரஸ்டி இசைந்திருந்தார் எனில், அது ஒப்படைக்கப்பட்ட பொருளை நேர்மையின்றிப் பயன்படுத்துவதாகும்; நம்பிக்கை மோசக் குற்றமாகும்.

**பிறர் கையாடல் செய்வதற்கு அல்லது பொருளை நேர்மையின்றிப் பயன்படுத்துவதற்கு வேண்டுமென்றே இணங்கியிருத்தல்**

அரசாங்க ஊழியர்களிடமும், பிற பொது ஊழியர்களிடமும் பொதுச் சொத்துகளும், பொதுப் பணமும் ஒப்படைக்கப்பட்டிருக்கின்றன. அந்தப் பொருள்களை ஊழியர்கள் கையாடல் செய்யக் கூடாது என்பது ஒருபுறம் இருக்க, பிறர் கையாடல் செய்வதற்கு இணங்கியிருத்தலும் கூடாது. தம்மிடம் ஒப்படைக்கப்பட்ட பொருளையோ, பணத்தையோ பிறர் கையாடல் செய்வதற்கு இணங்கியிருக்கும் பொது ஊழியர் நம்பிக்கை மோசக் குற்றத்திற்கு ஆளாகின்றார். எனவே, பொருளை ஒப்படை பெற்றவர் அந்தப் பொருளைப் பிறர் கையாடல் செய்வதற்கு இணங்கியிருத்தல் குற்றமாகும்.

நீதிமன்ற ஆவணங்களைத் தமது பாதுகாவலில் உள்ள ஆவணக் காப்பாளர் (Record–keeper) ஒருவர், ஆவணக் காப்பறையின் திறவுகோல்களை மற்றவர் பயன்படுத்தி அறையை திறந்து ஆவணங்கள் சிலவற்றை எடுத்துச் செல்லுவதற்கு உடந்தையாக இருந்தார். ஆவணங்களை இவர் பயன்படுத்தாவிடினும், பிறர் நேர்மையின்றிப் பயன்படுத்துவதற்கு உதவியாக இவர் இருந்ததால், இவர் நம்பிக்கை மோசக் குற்றத்திற்கு ஆளாகின்றார்.

**குற்றவாளிமீது பிறர் வைத்த நம்பிக்கையும், குற்றவாளியின் நேர்மையின்மையும்**

ஒருவர் வைக்கும் நம்பிக்கை, அதற்கு மாறான நேர்மையின்மை இரண்டும் இருந்தால்தான் குற்றம் எழுகின்றது. ஒருவர் மற்றவர்மீது நம்பிக்கை வைத்துப் பொருளை ஒப்படைத்திருக்கவேண்டும். அந்த நம்பிக்கைக்கு மாறாக நேர்மையின்றி அப் பொருள் கையாடல் செய்யப்பட்டிருத்தல் வேண்டும். இந்த இரண்டும் இருந்தால்தான் 'நம்பிக்கை மோசம்' என்ற குற்றம் பிறக்கின்றது.

**குற்றத்தின் இலக்கணம்:** இந்தக் கூறுபாடுகள் அனைத்தையும் உள்ளடக்கி, சட்டத்தின் 405ஆம் பிரிவு நம்பிக்கை மோசக் குற்றத்திற்கான இலக்கணத்தைக் கூறுகின்றது:

ஒரு பொருள் அல்லது பொருள்மீதுள்ள ஆதிக்கம் எந்த வகையிலாவது ஒப்படைக்கப்பெற்ற ஒருவர்....

(1) நேர்மையின்றி அப் பொருளைத் தமதாக்கிக்கொள்ளுதல், அல்லது தம் நலனுக்குப் பயன்படுத்துதல்;

(2) ஒரு டிரஸ்டு. (நம்பிக்கைப் பொறுப்பு) எவ்வாறு நிறைவேற்றப்பெறுதல் வேண்டும் என்று சட்டம் விதித்துள்ள வழி

முறைகளை மீறி அப் பொருளை நேர்மையின்றிப் பயன்படுத்துதல், செலவிடுதல்; அல்லது பிறர் அவ்வாறு பயன்படுத்துவதற்கும் செலவிடுவதற்கும் இணங்கியிருத்தல்;

(3) ஒரு டிரஸ்டு (நம்பிக்கைப் பொறுப்பு) எவ்வாறு நிறைவேற்றப்பெறுதல் வேண்டும் என்பதுபற்றி அவர் செய்துகொண்டுள்ள சட்டப்படியான ஒப்பந்தத்தை மீறி அப் பொருளை நேர்மையின்றிப் பயன்படுத்துதல், செலவிடுதல் அல்லது பிறர் அவ்வாறு பயன்படுத்துவதற்கும் செலவிடுவதற்கும் இணங்கியிருத்தல்;

இது 'நம்பிக்கை மோசம்' என்ற குற்றமாகிறது (405 ஆம் பிரிவு).

இக் குற்றம் செய்ததற்கு மூன்று ஆண்டுகள்வரை சிறைத் தண்டனை, அபராதம் விதிக்கப்படலாம் (406 ஆம் பிரிவு).

உலக வாழ்வில் ஒருவரை மற்றொருவர் நம்பியேதான் பல காரியங்களைச் செய்ய வேண்டியதிருக்கிறது. பிறரை நம்பியே நம் பொருளையோ, பொருள்மீதுள்ள ஆதிக்கத்தையோ அளிக்கின்றோம். மதுரையில் உள்ள என் கட்டடங்களின் வாடகையை வசூல் செய்து அனுப்பும்படி ஒருவரை எனது ஏஜெண்டாக நியமிக்கிறேன்; அவரை நம்பி வாடகைப் பணத்தைப் பெறும் அதிகாரத்தை அவருக்கு அளிக்கிறேன். இந்த நம்பிக்கையின் பயனாக எனக்குச் சேரவேண்டிய பணத்தை அவர் பெறுகின்றார். பணத்தைப் பெறும் அவருடைய பொறுப்பு, பணத்தை எனக்கு அனுப்புவதாகும்; அல்லது அப் பணத்தை எந்த வகையில் பயன்படுத்தவேண்டும் என்று நான் கூறுகிறேனோ அந்த வகையில் பயன்படுத்துவதாகும். இந்தப் பொறுப்பு என் ஏஜெண்டிற்குச் சட்டப்படி உண்டு. நான் அவரை ஏஜெண்டாக நியமித்து நம்பிக்கை வைத்ததன் பயனாக, அவருக்கு இந்தப் பொறுப்புகள் ஏற்படுகின்றன. இவ்வாறு, நான் ஏஜெண்டின்மீது வைக்கும் நம்பிக்கையினால் அவருக்கு உள்ள பொறுப்பை 'நம்பிக்கைப் பொறுப்பு' என்கிறோம். இத்தகைய பொறுப்புகளையே மேலே காணும் குற்ற இலக்கணத்தில் 'நம்பிக்கைப் பொறுப்பு' என்று குறிப்பிடுகிறோம். எனவே, இந்திய டிரஸ்டு சட்டத்தில் (Indian Trusts Act) கூறப்படும் 'டிரஸ்டுகள்' மட்டுமே 'நம்பிக்கைப் பொறுப்புகள்' என்று கொள்ளுவது சரியன்று. அச் சட்டத்தில் கூறப்படும் டிரஸ்டுகளைத் தவிர இன்னும் எத்தனையோ சூழ்நிலைகளில், ஒருவருக்கு ஒருவர் நம்பிக்கைப் பொறுப்பான சட்டத் தொடர்புகள் ஏற்படுகின்றன. அத் தொடர்புகளின் பயனாக எழும் நம்பிக்கைப் பொறுப்புகளையும் உள்ளடக்கியே இக் குற்றத்திற்கான இலக்கணம் வகுக்கப்பட்டிருக்கிறது.

லாரி ஓட்டுபவரை நம்பி, ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்கு எடுத்துச் செல்லுவதற்கென்று நமது சாமான்களை அவரிடம் ஒப்புவிக்கிறோம். பொற்கொல்லரை நம்பி, நகை செய்வதற்கென்று நம் தங்கத்தை அவரிடம் ஒப்படைக்கிறோம். வண்ணானை நம்பி நம் விலையுயர்ந்த துணிகளை வெளுப்பதற்கென்று அவனிடம் ஒப்படைக்கிறோம். நமது ஏஜென்டை நம்பி ஒரு வியாபாரி தமது சரக்கையோ, பணத்தையோ ஏஜென்டிடம் ஒப்படைக்கிறார். அடகுக் கடைக்காரரை நம்பி அவரிடம் ஒருவர் தமது நகையை ஒப்படைக்கிறார். டிரஸ்டு பத்திரம் எழுதிவைப்பவர் பிறரை நம்பியே டிரஸ்டு பொருள்களை ஒப்படைக்கின்றார். கோவில் அல்லது பிற அறநிலையங்களில் டிரஸ்டியாக இருப்பவர்களை நம்பியே அந் நிலையங்களின் சொத்துகள் அவர்களிடம் ஒப்படைக்கப்படுகின்றன. 'Trus என்ற ஆங்கிலச் சொல்லிற்கு 'நம்பிக்கை' என்ற பொருளுண்டு. இந்த நம்பிக்கைக்குப் பாத்திரர்களாக இருப்பதால்தான் டிரஸ்டுகளை ஏற்று நடத்துபவர்களை 'டிரஸ்டிகள்' (trustees) என்று அழைக்கிறோம். அரசாங்கக் காரியங்கள் எல்லாம் அரசாங்க அலுவலர்களால்தான் நடத்தப்படுகின்றன. அரசாங்கப் பணமும், இதர பொருள்களும் அரசாங்கச் சிப்பந்திகளிடம் நம்பிக்கையாக ஒப்படைக்கப்பெறுகின்றன. இவ்வாறு, ஒருவர்மீது மற்றவர் நம்பிக்கை வைத்துப் பொருளை ஒப்படைக்கும் சூழ்நிலைகள் எத்தனை எத்தனையோ இருக்கின்றன. இந்த வகையில், நம்பிக்கைக்குப் பாத்திரமானவர் நம்பிக்கையாகப் பெற்ற பொருளைப் பொறுத்து நம்பிக்கை மோசம் செய்யாமல் தடுக்கவேண்டும். நம்பி ஒப்படைக்கப் பெற்ற பொருள்கள்பற்றிய பொறுப்பை, நம்பிக்கைப் பொறுப்பை, ஒருவர் மீறி அப் பொருள்களைத் தமதாக்கிக்கொள்ளுதலும், நேர்மையின்றிப் பயன்படுத்துதலும், பிறர் அவ்வாறு பயன்படுத்துதலுக்கு இணங்கியிருத்தலும் குற்றமாகிறது.

இவ்வாறு, நம்பிக்கைப் பொறுப்பிற்கு மாறான செயல்களைக் குற்றங்களாகச் சட்டம் விதிக்கவில்லையெனில், ஒருவரை நம்பி மற்றவர் எந்தக் காரியத்தையும் செய்வது அரிதாகிவிடும். அரசாங்கக் காரியங்களும் பொதுக் காரியங்களும் செப்பமுற நடப்பதில் இடர்ப்பாடுகள் நிறைந்துவிடும். எனவே, 'நம்பிக்கை மோசம்' செய்பவரைச் சட்டம் தண்டிக்கின்றது.

நம்பிக்கை மோசக் குற்றத்தைச் செய்பவர்களின் நிலைமையையும் தன்மையையும் கண்டு, அதற்குத் தக்கபடி தண்டனையின் அளவு விதிக்கப்பட்டிருக்கிறது.

சாமான்களை வாடகைக்கு ஏற்றிச் செல்வோர், பண்டகசாலை வைத்திருப்போர் இவர்கள் நம்பிக்கை மோசக் குற்றம் செய்தால், ஏழாண்டுகள்வரை சிறையும் அபராதமும் உண்டு (407ஆம் பிரிவு).

எழுத்தாளராகவோ, வேலையாளாகவோ பணிபுரிபவர், அந்தப் பணி முறையில் தம்மிடம் ஒப்படைக்கப்பெற்ற பொருள்களை நம்பிக்கை மோசடியாக அபகரித்துக்கொண்டால், அவர்களுக்கும் ஏழாண்டுக் காலம்வரை சிறையும் அபராதமும் உண்டு (408ஆம் பிரிவு).

வேலையாள் என்ற முறையில் ஒருவர் தம் எசமானருக்குச் சேர வேண்டிய பணத்தை வசூலித்து வைத்திருக்கலாம். ஆனால், அவ்வாறு வசூலித்த பணத்திற்கு எசமானருக்குக் கணக்குக் கொடுக்கவேண்டும். கணக்குக் காட்டத் தவறிப் பணத்தையும் எசமானரிடம் ஒப்புவிக்கத் தவறினால், அது பணத்தை நம்பிக்கை மோசம் செய்து அபகரித்த குற்றம் ஆகிவிடும்.

**பொது ஊழியர் நம்பிக்கை மோசம் செய்தால் கடுந்தண்டனை**

பொது ஊழியர் ஒருவர் தம்மிடம் பணிமுறையில் ஒப்படைக்கப் பெற்ற பொருளை நம்பிக்கை மோசடியாக அபகரித்துக்கொண்டால், அதற்கு ஆயுட்காலச் சிறை அல்லது பத்தாண்டுக் காலம்வரை' சிறை, அபராதம் தண்டனையாகும்.

ஒரு பாங்கர், வணிகர், தரகர், வக்கீல் (அட்டார்னி) ஏஜெண்ட் இவர்கள் தங்கள் தொழில் முறையில் ஒப்படைக்கப்பெற்ற பொருள்களை மோசடியாக அபகரித்தாலும், மேலே கூறப்பட்ட தண்டனைக்கு ஆளாகின்றனர்.

பொது ஊழியர் (public servant), பாங்கர், வணிகர், தரகர், வக்கீல், ஏஜெண்ட் இவர்கள் பிறரது நம்பிக்கைக்குப் பாத்திரர்களாக இருப்பது மிகவும் அவசியமாகும். சமுதாய நல்வாழ்விற்கு இவர்களது நேர்மையான நடத்தை இன்றியமையாததாகிறது. பாங்கரை நம்பி மக்கள் பணத்தை ஒப்படைக்கின்றனர். வணிகரை நம்பிச் சரக்குகளை ஒப்படைக்கின்றனர். வக்கீலை நம்பிக் கட்சிக்காரர் பல முக்கிய ஆவணங்களையும் பணத்தையும் ஒப்படைக்கின்றார். பொது ஊழியர்கள் நேர்மையாக நடப்பார்கள் என்ற உறுதிப்பாட்டின் பேரிலேயே பொதுப் பணங்களும், நாட்டின் பல பொதுப் பொருள்களும் அவர்களிடம் ஒப்படைக்கப்படுகின்றன. சமுதாயமும் நல்லரசு முறையும் நடைபெறுவதற்கு இத்தகையோரின் நேர்மையும் நீதியுணர்வும் அடிப்படையாகும். எனவே, அவர்கள் நம்பிக்கை மோசம் செய்வது எவ்வாற்றானும் தடுக்கப்படவேண்டும். இதனால் தான், இவர்கள் இக் குற்றத்தைச் செய்தால் ஆயுட்காலத் தண்டனை கூட அளிக்கலாம் என்று சட்டம் விதிக்கின்றது.

பொது ஊழியரிடம் ஒப்படைக்கப்படும் பணம் அரசாங்கத்தின் பணமாகவோ, பொதுப் பணமாகவோ இருக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை. பொது ஊழியர் என்ற முறையில் அவரிடம் மக்கள் ஒப்படைக்கும் அல்லது செலுத்தும் எந்தப் பொருளும் பொதுப் பொருளாகவே கருதப்பெறுகிறது. மணியார்டர் அனுப்பும் ஒருவர் மணியார்டர் ஃபாரத்தோடு பணத்தையும் போஸ்ட் மாஸ்டரிடமோ அல்லது போஸ்டல் கிளார்க்கிடமோ கொடுக்கின்றார். மணியார்டர் ஃபாரத்தோடு பணத்தைப் பெற்றுக்கொண்ட போஸ்ட் மாஸ்டர் மணியார்டரை அனுப்பவேண்டியவருக்கு அனுப்பாமல் பணத்தை எடுத்துக்கொண்டார் எனில், அது நம்பிக்கை மோசக் குற்றமாகிறது.

திருட்டுப் பொருள் என்று சந்தேகப்படத்தக்க பொருள்களைப் போலீசார் கைப்பற்றலாம். இதற்குக் குற்ற விசாரணை முறைச் சட்டம் (Criminal Procedure Code) 550ஆம் பிரிவு போலீசாருக்கு அதிகாரம் அளிக்கின்றது. இந்த அதிகாரத்தின்கீழ்க் கைப்பற்றப் பட்ட பொருளைப் போலீசார் தமதாக்கிக்கொண்டால், இந்தப் பிரிவுப் படி குற்றவாளியாகின்றார். நிலவரி வசூல் செய்யும் கர்ணம் தாம் வசூலித்த தொகையை வேண்டுமென்றே கஜானாவில் கட்டத் தவறினால், வசூலித்த பணத்தைக் கையாடல் செய்துவிட்டார் என்று ஊகிப்பதற்கு இடம் ஏற்படுகிறது. எனவே, நம்பிக்கை மோசக் குற்றத்திற்கு அவர் ஆளாகின்றார்.

தற்காலத்தில் பொது ஊழியர்கள் பலர் 'நம்பிக்கை மோசம்', 'கையாடல்' முதலிய குற்றங்களுக்கு ஆளாகித் தண்டனை பெறு கின்றனர் என்பதைச் செய்தித்தாள்கள் வாயிலாக அறிகின்றோம். 'கிஸ்தி பணத்தைக் கையாடல் செய்த கிராம முன்சீப்பு தண்டிக்கப் பட்டார்', 'கூட்டுறவு சங்கத் தலைவர் நம்பிக்கை மோசக் குற்றத் திற்குத் தண்டனை பெற்றார்' என்ற செய்திகளை நாம் கேட்கின்றோம்.

பிறர்க்குரிய பொருளை ஒருவர் விரும்புவதை 'வெஃகுதல்' என் கிறோம். 'வெஃகாமை' என்ற நல்ல குணம் இல்லாவிடில், பொறுப் பான செயல்களை ஒருவர் செய்வது இயலாது. பல இலட்ச ரூபாய்கள் அரசாங்கக் கஜானாவில் ஒரு சாதாரண அதிகாரியின் பொறுப்பில் இருக்கிறது. விலையுயர்ந்த பொருள்களும் நகைகளும் குறைந்த ஊதியம் பெறும் போலீசார்வசம் ஒப்படைக்கப்படுகின்றன. ஒருவர் பொருளையும் பணத்தையும் பிறர் வைத்திருக்கவேண்டிய அவசியம் அடிக்கடி வாழ்வில் ஏற்படுகிறது. இந் நிலைகளில் எல்லாம், வெஃகாமை என்ற நற்பண்பே முறை தவறாது காரியங்கள் நடை பெறுவதற்கு அடிப்படையாக அமைகின்றது.

ஒருவர் பொருளுக்குப் பிறர் உரியரல்லர் என்ற நடுவு நிலைமையை மறந்து பிறர் பொருளை வெஃகினால், அவ்வாறு விரும்புபவரின் குடியும் கெடுகின்றது, குற்றமும் பிறக்கின்றது என்கிறார் வள்ளுவர்:

'நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும்' (குறள், 171)

நடுவின்றி நன்பொருள் வெஃகுவோர், 'கையாடல்', 'நம்பிக்கை மோசம்' என்ற குற்றங்களுக்கு ஆளாகிக் கடுந் தண்டனை பெறுகின்றனர்.

# 7. கள்ளப் பொருளைக் கரவுடன் பெறுதல்

## (Dishonestly Receiving Stolen Property)

'கள்ளப் பொருள்' என்றால் என்ன?—கள்ளப் பொருளைக் கரவுடன் பெறுதல்—கள்ளப் பொருளென்று தெரியாமல் அதை விலைக்கு வாங்குபவருக்கு எந்த உரிமையும் இல்லை—கள்ளப் பொருளைத் தெரிந்தே கரவுடன் பெறுபவர் குற்றவாளியாகின்றார் — 'கள்ளப் பொருள்' என்று ஒன்றை எவ்வாறு அறிந்துகொள்வது?—உருமாறிப் போனாலும், உயிரற்றுப் போனாலும் கள்ளப் பொருளின் கள்ளம் மறைவதில்லை.

**'கள்ளப் பொருள்' (stolen property) என்றால் என்ன?**

திருட்டு, அச்சுறுத்தி அபகரித்தல், கொள்ளை இக் குற்றச் செயல்களால் ஒருவர் உடைமையிலிருந்து மற்றொருவரின் உடைமைக்கு மாறிய பொருளைக் 'கள்ளப் பொருள்' (stolen property) என்று சட்டம் குறிக்கிறது. கையாடல் செய்யப்பட்ட பொருளும், நம்பிக்கை மோசத்தால் அபகரிக்கப்பட்ட பொருளும் 'கள்ளப் பொருள்கள்' ஆகின்றன (410ஆம் பிரிவு).

ஒருவர்வசம் இருந்த கைக்கடிகாரத்தை மற்றவர் திருடித் தம் வசம் வைத்திருக்கின்றார். இந்தக் கடிகாரம் 'கள்ளப் பொருள்'. ஒருவர் அணிந்திருந்த நகையை அச்சுறுத்தி அபகரித்தோ, கொள்ளை அடித்தோ மற்றவர் தம்வசம் வைத்திருக்கின்றார். இந்த நகை ஒரு 'கள்ளப் பொருள்'. ஒரு தங்க மோதிரத்தைக் கண்டெடுத்தவர் அதற்கு உரியவர் எவர் என்று தெரிந்த பின்னும் அவரிடம் கொடுக்காமல் தாமே வைத்துக்கொள்ளுகிறார். கையாடல் செய்யப்பட்ட அந்த மோதிரம் 'கள்ளப் பொருள்' ஆகின்றது. இவ்வாறே, நம்பிக்கை மோசமாக அபகரிக்கப்பட்ட பொருளும் 'கள்ளப் பொருள்' எனப்படுகிறது.

குற்றம் செய்தவரின் உடைமையிலிருந்து நீங்கி, 'கள்ளப் பொருள்' அதற்கு உரியவரின் கையில் சேர்ந்தவுடன், அது நல்ல

பொருளாகிவிடுகிறது; அஃதாவது, 'கள்ளப் பொருள்' என்ற பெயர் அதைவிட்டு அகன்றுவிடுகிறது (410ஆம் பிரிவு).

### கள்ளப் பொருளைக் கரவுடன் பெறுதல் (Dishonestly receiving stolen property)

ஒன்று கள்ளப் பொருள் என்பதைத் தெரிந்தும், அதைக் கள்ள மனத்துடன் (நேர்மையின்றி) ஒருவர் பெறுவதும், அதைத் தம்வசம் வைத்திருப்பதும் குற்றமாகும்; ஒன்று கள்ளப் பொருள் என்பதைத் தெரியக் காரணம் இருந்துங்கூட, கள்ள மனத்துடன் ஒருவர் அதைப் பெறுவதும், தம்வசம் வைத்திருப்பதும் குற்றமாகிறது. 'கள்ளப் பொருளைக் கரவுடன் பெறுதல்' (Dishonestly receiving stolen property) என்ற இந்தக் குற்றத்திற்கு மூன்றாண்டுக் காலம்வரை சிறை, அபராதம் விதிக்கப்படலாம் (411ஆம் பிரிவு).

### கள்ளப் பொருளென்று தெரியாமல் அதை விலைக்கு வாங்குபவருக்கு எந்த உரிமையும் இல்லை

பெரும்பாலும் தங்க நகை, வெள்ளிப் பாத்திரம், மற்றும் விலை மதிப்புள்ள பொருள்களைத் திருடுவதும் கையாடல் செய்வதும் அப் பொருள்களை விற்று, அதனால் வரும் பணத்தைப் பெறவேண்டும் என்ற கருத்தோடுதான். குற்றம் செய்து, அதனால் ஒருவர் பெற்ற 'கள்ளப் பொருள்'மீது அவருக்கு எவ்வித உரிமையும் இல்லை. அந்தப் பொருள் மீதுள்ள சொத்துரிமை அதன் சொந்தக்காரரிடமே இருக்கிறது. கள்ளப் பொருளையுடையவர் அதை மற்றவருக்கு விற்றுப் பணம் பெறுகிறார். அது கள்ளப் பொருள் என்று தெரியாமல் அதை விலைக்கு வாங்கியவருக்கும் அந்தப் பொருள்மீது எவ்வித உரிமையும் ஏற்படுவதில்லை. 'நான் அது கள்ளப் பொருள் என்று தெரியாமல்தான் வாங்கிவிட்டேன். மேலும், அதற்கான விலையையும் கொடுத்தன்றோ அதை வாங்கியிருக்கிறேன்; எனவே, அந்தப் பொருள் எனக்குச் சொந்தமாகிவிட்டது' என்று அதை வாங்கியவர் வாதாட முடியாது. சட்டத்தின் அடிப்படை விதி, 'எவரும் ஒரு பொருள்மீது தனக்குள்ள உரிமைக்கு அதிகமாகப் பிறருக்கு அளிக்க முடியாது' என்பதாகும். ஒரு பொருளைத் திருடியவருக்கோ, கொள்ளையிட்டவருக்கோ, கையாடல் செய்தவருக்கோ அந்தப் பொருள்மீது எவ்வித உரிமையும் இல்லையாதலால், அவர் அந்தப் பொருளை எவருக்கு விற்றாலும் அதை வாங்குபவருக்கும் அப் பொருள் குறித்துச் சொத்துரிமை ஏற்படுவதில்லை. விற்றவருக்கு அப் பொருள் மீது உரிமை ஏதும் இல்லாதிருக்கையில், அதை வாங்கியவருக்கு என்ன உரிமை வரமுடியும்? எனவே, நல்லெண்ணத்துடன் விலை கொடுத்து ஒரு கள்ளப் பொருளை வாங்குபவருக்கும் அப் பொருள்மீது

சொத்துரிமை கிடைப்பதில்லை. ஆதலால், வாங்கியவரிடமிருந்து அந்தக் கள்ளப் பொருளை அதன் சொந்தக்காரர் பெற்றுக்கொள்ளும் உரிமையுடையவராகின்றார். இவ்வாறு, ஒன்றைக் கள்ளப் பொருள் என்று தெரியாமல் வாங்கியவர் அந்தப் பொருளை இழப்பதோடு நிற்கிறார்; குற்றவாளியாவதில்லை. ஆனால், அது கள்ளப் பொருள்தான் என்று தெரிந்தும், அதை நேர்மையின்றி வாங்கியவரைச் சட்டம் எவ்வாறு மதிக்கின்றது?

## கள்ளப் பொருளைத் தெரிந்தே கரவுடன் பெறுபவர் குற்றவாளி ஆகின்றார்

ஒன்று கள்ளப் பொருள்தான் என்பதைத் தெரிந்துங்கூட, கள்ள மனத்துடன் அதைப் பெறுபவர் அல்லது வைத்திருப்பவர் குற்றவாளி ஆகின்றார்.

கள்ளப் பொருளாக ஒன்றைக் கைப்பற்றுபவர் அதை விற்றுப் பணம் பெறவேண்டும் என்ற நோக்கத்துடனேயே குற்றத்தைச் செய்கின்றார். எனவே, ஒன்று கள்ளப் பொருள் என்பதைத் தெரிந்தும் அதைப் பெற்றுக்கொண்டு அதற்கான விலையைக் குற்றவாளியிடம் கொடுப்பது அவனது திருட்டுச் செயலை ஆதரித்து ஊக்கமளிப்பதாகிறது; அவன் திருடுவதற்குப் பின்னுதவியாக இருப்பதாகிறது. ஒருவர் 'கள்ளப் பொருளை' விலைக்குத்தான் வாங்கவேண்டும் என்ற அவசியம் இல்லை. குற்றம் செய்தவர் கள்ளப் பொருளைத் தம்வசம் வைத்திருந்தால் குற்றம் வெளிப்பட்டுவிடும் எனக் கருதி, அதைப் பிறரிடம் கொடுத்துவைக்கலாம். இவ்வாறு, அதைப் பிறர் வாங்குவதும், வாங்கி வைத்திருப்பதும் கூடாது. குற்றவாளியிடமிருந்து கள்ளப் பொருள்களை ஒருவர் வாங்குவதும், வாங்கி வைத்திருப்பதும் அக் குற்றத்திற்குத் துணைச் செயல்களாகவே அமைகின்றன. எனவே, ஒன்று கள்ளப் பொருள் என்று தெரிந்த பின்னும் அதை ஒருவர் நேர்மையின்றிப் பெற்றுக்கொள்வதும், அதை நேர்மையின்றித் தம்வசம் வைத்திருப்பதும் குற்றம் எனச் சட்டம் விதிக்கிறது

## 'கள்ளப் பொருள்' என்று ஒன்றை எவ்வாறு அறிந்துகொள்வது?

இன்னாருடைய பொருள் இன்னாரால் திருடப்பட்டது என்பதை ஒருவர் அறிந்திருந்தார் எனில், அவர் அந்தப் பொருள் 'கள்ளப் பொருள்' என்பதைத் தெரிந்திருந்தார் என்று நாம் எளிதில் கூறிவிடலாம். இவ்வாறு நேரடியாக ஒருவர் அறிந்திருப்பது அருமை. ஆனாலும், ஒரு பொருளை உடையவரின் தகுதியிலிருந்தும் தன்மையிலிருந்தும் அப் பொருளை அவர் நேர்மையான முறையில் உடையவரா என்பதை அறிந்துகொள்ள முடிகிறது. குறைந்த

வருவாயுள்ள ஒருவர் விலையுயர்ந்த வைரநகை யொன்றை ஒரு நகைக் கடைக்காரரிடம் விற்க வந்தால், நகைக் கடைக்காரர் நிச்சயமாக அந்த நகை விற்கவந்தவருடையது அன்று என்பதைத் தெரிந்துகொள்ளலாம். பின், அது எவ்வாறு அவர் கைக்குக் கிடைத்தது என்பதை விசாரித்து, அது 'கள்ள நகை' அன்று என்பதை நன்கு தெரிந்துகொண்ட பின்னர்தான் அதை விலைக்கு வாங்கவேண்டும். இதுவே நேர்மையான நடத்தையுமாகும். ஒரு கூலிவேலைக்காரன் இருபது பவுன் எடையுள்ள தங்கச் சங்கிலியை விற்கவந்தால், கடைக்காரர் அதைச் சந்தேகக் கண்கொண்டுதான் பார்ப்பார். இவ்வாறு, அந்தந்தச் சூழ்நிலைகளிலிருந்து, ஒரு பொருள் கள்ளப் பொருளா என்பதைக் கண்டறிவது எளிதேயாகும். எனவே, ஒன்று 'கள்ளப் பொருள்' என்று தெரிந்துகொள்வதற்குக் காரணங்கள் இருந்தும், அதைப் பெறுவதும், பெற்றதை வைத்திருப்பதும் குற்றமே ஆகின்றன.

ஆதலால், ஒன்று கள்ளப் பொருள் என்று தெரிந்தும் அதைப் பெறுதல் எவ்வாறு குற்றமோ, அம்மாதிரியே ஒன்று கள்ளப் பொருள் என்று தெரியக் காரணம் இருந்தும் அதைப் பெறுதல் குற்றமாகிறது.

ஒருவர் ஒரு பொருளைப் பெறும்பொழுது, அது கள்ளப் பொருள் என்பது தெரியாமல் இருக்கலாம். அதற்குப் பின் அது 'கள்ளப் பொருள்' என்று தெரிகின்றது. இவ்வாறு, தெரிந்த பின்னும் அதைக் கள்ள மனத்துடன் தம்வசம் வைத்திருப்பதும் குற்றமாகிறது.

நகை வியாபாரிகளில் சிலர், 'கள்ள நகைகளை'க் குறைந்த விலைக்கு வாங்கி, அதை மாற்றி வேறு நகைகளாக்கி, சரியான விலைக்கு விற்று, அதனால் இலாபம் பெற முயலுகின்றனர். இலாபத்தையே குறிக்கோளாகக்கொண்டு நடைபெறும் இச் செயல், திருட்டு, கொள்ளை, கையாடல் முதலிய குற்றங்கள் செய்வோருக்கு உதவியாக அமைகின்றது. எனவே, இச் செயலைச் சட்டம் தண்டிக்கின்றது.

### உருமாறிப்போனாலும், உயிரற்றுப்போனாலும் கள்ளப் பொருளின் கள்ளம் மறைவதில்லை

திருடியோ, கையாடல் செய்யப்பட்டோ கைப்பற்றப்பட்ட பொருள் உருக்குலைந்து போகலாம். இருந்தாலும், அது கள்ளப் பொருளே ஆகும். திருடிய தங்கச் சங்கிலியை உருக்கி, அதைத் தங்கக் கட்டியாக ஒருவர் வைத்திருக்கலாம். அந்தத் தங்கக் கட்டி 'கள்ளப் பொருள்'தான். உயிருடன் திருடப்பட்ட ஆட்டைக்

கொன்று அதில் கிடைத்த இறைச்சியும் 'கள்ளப் பொருள்' தான். எனவே, உருமாறிப் போனாலும், உயிரற்றுப் போனாலும் கள்ளத்தால் பெற்ற பொருள் 'கள்ளப் பொருளாகவே' இருக்கின்றது. இவ்வாறு, உருமாறிப்போன பொருளைக் கள்ளமாகப் பெறுபவரும் குற்றவாளி ஆகின்றார்.

ஆனால், கள்ளப் பொருளை ஒருவர் விற்றுப் பணமாக்கிக் கொண்டால், அந்தப் பணம் கள்ளப் பொருள் ஆவதில்லை; விற்கப் பட்ட பொருள்தான் கள்ளப் பொருளாகத் தொடர்ந்து இருக் கின்றது.

இவ்வாறு, திருட்டு, அச்சுறுத்தி அபகரித்தல், கொள்ளை, கையாடல், நம்பிக்கை மோசம் இக் குற்றச் செயல்களால் பெற்ற பொருள் ஒருவருக்கு உற்ற பொருள் ஆவதில்லை. எனவே, அவற்றைக் 'கள்ளப் பொருள்' என்று சட்டம் குறிப்பிட்டு, அவற்றின் கள்ளத் தன்மையை அறிந்தும் கள்ள மனத்தோடு அவற்றைப் பெறுபவ ரையும் அல்லது கள்ள மனத்தோடு தம்வசம் வைத்திருப்போரையும் குற்றவாளிகள் என விதித்து, அவர்களைத் தண்டனைக்கு ஆளாக்கு கின்றது.

கூட்டுக் கொள்ளைச் செயலால் அபகரிக்கப்பட்ட கள்ளப் பொருளையோ, கொள்ளைக் கூட்டத்தைச் சேர்ந்தவர் என்று தெரிந்த ஒருவரிடம் இருக்கும் கள்ளப் பொருளையோ கள்ள மனத்துடன் ஒருவர் பெறுவது கொடுங்குற்றமாகிறது. இதற்கு ஆயுட்காலச் சிறைத்தண்டனைவரை விதிக்கலாம்(412ஆம் பிரிவு).

ஒருவர் வழக்கமாகக் கள்ளப் பொருளைக் கரவுடன் பெறுபவர் என்றால், அவருக்கு ஆயுட்காலச் சிறை அல்லது பத்தாண்டுகள்வரை சிறைத்தண்டனை உண்டு. கள்ளப் பொருள்கள் எனத் தெரிந்தே அவற்றை வாங்குவதும் விற்பதும் தொழிலாகக் கொண்டவரைச் சட்டம் இவ்வாறு கடுமையாகத் தண்டிக்கிறது (413ஆம் பிரிவு).

'கள்ளப் பொருள்' என்று தெரிந்த அல்லது தெரியத்தக்க ஒன்றை மறைத்துவைப்பதற்கோ, செலவிடுவதற்கோ, அதை அகற்றிச் செல்வதற்கோ பிறருக்கு இசைந்து உதவுதல் குற்றமாகும். இக் குற்றத்திற்கு மூன்றாண்டுக் காலம்வரை சிறைத் தண்டனை, அபராதம் உண்டு (414 ஆம் பிரிவு).

இவ்வாறு, குற்றச் செயல்களால் பெற்ற பொருள்களைக் 'கள்ளப் பொருள்களெ'னக் குறிப்பிட்டு, கள்ளப் பொருள்களைக் கரவுடன் பெறுவோரையும் குற்றவாளிகளெனத் தண்டிக்கிறது சட்டம்.

# 8. ஏமாற்றுதல் (Cheating)

குற்றத்தின் இலக்கணம்—அச்சுறுத்தி அபகரித்தலும் ஏமாற்று தலும்—வஞ்சனை எண்ணம் இல்லையெனில் ஏமாற்றும் குற்றம் எழுவதில்லை—'பொய்க்கூற்றுல் ஏமாற்றுதல்' என்றால் என்ன?—'பின்தேதியிட்ட செக்குகள்' கொடுத்தல்—சோதிடம் பார்த்தல், குறி சொல்லுதல் முதலியன—வியாபார விளம்பரங்கள்—ஏமாற்றியவரின் வஞ்சனையால் ஏமாறியவர் தூண்டப்பட்டிருத்தல் வேண்டும்—எவருக்குக் கேடு விளைந்ததோ அவர் வஞ்சிக்கப்பட்டிருத்தல் வேண்டும்—தமக்குத் தெரிந்த அல்லது குறிப்பிட்ட ஒருவரைத்தான் குற்றவாளி ஏமாற்றியிருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை—ஆள்மாறாட்டம் செய்து ஏமாற்றுதல்—ஏமாற்றிப் பொருள் கவர்தல்.

'வஞ்சனைகள் செய்வாரோடிணங்க வேண்டாம்' என்பது முதுமொழி. வஞ்சித்து ஏமாற்றி இன்னல்கள் விளைப்போர் உலகில் உள்ளனர். எத்தனை எத்தனையோ வழிகளில் ஒருவர் மற்றொருவரை ஏமாற்றலாம். இன்னின்ன சூழ்நிலைகளில் எல்லாம் ஒருவர் ஏமாற்றப்படலாம் என்று எண்ணிக்கையிட்டுக் கூறுதல் இயலாது.

ஏமாற்றுன சிலவகைச் செயல்களைச் சட்டம் எடுத்துக்காட்டாகக் கூறுகிறது:

தாம் அரசாங்க ஊழியர் என்று ஒருவர் பொய்யாக நடித்துக் கடைக்காரரிடம் கடனுகச் சாமான்களைப் பெறுகின்றார். கடனைத் திருப்பிக்கொடுக்கும் எண்ணம் அவருக்கு இல்லை. இது 'ஏமாற்றுதல்' ஆகும். இவர் அரசாங்க ஊழியர் அல்லர் என்ற உண்மை கடைக்காரருக்குத் தெரிந்தால், கடனுகச் சாமான்களைக் கடைக்காரர் கொடுக்கமாட்டார். எனவே, பொய் கூறிக் கடைக்காரரைக் கடனுக்குச் சாமான்களைக் கொடுக்கும்படி கள்ளத்தனமாகத் தூண்டிய செயல் 'ஏமாற்றுதல்' ஆகிறது.

புகழ்பெற்ற பொருள் உற்பத்தியாளர்களின் வணிகக் குறியைப் (trade mark) போன்ற ஒரு போலி வணிகக் குறியை ஒரு பொருளின்மீது பொறித்து ஒருவர் அதை விற்கின்றார். பிறர் ஏமாறிப்

போய் அதை வாங்குகின்றனர். இவ்வாறு, வஞ்சித்து அப் பொருளைப் பிறர் வாங்குமாறு செய்தல் 'ஏமாற்றுதல்' ஆகும்.

மாதிரிக்கு (sample) மட்டும் நல்ல சரக்கைக் காண்பித்து விட்டு, மட்டமான சரக்கை ஒருவர் விற்றுப் பணம் பெறுகின்றார். இவ்வாறு வஞ்சித்தல் 'ஏமாற்றுன' செயலாம்.

தாம் பணம் போடாத ஒரு பாங்கியின்பேரில் செக் (cheque) எழுதிக்கொடுத்துவிட்டு, ஒரு வணிகரிடமிருந்து சாமானை வாங்கு பவர் 'ஏமாற்றுபவர்' ஆகின்றார். செல்லாத செக்கைக் கொடுத்துச் சாமானைக் கொடுக்கும்படி வணிகரைக் கள்ளத்தனமாகத் தூண்டி யது 'ஏமாற்றுதல்' ஆகும்.

போலியான வெள்ளைக் கற்கள் பதித்த நகைகளை அசல் வைர நகைகள் என்று பொய்யாகக் கூறி, அவற்றை அடகுவைத்துப் பிறரிடமிருந்து பணம் பெறுதல் 'ஏமாற்றும்' செயல்.

ஒருவர் தமது வீட்டை விற்றுவிடுகின்றார். விற்றதைக் கள்ளத் தனமாக மறைத்து, மற்றொருவருக்கு மீண்டும் அந்த வீட்டை விற்பது, அதே வீட்டை அடைமானம் வைத்துக் கடன் பெறுவது— இவை 'ஏமாற்றும்' செயல்கள்.

## குற்றத்தின் இலக்கணம்

இவைபோன்ற கள்ளத்தனமான மோசடிச் செயல் 'ஏமாற் றுதல்' (Cheating) என்ற குற்றமாகிறது. 415ஆம் பிரிவில் இக் குற்றத்திற்கான இலக்கணத்தைக் காண்கிறோம்:

(1) வஞ்சனையால் ஒருவரை மோசடியாகவோ, கள்ளத்தன மாகவோ தூண்டி அவரை,

(i) ஒரு பொருளைப் பிறருக்குக் கொடுக்கும்படி செய்வது, அல்லது

(ii) ஒரு பொருளைப் பிறர் வைத்துக்கொள்ளுவதற்கு சம்மதிக்கச் செய்வது

'ஏமாற்றுதல்' என்னும் குற்றமாகும்.

(2) வஞ்சனையால் ஒருவரைத் தூண்டி, அவருடைய உடல், உள்ளம், பொருள், புகழ் இவற்றிற்குக் கேடு விளைக்கத்தக்க வகையில்

(i) ஒன்றைச் செய்யவைப்பது, அல்லது

(ii) ஒன்றைச் செய்யாதிருக்க வைப்பது

'ஏமாற்றுதல்' குற்றமாகும்.

'வஞ்சனை' என்பதில், உள்ளது ஒன்றை நேர்மையின்றி மறைத்தலும் அடங்கும்.

இவ்வாறு, இக் குற்றத்தின் இலக்கணத்தைச் சட்டத்தில் காண்கிறோம் (415ஆம் பிரிவு).

இக் குற்றத்திற்கு ஓராண்டுக் காலம்வரை சிறை, அபராதம் தண்டனையாகும் (417 ஆம் பிரிவு).

## அச்சுறுத்தி அபகரித்தலும் ஏமாற்றுதலும்

'அச்சுறுத்தி அபகரித்தல்' (Extortion) என்ற குற்றத்தில் ஒருவருடைய சம்மதம் அச்சுறுத்தலால் பெறப்பட்டு, அவருடைய பொருள் கவரப்படுகிறது; ஏமாற்றுதல் என்ற குற்றத்தில் ஒருவருடைய சம்மதம் வஞ்சனையால் பெறப்பட்டு, அவருடைய பொருள் கவரப்படுகிறது. (ஒன்றில், பொருளை உடையவர் அச்சுறுத்தப் பட்டதால் அவரது இசைவு பெறப்படுகிறது; மற்றொன்றில், அவரை வஞ்சித்து அவரது இசைவு பெறப்படுகிறது.)

## வஞ்சனை எண்ணம் இல்லையெனில், 'ஏமாற்றும்' குற்றம் எழுவதில்லை

வாங்கிய கடனை ஒருவர் கொடுக்காது இருக்கலாம். செய்து கொண்ட ஒப்பந்தத்தை ஒருவர் நிறைவேற்றாது இருக்கலாம். கொடுத்த வாக்குப்படி ஒருவர் நடக்காது இருக்கலாம். இவை யெல்லாம் ஏமாற்றுக் குற்றங்களாகிவிடுவதில்லை. கடனை வாங்கும் பொழுதே அதைத் திருப்பிக்கொடுக்கப்போவதில்லை என்ற வஞ்சகமான எண்ணத்துடன் ஒருவர் இருந்திருந்தால், அதை ஏமாற்றுதல் என்று கூறலாம். ஒப்பந்தம் செய்துகொண்டபொழுதே அதை நிறைவேற்றுவதில்லை என்ற எண்ணம் ஒருவருக்கு இருந்திருந்தால், அதுவும் ஏமாற்றுதல் ஆகும். அவ்வாறான, வஞ்சனை எண்ணம் இருந்ததா என்பதை அந்தந்தச் சூழ்நிலைகளிலிருந்தே ஊகித்தறிய வேண்டியிருக்கிறது. இத்தகைய வஞ்சனை எண்ணம் இல்லாத பொழுது ஏமாற்றும் குற்றம் எழுவதில்லை.

தம்முடைய நிலத்தில் உளுந்து பயிரிடப்பட்டிருக்கிறது என்றும், அதில் நூறு மூடை உளுந்தைக் குறிப்பிட்ட விலைக்கு விற்பதாகவும் கூறி, ஒரு விவசாயி ஒரு வணிகருடன் ஒப்பந்தம் செய்து, ரூபாய் ஆயிரம் முன்பணமாகப் (advance) பெறுகின்றார். அறுவடைக் காலத்தில் உளுந்தின் விலை ஏறிவிட்டது. எனவே, ஒப்பந்தத்தை மீறி விவசாயி தாம் அறுவடை செய்த உளுந்தை வேறொரு வியாபாரிக்கு அதிக விலைக்கு விற்றுவிடுகிறார். இப்பொழுது விவசாயிமீது ஏமாற்றுதல் குற்றம் சாட்டுவதற்கில்லை.

ஒப்பந்தத்தை மீறியதற்கென (breach of contract) அவர் மீது சிவில் வழக்குத் தொடுத்து வணிகர் நட்டஈடுதான் பெறலாம். ஆனால், ஒப்பந்த காலத்தில் விவசாயியின் நிலத்தில் உளுந்தே பயிரிடப்படவில்லை என்று வைப்போம். எனில், தம் நிலத்தில் சாகுபடியாகும் உளுந்தை விற்பதாக விவசாயி கூறியது பொய்யாகி விடுகின்றது. ஒப்பந்தம் செய்யும்பொழுதே அதை நிறைவேற்றுவதில்லை என்ற விவசாயியின் எண்ணம் தெரிகின்றது. இந்நிலையில் அவர் ஏமாற்றின குற்றத்திற்கு ஆளாகின்றார்.

ஒருவர் மற்றொருவருக்குப் புரோநோட்டு எழுதிக் கொடுத்துக் கடன் பெறுகின்றார். புரோநோட்டிலுள்ள வாசகத்தின்படி, கடன் கொடுத்தவர் பணத்தைத் திருப்பித் தருமாறு எப்பொழுது கேட்டாலும் அப்பொழுது கடன் வாங்கியவர் கடன் தொகையைச் செலுத்த வேண்டும். பெரும்பாலும் அவ்வாறு செலுத்த முடிவதில்லை. உடனே, கடன் வாங்கியவர்மீது ஏமாற்றுக் குற்றம் சாட்டுவது முடியாது. புரோநோட்டு எழுதிக் கடன் வாங்கும் பொழுது கடனைச் சிறிது காலத்திற்குள் கொடுத்துவிடலாம் என்ற எண்ணத்தில்தான் கடன்பெற்றவர் கடனை வாங்குகிறார். ஆனால், அவர் எதிர்பார்த்தபடி அவரால் செலுத்த முடியவில்லை. இதற்குப் பல காரணங்கள் இருக்கலாம். எனவே, கடன் கொடுத்தவர் கடன் பெற்றவர்மீது சிவில் கோர்ட்டில் வழக்கிட்டுதான் கடனை வசூலிக்க முடியும். கடன் பெற்றவரைக் குற்றவாளியெனத் தண்டனைக்குள்ளாக்க முடியாது. ஆனால், புரோநோட்டு எழுதிக்கொடுத்துக் கடனைப் பெற்றபொழுதே அதைத் திருப்பிக்கொடுக்கும் எண்ணம் அவருக்கு இருந்ததில்லை என்பதைக் காட்டுவதற்குப் போதிய சான்று இருந்தால், அவரை ஏமாற்றிய குற்றத்திற்கு ஆளாக்கலாம்.

**'பொய்க்கூற்றால் ஏமாற்றுதல்' என்றால் என்ன?**

ஒருவர் ஒரு நகையை வைரநகை என்று கூறி மற்றொருவரிடம் விற்கின்றார். ஆனால், அந்த நகை போலி வைரக் கற்களைக் கொண்டது; அசல் வைரநகையன்று. இப்பொழுது, நகையை விற்றவர் குற்றவாளியா, இல்லையா?

விற்றவருக்கே அந்த நகையில் உள்ளவை போலி வைரங்கள் என்று தெரியாது என்று வைத்துக்கொள்ளுவோம்: விற்றவர் அதை அசல் வைரநகை என்று நம்பியே இன்னொருவரிடமிருந்து வாங்கியிருந்தார் என்று வைப்போம். இப்பொழுது அவர்மீது குற்றம் சாட்டுவது தகாது. ஏன்? விற்றவர் அதை வைரநகை என்று கூறியது பொய்யான கூற்றுதான்; ஆனால், அது பொய் என்று தெரிந்து அதைக் கூறவில்லை. நகை உண்மையில் போலி வைர

நகையாக இருந்தாலும், அவர் அதை அசல் வைர நகை என்று நம்பியே விற்ருர். எனவே, அவர் குற்றவாளி ஆவதில்லை. ஒருவர் கூறியது பொய்யாக இருந்தால்மட்டும் போதாது; தாம் கூறியது பொய்தான் என்பதும் அதைக் கூறியவருக்குத் தெரிந்திருக்க வேண்டும். அது அவர் நெஞ்சறிந்த பொய்க்கூற்ருக இருந்து, அதன் விளைவாக ஒருவர் வஞ்சிக்கப்பட்டால்தான் ஏமாற்றுக் குற்றம் எழுகின்றது.

**பின் தேதியிட்ட செக்குகள் கொடுத்தல்**

ஒருவர் மற்ருெருவருக்குப் பணம் கொடுக்க வேண்டியதிருக்கிறது. குறிப்பிட்ட ஒரு நாளில் அவருடைய பாங்கிக் கணக்கில் போதிய பணம் இல்லாதிருக்கலாம். எனவே, பின் தேதியிட்டு, குறிப்பிட்ட தொகைக்கு ஒரு செக்கை எழுதி (post-dated cheque) அவர் மற்ருெருவரிடம் கொடுக்கின்ருர். அந்தத் தேதிக்குள் பாங்கு அந்தச் செக்கை மதித்து ஏற்றுக்கொள்ளுவதற்கு வேண்டிய பணத்தை பாங்கியில் கட்டிவிடலாம் என்ற எண்ணத்தோடுதான் அந்தச் செக்கை அவர் கொடுக்கின்ருர். ஆனல், அந்தத் தேதிக்குள் அவரால் பாங்கியில் பணத்தைக் கட்ட முடியவில்லை. எனவே, அந்தச் செக்கு மதித்து ஏற்கப்படாமல், பாங்கியிலிருந்து திரும்பி வந்துவிடுகிறது. இதை வைத்துப் பின்தேதிச் செக்கைக் கொடுத்தவர் பிறரை ஏமாற்றினுர் என்று கூறுதல் தகாது. ஏனெனில், குறிப்பிட்ட தேதிக்குள் பணத்தை பாங்கியில் செலுத்தாததற்கான காரணங்கள் பல இருக்கலாம். ஏமாற்றும் கருத்தோடுதான் பின்தேதியிட்ட செக்கை அவர் கொடுத்தார் என்று நாம் ஊகிப்பது பொருந்தாது.

பின்தேதியிட்ட செக்கை ஒருவர் கொடுப்பது, அந்தத் தேதிக்குள் செக்கில் கண்ட தொகையைக் கொடுப்பதாக அளிக்கும் வாக்குறுதிபோன்ற செயல்தான். அந்த வாக்குறுதியை நிறைவேற்ற இயலாதது குற்றச் செயலாவதில்லை.

**'பொருள்' என்று எதைக் குறிக்கிருேம்?**

ஏமாறியவர் கொடுக்கும் பொருள் விலைமதிப்புள்ளதாக இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. சம்பந்தப்பட்டவர்களுக்கு அவசியமானவையாக உள்ளவை விலைமதிப்புள்ளவையாக இருந்தாலும் இல்லாவிடினும், அவை 'பொருள்களே'யாகும். எனவே, சான்றிதழ், டிக்கட் முதலியவைகளும் சட்டப்படி 'பொருள்கள்'தாம்.

**சோதிடம் பார்த்தல், குறி சொல்லுதல் முதலியன**

ஒருவருடைய எதிர்காலம்பற்றி சோதிடம் பார்ப்பவர் கூறுகின்ருர். குறிசொல்லுபவரும் வரவிருக்கும் காரியங்கள்பற்றிக் கூறு

கின்றார். இதற்கு நாம் கூலியும் கொடுக்கிறோம். இவ்வாறு, சோதிடமும் குறிசொல்லுதலும் ஏமாற்றுவனவாகாவா என்ற கேள்வி எழுகின்றது. குறிசொல்லுபவரும் சோதிடம் பார்ப்பவரும் தங்கள் தொழிலில் நம்பிக்கை கொண்டுதான் அத் தொழிலைச் செய்கின்றனர். அத் தொழில்களில் அவர்களுக்கு நம்பிக்கை இருப்பதால், நாம் அவைகளை ஏமாற்றும் செயல்கள் என்று கூறுவதற்கில்லை.

ஆனால், கரன்சி நோட்டுகளை இரட்டித்துத் தருவதாகக் கூறி, ஒருவர் மற்றொருவரை வஞ்சித்துப் பணம் பெறுதல் 'ஏமாற்றுதல்' ஆகிவிடும்.

### வியாபார விளம்பரங்கள்

வியாபார விளம்பரங்களில் பல பொய்கள் கூறப்படுகின்றன. மிகவும் உயர்ந்த சோப்பு என்ற விளம்பரத்துடன் ஒரு வகை சோப்பு விற்கப்படுகிறது. ஆனால், அது சாதாரண சோப்பாக இருக்கலாம். இதை வைத்து, விளம்பரம் செய்த வியாபாரி பொது மக்களை ஏமாற்றிவிட்டார் என்று சொல்லுவது கூடாது. ஏனெனில், இதுபோன்ற விளம்பரங்களைப் பலரும் நம்புவதில்லை. எனவே, விளம்பரத்தை அப்படியே நம்பிச் சரக்கை எவரும் வாங்குவதில்லை. ஆதலால், விற்பனையைப் பெருக்குவதற்கெனச் செய்யும் வியாபார விளம்பரங்களைக் குற்றங்களாகச் சட்டம் கொள்வதில்லை.

ஆனால், மாதிரியாக (sample) நல்ல சரக்கைக் காட்டிவிட்டு, மட்டமான சரக்கை விற்பது ஏமாற்றுவதாகிவிடுகிறது.

### ஏமாற்றுபவரின் வஞ்சனையால் ஏமாறியவர் தூண்டப்பட்டிருத்தல் வேண்டும்

வஞ்சனையாக, உள்ளதை மறைத்துப் பல காரியங்கள் செய்யப் படுகின்றன. அவையனைத்தும் ஏமாற்றுச் செயல்கள் ஆவதில்லை.

திருப்பதிக்குச் செல்ல இருப்பதாகக் கூறிப் பலர் பிச்சை கேட்டுப் பெறுகின்றனர். அவர்களில் சிலர் கூறுவது பொய்யாக இருக்கலாம். இருந்தாலும், நாம் பிச்சையளிப்பது அவர் கூறிய திருப்பதி யாத்திரையை நம்பி மட்டுமன்று. இரந்தோர்க்கு ஈய வேண்டும் என்ற நற்பண்பை ஒட்டியே நாம் பிச்சையிடுகிறோம். எனவே, பிச்சைக்காரரின் பொய்க்கூற்று தான் நம்மைத் தூண்டிப் பிச்சையிடச் செய்தது என்று கூறுவது சரியன்று. ஆதலால், பிச்சைக்காரரின் பொய்க்கூற்று குற்றமாவதில்லை.

எனவே, ஏமாற்றியவரின் பொய்க்கூற்று அல்லது வஞ்சனை மட்டுமே ஏமாறியவர் பொருளைக் கொடுத்ததற்குக் காரணமாக

இருந்ததா என்பதை நாம் கவனித்தல் வேண்டும். அத்தகைய ஏமாற்றுதான் குற்றமாகிறது.

திருடன் தான் திருடிய பொருளை, 'கள்ளப் பொருளை' நல்ல பொருள் எனக் கூறி விற்றால், அது ஏமாற்றுதல் குற்றமாகும். ஏனெனில், தனக்கு எந்தவித உரிமையும் இல்லாமல் அவன் அப் பொருளை விற்கிறன். அவனது வஞ்சனையால் பிறர் அதை வாங்க முற்படுகின்றனர்.

பிறருக்கு எந்தவித ஊறும் விளையாத வகையில் நாம் ஒன்றை மறைத்துக் கூறுவது குற்றமாவதில்லை. என் கையிலுள்ள அழகான பேனாவின் விலை என்ன என்று என் நண்பர் கேட்கிறார். நான் விலையை அதிகப்படுத்திக் கூறுகிறேன். இவ்வாறு கூறியதால் என் நண்பருக்கு எவ்விதக் கேடும் விளைக்க நான் கருதவில்லை. என் நண்பர் நான் கூறியதை நம்பிக் கடைக்குச் சென்று அதிக விலை கொடுத்து அதுபோன்ற பேனாவை வாங்கிவந்துவிட்டார் என வைப்போம். இதற்கு நான் பொறுப்பாவதில்லை.

### எவருக்குக் கேடு விளைந்ததோ அவர் வஞ்சிக்கப்பட்டிருத்தல் வேண்டும்

இராமன் கிருஷ்ணனிடம் ஒன்றைப் பொய்யாகக் கூறியதைக் கேட்டுக்கொண்டிருந்த கோபாலன், அந்தப் பொய்க்கூற்றின்படி நடந்து நட்டமடைந்தான் எனில், அதற்கு இராமன் பொறுப்பாவதில்லை. ஏனெனில், இராமன் கிருஷ்ணனிடம்தான் பொய்க்கூற்றைச் சொன்னான். நட்டமடைந்த கோபாலனிடம் இராமன் ஏதும் கூற வில்லை. எனவே, இராமன் கோபாலனை ஏமாற்றிய குற்றத்திற்கு ஆளாவதில்லை.

### தமக்குத் தெரிந்த அல்லது குறிப்பிட்ட ஒருவரைத்தான் குற்றவாளி ஏமாற்றியிருக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை

வீடுகள் விலைக்கு இருக்கின்றன என்றும், வேண்டுவோர் விளம் பரதாரருக்கு எழுதி விவரங்கள் பெறலாம் என்றும், விவரங்கள் பெறு வதற்கு ஒரு ரூபாய் மணியார்டர் செய்யவேண்டுமென்றும் ஒருவர் செய்தித்தாள்களில் விளம்பரம் செய்கின்றார். விளம்பரத்தை நம்பிச் சிலர் பணம் அனுப்புகின்றனர். உண்மையில், விளம்பரம் செய் தவரிடம் எந்த வீடும் விற்பதற்கென இல்லை. இது ஏமாற்றும் செயலேயாகும். விளம்பரம் செய்தவர் குறிப்பிட்ட எவரையும் குறித்து அவரை ஏமாற்றவேண்டுமென்று விளம்பரம் செய்யவில்லை தான். பொதுமக்களை ஏமாற்றும் தீய கருத்துடன்தான் அவர்

பொய் விளம்பரம் செய்தார். எனினும், அது குற்றந்தான். குறிப்பிடப்படாத பிறரை ஏமாற்றும் கருத்தோடு வஞ்சனையான செயல் செய்யப்பட்டாலும் அது ஏமாற்றுதல்தான்.

ரயிலில் ஒருவர் டிக்கட் இல்லாமல் பிரயாணம் செய்தால், அதற்கு ரயில்வே சட்டப்படி அபராதம் கட்டவேண்டும்; அது ஏமாற்றிய குற்றம் ஆகாது. ஆனல், செல்லாத டிக்கட்டைக் கள்ள மனத்தோடு டிக்கட் பரிசோதகரிடம் காட்டினல், அது ஏமாற்ற முயன்ற குற்றமாகும்.

# 9. ஆள்மாருட்டம் செய்து ஏமாற்றுதல்
## (Cheating by Personation)

(i) ஒருவர் மற்ருெருவராக நடிப்பது;

(ii) ஒருவரை மற்ருெருவருக்குப் பதிலாக்குவது;

(iii) தன்னை அல்லது மற்ருெருவரை மாற்றி வேருெருவர் என்று தெரிவிப்பது;

இந்த மூன்று வழிகளில் ஒன்றைக் கையாண்டு ஏமாற்றுங் குற்றம் செய்யப்பட்டால், அது 'ஆள் மாருட்டம் செய்து ஏமாற்றுதல்' (cheating by personation) என்ற குற்றமாகிறது (416ஆம் பிரிவு).

ஏமாற்றுவதற்குப் பல வகையான உத்திகளைக் கையாளுகின்றனர். அதில் ஆள்மாருட்டமும் ஒன்று. ஆள்மாருட்டம் என்ருல், உருமாறி வேடம்போடவேண்டும் என்ற அவசியம் இல்லை. புராணங்களில் கூறப்படும், மாஞக வந்த மாரீசனைப்போல், சுந்தர நங்கையாக வந்த சூர்ப்பணகைபோல் மாய உருவெடுத்துப் பிறரை மயக்க வேண்டும் என்பதில்லை.

தம் நடத்தையால் ஒருவர் மற்ருெருவராக நடித்து ஏமாற்றுவது குற்றமாகும். பல்கலைக்கழக மாணவர்களுக்குக் கடஞகச் சாமான்கள் விற்கப்படும் கடைக்கு மாணவரல்லாத ஒருவர் மாணவருக்குரிய உடைகளைத் தரித்துக்கொண்டு சென்று சாமான்களைக் கடஞகப் பெற்ருர். இது ஒருவர் மற்ருெருவராக நடித்து ஏமாற்றுங் குற்றம் என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

கந்தன் பெயரில் உள்ள ரயில்வே பதிவு டிக்கட்டை (season ticket) இராமன் வைத்துக்கொண்டு பிரயாணம் செய்தால், அது இராமன் கந்தஞக நடித்து ஏமாற்றுவதாகிறது; குற்றமாகிறது.

கந்தன் என்ற மாணவன் தேர்வு எழுதவேண்டும். கண்ணன் என்பவன் கந்தன் என்று பொய் கூறி, தேர்வு எழுத அனுமதிச்

சீட்டைப் பெற்றுத் தேர்வும் எழுதினுன். கண்ணன் குற்றவாளி என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

ஒருவர் தாம் வகிக்காத பதவியை வகித்துக்கொண்டிருப்பதாகக் கூறி ஏமாற்றலாம். அதுவும் குற்றமேயாகும். போலீசு இலாகாவைச் சேராத ஒருவர் தாம் ஒரு போலீசு அதிகாரி என்று கூறிப் பிறரை ஏமாற்றுவது இந்தப் பிரிவின்கீழ்க் குற்றமாகும்.

எனவே, ஆள்மாருட்டம் செய்வது சொல்லாலோ, செயலாலோ, நடத்தையாலோ இருக்கலாம்.

ஒருவர் இன்னெருவராக ஆள்மாருட்டம் செய்வது என்ருல், 'அந்த இன்னெருவர்' உண்மையான நபராக இருக்கவேண்டும் என்ற அவசியம் இல்லே; உயிருள்ள நபராக இருக்கவேண்டும் என்ற அவசியமும் இல்லே.

தாம் சந்துலால் கம்பெனியின் மானேஜர் என்றும், தம் பெயர் சந்துலால் என்றும் ஒருவர் பொய்கூறிப் பிறரை ஏமாற்றுகிருர். 'சந்துலால் கம்பெனி' என்று எந்தக் கம்பெனியும், 'சந்துலால்'என்று எவரும் இல்லாதிருக்கலாம்; கற்பனேப் பெயர்களாக அவை இருக்கலாம். இருந்தாலும், அது 'ஆள்மாருட்ட ஏமாற்றுதல்' குற்றமாகும். இறந்துபோன ஒருவராக நடித்து ஏமாற்றுவதுங் குற்றந்தான். எனவே, எவராக ஆள்மாருட்டம் செய்யப்படுகிறதோ, அவர் உண்மை நபராகவோ (real person), உயிருள்ள நபராகவோ இருக்கவேண்டும் என்ற அவசியம் இல்லே.

ஆள்மாருட்டம் செய்து ஏமாற்றுபவருக்கு மூன்ருண்டுக் காலம் வரை சிறை, அபராதம் தண்டனேயாகும்.

## 10. ஏமாற்றிப் பொருள் கவர்தல்

ஒருவர் ஒரு பொருளைப் பிறருக்குக் கொடுக்கும்படியோ, அல்லது மதிப்புள்ள ஆவணங்களை (கிரயப் பத்திரம், புரோநோட்டு முதலியவைகளை) ஆக்கும்படி, அழிக்கும்படி அல்லது மாற்றும்படியோ ஏமாற்றப்பட்டால், அவ்வாறு ஏமாற்றியவருக்கு ஏழு ஆண்டுக் காலம்வரை தண்டனையும் அபராதமும் உண்டு (420ஆம் பிரிவு).

வல்லடியால் பொருள் பறிப்பது 'கொள்ளைக்' குற்றம் ஆவது போல், வஞ்சித்துப் பொருள் பறிப்பதும் 'ஏமாற்றுக்' குற்றம் ஆகின்றது. இடர் விளைத்துப் பொருள் கவர்தலும், ஏமாற்றிப் பொருள் கவர்தலும் வேறுபட்ட செயல்களாயினும், இரண்டும் ஊறு செய்யும் செயல்கள்தாம்.

'ஏமாற்றுதல்' என்ற குற்றத்தில் ஏமாற்றுபவரின் கள்ள எண்ணமே முக்கியமானதாகும். பெரும்பாலும் பிறர் பொருளைப் பெறுவதற்கு என்று இந்த ஏமாற்றுக் குற்றம் எத்தனையோ வழிகளில் செய்யப்படுகிறது.

குற்ற இலக்கணத்தில் வரும் 'fraudulently, dishonestly' என்கிற சொற்கள், குற்றம் இழைப்போரின் குற்ற மனத்தைச் சுட்டிக்காட்டுகின்றன. மோசடியாக, நேர்மையின்றி, கள்ள மனத்தோடு செய்யப்படும் செயல்களாகவே ஏமாற்றுச் செயல்கள் இருக்கின்றன. 'பிறர் பொருளைக் கள்ளத்தால் கள்வேம்' என்ற தீய எண்ணமே ஏமாற்றுக் குற்றத்தின் அடிப்படையாக அமைகின்றது. இந்த எண்ணத்தை மனத்தால் நினைத்தாலே, 'உள்ளத்தால் உள்ளலே' தீயது என்கிறார் வள்ளுவர்:

'உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தால் கள்வேம் எனல்' (குறள், 282)

'பிறன் பொருளைக் கள்ளத்தால் கள்வேம்' என்ற கள்ள மனத்தோடு கூடிய செயல்களைச் சட்டமும் குற்றங்கள் எனக் கொண்டு கடுந்தண்டனையை விதிக்கின்றது.

# 11. சொத்தழித்தல்

## (Mischief)

குற்றத்தின் இலக்கணம்—அழிக்கப்படும் சொத்துக் குற்றவாளியின் சொத்தாகவேகூட இருக்கலாம்—சொத்தின் நிலையில் மாறுதல் ஏற்படுத்தல்—இக் குற்றத்திற்கு இலக்காவன பருப்பொருள்களே—விலங்குகளை அழித்தல்—தீயிட்டுச் சொத்தழித்தல்.

பிறர் பொருளைத் தாம் நுகர்ந்து நலன் பெறவேண்டும் என்ற பேராசையால் அவர் பொருளை வல்லடியாலோ, வஞ்சகத்தாலோ கவர்ந்துகொள்வது ஒருவகைத் தீங்கு; தமக்கு நன்மை உண்டோ இல்லையோ, எப்படியும் பிறருக்குக் கேடு விளைக்கவேண்டும் என்ற தீய நோக்கத்துடன் பொருள்களை அழிப்பது மற்றொரு வகைத் தீங்கு. இந்த இரண்டாம் வகைச் செயல்களைப்பற்றியே இங்குக் காண இருக்கிறோம்.

ஒருவர் மோதிரத்தை நேர்மையின்றியும், அவருடைய சம்மதத்தைப் பெறாமலும் மற்றொருவர் எடுத்துக்கொண்டால், மோதிரத்தை இழந்தவருக்குக் கேடு விளைகிறது. எனவே, இவ்வாறு எடுத்தவரைத் தண்டனைக்குள்ளாக்குகிறது சட்டம்; எடுத்த செயலைத் திருட்டுக் குற்றம் என்கிறோம். இது ஒருவகைக் குற்றம். இன்னொருவருக்கு அந்த மோதிரத்தைத் தாம் எடுத்துக்கொள்ளவேண்டும் என்ற ஆசை இல்லை; ஆனால், அந்த மோதிரத்தை உடையவருக்குக் கேடு விளைக்கவேண்டும் என்ற தீய கருத்துத் தோன்றுகிறது. அவர் அந்த மோதிரத்தை எடுத்து ஆற்று வெள்ளத்தில் வீசி எறிந்துவிடுகிறார். எனவே, மோதிரத்திற்குரியவர் அதை இழந்து நிற்கிறார். இப்பொழுது மோதிரத்தை ஆற்றில் எறிந்த செயலை என்னென்பது? எறிந்தவருக்கு எந்தவித நன்மையும் ஏற்படவில்லைதான். ஆனால், மோதிரத்தை வைத்திருந்தவருக்கு இழப்பு நேர்ந்துவிட்டதே. அதுவும் முறையில்லாத இழப்பு (wrongful loss) ஏற்பட்டிருக்கின்றது. இந்த வகையில் ஒருவர் மற்றொருவருக்கு-

முறையில்லாத இழப்பு ஏற்படுத்துவதைச் சட்டம் தடைசெய்கிறது. இதைக் குற்றமென விதிக்கின்றது.

பொதுமக்களின் உபயோகத்திற்கென்று வீதிகளின் சந்திப்பில் தொலைபேசி நிலையம் (Telephone booth) நிறுவப்பட்டிருக்கிறது. அந்த நிலையத்தை வேண்டுமென்றே ஒருவர் நாசம் செய்கின்றார். இதைச்செய்வதால் அவருக்கு எந்த நன்மையும் இல்லைதான். இருந்தாலும், பொதுச் சொத்தான தொலைபேசி நிலையத்தை அவர் அழிக்கின்றார். இதனால் பொதுமக்களுக்குக் கேடு விளைகிறது. ஏனென்றால், அழிக்கப்பட்டது பொதுச் சொத்து; பொதுமக்களின் பணத்திலிருந்து அமைக்கப்பட்ட சொத்து. இவ்வாறு, பொதுமக்களுக்குக் கேடு பயக்கும் கருத்துடன் சொத்துகளை அழிப்பதையும் சட்டம் தடைசெய்கின்றது.

ஒரு சொத்தைப் பூராவாக அழித்துதான் இழப்போ கேடோ விளைகிறது என்று கூறுவதற்கில்லை. ஒரு பொருளின் நிலையை மாற்றிவிட்டாலோ, அல்லது அப் பொருளைச் சிறிது அகற்றிவைத்து விட்டாலோ, அதனாலும் பிறருக்குக் கேடு விளைவதுண்டு.

ஒரு பழக்கடைக்காரர் விற்பனைக்கான பழங்களை அழகாக அடுக்கி வைத்திருக்கின்றார். அந்த அடுக்கைத் தட்டிவிட்டு, பழங்களைச் சிதறி விழும்படி செய்தால், அதுவும் பொருளுக்குக் கேடு விளைப்பதுதான்.

பொது வாய்க்கால்வழி ஓடிவரும் நீர், ஒருவரது வயலுக்குப் பாய்ந்துகொண்டிருக்கிறது. அந்த வயலுக்கு நீர் பாய்வதை நிறுத்திப் பயிர்களுக்குச் சேதம் விளைவிக்க விரும்புபவர், வாய்க்கால் நீரை அடைத்து வழியை வேறு பக்கமாகத் திருப்பிவிட்டாலே போதுமானது. இப்பொழுது எந்தச் சொத்தும் அழிக்கப்படவில்லை. நீரின் ஓட்டத்தில்தான் மாறுதல் செய்யப்பட்டது. இவ்வாறு, ஒரு சொத்தில் மாறுதலை ஏற்படுத்திப் பிறருக்குக் கேடு விளைக்கலாம்.

### 'சொத்தழித்தல்' என்ற குற்றத்தின் இலக்கணம்

இதுபோன்று, சொத்தை அழிப்பதன்மூலம் பிறருக்குக் கேடு இழைக்கும் செயல்களைக் குற்றங்கள் எனச் சட்டம் விதிக்கின்றது. 'சொத்தழித்தல்' (mischief) என்ற இக் குற்றத்தின் இலக்கணத்தை 425ஆம் பிரிவில் காண்கிறோம்.

பொதுமக்களுக்கோ அல்லது தனிப்பட்ட ஒருவருக்கோ முறையற்ற இழப்பு அல்லது கேடு விளைக்கும் கருத்துடன் (அல்லது விளையலாம் என்பதை அறிந்தும்) (1) ஒரு சொத்தை அழிப்பது, (2) அதன் மதிப்போ, பயனோ குன்றும் வகையில் அல்லது அதை

ஊறுபடுத்தும்வகையில் அச் சொத்தைக் கெடுப்பது, அல்லது அதில் மாறுதல் செய்வது, அல்லது அச் சொத்தின் நிலையை மாற்றி யமைப்பது 'சொத்து அழிப்பு' என்ற குற்றமாகும்.

'Mischief' என்ற ஆங்கிலச் சொல்லிற்குப் பொருள் 'கேடு' 'தீங்கு' என்பதேயாகும். 'Committing mischief' என்ருல், 'கேடு இழைத்தல்' என்று கூறலாம். அது ஆங்கிலச் சொல்லிற்குள்ள மொழிபெயர்ப்பாகவே அமையும்; ஆனல், குற்றத்தின் பொருளை உணர்த்துவதாகாது. 'கேடு இழைத்தல்' என்பது குற்றவாளியின் தீய மனத்தைக் குறிக்கிறது. பிறருக்குக் கேடிழைக்கும் தீய கருத்துக் குற்றவாளிக்கு வேண்டுமென்று இக் குற்றத்திற்கான இலக்கணம் கூறுகிறது. அக் கருத்தைமட்டும் கூறுவது குற்றத்தை முழுதும் உணர்த்துவதில்லை. மேலும், எல்லாவகைக் குற்றங்களுமே பிறருக்குக் கேடு இழைப்பதுதான். திருடுவதும், கையாடலும், காயத்தை விளைப்பதும் பிறருக்குக் கேடு இழைக்கும் செயல்கள்தாம். எனவே, இக் குற்றத்தில் பிறருக்குக் கேடிழைக்கும் கருத்தோடு, குற்றவாளி என்ன செயலைச் செய்கின்ருர் என்பதை நாம் பார்த்தல் வேண்டும். அவர் செய்யும் செயலே இக் குற்றத்தைத் தனிப்படுத்துகிறது.

இக் குற்றத்தில் குற்றவாளி செய்யும் செயல் என்ன?

(1) ஒரு சொத்தை அழிப்பது, அல்லது

(2) சொத்தின் மதிப்போ, பயனே குன்றும் வகையில் அல்லது அச் சொத்தை ஊறுபடுத்தும் வகையில்

(a) அச் சொத்தைக் கெடுப்பது அல்லது அதில் மாறுதலை ஏற்படுத்துவது அல்லது

(b) அச் சொத்தின் நிலையை மாற்றி அமைப்பது.

இந்த வகையான செயல் இல்லையெனில், சொத்தழிப்புக் குற்றம் எழுவதில்லை. இவ்வாறு, சொத்தழிக்கும் செயலே இக் குற்றத்திற்கு அடிப்படையாக இருக்கிறது.

ஆதலால், 'mischief' என்ற சொல்லை மொழிபெயர்த்துக் 'கேடிழைத்தல்' என்று கூருமல், குற்றத்தில் அடங்கும் செயலான சொத்தழிப்பை உணர்த்தும் வகையில் இக் குற்றத்தைச் 'சொத்தழித்தல்' என்று கூறுவதே பொருந்தும். 'அழித்தல்' என்ற சொல்லிற்கு ஒரு பொருளை முழுதுமாக அழித்துவிடுதல் என்பது மட்டும் பொருளன்று; கெடுத்தல், குலைத்தல், உள்ளதை மாற்றி யமைத்தல்—இச் செயல்களும் 'அழித்தல்' என்ற சொல்லிற்குப் பொருளாகும். இக் குற்றத்திற்கான செயலில் ஒரு பொருளைக் கெடுத்-

தலும், உள்ளதை மாற்றியமைத்தலும் அடங்குவதால், 'சொத் தழிப்பு' என்ற தொடர் குற்றத்தின் தன்மையை முழுதும் உணர்த்து வதாக அமைகின்றது. எனவேதான், 'mischief' என்று ஆங்கி லத்தில் கூறப்படும் குற்றத்தைச் 'சொத்தழித்தல்' என்று தமிழில் கூறுகிருேம். ஆங்கில நாட்டில் இக் குற்றத்தைக் 'கேடு சூழும் சொத் தழிப்பு' (malicious injury to property) என்றே குறிக்கின்றனர்.

**அழிக்கப்படும் சொத்து குற்றவாளியின் சொத்தாகவேகூட இருக்கலாம்.**

ஒருவர் தமக்குச் சொந்தமான சொத்தையே அழித்துவிட்டு, அதனுல் பிறருக்குக் கேடு விளைக்கலாம். ஒருவர் கடனாளியாக இருக் கின்ருர். இவருக்குக் கடன் கொடுத்தவர் நீதிமன்றத்தில் வழக் கிட்டு இவருடைய பொருள்களை ஜப்தி செய்ய முயலுகிருர். இந்த நிலையில் கடன்காரர் தம் பொருள்களை அழித்துவிடலாம். தம் சொத்தையே அழித்த கடன்காரரின் நோக்கம், கடன் கொடுத் தவர் இந்தப் பொருள்களை அடைந்துவிடக்கூடாது என்பதுதான். இவ்வாறு, இப் பொருள்கள் அழிக்கப்பட்டால், கடன் கொடுத்த வருக்கு முறையில்லா இழப்பு நேருகிறது. ஏனெனில், கொடுத்த கடனை வரப்பற்ற முடிவதில்லை. இந்த வகையில் ஒருவர் தம் பொருளை அழித்தே பிறருக்கு முறையில்லா நட்டத்தை விளைக்கலாம்.

நாம் நமது மோட்டார் காரை இன்சூர் செய்திருக்கின்ருேம். அதற்கு ஏதாவது சேதம் விளைந்தால், அதனுல் நமக்கு ஏற்படும் நட்டத்தை இன்சூரன்சு கம்பெனியார் கொடுக்கின்றனர். இன் சூரன்சு கம்பெனிக்கு இழப்பு ஏற்படுத்த வேண்டும் என்ற தீய நோக்கத்துடன் நான் வேண்டுமென்றே என் மோட்டார் காரைச் சேதப்படுத்துகிறேன் என்ருல், அது இந்தப் பிரிவின்கீழ்க் குற்ற மாகும். சேதப்படுத்தப்பட்ட கார் என்னுடையதுதான். இருந் தாலும், இதைச் சேதப்படுத்தி இன்சூரன்சு கம்பெனிக்கு இழப்பை ஏற்படுத்துகிறேன். எனவே, சேதப்படுத்தப்படும் பொருள், அச் சேதத்தால் எவருக்கு இழப்பு ஏற்படுகிறதோ அவருக்குச் சொந்த மானதாக இருக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை.

ஒரு பொருள்மீது இருவருக்குக் கூட்டுச் சொத்துரிமை இருக் கலாம். அவர்களில் ஒருவர் அச் சொத்தை அழித்து மற்ருெரு வருக்குக் கேடு விளைக்கலாம். இரண்டு பேர்கள் சேர்ந்து ஒரு குதிரையை வாங்கி வைத்திருக்கின்றனர். அவர்களில் ஒருவர் மற் ருெருவருக்கு இழப்பு ஏற்படுத்தும் நோக்கத்துடன் அந்தக் குதி ரையைச் சுட்டுக் கொன்றுவிடுகிருர் என்ருல், அதுவும் சொத் தழிப்பு என்ற குற்றமாகும்.

தாமே நேரடியாகப் பிறர் பொருளை அழிக்கவேண்டியதில்லை. ஒருவருடைய நிலத்தில் பயிரிடப்பட்டிருக்கிறது. அதை அழிப்ப தற்கென்று மற்றொருவர் ஆடுமாடுகளை அந் நிலத்திற்குள் ஓட்டி விடுகின்றார் எனில், அதுவும் குற்றந்தான்.

**சொத்தின் நிலையில் மாறுதல் ஏற்படுத்தல்**

பயிரிடப்பட்ட ஒரு நிலத்திற்கு வேலி போடப்பட்டிருக்கிறது என வைப்போம். அந்த வேலிக்கதவு மூடப்பட்டிருக்கிறது. அந்தக் கதவை ஒருவர் திறந்துவைக்கிறார் என்றால், என்ன ஆகும்? திறந்த வேலிக்கதவு வழியாக ஆடுமாடுகள் வயலில் நுழைந்து பயிரை மேய்ந்துவிடும். இவ்வாறு, சேதம் விளையலாம் என்பதை அறிந்தும் வேலிக் கதவை ஒருவர் திறந்துவைத்து, அதனால் மாடுகள் வயலில் நுழைந்து பயிர்கள் அழிக்கப்பட்டால், அது குற்றமாகும். வயலின் வேலிக்கதவைத் திறந்தது அச் சொத்தின் நிலையில் மாறுதலை ஏற்படுத்திய செயல். அச் செயலின் பயனாக பயிர்களுக்குச் சேதம் விளையலாம் என்பதை அவர் அறிகின்றார். இவ்வாறு அறிந்தும் வேண்டுமென்றே சேதம் விளைவிக்கத்தக்க செயலைச் செய்வது குற்றமேயாகும்.

ஒருவர் பிறருடைய கால்நடைகளுக்கு நஞ்சு கொடுத்துக் கொல்லுதல் சொத்தழிப்பாகும். ஒருவர் மாட்டின் காலை மற்றொருவர் ஒடித்துவிடுவதும் குற்றமாகும்.

**இக் குற்றத்திற்கு இலக்காவன பருப்பொருள்களே.**

பொருள்களை, பருப்பொருள்கள் (corporeal property), நுண் பொருள்கள் (incorporeal property) என இருவகையாகப் பிரிக் கின்றோம். 'சொத்தழிப்பு' என்ற இக் குற்றத்திற்கு இலக்காகும் பொருள்கள் எல்லாம் பருப்பொருள்களே ஆகும். வீடு, நிலம், பணம், நகை, பயிர்போன்ற பருப்பொருள்களை அழிப்பதையே இக் குற்றத்தில் குறிப்பிடுகிறோம். அசைபொருள் அசையாப்பொருள் இரு வகைப் பொருள்களும் இக் குற்றச் செயல்களுக்கு இலக்காகலாம்.

சொத்தழிப்புக் குற்றச் செயல்களின் தன்மைக்கும் விளைவு களுக்கும் தக்கவாறும், அழிக்கப்பட்ட பொருள்களின் தன்மைக்குத் தக்கவாறும் தண்டனையின் அளவு மாறுகின்றது.

பொதுவாகச் சொத்தழிப்புக் குற்றத்திற்கான தண்டனை, மூன்று யாதகாலச் சிறை, அபராதம் என்பதாகும் (426ஆம் பிரிவு).

ஐம்பது ரூபாய் மதிப்பிற்கு அதிகமாக நட்டம் விளையும் வகையில் சொத்தழிப்புச் செய்தால், இரண்டாண்டுக் காலம்வரை சிறை, அபராதம் (427ஆம் பிரிவு).

**விலங்குகளை அழித்தல்**

விலங்குகளைக் கொல்லுதல், அவைகளுக்கு நஞ்சிடுதல், அவைகளின் உறுப்புகளைக் குலைத்தல் இவ்வாறு சொத்தழிப்புச் செய்தால், இரண்டாண்டுக் காலம் சிறையும் அபராதமும் உண்டு (428ஆம் பிரிவு). அந்த விலங்குகள் யானை, ஒட்டகை, குதிரை, எருது, காளை, பசு போன்றவைகளாகவும், ஐம்பது ரூபாய்க்கு அதிகமான மதிப்புள்ள விலங்குகளாகவும் இருந்தால், குற்றவாளிக்கு ஐந்தாண்டுக் காலம்வரை சிறை, அபராதம் உண்டு (429ஆம் பிரிவு).

விவசாயத்திற்கும், மக்கள் பருகுவதற்கும் நீர் கிடைப்பதைக் குறைக்கும் வகையிலோ,

பொதுச்சாலை, பாலம், நாவாய்கள் செல்லும் நதிகள், கால்வாய்கள் இவற்றை அடைக்கும் அல்லது இவற்றில் ஆபத்தை விளைக்கும் வகையிலோ,

பொதுச்சாக்கடையை அடைத்துக் கழிவுநீரைத் தேங்கி நிற்கச் செய்யும் வகையிலோ,

சொத்தழிப்புச் செய்தால், அதற்கு ஐந்தாண்டுக் காலம்வரை சிறை, அபராதம் தண்டனையாக விதிக்கலாம் (430, 431, 432ஆம் பிரிவுகள்).

கலங்கரை விளக்கங்கள் (Light houses), கடல்மீது செல்வோர்களுக்கு வழிகாட்டி அமையும் கடல் மிதப்புக் குறிகள் (buoys and sea marks) இவற்றை அழித்தல், இடமாற்றி அமைத்தல், அசைத்தல் செய்து சொத்தழிப்புக் குற்றமிழைப்போருக்கு ஏழாண்டுக்காலம் வரை சிறை, அபராதம் உண்டு (433ஆம் பிரிவு). இச் செயல்களால் விளையும் கேடு அதிகமாதலால் தண்டனையும் அதிகமாகிறது.

பொது ஊழியர்களால் குறிக்கப்பட்ட நிலவரைக் குறிகளை (land marks—மைல்கற்கள், எல்லைக் கற்கள் போன்றவை) அழித்தோ, அசைத்தோ சொத்தழித்தல் குற்றத்திற்கு ஒரு வருட காலம் சிறை, அபராதம் (434ஆம் பிரிவு). உண்டு.

## 12. தீயிட்டுச் சொத்தழித்தல்

(Mischief by fire)

தீயிட்டு அல்லது வெடிமருந்து வைத்து வழிபாட்டிற்கோ, வசிப் பதற்கோ, பண்டங்களைச் சேமிப்பதற்கோ உள்ள கட்டடத்தை அழிப்பது கொடும் குற்றமாகும். இதற்கு ஆயுட்காலச் சிறைத் தண்டனைகூட விதிக்கப்படலாம் (436ஆம் பிரிவு).

பத்து ரூபாய்க்கு அதிகமான மதிப்புள்ள ஒரு விவசாயப் பொருளையோ, நூறு ரூபாய்க்கு அதிகமான மதிப்புள்ள இதர பொருள்களையோ தீயிட்டு அல்லது வெடிவைத்து அழித்தால் அதற் கும் ஏழாண்டு காலம்வரை சிறைத் தண்டனை உண்டு.

பகைவரின் வைக்கோல் போரில் எவருக்கும் தெரியாமல் எளிதிலே தீ வைக்கின்றனர் கொடியோர்கள். பச்சிளங் குழவி களுடன் தூங்கிக்கொண்டிருப்பவர்களின் குடிசைகளுக்கு நள் ளிரவில் தீவைக்கும் நாசக்காரர்கள் நம்மிடையே இருக்கின்றனர். பனை, தென்னை ஓலைபோன்ற எளிதில் எரியும் பொருள்களால் வேயப்பட்ட கூரைகள்கொண்ட குடிசைகளே இன்றும் பெரும் பாலோரின் வாழுமிடங்களாக வகைசெய்து நிற்கின்றன. இக் குடிசைகளைத் தீ வைத்து அழிப்பது எளிது; இதனால் விளையும் துன்பம் கொடிது. தீ வைத்தவர்களைக் கண்டுபிடிப்பது அரிது. எனவேதான், தீயிட்டுச் சொத்தழித்தலைக் கொடுங்குற்றமெனச் சட்டம் விதிக்கிறது, கடுந் தண்டனையும் அளிக்கிறது.

தீயிட்டோ, வெடி வைத்தோ இருபது டன் எடைக்குஅதிகமான கப்பல்களையோ, கலன்களையோ அழிப்பதும் அல்லது பயனற்றவை யாக்குவதும் கொடுங்குற்றமாகும். அதற்கும் ஆயுட்காலச் சிறைத் தண்டனை உண்டு (438ஆம் பிரிவு).

இவ்வாறு, சொத்தழித்துக் கேடிழைக்கும் செயல்களைச் சட்டம் குற்றங்களென விதித்து, அவற்றைச் செய்வோரைக் கடுமையாகத் தண்டிக்கின்றது.

# 13. குற்றங் கருதி அத்துமீறுதல்
## (Criminal Trespass)

அத்துமீறுதல்—அத்துமீறுதல் நேரடி உடைமைக்கு எதிரான செயல்—அத்துமீறிப் புகுதல் எப்பொழுது குற்றமாகிறது—சட்ட முறை யாகப் புகுந்தவர் முறையின்றி இருத்தல்—(அத்துமீறி) வீடு புகுதல்—புகுதல் என்பதன் பொருள்—ஒளிந்து வீடு புகுதல்—வலிந்து வீடு புகுதல்.

இதுவரை திருட்டு, அச்சுறுத்தி அபகரித்தல், கொள்ளை, கூட்டுக்கொள்ளை, கையாடல், நம்பிக்கை மோசம், கள்ளப் பொருளைப் பெறுதல், ஏமாற்றுதல் முதலிய குற்றங்களைப்பற்றி ஆராய்ந்தோம். இவை அனைத்தும் அசைபொருள் குறித்த குற்றங்கள். சொத் தழித்தல் என்ற குற்றம் அசைபொருள், அசையாப் பொருள் என்ற இருவகைப் பொருள்கள் குறித்தும் செய்யப்படலாம். இனி, அசையாப் பொருள் குறித்த குற்றங்கள்பற்றிக் காண்போம்.

வீடு, நிலம் இவை ஒருவருடைய அசையாப் பொருள்கள். இச் சொத்துகளை உடையவர்கள் பிறரது குறுக்கீடு ஏதும் இன்றி இவற்றை அனுபவிக்கும் உரிமையுள்ளவர்கள். தமது நகையையோ, பணத்தையோ எவ்வாறு தம்முடைய தனி உடைமையில் வைத்து ஒருவர் அனுபவிக்கின்றாரோ, அவ்வாறே வீட்டையும் நிலத்தையும் ஒருவர் தம்முடைய தனி உடைமையில் வைத்துத் துய்க்கும் உரிமை அவருக்கு உண்டு. ஒருவர் வசம் இருக்கும் அசைபொருளை அவர் உடைமையில் இருந்து அகற்றும் வகையில் அசைபொருள் குறித்த குற்றங்கள் இழைக்கப்படுகின்றன. உடையவர்களின் கையிலிருந்து அசைபொருள்களைப் பற்றிக்கொள்ளலாம்; எடுத்துக்கொள்ளலாம், அதற்கு உரியவர் காணாத முறையில் மறைத்து வைத்துவிடலாம். ஆனால், அசையாப் பொருள்களான வீட்டையும் நிலத்தையும் ஒருவர் உடைமையிலிருந்து பெயர்த்தெடுத்துக்கொண்டு மற்றவர் மறைந்தோடுவதற்கில்லை. பொருளை உடையவரின் உடைமை எவ்வாறு பாதிக்கப்படுகின்றது?

**அத்து மீறுதல் (Trespass)**

ஒருவர் நிலத்திலோ, வீட்டிலோ அச் சொத்திற்குள்ள எல்லை வகுக்கப்பட்டிருக்கிறது. அந்த எல்லையைத் தாண்டிவந்துதான் ஒரு சொத்தை ஆக்கிரமிப்புச் செய்ய முடிகிறது. இவ்வாறு, சொத்தின் எல்லை தாண்டி வருவதை 'அத்துமீறுதல்' என்று கூறு கிறோம். ஒரு சொத்தில் அத்துமீறி நுழைவது அச் சொத்தை உடை யவரின் உடைமையைப் பாதிக்கும் செயலாகிறது.

ஒரு நிலத்தின்மீது அல்லது வீட்டின்மீது ஒருவருக்கு உரிமை உள்ளதா, மற்றவருக்கு உரிமையுள்ளதா என்று பூசல் எழுந்து, அதனால் அத்துமீறுதல் ஏற்பட்டால் அது உரிமைபற்றிய வழக்காகி (civil case) விடுகிறது. உரிமை நீதிமன்றங்களில்தான் அத்தகைய அத்துமீறுதல்பற்றி வழக்குகள் ஆராயப்படுகின்றன. எனவே, எல்லாவித அத்துமீறுதல்களையும் குற்றங்களெனக் கொள்ளுதற் கில்லை.

**அத்துமீறுதல் நேரடி உடைமைக்கு எதிரான செயல்**

இந்த இடத்தில் உடைமை என்று நாம் குறிப்பது நேரடி உடைமையையே (immediate possession) ஆகும். எவர் ஒரு சொத்தை நேரடியாக, பிறர் வாயிலாக இன்றி, அனுபவித்துக் கொண்டு இருக்கின்றாரோ அவரே நேரடி உடைமையுள்ளவர். ஒரு வீட்டின் சொந்தக்காரர் (owner) ஒருவராக இருக் கலாம். அதை அவர் வாடகைக்குவிட்டு வாடகைதாரர் வீட்டில் குடியிருந்தால், அந்த வீடு வாடகைதாரரின் நேரடி உடைமையில் இருக்கிறது. நன்செய் நிலத்தின் சொந்தக்காரர் அதைக் குத்த கைக்கு விட்டு இருந்தால் குத்தகைதாரரின் நேரடி உடைமையில் அந்த நிலம் இருக்கிறது. இப்பொழுது சொந்தக்காரருக்கு வீட்டின் மீதும் நிலத்தின்மீதும் உள்ள உடைமை நேரடியற்ற (mediate possession) தாகும்.

குற்றவியல் சட்டம் அக்கறைகொள்வது நேரடி உடைமையைப் பற்றித்தான். வீட்டில் குடியிருப்பவருக்கும், நிலத்தைப் பயிரிடும் குத்தகைதாரருக்கும் உள்ளதுபோன்ற நேரடி உடைமையையே குற்றவியல் சட்டம் பாதுகாக்கின்றது. சில வேளைகளில், ஒரு சொத்தின் நேரடி உடைமையில் இருப்பவருக்கு எவ்வித உரிமையும் இல்லாமலும் இருக்கலாம். உரிமை ஏதுமின்றி ஒருவர் நிலத்தை மற்றொருவர் நீண்டநாள் ஆக்கிரமித்துக்கொண்டிருக்கலாம். அந்த ஆக்கிரமிப்பாளரின் உடைமையும் நேரடி உடைமையேயாகும். இந்த விதமாக ஒருவரது நேரடி உடைமையில் உள்ள இடத்தின் எல்லை தாண்டி மற்றொருவர் முறையின்றிச் செல்லுவதை அத்துமீறிப்

புகுதல் (trespass by wrongful entry) என்பார்கள். அத்துமீறிப் புகுதல் சட்டவிரோதமான செயல்.

**அத்துமீறிப் புகுதல் எப்பொழுது குற்றமாகிறது?**

அத்துமீறிப் புகுதல் என்ற சட்டவிரோதமான செயல் சில சூழ்நிலைகளில் குற்றமாகிறது.

(1) ஒரு குற்றம் செய்யக் கருதியோ, அல்லது

(2) ஒரு சொத்தின் உடைமையில் இருப்பவரை மிரட்டுவதற்கு, அவமானப்படுத்துவதற்கு, அவருக்கு எரிச்சலூட்டுவதற்கு என்றோ,

அச் சொத்தில் அத்துமீறி நுழைதல், அத்துமீறிப் புகுதல் என்ற குற்றம் ஆகிறது.

மேலும், ஒரு சொத்திற்குள் முறையாகச் சென்ற பிறகு, அச் சொத்தை உடையவரை மிரட்டுவதற்கோ, அவமானப்படுத்துவதற்கோ, அவருக்கு எரிச்சலூட்டுவதற்கோ கருதிச் சட்ட விரோதமாக அச் சொத்திற்குள் இருத்தலும் 'அத்துமீறிப் புகுதலே' ஆகும்.

அத்துமீறிப் புகுதல் என்ற குற்றத்தின் கூறுகள் 441ஆம் பிரிவில் மேலே கண்டவாறு கூறப்படுகின்றன.

ஒருவர் வீட்டிற்குள் மற்றொருவர் அத்துமீறி நுழைந்துவிட்டார் எனில், உடனே அவர் குற்றவாளியாவதில்லை. குற்ற மனத்துடன் அவ்வாறு நுழைந்தால்தான் அது குற்றமாகிறது. அந்தக் குற்ற மனம் என்ன? அத்துமீறி நுழைபவரின் நோக்கம் என்ன என்பதை நாம் கண்டே அவர் குற்ற மனத்துடன் நுழைந்தாரா அல்லது குற்ற மனமின்றி நுழைந்தாரா என்பதைக் காணவேண்டும்.

ஒருவர் உடைமையில் இருக்கும் ஒரு வீட்டில் உள்ள பொருள்களைத் திருடவேண்டும் என்ற கருத்துடன் அந்த வீட்டிற்குள் மற்றொருவர் புகுதல் குற்றமாகும். ஒரு வீட்டில் உள்ளவர்களை மிரட்டுவதற்கு என்றோ, அவமானப்படுத்துவதற்கென்றோ அந்த வீட்டிற்குள் போவது 'அத்துமீறிப் புகுதல்' ஆகும்.

நாம் நம்முடைய வீட்டில் இருக்கிறோம். நம்மைக் காயப்படுத்தும் கருத்துடன் ஒருவர் நம் வீட்டிற்குள் வந்தால், அவ்வாறு வீட்டிற்குள் நுழைந்த செயல் குற்றமாகிறது. நம்மைக் காயப்படுத்த வேண்டுமென்ற கருத்து அவருக்கு இருந்ததா என்பதைச் சூழ்நிலைகளில் இருந்து அறிகிறோம்.

ஒரு வீட்டிற்குள் நுழைந்து ஒரு பிச்சைக்காரன் யாசகம் கேட்கிறான். வீட்டுக்காரர் பிச்சை போடவில்லை. உடனே பிச்சைக்காரன்

வீட்டுக்காரரை அவமானப்படுத்தும்வகையில் பேசுகிருன். இப்பொழுது அந்தப் பிச்சைக்காரன்மீது குற்றம் சாட்டுவதற்கில்லை. ஏனெனில், அவன் வீட்டிற்குள் நுழைந்தது பிச்சை கேட்கவேண்டுமென்ற கருத்தோடுதான். நுழையும்பொழுது வீட்டுக்காரரைப் பழிக்க வேண்டும் என்ற கருத்து அவனுக்கு இருந்திருக்காது. எனவே, பிச்சைக்காரன் வீடு புகுந்ததைக் குற்றம் எனக் கொள்வது தகாது. ஆதலால், ஒருவர் சொத்தில் நுழையும்பொழுதே, நுழைந்தபின் மேலே குறித்த செயல்களில் ஒன்றைச் செய்யவேண்டும் என்ற கருத்துடன், அவர் நுழைந்தால்தான் அது குற்றமாகிறது.

**சட்டமுறையாகப் புகுந்தவர், முறையின்றி இருத்தல்**

சில வேளைகளில் ஒருவர் சொத்திற்குள் நுழையும்பொழுது எந்த விதக் குற்ற எண்ணமும் இன்றி நுழையலாம். ஆனால், சட்டமுறையாக நுழைந்த ஒருவர் அச் சொத்தைவிட்டு வெளியேற மறுத்து அங்கேயே இருந்தால் என்ன செய்வது? சொத்திற்குடையவரை மிரட்டவோ, அவமானப்படுத்தவோ அவருக்கு எரிச்சலூட்டவோ வேண்டும் என்ற கருத்துடன் சொத்தைவிட்டு வெளியேருமல் அவர் இருந்தார் எனில், அதுவும் 'அத்துமீறிப் புகுதல்' என்ற குற்றமாகிறது.

ஒரு படக்காட்சி நடக்கும் கொட்டகைக்குள் அனுமதிச் சீட்டுப் பெற்றுச் செல்லுகிரேம். அந்தப் படக்காட்சி முடிந்தபின் நாம் கொட்டகையைவிட்டு வெளியேற வேண்டும். அவ்வாறு வெளியேற மறுத்துக் கொட்டகைக்குள்ளேயே ஒருவர் இருந்தால் அது குற்றமாகும். அவ்வாறு இருப்பது முறையற்ற செயல். அச் செயலால் கொட்டகையை உடையவருக்கு எரிச்சல் (annoyance) உண்டாகத்தான் செய்யும். எனவே, அது குற்றமாகிறது.

சந்தேகம் தோன்றும் நிலையில் ஒருவர் நம் வீட்டிற்குள் நுழைகிருர். நாம் அவரை வெளியேறச் சொல்லுகிரேம். ஆனால், அவர் வெளியேற மறுத்து வீட்டுக்குள்ளேயே இருந்தாரெனில், அது குற்றமாகும்.

இவ்வாறு, ஒரு சொத்தின் உடைமையில் உள்ளவரை மிரட்டுவதற்கென்ரே, அவமானப்படுத்துவதற்கென்ரே அல்லது அவருக்கு எரிச்சல் ஏற்படுத்துவதற்கென்ரே, அச் சொத்தில் ஒருவர் புகுவது அல்லது முறையாகப் புகுந்தபின் முறையின்றி அச் சொத்தில் இருப்பது, இது, அத்துமீறிப் புகுதல் என்ற குற்றமாகிறது.

இக் குற்றத்திற்கான தண்டனை மூன்று மாத காலம்வரை சிறை, அபராதம் ஆகும். (447ஆம் பிரிவு).

**அத்துமீறி வீடு புகுதல் (House trespass)**

மக்கள் வசிப்பதற்குப் பயன்படுத்தப்படும் கட்டடம், கூடாரம், நாவாய், வழிபாட்டு நிலையங்கள், பண்டகசாலை, இந்த வகையான கட்டடங்களுக்குள் ஒருவர் 'அத்துமீறிப் புகுதலை' '(அத்துமீறி) வீடு புகுதல்' என்கிறோம் *(442ஆம் பிரிவு).*

'அத்துமீறி வீடு புகுதல்' என்று கூறுவதை 'வீடு புகுதல்' என்றே கூறலாம்.

ஒருவருடைய வீடு அவருக்குள்ள பாதுகாப்புக் கோட்டை (castle) போன்றது. அதைப் பிறருடைய முறையற்ற நுழைவுகளில் இருந்து பாதுகாப்பது முக்கியமாகும். எனவே, குடியிருக்கும் வீடு, பண்டகசாலை, தொழுகையிடம் இந்தக் கட்டடங்களுக்குள் முறையின்றிப் புகுவோருக்குச் சட்டம் அதிக தண்டனை அளிக்கின்றது.

'(அத்துமீறி) வீடு புகுதல்' குற்றத்திற்கு ஓர் ஆண்டுக் காலம் வரை சிறை, அபராதம் உண்டு *(448ஆம் பிரிவு).*

**'புகுதல்' என்பதன் பொருள்**

வீட்டிற்குள் அல்லது கட்டடத்திற்குள் நுழைதல் என்றால் ஒருவர் அந்தக் கட்டடத்திற்குள் நுழைந்து வந்திருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. குற்றவாளியின் உடலுறுப்புகளில் எந்தப் பகுதியாவது அந்தக் கட்டடத்திற்குள் புகுந்தாலும், அது குற்றவாளி கட்டடத்திற்குள் நுழைந்ததற்கொப்பாகும்.

ஒரு வீட்டின் சன்னல் வழியாக ஒருவர் தம் கையை வீட்டிற்குள் விடுகின்றார். இது அவரே வீட்டிற்குள் நுழைந்ததுபோன்ற செயல் என்று சட்டம் கொள்ளுகிறது. கையை விட்ட செயலும் 'அத்துமீறி வீடு புகுதல்' என்ற குற்றமாகும்.

ஒரு வீட்டில் கன்னம் வைத்து நுழைபவன் தன் தலையைக் கன்னவாயிலின் வழியாக நுழைக்கின்றான் எனில், தலையை நுழைத்த செயலே குற்றமாகிவிடுகின்றது.

முறையான காரியத்திற்கென ஒருவர் வீட்டிற்குள் புகுதல் குற்றமாவது இல்லை. கோர்ட்டு உத்தரவைக் கொடுப்பதற்கென கோர்ட்டின் அதிகாரி ஒருவர் வீட்டிற்குள் புகுந்து கொடுக்கிறார். உத்தரவைப் பெறுபவருக்கு உத்தரவைப் பார்த்ததும் மன எரிச்சல் (annoyance) உண்டாகலாம். ஆயினும், கோர்ட்டு அதிகாரி வீட்டிற்குள் நுழைந்த செயல் குற்றமாகாது. ஏனெனில், அவர் குற்றம் இழைக்கும் நோக்கத்துடன் வீட்டிற்குள் நுழையவில்லை.

மரண தண்டனைக்குரிய குற்றம் இழைப்பதற்கென்று அத்துமீறி வீடு புகுந்தால் அதற்கு ஆயுட்காலச் சிறைத் தண்டனையாகும் (449ஆம் பிரிவு).

ஒருவரைக் கொலை செய்யக் கருதி (அத்துமீறி) வீடு புகுதல் 449ஆம் பிரிவின் கீழ்க் குற்றமாகும்.

ஆயுட்காலச் சிறைத் தண்டனைக்குரிய குற்றங்கள் செய்வதற் கென்று அத்துமீறி வீடு புகுந்தால் அதற்குப் பத்தாண்டுக் காலம் வரை சிறைத் தண்டனை (450ஆம் பிரிவு).

திருடும் கருத்துடன் இக் குற்றம் செய்யப்பட்டால் ஏழாண்டுக் காலம்வரை சிறைத் தண்டனை (451ஆம் பிரிவு).

ஒருவருக்குக் காயம் விளைவிப்பது, தாக்க முனைவது (assault), முறையின்றித் தடை செய்வது இக் குற்றங்களைச் செய்வதற்கென்று வீடு புகுந்தால், அதற்கும் ஏழாண்டுக் காலம்வரை சிறைத் தண்டனை விதிக்கப்படலாம் (452ஆம் பிரிவு).

**ஒளிந்து வீடு புகுதல்** (Lurking house trespass)

பொருள்களைத் திருடுவதற்கென்று பிறர் வீட்டிற்குள் நுழை பவன் பொதுவாக மறைந்துதான் புகுவான். வீட்டில் உள்ள வர்கள் பார்த்துவிடாதவண்ணம் ஒளிந்து அத்துமீறி 'வீடு புகுதலை' 'ஒளிந்து வீடு புகுதல்' (Lurking house trespass) என்று சட்டம் குறிக் கின்றது. நாம் அறியும்படி அத்துமீறி வீடு புகுவோர்களிடமிருந்து நம்மைப் பாதுகாத்துக் கொள்வதற்கு வாய்ப்பு இருக்கிறது. ஆனால், நமக்குத் தெரியாமல் ஒளிந்து மறைவாக வீடு புகுவோர்கள் நமக்கு எளிதில் கேடுகளை விளைக்க முடியும். ஏனெனில், இவர்கள் நம் வீட்டிற்குள் நுழைவது நமக்குத் தெரிவதில்லை. எனவே, 'ஒளிந்து வீடு புகுதல்' குற்றத்திற்கு அதிக தண்டனை அளிக்கப்படுகிறது.

இரவு நேரத்தில் ஒளிந்து வீடு புகும் குற்றத்திற்கு இன்னும் அதிக தண்டனை உண்டு.

**வலிந்து வீடு புகுதல்** (House breaking)

1. ஒருவரைத் தாக்கியோ, தாக்க முனைந்தோ, தாக்கப் போவதாக அச்சுறுத்தியோ 'வீடு புகுதல்';

2. வீடு புகுதலுக்கென்று, தானோ, தனக்கு உடந்தையாக இருப்பவரோ ஏற்படுத்திய ஊடுவழியைப் பயன்படுத்தி 'வீடு புகுதல்';

3. சுவரின்மீது ஏறியோ, பாதையாக இல்லாத ஊடு வழியைப் பயன்படுத்தியோ 'வீடு புகுதல்';

4. வீட்டின் பூட்டைத் திறந்து] 'வீடு புகுதல்';

5. தாழ்ப்பாளைத் திறந்து 'வீடு புகுதல்';

6. பாதையாகப் பயன்படுத்தப்படாத ஒன்றைத் திறந்து கொண்டு 'வீடு புகுதல்'.

இந்த ஆறு வகையில் எந்த வகையிலாவது 'வீடு புகுதல்', 'வலிந்து வீடு புகுதல், (House breaking) என்ற குற்றமாகும்.

ஒரு வீட்டிற்குள் ஒரு குற்றத்தைச் செய்வதற்கென்று வந்தவர், அல்லது குற்றத்தைச் செய்தவர், மேலே கூறப்பட்ட ஆறு வகையான வழிகளில் ஒன்றைப் பயன்படுத்தி அந்த வீட்டிலிருந்து வெளியேறினாலும் குற்றமேயாகும். அதுவும் 'வலிந்து வீடு புகுதல்' என்ற குற்றமாகும்.

எனவே, மேற்கண்ட ஆறு வழிகளில் ஒன்றைக் கையாண்டு குற்றங் கருதி வீட்டிற்குள் புகுந்தாலும் சரி, குற்றம் செய்யக் கருதி யவர் வீட்டிலிருந்து வெளிவந்தாலும் சரி, அது 'வலிந்து வீடு புகுதல்' என்ற குற்றமாகிறது (445ஆம் பிரிவு).

ஒருவர் வீட்டின் சுவரில் கன்னமிட்டுத் துவாரத்தை ஏற்படுத்தி அதன் வழி குற்றவாளி வீட்டிற்குள் நுழையலாம். அந்தத் துவாரத்தின் வழி குற்றவாளி கையைமட்டும் நுழைத்தாலே இக் குற்றம் நிறைவேறிவிடுகிறது.

வீட்டின் கம்பியில்லாத சன்னல் வழி வீட்டிற்குள் நுழைவது குற்றம்.

அடைத்திருந்த கதவின் தாழ்ப்பாளைத் திறந்து வீட்டிற்குள் நுழைவது குற்றம்.

பூட்டியிருந்த கதவைச் சாவிபோட்டுத் திறந்து வீட்டிற்குள் நுழைவது குற்றம்.

வீட்டில் வசிப்பவர் வீட்டிற்கு வெளியே நின்றுகொண்டிருக் கிறார். அவரைத் தள்ளிவிட்டு வீட்டிற்குள் நுழைவதும், அடிக்கப் போவதாக அச்சுறுத்தி அவரை விலகச் செய்துவிட்டு வீட்டிற்குள் நுழைவதும் குற்றம்.

வீட்டில் நுழைவது என்றால், வீட்டில் எந்தப் பகுதிக்குள் நுழைந்தாலும் போதுமானது.

நம் வீட்டில் ஒருவரை படுத்துக்கொள்ள அனுமதிக்கிறோம். அவர் நம் வீட்டிலிருந்த பொருளைத் திருடிக்கொண்டு வீட்டின் சன்னல் வழியாகவோ, சுவரேறிக் குதித்தோ வீட்டிலிருந்து வெளி யேறினார் என்றால், அதுவும் 'வலிந்து வீடு புகுதல்' என்ற குற்ற

மாகிறது. ஏனெனில், அவர் வீட்டிற்குள் வந்ததும், இருந்ததும் நம் அனுமதியுடன்தான் என்றாலும், அவர் நம் பொருளைத் திருடியது ஒரு குற்றம். அக் குற்றத்தைச் செய்தவர் வீட்டைவிட்டு, மேலே கூறப்பட்ட ஆறு வழிகளில் ஒன்றைக் கையாண்டு, வெளியேறிச் செல்லுவதும் குற்றமாகிவிடுகிறது.

இந்தப் பிரிவில் 'புகுதல்' என்ற சொல் உட்புகுவதைமட்டும் குறிப்பதன்று; வெளி வருதலையும் குறித்து நிற்கின்றது என்பதை நாம் நினைவிற் கொள்ளவேண்டும்.

மேலும், வீடு என்ற சொல் குடியிருக்கும் கட்டடம், நாவாய், கூடாரம், வழிபாட்டு இடம், பண்டகசாலை இவ்வனைத்தையும் குறிப்பதாகும்.

இந்த வகையில், 'வலிந்து வீடு புகுதல்' என்ற குற்றத்தைச் சட்டம் விரிவாக விளக்குகிறது.

ஒளிந்து வீடு புகுதலுக்கும், வலிந்து வீடு புகுதலுக்கும் உள்ள தண்டனை இரண்டு ஆண்டுக் காலம்வரை சிறை, அபராதமும் ஆகும் (453ஆம் பிரிவு). திருடும் கருத்துடன் இவ்வாறு வீடு புகுதலுக்குப் பத்தாண்டுக் காலம்வரை சிறைத்தண்டனை உண்டு (454ஆம் பிரிவு).

இரவு நேரத்தில் 'ஒளிந்து வீடு புகுதல்', 'வலிந்து வீடு புகுதல்' குற்றங்களுக்கு மூன்றாண்டுக் காலம்வரை சிறைத் தண்டனை, அபராதம் உண்டு. திருடும் கருத்துடன் இரவு நேரத்தில் இவ்வாறு ஒளிந்து அல்லது வலிந்து வீடு புகுதலுக்குப் பதினான்கு ஆண்டுக் காலம்வரை சிறைத் தண்டனை விதிக்கலாம் (456, 457ஆம் பிரிவுகள்).

'ஒளிந்து வீடு புகுதல்', 'வலிந்து வீடு புகுதல்' குற்றங்களைச் செய்யும்பொழுதும் பிறருக்குக் கொடுங்காயத்தை விளைத்தாலோ மரணம், கொடுங்காயம் இவற்றை விளைக்க முயன்றாலோ, அதற்கு ஆயுட்காலச் சிறைத் தண்டனை விதிக்கப்படலாம் (459ஆம் பிரிவு).

இரவு நேரத்தில் இரண்டு அல்லது அதற்கு அதிகமான பேர்கள் ஒன்று சேர்ந்து கூட்டாக 'ஒளிந்து வீடு புகுதல்', 'வலிந்து வீடு புகுதல்' இக் குற்றங்களைச் செய்து, அவர்களில் ஒருவர்மட்டும் பிறருக்கு மரணத்தையோ, கொடுங்காயத்தையோ விளைத்தாலும், விளைக்க முயற்சி செய்தாலும், வீடு புகும் செயலில் கூட்டாகப் பங்கு கொண்ட மற்ற ஒவ்வொருவருக்கும் ஆயுட்காலச் சிறைத் தண்டனை விதிக்கப்படலாம் (460ஆம் பிரிவு).

குற்றங் கருதி அத்துமீறுதலைக் குற்றம் என விதித்து, அத்து மீறிப் புகும் விதம், புகுங்காலம், கருதிய குற்றம் இவற்றிற்குத் தக்கபடி அக் குற்றத்திற்கான தண்டனையை அதிகரிக்கின்றது சட்டம். அத்துமீறிப் புகுதல், (அத்துமீறி) வீடு புகுதல், ஒளிந்து வீடு புகுதல், வலிந்து வீடு புகுதல், இரவில் ஒளிந்து வீடு புகுதல், இரவில் வலிந்து வீடு புகுதல், திருடும் கருத்துடன் இரவில் ஒளிந்து வீடு புகுதல் அல்லது வலிந்து வீடு புகுதல், கொலை செய்வதற் கென்றோ, கொடுங்காயம் விளைப்பதற்கென்றோ, இரவு நேரத்தில் ஒளிந்து வீடு புகுதல் அல்லது வலிந்து வீடு புகுதல் இவ்வாறுக அத்துமீறுதல் குற்றத்தை வகை செய்து, குற்றங்களுக்குத் தக்க தண்டனையைச் சட்டம் விதிக்கிறது.

# 14. பெட்டகத்தை நேர்மையின்றித் திறத்தல்

ஒரு பெட்டகம் இருக்கிறது. அதனுள் ஏதேனும் பொருள் இருக்கலாம் என்று ஒருவர் நம்புகிறார். அந்தப் பொருளை எடுத்துக்கொள்ளவேண்டும் என்ற கருத்துடன் நேர்மையின்றி அந்தப் பெட்டகத்தின் பூட்டை உடைத்துத் திறப்பது அல்லது அதன் மூடியை அவிழ்த்துத் திறப்பது குற்றமாகும். சொத்தழிப்புச் செய்தல் வேண்டும் என்ற கருத்துடன் அந்தப் பெட்டகத்தையோ அல்லது பாத்திரத்தையோ மேற்கூறியவாறு திறப்பதும் குற்றம். அதற்கு இரண்டு ஆண்டுக் காலம்வரை சிறைத் தண்டனை உண்டு.

அந்தப் பெட்டகத்திற்குள் உண்மையில் எவ்விதப் பொருளும் இல்லாதிருக்கலாம். எனினும் அது திறக்கப்படுவது குற்றமேயாகும் (461ஆம் பிரிவு).

மேலே கூறியபடி திறக்கப்படும் பெட்டகம் அல்லது பாத்திரம் திறந்தவரிடம் ஒப்படைக்கப்பட்டதாக இருந்து, அதைத் திறப்பதற்கான அதிகாரமும் அவருக்கு இல்லாதிருந்தால், அதைத் திறக்கும் குற்றத்திற்கு மூன்றாண்டுக் காலம்வரை சிறைத் தண்டனை உண்டு (462ஆம் பிரிவு).

இரயில் வண்டிகள், லாரிகள் வழியாக நமது பொருள்களை ஓரிடத்திலிருந்து வேறு இடத்திற்கு அனுப்புகிறோம். விலையுயர்ந்த பொருள்களைப் பெட்டியில் வைத்துப் பூட்டி, அப்பெட்டியை அனுப்புகிறோம். தபால் இலாகாவின் வழியாகவும் இவ்வாறு சிறு பொருள்கள் அனுப்பப்படுகின்றன. இந்தப் பெட்டிகளை இடையில் உள்ளவர்கள் உடைத்துப் பொருள்களைத் திருடுவதானால் சாமான்களின் போக்குவரத்து முறை பெரிதும் பாதிக்கப்படும். இரயில் நிலையங்கள் போன்ற இடங்களில் நமது பெட்டிகளை அதற்குரிய அதிகாரிகளிடம் நம்பிக் கொடுத்துவிட்டுச் செல்லுகிறோம். இவ்வாறு தம்மிடம் ஒப்படைக்கப்பட்ட பெட்டிகளை அவர்கள் மோசக் கருத்துடன் திறப்பது என்றால், அது பிரயாணிகளின் நலனைப் பெரிதும் பாதிப்பதாகும். பல சூழ்நிலைகளில் நம் பொருளைக் கொண்டுள்ள பெட்டகத்தை நம்பிப் பிறரிடம் கொடுக்கவேண்டியது ஏற்படுகின்றது. இந்த நிலைகளில் எல்லாம் பொருள்கள் பாதுகாக்கப்பட வேண்டும் என்ற நோக்கத்தோடுதான் சட்டம் மேலே கண்ட இருவகைச் செயல்களையும் குற்றங்கள் என விதித்துத் தண்டிக்கின்றது.

# 15. மோசடியான சொத்து மாற்றங்கள்
## (Fraudulent Disposition of Property)

கடன் கொடுத்தவர்களை ஏமாற்றும் மோசடியான சொத்து மாற்றங்கள் —வரவேண்டிய கடனைக் கொடுக்கவேண்டிய கடனுக்குப் பயன்படாமல் தடுத்தல்—பிரதிபயன் பெறாமல் மோசடியாகச் சொத்து மாற்றும் ஆவணம் அளித்தல்—மோசடியாகச் சொத்தை மறைத்தலும் அகற்றலும்.

### கடன் கொடுத்தவர்களை ஏமாற்றும் மோசடியான சொத்து மாற்றங்கள்

ஒருவர் கடனாளியாக இருக்கிறார். பலருக்கு அவர் கடன்பட்டு இருக்கிறார். கடன்காரர்கள் கடனை வரப்பற்றுவதற்கு என அவர் மீது வழக்கிட்டு, அவரது சொத்துகளை சிவில் கோர்ட்டுமூலம் ஜப்தி (attachment) செய்யலாம். கடன் தொகை அப்பொழுதும் செலுத்தப்படவில்லையெனில், அச் சொத்துகளை நீதிமன்றத்தின் மூலமே ஏலத்திற்குக் கொண்டுவந்து விற்று, தம் கடனை வரப்பற்றலாம். இவ்வாறு கடன்பட்டவர்களின் சொத்துகளை ஜப்தி செய்து விற்று, கடன் கொடுத்தவர்கள் தம் கடனை வசூலிப்பதற்குச் சட்டம் வகை செய்கின்றது. இது நியாயமான ஏற்பாடாகும். நேர்மையான கடனாளிகள் வேறு வழியின்றி இவ்வாறு தம் சொத்துகளை இழப்பதுண்டு.

ஆனால், நேர்மையில்லாத கடனாளிகள் தமக்குக் கடன் கொடுத்தவர்களை மோசடி செய்தாவது தம் சொத்துகளைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டும் என்ற தீய எண்ணத்துடன் சூழ்ச்சி செய்வார்கள். கடன் கொடுத்தவர்கள் சிவில் கோர்ட்டில் வழக்கிட்டுவிடலாம் என்று தெரிந்ததும், தம் சொத்துகள் ஜப்தி செய்யப்படுதல் கூடாது என்பதற்காக அவைகளைப் பிறருக்கு விற்றுவிட்டதாகப் பொய்யாகக் கிரயப் பத்திரங்களை எழுதி வைத்துவிடுவதுண்டு. கடன் கொடுத்தவர் வழக்கிட்டு கடனாளியின் சொத்துகளை ஜப்தி செய்ய வந்தால், அச் சொத்துகள் கடனாளிக்குச் சொந்தமானவை

யல்ல, அவற்றை விலைக்கு வாங்கியிருப்போருக்குத்தான் சொந்தம் என்று வாதிடப்பட்டு, சொத்துகள் கடன் கொடுத்தவருக்குக் கிடைப்பதற்கு வழியில்லாமற் போய்விடலாம். இத்தகைய கிரயப் பத்திரங்களை கடனாளிகளிடமிருந்து எழுதி வாங்குவோர் சொத்து களுக்கு எந்த விலையும் கொடுப்பதில்லை. கண் துடைப்பாகவே கடனாளியின் சொத்து இன்னொருவரின் பெயருக்குக் கிரயம் எழுதி வைக்கப்படுகிறது. கிரயத் தொகை கொடுக்கப்பட்டதாகவும் எழுதியிருக்கலாம். ஆனால், அதுவும் பெயரளவில் எழுதப்பட்ட தாகத்தான் இருக்கும். மோசடியாக இந்தச் சொத்து மாற்றங்களை மோசடியான சொத்து மாற்றம் (Fraudulent transfer of property) என்று சட்டம் கூறுகிறது.

இவ்வாறு, கடன்காரர்களை மோசம் செய்யவேண்டும் என்ற தீய நோக்கத்துடன் செய்யப்படும் சொத்து மாற்றங்கள் செல்லாதவை என, சொத்து மாற்றுச் சட்டமும் (Transfer Property Act) இன்சால்வென்சி சட்டமும் (Insolvency Act) கூறுகின்றன. கிரிமினல் சட்டம் இச் செயல்களைக் குற்றங்களாகக் கொள்ளுகிறது.

கடன் கொடுத்தவர்களிடமிருந்து தப்புவதற்கென்று, மோசடி யாக, தக்க பிரதிபலன் ஏதும் இன்றி, சொத்து மாற்றங்களைச் செய் வதும், நேர்மையின்றி மோசடியாகச் சொத்துகளை அகற்றுவதும், மறைப்பதும், பிறருக்கு அளிப்பதும் குற்றச் செயல்கள் எனச் சட்டம் விதிக்கின்றது. இக் குற்றத்திற்கு இரண்டு ஆண்டுகள் வரை சிறை, அபராதம் தண்டனையாகும் (421ஆம் பிரிவு).

### வரவேண்டிய கடனைக் கொடுக்கவேண்டிய கடனுக்குப் பயன் படாமல் தடுத்தல்

ஒருவர் கொடுக்கவேண்டிய கடன்கள் இருக்கின்றன. அவருக்கு வரவேண்டிய கடன்களும் இருக்கின்றன. இவருக்குக் கடன் கொடுத்தவர்கள் இவருக்கு வரவேண்டிய கடன்களைக் கோர்ட்டுமூலம் சப்தி செய்து வரப்பற்றித் தங்கள் பாக்கிக்கு நேர் செய்துகொள்ளலாம். இவ்வாறு தமக்கு வரவேண்டிய கடன்கள் தமது கடனைத் தீர்ப்பதற்குச் சட்டப்படி பயன்படாதவாறு சிலர் நேர்மையின்றித் தடுப்பதுண்டு. தமக்கு வரவேண்டிய கடன்கள் முன் தேதிகளிலேயே வசூல் செய்யப்பட்டதாக எழுதிவைத்துக் கொள்ளலாம். அக்கடன்களை மூன்றாவது நபர் பெயருக்கு மாற்றிவிட லாம். இவ்வாறு ஒருவர் தமது கடன்களைத் தீர்ப்பதற்குத் தமக்கு வரவேண்டிய கடன்கள் சட்டப்படி பயன்படாதவாறு நேர்மை யின்றித் தடுப்பது குற்றமாகும். அக் குற்றத்திற்கு இரண்டு ஆண்டு கள்வரை சிறை, அபராதம் உண்டு (422ஆம் பிரிவு).

தமக்குக் கடன் கொடுத்தவர்களை மோசம் செய்யும் செயலாகவே மேலே கூறப்பட்ட இரண்டு செயல்களும் உள்ளன. தம் சொத்துகளையும் தமக்கு வரவேண்டியவைகளையும் தமக்குக் கடன் கொடுத்தவர்கள் கைக்குக் கிடைக்காமல் ஒருவர் தடுப்பது நம்பிக் கடன் கொடுத்தவர்களை மோசம் செய்யும் செயலாகும். எனவே, இச் செயல்களைச் சட்டம் குற்றங்கள் என விதிக்கிறது.

## பிரதிபயன் பெருமல் மோசடியாகச் சொத்துமாற்றும் ஆவணம் அளித்தல்

மோசடிக் கருத்துடன் பெயரளவில் எழுதி வைக்கப்படும் கிரயப் பத்திரத்தில் குறிக்கப்பட்டுள்ள சொத்தின் விலையை அதை வாங்குபவர் கொடுப்பதில்லை. ஆயினும், கொடுக்கப்பட்ட சரியான விலைக்கு (பிரதிபயனுக்கு) அச்சொத்து விற்கப்பட்டதாக ஒரு தோற்றம் இருக்கவேண்டும் என்ற நோக்கத்துடன், சொத்தை வாங்குபவர் இவ்வளவு பணத்தை விலையாகக் கொடுத்திருக்கிருர் என்று பொய்யாகப் பத்திரத்தில் எழுதப்படுகிறது. இவ்வாறு, பொய்யான பிரதிபயன்களைக் காட்டிப் பத்திரங்களை தயார் செய்வது குற்றம் என்று சட்டம் கூறுகிறது.

மேலும், மோசடியாகத் தயாரிக்கப்படும் கிரயப் பத்திரம் அமலுக்கு வருவதில்லை. கடன்பட்டவர் மற்றெருவருக்குச் சொத்தை விற்பதாக எழுதப்பட்டிருந்தாலும், பத்திரத்தில் கிரயம் பெறும் நபர் உண்மையில் அச் சொத்தை அனுபவிக்கப்போவதில்லை. கடன்பட்டவருடைய நன்மைக்காகவே அந்தப் போலியான பத்திரம் தயாரிக்கப்படுகிறது. எனவே, அந்தப் போலிப் பத்திரத்தில், மாற்றப்படும் சொத்தால் நன்மையடையப் போகிறவர் வாங்குபவர் தாம் என்று கண்டிருந்தாலும், உண்மையில் அச் சொத்தை அனுபவித்து நன்மைபெறப் போகின்றவர் விற்பவர்தாம். இவ்வாறு எவருடைய நலனுக்கென்று ஒரு பத்திரம் எழுதப்படுகிறதோ அது குறித்துப் பொய் கூறிப் பத்திரம் தயாரிக்கப்படுவதும் குற்றமாகிறது.

பொய்யான பிரதிபயன் (consideration) களைக்காட்டி எழுதப்பட்ட, அல்லது எவருடைய நலனுக்கு எழுதப்படுகின்றதோ அவரைப்பற்றிப் பொய்த் தகவலைக்கொண்ட ஒரு சொத்து மாற்றுப் பத்திரத்தையோ, பந்தகப் பத்திரத்தையோ, நேர்மையின்றி மோசடியாக எழுதிக் கொடுப்பவரும், அத்தகைய பத்திரத்தைப் பெறுபவரும் குற்றவாளிகள். இவர்களுக்கும் இரண்டு ஆண்டுக் காலம்வரை சிறை, அபராதம் தண்டனையாகும் (423ஆம் பிரிவு).

**மோசடியாகச் சொத்தை மறைத்தலும் அகற்றலும்**

மோசடியாகவோ, அல்லது நேர்மையின்றியோ தம்முடைய அல்லது பிறருடைய சொத்தை மறைத்தல், அகற்றுதல், இவ்வாறு மறைத்தலுக்கும் அகற்றலுக்கும் உதவியளித்தல், தமக்கு வர வேண்டிய பாத்தியதையை விட்டுக்கொடுத்தல், இவையும் குற்றச் செயல்கள். இக் குற்றத்திற்கு இரண்டு ஆண்டுக் காலம் சிறை, அபராதம் தண்டனையாகும் (424ஆம் பிரிவு).

இரண்டு அல்லது மூன்றுபேர்கள் சேர்ந்து கூட்டு வியாபாரம் செய்கின்றனர். அவர்களில் ஒருவர் கூட்டு வியாபாரச் சொத்தையோ, கணக்குகளையோ மோசடியாக அகற்றிச் செல்லுதல் குற்றமாகும். ஒரு சொத்து சட்டப்படி ஜப்தி செய்வதற்கு உள்ளது. அவ்வாறு அது ஜப்தி செய்யப்படுவதற்கு முன் மோசடியாக அச் சொத்து மறைக்கப்பட்டால் அது குற்றமாகும்.

வாரத்திற்கு நிலத்தை உழுபவர் நிலச் சொந்தக்காரருக்குரிய பங்கைக் கொடுக்காமல், வயலில் அறுவடை செய்த நெல் பூராவையும் மோசடியாக அகற்றிச் செல்லுதல் இந்தப் பிரிவின்கீழ்க் குற்றமாகும்.

இவ்வாறு, மோசடிக் கருத்துடன், பிறருக்கு முறையற்ற நட்டம் விளைவிக்கும் வகையில் சொத்துகளை மாற்றுவது, அகற்றுவது முதலிய செயல்களைக் குற்றங்கள் எனச் சட்டம் விதிக்கின்றது.

# 16. உடலுக்கு ஊறு விளைவிக்குங் குற்றங்கள்
## (Offences Affecting the Human Body)

(வன்முறைத்) தாக்குதலும், தாக்க முனைதலும்—காயம் விளைத்தல்—முறையின்றித் தடை செய்தலும்—முறையின்றிச் சிறை செய்தலும்—ஆளைக் கவர்தலும், ஆளைக் கடத்துதலும்—இசைவிலாப் புணர்ச்சியும் இயற்கைக்கு மாறான சேர்க்கையும்.

### (வன்முறைத்) தாக்குதலும் தாக்க முனைதலும் (Of Criminal Force and Assault)

வன்முறைத் தாக்குதல்—'தாக்குதல்' என்பது என்ன ?—உதாரணங்கள்—தாக்குதல்கள் அனைத்தும் குற்றங்களாவதில்லை—வன்முறைத் தாக்குதல் என்றால் என்ன ?—வன்முறையில் தாக்க முனைதல்—தாக்குதலும் தாக்க முனைதலும்—சினமூட்டப்பட்ட நிலையில் தாக்குதலும்—தாக்க முனைதலும்—சினமூட்டப்படுதல் என்றால் என்ன ?—பொது ஊழியர்களைக் கடமைகளைச் செய்யாதவாறு தாக்குதல், தாக்க முனைதல்—பெண்ணின் நாணத்தைக் குலைக்கக் கருதி அவளைத் தாக்குதல், தாக்க முனைதல் — ஒருவரை அவமானப்படுத்தக் கருதி அவரைத் தாக்குதல், தாக்க முனைதல்—திருடும் முயற்சியில் தாக்குதல், தாக்க முனைதல்—முறையின்றிச் சிறை வைக்கும் முயற்சியில் தாக்குதல், தாக்க முனைதல்.

உடல், பொருள், புகழ் என்ற இந்த மூன்று நலன்களில், உடல் நலன் இன்றி எவரும் இன்பமாக வாழ முடியாது. 'செல்வம் என்பது சிந்தையின் நிறைவே' என்ற உண்மையை உணர்ந்தவர்கள் தம் கைப்பொருளை இழந்தாலும் கலங்காது இருக்கலாம். தமது சீர்மை குன்றினாலுங்கூட நேர்மையின்றி வாழ்வோரும் உண்டு. பொருளை ஒரு பொருளாக மதியாது இருப்பவர்கள்போல், புகழைப் போற்றி வாழாதவர்களும் உள்ளனர். ஆனால், உடல் நலன் இல்லாதவர்கள் எவரும் உள்ள மகிழ்வோடு இருத்தல் இயலாது.

உடலும் உயிரும் ஒன்றியிருக்கின்றன. உடலைக் காத்துத்தான் உயிரைக் காக்க வேண்டியிருக்கிறது. உடல் நோயுள்ளவர்களின் வாழ்வும் நோயுற்றதாகவே இருக்கிறது. எனவே, ஒருவரது உடலுக்கு ஊறு விளைத்தால், அவரது வாழ்விற்கு ஊறு விளைத்த தாகின்றது. ஒருவரது உடலில் சிறு காயம் ஏற்படுத்துவதும் உடலுக்குத் தீங்கு விளைக்கும் செயல்தான். அவரது உடல் கொடுங் காயத்தை ஏற்படுத்தி, உயிரையே போக்குவதும், உடலுக்குத் தீங்கு இழைப்பதால் விளையும் பயனேயாகும். ஆதலால், ஒருவருடைய உடல்நலனைக் காப்பது சட்டத்தின் கடமையாகிறது.

வேலனுடைய வீடு, இராமனது நகை என்று பொதுவாக ஒருவருடைய பருப்பொருள்களை அவரிடமிருந்து பிரித்தே கூறுகிறோம். 'வேலனுடைய வீட்டை ஒருவர் இடித்துவிட்டார்', 'இராமனுடைய நகை களவு போயிற்று' என்று சொல்லுகிறோம். ஆனால், வேலனுடைய உடலுக்குக் காயம் விளைக்கப்பட்டது, 'இராமனின் உடல் சிறை வைக்கப்பட்டது' என்று நாம் கூறுவதில்லை. ஏன்? உயிரும் உடலும் ஒன்றியே இருப்பதால் உடலைமட்டும் தனித்துக் குறிப்பதில்லை. ஆதலால், 'வேலனது உடலுக்குக் காயம் விளைந்தது' என்று கூறாமல், 'வேலனுக்குக் காயம் விளைந்தது' என்று கூறுகிறோம். வேலனின் உடலை ஒருவர் தாக்கினார் எனில், 'அவர் வேலனைத் தாக்கினார்' என்றே குறிப்பிடுகிறோம். 'இராமனது உடல் சிறையிடப்பட்டது' என்று கூறாமல், 'இராமன் சிறையிடப்பட்டார்' என்றே சொல்லுகிறோம். உடலையும் அவ்வுடலுக்குரியவரையும் தனித்துக் குறித்தல் மரபன்று. எனவே, உடலுக்கு ஊறு விளைக்கும் செயல்கள் எல்லாம் அந்த உடலுக்குரியவருக்கு ஊறு விளைக்கும் செயல்களேயாகின்றன. ஆதலால், ஒருவரது உடலுக்குக் காயம் ஏற்படுத்துவது குற்றம் என்று சொல்லாமல், ஒருவருக்குக் காயம் ஏற்படுத்துவது குற்றம் என்று சொல்லுகிறோம். எனவே, இந்தப் பகுதியில் 'ஒருவரை' என்ற சொல், 'ஒருவரது உடலை' என்ற பொருளிலேயே பயன்படுகிறது என்பதை நாம் நினைவிற்கொள்ள வேண்டும்.

இனி, உடல் பற்றிய குற்றங்களின் வகைகளைக் காண்போம்.

ஒருவரது உடலுக்குப் பல வகைகளிலும் ஊறு விளைவிக்கலாம்.

**வன்முறைத் தாக்குதல் (criminal force).** (S 350)

வன்முறையாக ஒருவரை மற்றொருவர் தாக்குவதை வன்முறைத் தாக்குதல் (criminal force) என்கிறோம். 'தாக்குதல்' என்றால் ஒருவரை மற்றொருவர் கழியாலோ, கையாலோ அடிக்கவேண்டும் என்பதன்று.

I. 'தாக்குதல்' (using force) என்பது என்ன?

(1) ஒருவரது உடலை மற்றொருவர் அசைத்தல், உடலின் அசைவை மாற்றுதல் அல்லது உடலின் அசைவை நிறுத்துதல், இது 'தாக்குதல்' ஆகிறது.

(2) ஒரு பொருளை இயக்கியோ, அதன் இயக்கத்தை மாற்றியோ அல்லது நிறுத்தியோ அந்தப் பொருளை,

(a) பிறரது உடலைத் (எந்தப் பகுதியையாவது) தொடும்படி செய்தல்,

(b) அவர் அணிந்திருக்கும் அல்லது சுமந்திருக்கும் பொருளைத் தொடும்படி செய்தல்,

(c) அவரது உடலுணர்வை பாதிக்கும் வகையில் அமைந்திருக்கும் வேறொரு பொருளைத் தொடும்படி செய்தல்; இதுவும் 'தாக்குதல்' ஆகும்.

இவ்வாறு தாக்குவதை, ஒருவர் தமது உடலாற்றலால் நேரடியாகச் செய்யலாம்; ஒரு பொருளைக் கையாலும் வகையாலும் செய்யலாம். ஓர் உயிரினத்தை இயக்கிவிட்டோ, அதன் இயக்கத்தை மாற்றியோ, நிறுத்தியோ இதைச் செய்யலாம்.

இந்த வகையில், 'தாக்குதல்' (using force) என்பதை 349ஆம் பிரிவு விளக்கிக் கூறுகிறது.

**உதாரணங்கள்:—** (1) ஒருவர் தெருவில் நின்றுகொண்டிருக்கின்றார். அவரை மற்றொருவர் தள்ளிவிடுகின்றார். இது நின்றுகொண்டிருந்தவரை அசைத்ததாகும். ஒருவர் நடந்து செல்லுகிறார். அவரை மற்றொருவர் பிடித்து நிறுத்துகிறார். இது நடந்து செல்பவரின் அசைவை நிறுத்துவதாகும். ஒருவர் ஒரு திசைநோக்கி நடக்கின்றார். அவரை மற்றொருவர் நிறுத்தி, வேறு திசை நோக்கிச் செல்லுமாறு தள்ளிவிடுகின்றார். இது நடந்து சென்றவரின் அசைவை மாற்றுவதாகும். இந்த மூன்று செயல்களிலும் ஒருவருக்கு அசைவும், அசைவில் நிறுத்தமும், அசைவில் மாற்றமும் ஏற்பட்டிருக்கின்றன. இந்த ஒவ்வொரு செயலும் 'தாக்குதல்' ஆகின்றது.

(2) ஒருவர் ஒரு படகில் அமர்ந்திருக்கின்றார். அந்தப் படகு ஆற்றின் கரையில் உள்ள ஒரு மரத்தில் கட்டப்பட்டிருக்கின்றது. மற்றொருவர் அந்தப் படகை மரத்திலிருந்து அவிழ்த்துவிடுகிறார். படகு, ஆற்றுநீர் செல்லும் திசையில் படகில் இருப்பவருடன் மிதந்து போகின்றது. இப்பொழுது, படகில் இருப்பவரை அசைத்த செயல் ஒரு பொருளைக் கையாளும்வகையால் ஏற்பட்டதாகும். இதுவும்

(3) ஒருவர் குதிரை வண்டியில் சென்றுகொண்டிருக்கின்றார். மற்றொருவர் அந்தக் குதிரையைச் சவுக்கால் அடித்து, வேறுபக்கமாக வண்டியைத் திருப்பிவிட்டாலும் சரி, குதிரையைப் பிடித்து நிறுத்தி விட்டாலும் சரி, இதுவும் வண்டியில் செல்லுபவரின் அசைவை மாற்றியதும் நிறுத்தியதும் ஆகின்றது. இது, வண்டியில் இருப்பவரை நேரடியாகத் தொடாமலே குதிரையின் இயக்கத்தைமட்டும் மாற்றியே நிறைவேற்றப்படுகிறது. இதுவும் 'தாக்குதல்' தான்.

இவ்வாறு, அசைவையும், அசைவை நிறுத்தலையும், மாற்றலை யும் ஒருவர் மற்றொருவருக்கு நேரடியாகத் தன் உடலாற்றலால், ஒரு பொருளைக் கையாளும் வகையில், ஓர் உயிரினத்தை இயக்குவதால் செய்யலாம். இது 'தாக்குதல்' எனப்படும்.

(4) ஒருவர்மீது மற்றொருவர் கல்லை வீசுகின்றார். கல் அவர் உடல்மீது விழுகின்றது; அல்லது அவர் அணிந்திருக்கும் உடையின் மீது விழுகின்றது; அல்லது அவர் வைத்திருக்கும் குடைமீது விழு கின்றது. இவ்வாறு கல்லை எறிந்தது 'தாக்குதல்' செயலாகும்.

(5) வீதியின் ஓரமாக ஒருவர் நின்றுகொண்டிருக்கின்றார். அவர் அருகில் உள்ள ஒரு பள்ளத்தில் மழைநீர் தேங்கி நிற்கிறது. மற் றொருவர் வேண்டுமென்றே அந்த நீரின்மேல் கல்லை எறிகின்றார். அதனால் பள்ளத்திலிருந்த மழைநீர் நின்று கொண்டிருப்பவரின் உடலிலோ, உடையிலோ, அவர் வைத்திருக்கும் குடையிலோ தெறித்து விழுகின்றது. இதுவும் 'தாக்குதல்' தான்.

(6) ஒருவர் குளிக்கும் தொட்டிக்குள் அமர்ந்து குளித்துக்கொண் டிருக்கின்றார். மற்றொருவர், அந்தத் தொட்டியில் உள்ள நீரில் கொதிக்கும் நீரைக் கலக்கின்றார் என வைப்போம். கொதிநீர், தொட்டியில் இருந்த நீருடன் கலந்து, குளிப்பவரின் உடலுணர்வை பாதிக்கின்றது. இது 'தாக்குதல்' ஆகும்.

(7) ஒருவர் அணிந்திருக்கும் உடையை மற்றொருவர் இழுக்கின் றார். இதனால் அதை அணிந்திருப்பவரின் உணர்வு பாதிக்கப்படு கின்றது. இச்செயலும் 'தாக்குதல்' ஆகும்.

(8) தெருவில் போய்க்கொண்டிருக்கும் ஒருவர்மீது மற்றொருவர் ஒரு நாயை ஏவி விடுகின்றார். நாய் அவர்மீது பாய்ந்து விழுகின்றது. இதுவும் 'தாக்குதல்' ஆகும்.

இந்த உதாரணங்கள் 'தாக்குதல்' எப்படியெல்லாம் செய்யப்பட லாம் என்பதை விளக்குவன.

**தாக்குதல்கள் அனைத்தும் குற்றங்கள் ஆவதில்லை:**

'தாக்குதல்' எது என்று கண்டோம். நாம் ரெயில்வே நிலையத்தில் வேகமாகப் போகும்பொழுது கூட்டத்தில் பலரை இடித்துத் தள்ளிக்கொண்டுதான் செல்லுகிறோம். நம்மையும் பலர் இடித்துத் தள்ளுகின்றனர். இதனால், நம் உடலுக்கு அசைவு ஏற்படுகிறது; 'தாக்குதல்' விளைகிறது. ஹோலிப் பண்டிகையில் ஒருவர்மீது மற்றொருவர் வண்ண நீரைத் தெளிக்கின்றார்; திருமண வீடுகளில் இருப்போர்மீது பன்னீர் தெளிக்கப்படுகிறது. இச் செயல்கள் 'தாக்குதல்' என்ற சொல்லிற்கான விளக்கத்திற்குப் பொருந்தியே இருக்கின்றன. ஆயினும், இச்செயல்கள் எல்லாம் குற்றங்கள் ஆவதில்லை. ஒரு செயல் 'வன்முறைத் தாக்குதலாக' இருந்தால்தான் அது குற்றமாகிறது.

**வன்முறைத் தாக்குதல் (using criminal force) என்றால் என்ன?**

ஒரு குற்றமான செயலைச் செய்வதற்கென்று, ஒருவருடைய சம்மதம் இன்றி அவரைத் தாக்குவதும்,

ஒருவருக்குக் காயம், அச்சம், எரிச்சல் (தொந்தரவு) விளைக்கும் கருத்துடன், அவருடைய சம்மதம் இன்றி அவரைத் தாக்குவதும்,

'வன்முறைத் தாக்குதல்' (using criminal force) எனப்படும்.

'தாக்குதலுக்கு' உதாரணமாக மேலே குறிக்கப்பட்டவை போன்ற செயல் ஒன்றைப் பிறருடைய சம்மதம் இன்றி அவருக்கெதிராகச் செய்திருக்க வேண்டும். மேலும், அவருக்குத் காயம், அச்சம், எரிச்சல் இவற்றிலொன்றை விளைவிக்கக் கருதியோ அல்லது ஒரு குற்றத்தைச் செய்யக் கருதியோ தாக்கியிருத்தல் வேண்டும். இந்த விதத் தாக்குதல், 'வன்முறைத் தாக்குதல்' ஆகின்றது.

பலர் கூடி விளையாடும்பொழுது, ஒருவரையொருவர் தள்ளிக்கொண்டு விளையாடுகின்றனர். அப்பொழுது, ஒருவருக்கு மற்றொருவர் அசைவினை ஏற்படுத்துகின்றார். இது தாக்குதல்தான்; ஆனால், இது 'வன்முறைத் தாக்குதல்' ஆவதில்லை. ஏன்? விளையாட்டில் ஒருவரையொருவர் தள்ளவேண்டிவரும் என்பது தெரிந்தும், அதற்கு இசைந்தே அவர்கள் அதில் பங்கு கொள்ளுகின்றனர். மேலும், அவ்வாறு தள்ளுவது அடுத்தவருக்குக் காயத்தையோ, அச்சத்தையோ, எரிச்சலையோ ஏற்படுத்த வேண்டும்

பந்தெறிந்து விளையாடும் விளையாட்டில், பந்தை ஒருவர் மற்றவர் மீது எறியும் செயல் குற்றமாவதில்லை. அது தாக்குதலாக இருந்தாலும், இசைவு பெற்ற தாக்குதலாகிறது. ஆதலால், பந்தை எறிந்து, அதனுல் எதிர்பாராதவகையில் எறியப்பட்டவருக்குக் காயம் ஏற்பட்டாலும் அது குற்றமாகாது.

ஆனுல், ஒருவருக்குக் காயம் விளைக்கவேண்டும் என்ற கருத்தோடு அவரைத் தள்ளிவிட்டாலும் சரி, அவர்மீது ஒரு பொருளை எறிந்தாலும் சரி, அச் செயல் காயத்தை விளைத்தாலும் விளைக்கா விட்டாலும், அது 'வன்முறைத் தாக்குதல்' ஆகிறது; குற்றச் செயலாகிவிடுகிறது.

நம்மைப் பார்க்காமல் வேகமாக வீதியில் நடந்து செல்லும் நண்பரை நாம் பிடித்து இழுத்து நிறுத்துகிருேம். அவரது இயக்கத்தை நிறுத்தியது தாத்குதல்தான். ஆனுல், அது குற்றமாவதில்லை. அவருடைய பொருளைத் திருடவேண்டும் என்ற கருத்துடன், வீதியில் சென்றுகொண்டிருந்தவரை மற்ருெருவர் பிடித்து நிறுத்துகின்ருர். இவ்வாறு, நிறுத்திய செயல் குற்றமாகிறது. ஏனெனில், திருட்டுக் குற்றம் செய்யவேண்டும் என்ற கருத்துடன் அவரை நிறுத்தியதால் அது 'வன்முறைத் தாக்குதல்' ஆகிறது.

ஒருவரை மற்ருெருவர் கத்தியால் குத்திக் காயம் விளைக்கிருர். காயம் விளைக்கும் செயல் (hurt) தனிக் குற்றம் ஆகிறது. காயம் விளைத்தலில் வன்முறைத் தாக்குதலும் அடங்கியே இருக்கிறது. வீதியில் சென்றுகொண்டிருக்கும் ஒருவரின் சட்டையைப் பிடித்து இழுத்து, அவரை மற்ருெவர் நிறுத்துகின்ருர். இது 'முறையின்றித் தடை செய்தல்' (wrongful restraint) என்ற குற்றமாகும். இச் செயலிலும் 'வன்முறைத் தாக்குதல்' அடங்கும். இவ்வாறு, தனிக் குற்றங்கள் ஆகும் செயல்களை அந்தந்தக் குற்றங்களாகவே சட்டம் கொள்கிறது.

ஒருவரை நோக்கி மற்ருெருவர் கல்லை வீசுகிருர். குறி தவறி விடுகிறது. வீசப்பட்டவருக்குக் காயம் ஏதும் ஏற்படவில்லை. இருந்தாலும், கல்லை வீசிய செயலையே குற்றமாக்கவேண்டும். சாக்கடை நீரை எடுத்து ஒருவர்மீது மற்ருெருவர் வீசுகின்ருர். சாக்கடை நீர் எவர்மீது விழுந்ததோ, அவருக்குக் காயம் ஏதும் ஏற்படவில்லைதான். இருந்தாலும், அசுத்த நீரை இறைத்த செயலைக் குற்றமாக்கவேண்டியிருக்கிறது. கல்லை வீசியதும், கழிவுநீரைப் பூசியதும் தீங்கான செயல்களேயாவன. இது போன்ற செயல்களையும் தண்டிக்கும் நோக்கத்துடனேயே 'வன்முறைத் தாக்குதலை'க் குற்றம் எனச் சட்டம் விதிக்கிறது.

**(வன்முறையில்) தாக்க முனைதல் (assault):**

வன்முறையில் ஒருவரைத் தாக்கினால் எவ்வாறு அவருக்குத் துன்பம் விளைகிறதோ, அவ்வாறே அவரை மற்றொருவர் வன்முறையில் தாக்க முனையும்பொழுதும் அவருக்குத் துன்பம் விளைகிறது.

நம்மீது மற்றொருவர் கல்லை வீசுகின்றார். நமக்கு அச்சத்தை அல்லது காயத்தை விளைக்கவேண்டும் என்ற கருத்துடன் கல்லை வீசினால், அது வன்முறைத் தாக்குதல் என்ற குற்றமாகிறது. ஒருவர் கல்லை எடுத்து நம்மை நோக்கி வீசுவதற்கென்று கையை ஓங்குகிறார் என்று வைப்போம். அப்பொழுதும் நம்மீது கல் விழுந்துவிடும் என்ற அச்சம் நம் மனத்தில் தோன்றுகிறது. ஒருவர் கம்பினால் நம்மை அடித்தால், நம் உடலில் வலி ஏற்படுறது. அவர் கம்பைக் கையில் எடுத்துக்கொண்டு, நம்மை அடிக்க வருவதுபோல் ஓங்கினால், நம் உள்ளத்தில் அச்சம் ஏற்படுகிறது. எனவே, கல்லை நம்மீது வீசவோ, கம்பினால் நம்மை அடிக்கவோ எவரும் முனைதல் கூடாது எனச் சட்டம் விதிக்கிறது. இவ்வாறு, வன்முறையில் தாக்க முனைதலைக் குற்றம் எனச் சட்டம் கொள்கிறது.

**வன்முறையில் தாக்க முனைதல் (assault) என்றால் என்ன?**

ஒருவர், தம்முன்னுள்ள மற்றொருவரை, வன்முறையில் தாக்கப் போவதாக, (அவரை) அச்சுறுத்தும் கருத்துடன், ஒரு சைகையோ, ஓர் ஆயத்தமோ செய்தல், 'வன்முறையில் தாக்க முனைதல்' என்ற குற்றமாகும் (351 ஆம் பிரிவு).

ஒருவரை நோக்கி மற்றொருவர் கையை ஓங்கிக்கொண்டு அடிக்கப்போவதாகக் காட்டி அச்சுறுத்துகிறார். கையை ஓங்கியவரின் செயல் 'வன்முறையில் தாக்க முனைதல்' ஆகும்.

நாயை ஏவிவிட்டுக் கடிக்கச் செய்யப்போவதாகட் பிறரை அச்சுறுத்தக் கருதி, அவர் பார்க்கும்படி நாயைச் சங்கிலியில் இருந்து ஒருவர் அவிழ்த்துவிட ஆரம்பிக்கின்றார். இவ்வாறு, அவிழ்த்து விடும் செயல் 'வன்முறையில் தாக்க முனைதல்' ஆகும்.

இராமனைப் பார்த்து, கோபாலன், 'உன்னைக் கழியால் அடிக்கிறேன் பார்' என்று கூறிக்கொண்டே ஒரு கழியைக் கையில் எடுத்தால், இச் செயல் 'வன்முறையில் தாக்க முனைதலே'யாகும்.

ஒன்றும் கூறாமல் கோபாலன் கழியை எடுத்தால், அது இராமனது உள்ளத்தில் அச்சத்தை ஏற்படுத்தப்போவதில்லை. எனவே, அது குற்றமாவதில்லை; அல்லது கழியை எடுக்காமல், 'உன்னைக்

கழியால் அடிக்கிறேன் பார்' என்று கோபாலன் இராமனிடம் கூறி, அந்த வெறும் சொல்லோடு நின்றுவிட்டாலும் குற்றமாவதில்லை. ஏனெனில், சைகையோ ஆயுத்தமோ இன்றி வெறும் வார்த்தைகள் மட்டும் ஒருவரை அச்சுறுத்துவது இல்லை. கழியை எடுத்த செயலை விளக்குவது, அச் செயலோடு கூறப்படும் சொற்கள்தாம். இந் நிலையில் ஒருவர் கூறும் சொற்களும் அவரது செயலும் சேர்ந்து 'வன்முறையில் தாக்க முனைதல்' ஆகின்றன.

எனவே, வெறுஞ் சொற்கள்மட்டும் குற்றமாகி விடுவதில்லை. ஆனால், ஒருவரது செயல் குறிப்பை விளக்கும் வகையில் கூறப்படும் சொற்களின் பயனால், சைகையும் ஆயத்தமும் 'வன்முறை' என்ற குற்றங்களாகலாம்.

(வன்முறைத் தாக்குதலும், வன்முறையில் தாக்க முனைதலுமே குற்றங்களாவதாலும், வன்முறையில்லாத தாக்குதல் குற்ற மாவதில்லையாதலாலும், 'வன்முறைத் தாக்குதலை', 'தாக்குதல்' என்றும், 'வன்முறையில் தாக்க முனைதலை', 'தாக்க முனைதல்' என்றும் இங்கு நாம் கூறலாம். குற்ற இயல் சட்டத்தில், 'தாக்குதல்', 'தாக்க முனைதல்' என்பன வன்முறையில் செய்யப்படுபவைதாம் என்ற கருத்தில், நாம் 'வன்முறை' என்ற தொடரைத் தொக்கி நிற்கும் தொடராக வைத்துக்கொண்டு, 'தாக்குதல்,' 'தாக்க முனைதல்' என்றே நாம் கூறுவதும் எழுதுவதும் பொருத்தமாகும்).

**தாக்குதலும் தாக்க முனைதலும் :**

ஒருவர் மற்றொருவரை ஒரு கழியால் அடித்துவிட்டால், அது 'தாக்குதல்' ஆகிறது. கழியை ஓங்கிக்கொண்டு அடித்துவிடப் போவதாக அச்சுறுத்தினால், அது 'தாக்க முனைதல்' ஆகிறது. முடிவு பெறாத 'தாக்குதல்' செயல் அச்சுறுத்திய நிலையில் நின்றுவிடும் பொழுது, அது 'தாக்க முனைதல்' என்ற குற்றமாகிறது.

பொதுவாகக் குற்ற முயற்சிமட்டுமே (criminal attempts) குற்றமாகும் என்று கண்டோம். குற்றம் செய்வதற்கான ஆயத்தங்களைச் (preparations) சட்டம் தண்டிப்பது இல்லை. கழியை எடுத்து ஒருவர் மற்றொருவரை அடிப்பதற்கென்று ஓங்கிக்கொண்டு அருகில் வந்தவுடன், அவர் தடுக்கப்பட்டாலோ அல்லது அடித்த அடி தவறிவிட்டாலோ, அச் செயல் காயம் விளைவிப்பதற்கு முயன்ற (attempt to cause hurt) குற்றம் ஆகிறது. ஆனால், அவர் அடிப் பதற்கு வருமுன், கீழே கிடந்த கழியைக் கையில் எடுக்கின்றார் எனில், அது முயற்சிச் செயல் அன்று; ஆயத்தம் செய்வதேயாகும். எனவே, கீழே கிடந்த கழியைக் கையில் எடுத்த செயல் குற்றமாவ

தில்லே. ஆனால், அவ்வாறு அவர் எடுக்கும்பொழுது, அவர் கூறும் சொற்களால், அடுத்தவர் மனத்தில், 'தாம் அடிக்கப்படலாம்' என்ற அச்சம் ஏற்பட்டால், கழியை எடுக்கும் ஆயத்தச் செயலும் குற்றமாகி விடுகின்றது. இவ்வாறு பொதுவாகக் குற்றம் இழைப்பதற்கென்று செய்யப்படும் வெறும் ஆயத்தச் செயல் குற்றமாவது இல்லே யெனினும், அந்த ஆயத்தச் செயல் பிறரை அச்சுறுத்துவதாக அமைந்தால், அது 'தாக்க முனேதல்' என்ற குற்றமாகிறது.

**சினமூட்டப்பட்ட நிலேயில், சினமூட்டப்படாத நிலேயில் தாக்குதலும் தாக்க முனேதலும்:-**

ஒருவர் மற்றொருவருக்குச் சினமூட்டுகிறார். அந்தச் சினத்தால் சிந்தை கலங்கியவர், சினமூட்டியவரைத் தாக்கவோ, தாக்க முனேயவோ செய்யலாம். இது வாழ்வில் சாதாரணமாக நடை பெறுவதாகும்.

ஒருவரை மற்றொருவர் தாறுமாறாக நேரில் இழித்துரைக்கின்றார். இழித்துரைக்கப்படுபவர் இதனால் கோபப்படுவது இயல்பேயாகும். அந்தக் கோபத்தால் அவர் தம்மை வைதவரை நோக்கிக் கையை ஓங்கிக்கொண்டு அடிக்கப்போகலாம். கையை ஓங்கியது, 'தாக்க முனேதல்' (assault) என்ற குற்றம்தான். இருப்பினும், சினமூட் டப்படாத சாதாரண நிலேயில் ஒருவர் இக் குற்றத்தைச் செய்வ தற்கும், சினமூட்டப்பட்ட நிலேயில் அவர் இக் குற்றத்தைச் செய் வதற்கும் உள்ள வேறுபாட்டைச் சட்டம் ஒப்புக்கொள்ளுகிறது. இரு செயல்களேயுமே சட்டம் குற்றங்கள் எனக் கொண்டாலும், சினமூட்டப்பட்டவருக்குக் குறைந்த தண்டனேயைச் சட்டம் விதிக் கிறது.

ஏற்கெனவே ஒருவர்மீது நமக்குக் கோபம் இருக்கலாம். அந்தக் கோபத்தை மனத்திற்கொண்டு எப்பொழுதாவது நாம் அவரைத் தாக்குவது குற்றத்தின் தன்மையைக் குறைக்கும் நிலே யன்று. கோபமூட்டப்படுதல் அப்பொழுதுதான் நடந்திருத்தல் வேண்டும்; எதிர்பாராதவகையில் திடீரென்று நடந்திருத்தல் வேண்டும்; அதுவும் கடுங்கோபம் மூட்டப்பட்டிருத்தல் வேண்டும்.

நம்மிடம் வாங்கிய கடனே ஒருவர் திருப்பித்தர மறுக்கின்றார். நமக்கு அவர்மீது அதனால் சினம் வரலாம். பணத்தை அவரிடம் கேட்கிறோம். அப்பொழுது அவர் ஏதோ காரணங்கூறி கடனேத் திருப்பித்தர மறுக்கின்றார். உடனே நாம் அவரைத் தாக்கவோ, தாக்க முனேயவோ கூடாது. அவ்வாறு தாக்கினால், அது சினத்தால் தாக்கியதும் ஆகாது. நமக்கு மூட்டப்பட்ட சினம் கடுஞ்சினமாக இருத்தல் வேண்டும்; திடீ

r r ) ı ‿ 3 வண்டும். நாம் வீதியில் நடந்து சென்றுகொண் டிருக்கையில் நமக்கு முன்னல் சென்றுகொண்டிருந்தவர் காற்றடிப் பதைக் கவனியாது வெற்றிலைச் சாற்றை உமிழ்கின்றுர். அது நம் உடைமீது விழுகின்றது. அவர் இதைத் திரும்பிப் பார்த்துச் சிரிக் கின்றுர் என வைப்போம். நமக்குக் கடுஞ்சினம் வருதல் இயல்பே யாகும். இந்தச் சினம் திடீரென விளைந்தது. உடனே நாம் அவரை அடிப்பதற்குக் கையை ஓங்குகிறேம். இது, திடீரென சினமூட்டப் பட்டதால் (on grave and sudden provocation) 'தாக்க முனைதல்' ஆகும். இவ்வாறு, திடீரெனக் கடுங்கோபமூட்டப்பட்டவரின் செயல் மீதுதான் சட்டம் இரக்கம் காட்டுகிறது.

திடீரெனக் கடுஞ்சின மூட்டப்பட்ட ஒருவர், சினமூட்டிய வரைத் தாக்கினுலோ அல்லது தாக்க முனைந்தாலோ, அக் குற் றத்திற்கு ஒரு மாதம்வரை சிறை அல்லது இருநூறு ரூபாய்வரை அபராதம் தண்டனையாகும் (358 ஆம் பிரிவு).

திடீரெனக் கடுஞ்சினமூட்டப்படாத நிலையில், ஒருவர் மற்றொரு வரைத் தாக்கினுலோ, தாக்க முனைந்தாலோ அதற்கு மூன்றுமாத காலம்வரை சிறை அல்லது ஐந்நூறு ரூபாய்வரை அபராதம் (352 ஆம் பிரிவு).

### சினமூட்டப்படுதல் என்றால் என்ன?

ஒருவர் மற்றொருவர் வீட்டிற்குள் அத்துமீறி நுழைகின்றுர். அத்து மீறி நுழைந்தவரை வெளியே போகச்செய்வதற்கென அவர் கையைப் பிடித்து இழுத்து வீட்டுக்காரர் வெளியே விடுகின்றுர். வீட்டிற்குள் நுழைந்தவருக்கு இதனுல் கோபம் ஏற்பட்டு, வீட்டுக்காரரைத் தாக்குகிறுர் என்று வைப்போம். வீட்டுக்காரர் எனது கையைப் பிடித்து வெளியே இழுத்து, எனக்கு கோபமூட்டினுர்; அதனுல்தான் நான் அவரைத் தாக்கினேன் என்று அத்துமீறி நுழைந்தவர் கூறினுல் அதைச் சட்டம் ஏற்பதில்லை. 'வீட்டுக்காரரின் செயல் காப்புரிமைச்' செயல் (act of private defence) ஆகும். ஒரு பொருளைத் திருடிக்கொண்டு ஓடுபவனை, ஒருவர் பிடித்து நிறுத்து கிறுர். தன்னைப் பிடித்தவரைத் திருடன் தாக்குகிறுன் என்று வைப்போம். 'என்னை அவர் பிடித்து நிறுத்தியதால் எனக்குக் கோபம் வந்தது. அதனுல் அவரைத் தாக்கினேன், என்று திருடன் வாதாட முடியாது. ஒருவர் வீட்டிற்குள் அத்துமீறி நுழைபவரை வெளியேற்றும் உரிமை வீட்டுக்காரருக்கு உண்டு; ஒரு பொருளைத் திருடிக்கொண்டு ஓடுபவரைப் பிடித்து, அந்தப் பொருளை மீட்கும் உரிமை பிறருக்கு உண்டு. இந்த உரிமைகளைக் 'காப்புரிமைகள்' என் கிறேம். காப்புரிமைச் செயலைச் செய்தால், மற்றொருவருக்குச் சின

மூளலாம் என்பதற்காக ஒருவர் காப்புரிமைச் செயலைச் செய்யாமல் இருப்பதற்கில்லை. எனவே, பிறரது காப்புரிமைச் செயலால் தாம் சினமூட்டப்பட்டதாக எவரும் வாதாட இடமில்லை.

ஒருவரைக் கைது செய்வதற்கென்று போலீசார் அவர் கையைப் பிடிக்கிறார். கைது செய்யப்பட்டவர் போலீசார்மீது கோபங்கொண்டு அவரை அடிக்கப்போவதாகக் கையை ஓங்கு கிறார் என்று வைப்போம். இப்பொழுது, கோபங்கொள்ளுதல் முறை யற்றதாகும். நீதிமன்ற உத்தரவுப்படி, ஒருவர் வீட்டிலுள்ள பொருள்களை அமீனா ஜப்தி செய்கின்றார். இதனால் வீட்டுக்காரர் கோபங்கொண்டு அமீனாவை அடிக்கப்போனால், அதுவும் முறை யற்றவகையில் கோபங்கொள்ளுவதாகும். போலீசார் கைதுசெய் வதும், அமீனா ஜப்தி செய்வதும் பொதுப் பணியாளர்கள் தங்கள் கடமைகளைச் செய்வதாகின்றன. எனவே, பொதுப் பணியாளர்கள் தங்கள் அதிகாரத்தின்கீழ்ச் செய்யும் செயல்களாலும், சட்டப்படி செய்யப்படும் செயல்களாலும் எவரும் சினங்கொள்ளுதல் முறையன்று.

சில வேளைகளில் ஒருவர் சினமூட்டப்படுவதற்கு அவரே காரண மாக, தூண்டுகோலாக இருப்பதுண்டு. நான் போய் ஒருவரை நேருக்கு நேராக இழித்துப் பேசுகிறேன். அவர் கோபங்கொண்டு என்னைக் கீழே தள்ளிவிடுகின்றார். உடனே எனக்குக் கோபம் வரு கிறது. நான் அவரைத் தாக்குகிறேன். இப்பொழுது எனது செயலைச் சினமூட்டப்பட்டதால் செய்யப்பட்டது என்று சட்டம் கொள்ளுவதில்லை. ஏனெனில், எனக்குச் சினமூட்டப்பட்டதற்கு நானேதான் காரணமாக இருக்கிறேன். என்னைக் கீழே தள்ளும்படி அவரைத் தூண்டியது நான்தான். அவரை நான் வைததால்தான் அவர் என்னைத் தள்ளினார். எனவே, தாம் சினமூட்டப்படுவ தற்குத் தாமே காரணமாக இருந்துகொண்டு, தாம் செய்யும் குற்றத்தின் தன்மையைக் குறைப்பதற்கு அவ்வாறு சினமூட்டப் பட்டதை அவர் காரணமாகக் காட்டமுடியாது.

ஆதலால், தமது தூண்டுதலின் காரணமாக ஒருவர் சினமூட் டப்படுவதும், சட்டப்படியாகவோ, பொது ஊழியர்களின் அதி காரத்தின்படியோ செய்யப்பெற்ற காரியங்களால் சினமூட்டப்படு வதும், பிறரது காப்புரிமைச் செயல்களால் சினமூட்டப்படுவதும், குற்றத்திற்கான தண்டனையைக் குறைக்கத்தக்கனவல்ல. இந்த விதக் காரணங்களால் சினமூட்டப்பட்டவர் மற்றவரைத் தாக்கி னாலும், தாக்க முனைந்தாலும், அதற்குரிய தண்டனை 352 ஆம் பிரி விற்கண்டபடி மூன்றுமாத காலம்வரை சிறை, அபராதம் ஆகும். 358 ஆம் பிரிவுப்படி குறைந்த தண்டனை அளிக்கப்படுவதில்லை.

திடீரென ஒருவர் கடுஞ்சினமூட்டப்பட்டாரா என்பதை அந்தந் தச் சூழ்நிலைகளில் இருந்து நீதிமன்றம் முடிவு செய்கிறது. இந்த வகையில், திடீரெனக் கடுஞ்சினமூட்டும் சூழ்நிலையில் ஒருவர் மற்றொருவரைத் தாக்குவதற்கும், சாதாரண நிலையில் அவ்வாறு தாக்குவதற்கும் உள்ள வேறுபாட்டைச் சட்டம் ஏற்றுக்கொண்டு தக்க தண்டனைகளை அளிக்கின்றது.

## பொது ஊழியர்களைக் கடைமைகளைச் செய்யாதவாறு தாக்குதல், தாக்க முனைதல்:

பொது ஊழியர்கள் தங்கள் பொதுப்பணிகளைச் செய்வதில் எவ்விதத் தடையும் இருத்தல் ஆகாது. பொது ஊழியர்கள் என்ற நிலையில் அவர்களுக்குற்ற கடமைகளை அவர்கள் செய்யவேண்டியது அவசியமாகிறது. இவ்வாறமைந்த பொதுப்பணிகளைப் பொது ஊழியர்கள் செய்யும்பொழுதோ, அவர்களது கடமைகளைச் செய்யாமல் தடுக்கும்பொருட்டோ, அவர்களைத் தாக்குதல் அல்லது தாக்க முனைதல் குற்றமாகும். சட்டப்படியான கடமைகளை அவர்கள் செய்ததற்காக அவர்களைத் தாக்குதலும் தாக்க முனைதலும் கூடாது. இந்தவிதக் குற்றத்திற்கு இரண்டு ஆண்டு காலம்வரை சிறை அபராதம் தண்டனை ஆகும் (353 ஆம் பிரிவு).

பொது ஊழியர்கள் தங்கள் கடமைகளைச் சட்டப்படி செய்தல் வேண்டும். அந்த நிலையில்தான் சட்டம் அவர்களுக்குத் தக்க பாதுகாப்பளிக்கின்றது. பொதுவாக, போலீசார் ஒருவரது வீட்டைச் சோதனையிட வேண்டும் எனில், மாஜிஸ்ட்ரேட் ஒருவரிடம் இருந்து 'சோதனை உத்தரவு' (search warrant) பெற்றிருத்தல் வேண்டும். அத்தகைய உத்தரவு ஏதும் பெருமல், போலீசு அதிகாரி ஒருவர் வீட்டைச் சோதனையிடுகையில், வீட்டுக்காரர் அந்த அதிகாரியைத் தாக்கினால் அது குற்றமாகாது. ஏனெனில், அந்த அதிகாரியின் செயல் சட்டமுறையான செயலன்று. இம்மாதிரியே, சரியான முறையில் கையெழுத்தும் முத்திரையும் இடப்படாத வாரன்டை வைத்துக்கொண்டு, ஒரு அமீன் ஜப்தி செய்ய முயலுகையில் அவர் தாக்கப்பட்டார். முறைப்படியான வாரன்ட் இன்றி, அவர் ஜப்தி செய்ய முயன்றது சட்டப்படியான செயல் இல்லையாதலால், அவரைத் தாக்கியது குற்றமாவதில்லை என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

தங்கள் கடமைகளைச் செய்வதில் அச்சமோ, தயக்கமோ இன்றிப் பொது ஊழியர்கள் செயல்படுவது நல்வாழ்விற்கு அவசியமாகும். அந் நிலையில் அவர்களைத் தாக்குவதும் தாக்க முனைதலும் ஒழுங்கான வாழ்விற்குப் பெரிதும் ஊறு விளைவிப்பதால், இக் குற்றங்களுக்கு அதிகத் தண்டனையைச் சட்டம் விதிக்கிறது.

**பெண்ணின் நாணத்தைக் குலைக்கக் கருதி அவளைத் தாக்குதல், தாக்க முனைதல்:-**

ஒருவர் ஒரு பெண்ணின் நாணத்தைக் குலைத்து, அவமானம் செய்யக் கருதி அப்பெண்ணைத் தாக்கினாலோ, தாக்க முயன்றாலோ, அவருக்கு இரண்டு ஆண்டு காலம்வரை சிறை, அபராதம் விதிக்கப் படலாம் (354 ஆம் பிரிவு).

பெண் என்ற சொல் எந்த வயதில் உள்ள பெண்ணையும் குறிப்ப தாகும்.

ஒரு செயல் பெண்ணின் நாணத்தைக் குலைக்கத் தக்கதா என் பதை அந்தந்தச் சூழ்நிலைகளில் இருந்துதான் நாம் உறுதி செய்ய வேண்டும். நம் நாட்டு மரபுப்படி, ஐந்து வயது சிறுமியை ஒருவர் முத்தமிட்டால், அது நாணத்தைக் குலைக்கும் செயல் என்று கொள் வதில்லை; ஆனால், இருபது வயது பெண்ணை அயலான் முத்த மிடுவது அவளது நாணத்தைக் குலைக்கும் தகாத செயலேயாகும். மேற்கு நாட்டுப் பெண்களை அயலார் தொடுவது தகாத செயலாவ தில்லை. ஆனால், நம் நாட்டுப் பெண்களை அயலார் தொடுவதும் நாணத்தைக் குலைக்கும் நாகரிகமற்ற செயலாகிறது.

பெண்ணின் நாணத்தைக் குலைக்கும் செயல் ஓர் ஆண்தான் செய்ய முடியும் என்பது அன்று. ஒரு பெண்ணே அத்தகைய செயலை மற்றொரு பெண்ணிற்குச் செய்தாலும் அவள் குற்றவாளி ஆகின்றாள்.

**ஒருவரை அவமானப்படுத்தக் கருதி, அவரைத் தாக்குதல், தாக்க முனைதல்:**

திடீரெனச் சினமூட்டப்படாத நிலையில், ஒருவரை அவமானப் படுத்த வேண்டும் என்ற கருத்துடன் அவரைத் தாக்குதலும் தாக்க முனைதலும் குற்றங்கள். அதற்கும் இரண்டு ஆண்டு காலம் வரை சிறை அபராதம் உண்டு (355 ஆம் பிரிவு).

ஒருவரை நோக்கி மற்றொருவர் கழியை ஓங்கினால், அது தாக்க முனைதல் ஆகும். செருப்பை எடுத்து ஓங்கினால், அது அவமானப் படுத்தும் கருத்தோடு தாக்க முனைதல் ஆகும். இரண்டாவது குற்றச் செயலுக்கு அதிக தண்டனையைச் சட்டம் விதிக்கிறது.

**திருடும் முயற்சியில் தாக்குதல், தாக்க முனைதல்:**

ஒருவர் அணிந்திருக்கும் அல்லது வைத்திருக்கும் பொருளைத் திருடும் முயற்சியில் அவரைத் தாக்குவதும், தாக்க முனைவதும்,

இரண்டாண்டு காலச் சிறைத் தண்டனை, அபராதத்திற்குரிய குற்றங்களாவன (356 ஆம் பிரிவு).

**முறையின்றிச் சிறைவைக்கும் முயற்சியில் தாக்குதல், தாக்க முனைதல்:-**

ஒருவரை முறையின்றிச் சிறைவைக்கும் முயற்சியில் அவரைத் தாக்குவதும், தாக்க முனைவதும் குற்றங்கள். அதற்கு ஓராண்டு காலம் வரை சிறை அபராதம் தண்டனையாகும் (357வது பிரிவு).

இவ்வாறு தாக்குதல் என்பது என்ன என்றும், அது எப்பொழுது வன்முறைத் தாக்குதல் ஆகிறது என்றும் விளக்கி, ஒருவரை மற்றொருவர் (வன்முறையில்) தாக்குவதையும், (வன்முறையில்) தாக்க முனைவதையும் குற்றங்களெனக் கொண்டு, அத்தக் குற்றங்கள் என்ன கருத்தோடு செய்யப்படுகின்றனவோ, அதற்கேற்ப அவைகளுக்கான தண்டனைகளையும் சட்டம் விதிக்கின்றது.

# 2. காயம் விளைத்தல்

## (Causing Hurt)

காயம் விளைத்தல்—'கொடுங்காயம்' என்பது என்ன?—கொடுங்காயம் என்று கூறப்படுபவை—வேண்டுமென்று காயம் விளைத்தல்—உதாரணங் கள்—தாக்குதலும் காயம் விளைத்தலும்—காயத்தால் மரணம் விளைதல்—திடீரென்று கடுஞ்சினம் மூட்டப்பட்டதால் காயம் அல்லது கொடுங்காயம் விளைத்தல்—கொடிய ஆயுதங்களால் வேண்டுமென்றே காயம், கொடுங் காயம் விளைத்தல்—அச்சுறுத்தி அபகரிப்பதற்கென்று காயம், கொடுங்காயம் விளைத்தல்—குற்றங்களைக் கண்டுபிடிப்பதற்கென்று காயம், கொடுங் காயம் விளைத்தல்—நச்சுப் பொருளையோ, மயக்க மருந்தையோ கொடுத்தல் — பொது ஊழியர்களுக்குக் காயம் விளைத்தல்—கவனமின்மையாலோ, அசட்டுத் துணிவாலோ பிறருக்குக் காயம் விளைத்தல்.

ஒருவரது உடலுக்கு ஊறு விளைந்தால் அவருக்குத் துன்பம் ஏற்படுகிறது. எனவே, ஒருவர் மற்றொருவரின் உடலுக்கு ஊறு செய்தல் கூடாது.

பொதுவாக, உடலுக்கு ஊறு ஏற்படுத்துவதைக் 'காயம் விளைத்தல்' என்று கூறுகிறோம். காயம் என்பது, இரத்தம் கசியும் வெட்டுக் காயமாகவோ, புண்ணாகவோ இருக்க வேண்டும் என்ப தன்று. உடம்பின் உள்ளுறுப்புகளுக்குக் கேடு விளைதலும் காயமே யாகும். எந்த வகையில் உடலுக்கு ஊறு விளைந்தாலும் அதைக் 'காயம்' (hurt) என்று குறிப்பிடுகிறோம்.

உடலுக்குத் துன்பம் விளைக்கும் ஊறுகள் எவை? உடலில் வலி (pain) ஏற்பட்டால் துன்பப்படுகிறோம்; உடல் நோயும் (disease) துன்பம் தருகிறது; உடலில் பலவீனம் (infirmity) தோன் றினாலும் துன்பந்தான். உடல்வலி, நோய், பலவீனம் இவற்றால் துன்பம் விளைகிறது. இவை உடலுக்கு விளையும் ஊறுகள், உட லூறுகள் ஆகின்றன. இவைகளைக் காயங்கள் (hurts) என்கிறோம். இத்தகைய உடற்காயங்களை ஒருவர் பிறருக்கு விளைத்தலைச் சட்டம் குற்றம் என விதிக்கின்றது.

காயங்களில் சிறு துன்பம் விளைக்கும் காயங்கள் சில; கொடுந் துன்பம் விளைக்கும் காயங்கள் சில. சிறு துன்பம் விளைக்கும் காயத்தைக் 'காயம்' (hurt) என்றும், கொடுந்துன்பம் விளைக்கும் காயத்தைக் கொடுங்காயம் (படுகாயம்) (grievous hurt) என்றும் சட்டம் பிரித்துக் கூறுகின்றது.

**காயம் விளைத்தல்** (eausing hurt)

ஒருவர் மற்றொருவருக்கு உடலில் வலி (pain), நோய் (disease), பலவீனம் (infirmity) இவற்றை ஏற்படுத்தல் 'காயம் விளைத்தல்' (causing hurt) ஆகும்.

காயம் விளைத்தல் என்பதன் விளக்கத்தை 319ஆம் பிரிவு இவ்வாறு கூறுகிறது.

**கொடுங்காயம்** (grievous hurt) **என்பது என்ன?**

கையால் அடிப்பதாலும் காயம் விளைகிறது. கத்தியால் குத்துவதாலும் காயம் விளைகிறது. கையால் அடிபட்டவருக்கு உடலில் வீக்கம் ஏற்படுகிறது. கத்தியால் குத்தப்பட்டவருக்கு உயிருக்கு ஆபத்து விளைக்கும் வகையில் வெட்டுக்காயம் ஏற்படுகிறது. இரண்டுமே உடலுக்கு விளைந்த காயங்கள் என்றாலும், ஒன்றின் தன்மையும் விளைவும் சாதாரணமானவை; மற்றொன்றின் தன்மையும் விளைவும் உயிருக்கு ஆபத்தானவை. எனவே, கையால் அடித்தவருக்கும், கத்தியால் குத்தியவருக்கும் ஒரேவிதத் தண்டனை அளிப்பது பொருந்தாததாகும். இரு செயல்களையும் ஒரேவிதக் குற்றமாகக் கொள்ளுவதும் முறையன்று. எனவே, அச் செயல்களை அவற்றின் விளைவிற்கேற்ப இருவகைக் குற்றங்களாகச் சட்டம் பிரிக்கின்றது. கையால் அடித்ததைக் காயம் விளைத்தல் (causing hurt) என்றும், கத்தியால் குத்தியதைக் கொடுங்காயம் விளைத்தல் (causing grievous hurt) என்றும் சட்டம் பாகுபாடு செய்கிறது. கொடுங் காயம் விளைத்தவர் அதிகத் தண்டனைக்கு ஆளாகின்றார்.

காயங்களில் எவையெல்லாம் அதிகமான துன்பத்தைத் தருவன, எவை குறைந்த துன்பத்தைத் தருகின்றன என்று அறுதியிட்டுக் கூறுதல் இயலாது. ஆயினும், ஒரு காயத்தின் தன்மையையும், அதன் விளைவுகளையும் வைத்து, காயங்களில் சிலவற்றைக் கொடுங்காயங்கள் (படுகாயங்கள்) என்று சட்டம் பிரிக்கின்றது.

என்னென்ன விதங்களில் எல்லாம் காயம் விளைக்கலாம் என்று கணக்கிட்டுக் கூறுதல் இயலாது. எனவேதான், பொதுவாக உட

லுக்கு வலி, நோய், பலவீனம் இவற்றை ஏற்படுத்தும் செயல்கள் எல்லாம் காயம் ஏற்படுத்துபவை என்று 319 ஆம் பிரிவிற் கூறப் பட்டதை மேலே கண்டோம். இதுபோன்றே, எந்தெந்தக் காயங் கள் எல்லாம் கொடுங்காயங்கள் என்று கூறுவதும் எளிதன்று. எனவே, காயங்களை அவற்றின் தன்மைக்கும் விளைவுக்கும் ஏற்ப வகைப்படுத்தி, அதிகத் துன்பம் விளைக்கும் ஆபத்தான காயங் களைக் கொடுங்காயங்கள் என்று சட்டம் வகுக்கிறது.

**'கொடுங்காயங்கள்'** (grievous hurt) **என்று கூறப்படுபவை :**

1. ஆண்மை இழத்தல்.
2. ஒரு கண் பார்வையை நிலையாக இழத்தல் (ஒரு கண் குருடாதல்).
3. ஒரு செவியின் திறனை நிலையாக இழத்தல் (ஒரு காது செவிடாதல்).
4. உடலுறுப்பின் அல்லது எலும்பு மூட்டின் (joints) திறன் இழத்தல்.
5. உடலுறுப்பு அல்லது எலும்பு மூட்டுச் சிதைந்து போதல் அல்லது நிலையாகப் பலவீனமாதல்.
6. தலை அல்லது முகம், இதன் கோலம் குலைதல்.
7. எலும்பு அல்லது பல் முறிதல் அல்லது நிலை குலைதல்.
8. (i) உயிருக்கு ஆபத்து விளைக்கும், அல்லது

   (ii) இருபது நாள் காலத்திற்குத் தொடர்ந்து உடலில் கடுமையான வலி ஏற்படுத்தும், அல்லது

   (iii) வழக்கமான தொழிலை இருபது நாள் காலத்திற்குச் செய்ய இயலாமல் ஆக்கும் காயம்.

இந்த எட்டு வகையான காயங்களும் 'கொடுங்காயங்கள்' ஆகின்றன (320 ஆம் பிரிவு).

உடலில் வலி, நோய், பலவீனம் இவற்றில் ஒன்றை ஏற்படுத்தும் செயலைப் பொதுவாகக் 'காயம் விளைத்தல்' (causing hurt) என்றும், மேலே கூறப்பட்ட எட்டு வகை விளைவுகளில் ஒன்றை ஏற்படுத்தும் செயலைக் 'கொடுங்காயம் விளைத்தல்' (causing grievous hurt) என்றும் சட்டம் குறிப்பிடுகிறது. கொடுங்காயமாக இல்லாத வகையில் உடலில் வலி, நோய், பலவீனம் இவற்றை ஏற்படுத்தல் வெறுங்காயம் (causing hurt) விளைத்தலாகிறது.

ஒருவருக்கு மற்றொருவர் எத்தனையோ விதங்களில் காயம் விளைக்கலாம். கம்பால் அடித்துக் காயம் விளைக்கலாம்; கல்லால் எறிந்து காயம் விளைக்கலாம். ஒருவரைக் கீழே தள்ளி அவருக்குக் காயம் விளைக்கலாம். எனவே, காயம் விளைவிப்பவரின் செய்கையைச் சட்டம் விவரிக்காமல் அதனால் ஏற்படும் விளைவைச் சட்டம் விளக்குகிறது. மற்றொருவருக்குக் காயம் அல்லது கொடுங்காயம் விளையும் வகையில் ஒருவர் ஒன்றைச் செய்தால், அது 'காயம் விளைத்தல்' அல்லது 'கொடுங்காயம் விளைத்தல்' ஆகின்றது.

**வேண்டுமென்றே காயம் விளைத்தல்** (Voluntarily causing hurt)

ஒருவர் மற்றொருவருக்குக் காயம் விளைவிக்க வேண்டும் என்ற கருத்துடன் ஒன்றைச் செய்து, அல்லது அதனால் மற்றொருவருக்குக் காயம் விளையலாம் என்பது தெரிந்தும் அதைச் செய்து மற்றொருவருக்குக் காயம் விளைத்தால், அது 'வேண்டுமென்றே காயம் விளைத்தல்' (Voluntarily causing hurt) ஆகின்றது.

விளையும் காயம் கொடுங்காயமாக இருக்கவேண்டும் என்ற கருத்துடனோ, அல்லது அது கொடுங்காயமாகலாம் என்பதைத் தெரிந்தோ, ஒருவர் மற்றொருவருக்கு வேண்டுமென்றே காயம் விளைத்தால், அது 'வேண்டுமென்றே கொடுங்காயம் விளைத்தல்' (voluntarily causing grievous hurt) ஆகின்றது.

**விளக்கம்:** ஒருவிதமான கொடுங்காயம் விளைக்கக் கருதிச் செய்யப்பட்ட செயலால் மற்றொருவிதமான கொடுங்காயம் விளைந்தாலும், 'அது வேண்டுமென்றே கொடுங்காயம் விளைத்த' செயலேயாகும்.

**உதாரணங்கள்:** மற்றொருவரின் காலை முறிக்கவேண்டும் என்ற கருத்தோடு ஒரு தடியால் ஒருவர் அடிக்கின்றார். அடிபட்டவர் அடியைக் கையால் தடுக்கவே, அந்த அடி அவரது கையில் விழுந்து, அதனால் அவரது கை ஒடிந்துவிடுகிறது. அடித்தவர், 'நான் கருதியது காலை ஒடிக்கவேண்டுமென்றுதான்; கையை ஒடிக்க நான் கருதவில்லை' என்று கூறித் தப்ப முடியாது.

மற்றொருவரின் முகத்தின் தோற்றத்தைக் குலைக்க வேண்டுமென்ற கருத்தோடு அவரது முகத்தின்மீது அக்கினித் திராவகத்தை ஒருவர் ஊற்றுகிறார். திராவகத்தில் பெரும்பகுதி முகத்தில் விழவில்லையாதலால் முகத்தின் கோலம் குலையவில்லை. எனினும், திராவகத்தின் சிறு துளி அவரது கண்ணில் விழவே, ஒரு கண் குருடாகிவிட்டது. கண்ணைக் குருடாக்குவது கொடுங்காயம் விளைவிப்பதாகும். 'நான் முகத்தின் கோலத்தைக் குலைக்கக் கருதியே திராவகத்தை ஊற்றினேன்' என்று குற்றவாளி வாதாடிப்

பயனில்லை. கண்ணைக் குருடாக்கிக் கொடுங்காயம் விளைத்ததற்கு அவர் பொறுப்பாகின்றார்.

### (வன்முறைத்) தாக்குதலும் காயம் விளைத்தலும்

'வன்முறைத் தாக்குதல்' என்பது என்ன என்பதை முன்னால் 350ஆம் பிரிவில் கண்டோம். ஒருவருக்குக் காயம் விளையும் வகையில் அந்தத் தாக்குதல் அமையலாம் என்பதையுங் கண்டோம். காயம் விளைக்கும் பல செயல்கள் தாக்குதல்களாகவும் இருக்கின்றன. கழியால் ஒருவர் மற்றொருவரை அடித்தால் அச் செயல் 'வன்முறைத் தாக்குதல்' என்ற குற்றத்தின் இலக்கணத்திற்கும் பொருந்தும்; 'வேண்டுமென்றே காயம் விளைத்தல்' என்ற குற்றத்தின் இலக்கணத்திற்கும் பொருந்தும்.

சில சூழ்நிலைகளில், வன்முறைத் தாக்குதல் இன்றியே காயம் விளைவித்தல் செய்யப்படலாம். உடலுக்கு ஊறு செய்யும் ஒரு நச்சுப் பொருளை ஒருவர் குடிக்க இருக்கும் பாலில் மற்றொருவர் கலந்து விடுகின்றார். அதை அருந்தியவர் நோய்வாய்ப்படுகிறார். உடலுக்கு நோய் உண்டாக்குவதும் காயப்படுத்துதல்தான். ஆனால், இச் செயலில் 'வன்முறைத் தாக்குதல்' எதுவும் இல்லை. ஒருவருக்குக் காயம் விளைக்கக் கருதி, அவர் நடந்துவரும் பாதையில் ஒரு பள்ளத்தைத் தோண்டி, அதை மறைத்து வைத்திருக்கிறார் மற்றொருவர். நடந்து வந்தவர் பள்ளத்தில் விழுந்து காயப்படுகின்றார். இது வேண்டுமென்றே காயம் விளைத்தல்தான். ஆனால், இதில் 'வன்முறைத் தாக்குதல்' ஏதும் இல்லை.

இதுபோன்று, வன்முறைத் தாக்குதல் இன்றியே காயம் விளைவிக்கப்படலாம் என்பதை நாம் நினைவிற் கொள்ள வேண்டும். எனவேதான், 'வன்முறைத் தாக்குதல்' என்பதை ஒருவகைக் குற்றமாகவும், 'வேண்டுமென்றே காயம் விளைத்தலை' மற்றொருவகைக் குற்றமாகவும் சட்டம் பிரித்துக் கூறுகின்றது.

### காயத்தால் மரணம் விளைதல்

சில வேளைகளில் கொடுங்காயம் விளைக்கப்பட்டதன் பயனாக காயம்பட்டவர் இறந்துவிடலாம். மரணம் விளைக்கவேண்டும் என்ற கருத்தின்றிக் குற்றவாளி காயம் விளைத்திருந்தால் கொடுங்காயம் விளைத்த குற்றத்திற்கே அவர் ஆளாகின்றார். ஒருவர் மற்றொருவரைத் தடியால் ஒரு முறை அடிக்கின்றார். அந்த ஓர் அடியே பலமாக மண்டையில் விழுந்ததால் மண்டை கீறி அடிபட்டவர் சில நாட்கள் கழிந்து இறந்துவிடுகின்றார் என்றால், அடித்தவர் கொலைக் குற்றத்திற்கு ஆளாவதில்லை. கொடுங்காயம் விளைத்த குற்றத்திற்கே பொறுப்பாகின்றார். ஒருவரது கல்லீரல் வீங்கியிருக்கிறது.

அதையறியாத மற்றொருவர் அவரை வயிற்றில் உதைத்துவிடுகிறார். உதையின் பயனாகக் கல்லீரல் சிதைந்து, உதைபட்டவர் இறந்துவிடுகிறார் என்றால், உதைத்தவர் கொலைக்குற்றத்திற்கு ஆளாவதில்லை. காயம் விளைத்த குற்றத்திற்கே அவருக்குத் தண்டனை அளிக்கப்படுகிறது.

உதைபட்டவருக்குக் கல்லீரல் வீங்கியிருப்பது தெரிந்தும் அவரை உதைத்து அவருக்கு மரணத்தை விளைக்கவேண்டும் என்ற கருத்தோடு அவரை வயிற்றில் உதைப்பவரைக் கொலைக்குற்றம் சேருகிறது. ஆனால், அதைத் தெரியாமல் வயிற்றில் உதைத்தவர் காயம் விளைத்த குற்றத்திற்கே பொறுப்பாகின்றார்; கொலைக் குற்றத்திற்குப் பொறுப்பாவதில்லை.

பொதுவாகக் கம்பால் அடிப்பதாலும், காலால் உதைப்பதாலும் மரணம் விளைவதில்லை. எனவே, அடித்தவரின் அல்லது உதைத்தவரின் கருத்து மரணத்தை விளைக்கவேண்டும் என்பதன்று; காயம் விளைக்க வேண்டும் என்பதுதான். அந்தக் கருத்துக்கேற்றபடி அவருக்கான குற்றப் பொறுப்பைச் சட்டம் உறுதி செய்கிறது.

### திடீரென்று கடுஞ்சினமூட்டப்பட்டதால் (Grave and sudden provocation) காயம் அல்லது கொடுங்காயம் விளைத்தல்

பொதுவாக, ஒருவரது உடலைத் தாக்கிக் காயம் விளைத்தல் திடீரெனச் சினமூட்டப்பட்டதால் செய்யப்படுவதாகும்.

திடீரெனக் கடுஞ்சினமூட்டப்பட்டவர் தம் மதியிழந்த நிலையில் மற்றொருவருக்குக் காயத்தை விளைத்தால் அதற்கு ஒரு மாத காலம் வரை சிறை அல்லது அபராதம் தண்டனையாகும் (334ஆம் பிரிவு). இந் நிலையில், கொடுங்காயத்தை விளைத்தால் அதற்கு நான்கு ஆண்டுக் காலம்வரை சிறை அல்லது அபராதம் தண்டனையாகும் (335ஆம் பிரிவு).

தமது தூண்டுதலின் காரணமாக ஒருவர் சினமூட்டப்படுவதும், சட்டப்படியாகவோ, பொது ஊழியர்களின் அதிகாரத்தின்படியோ செய்யப்பெற்ற காரியங்களால் சினமூட்டப்படுவதும், பிறரது காப்புரிமைச் செயல்களால் சினமூட்டப்படுவதும் 'திடீரெனக் கடுஞ்சினமூட்டப்படுதல்' (Grave and sudden provocation) ஆகா. ('திடீரெனக் கடுஞ்சினமூட்டப்படுதல்' என்பதுபற்றி விவரமாக 300ஆம் பிரிவிற் காணுகிறோம்.)

### கடுஞ்சினமூட்டப்படாத நிலையில் வேண்டுமென்றே காயம், கொடுங்காயம் விளைத்தல்

திடீரென்று கடுஞ்சினமேதும் மூட்டப்படாத நிலையில், ஒருவர் மற்றவருக்கு வேண்டுமென்றே காயம் விளைக்கும் குற்றத்திற்கான

தண்டனை, ஓர் ஆண்டுவரை சிறை அல்லது அபராதமாகும் (323 ஆம் பிரிவு). கொடுங்காயம் விளைத்தால் அதற்கான தண்டனை ஏழு ஆண்டுக் காலம்வரை சிறையும் அபராதமும் (325ஆம் பிரிவு) ஆகும்.

**கொடிய ஆயுதங்களால் காயம், கொடுங்காயம் விளைத்தல்**

சுடுதல், குத்துதல், வெட்டுதல் இவற்றிற்குப் பயன்படும் கருவிகள், மரணம் விளைக்கும் கருவிகள், நெருப்பு, சூடான பொருள், நஞ்சு, வெடிபொருள், மூச்சால் உள்ளிழுத்தாலோ வாயால் உட்கொண்டாலோ உடலுக்கு ஊறு விளைக்கும் பொருள்கள், உயிரினங்கள் இவற்றைக் கருவிகளாகப் பயன்படுத்தி ஒருவர் மற்றவருக்குக் காயம் விளைத்தால் மூன்றாண்டுக் காலம்வரை சிறை, அபராதம் தண்டனை; கொடுங்காயம் விளைத்தால் ஆயுட்காலச் சிறை, அபராதம் தண்டனையாகும் (324, 326ஆம் பிரிவுகள்).

**அச்சுறுத்தி அபகரிப்பதற்கென்று காயம், கொடுங்காயம் விளைத்தல்**

ஒருவரிடமிருந்து பொருளை அச்சுறுத்தி அபகரிப்பதற்கென்றோ, அவரைச் சட்டவிரோதமான காரியத்தைச் செய்யவைப்பதற்கென்றோ அல்லது ஒரு குற்றச் செயலைச் செய்வதற்கு ஏதுவாகவோ, காயம் விளைத்தால் பத்தாண்டுக் காலம்வரை சிறையும் அபராதமும் தண்டனை ஆகும். கொடுங்காயம் விளைத்தால் ஆயுட்காலச் சிறையும் அபராதமும் தண்டனை (327, 329ஆம் பிரிவுகள்) ஆகும்.

**குற்றங்களைக் கண்டுபிடிப்பதற்கென்று காயம், கொடுங்காயம் விளைத்தல்**

குற்ற ஒப்புதலை ஒருவரிடமிருந்து அல்லது அவர் அக்கறை கொண்டுள்ள மற்றவரிடமிருந்து பெறவேண்டும் என்ற நோக்கத்தோடு,

குற்றத்தை அல்லது ஒழுங்கீனத்தைக் கண்டுபிடிக்கவேண்டும் என்ற நோக்கத்தோடு,

ஒரு பொருளை மீண்டும் பெறவேண்டும் என்ற நோக்கத்தோடு

ஒருவர் மற்றொருவருக்குக் காயம் விளைத்தால் ஏழாண்டுக் காலம்வரை சிறையும் அபராதமும் தண்டனையாகும். கொடுங்காயம் விளைத்தால் பத்தாண்டுக் காலம்வரை சிறையும் அபராதமும் தண்டனையாகும் (330, 331 ஆம் பிரிவுகள்).

பொதுவாகக் குற்றங்கள்பற்றிய விவரங்களை அறிவது எளிதன்று. ஒருவருடைய பொருள் திருட்டுப்போய்விட்டது என்றால், திருடியவர் யார் என்று கண்டுபிடிப்பது கடினமான காரியம்.

திருடனைக் கண்டுபிடித்த பிறகும் திருட்டுப் பொருள்கள் எங்கிருக்கின்றன என்புதைக் காண்பது இன்னும் கடினமானது. எனவே, பொருள் திருட்டுப்போய்விட்டது என்ருல், எவர் எவர் திருடியிருக்கலாம் என்று சந்தேகிக்கப்படுகின்றனரோ அவர்களை எல்லாம் அடித்துத் துன்புறுத்துவதும், திருட்டுப் பொருள்களைத் திருடியவர்கள் ஒளித்து வைத்திருக்கும் இடத்தைக் காட்டுமாறு அவர்களைத் துன்புறுத்திக் கேட்பதும் நடைபெறுகின்றன. ஆனுல், இது கூடாது என்று சட்டம் விதிக்கின்றது.

போலீசாரோ, தனிப்பட்ட நபரோ குற்றங்கள்பற்றிய தகவல்களைப் பெறும் நோக்கத்துடன் எவரையும் துன்புறுத்திக் காயம் விளைத்தலைக் கடுங்குற்றமாகச் சட்டம் கொள்ளுகிறது.

குற்றவாளியெனச் சந்தேகப்படும் ஒருவரைக் குற்றத்தைச் செய்ததாக ஒப்புக்கொள்ளும்படி தூண்டும் வகையில் அவரைப் போலீஸ் அதிகாரி சித்திரவதை (torture) செய்தால் அது குற்றமாகும்.

திருடிய ஒருவனைத் திருட்டுப் பொருள்களை வைத்திருக்கும் இடத்தைக் காட்டுமாறு போலீசார் சித்திரவதை செய்தல் குற்றம்.

நம்மிடம் கடன் வாங்கியவர் கடனைத் திருப்பித்தரவில்லை. கடனைப் பெறும் நோக்கத்தோடு அவரை நாம் சித்திரவதைக்குள்ளாக்குதல் இந்தப் பிரிவின்கீழ்க் குற்றமாகும்.

**நச்சுப் பொருள்களையோ, மயக்க மருந்தையோ கொடுத்தல்**

ஒரு குற்றத்தைச் செய்வதற்குச் சாதகமாக நச்சுப்பொருளையோ மயக்க மருந்தையோ ஒருவருக்குக் கொடுத்தல் குற்றமாகும். ஒருவருக்குக் காயத்தை ஏற்படுத்தவேண்டும் என்ற கருத்துடன் இப் பொருள்களை அவருக்குக் கொடுத்தலும் குற்றம்.

இந்தப் பொருளை உட்கொண்டவருக்குக் காயம் விளைந்தாலும் விளையாவிட்டாலும் இது குற்றமாகிவிடுகிறது. இக் குற்றத்திற்குப் பத்தாண்டுக் காலம்வரை சிறை, அபராதம் தண்டனையாகும் (328ஆம் பிரிவு).

**பொது ஊழியர்களுக்குக் காயம் விளைத்தல்**

பொது ஊழியர் (public servants) என்ற முறையில் அவர்கள் தங்கள் கடமைகளைச் செய்யும் பொழுதோ,

பொது ஊழியர்கள் தங்கள் கடமைகளைச் செய்யாதவாறு தடுப்பதற்கென்ருே, அல்லது பின்னடையச் செய்வதற்கென்ருே,

பொது ஊழியர்கள் தங்கள் சட்டப்படியான கடமைகளைச் செய்ததன் காரணமாகவோ

அவர்களுக்குக் காயம் விளைவிப்பவருக்கு மூன்றுண்டுக் காலம் வரை சிறை, அபராதம் தண்டனையாகும்; கொடுங் காயம் விளைவிப்ப வருக்குப் பத்தாண்டுக் காலம்வரை சிறையும் அபராதமும் தண்டனை யாகும் (332ஆம் பிரிவு).

பொது ஊழியர்கள் தங்கள் கடமைகளை எவ்வித அச்சமுமின்றி ஆற்றுதல் வேண்டும். முறையான பொதுவாழ்விற்கு இது அவசிய மானதாகும். எனவே, தங்கள் கடமைகளை ஆற்றும் பொது ஊழியர் களுக்குக் காயம் விளைத்தலைக் கடுங் குற்றமாகச் சட்டம் கொள்ளு கிறது.

**கவனமின்மையாலோ, அசட்டுத் துணிவாலோ பிறருக்குக் காயம் விளைத்தல்**

வேண்டுமென்றே, தீய கருத்துடன் ஒருவர் மற்றொருவருக்குக் காயம் விளைத்தல் குற்றம் எனக் கண்டோம். கவனமின்மையான செயலாலோ, அசட்டுத் துணிவான செயலாலோ (negligent or rash act) அவ்வாறு காயம் விளைத்தலும் குற்றமேயாகும்.

நமது கவனக் குறைவான செயலால் பிறருக்குக் காயம் விளை யும் சூழ்நிலைகள் பலவுண்டு. இரவு நேரத்தில் மோட்டார் வண் டியை முன்விளக்குகள் இன்றி ஒருவர் வீதியில் ஓட்டிச் செல்லுதல் கவனமின்மையான (negligent) செயலாகும். வீதியில் செல்வோர் மீது மோட்டார் மோதிக் காயம் விளைக்கலாம். மோட்டார் வண் டியை ஓட்டுவதற்கென்று உரிமம் (licence) பெருத ஒருவர் மோட் டாரை ஓட்டுவது அசட்டுத் துணிவான (rash) செயலாகும். தமக்கு மோட்டார் ஓட்டுவதற்கு நல்ல பயிற்சி இல்லை என்பதை ஒருவர் தெரிந்திருந்தும், மோட்டாரை ஓட்டுபவரின் மனநிலை என்ன? 'வந்தது வரட்டும்; மோட்டார் எவர்மீதாவது மோதினுலும் கவலையில்லை' என்ற மனநிலையோடு, அசட்டுத் துணிவோடு அவர் செயற்படுகின்றுர். நச்சுப் பாம்புகளைக் கூடையில் அடைத்து வைத்துக்கொண்டு பாம்பாட்டி ஒருவன் கூட்டமாக இருக்கும் இரயில் வண்டியில் ஏறுகிறுன் என்று வைப்போம். மக்கள் நெரிசலில் கூடை தட்டிவிடப்படலாம்; பாம்புகள் கூடையிலிருந்து வெளிவரலாம்; இதனுல் மக்கள் உயிருக்கு ஆபத்து விளையலாம். இத்தகைய ஆபத்தை, பிறர் உயிருக்கு விளையவிருக்கும் ஆபத்தை மதிக்காமல் பாம்பாட்டி இரயிலில் ஏறும் செயல் அசட்டுத் துணிவான செய லாகும். குதிரை வண்டி ஓட்டுபவர் குதிரை பூட்டிய வண்டியை மக்கள் நெருக்கடியுள்ள வீதியில் நிறுத்திவைத்துவிட்டு எங்கோ சென்றுவிடுகிறுர். அருகில் சென்ற மோட்டார் வண்டியின் ஒலி யால் குதிரை மிரண்டு வண்டியை இழுத்துக்கொண்டு ஓடுகின்றது. தெருவில் செல்லுவோர்மீது இந்த வண்டி ஏறிவிடலாம். இது பிற

ருடைய பாதுகாப்பிற்கு ஆபத்து விளைக்கும் செயல். எனவே, குதிரை பூட்டிய வண்டியை வீதியில் நிறுத்திச் சென்றது கவன மின்மையான செயலாகிறது. இவ்வாறு எத்தனையோ சூழ்நிலைகளில் ஒருவரது கவனமின்மையாலும், அசட்டுத் துணிவாலும் பிறருடைய உயிருக்கு அல்லது பாதுகாப்பிற்கு ஆபத்து விளையலாம். இத்தகைய செயல்களால் பிறருக்குக் காயம் அல்லது மரணம் விளைந்தபின்தான் இச் செயல்களைச் செய்தவர்கள் தண்டிக்கப்படவேண்டும் என்று சட்டம் காத்திருந்தால் பயனில்லை. எனவே, பிறருக்குக் கேடு விளைந்தாலும் விளையாவிட்டாலும் இத்தகைய செயல்களைச் செய் வோரைச் சட்டம் தண்டனைக்குள்ளாக்குகிறது; இத்தகைய செயல் களால் காயம் விளைந்தால் அதிகத் தண்டனையை அளிக்கின்றது.

பிறருடைய உயிருக்கு அல்லது உடற் பாதுகாப்பிற்கு ஆபத்து விளைக்கும் செயலை ஒருவர் கவனமின்மையாகவோ அல்லது அசட்டுத் துணிவாலோ செய்தால் அது குற்றமாகும். அதற்கு மூன்று மாதகாலம்வரை சிறை, இருநூற்றைம்பது ரூபாய்வரை அபராதம் விதிக்கப்படலாம்.

இத்தகைய செயலால் பிறருக்குக் காயம் விளைந்தால் அதற்கான தண்டனை ஆறு மாதம்வரை சிறை, ஐந்நூறு ரூபாய்வரை அப ராதம் ஆகும். கொடுங்காயம் விளைந்தால் இரண்டாண்டுக் காலம் வரை சிறை, ஆயிரம் ரூபாய்வரை அபராதம் தண்டனை (336, 337 338 ஆம் பிரிவுகள்) ஆகும்.

கவனமின்மையாலோ, அசட்டுத் துணிவாலோ மரணம் விளைத்தல்பற்றி 304-A பிரிவில் கூறப்படுகிறது.

## முறையின்றித் தடை செய்தலும் முறையின்றிச் சிறை செய்தலும்
## (Wrongful Restraint and Wrongful Confinement)

முறையின்றித் தடை செய்தல்—உதாரணங்கள்—பருப்பொருளை வைத்துதான் தடை ஏற்படுத்த வேண்டும் என்பதில்லை—செல்லும் வண்டியைத் தடுப்பது அதிலுள்ளோரைத் தடுப்பதாகும்—தண்டனை—முறையின்றிச் சிறைசெய்தல்—முறையின்றித் தடைசெய்தலும் முறை யின்றிச் சிறைசெய்தலும் — கட்டடத்திற்குள் அடைக்கப்படுவதுதான் சிறைசெய்வதன்று—முறையின்றிக் கைதுசெய்வதும் முறையின்றிச் சிறைவைத்தல் ஆகிறது—தண்டனை—முறையின்றிச் சிறை வைத்தல் அடிப்படை உரிமைக்கு முரணானதாகும் — முறையின்றிச் சிறை வைக்கப்பட்டவரை உடனே விடுவிக்கவும் சட்டம் வகை செய்கிறது.

### முறையின்றித் தடைசெய்தல் (Wrongful restraint)

பொதுவாக, ஒருவருக்கு எந்த இடத்துக்குச் செல்ல உரிமை இருக்கிறதோ, அந்த இடத்துக்கு அவர் செல்வதைப் பிறர் தடை செய்வது தகாது. நான் குடியிருக்கும் வீட்டிற்குள் செல்லும் உரிமை

எனக்கு இருக்கிறது. அவ்வாறு என்னைச் செல்லவொட்டாமல் அந்த வீட்டைப் பூட்டுவதோ, வீட்டிற்குப் போகும் பாதையை அடைத்துத் தடுப்பதோ, வீட்டிற்குள் என்னைப் போகாதவாறு தடைசெய்வதாகும். இது முறையற்ற தடையாகும். பொது வீதியில் நடந்து செல்லும் உரிமை நம் ஒவ்வொருவருக்கும் உண்டு. எனவே, வீதியில் ஒரு திசையை நோக்கி நடந்தோ அல்லது வண்டியிலோ செல்லும் ஒருவரைத் தடுப்பது அவரது உரிமையைப் பறிப்பதாகும். ஒரு பாதை வழியாக நடந்துசெல்லும் உரிமை ஒருவருக்கு இருக்கிறது. மற்ருெருவர் அந்தப் பாதையை அடைத்துத் தடை செய்தால், அது பாதையைப் பயன்படுத்தும் உரிமையுடையவரைத் தடை செய்வதாகிறது. இவ்வாறு, முறையின்றித் தடை விளைவிப்பது குற்றம் எனச் சட்டம் விதிக்கிறது.

### முறையின்றித் தடைசெய்தல் குற்றம்

ஒரு திசையை நோக்கிச் செல்லும் உரிமை ஒருவருக்கு இருக்கையில், அத் திசையில் அவரைச் செல்லாதவாறு, வேண்டுமென்றே தடுப்பது 'முறையின்றித் தடை செய்தல்' (Wrongful restraint) என்ற குற்றமாகும் (339ஆம் பிரிவு).

ஒரு தனிப் பாதையைப் (private way) பயன்படுத்துவதற்குப் பிறருக்கு உரிமையில்லை யென்ற நம்பிக்கையில், பிறரை அப் பாதையில் செல்லவொட்டாமல் ஒருவர் தடை செய்தால் அது குற்றமாகாது.

ஒருவர் ஓர் இடத்திற்குச் செல்ல விரும்புகிருர்; அந்த இடத்திற்குச் செல்லுவதற்கும் அவருக்கு உரிமை இருக்கிறது. இருந்தும், அவரை அந்த இடத்திற்குள் போக முடியாதவாறு தடையை விளைத்தல், முறையின்றித் தடை விளைத்தல் ஆகின்றது.

#### உதாரணங்கள்

ஒரு வீட்டில் குடியிருப்பவர் வெளியில் சென்றிருந்தபொழுது, அந்த வீட்டை மற்ருெருவர் பூட்டிவைத்து, குடியிருப்பவர்களை வீட்டிற்குள் செல்ல முடியாதவாறு தடை செய்தார். இது குற்றமென்று தீர்ப்பளிக்கப்பட்டது. எல்லோருமே பொது வீதியில் நடந்து செல்லும் உரிமையுடையவர்கள். பொதுமக்களில் ஒரு சாரார் ஊர்வலமாக அந்த வீதியில் வருவதை வேருெரு சாரார் தடுத்தால், அதுவும் இந்தப் பிரிவின்கீழ்க் குற்றமாகும்.

வீதி வழியே ஒரு திசையில் வண்டியில் போய்க்கொண்டிருந்தவரைத் தடுத்து, வண்டியை அத் திசையில் போகாமல் மறித்து நிறுத்துவது குற்றமாகும். வீட்டின் கூரைமீது ஏறி நின்றவர் கீழே இறங்க முடியாதவாறு ஏணியை அகற்றுவதும் குற்றமாகும். ஒரு பஸ்

டிரைவர், பின்னுல் வரும் பஸ்ஸைத் தடுத்து நிறுத்தவேண்டுமென் பதற்காக, தன் பஸ்ஸை வீதியின் குறுக்கே நிறுத்திவைத்து அடுத்த பஸ்ஸைத் தடுப்பதும் முறையின்றித் தடை செய்வதாகும் என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

### பருப்பொருளை வைத்துதான் தடை ஏற்படுத்தவேண்டும் என்பதில்லை

ஒருவர் செல்லும் பாதையில் தடை ஏற்படுத்துவது என்றல், ஏதாவது பருப்பொருளை வைத்துத் தடுக்கவேண்டுமென்ற அவசியமில்லை. பாதையில் செல்லுபவரை மிரட்டியோ, அச்சுறுத்தியோ அதில் செல்லாதவாறு தடைசெய்யலாம். இவ்வாறு தடுப்பதும் முறையின்றித் தடைசெய்வதுதான்.

### செல்லும் வண்டியைத் தடுப்பதும் அதிலுள்ளோரைத் தடுப்பதாகும்

வீதி வழியே சென்றுகொண்டிருந்த ஒரு வண்டி நிறுத்தப் பட்டது. வண்டியிலுள்ளோர் வேண்டுமானுல் இறங்கி நடந்து செல்லலாம், வண்டியில் போகக்கூடாது என்று வண்டியை நிறுத்தியவர் கூறினுர். அவர் வண்டியை நிறுத்தியதற்கு எந்தவிதமான தக்க காரணமும் இல்லை. அது முறையின்றித் தடைசெய்த குற்றந் தான் என்று சென்னை நீதிமன்றம் தீர்ப்பளித்தது. 'வண்டியில் செல்லுவதைத்தானே தடுத்தேன்; நடந்து செல்லுவதைத் தடுக்க வில்லையே' என்று வண்டியைத் தடுத்தவர் வாதாடித் தப்புவதற் கில்லை. வண்டியைத் தடுத்தது வண்டியிலுள்ளோரைத் தடுத்ததே யாகும். இந்தத் தடுத்தல் நிகழ்ந்தவுடன் குற்றம் நிறைவேறி விட்டது.

ஒருவர் ஒரு குறிப்பிட்ட திசையில் செல்லுவதுதான் தடை செய்யப்படுகிறதென்றுலும், அது அவருடைய சுதந்திரத்தை, எந்தத் திசையிலும் செல்லுவதற்கு அவருக்குள்ள தன்னுரிமையை (liberty) பாதிக்கும் செயலாவதால் அது குற்றமாகிறது.

### தண்டனை

'முறையின்றித் தடைசெய்தல்' என்ற குற்றத்திற்கு ஒரு மாதம் வரை சிறை அல்லது ஐந்நூறு ரூபாய்வரை அபராதம் அல்லது இரண்டும் தண்டனையாகும் (341ஆம் பிரிவு).

### முறையின்றிச் சிறைசெய்தல் (Wrongful confinement)

ஒருவரை ஒரு குறிப்பிட்ட திசையில் செல்ல இயலாதவாறு தடுத்தலைத் 'தடை செய்தல்' (restraint) என்கிறேம். அவரை எந்தத் திசையிலும் செல்லாதவாறு தடுத்தலைச் 'சிறை செய்தல்' (confinement) என்கிறேம். ஒரு திசையில்மட்டும் போகாதவாறு

தடுத்தலைவிட, எத்திசையிலும் போகாதவாறு ஒருவரைச் சிறைவைத்தல் அதிகப்படியான குற்றமாகும்.

சிறைசெய்தல் என்றால் சிறைக்கூடத்தில் அடைத்துவைப்பது தான் என்பதன்று. ஒருவரை ஓர் இடத்தில் தங்கவைத்து, அந்த இடத்திலிருந்து ஒரு குறிப்பிட்ட சூழ் எல்லைக்கப்பால் எந்தப் பக்கமும் போகக்கூடாது என்ற கட்டுப்பாட்டோடு அவரை வைத்திருப்பது சிறைசெய்தலாகிறது. இதற்கென்று அவரை ஓர் அறைக்குள் தள்ளி அடைக்கவேண்டியதில்லை. ஒரு கட்டடத்திற்குள் அவரை இருக்கும்படி வைக்கவேண்டியதில்லை. திறந்தவெளியில் கூட ஒரு குறிப்பிட்ட சூழ் எல்லைக்கப்பால் ஒருவர் எத் திசையிலும் செல்லுவதைத் தடுத்துவைத்திருப்பது 'சிறை செய்தலே'யாகும்.

### முறையின்றிச் சிறைசெய்யுங் குற்றம்

ஒருவரை ஒரு குறிப்பிட்ட எல்லைக்கட்டுக்கப்பால் செல்லாதவாறு முறையின்றித் தடுத்துவைத்தல், 'முறையின்றிச் சிறை செய்தல்' (Wrongful confinement) என்ற குற்றமாகும்.

### முறையின்றித் தடைசெய்தலும் முறையின்றிச் சிறைசெய்தலும்

எங்கும் செல்லலாம் என்ற ஒருவருக்குள்ள தன்னுரிமை, 'முறையின்றித் தடைசெய்தல்' குற்றத்தில் ஓரளவு பாதிக்கப் படுகிறது; 'முறையின்றிச் சிறைவைத்தல்' என்ற குற்றத்தில் அந்தத் தன்னுரிமை முழுமையாகப் பாதிக்கப்படுகிறது.

முறையின்றித் தடைசெய்தலில் ஒருவர் ஒரு குறிப்பிட்ட திசை நோக்கிச் செல்லாதவாறு தடுக்கப்படுகிறார்; முறையின்றிச் சிறை செய்தலில் ஒருவர் ஒரு குறிப்பிட்ட எல்லை தாண்டி வெளியேறாத வாறு தடுக்கப்படுகிறார். ஒரு திசை நோக்கிச் செல்லுவதைத் தடுப்பது ஒன்று; ஓர் எல்லைக்கப்பால் வெளியேறாதவாறு தடுப்பது மற்றொன்று.

ஒருவரை மற்றொருவர் தீய கருத்துடன் ஓர் அறையில் பூட்டி வைப்பது முறையின்றிச் சிறைசெய்வதாகும். ஒரு வீட்டைவிட்டு வெளியில் போகாதவாறு ஒருவரை அந்த வீட்டிற்குள்ளேயே இருக்க வைப்பதும் குற்றம். ஓர் இடத்தைவிட்டு அகன்றால் தாக்கிவிடுவ தாக அச்சுறுத்தி, ஒருவரை அந்த இடத்திலேயே இருக்கச்செய் வதும் சிறைவைத்தலேயாகும்.

சிறைசெய்யப்பட்டது இவ்வளவு காலம் நீடித்திருக்கவேண்டு மென்ற அவசியமில்லை. சிறிது நேரம் சிறை வைக்கப்பட்டாலும் அது குற்றந்தான்.

**கட்டடத்திற்குள் அடைக்கப்படுவதுதான் சிறைசெய்தல் என்பதில்லை**

ஒரு போலீஸ் அதிகாரி ஒருவரைக் கூப்பிட்டுப் போலீஸ் நிலையத்தில் இருக்கும்படி உத்தரவிடுகிறார். இந்த உத்தரவை மீறி வெளியேறினால் தாம் தடுக்கப்படுவோமென்பதை உணர்ந்து, அவர் அவ்வாறே போலீஸ் நிலையத்தில் இருக்கிறார். இவ்வாறு, அவர் இருத்தி வைக்கப்பட்டது 'முறையின்றிச் சிறைசெய்தல்' ஆகும்.

எனவே, சிறை செய்யப்பட்டவர் எல்லைக்கட்டைக் கடந்து வெளியேறாதவாறு பருப்பொருள்களால் தடை ஏற்படுத்தப்பட்டிருத்தல் வேண்டும் என்ற அவசியமில்லை. சிறைசெய்யப்பட்டவர் மனத்தில், தாம் எல்லைக்கட்டைக் கடக்க முயன்றால் தடுக்கப்படலா மென்ற எண்ணம் பதிந்தாலே போதுமானது. இந்த எண்ணத்தால் அவர் எல்லைக்கு அப்பால் வெளியேறாமல் இருந்தாலே, அது சிறைவைத்தல் ஆகிவிடுகிறது. எனவே, சிறைச்சாலை, கட்டடம், அறை இவற்றுக்குள் ஒருவரை அடைக்காமலே ஒருவர் சிறை செய்யப்படலாம்.

'சிறை'யென்றால், அதன் எல்லை பெரிதாக இருக்கலாம், சிறிதாகவும் இருக்கலாம்; கண்ணால் காணக்கூடியதாக இருக்கலாம், காணமுடியாததாகவும் இருக்கலாம்; உண்மையானதாக இருக்கலாம், அல்லது உள்ளக் கருத்தில்மட்டும் இருக்கலாம்; அந்த எல்லை நிலைபெற்றதாக இருக்கலாம் அல்லது மாறுவதாகவும் இருக்கலாம். ஆயினும், சிறைக்கு ஓர் எல்லையுண்டு. அந்த எல்லையைத் தாண்டாதவாறு சிறைப்படுத்தப்பட்டவர் தடுக்கப்படுகின்றார். அதுவே 'முறையின்றிச் சிறைவைக்கும் குற்றம்'—இவ்வாறு கோலிரிட்ஜ் (Coleridge) என்ற நீதிபதி இக் குற்றத்தின் தன்மையை விளக்கியிருக்கிறார்.

திருட்டுக் குற்றத்தில் சம்பந்தப்பட்டிருக்கலாமென்ற சந்தேகத்தில் ஒருவர் போலீஸ் நிலையத்தில் விசாரிக்கப்படுகிறார். அதற்குப் பின்னும் அவர் போலீஸ் நிலையத்திலேயே இரண்டு, மூன்று நாட்கள் தங்கும்படி நிர்பந்திக்கப்பட்டார். அவர் உணவுண்ணுவதற்குப் போலீஸ் காவலுடன் வீட்டிற்கு அனுப்பப்பட்டார். இதுவும் முறையின்றிச் சிறைசெய்தலேயாகும் என்பது தீர்ப்பு.

**முறையின்றிக் கைதுசெய்வதும் முறையின்றிச் சிறைவைத்தல் ஆகிறது**

சில குற்றங்கள் செய்தவர்களைக் கைதுசெய்யவேண்டுமெனில் நீதிமன்றத்தின் 'வாரன்ட்' (warrant) வேண்டும். அவ்வாறு, வாரன்ட் பெறாமல் அக் குற்றங்களுக்கெனக் கைதுசெய்தல் 'முறை

யின்றிச் சிறைசெய்தல்' ஆகும். ஒரு குற்றம் சாட்டப்பட்டவர் குற்ற வழக்கில் விடுதலையாகின்றார்; அதே குற்றத்திற்கு மீண்டும் அவரைக் கைதுசெய்து போலீசார் அழைத்துச் செல்லுவது 'முறை யின்றிச் சிறைசெய்தல்' ஆகும்.

சட்டப்படியான உத்தரவை நிறைவேற்றும் வகையில் ஒருவரைக் கைதுசெய்வதோ, சிறையில் வைப்பதோ குற்றமன்று.

**தண்டனை**

'முறையின்றிச் சிறைசெய்தல்' குற்றத்திற்கு ஓர் ஆண்டுக் காலம்வரை சிறை அல்லது ஆயிரம் ரூபாய் அபராதம் அல்லது இரண்டும் விதிக்கப்படலாம் (342ஆம் பிரிவு).

முறையின்றிச் சிறைவைத்த காலத்தையும் நோக்கத்தையும் ஆய்ந்து, அதற்கேற்பத் தண்டனை விதிக்கப்படுகிறது.

ஒருவரை மூன்று நாட்களுக்கு அல்லது அதற்கு அதிகமான நாட்களுக்கு முறையின்றிச் சிறைவைத்தால், அக் குற்றத்திற்கு இரண்டு ஆண்டுக் காலம்வரை சிறைத்தண்டனை (343ஆம் பிரிவு). அவ்வாறு சிறைவைத்தல் பத்து நாட்களுக்கும் மேலாக நீடித்தால், சிறைவைத்தவருக்கு மூன்றாண்டுக் காலம்வரை சிறைத்தண்டனை உண்டு (344 ஆம் பிரிவு).

ஒருவரை விடுதலை செய்யுமாறு கட்டளை பிறப்பிக்கப்பட்டிருப் பதை அறிந்தும், அவரை முறையின்றிச் சிறைவைத்திருப்பதை நீடித்தால், சிறைவைத்ததற்கான தண்டனை எவ்வளவோ அதோடு சேர்த்து இன்னும் இரண்டாண்டுக் காலம்வரை சிறைத்தண்டனை விதிக்கப்படலாம் (345ஆம் பிரிவு).

ஒருவரை ஒரு போலீஸ் அதிகாரி முறையின்றிச் சிறைவைத் திருக்கிறார். அவரை விடுதலை செய்யுமாறு நீதிமன்றம் உத்தர விடுகிறது. அந்த உத்தரவைப் போலீஸ் அதிகாரி அறிகின்றார். அதற்குப் பின்னும் போலீஸ் அதிகாரி சிறைவைக்கப்பட்டவரை விடுதலை செய்யாமல் சிறைவைத்திருப்பதை நீடித்தால் அது பெருங் குற்றமாகும். முறையின்றிச் சிறை செய்யும் குற்றத்திற்குள்ள தண்டனைக் காலத்தோடு, இன்னும் அதிகமாக இரண்டாண்டுகள் வரை சிறைத்தண்டனை அவருக்கு விதிக்கப்படலாம்.

சிறைவைக்கப்பட்டவரிடம் அக்கறையுள்ளவர்களுக்கோ, பொது அதிகாரிகளுக்கோ, சிறை வைக்கப்பட்டதோ அல்லது சிறை வைக்கப்பட்ட இடமோ தெரியக்கூடாதென்ற கருத்தோடு, ஒருவரை மற்றொருவர் முறையின்றிச் சிறை செய்தலுக்கும் மேலே கண்டவாறு அதிகப்படியான தண்டனை விதிக்கப்படுகிறது.

சிறைவைக்கப்பட்டவரிடமிருந்தோ அல்லது அவரின் நலத்தில் அக்கறையுள்ள மற்றவரிடமிருந்தோ ஒரு பொருளை அச்சுறுத்தி அபகரிக்கும் நோக்கத்துடன், அல்லது

அவர்களைச் சட்ட விரோதமான காரியத்தைச் செய்யுமாறு கட்டாயப்படுத்துவதற்கென்று, அல்லது அவர்களிடமிருந்து ஒரு குற்றம் செய்வதற்கு ஏதுவான ஒரு தகவலைப் பெறுவதற்கென்று

ஒருவரை முறையின்றிச் சிறை செய்யும் குற்றத்திற்கு மூன்றாண்டுக் காலம்வரை சிறையும் அபராதமும் உண்டு (347ஆம் பிரிவு).

குற்றம் செய்ததாக ஒப்புதலைப் பெறவேண்டுமென்றோ, ஒரு குற்றச் செயல்பற்றித் துப்புத் துலக்குவதற்கான தகவல்களைப் பெறுவதற்கென்றோ, ஒரு பொருளை மீண்டும் பெறுவதற்கென்றோ, ஒரு பாத்தியதையை நிறைவேற்றிக்கொள்ளும் கருத்துடனோ மேலே கூறியவாறு ஒருவரை முறையின்றிச் சிறைசெய்தல் குற்றத்திற்கு மூன்றாண்டுக் காலம்வரை சிறையும் அபராதமும் விதிக்கப்படலாம் (348ஆம் பிரிவு).

## முறையின்றிச் சிறைவைத்தல் அடிப்படை உரிமைக்கு முரணானதாகும்

ஒருவரது அடிப்படையான உரிமைகளில் ஒன்று அவர் விருப்பப்படி எங்கும் செல்லுவதாகும். அந்த விருப்பைத் தடை செய்வது அவருக்குத் துன்பம் விளைவிப்பதாகிறது. எனவேதான், குற்றம் செய்தவர்களின் உள்ளத்தை வருத்துவதற்கென்று சிறைத் தண்டனை விதிக்கப்படுகிறது.

சிறையில் ஒருவரை வைப்பது கொடுந்துன்பத்தை விளைவிப்பதால்தான், நீதிமன்ற உத்தரவு இன்றி எவரையும் சிறைவைத்தல் கூடாதென்று அரசியலமைப்புச் சட்டமும் கூறுகிறது. குற்றம் செய்த ஒருவரைப் போலீஸார் கைதுசெய்து காவலில் வைத்திருந்தாலும், கைதுசெய்யப்பட்ட இருபத்துநான்கு மணிநேரத்திற்குள் அவர் மாஜிஸ்ட்ரேட்டுமுன் நிறுத்தப்பட்டு, நீதிமன்றத்தின் உத்தரவைப் பெற்ற பின்னர்தான் மேற்கொண்டு அவரைக் காவலில் வைக்கலாம். அரசியலமைப்புச் சட்டத்தின் 21ஆம் பிரிவு இதை ஓர் அடிப்படை உரிமையாக மக்களுக்கு அளிக்கிறது. அஃதாவது, நீதிபதியின் உத்தரவு அன்னியில் எவரும் இருபத்துநான்கு மணி நேரத்திற்குமேல் போலீஸாரால் சிறைவைக்கப்படுதல் கூடாதென்ற உரிமை அடிப்படை உரிமையாகும்.

தனிப்பட்ட ஒருவர் எவ்வாறு மற்றொருவரை முறையின்றிச் சிறைவைத்தல் கூடாதோ, அவ்வாறே சிறைவைக்கும் அதிகாரம் பெற்ற பொது ஊழியர்களும் அதற்குரிய முறை தவறாமல் நடந்து கொள்ள வேண்டும். ஒருவரைக் கைதுசெய்த போலிஸ் அதிகாரி அவரை நீதிமன்றத்தில் நிறுத்தி, இருபத்துநான்கு மணி நேரத் திற்குள் மேற்கொண்டு காவலில் வைப்பதற்கு உத்தரவு பெறாமல் அவரைக் காவலில் நீடித்து வைத்திருந்தால், அது முறையின்றிச் சிறை வைக்கும் குற்றமாகிவிடும். இவ்வாறு, இக் குற்றத்திற்குத் தனிப்பட்ட ஒருவர் ஆளாவதுபோல் அதிகாரிகளும் பொது ஊழியர்களும் ஆளாகலாம்.

எனவே, முறையின்றிச் சிறைவைத்தல் ஒருவரது அடிப்படை உரிமையைப் பாதிக்கும் குற்றமாகும். இக் குற்றத்தால் விளையும் கேடுகள் பல. பல பெரிய குற்றங்கள் செய்வதற்கு ஏதுவாக முறை யின்றிச் சிறைசெய்தல், முறையின்றித் தடைசெய்தல் என்ற இருவகைக் குற்றங்களும் அமைகின்றன.

## முறையின்றிச் சிறைவைக்கப்பட்டவரை உடனே விடுவிக்கவும் சட்டம் வகை செய்கிறது

ஒருவரை முறையின்றிச் சிறை செய்தவர்களைத் தண்டிப்பது ஒருபுறமிருக்க, சிறை வைக்கப்பட்டவர் உடனே விடுவிக்கப் பெறவேண்டுமென்ற நோக்கத்தோடு அதற்குச் சட்டம் வகை செய்கிறது.

ஒருவர் முறையின்றிச் சிறை வைக்கப்பட்டிருக்கிறாரென்பதை அறிந்ததும், முதல் வகுப்பு மாஜிஸ்ட்ரேட்டு ஒரு வாரன்டைப் பிறப் பித்து, சிறை வைக்கப்பட்டவரைத் தம்முன் கொண்டுவருமாறு உத்தரவிடலாம். அவ்வாறு தம்முன் ஆஜர் செய்யப்பட்டவரை விடுவித்து உத்தரவிடலாம். இவ்வாறு முறையின்றிச் செய்யப் பட்டவரை உடனே விடுவிப்பதற்குக் குற்ற விசாரணை முறைச் சட்டத்தின் (Criminal Procedure Code) 100ஆம் பிரிவு மாஜிஸ்ட் ரேட்டுகளுக்கு அதிகாரமளிக்கிறது.

முறையின்றிச் சிறைவைத்தல் அடிப்படை உரிமையைப் பாதிக்கும் செயலாவதால், எவரும் உயர் நீதிமன்றத்தில் (High Court of Judicature) மனுக் கொடுத்து (Habeas Corpus Petition) சிறைவைக்கப்பட்டவரை விடுவிக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள லாம். சிறை வைக்கப்பட்டவரைத் தம்முன் கொண்டுவந்து நிறுத்தும் படி உயர் நீதிமன்றம் சிறை வைத்திருப்பவருக்கு உத்தரவிடுகிறது. சிறைவைத்திருப்பவர் தனி நபராக இருக்கலாம், அல்லது அரசாங்க

அதிகாரியாக இருக்கலாம். அந்த உத்தரவுக்கிணங்க, சிறைசெய்யப் பட்டவர் ஆஜர் செய்யப்படுகிருர். சிறை வைத்த காரணம் சட்டப்படி முறையானதா என்பதை நீதிமன்றம் ஆராய்ந்து, முறையின்றி அவர் சிறை வைக்கப்பட்டிருந்தால் அவரை உடனே விடுவிக்கும்படி உத்தரவிடுகிறது. இவ்வாறு, உயர் நீதிமன்றத்தில் மனுச்செய்து முறையின்றிச் சிறை செய்யப்பட்டவரை விடுவிக்கும் உரிமையை அரசியலமைப்புச் சட்டம் மக்களுக்கு அளிக்கிறது. இந்த உரிமை, மக்கள் சுதந்திரமாக வாழ்வதற்கு வழிசெய்யும் ஒப்பற்ற உரிமையாகும்.

## ஆளைக் கவர்தலும் ஆளைக் கடத்தலும்
### (Kidnapping and Abduction)

காப்பாளரிடமிருந்து கவர்தல்—'காப்பாளர்' என்பவர் யார்?—கூட்டிச் செல்லலும் ஆசை காட்டி அழைத்தலும்—கவர்ந்து அகற்றிய வுடனேயே குற்றம் நிறைவேறிவிடுகிறது—கவர்ந்து செல்லப்படும் இளை ஞர்களின் சம்மதத்தால் பயனில்லை—பாதுகாப்பு நேரடியாக இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை—தகப்பனின் காப்பிலிருக்கும் குழந் தையைத் தாயே கவர்வதும் குற்றந்தான்—வயதைத் தவருக மதித்தல்—பிச்சை எடுப்பதற்கென்று இள வயதினரைக் கவர்தலும் ஊனப்படுத்துதலும்—இந்திய நாட்டிலிருந்து கவர்ந்து அகற்றல்.

ஆளைக் கடத்துதல்—காப்பாளரிடமிருந்து கவர்தல், ஆளைக் கடத் துதல் இரண்டிற்கும் உள்ள வேறுபாடு—கொலை செய்வதற்கென்று ஆளைக் கவர்தலும் ஆளைக் கடத்தலும் — வலுக்கட்டாய மணத்திற்கு அல்லது புணர்ச்சிக்கென்று பெண்ணைக் கவர்தலும் கடத்துதலும்—ஒழுங் கீனத் தொழிலுக்கென்று வயது வராதோரை விற்பதும், வாங்குவதும், வைத்திருப்பதும்.

ஒருவர் உடலுக்குக் காயம் விளைவித்தோ அன்றி வேறு வகை யிலோ தீங்கு விளைவிப்பது ஒரு புறமிருக்க, ஆளையே கடத்திச் சென்று தீங்கு விளைவிப்பதுமுண்டு.

பெற்ருேர்களும், பிள்ளைகளும், மற்ற உறவினர்களும் கூடியிருந்து வாழ்கின்றனர். பிள்ளைகளைப் பெற்ருேர்களிடமிருந்து பிரித் தெடுத்துச் சென்று தீங்கை விளைவிக்கலாம். வயது வராத இளஞ் சிறுவர்களையும் சிறுமிகளையும் வஞ்சித்து ஏமாற்றிக் கவர்ந்து சென்று, அவர்களைத் தகாத முறையில் பயன்படுத்தி அவர்கள் வாழ்வினைக் கெடுக்கலாம். இவ்வாருன செயல்களைக் கொடுங் குற்றங்களெனச் சட்டம் விதிக்கின்றது.

**காப்பாளரிடமிருந்து கவர்தல் (Kidnapping from lawful guardian-ship)**

சட்டப்படியான பாதுகாப்பாளரின் (lawful guardian) சம்மதமின்றி,

அவருடைய பராமரிப்பிலிருந்து,

பதினாறு வயதிற்குட்பட்ட ஒரு பெண்ணையோ, பதினெட்டு வயதிற்குட்பட்ட ஓர் ஆணையோ, சித்த சுவாதீனமில்லாதவரையோ கூட்டிச் செல்லுதல் அல்லது ஆசைகாட்டி அழைத்துக் கவர்தல் குற்றமாகும்.

இக் குற்றம் 'காப்பாளரிடமிருந்து கவர்தல்' (Kidnapping from lawful guardianship) எனப்படும் (361 ஆம் பிரிவு).

**'காப்பாளர்' என்பவர் யார்?**

பெற்றோர்கள் தம் பிள்ளைகளைப் பேணி வளர்க்கின்றனர். சின்னஞ் சிறு குழந்தைகளைச் சீராட்டி வளர்ப்பது பெற்றோர்களின் வாழ்விற்கு இன்பம் அளிப்பதாகும். குழந்தைப் பருவம் நீங்கி, இளம்பருவம் அடைந்தபின், அவர்களது கல்வியிலும் நலத்திலும் கருத்துக்கொண்டு ஆர்வத்துடன் அவர்களை வளர்த்துப் பயில்விக்கின்றனர். இந்த முறையான பாதுகாப்பில்தான் இளைஞர்கள் இனிது வளர முடியும்.

பொதுவாக, வயது வராத பிள்ளைகளுக்கு அவர்களது பெற்றோர்களே காப்பாளர்களாக (guardians) இருக்கின்றனர். அதிலும், தகப்பனாரே தம் பிள்ளைகளின் காப்பாளராக இருப்பதற்குச் சட்டப்படி உரிமையுடையவர். தகப்பனார் இறந்துவிட்டால் தாயார் காப்பாளராக இருக்கின்றார். பெற்றோர்கள் இல்லாத குழந்தைகளுக்குக் காப்பாளராக, அவர்களை யார் வளர்த்துப் பாதுகாக்கின்றனரோ அவர்கள் இருக்கின்றனர்; அல்லது நீதி மன்றத்தால் நியமிக்கப்பட்டவர்கள் காப்பாளராக இருப்பதுமுண்டு. இந்தப் பாதுகாப்பாளர்களின் பராமரிப்பு, சிறுவர்களும் சிறுமிகளும் வளர்ந்து நல்வாழ்வு வாழ்வதற்கு அவசியமானதாகும். பெற்றோர்களின் பேணுதல் குழந்தைகளுக்கு, குழந்தைகளின் வளர்ச்சிக்கு இன்றியமையாதது. எனவே, பெற்றோர்கள் தம் பிள்ளைகளைத் தம் வசமே வைத்துப் பாதுகாப்பது அவர்களது ஒப்பற்ற உரிமையாகும். அந்த உரிமைக்கு எதிரானதாகும், 'காப்பாளரிடமிருந்து கவர்தல்' என்ற குற்றம்.

**கூட்டிச் செல்லுதலும் ஆசைகாட்டி அழைத்தலும்**

கவர்ந்து செல்லுவதென்றால், ஏதோ வலுவந்தமாக ஒருவரைக் கட்டாயப்படுத்திக் கூட்டிச் செல்லவேண்டுமென்ற அவசியமில்லை. சிறு குழந்தைகளுக்கு ஆசை காட்டி அவர்களை அழைத்துப் போவதும் (enticing) கவர்ந்து செல்லுவதேயாம். நேரடியாகக் குழந்தைகளைப் பெற்றோரிடமிருந்து எடுத்துச் செல்லுதல் எவ்வாறு

குற்றமோ, அவ்வாறே குழந்தைகளுக்கு ஆசைகாட்டி மயக்கி அழைப்பதும் குற்றமாகிறது. 'நீ உன் பெற்றோர்களிடமிருந்து வந்துவிடு; உன்னை சினிமாவில் நடிப்பதற்குச் சேர்த்துவிடுகிறேன்' என்று சென்னையிலிருந்து ஒருவர் மதுரையிலுள்ள ஒரு சிறுமிக்குக் கடிதம் எழுதுகின்றார். அந்த ஆசையால் சிறுமி தன் வீட்டை விட்டுச் சென்னைக்கு வருகின்றாள். இது ஆசைகாட்டி அழைத்துக் கவர்தல் ஆகும்.

சிறு குழந்தைகள் தங்கள் வாழ்விற்கு எது நல்லதென்பதை அறியாத நிலையிலுள்ளவர்கள். எனவே, அவர்களை ஆசை காட்டி அழைத்து, அவர்களின் பெற்றோர்களின் பாதுகாப்பிலிருந்து வெளிவரச் செய்வது எளிதாகிறது. ஆதலால், ஒரு குழந்தை, மனம் இசைந்து தம்மிடம் வந்ததாகக் கூறி, ஆசைகாட்டி அழைத்தவர் தப்புவது முடியாது.

### கவர்ந்து அகற்றியவுடனேயே [illegible] நிறைவேறிவிடுகிறது

காப்பாளரின் பாதுகாப்பிலிருந்து சிறுவரைக் கவர்ந்து அகற்றியவுடனேயே இக் குற்றம் நிறைவேறிவிடுகிறது. கவர்ந்த செயலே குற்றமாகிவிடுவதால், கவரப்பட்ட சிறுவர்கள் எவ்வளவு நாள் அயலாருடன் வைக்கப்பட்டனர் என்பது முக்கியமன்று.

### கவரப்படும் இளைஞர்களின் சம்மதத்தால் பயனில்லை

இப்படிக் கடத்திச் செல்லப்படுபவர்கள் வயது வராத இளம் பருவத்தினர்களாகவும், சித்த சுவாதீனமில்லாதவர்களாகவும் இருப்பதால், அவர்களுடைய சம்மதத்தைப் பெற்றதால் மட்டும் குற்றச் செயல் மாறுவதில்லை. கவர்ந்து செல்லப்பட்ட சிறுவர் சிறுமியர் சம்மதம் இருந்தாலும் இல்லாவிட்டாலும், கவர்ந்து செல்வது குற்றமேயாகும். காப்பாளரின் சம்மதம் இருந்தால்தான் அவர்களின் காப்பிலிருந்து பிள்ளைகளை அகற்றலாம். அது குற்றமாவதில்லை.

### பாதுகாப்பு நேரடியாக இருக்கவேண்டும் என்ற அவசியமில்லை

பாதுகாப்பாளர்களது நேரடியான பாதுகாப்பில்தான் குழந்தைகள் இருக்கவேண்டுமென்பது அவசியமில்லை. சில வேளைகளில் ஒரு சிறுவன் தன்னுடைய பெற்றோரைப் பிரிந்து, இன்னோர் இடத்திற்குச் சென்று இருக்கலாம். அப்பொழுதும் அவன் தனது பெற்றோர்களின் பாதுகாப்பில் இருப்பதாகவே சட்டம் கருதுகிறது. எனவே, அவன் சென்றுள்ள இடத்திலிருந்து ஒருவர் அவனைக் கவர்வதும் குற்றமேயாகும்.

சட்டப்படியான பாதுகாப்பாளர்கள் என்றால், பெற்றோர்களாகவோ அல்லது நீதிமன்றத்தால் நியமிக்கப்பட்ட கார்டியன்

களாகவோ இருக்கின்றனர் என்று கண்டோம். ஒரு சிறுவன் ஒரு பள்ளியில் சேர்க்கப்பட்டு, அங்குள்ள விடுதியில் தங்கலாம். இப்பொழுது அவன் அந்த விடுதி மேலாளரின் கண்காணிப்பில் இருக்கின்றான். இந் நிலையில் விடுதி மேலாளரையே அப்போதைய பாதுகாப்பாளராகச் சட்டம் கருதுகிறது. எனவே, விடுதியிலிருக்கும் சிறுவனைக் கடத்திச் செல்வது பாதுகாப்பாளரின் பராமரிப்பி லிருந்து கடத்திச் செல்வதேயாகும். இளவயதினர் எவருடைய மேற்பார்வையில் முறைப்படி ஒப்புவிக்கப்பட்டிருக்கின்றனரோ, அவரே சட்டப்படியான பாதுகாப்பாளராகக் கருதப்படுகின்றார். ஆதலால், அவருடைய ஆளுகையிலிருந்து சிறுவர்களைக் கவர்ந்து அகற்றுவது குற்றமாகிறது.

### தகப்பனின் காப்பிலிருக்கும் குழந்தையைத் தாயே கவர்வதும் குற்றந்தான்

பிள்ளைகளுக்குச் சட்டப்படியான காப்பாளர் தகப்பனேயாவ தால், தகப்பனின் சம்மதமின்றி மணமுடித்துக் கொடுக்கவேண்டு மென்ற கருத்துடன் ஒரு பெண்ணைத் தாயாரே கவர்ந்து சென்றாலும் அது குற்றமாகும்.

சில வேளைகளில் பிள்ளைகளுக்குக் காப்பாளராகத் தாயையே நீதிமன்றம் நியமித்திருக்கலாம். இந் நிலையில் அந்தப் பிள்ளைகளைத் தகப்பனார் தாயின் காப்பிலிருந்து கவர்வது குற்றமாகும்.

அம் மாதிரியே கணவனின் காப்பிலுள்ள இளம் பெண்ணை, பெண்ணின் பெற்றோர்கள் கவர்ந்து செல்லுதலும் குற்றந்தான்.

பெற்றோர்களின் அல்லது காப்பாளர்களின் கொடுமை தாங்காது ஒரு சிறுவன் அவர்களது காப்பிலிருந்து தானாகவே அகன்று சென்றுவிடுகிறான். சில நாட்கள் கழிந்து அவனை ஒருவர் வேலைக்கு வைத்துக்கொள்கிறார் எனில், இது அச் சிறுவனைப் பெற்றோரின் காப்பிலிருந்து கவருவதாகாது. ஏனெனில், சிறுவன் தானாகவே அந்தக் காப்பிலிருந்து அகன்று வந்துவிட்டான்.

### வயதைத் தவறாக மதித்தல்

ஒரு சிறுவனின் வயது பதினெட்டு என்று கருதி, அவனை அவனது பெற்றோர்களின் பாதுகாப்பிலிருந்து ஒருவர் கவர்ந்து செல்கிறார். ஆனால், உண்மையில் அந்தச் சிறுவனுக்கு வயது பதினாறுக்கும் குறைவாகவே ஆகின்றது. இப்பொழுது, கவர்ந்து சென்றவர், தாம் தவறுதலாக வயதை நினைத்ததால் இந்தக் குற்றம் விளைந்ததென்று கூறித் தப்புவதற்கு முடியுமா? முடியாது.

குற்ற இயல் சட்டத்தில், வயதைப் பொறுத்த தவறுதல்கள் சமாதானமாக ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. கவர்ந்து செல்லுதலே ஒரு தீங்குச் செயலாகும். அவ்வாறு ஒரு செயலைச் செய்தவர் அதனால் விளையும் பலனை அனுபவித்தே தீரவேண்டும். வயதைத் தவருக நினைத்துக்கொண்டதால் அந்தத் தீங்குச் செயலைச் செய்தேன் என்று ஒருவர் வாதாடுவதைச் சட்டம் ஏற்பதில்லை.

ஒரு வழக்கில், கவர்ந்து செல்லப்பட்ட பெண், தனது வயதை அதிகமாகக் கூறி, கவர்ந்து சென்றவரை நம்பச் செய்தாள். அப்படியிருந்தும், கவர்ந்து சென்ற செயல் குற்றமேயாகுமென்று தீர்ப்பளிக்கப்பட்டது.

இவ்வாறு, ஒருவர் தவருக வயதை மதிப்பிடுவதைத் தக்கதொரு சமாதானமாக ஏற்பதென்ருல், இந்தக் குற்றத்தைச் செய்யும் பலரும் இதே சமாதானத்தைக் கூற முற்படுவர்.

'காப்பாளரிடமிருந்து கவர்தல்' என்ற இக் குற்றத்திற்கு ஏழு ஆண்டுக் காலம்வரை சிறையும் அபராதமும் தண்டனையாகும்.

## பிச்சையெடுப்பதற்கென்று இளவயதினரைக் கவர்தலும் ஊனப்படுத்துதலும்

(Kidnapping or maiming a minor for purposes of begging)

நம் நாட்டில் இரந்து உயிர் வாழ்தல் ஓர் இழிசெயலாகச் சிலரால் கருதப்படுவதில்லை. ஈதல் ஒரு நல்ல செயலென்று அற நூல்கள் கூறுவதால், இரந்து வாழ்தலும் இழிவற்ற செயலாகக் கருதப்படுகிறது. உண்மையில், நம் முன்னேர்கள் இரந்து உயிர் வாழ்தலை என்றுமே உயர்ந்ததாகக் கருதியதில்லை. மனிதர்கள் இரந்துதான் உயிர் வாழவேண்டுமென்று கடவுள் அவர்களைப் படைத்திருந்தாஞனல், அந்தக் கடவுளே பரந்து கெடுவாஞக என்று வள்ளுவர் சீற்றமுடன் கூறியிருக்கின்ருர். 'ஈ என இரத்தல் இழிந்தன்று' (இழிந்தது) என்பது சங்கப் புலவரின் வாக்கு. இவ்வாறு இரந்து உயிர்வாழ்தல் இழிவுடைத்து என்பதை எத்தனையோ அறிஞர்களும் புலவர்களும் கூறியிருந்தாலும், பொதுவாக மக்கள் ஈதலை ஒரு நல்லறமாகவும், இரத்தலை ஓர் இழிவற்ற செயலாகவும் கருதும் நிலை இன்றும் இருக்கிறது.

இரந்து உயிர்வாழ்வோர் பிறர் ஈதலைப் பெறுவதற்குப் பல வழிகளைக் கையாளுகின்றனர். வயதுவந்த ஒருவர் பசியால் வாடுவதாகப் பிச்சை கேட்டால் பலரும் பிச்சை போடுவதில்லை. ஆதலால், சின்னஞ் சிறுவர்களைப் பிச்சையெடுப்பதற்கென்று பழக்கி, அவர்கள் மூலமாகப் பிச்சையெடுப்பவர்கள் உண்டு. சின்னஞ் சிறுவர்களும் சிறுமியரும் பசியால் வாடிய நிலையில்

யாரிடமாவது பணமோ, வேறு பொருளோ கேட்டால், இல்லையென்று சொல்ல எவருக்கும் மனம் வருவதில்லை. எனவே, சின்னஞ் சிறு குழந்தைகளைப் பிச்சையெடுக்கும் இழிந்த தொழிலிலே பழக்கி, அதன்மூலம் உயிர்வாழும் கடையர்கள் இருக்கின்றனர்; இந்தத் தொழிலுக்கென்று சிறுவர்களைக் கவர்ந்தும் செல்கின்றனர்.

இவ்வாறு பிச்சையெடுப்பதற்கென்று பயன்படுத்தும் நோக்கத்துடன் சிறுவர்களைக் கவர்ந்து செல்லுதலைப் பெருங் குற்றமெனச் சட்டம் விதிக்கின்றது. இதற்கெனக் கவர்ந்து செல்லப்படும் சிறுவர்கள் பாதுகாப்பாளர்களுடைய காப்பில் இருந்தாலும் இல்லாவிட்டாலும், கவர்ந்து செல்லுதல் குற்றமேயாகும். பிச்சையெடுக்க வைக்கும் அல்லது அதற்குப் பயன்படுத்தும் நோக்கத்துடன் பாதுகாப்பாளர்களிடமிருந்து பிள்ளைகளை ஒருவர் ஏற்றுக் கொள்வதும் குற்றமேயாம். இந்தக் குற்றத்திற்குப் பத்து ஆண்டுக் காலம்வரை சிறையும் அபராதமும் தண்டனையாகும் (363-A பிரிவு).

### பிச்சையெடுப்பதற்கென்று சிறுவர்களின் உடலை ஊனப்படுத்தல்

பசியென்று கேட்கும் சிவர்களைக் கண்டு பரிந்து பிச்சையிடும் பண்பு நம்மிடம் இருக்க, அதுவும் போதாதென்று அந்தப் பிள்ளைகளின் உறுப்புகளுக்கு ஊனம் ஏற்படுத்தி,—அதைக் காட்டிப் பிச்சையெடுக்கும் பாதகர்களும் நம்மிடையே இருக்கின்றனர். இவ்வாறு, பிள்ளைகளின் உறுப்புகளுக்கு ஊனமேற்படுத்தும் குற்றத்திற்கு ஆயுட்காலச் சிறைத் தண்டனை விதிக்கப்படலாம் (363-A பிரிவு).

இந்தப் பிரிவைப் பொறுத்து, வயதுவராத பிள்ளைகள் என்றால், பதினறு வயதிற்குக் குறைந்த ஆணையும், பதினெட்டு வயதிற்குக் குறைந்த பெண்ணையுமே குறிக்கிறோம்.

### 'பிச்சையெடுத்தல்' (Begging) என்றால் என்ன?

பிச்சையெடுப்பதென்றால் என்னவென்பதும் சட்டத்தில் விளக்கப்பட்டிருக்கிறது.

பொது இடங்களில் பாடுதல், ஆடுதல், குறிசொல்லுதல், தந்திரச் செயல்களைச் செய்து காட்டுதல், பொருள்களை விற்றல்—இந்த முறைகளில் ஒன்றைக் கையாண்டு பிச்சையெடுத்தல் ஒரு வகை;

காயத்தையோ, ஊனத்தையோ, நோயையோ காட்டிப் பிச்சையெடுத்தல் ஒருவகை;

இளம்பிள்ளைகளைக் காட்டிப் பிச்சை கேட்பது ஒருவகை.

இந்த எல்லா வகைச் செயல்களும் 'பிச்சையெடுத்தல்' என்ற சொல்லில் அடங்குவனவாகும் (363-A பிரிவு).

363-A என்ற பிரிவு 1959ஆம் ஆண்டில்தான் இந்தியக் குற்ற இயல் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.

இவ்வாறு, பச்சிளங் குழந்தைகளைப் பயன்படுத்தி இரந்து உயிர் வாழுவதற்கென்று குழந்தைகளைக் கவர்தலும், அவர்களுக்கு ஊனம் ஏற்படுத்தலும் பெருங் குற்றமாகும். இந்தப் பிரிவு அக் குற்றத்திற்குக் கடுந்தண்டனை அளிக்கின்றது.

### இந்திய நாட்டிலிருந்து கவர்ந்து அகற்றல் (Kidnapping from India)

ஒருவரை இந்திய நாட்டின் எல்லைக்கப்பால் அவருடைய சம்மதமின்றி அகற்றுவது குற்றமாகும். இது 'இந்திய நாட்டிலிருந்து கவர்ந்து அகற்றல்' என்ற குற்றமாகிறது (360ஆவது பிரிவு). இக் குற்றத்திற்கும் ஏழு ஆண்டுக் காலம்வரை சிறையும் அபராதமும் தண்டனையாகும் (363ஆவது பிரிவு).

ஆளைக் கவர்தல் (kidnapping) என்பது இருவகைப்படும். ஒன்று 'காப்பாளரிடமிருந்து கவர்தல்'; மற்றொன்று 'இந்திய நாட்டிலிருந்து கவர்ந்து அகற்றல்.' இந்த இரண்டு செயல்களும் குற்றங்களாகின்றன.

## ஆளைக் கடத்துதல் (Abduction)

ஒருவர் மற்றொருவரை வலுக்கட்டாயப்படுத்தியோ, அல்லது வஞ்சனையால் ஏமாற்றித் தூண்டியோ ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குப் போகும்படி செய்வது 'ஆளைக் கடத்துதல்' (abduction) எனப்படும் (363ஆம் பிரிவு).

### 'காப்பாளரிடமிருந்து கவர்தல்', 'ஆளைக் கடத்துதல்' இரண்டிற்குமுள்ள வேறுபாடு

'காப்பாளரிடமிருந்து கவர்தல்' என்ற குற்றத்தில் இளவயதினரும், சித்த சுவாதீனமில்லாதவரும் பாதிக்கப்படுகின்றனர்; 'ஆளைக் கடத்துதல்' என்ற செயல் வயதுவந்தவர்களுக்கு எதிராகச் செய்யப்படுவது. முதற் குற்றத்தில் காப்பாளரின் பராமரிப்பிலிருந்து அகற்றப்படுகின்றனர்; இரண்டாவதில் எவருடைய பராமரிப்பிலிருந்தும் அகற்றப்படவில்லை. முதற் குற்றத்தில் கூட்டிச் செல்வதும், ஆசைகாட்டி அழைத்தலும் குற்றமாகின்றன; இரண்டா டாவதில் வலுக்கட்டாயத்தால், அல்லது வஞ்சனையால் ஏமாற்றித் தூண்டுவதால் ஒரு நபர் கடத்தப்படுகிறார். காப்பாளரிடமிருந்து

கவரும் குற்றத்தில் கடத்துபவரின் நோக்கத்தைப்பற்றிச் சட்டம் கவனிப்பதில்லை. ஆளைக் கடத்தும் செயலில் அதன் நோக்கத்தை வைத்தே அச் செயலின் குற்றத்தன்மை உறுதி செய்யப்படுகிறது. 'ஆளைக் கடத்துதல்' ஒரு தனிப்பட்ட குற்றமாவதில்லை. அது எந்தக் கருத்தோடு செய்யப்படுகிறதோ அதை வைத்து அச் செயலுக்கான தண்டனை விதிக்கப்படுகிறது.

**கொலைசெய்வதற்கென்று ஆளைக் கவர்தலும் கடத்தலும்**

கொலை செய்யவேண்டுமென்றோ, அல்லது கொலை செய்யப்படும் ஆபத்திற்கு உள்ளாக்கவேண்டுமென்றோ ஆளைக் கவர்வதும், ஆளைக் கடத்துவதும் பெருங் குற்றமாகும். அதற்கு ஆயுட்காலச் சிறை அல்லது அபராதம் தண்டனை (364ஆம் பிரிவு).

மறைவாகவும் முறையின்றியும் சிறை வைக்கும் கருத்துடன் ஆளைக் கவர்தலும், ஆளைக் கடத்தலும் குற்றமாகும். அதற்கு ஏழு ஆண்டுக் காலம்வரை சிறையும் அபராதமும் தண்டனை உண்டு (365ஆம் பிரிவு).

**வலுக்கட்டாய மணத்திற்கு அல்லது புணர்ச்சிக்கென்று பெண்ணைக் கவர்தலும் கடத்தலும்**

ஒரு பெண்ணின் விருப்பத்திற்கு மாறாக, அவளைக் கட்டாயப்படுத்தி ஒருவருக்கு மணம் செய்யவேண்டுமென்ற கருத்துடனோ, அல்லது

ஒரு பெண்ணை முறையற்ற புணர்ச்சிக்குக் கட்டாயப்படுத்த அல்லது ஆசைகாட்டி இசையச் செய்ய வேண்டுமென்ற கருத்துடனோ,

அவளைக் கவர்தல், அல்லது அவளைக் கடத்துதல் குற்றமாகும். இக் குற்றத்திற்குப் பத்தாண்டுக் காலம்வரை சிறையும் அபராதமும் தண்டனை உண்டு (366ஆம் பிரிவு).

வேறொருவருடன் முறையற்ற புணர்ச்சிக்குக் கட்டாயப்படுத்தும் அல்லது ஆசைகாட்டி இசையச் செய்யும் கருத்துடன், ஒரு பெண்ணை மிரட்டியோ, அதிகாரத்தை முறைதவறிப் பயன்படுத்தியோ, வேறு நிர்ப்பந்தங்களைக் கையாண்டோ ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் செல்லும்படி செய்வது பெருங் குற்றமாகும். இதற்கு மேலே கூறியபடி தண்டனை உண்டு (366ஆம் பிரிவு).

மங்கையர்களுக்கு அணிகலமாக இருப்பது அவர்களது மங்காதகற்பேயாகும். அதைப் பறிப்பதற்கென்று இழைக்கப்படும் 'ஆளைக்-

கவர்தல்', 'ஆளைக் கடத்துதல்' குற்றங்களைச் சட்டம் வன்மையாகத் தண்டிக்கின்றது.

வேறொருவருடன் முறையற்ற புணர்ச்சிக்குக் கட்டாயப்படுத்துவதற்கோ, ஆசைகாட்டி இசையச் செய்வதற்கோ என்று பதினெட்டு வயதிற்குக் குறைந்த ஒரு பெண்ணை ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் செல்லும்படி அல்லது வேறு ஏதாவது செய்யும்படி தூண்டுவது குற்றமாகும். அதற்கும் பத்தாண்டுக் காலம் வரை சிறை, அபராதம் தண்டனை. மேலே கூறப்பட்ட தீய கருத்தோடு இருபத்தொரு வயதுக்குக் குறைந்த ஒரு பெண்ணை அயல்நாட்டிலிருந்து இந்தியாவிற்குள் கொண்டுவருவதும் குற்றம் ஆகும் (366-A,B பிரிவுகள்).

கவரப்பட்ட அல்லது கடத்தப்பட்ட ஆட்களை முறையற்ற வகையில் மறைத்துவைத்தலும் அடைத்துவைத்தலும் குற்றமாகும். ஆளைக் கவர்தலுக்கும், ஆளைக் கடத்தலுக்கும் உரிய தண்டனை இக் குற்றத்திற்கும் உண்டு.

பத்து வயதுக்குட்பட்ட ஒரு குழந்தை அணிந்திருக்கும் பொருள்களைத் திருடும் நோக்கத்தோடு அதைக் கவர்ந்தாலும் கடத்தினாலும் ஏழாண்டுக் காலம்வரை சிறை, அபராதம் உண்டு (369ஆம் பிரிவு).

**ஒழுங்கீனத் தொழிலுக்கென்று வயது வராதோரை விற்பதும், வாங்குவதும், வைத்திருப்பதும்**

பதினெட்டு வயதிற்குக் குறைந்த ஒருவரை விபசாரத்தில் ஈடுபடுத்துவதற்கோ, முறையற்ற புணர்ச்சிக்கு உள்ளாக்குவதற்கோ, அல்லது சட்டவிரோதமான, ஒழுங்கீனமான செயல்களில் ஈடுபடுத்துவதற்கோ என்று அவரை விற்பது அல்லது ஊதியங் கருதி உழைக்கவிடுவது, விலைக்கு வாங்குவது, வைத்திருப்பது—இக் குற்றங்களுக்குப் பத்தாண்டுக் காலம்வரை சிறையும் அபராதமும் தண்டனையாகும் (372, 373ஆம் பிரிவுகள்).

## இசைவிலாப் புணர்ச்சி (Rape) அல்லது வன்முறைப் புணர்ச்சி

கரைகடந்த நீர் வெள்ளமாகிறது, வரைகடந்த காமம் குற்றமாகிறது—'இசைவிலாப் புணர்ச்சி' என்பது என்ன?—'இசைவுக்கு மாறானது', 'இசைவு இல்லாதது' இரண்டிற்கும் உள்ள வேறுபாடு—அச்சுறுத்திப் பெற்ற சம்மதமும் வஞ்சித்து வாங்கிய சம்மதமும்—பதினாறு வயதிற்குக் குறைந்த பெண்கள்—கணவனும் மனைவியும்—தண்டனை.

**கரைகடந்த நீர் வெள்ளமாகிறது; வரைகடந்த காமம் குற்றமாகிறது**

பயிர்களுக்கு உயிரூட்டும் ஆற்று நீர் பெருவெள்ளமாக மாறிவிட்டால் பயிர்களையே அழித்துவிடுகின்றது. இரு கரைகளுக்கும்

அடங்கி இனிது செல்லும் நீரோட்டத்தை நதி என்றழைக்கிறோம்; கரைகளை உடைத்துச் செல்லும் நீர்ப்பெருக்கை வெள்ளம் என்கிறோம். நதியின் நீரால் நலம் விளைகிறது; வெள்ளப் பெருக்கால் நாசம் விளைகிறது. ஒழுங்குக்கு அடங்கி ஓடும் நீர் உயிர்களை அளிக்கிறது; ஒழுங்கு மீறிப் பெருகும் வெள்ளம் உயிர்களை அழிக்கிறது. ஒன்றால் விளைவது இன்பம்; மற்றொன்றால் விளைவது துன்பம். ஆற்றினது நீர்தான், வரம்பு கடந்து வெள்ளமாக மாறியதும் வெறும் அழிவுக்குக் காரணம் ஆகிறது. இம்மாதிரியே இன்பம் பயக்கும் காமவுணர்வு, வரம்பு கடந்துவிடில் துன்பம் பயக்கிறது. ஒழுங்குக்குக் கட்டுப்படாத காமம் மிருக இச்சையாக மாறிவிடுகிறது. கரைகடந்த நீர் கேடு விளைக்கும் வெள்ளமாவதுபோல், வரைகடந்த காமம் துன்பம் பயக்கும் குற்றமாகிறது. உயிரை அளிக்கும் அந்தக் காமவுணர்வு, உயர்வை அழிக்கும் இழிந்த உணர்வாக மாறிவிடுகின்றது.

'காதலர் இருவர் கருத்தொருமித்து ஆதரவுபட்டதே இன்பம்' என்பது உயர்ந்தோர் வாக்கு. கருத்தொன்றாக் காதல் இல்லை; காதலின்றி இன்பம் இல்லை. கருத்தொருமித்து ஆதரவு தேடாத காதல் துன்பத்தையே தோற்றுவிக்கிறது. கருத்தொன்றாக் காமப் புணர்ச்சியைக் கடுங்குற்றமாகச் சட்டமும் விதிக்கிறது.

உலகியல் மரபுப்படி ஒரு பெண்ணின் ஒப்பற்ற செல்வம் அவளது கற்பேயாகும். கற்பென்னும் திண்மையுடைய பெண்ணை விடப் பெருமையுடையது வேறு இல்லை என்கிறார் வள்ளுவர்:

> 'பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
> திண்மை யுண்டாகப் பெறின்' (குறள், 54)

இத்தகைய பெருமையுடைய கற்பினைக் களவாடுவது, ஒரு பெண்ணைக் கொலைசெய்வதற்கொப்பான கொடிய செயலாகும். காம வெறியால் அறிவிழந்து, அவளின் சம்மதம் இன்றி, வன்முறையில் ஒரு பெண்ணைப் புணரும் பேதமைச் செயலை 'இசைவிலாப் புணர்ச்சி' (வன்முறைப் புணர்ச்சி—rape) என்று கூறுகிறோம். பெண்ணின் இசைவு இல்லாமல் அவளைப் புணர்தல் இசைவிலாப் புணர்ச்சி ஆகின்றது. கருத்தொருமிக்காத கயமைப் புணர்ச்சியே இசைவில்லாத புணர்ச்சியாகும் (இசைவில் புணர்ச்சியாகும்) என்பதைச் சட்டம் தெளிவாகக் கூறுகிறது.

**'இசைவிலாப் புணர்ச்சி' (வன்முறைப் புணர்ச்சி—Rape) என்பது என்ன?**

1. (i) ஒரு பெண்ணின் இச்சைக்கு மாறாகவோ,

(ii) ஒரு பெண்ணின் இசைவு இல்லாமலோ,

(iii) அவளுக்கு மரணம் அல்லது காயம் விளைவிக்கும் நிலையில் அவளை வைத்து அச்சுறுத்தி அதனால் பெற்ற சம்மதத்துடனோ,

(iv) முறைப்படி மணந்த கணவன் என்று தன்னை ஒரு பெண் தவறாக நம்பி அதனால் சம்மதத்தை அளிக்கிறாள் என்பதைத் தெரிந்தும், அந்தச் சம்மதத்துடனோ

அப் பெண்ணைப் புணர்பவன் 'இசைவிலாப் புணர்ச்சி' செய்த குற்றத்திற்கு ஆளாகின்றான்.

2. அவளது சம்மதத்தைப் பெற்றிருந்தாலும், பதினாறு வயதிற்குக் குறைந்த பெண்ணைப் புணர்வது 'இசைவிலாப் புணர்ச்சி'யேயாகும்.

3. கணவன் தனது மனைவியுடன் கூடுவது மனைவியின் சம்மதம் இன்றி இருந்தாலுங்கூட, 'இசைவிலாப் புணர்ச்சி' ஆகாது; ஆனால், மனைவியின் வயது பதினைந்திற்குக் குறையாமல் இருத்தல் வேண்டும்.

4. முடிவடைந்த புணர்ச்சிதான் குற்றம் என்பதன்று; பெண்ணுறுப்பினுள் ஆணுறுப்புப் புகுந்தாலே போதுமானது; அதுவும் புணர்ச்சியெனவே கொள்ளப்படுகிறது. இவ்வாறு, 'இசைவிலாப் புணர்ச்சி' என்ற குற்றச் செயலின் விளக்கத்தை 375ஆம் பிரிவில் காண்கிறோம். இதனை 'வன்முறைப் புணர்ச்சி' என்றும் கூறலாம்.

## 'இச்சைக்கு மாறானது', 'இசைவு இல்லாதது' இரண்டிற்கும் உள்ள வேறுபாடு

மேலே கூறப்பட்ட விளக்கத்தில் ஒரு பெண்ணின் இச்சைக்கு மாறாகப் புணர்வதும், அவளின் இசைவு இன்றிப் புணர்வதும் குற்றங்கள் என்று காண்கிறோம். 'இச்சைக்கு மாறாக' என்று கூறுவதற்கும், 'இசைவு இல்லாமல்' என்று கூறுவதற்கும் உள்ள வேறுபாட்டை நாம் அறிதல் வேண்டும். ஒரு பெண் தனது சுய நினைவோடு, தன்னறிவோடு இருக்கும் நிலையில் அவளது விருப்பத்தை வெளிப்படுத்த முடிகிறது; புணர்ச்சிக்கு அவள் சம்மதிக்கவில்லை. அவள் அவ்வாறு சம்மதம் அளிக்க மறுத்த நிலையில் அவளைப் புணர்தல் அவளது இச்சைக்கு மாறான செயலாகிறது. ஒரு பெண் சித்த சுவாதீனமற்று இருக்கலாம்; அல்லது போதையால் மதிமயங்கிய நிலையில் இருக்கலாம். இவ்வாறு சுயநினைவற்ற ஒரு பெண்ணால் சம்மதம் அளிக்கவே முடியாது. தூங்கிக்கொண்டிருக்கும் பெண்ணால் தனது இசைவையோ, இசைவின்மையையோ

எவ்வாறு கூற முடியும்? இந் நிலையிலுள்ள பெண்ணைப் புணர்தல் அவளது சம்மதமின்றி, இசைவின்றிப் புணர்தலாகிறது. சுய நினைவோடு உள்ள பெண் மறுத்தும் அவளைப் புணர்தல், அவளது இச்சைக்கு மாருன செயலாகும்; சுயநினைவில்லாத பெண்ணைப் புணர்தல் அவளது இசைவு இல்லாத செயலாகும். பெண்ணின் இச்சைக்கு மாருன செயல் ஒன்று, இசைவு இல்லாத செயல் மற்ருென்று. இந்த இருவகைச் செயல்களையும் குறிப்பதற்கென்றே அவளது 'இச்சைக்கு மாருக' (against her will) என்றும், அவளது 'இசைவு இல்லாமல்' (without her consent) என்றும் இருவகைப் படுத்திக் கூறப்பட்டிருக்கிறது.

## அச்சுறுத்திப் பெற்ற சம்மதமும் வஞ்சித்து வாங்கிய சம்மதமும்

அச்சுறுத்திப் பெற்ற சம்மதமும் வஞ்சகத்தால் வாங்கிய சம்மதமும் உண்மையான சம்மதம் ஆவதில்லை. இவ்வகையில் பெற்ற சம்மதத்தைச் சட்டம் ஏற்பதுமில்லை. எனவே, ஒரு பெண்ணை அச்சுறுத்தி அல்லது ஏமாற்றிச் சம்மதம் பெற்று அவளைப் புணர்பவன் அவளது சம்மதம் இன்றிப் புணர்பவனே ஆகின்ருன். எனவே, இத்தகைய சம்மதத்தைப் பெற்றுப் புணர்வதும் 'இசைவிலாப் புணர்ச்சி'யேயாகும்.

## பதினுறு வயதிற்குக் குறைந்த பெண்கள்

பதினுறு வயதிற்குக் குறைந்த பெண் அறிவு வளர்ச்சியடையாத நிலையில் உள்ளவள். நல்லது எது, தீயது எது என்றும், ஒரு செயலின் தன்மை என்ன, அதன் விளைவென்ன என்றும் தெரியாத பருவத்தினள். ஆதலால், அவள் அளிக்கும் சம்மதத்தைச் சட்டம் ஏற்பதில்லை. எனவே, பதினுறு வயதிற்குக் குறைந்த ஒரு பெண்ணைப் புணர்பவன், 'அவள் சம்மதத்தைப் பெற்றுதான் புணர்ந்தேன்' என்று கூறித் தப்ப முடியாது.

## கணவனும் மனைவியும்

கணவனுக்கும் மனைவிக்கும் உள்ள உறவு தனிப்பட்ட நிலையிலுள்ளது. ஊடலும் கூடலும் நிறைந்தது அவர்கள் வாழ்வு. கைப்பிடித்த மனைவியைக் கட்டிய கணவன் கலந்து மகிழ்வதற்கு மனைவியின் சம்மதத்தை மறக்காது பெறவேண்டும் என்று கூறினுல், அது கூத்தாகிவிடுமன்ருே! அவர்கள் கணவனும் மனைவியுமாகக் கைப்பிடித்த அன்றே கருத்தொன்றிவிட்டார்கள்; மணமுடித்த அன்றே மனங்கலந்துவிட்டார்கள். இத்தகைய நிலையிலுள்ளோர் இசைவு பெற்றுதான் இனிது கூடவேண்டும் என்று சட்டமும் விதிக்கவில்லை.

இருப்பினும், மனைவியின் உடல்நலங் கருதி, மனைவிக்குப் பதினைந்து வயதாவது ஆகியிருத்தல் வேண்டும் என்று சட்டம் விதிக்கிறது. அந்த வயதுக்குக் குறைந்த மனைவியைக் கணவன் கூடுவது கூடாது என்பது சட்டம்.

ஒரு பெண்ணுக்கு மதுவைக் கொடுத்து, மதியை மயக்கி, அந்நிலையில் அவளைப் புணர்தல் குற்றமாகும்; அது அவளுடைய சம்மதமின்றிப் புணர்தலாகும். ஒரு பெண்ணை வலுவந்தமாகப் புணர்தல் அவளது இச்சைக்கு மாருகப் புணர்தலாகும்; அதுவும் குற்றம்.

வைத்தியம் பார்க்கவந்த ஒரு பெண்ணை வஞ்சகமாக வைத்தியன் புணர்ந்தான். வருத்தும் நோய்க்கான வைத்தியம்தான் இதுவென்று வஞ்சனையால் ஏமாறினுள், வஞ்சமிலாப் பெண்ணவளும். வைத்தியனின் செயலை 'இசைவிலாப் புணர்ச்சி' என்று வழக்கிலே தீர்ப்பளித்தனர். இசை பயிலவந்த இளம் பெண்ணும் மாணவியை, குரல் இனிமை பெறுவதற்குக் குறித்ததொரு முறை என்று, வஞ்சித்துப் புணர்ந்த வல்லரக்கச் செயலைக் குற்றமெனக் கொண்டு தண்டித்தனர்.

இசைவிலாப் புணர்ச்சிக்குப் பிறகு, பெண் அதற்கான சம்மதத்தை அளித்தாலும், அது குற்றமேயாகும்.

**தண்டனை**

இசைவிலாப் புணர்ச்சிக் குற்றத்திற்குத் தண்டனை ஆயுட்காலச் சிறையும் அபராதமுமாகும். பன்னிரண்டு வயதிற்கு மேற்பட்ட, ஆனுல், பதினைந்து வயதிற்குக் குறைந்த தன் மனைவியைக் கணவன் வன்முறையில் அவளது இசைவின்றிப் புணர்ந்தான் எனில், அதற்கான தண்டனை இரண்டாண்டுக் காலம் சிறையும் அபராதமும் ஆகும் (376ஆம் பிரிவு).

> 'மலரினும் மெல்லிது காமம் சிலர்அதன்
> செவ்வி தலைப்படு வார்' (குறள், 1289)

காமம் மலரைவிட மென்மையுடையதாகும்; அந்த உண்மையை உணர்ந்து அதன் நலனைப் பெறுபவர் சிலரேயாவர் என்று கூறப்படுகிறது. காமத்தின் மலரினும் மெல்லிய தன்மையை உணராதோர், காமத்தால் மதிமயங்கி, அறிவிழந்து, வெறி கொண்டு, வலிந்து கொள்வதே காமம் என்று கருதி, தீச்செயல்களைச் செய்துவிடுகின்றனர். இவர்கள் பெண்மை நலம் பேணுத பித்தர்கள். இந்நிலையில், நல்ல மலரினும் மெல்லியதான காமம், நஞ்சினுங் கொடியதாக மாறிவிடுகின்றது. மங்கையரின் மாண்பினை மறந்து,

அவர்தம் பெற்றிமையைப் பேணுது, அவர்களது இச்சைக்கு எதிராகவோ, ஏமாற்றி இசையச் செய்தோ, இசைவு பெருமலோ தீய முறையில் புணர்வோர்களே வலிந்து தண்டிக்கின்றது சட்டம்.

## இயற்கைக்கு மாருன சேர்க்கை (Unnatural offence)

உடலின் உணர்வால் உறும் இன்பத்தைச் சிற்றின்பம் என்றும், உள்ளத்து உயர்வால் பெறும் இன்பத்தைப் பேரின்பம் என்றும் பெரியோர்கள் கூறுவார்கள். உடலுணர்வான சிற்றின்பம் பெறுவதற்கும் உற்ற முறைகள் உண்டு. பெண்ணும் ஆணும் பிழையின்றிக் கலந்து இன்பம் பெறுதலே 'புணர்ச்சி மகிழ்தல்' என்பார்கள். காற்றும் இடைபோகாவண்ணம் புணர்தல், அதை விழைந்த இருவருக்கும் இனிதாகிறது:

'வீழும் இருவர்க்கு இனிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு' (குறள், 1108)

எனவே, இன்பம் அளிக்கும் புணர்ச்சிக்கு அதை விரும்பும் ஆண், பெண் என்ற இருவரும் வேண்டும். இந்த இரு எதிர்ப்பாலரின் புணர்ச்சியில் விளையும் இன்பமே இயல்பான இன்பமாகும். இதற்கு மாறுபட்ட வகைகளில் ஒருவர் பெறும் இன்பம் இயல்பில்லா இன்பமாகும்; இயற்கைக்கு மாருன சேர்க்கையாகும். இயல்பிற்கு மாருக இன்பத்தை விழைந்து, இசைவற்ற சேர்க்கையில் ஈடுபடுவோர் எத்தனையோ இன்னல்களுக்கு ஆளாகின்றனர்.

இசைந்த ஒரு பெண்ணும் ஆணும் இயல்பாகப் புணர்வதற்கு மாருக, ஆணேடு ஆணே, பெண்ணேடு பெண்ணே, ஆணே பெண்ணே ஓர் உயிரினத்துடனே புணர்தல் 'இயற்கைக்கு மாருன சேர்க்கை'யாகும்; இழிந்த செயலாகும்; இயல்பில்லா இன்பம் விழையும் ஈனச்செயலாகும். இச் செயல், முறையான வாழ்வைக் கெடுக்கின்றது.

ஆண், பெண் புணர்ச்சியும் ஏற்ற முறைப்படி இயல்பாயமைதல் வேண்டும். இருவரும் ஒன்ருய் இன்பம் பெறுதலே இயல்பாயமைந்த புணர்ச்சியாகும். இந்த இயல்புடைப் புணர்ச்சிக்கு மாருக அவர்கள் சேர்ந்து இன்பம் விழைதலும் 'இயற்கைக்கு மாருன சேர்க்கையாகும்.'

தாகத்தால் தவிப்பவர் தண்ணீர் அருந்துவது அவசியந்தான். அருந்தும் நீர் நன்னீராக இருத்தல் வேண்டும். கடல் நீராகவோ, கழிவு நீராகவோ இருந்தால் பயனில்லை. நன்னீரை அருந்துவதிலும்

வாயிலூற்றிப் பருகுதலே இயல்பான முறையாகும். மூக்கினால் நீரை உள்ளிழுத்தல் முடியும் எனினும், மூக்கினால் நீர் அருந்துவது முறையன்று. எனவே, தாகத்தைத் தீர்ப்பதற்கு நன்னீர் அருந்த வேண்டும்; அந்த நன்னீரையும் முறையாக அருந்தவேண்டும்.

காமநோயால் பீடிக்கப்பட்டவர்களும் தாகத்தால் துடிப்பவர்களையே ஒப்பார்கள். இசைந்த ஓர் எதிர்ப்பாலரோடு புணர்தலே அந்நோயைத் தீர்க்கும் இனிய வழியாகும்; அந்தப் புணர்ச்சியும் இயல்பான முறையிலே அமைதல் வேண்டும்.

ஓர் ஆணுடனோ, பெண்ணுடனோ, உயிரினத்துடனோ இயற்கைக்கு மாறான சேர்க்கையில் ஈடுபட்டவர்களுக்கு ஆயுட்காலச் சிறைத்தண்டனை விதிக்கப்படலாம் (377ஆம் பிரிவு).

இக் குற்றத்திற்கு ஏன் சட்டம் இவ்வளவு கடுந்தண்டனையை விதிக்கிறது? இயற்கைக்கு மாறான சேர்க்கையில் ஈடுபட்டு, இயல்பிலா இன்பம் விழைதல், அச் செயலைச் செய்பவருக்கும் அதற்கு உடந்தையாயிருப்பவருக்கும் தீமை பயக்கிறது. இவர்களது வாழ்வு முறையிலே கோணல் ஏற்படுகிறது. தனிப்பட்டோரின் அடிப்படை வாழ்வில் கோணல் தோன்றினால் அது பொது வாழ்விலும் பெருங்கேட்டை விளைக்கிறது. நாட்டின் நலனே இதனால் நலிந்துவிடலாம். எனவேதான், 'இயற்கைக்கு மாறான சேர்க்கையை' இழிசெயல் என்றுமட்டும் விட்டுவிடாமல், கொடுங்குற்றச் செயலாகவும் சட்டம் கொள்கிறது.

# 17. உயிர் போக்குங் குற்றங்கள்
## (Offences Affecting Life)

மரணம் விளைக்குங் குற்றம்—கொலைக்குற்றம்—ஒருவருக்கு மரணம் விளைப்பதற்கென்று செய்யப்பட்ட செயல் மற்றொருவருக்கு மரணம் விளைத்தல்—கொலைக்குற்ற முயற்சி—மரணம் விளைக்குங் குற்ற முயற்சி —தற்கொலை முயற்சி—தற்கொலைக்கு உடந்தையாக இருத்தல்—கருச்சிதைத்தல் முதலிய குற்றங்கள்.

உயிர்வாழ்வது மனிதனின் ஒப்பற்ற உரிமையாகும். அந்த உரிமைக்கு ஊறு விளைப்பது பெருங் குற்றமாகிறது.

எவ்வுயிரையும் கொல்லாதிருத்தலே நன்னெறி. நல்லொழுக்கம் என்பது யாதொன்றையும் கொல்லாத நெறி என்கிறார் வள்ளுவர்:

'நல்லாறு எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
கொல்லாமை சூழும் நெறி' (குறள், 324)

யாதொன்றையும், உயிரினம் எதையும் கொல்லாமையே நல்லோர் போற்றும் ஒழுக்க முறை; உயர்ந்த அறநெறி.

குற்ற இயல் சட்டத்தைப் பொறுத்தவரை, ஒரு மனிதன் மற்றொரு மனிதனைக் கொல்லுதல் கூடாது என்பது விதி. (இங்கு மனிதன் என்ற சொல் ஆணையும் பெண்ணையும் குறிப்பதாகும்.) எனவே, 'உயிர் போக்குங் குற்றங்கள்' (Offences affecting life) என்று நாம் இங்குக் குறிப்பது மனித உயிர்களைப் போக்குங் குற்றங்களைத்தான்.

ஒருவர் மற்றொருவர் உயிரைப் போக்குதல் 'மரணம் விளைத்தல்' (causing death) ஆகிறது. ஒருவர் மற்றொருவரின் உயிரைப் போக்கினால், 'ஒருவர் மற்றொருவருக்கு மரணத்தை விளைத்தார்' என்று கூறுகிறோம். ஒருவர் பிறர் மரணத்தை விளைப்பதைச் சட்டம் பெருங் குற்றம் எனக் கொள்ளுகிறது.

ஒருவர் பிறர் மரணத்தை விளைப்பது பல சூழ்நிலைகளில் நடைபெறுகிறது. எல்லாச் சூழ்நிலைகளிலும் அச் செயல் குற்றமாவதில்லை.

நீதிமன்றத்தில் மரண தண்டனை பெற்ற குற்றவாளியைத் தூக்கிலிட்டுக் கொல்லும் சிறை அதிகாரி, குற்றவாளியின் மரணத்தை விளைக்கின்றார். இந் நிலையில் குற்றவாளியின் மரணத்தை விளைத்த செயல் குற்றமாவதில்லை. ஏனெனில், இது நீதியை நிறைவேற்றும் (execution of public justice) செயல். கொலைக் கூட்டத்தினரைக் கலைப்பதற்கென்று முறைப்படி போலீசு அதிகாரி அந்தக் கூட்டத்தில் நிற்கும் இருவரைச் சுட்டுக் கொல்லுகிறார். இது நீதியை நிலை நாட்டும் (advancement of public justice) செயலாகும். எனவே, இது குற்றமாகாது. கொடுவாளால் தம்மை வெட்ட வந்தவனை ஒருவர் தற்காப்பிற்காகக் கொன்றுவிடுகிறார். இது காப்புரிமைச் செயலாவதால் (act of private defence) குற்றமன்று. போரில், ஒரு படைவீரனை எதிர்ப் படைவீரன் கொல்லுகிறான். இது போர்ச் செயலேயன்றி கொலைச்செயலன்று; குற்றமுமன்று. எனவே, இவ் வகைச் சூழ்நிலைகளில் ஒருவர் பிறர் மரணத்தை விளைப்பது குற்றமாவதில்லை. இவையெல்லாம் சட்டத்திற்கு இயைந்த முறையில் மரணம் விளைக்கும் செயல்கள் (justifiable homicide) ஆகின்றன.

சட்டத்திற்கு இயைந்த முறையிலன்றி மரணம் விளைக்கும் செயல்கள் எல்லாம் தண்டனைக்குரிய குற்றங்களாகின்றன. குற்றமாகக் கொள்ளப்படும் மரணம் விளைக்கும் செயல்களை 'மரணம் விளைக்கும் குற்றம்' (culpable homicide) என்று கூறுகிறோம். மரணம் விளைக்கும் குற்றச் செயல்களைச் சட்டம் இரு தரங்களாகப் (grades) பிரிக்கின்றது. ஒன்று, கொலைக் குற்றமாகா மரணம் விளைத்தல்; இரண்டு, கொலைக் குற்றமாகும் மரணம் விளைத்தல். 'கொலைக் குற்றமாகா மரணம் விளைத்தலை' ஆங்கிலத்தில் 'culpable homicide not amounting to murder' என்று கூறுவார்கள். 'கொலைக் குற்றமாகும் மரணம் விளைத்தலை 'culpable homicide amounting to murder' என்பார்கள். இந்த இருதரக் குற்றங்களிலும் மரணம் விளைத்தல் (homicide) பொதுவானது. ஒன்றில், மரணம் விளைக்கும் செயல் குற்றமானதுதான்; ஆனால், கொலைக் குற்றம் ஆவதில்லை. மற்றொன்றில், மரணம் விளைக்கும் செயல் கொலைக்குற்றமாகிவிடுகிறது. கொலைக்குற்றமாகாத நிலையிலுள்ள மரணம் விளைக்கும் (culpable homicide not amounting to murder) குற்றத்தை, 'மரணம் விளைக்குங் குற்றம்' (culpable homicide) என்றே சட்டம் குறிப்பிடுகிறது. 'கொலைக் குற்றத்தில்' மரணம் விளைக்கும் குற்றமும் அடங்கியிருப்பதால், கொலைக் குற்றமாகும் மரணம் விளைக்குங் குற்றம் (culpable homicide amounting to murder) 'கொலை' அல்லது 'கொலைக்குற்றம்' (murder) என்று குறிப்பிடப்படுகிறது.

மரணம் விளைக்குங் குற்றமும் (culpable homicide) கொலைக்குற்றமும் (murder) மாறுபாடான குற்றங்கள் அல்ல என்பதை நாம் நினைவிற் கொள்ளவேண்டும். இரண்டு குற்றச் செயல்களாலும் விளைவது மரணம். மரணத்தை விளைக்கும் குற்றச் செயல்களாகவே இரண்டும் இருந்தாலும், அவற்றைச் செய்பவரின் குற்ற மனநிலைக்குத் (degree of mens rea) தக்கவாறு, அக் குற்றங்களைச் சட்டம் இருதரப்படுத்திக் கூறுகிறது. குற்ற மனநிலைக்குத் தக்கபடி குற்றவாளிக்குச் சட்டம் தண்டனையை அளிக்கின்றது. கொலைக்குற்றஞ் செய்தவருக்குப் பொதுவாக மரணதண்டனை அளிக்கப்பட வேண்டுமென்று சட்டம் விதிக்கிறது. மரணம் விளைக்குங் குற்றம் செய்தவருக்கு ஆயுட்காலச் சிறைத்தண்டனைவரை அளிக்கப்படலாம்; ஆனால், மரணதண்டனை விதிக்கப்படுவதில்லை. ஒரு குற்றத்திற்கும் மற்றொன்றிற்கும் தண்டனையிலுள்ள இத்தகைய வேறுபாட்டினால், இந்த இருதரக் குற்றங்களுக்குமுள்ள நுட்பமான வேறுபாடுகளை நாம் நன்கு தெரிந்துகொள்ளவேண்டும்.

சட்டம் பயிலும் மாணவர்களும், நீதிமுறை அலுவலர்களும் 'மரணம் விளைக்குங் குற்றத்திற்கும்', 'கொலைக் குற்றத்'திற்கும் உள்ள வேறுபாடுகளைத் தெளிவாக, ஐயந்திரிபற அறிவதில் அயர்வு கொள்ளுவதுண்டு. இத்தகைய அயர்வுக்கு அவசியமில்லை. இக் குற்றங்களை விளக்கும் சட்டப் பிரிவுகளை நிதானமாக ஆய்ந்து, நுட்பக் கருத்துகளை ஓர்ந்து உணர்ந்துகொண்டோமானால், குற்ற இயலிலேயே சிக்கலான, நெருடானதாகக் கருதப்படும் இப் பகுதியைத் தெளிவாக நாம் அறிந்துகொள்ளலாம்.

'மரணம் விளைக்குங் குற்றம்' என்பது என்ன என்றும், கொலைக் குற்றம் என்பது என்ன என்றும், இந்த இருதரக் குற்றங்களுக்கும் உள்ள வேறுபாடுகள் என்ன என்றும் இனிக் காண்போம்.

## 'மரணம் விளைவிக்குங் குற்றம்'
## (Culpable Homicide)

மரணம் விளைக்குங் குற்றம்—உதாரணங்கள்—விளக்கம்—ஒருவரது சொல்லாலும் பிறரது மரணம் விளையலாம் — குற்றத்தின் கூறுகள் — (1) மரணம் விளைத்தல்—(2) மரணத்தை விளைக்கும் செயல்: 'செயல்' என்பதில், 'சட்ட முரணுள்ள செய்யாமையும்' அடங்கும்—சட்டவிரோதமான செயலைச் செய்கையில் கருதாத மரணம் விளைதல்—(3) மரணம் விளைக்கவேண்டும் என்ற கருத்து—மரணம் விளைக்கக்கூடியது என்பது தெரிந்தும் அதைச் செய்து மரணம் விளைத்தல்—குற்றமனமின்றிச் செய்த செயல்கள்—சில வழக்குகள்—தண்டனை.

ஒருவர் மற்றவருக்கு மரணம் விளைத்தலையே கொல்லுதல் என்று கூறுகிறோம். மரணம் விளைத்தல் எத்தனையோ வழிகளில் செய்யப்

படலாம். கத்தியால் குத்தி, கம்பால் அடித்து, கல்லால் எறிந்து, நஞ்சு கொடுத்து, பிறரது மரணத்தை விளைவிக்கலாம். பட்டினி போட்டோ, நீரில் முழ்கடித்தோ பிறரது உயிரைப் போக்கலாம். இன்னும் எத்தனை எத்தனையோ வழிகளில் ஒருவரது மரணத்தை மற்றவர் விளைக்கலாம். எனவே, இன்னின்ன குறிப்பிட்ட செயல்களே மரணம் விளைக்கும் செயல்கள் ஆகின்றன என்று கூறுதல் இயலாது.

ஆதலால், பொதுவான முறையில் மரணம் விளைக்கும் பலவிதச் செயல்களுக்கும் பொருந்தும் வகையில், மரணத்தை விளைக்கும் குற்றத்தின் இலக்கணம் கூறப்படுகிறது.

'மரணம் விளைக்கும் குற்றத்திற்குச்' (culpable homicide) சட்டம் கூறும் இலக்கணத்தைக் காண்போம்.

**'மரணம் விளைக்கும் குற்றம்'** (Culpable Homicide)

(i) மரணம் விளைக்கும் கருத்தோடு ஒரு செயலைச் செய்வது;

(ii) மரணம் விளைக்கக்கூடிய உடற்காயத்தை உண்டு பண்ணும் கருத்தோடு ஒரு செயலைச் செய்வது;

(iii) ஒரு செயல் மரணம் விளைக்கக்கூடியது என்று மனமறிந்து அச் செயலைச் செய்வது

இந்த மூன்று வகைச் செயல்களால் ஒருவர் மற்றொருவரின் மரணத்தை விளைத்தால், அது மரணம் விளைத்த குற்றமாகும் (299ஆம் பிரிவு).

எந்த ஒரு செயலும் குற்றமாவது என்றால், அது குற்ற மனத்தோடு செய்யப்பட்டிருத்தல் வேண்டும் என்பதை நாம் அறிவோம். ஒருவருடைய மரணத்தை விளைத்த செயல் இன்னின்ன குற்ற மனத்தோடு செய்யப்பட்டிருந்தால்தான் அது மரணம் விளைத்த குற்றமாகும் என்பதையே மேலே கூறப்பட்ட இலக்கணம் கூறுகிறது.

மரணத்தை விளைத்த செயல் கீழ்க்கண்ட குற்ற மனத்தோடு செய்யப்பட்டிருத்தல் வேண்டும்:

(i) மரணம் விளைக்கும் கருத்தோடு;

(ii) மரணம் விளைக்கக்கூடிய உடற்காயத்தை உண்டு பண்ணும் கருத்தோடு;

(iii) அச் செயல் மரணத்தை விளைக்கக்கூடியது என்பதை அறிந்த மனத்தோடு.

**உதாரணங்கள்**

(1) இராமன் நடந்துவரும் பாதையில் கண்ணன் ஒரு பெரிய குழி தோண்டி வைத்து, அந்தக் குழியை இலை தழைகளால் மூடி மறைத்துவைக்கிறன். கண்ணனது கருத்து, இராமன் அந்தக் குழியில் தவறி விழுந்து இறக்கவேண்டும் என்பது. இராமனும் அவ்வாறே அக் குழியில் விழுந்து இறந்துவிடுகின்றன். இப்பொழுது இராமனுக்கு மரணம் விளைத்த குற்றவாளி ஆகின்றன் கண்ணன்.

(2) வேட்டையாடச் சென்ற இராமன், ஒரு புதரில் ஒளிந்து கொண்டிருக்கிறன். இராமன் இவ்வாறு ஒளிந்திருப்பது கண்ண னுக்குமட்டும் தெரியும். இராமனைக் கொல்ல வேண்டும் என்ற கருத்தோடு கண்ணன், அங்கு வந்த கோபாலனிடம் அந்தப் புதரை நோக்கித் துப்பாக்கியால் சுடும்படி சொல்லுகிறன். புதரி னுள் இராமன் பதுங்கியிருப்பதை அறியாத கோபாலன், கண்ணன் கூறியபடி புதரை நோக்கிச் சுடுகின்றன். இதனல் புதருக்குள் இருந்த இராமன் மாண்டுவிடுகிறன்.

இப்பொழுது, புதரை நோக்கிச் சுட்ட கோபாலன் குற்றவாளி ஆவதில்லை. ஏனெனில், இராமனைக் கொல்ல வேண்டும் என்ற கருத்தோடு அவன் சுடவில்லை. ஆனல், இராமனுக்கு மரணத்தை விளைத்த குற்றம் கண்ணனைச் சேருகின்றது.

இவ்வாறு, பிறருக்கு மரணத்தை விளைப்பது நேரடியான செயலால்தான் செய்யப்படவேண்டும் என்பதன்று. மூன்ரு மவரைப் பயன்படுத்தியோ, நேரடியற்ற செயல்களினலோ ஒருவர் மற்றவரின் மரணத்தை விளைத்தாலும் அவர் குற்றவாளியே ஆகின்றர்.

**விளக்கம்**

(1) ஒருவர் உடல் நோயால் வருந்திக்கொண்டிருக்கிறர். அவ ருக்கு மற்றெருவர் விளைத்த உடற்காயத்தின் பயனுக அந் நோய் அதிகப்பட்டு அவர் இறந்தால், காயம்பட்டவரின் மரணத்திற்குக் காயம் விளைத்தவர்தான் காரணமாகின்றர்; எனவே, காயம் விளைத் தவர் மரணம் விளைத்த குற்றத்திற்கு ஆளாகின்றர்.

(2) ஒருவர் மற்றெருவருக்கு உடற்காயம் விளைக்கிறர். காயம் பட்டவருக்குத் தக்க காலத்தில் திறமையான சிகிச்சை செய் திருந்தால், அவர் உயிர் தப்பியிருக்கலாம். அவ்வாறு சிகிச்சை அளிக்கப்பெருததால் காயம்பட்டவர் இறந்துவிடுகின்றர். இப் பொழுதும், காயம்பட்டவரின் மரணம் விளைந்ததற்குக் காரண மாகக் கருதப்படுபவர் காயம் விளைத்தவரேயாவர்.

எனவே, பிறருக்கு மரணம் விளைக்கத்தக்க காயத்தை உண்டு பண்ணியவர், 'காயம் பெற்றவர் ஏற்கெனவே நோயால் பீடிக்கப் பட்டிருந்தார்; அதனால்தான் இறந்துவிட்டார்' என்று காரணம் காட்டித் தப்புவது இயலாது. அதுபோன்றே, 'காயம் பெற்ற வருக்குத் தகுந்த சிகிச்சை அளித்திருந்தால் பிழைத்திருப்பார்; தகுந்த சிகிச்சை அளிக்காததால்தான் இறந்துவிட்டார்' என்ற காரணம் காட்டியும் அவர் தப்புவதற்கில்லை.

சட்டம் கவனிப்பது ஒன்றைத்தான்; அதாவது, மரணம் விளைக் கக்கூடிய காயம் உண்டுபண்ணப்பட்டதா என்பதைத்தான். காயம் பெற்றவர் ஏற்கெனவே நோயுற்றிருந்தார் என்பதோ, அவருக்குத் தக்க சிகிச்சை அளிக்கப்பட்டிருந்தால் இறந்திருக்கமாட்டார் என்பதோ காயம் விளைத்தவரின் பொறுப்பை, குற்றத்தைக் குறைப் பனவல்ல.

இவ்வாறு மரணம் விளைக்கும் குற்றச் செயலுக்கான (culpable homicide) இலக்கணத்தை 299ஆம் பிரிவு கூறுகின்றது.

### ஒருவரது சொல்லாலும் பிறரது மரணம் விளையலாம்

நச்சு மாத்திரைகள் அடங்கிய குப்பி ஒன்று என் மேசைமீது இருக்கிறது. என்னைச் சந்திக்க வந்த ஒருவர், அந்தக் குப்பியைத் திறந்து பார்க்கின்றார். அவருக்கு அதிலுள்ளவை விஷ மாத் திரைகள் என்பது தெரியாது. ஆனால், எனக்கு அவை உயிர்போக்கும் கொடிய நச்சு மாத்திரைகள் என்பது தெரியும். நான் அவரை ஒரு மாத்திரையை எடுத்து விழுங்கும்படி சொல்லுகிறேன். அவரும் அவ்வாறே மாத்திரையைச் சாப்பிட்டுவிடுகின்றார். அதன் பயனாக அவருக்கு மரணம் விளைகின்றது. இப்பொழுது இறந்தவரின் மரணத் திற்கு நானேதான் காரணமாகின்றேன். நான் சொன்னதால்தான் இறந்தவர் நச்சு மாத்திரையை, அது நஞ்சு என்று தெரியாம லேயே உட்கொண்டார். ஆனால், அந்த மாத்திரையை என் கையால் எடுத்து அவரிடம் நான் கொடுக்கவில்லை; அல்லது மாத் திரையை நான் அவர் வாயில் இடவும் இல்லை. அவரேதான் மாத் திரையை எடுத்து உண்டார். எனினும், அவர் உண்டதற்குக் காரணம் எனது சொல்லேயாகும். நான் உண்ணச் சொன்னதால் அவர் உண்டார். எனவே, எனது சொல் அவர் மரணத்திற்குக் காரணமாகியது. நான் கூறிய சொல், அவரது மரணத்தை விளைத்த செயலாகிறது. ஆதலால், அவரது மரணத்தை விளைத்த குற்றம் என்னைச் சேருகின்றது.

சிலருக்குக் காக்கை வலிப்புப்போன்ற உடல் துடிப்பு வியா திகள் இருப்பதுண்டு. ஏதாவது திடுக்கிடும் செய்தியையோ

அல்லது துயரமளிக்கும் செய்தியையோ கேட்டால், உடல் வலிப்பு வந்து அவர்கள் விழுந்துவிடுகின்றனர். இப்படிப்பட்ட நோயுடைய ஒருவர் வேகமாக ஓடும் இயந்திரத்தின் அருகில் நின்றுகொண்டிருக்கிறார். அந்த வேளையில் அவருக்கு வலிப்பு வந்து விழ வேண்டும், அதுவும் ஓடும் இயந்திரத்தின்மீது விழுந்து அவர் இறக்கவேண்டும் என்ற கருத்தோடு மற்றொருவர் அவரிடம் ஒரு திடுக்கிடும் செய்தியை வேண்டுமென்றே சொல்லுகிறார். அதைக் கேட்டதும் வலிப்பு நோயுள்ளவருக்கு வலிப்பு வந்துவிடுகின்றது; அருகில் ஓடிக்கொண்டிருக்கும் இயந்திரத்தின்மீது விழுந்ததால் விளைந்த பெரிய காயங்களால் அவர் இறந்துவிடுகின்றார். இப்பொழுது வலிப்பு நோயுள்ளவரின் மரணத்திற்குக் காரணமானவர் அவரிடம் திடுக்கிடும் செய்தியைச் சொன்னவர்தான். அச் செய்தியைக் கூறியவரின் சொல்லே நேரடியாக நோயாளிக்கு வலிப்பை ஏற்படுத்தி, அதன் பயனாக மரணத்தையும் விளைத்த செயலாகிறது. எனவே, அச் சொல்லைக் கூறியவர் பிறரது மரணத்தை விளைத்த குற்றவாளியாகின்றார்; 'மரணம் விளைக்குங் குற்றத்தை'ச் செய்தவராகின்றார்.

இவ்வாறு, ஒருவரது சொல்லே பிறரது மரணத்தை விளைக்கும் செயலாகலாம் என்பதை நாம் நினைவிற் கொள்ளவேண்டும். இந்த வகையில், ஒரு சொல்லுங்கூட மரணத்தை விளைக்கும் செயலாகலாம் என்பதைத் தெளிவுபடுத்திக் குற்ற இயல் சட்டத்தை வரைந்த அறிஞர்கள் கூறியிருக்கின்றனர்.

**இக் குற்றத்தின் கூறுகள்: (1) மரணம் விளைத்தல்**

மரணத்தை விளைக்கும் கருத்தோடு ஒரு செயலைச் செய்து, ஒருவருடைய மரணத்தை விளைப்பது குற்றமாகிறது. ஒரு குறிப்பிட்ட நபரின் மரணத்தைக் கருதிச் செய்த செயலால் அதே நபருடைய மரணந்தான் விளையவேண்டும் என்ற அவசியம் இல்லை.

இராமனைக் கொல்லவேண்டும் என்ற கருத்துடன் அவனை நோக்கிக் கோபாலன் துப்பாக்கியால் சுடுகின்றான். குறி தவறியதால், அருகில் நின்றுகொண்டிருந்த முருகனது மார்பில் குண்டு பாய்ந்து முருகன் இறந்துவிடுகிறான். இப்பொழுது கோபாலன், 'நான் இராமனைத்தான் கொல்லக் கருதினேன்; முருகன் சுடப்பட்டது குறி தவறியதால்தான்' என்று கூறினால் அது ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை. எப்படியும், கோபாலன் சுட்டது பிறருக்கு மரணம் விளைக்கவேண்டும் என்ற கருத்தோடுதான். கோபாலன் இராமனது மரணத்தைக் கருதினாலும், முருகனது மரணத்தைக் கருதினாலும் இரண்டும் ஒன்றுதான். எவருடைய மரணத்தையுங்

கருதி ஒரு செயல் செய்யப்படுவது கூடாது என்பதுதான் சட்டம். துப்பாக்கியால் சுட்ட கோபாலனது கருத்து, இராமனது மரணத்தை விளைக்க வேண்டும் என்பது; அவனது செயலால் விளைந்தது முருகனது மரணம். எப்படியும், மரணத்தை விளைக்கக் கருதிக் கோபாலன் செய்த செயலால் மரணம் விளைந்துவிட்டது. விளைந்த மரணம் கோபாலன் கருதிய இராமனது மரணமாக இருந்தாலும், அல்லது மற்றொருவரது மரணமாக இருந்தாலும், கருதிய மரணம் விளைந்துவிட்டபடியால், மரணம் விளைத்த குற்றத்திற்குக் கோபாலன் பொறுப்பாளியாகின்றான்.

எனவே, ஒருவரது மரணத்தைக் கருதிச் செய்யப்பட்ட செயல் மற்றொருவருக்கு மரணத்தை விளைத்தாலும், அது 'மரணம் விளைக்கும்' குற்றமேயாகும்.

## 2. மரணத்தை விளைக்கும் 'செயல்': 'செயல்' என்பதில் சட்ட முரணுள்ள செய்யாமையும் அடங்கும்

'செயல்' (act) என்ற சொல்லில் 'சட்ட முரணுகவுள்ள செய்யாமையும்' (illegal omission) அடங்கும். எனவே, ஒன்றைச் செய்து ஒருவனது மரணத்தை விளைப்பது எவ்வாறு குற்றமோ, அவ்வாறே 'சட்ட முரணுள்ள செய்யாமையால்' ஒருவரது மரணத்தை விளைத்தலும் குற்றமாகும். 'சட்ட முரணுள்ள செய்யாமை' (illegal omission) என்றால், ஒன்றைச் செய்யவேண்டிய கடமை சட்டப்படி இருந்தும் அதைச் செய்யாதிருத்தல் ஆகும். நம் குழந்தைக்கு உணவளிக்க வேண்டியது சட்டப்படியான நம் கடமை. அதற்கு உணவளிக்காமையால் குழந்தை இறந்துவிட்டது எனில், இந்த மரணம் 'சட்ட முரணுள்ள செய்யாமையால்' விளைந்ததாகிறது. ஒரு குழந்தையைத் தடியால் அடித்துக் கொல்லுவது மரணம் விளைக்குங் குற்றமாவதுபோல்தான், அந்தக் குழந்தையின் தாய் அல்லது காப்பாளர் அதற்கு உணவளிக்காமல் விட்டு அதன் மரணத்தை விளைவிப்பதும் குற்றமாகிறது.

எனவே, ஒன்றைச் செய்தலால் மரணத்தை விளைவிப்பது எவ்வாறு குற்றமோ, அவ்வாறே செய்யவேண்டிய ஒன்றைச் செய்யாமையால் மரணத்தை விளைத்தலும் குற்றமாகிறது. ஒன்றைச் செய்யவேண்டிய கடமை (duty) இருந்தும் அதைச் செய்யாமல் இருத்தலே, செய்யவேண்டியதைச் செய்யாமையாகிறது. அந்தக் கடமை சட்டப்படியான கடமையாக (legal duty) இருத்தல் வேண்டும். ஒரு பிச்சைக்காரன் தாகத்தால் துடித்துக்கொண்டு தெருவில் கிடக்கிறான். மனிதவுணர்வுள்ள எவரும் இரக்கங்காட்டி அவனுக்கு நீரளிப்பார்கள். ஆனால், ஒருவன் இதைக் கண்டும்

பிச்சைக்காரனுக்குத் தண்ணீர் கொடுக்காமல் போகிறன். பிச்சைக்காரன் தாகம் தாங்காமல் இறந்துவிடுகிறன் என்று வைப்போம். தண்ணீர் கொடுக்காமல் சென்றவனது நடத்தை கண்டிக்கத் தக்கதுதான். அவன் தண்ணீர் கொடுத்திருந்தால் பிச்சைக்காரனின் மரணம் விளைந்திருக்காது. அவன் தண்ணீர் கொடுக்காததால் தான் அந்த மரணம் விளைந்தது. இதை வைத்து, தண்ணீர் அளிக்காதிருந்தவனை பிச்சைக்காரனின் மரணத்தை விளைத்த குற்றவாளி என்று சட்டம் கொள்ளுகிறதா? இல்லை. ஏனெனில், தாகத்துடன் இருந்த பிச்சைக்காரனுக்குத் தண்ணீர் கொடுக்க வேண்டும் என்ற கடமை, சட்டப்படியான கடமை எவருக்கும் இல்லை. சட்டப்படியான கடமையைச் செய்யாதிருந்தால்தான் அது 'சட்ட முரணுள்ள செய்யாமை' (illegal omission) ஆகும்.

சிறையில் அடைக்கப்பட்டிருக்கும் கைதிக்கு உணவளிக்கும் கடமை சிறையதிகாரிக்கு உண்டு. இது சட்டப்படியான கடமை யாகும். பல நாட்கள் கைதிக்கு உணவளிக்காமல் சிறை அதிகாரி இருக்கின்றார். அதனல் கைதி இறந்துவிடுகின்றான். இப்பொழுது சிறை அதிகாரியின் நடத்தை செய்யவேண்டியதை, சட்டப்படியான கடமையைச் செய்யாமையாகிறது. இத்தகைய செய்யாமையால், சட்ட முரணுள்ள செய்யாமையால் கைதியின் மரணம் விளைந்ததால், அதற்குச் சிறை அதிகாரி பொறுப்பாகின்றார்.

எனவே, ஒன்றைச் செய்யவேண்டும் என்று சட்டப்படியான கடமை ஒருவருக்கு இருந்தும், அதை அவர் செய்யாமல் விட்டு, அதனல் மற்றொருவருக்கு மரணம் விளைந்தால், அது சட்ட முரணுள்ள செய்யாமையால் மரணத்தை விளைத்தலாகும்; மரணத்தை விளைத்த குற்றமாகும்.

இந்த வகையில், 'ஒரு செயலால் மரணத்தை விளைத்தல்' என்பது 'சட்ட முரணுள்ள செய்யாமையால் மரணத்தை விளைத்தலையும்' குறித்து நிற்கிறது.

**சட்ட விரோதமான செயலைச் செய்கையில், கருதாத மரணம் விளைதல்**

ஒருவர் பிறருக்குச் சொந்தமான கோழியைக் கொன்று திருட வேண்டும் என்ற கருத்தோடு கோழியை நோக்கித் துப்பாக்கியால் சுடுகின்றார். அவ்வாறு சுட்டது, கோழி மேய்ந்துகொண்டிருந்த புதரில் பதுங்கியிருந்த மற்றொருவர்மீது பட்டுவிடுகிறது; அதனல் புதரில் ஒளிந்திருந்தவர் இறந்துவிடுகின்றார். இந்த மரணத்திற்குக் கோழியைச் சுட்டவரைப் பொறுப்பாக்கலாமா? சுட்டவர் புதரில்

ஆள் பதுங்கியிருப்பதை அறியாதவர்; பதுங்கியிருந்தவரின் மரணத்தை அவர் கருதவில்லை. எனவே, கருதாத மரணத்திற்கு அவரைப் பொறுப்பாக்குவது முறையன்று. ஆனால், அவர் சுட்ட செயல், பிறருக்குச் சொந்தமான கோழியைக் கொன்று திருடவேண்டும் என்ற குற்றக் கருத்தோடுதான். இருப்பினும், அந்தக் குற்றக் கருத்து எவருக்கும் மரணத்தை விளைக்கவேண்டும் என்ற கருத்தன்று. எனவே, கோழியைச் சுட்ட செயல் சட்ட விரோதச் செயலாக, குற்றமாக இருந்தாலும், அதனால் விளைந்த கருதாத மரணத்திற்குச் சுட்டவர் பொறுப்பாவதில்லை.

பிறருடைய சட்டைப் பையிலுள்ள பணத்தைத் திருடுவது சாதாரணமாகச் செய்யப்படும் குற்றமாகும். இவ்வாறு திருடும் கருத்துடன் ஒருவன் மற்றொருவரின் சட்டைப் பைக்குள் கையை விடுகின்றான். ஆனால், அந்தப் பைக்குள் விசை முடுக்கி வைக்கப்பட்டிருந்த கைத்துப்பாக்கிதான் இருந்தது. திருடனின் விரல்கள் விசையில் படவே, துப்பாக்கியின் விசை அசைந்து குண்டு பாய்ந்து விட்டது. சட்டையை அணிந்திருந்தவர் உடலில் அக் குண்டு பாய்ந்து அவர் இறந்துவிடுகின்றார். இப்பொழுது திருடன் மீது மரணத்தை விளைத்த குற்றம் சாட்ட முடியுமா? முடியாது. திருடனின் கருத்து பணத்தைத் திருடவேண்டும் என்பதுதான்; எவருடைய மரணத்தையும் விளைக்கவேண்டும் என்பதன்று. எனவே, கைத்துப்பாக்கியைப் பையில் வைத்திருந்தவருக்கு விளைந்த மரணம் திருடனால் கருதப்படாதது. கருதாத செயலுக்குத் திருடனைச் சட்டம் பொறுப்பாக்குவதில்லை.

இறந்தவரின் சட்டைப் பையில் கைத்துப்பாக்கி இல்லை என்று வைப்போம். அப்படியெனில், அவரது மரணம் விளைந்திருக்காது. கைத்துப்பாக்கியைச் சட்டைப் பையில் பலரும் வைத்திருப்பதில்லை. பையில் கைத்துப்பாக்கி இல்லாத பலரிடம் திருடிய அல்லது திருட முயன்ற நூற்றுக்கணக்கான திருடர்களுக்கு அளிக்கப்படும் தண்டனை திருட்டுக் குற்றத்திற்கான தண்டனையாக இருக்கும்பொழுது, பையில் துப்பாக்கி வைத்திருந்த இந்த ஒருவரிடம் திருட முயன்றவனுக்குமட்டும் மரணம் விளைத்த குற்றத்திற்கான தண்டனை விதிப்பது நியாயமாகுமா? ஆகாது. அவ்வாறு தண்டிப்பது பகுத்தறிவிற்குப் புறம்பானதுமாகும். எனவே, எதிர்பாராச் சூழ்நிலையில் கருதாத மரணத்தை விளைத்த திருடனுக்கு உரிய தண்டனை, திருட முயன்ற குற்றத்திற்கான தண்டனையேயாகும்.

ஆதலால், வேறொரு குற்றச் செயலைச் செய்யும் ஒருவர், கருதாமல் பிறருக்கு மரணத்தை விளைத்துவிட்டால், சட்டம் அவரை மரணத்தை விளைத்த குற்றத்திற்குப் பொறுப்பாக்குவதில்லை. அவர்

எந்தக் குற்றத்தைக் கருதிச் செய்தாரோ அந்தக் குற்றத்திற்கே அவரைப் பொறுப்பாக்குகிறது.

## (3) மரணம் விளைக்கவேண்டும் என்ற கருத்து

ஒரு செயலின் இயல்பாக நிகழத்தக்க விளைவிலிருந்து (natural and probable consequence) அச் செயலைச் செய்தவரின் கருத்தை நாம் அறிகின்றோம்.

ஒருவரின் செயலால் இயல்பாக நிகழத்தக்க விளைவு பிறரின் மரணமாக இருந்தால், அச் செயலைச் செய்தவர் பிறரின் மரணத்தைக் கருதியே அச் செயலைச்செய்திருக்கின்றார் என்று நாம் ஊகித்து அறிகின்றோம். கூரிய நீண்ட கத்தியால் ஒருவர் மற்றவரின் மார்பில் ஓங்கிக் குத்தினால் அதனால் நிகழத்தக்க விளைவு என்ன? குத்தப் பட்டவரின் மரணம்தான். ஏன்? மார்பில் இருதயம் இருக்கிறது. இருதயத்தில் வடு ஏற்பட்டுவிட்டால் இயல்பாக நிகழத்தக்கது காயம்பட்டவரின் மரணமேயாகும். ஆதலால், குத்துப்பட்டவரின் மரணத்தைக் கருதியேதான் குற்றவாளி கத்தியால் குத்தியிருக்கிறார் என்பதை நாம் அறிகின்றோம்.

ஒருவரது வயிற்றில் மற்றொருவர் கையால் குத்துகிறார் என வைப்போம். ஒருவரின் வயிற்றில் கையால் குத்துவதால் பொதுவாக மரணம் விளைவதில்லை. ஒருவரது கையை மற்றொருவர் அரிவாளால் வெட்டிவிடுகின்றார் என வைப்போம். கையை வெட்டுவதால் வெட்டுப்பட்டவர் இயல்பாக இறப்பதில்லை. இதுபோன்ற செயல்கள் மரணத்தை விளைக்கும் கருத்தோடு செய்யப்பட்டவை என நாம் கொள்ளலாகாது.

எனவே, குற்றம் சாட்டப்பட்டவர் செய்த செயல் என்ன? அதன் தன்மை என்ன? அதனால் இயல்பாக நிகழத்தக்க விளைவுகள் என்ன? என்பனவற்றை ஆய்ந்துதான் அச் செயலைச் செய்தவர் மரணம் விளைக்கும் கருத்துடன் அதைச் செய்தாரா என்பதை நாம் உறுதிசெய்யவேண்டும்.

## (4) ஒரு செயல் மரணம் விளைக்கக்கூடியது என்று மனமறிந்து அதைச் செய்து மரணம் [illegible]

பிறருக்கு மரணம் விளைக்கவேண்டும் என்ற கருத்தோடு (with intention) ஒரு செயலைச் செய்தல் ஒரு வகை; ஒரு செயல் மரணம் விளைக்கக்கூடியது என்பதை அறிந்தும் (with knowledge) அதைச் செய்தல் மற்றொரு வகை.

இரண்டாவதில், பிறருக்கு மரணம் விளைக்கவேண்டும் என்ற கருத்து இல்லை; ஆனால், தன் செய்கையால் மரணம் விளையலாம் என்ற அறிவு உண்டு. மரணம் விளையவேண்டும் என்று மனங் கருதிச் செய்யும் செயல் ஒன்று; மரணம் விளையலாம் என்று மனமறிந்து செய்யும் செயல் மற்றொன்று. இருவகைச் செயல்களாலும் ஏற்படும் விளைவு ஒன்றுதான்.

எட்டு வயது சிறுமியை ஒருவர், முழு பலத்தோடு உதைத்தார். அந்த உதை சிறுமியின் வயிற்றில் பட்டுச் சிறுமி இறந்தாள். சிறுமியை இவ்வாறு ஓங்கி உதைத்தால் மரணம் விளையலாம் என்பதை உதைத்தவர் தெரிந்திருக்கவேண்டும் என்று கொண்டு, மரணத்தை விளைத்த குற்றத்திற்கான தண்டனை அவருக்கு விதிக்கப்பட்டது. ஒருவருடைய மண்டையில் மற்றொருவர் ஒரு பெரிய கல்லை வீசி எறிந்தார். அதனால் மண்டையில் கொடுங் காயம் ஏற்பட்டு, காயம் பட்டவர் இறந்தார். கல்லை எறிந்தது மரணத்தை விளைக்கக்கூடிய செயல் என்று மனமறிந்துதான் செய்யப்பட்டது என்று கொண்டு, கல்லை எறிந்தவருக்கு 'மரணம் விளைக்கும்' குற்றத்திற்கான தண்டனை விதிக்கப்பட்டது.

ஒரு பெண்ணைப் பிடித்திருந்த பேயை விரட்டுவதாகக் கூறிக் கொண்டு, அந்தப் பெண்ணைக் காற்றுப் போகமுடியாத ஓர் அறையில் போட்டுப் பூட்டி, நெருப்பில் மிளகாய் வற்றலைப் போட்டுப் புகைமூட்டி, அந்த அறைக்குள் வைத்து அடிக்கடி மூடினான் மந்திர வாதி. அடுத்த நாள் அறையைத் திறந்து பார்க்கையில் பெண் பிணமாகக் கிடந்தாள். மந்திரவாதியின் செயலை என்னென்பது? அந்தப் பெண்ணின் மரணத்தை விளைக்கவேண்டும் என்ற கருத்து மந்திரவாதிக்கு இல்லை. ஆனால், காற்றுப் போகாத அறையில் அவளை இட்டுப் பூட்டி, மிளகாய்ப் புகையையும் அந்த அறைக்குள் செலுத்தி மண்ட வைத்தால், அறைக்குள் உள்ள எவரும் இறப்பர் என்பது யாவருக்கும் தெரியும். மந்திரவாதிக்கும் இது தெரிந்திருக்கவேண்டும்.

இவ்வாறு, ஒரு செயலால் மரணம் விளையலாம் என்பதைத் தெரிந்தும், அச் செயலைச் செய்து மரணம் விளைத்தால், அது 'மரணம் விளைக்கும்' குற்றமேதான். இறந்தவரின் மரணத்தைக் கருத வில்லையே என்று கூறிக் குற்றவாளி தப்ப முடியாது. எனவே, ஒருவருடைய மரணத்தைக் கருதி ஒரு செயல் செய்யப்படா விட்டாலும், அச் செயலால் மரணம் விளையலாம், என்று அறிந்த மனத்தோடு அச் செயலைச் செய்து மரணத்தை விளைத்தல் இந்தப் பிரிவின்கீழ்க் குற்றமாகும்.

**குற்ற மனமின்றிச் செய்த செயல்கள்**

மரணம் விளைக்கும் கருத்தோடு அல்லது மரணம் விளையலாம் என்பதை அறிந்த மனநிலையோடு ஒருவர் மற்றவரின் மரணத்தை விளைத்தால்தான் அது மரணம் விளைக்கும் குற்றமாகிறது. இந்தக் குற்ற மனநிலை இன்றி மரணத்தை விளைப்பது வேறு வகையான குற்றமாகலாம்; மரணம் விளைக்குங் குற்றமாவதில்லை.

**சில வழக்குகள்**

இருவர்களுக்குள் ஏற்பட்ட வாய்ச் சண்டையில் ஒருவர் மற்றொருவரைக் கீழே தள்ளிவிட்டார். கீழே விழுந்தவருக்கு மண்டையில் காயம் ஏற்பட்டது; நாளடைவில் அந்தக் காயத்தில் புரையோடி அவர் இறந்துவிட்டார். அவரைக் கீழே தள்ளியவருக்கு அளிக்கப்பட்ட தண்டனை ஒருவரை வன்முறையில் தாக்கியதற்கு (using criminal force) உள்ள தண்டனையேயாகும். அவர் மரணத்தை விளைத்த குற்றத்திற்குப் பொறுப்பாக்கப்படவில்லை.

மூன்று பேர்களாகக் கூடி ஒருவரைத் தடியால் அடிக்கின்றனர். அதில் ஓர் அடி மண்டையில் விழுந்து காயத்தை ஏற்படுத்துகிறது. அந்தக் காயத்தின் பயனாக அடிபட்டவர் இறந்துவிடுகின்றார். இறந்தவரின் மரணத்தை விளைக்கும் கருத்து அடித்தவர்கள் எவருக்கும் இல்லையாதலால், அவர்கள் கொடுங்காயம் விளைத்த குற்றத்திற்கே (causing grievous hurt) தண்டிக்கப்பட்டனர்.

சிலருக்குக் கல்லீரல் வீங்கியிருப்பதுண்டு. வீங்கியுள்ள கல்லீரற் பகுதியில் அடிபட்டவுடன் கல்லீரல் உடைந்து இறந்து விடுகின்றனர். இத்தகைய நோயுள்ள ஒருவரின் உடல்நிலை தெரியாத மற்றொருவர், அவரை அடித்து அதனால் நோயாளிக்கு மரணம் விளைந்ததெனினும், அடித்தவர் மரணம் விளைத்த குற்றத்திற்குப் பொறுப்பாவதில்லை.

கோபமூட்டப்பட்ட கணவன் மனைவியைப் பிடித்துக் கீழே தள்ளி வயிற்றில் உதைத்துவிட்டான். வீங்கியிருந்த கல்லீரல் உடைந்ததால் மனைவி இறந்துவிட்டாள். மனைவிக்குக் கல்லீரல் வீங்கியிருந்தது கணவனுக்குத் தெரியாது. இந்நிலையில், கொடுங் காயம் விளைத்த குற்றத்திற்கான தண்டனையே கணவனுக்கு அளிக்கப்பட்டது.

ஒருவன் தன் மனைவியைத் தடியால் ஓர் அடி அடித்தான். மனைவி மயக்கமுற்று விழுந்துவிட்டாள். மயங்கிக் கிடந்த மனைவி இறந்துவிட்டாள் என்று கருதினான் கணவன். தன்மீது கொலைக் குற்றம் வந்துவிடக்கூடாது என்ற கருத்துடன், அவள் தற்கொலை

செய்துகொண்டதாகக் காட்டலாம் என்று நினைத்து, அவளது கழுத்தில் கயிற்றைக் கட்டி வீட்டு உத்திரக் கம்பில் தொங்கவிட்டான். மனைவியின் உடலை வைத்தியப் பரிசோதனை செய்ததில், அவள் இறந்தது, தூக்கிலிட்ட செயலால்தான் என்பது புலனாயிற்று; அடியால் இறக்கவில்லை என்பதும் புலனாயிற்று. இப்பொழுது கணவனுக்கு என்ன தண்டனை அளிப்பது? கணவன் தூக்கிலிட்ட செயலால்தான் மனைவி இறந்தாள். ஆனால், தூக்கிலிட்டு அவளைக் கொல்லவேண்டும் என்ற கருத்து கணவனுக்கு இல்லை. அவள் இறந்துவிட்டதாகக் கருதியே அவன் அவளைத் தூக்கிலிட்டது. எனவே, தடியால் அடித்துக் காயத்தை விளைத்த குற்றத்திற்கே கணவன் தண்டிக்கப்பட்டான்.

**மரணம் விளைக்கும் குற்றத்திற்கான தண்டனை:** மரணம் விளைக்கும் கருத்தோடு ஒரு செயலைச் செய்து, அல்லது மரணம் விளைக்கக்கூடிய உடற்காயத்தை உண்டுபண்ணும் கருத்தோடு ஒரு செயலைச் செய்து மரணத்தை விளைவித்தால், அதற்கான தண்டனை ஆயுட்காலச் சிறையும் அபராதமும் ஆகும்.

மேலே கூறப்பட்ட கருத்து இன்றி, ஆனால், ஒரு செயல் மரணம் விளைக்கக்கூடியது என்று அறிந்தும் அச் செயலைச் செய்து அதனால் மரணத்தை விளைத்தால், பத்தாண்டுக் காலம்வரை சிறை, அபராதம் தண்டனையாகும் (304ஆம் பிரிவு).

மரணம் விளைக்கவேண்டும் என்று மனங்கருதிச் செய்த செயலுக்கு அதிக தண்டனையும், மரணம் விளையலாம் என்று மனமறிந்து செய்த செயலுக்குக் குறைந்த தண்டனையும் விதிக்கப்படுகிறது.

'மரணம் விளைக்குங் குற்றம்' (culpable homicide) பற்றி இதுவரை கண்டோம். இனி, கொலைக்குற்றம்பற்றிக் காணலாம்.

## கொலைக்குற்றம் (Murder)

கொலைக் குற்றம்—உதாரணங்கள்—'மரணம் விளைக்குங் குற்றத்திற்'கும் 'கொலைக்குற்றத்திற்'கும் உள்ள வேறுபாடுகள்—கொலைச் செயல் கொலைக் குற்றமாகாத தறுவாய்கள்—(i) திடீரெனக் கடுஞ்சின மூட்டப்பட்டதால் தன்வயமிழந்த நிலையில் மரணம் விளைத்தல்—(ii) காப்புரிமைச் செயலில் வரம்பு கடந்து மரணம் விளைத்தல்—(iii) பொது ஊழியர் தமது அதிகாரவரம்பினைக் கடந்து மரணம் விளைத்தல்—(iv) திடீரென்று தோன்றிய சண்டையில் முன் யோசனையின்றி மரணம் விளைத்தல்—(v) பிறர் சம்மதம் பெற்று அவருக்கு மரணம் விளைத்தல்—இருபத்திரண்டு வகையான மரணம் விளைக்கும் குற்றச் செயல்கள்—நான்கு வகையான கொலைக்குற்றச் செயல்கள்—தண்டனை.

'மரணம் விளைக்கும் குற்றம்' (Culpable homicide) பற்றி 299ஆம் பிரிவு கூறுகிறது. கொலைக் குற்றம் (Murder) பற்றி 300ஆம் பிரிவு கூறுகிறது. மரணம் விளைத்தல்தானே கொலை என்பது; பிறகு ஏன் கொலைக்குற்றம் என்று தனியாக வகைப்படுத்தப் பட்டிருக்கிறது என்ற கேள்வி நம் மனத்தில் எழுவது இயல்பு.

பிறருடைய உயிரைப் போக்குதலை 'மரணம் விளைத்தல்' என்கிறோம். அந்தச் செயல் எந்த நிலையிலுள்ள குற்ற மனத்தோடு செய்யப்பட்டது என்பதைச் சட்டம் ஆராய்கின்றது. குற்ற மனத்தின் நிலையை வைத்து மரணத்தை விளைக்கும் செயல்கள் இரு தரங்களாகப் பிரிக்கப்படுகின்றன. இருதரச் செயல்களாலும் விளைவது மரணம்தான். விளையும் பலனில் வேற்றுமை இல்லை. எனினும், அச் செயலைச் செய்பவர்களின் மனநிலையிலுள்ள வேறுபாடுகளை அடிப்படையாக வைத்து, மரணம் விளைக்கும் செயல்களை இரு தரங்களாகச் சட்டம் வகுக்கின்றது.

ஒன்று 'மரணம் விளைக்கும்' குற்றம் (culpable homicide); மற்றது 'கொலைக்' குற்றம் (murder). இரண்டும் ஒரே வகைக் குற்றங்கள்; ஆனால், இருதிறப்பட்ட, இருதரமான குற்றங்கள். கொலைக்குற்றத்திற்கு மரணதண்டனை என்று சட்டம் விதித்திருப்பதால், ஒரு செயலைக் கொலைக்குற்றம் என்று தீர்மானிப்பதற்கு முன், அது குறிப்பிட்ட குற்ற மனத்தோடு செய்யப்பட்டதா என்பதைச் சட்டம் உன்னிப்பாகக் கவனிக்கின்றது. எனவேதான், மரணத்தை விளைக்கும் குற்றச் செயல்களை 'மரணம் விளைக்கும் குற்றம்' என்றும், 'கொலைக் குற்றம்' என்றும் இருதரப்படுத்திச் சட்டம் பாகுபடுத்துகிறது.

மரணம் விளைக்கும் குற்றம் குறிப்பிட்ட மனநிலைகளோடு செய்யப்பட்டால் அது கொலைக்குற்றமாகின்றது. மரணம் விளைக்கும் குற்றத்தைச் செய்பவர், சட்டத்தில் கூறப்படும் குற்ற மனத்தோடு அதைச் செய்திருந்தால், அவர் கொலைக் குற்றம் செய்தவராகின்றார்.

சட்டத்தின் 300ஆம் பிரிவு கொலைக் குற்றத்தின் இலக்கணத்தைக் கூறுகின்றது.

**கொலைக்குற்றம் (Murder)**

ஒருவரின் மரணத்தை விளைக்கும் குற்றம் கீழ்க்கண்ட நிலைகளில் கொலைக்குற்றம் (murder) ஆகின்றது:

1. மரணம் விளைக்கவேண்டும் என்று கருதி ஒரு செயலைச் செய்து மரணம் விளைத்தல்;

2. ஒருவருக்கு மரணம் விளைக்கக்கூடிய உடற்காயம் இன்ன என்பதை அறிந்து, அந்த உடற்காயத்தை உண்டுபண்ணும் கருத்தோடு ஒரு செயலைச் செய்து அவருக்கு மரணத்தை விளைத்தல்;

3. இயல்பான போக்கில் மரணத்தை விளைக்கத்தக்க தன்மை கொண்ட உடற்காயத்தை உண்டுபண்ணும் கருத்தோடு ஒரு செயலைச் செய்து மரணம் விளைத்தல்;

4. ஒரு செயல், மரணத்தையோ அல்லது மரணம் விளைக்கக்கூடிய உடற்காயத்தையோ தவருது தோற்றுவிக்கும் உடனடியான ஆபத்தைக்கொண்டது என்பதை அறிந்தும்,

மரணத்தையோ அத்தகைய உடற்காயத்தையோ தோற்றுவிக்கும் இன்னலை ஏற்படுத்துவதற்கான இயைந்த காரணம் ஏதுமின்றி

அச்செயலைச் செய்து மரணம் விளைத்தல் (300ஆம் பிரிவு).

**300ஆம் பிரிவின்கீழ்க் கொடுக்கப்பட்டுள்ள உதாரணங்கள்**

(a) இராமன் கோபாலனைக் கொல்லவேண்டும் என்ற கருத்தோடு அவனைத் துப்பாக்கியால் சுடுகின்ருன். இதன் பயனுகக் கோபாலன் இறக்கின்ருன். இப்பொழுது இராமன் செயல் கொலைக்குற்றமாகின்றது (300ஆம் பிரிவு, 1ஆம் உட்பிரிவு).

(b) கோபாலன் நோய்வாய்ப்பட்டிருக்கிருன் என்பதும், அவனை ஓங்கி அடித்தாலே அவன் இறந்துவிடலாம் என்பதும் இராமனுக்குத் தெரியும். இராமன் கோபாலனை ஓங்கி அடிக்கின்ருன். இதனுல் கோபாலனுக்கு மரணம் விளைகிறது. இப்பொழுது, கோபாலனின் செயல் கொலைக்குற்றமாகிறது.

சாதாரணமாக, உடல்நலமுள்ள ஒருவரை மற்ருெருவர் ஓங்கி அடித்தால்மட்டும் அடிபட்டவருக்கு மரணம் விளைவதில்லை. ஆனுல், இங்கு கோபாலனுக்கு உள்ள நோயின் தன்மை இராமனுக்குத் தெரியும். இதை அறிந்திருந்தும், அவ்வாறு அடித்தது கொலைச்செயலாகிறது.

கோபாலனுக்கு உள்ள நோயைப்பற்றித் தெரியாத நிலையில் இராமன் கோபாலனை அடித்திருந்து, அந்த அடியால் கோபாலன் இறந்தால், இராமன்மீது கொலைக் குற்றம் ஏற்படுவதில்லை. ஏனெனில், சாதாரணமாக கோபாலனின் நோயைப்பற்றி அறியாத நிலையில் இராமன் அடித்தது மரணம் விளைவிக்கும் கருத்தோடு என்று நாம் கொள்ளுவதற்கில்லை (300ஆம் பிரிவு, 2ஆம் உட்பிரிவு).

(c) இயல்பான போக்கில் மரணத்தை விளைக்கும் தன்மையுடைய உடற் காயத்தை ஏற்படுத்தும் வகையில் இராமன்

கோபாலனைக் கத்தியால் வெட்டிவிடுகின்றான். இதனால் கோபாலன் இறக்கின்றான். இப்பொழுது இராமன் காயத்தை விளைத்தது கோபாலன் இறக்கவேண்டும் என்ற கருத்தோடு இல்லையாயினுங்கூட, இராமன் கொலைக் குற்றவாளி ஆகின்றான். ஏனெனில், இராமன் கருதி விளைத்த உடற்காயம் மரணத்தை விளைக்கும் தன்மையுடையது (300ஆம் பிரிவு, 3ஆம் உட்பிரிவு).

(d) இராமன், எவ்விதக்காரணமும்இன்றி, ஒரு கூட்டத்தினரை நோக்கித் துப்பாக்கியால் சுடுகின்றான். இதனால் கூட்டத்தில் இருந்த ஒருவர் இறந்துவிடுகிறார். குறிப்பிட்ட ஒருவரைக் கொல்ல வேண்டும் என்ற திட்டம் ஏதுமின்றி இராமன் சுட்டாலும், அவன் கொலைக்குற்றத்திற்கு ஆளாகின்றான். ஏனெனில், துப்பாக்கியால் சுடுவது மரணத்தையோ அல்லது மரணம் விளைக்கக்கூடிய உடற்காயத்தையோ தவறாது தோற்றுவிக்கும் உடனடியான ஆபத்தைக் கொண்டது என்பதை அவன் அறிந்தும், துப்பாக்கியால் சுட்டுப் பிறருக்கு மரணத்தை இராமன் விளைவித்தான். எனவே, 300ஆம் பிரிவின் 4ஆம் உட்பிரிவின்படி அவன் கொலைக்குற்றவாளி ஆகின்றான்.

**மரணம் விளைக்குங் குற்றத்திற்கும் கொலைக்குற்றத்திற்கும் உள்ள வேறுபாடுகள்**

299ஆம் பிரிவில் கூறப்படும் 'மரணம் விளைக்குங்' குற்றத்திற்கும் (Culpable homicide), 300ஆம் பிரிவில் கூறப்படும் 'கொலைக் குற்றத்திற்'கும் (Murder) உள்ள வேறுபாட்டினைக் காண்போம்:

| மரணம் விளைக்கும் குற்றம் (299ஆம் பிரிவு) | கொலைக்குற்றம் (300ஆம் பிரிவு) |
|---|---|
| மரணம் விளைத்த செயலை, | மரணம் விளைத்த செயலை, |
| 1. மரணத்தை விளைக்க வேண்டும் என்ற கருத்துடன் செய்வது. | 1. மரணத்தை விளைக்க வேண்டும் என்ற கருத்துடன் செய்வது. |
| 2. மரணம் விளைக்கக் கூடிய உடற்காயத்தை உண்டு பண்ணும் கருத்துடன் செய்வது. | 2. ஒருவருக்கு மரணம் விளைக்கக்கூடிய உடற்காயம் இன்னது என்பதை அறிந்து, அந்த உடற்காயத்தை உண்டு பண்ணும் கருத்துடன் செய்வது.<br>3. இயல்பான போக்கில் மரணத்தை விளைக்கத்தக்க தன்மை கொண்ட உடற்காயத்தை உண்டுபண்ணும் கருத்துடன் செய்வது. |

3. அச் செயல் மரணம் விளைக்கக்கூடியது என்று அறிந்தும் அதைச் செய்வது.

4. அச் செயல் மரணத்தையோ அல்லது மரணம் விளைக்கக்கூடிய உடற்காயத்தையோ தவருது தோற்றுவிக்கும் உடனடியான ஆபத்தைக் கொண்டது என்பதை அறிந்தும் அதைச் செய்வது.

மரணம் விளைக்கும் குற்றத்திற்கும் கொலைக்குற்றத்திற்கும் உள்ள வேறுபாடுகளை மேலே காண்கின்றோம். இதை இன்னும் விளக்கத்துடன் காண்போம்.

## I. 299 (1), 300(1): மரணம் விளைத்த செயலை, மரணம் விளைக்க வேண்டும் என்ற கருத்துடன் செய்வது

இந்த இரண்டு உட்பிரிவுகளிலும் கூறப்படுவது மரணத்தை விளைக்கவேண்டும் என்ற கருத்தோடு ஒரு செயலைச் செய்து மரணத்தை விளைப்பது. இதில் இரண்டிற்கும் வேறுபாடு ஏதுமில்லை. எனவே, மரணத்தை விளைக்கவேண்டும் என்ற கருத்துத் தெளிவாகத் தெரியும் செயலால் மரணம் விளைக்கப்பட்டால், அது கொலைக்குற்றமே ஆகின்றது.

ஒருவர் கூரிய கொடுவாளால் மற்றொருவர் தலையை வெட்டி உடலிலிருந்து அகற்றிவிடுகிறார் என்றால், வெட்டியவரின் கருத்தை நாம் அறிவதில் எந்தவிதச் சிக்கலும் இல்லை. மற்றவரைக் கொல்லவேண்டும் என்ற கருத்தோடுதான் அச் செயல் செய்யப்பட்டுக் கொலையும் நிகழ்ந்தது என்பது தெளிவு. எனவே, வெட்டியவர் கொலைக்குற்றத்திற்கே ஆளாகின்றார்.

ஒருவர், கொடிய நஞ்சினை, மற்றவர் அருந்தவிருக்கும் பாலிலே கலந்து கொடுத்தார். அதனால் அதைக் குடித்தவர் இறந்துவிட்டார். இப்பொழுது நஞ்சினைக் கலந்தவரின் கருத்து, மற்றவரைக் கொல்ல வேண்டும் என்ற கருத்தாகும். இது தெளிவாகத் தெரிகின்றது. எனவே, அவர் கொலைக்குற்றவாளி ஆகின்றார்.

## II.

**299(2)**

மரணம் விளைக்கக்கூடிய உடற் காயத்தை உண்டுபண்ணும் கருத்துடைய செயல்.

**300(3)**

இயல்பான போக்கில் மரணத்தை விளைக்கத்தக்க தன்மை கொண்ட உடற்காயத்தை உண்டுபண்ணும் கருத்துடைய செயல்.

இவை உடற்காயம் உண்டுபண்ணி மரணம் விளைப்பதைக் குறிப்பிடுகின்றன. இச் செயல்களும் வகைப்படுத்தப்படுகின்றன.

**299 (2):** ஒரு கம்பினால் ஒருவர் மற்றொருவர் மண்டையில் அடிக்கின்றார். அந்த அடி நிச்சயமாக உடற்காயத்தை விளைவிப்பதாகும். அந்த உடற்காயத்தைக் கருதிச் செய்யப்பட்ட செயல் தான் கம்பால் அடித்தது. அடிபட்டவரின் மண்டையில் அந்த அடி, காயத்தை உண்டுபண்ணுகிறது. ஆயினும், அடிபட்டவர் சிகிச்சையின் பயனாக இறக்காது தப்பிவிடலாம்; சில வேளைகளில் அடித்த அடியால் மண்டை ஓடே சிதறிவிடலாம்; இதனால், அடிபட்டவர் இறக்கலாம். இந்த இரண்டு வகையான விளைவுகளுக்கும் ஏது இருக்கிறது. இப்படி ஒருவர் கம்பால் அடித்ததால் அடிபட்டவர் இறந்துவிடுகிறார் எனக் கொள்வோம்.

இப்பொழுது, அடித்தவரை, 'மரணத்தை விளைத்த' குற்றத்திற்கே சட்டம் பொறுப்பாக்குகிறது. 'கொலைக்குற்றத்திற்கு'ப் பொறுப்பாக்குவது இல்லை. ஏன்? கம்பால் மண்டையில் அடித்தவரின் கருத்து எதுவாக இருந்திருக்க முடியும்? மரணம் விளைக்கக்கூடிய காயத்தை விளைக்கவேண்டும் என்றுதான் இருந்திருக்கவேண்டும். கம்பால் அடித்தால் அத்தகைய காயந்தான் விளையும். மரணத்தைக் கட்டாயமாக விளைக்கும் காயத்தை உண்டுபண்ணவேண்டுமென்ற கருத்து அடித்தவருக்கு இருந்திருந்தால், அவர் கம்பைப் பயன்படுத்தியிருக்கமாட்டார்; வேறு கொடிய ஆயுதங்களையே பயன்படுத்தியிருப்பார். இயல்பாகவே மரணத்தை விளைக்கும் தன்மை கொண்ட கொடுங் காயத்தை விளைக்க வேண்டும் என்ற கருத்து அடித்தவருக்கு இருந்ததெனில், அவர் கம்பால் அடித்திருக்கமாட்டார். எனவே, கம்பைப் பயன்படுத்தி அடித்ததிலிருந்து நாம் அறிவது, அடித்தவரின் கருத்து மரணம் விளைக்கக்கூடிய உடற்காயத்தை (bodily injury as is likely to cause death) ஏற்படுத்துவதுதான் என்பதாகிறது. ஆதலால், அடித்தவர் 299ஆம் பிரிவுப்படி மரணம் விளைத்த குற்றத்திற்கே (culpable homicide) பொறுப்பாகின்றார்.

**300 (3):** இதே உதாரணத்தில், அடித்தவர் இரும்புக் கடப்பாரையால் அல்லது பெரிய இரும்புத் தடியால் மற்றவரின் மண்டையில் ஓங்கி அடித்திருந்தார் என்று வைப்போம். மண்டை ஓடு சிதறி, அடிபட்டவர் இறந்துவிடுகின்றார் என்று வைப்போம். இப்பொழுது, இரும்புத் தடியால் மற்றவர் மண்டையில் ஓங்கி அடித்தவரின் கருத்து என்னவாக இருந்திருக்கவேண்டும்? பயன்படுத்தப்பட்ட கருவி, கம்பு அன்று; பெரிய இரும்புத் தடி. அடித்த இடமோ மண்டை. இதன் இயல்பான விளைவு எதுவாக இருக்கும்?

இந்த அடியால் ஏற்படும் காயம் இயல்பாக மரணத்தை விளைக்கும் தன்மை கொண்ட காயமாகவே இருக்கும். ஆதலால், அடித்தவரின் கருத்து இயல்பான போக்கில் மரணத்தை விளைக்குந் தன்மை கொண்ட உடற் காயத்தை (bodily injury sufficient in the ordi--nary course of nature to cause death) உண்டுபண்ண வேண்டும் என்பதாகத்தான் இருந்திருக்கவேண்டும். எனவே, அடித்தவரைக் 'கொலைக்குற்றத்திற்கு' (murder) சட்டம் ஆளாக்குகிறது.

இவ்வாறு கம்பால் அடித்து மரணத்தை விளைத்தவர் 'மரணம் விளைக்குங்' குற்றத்திற்கும், இரும்புத் தடியால் அடித்து மரணத்தை விளைத்தவர் 'கொலைக்குற்றத்'திற்கும் ஆளாகின்றனர். இருவரின் செயல்களாலும் விளைந்தது மற்றவரின் மரணந்தான். இருந்தாலும், கம்பால் அடித்தவரின் கருத்து, 'மரணத்தை விளைக்கக்கூடிய காயத்தை' விளைக்கவேண்டும் என்பது; இரும்புத் தடியால் அடித்தவரின் கருத்து, 'இயல்பான போக்கில் மரணத்தை விளைக்கத்தக்க தன்மைகொண்ட காயத்தை' விளைக்கவேண்டும் என்பது இந்த வேறுபாடான கருத்தை அவர்களின் செயல்கள் புலப்படுத்துகின்றன. கம்பைப் பயன்படுத்தி அடித்த செயலிலிருந்தும், இரும்புத் தடியைப் பயன்படுத்தி அடித்த செயலிலிருந்தும், அவற்றைச் செய்தவர்களின் வேறுபாடான கருத்துகளை நாம் உய்த்தறிகின்றோம். அவர்களின் குற்ற மனநிலையில் உள்ள வேற்றுமைகளை அறிகின்றோம். அவர்களின் குற்ற மனநிலைக்குத் தக்கவாறு அவர்களுக்கு விதிக்கப்படும் தண்டனையும் மாறுகின்றது.

ஒருவர் மற்றவரின் வயிற்றில் கையால் ஓங்கிக் குத்தி மரணத்தை விளைத்தால், அது கொலைக்குற்றம் ஆவதில்லை; மரணம் விளைத்த குற்றந்தான். ஒருவர் மற்றவரின் மார்பில் கூரிய கத்தியால் குத்தி மரணத்தை விளைத்தால், அது கொலைக்குற்றமே ஆகும். கல்லால் எறிந்து பிறரைக் கொன்றவர் மரணம் விளைக்குங் குற்றத்தைச் செய்தவர்; துப்பாக்கியால் சுட்டுப் பிறரைக் கொன்றவர் கொலைக் குற்றத்தைச் செய்தவர்.

இந்த முறையில், உடற்காயத்தால் மரணத்தை விளைத்த செயலின் தன்மையை ஆராய்ந்து, அதைச் செய்தவரின் குற்ற மனத்தினை உய்ந்தறிந்து, சட்டம் அவர்களது குற்றத்தின் தரத்தினை உறுதிசெய்கின்றது.

**300 (2): ஒருவருக்கு மரணம் விளைவிக்கக்கூடிய உடற்காயம் இன்னது என்பதை அறிந்து, அந்த உடற்காயத்தை உண்டு பண்ணும் கருத்துடைய செயல் :** சில வேளைகளில், குற்றவாளியின் கருத்து நிச்சயமாக மரணத்தை விளைக்கவேண்டும் என்பதாக இருக்கும். ஆனால், அவன் செய்த செயல் வெளிப்பார்வைக்கு

மரணத்தைத் தவருது விளைக்கும் கொடிய செயலாகத் தோன்றுவதில்லை; இருந்தும் மரணம் விளைக்கிறது. இது எந்தச் சூழ்நிலையில் ஏற்படுகிறது?

ஒருவருக்குக் கல்லீரல் (spleen) வீங்கியிருக்கிறது. எனவே, அவருடைய வயிற்றில் சாதாரண அடியோ, குத்தோ விழுந்தாலுங் கூட, அது அவருடைய உயிருக்கு ஆபத்தானது. இந்த நோயுடன் அவர் இருப்பதை அவருடைய பகைவர் அறிகின்ருர். நோயுடைய இவரைக் கொல்லவேண்டும் என்ற கருத்தோடு, அவரது பகைவர், நோயாளியின் வயிற்றில் கையால் ஓங்கிக் குத்தி விடுகின்ருர். அதன் பயனுக நோயாளி இறக்கின்ருர். இப்பொழுது, கையால் குத்தி மரணத்தை விளைத்தவரை எந்தக் குற்றத்திற்குப் பொறுப்பாளி ஆக்குவது? கொலைக் குற்றத்திற்கா அல்லது மரணத்தை விளைத்த குற்றத்திற்கா? அவர் கொலைக்குற்றத்திற்கே ஆளாகின்ருர்.

குத்தப்பட்டவர் நோயாளி என்பது குத்தியவருக்குத் தெரியும். கையால் வயிற்றில் குத்தப்பட்டாலும் நோயாளியின் உயிருக்கு ஆபத்து விளையும் என்பதும் குத்தியவருக்குத் தெரியும். இந்த விவரங்களைத் தெரிந்துகொண்டும், கையால் குத்துவதன் கருத்து என்ன? தவருது நோயாளியின் மரணத்தை விளைக்கவேண்டும் என்பதுதான்.

எனவே, பகைவருக்குள்ள நோயின் தன்மையை அறிந்த குற்றவாளி, நோயாளியின் வயிற்றில் கையால் குத்தினுலே போதுமானது என்பதை அறிந்து, அதைச் செய்து தமது கொலைக்கருத்தை நிறைவேற்றிக்கொண்டார்.

இந் நிலையில், நோயில்லாத ஒருவரை மார்பில் கத்தியால் குத்தி மரணத்தை விளைவிப்பவருக்கும், நோயாளியை வயிற்றில் கையால் குத்தி மரணத்தை விளைவிப்பவருக்கும் எந்தவித வேறுபாடும் இல்லை. இருகுற்றவாளிகளின் கருத்தும் பிறரது மரணத்தை விளைக்கவேண்டும் என்பதுதான். தங்கள் கருத்துகளை நிறைவேற்றுவதற்கு இயைந்த வழிகளையே இருவரும் கைக்கொண்டனர். நோயில்லாத ஒருவரைக் கையால் குத்தினுல் இறக்கமாட்டார். எனவே, அவரைக் கொல்லக் கருதியவன் அவரது மார்பில் கத்தியைப் பாய்ச்சுகின்ருன். நோயுள்ளவர் இறப்பதற்கு அவர் வயிற்றில் கையால் குத்தினுலே போதும். எனவே, அவரைக் கொல்லக் கருதியவன் அவரது வயிற்றில் கையால் குத்துகிருன். இரு குற்றவாளிகளின் கொலைக்கருத்தும் அவர்கள் கையாண்ட செயல்களால் நிறைவேறிவிடுகின்றன. ஆதலால், கத்தியால் குத்தி மரணத்தை விளைத்தவன் எவ்வாறு

கொலைக்குற்றவாளி ஆகின்றனே, அவ்வாறே கையால் குத்தி மரணத்தை விளைத்தவனும் கொலைக்குற்றவாளியே ஆகின்றான்.

இந்தக் கொள்கையைத்தான் 300(2)ஆம் பிரிவு கூறுகின்றது. ஒருவருக்கு மரணம் விளைக்கக்கூடிய உடற்காயம் இன்னது என்பதை அறிந்து, அந்த உடற்காயத்தை உண்டுபண்ணி மரணத்தை விளைப்பது கொலைக்குற்றமாகின்றது.

இறந்தவருக்குள்ள நோயைப்பற்றித் தெரியாத ஒருவர், கையால் குத்தி மரணத்தை விளைத்திருந்தால், அது கொலைக் குற்றம் ஆகாது; மரணத்தை விளைத்த குற்றமேயாகும்.

| III. 299(3) | 300(4) |
|---|---|
| ஒரு செயல், மரணம் விளைக்கக் கூடியது என்பதை அறிந்தும் அதைச் செய்வது. | ஒரு செயல், மரணத்தையோ அல்லது மரணம் விளைக்கக்கூடிய உடற்காயத்தையோ தவருது தோற்றுவிக்கும் உடனடியான ஆபத்தைக் கொண்டது என்பதை அறிந்தும் அதைச் செய்வது. |

மரணம் விளைக்கும் கருத்தோ, மரணம் விளைக்கும் உடற்காயத்தை உண்டுபண்ணும் கருத்தோ இல்லாத மனநிலையிலும் சிலர் பிறரது மரணத்தை விளைக்கின்றனர்.

தனது செயலால் பிறருக்கு மரணம் விளையலாம் என்பது ஒருவருக்குத் தெரிகின்றது. ஆனல், அவர் குறிப்பிட்ட எவருடைய மரணத்தையும் கருதவில்லை. இருப்பினும், மரணம் விளைக்கும் அந்தச் செயலை அவர் செய்கின்றார்; அதனல் பிறரது மரணமும் விளைகின்றது. இப்பொழுது, அச் செயலைச் செய்து பிறரது மரணத்தை விளைத்தவரைக் குற்றவாளியாக்குவதா இல்லையா? அவர் குற்றவாளிதான்.

மரணம் விளையலாம் என்று அவர் அறிந்தே (with the knowledge) செயற்படுகின்றார். ஆனல், மரணம் விளைவதைக் கருதி intention) அவர் செயற்படவில்லை. தெரிந்தும் அதைத் தவிர்க்காதது குற்றந்தான். மனமறிந்து செய்வதாலும், மனங் கருதிச் செய்வதாலும் தோன்றும் விளைவு ஒன்றுதான்; அதாவது, பிறரது மரணம். எனவே, பிறருக்கு மரணம் விளைக்கும் செயலை ஒருவர் மரணம் விளையலாம் என்று மனமறிந்து செய்தாலும், மரணம் விளைக்கவேண்டும் என்று கருதிச் செய்தாலும், சட்டம் அவரைத் தண்டிக்கின்றது.

மரணத்தை விளைப்பன என்று மனமறிந்து செய்யப்படும் செயல்களிலும் இருவகைகள் உண்டு. ஒரு வகை 299(3)-ல் கூறப்படுகிறது; மற்றென்று 300(4)-ல் கூறப்படுகிறது.

பாம்பாட்டி ஒருவன், நச்சுப் பற்களுள்ள நல்ல பாம்பினைக் கூட்டத்தினர் முன் ஆட்டிக்காட்டுகிறான். தனது திறமையைக் காட்டுவதற்கென்று, கூட்டத்தில் நின்ற ஒருவர்மீது அந்தப் பாம்பை வைக்கின்றான். அப்பொழுது, அவர் பாம்பைக் கையால் தள்ளிவிடவே, பாம்பு அவரைக் கடித்துவிடுகிறது. அதனால் அவரும் இறந்துவிடுகிறார். இப்பொழுது பாம்பாட்டியின் பொறுப்பு என்ன? இறந்தவரின் மரணத்தை அவன் கருதவில்லைதான். ஆயினும், அவனுக்குத் தெரியும், நச்சுப் பற்களுள்ள நல்லபாம்பு எவரையும் கடித்துவிடலாம் என்று. அதை அவன் அறிந்திருந்தும், அந்தப் பாம்பைப் பிறர்மீது அவன் வைத்தான். அதன் பயனாக மரணமும் விளைந்துவிட்டது. இச் செயல் மரணம் விளைக்கக்கூடியது என்பதை அறிந்தும் செய்யப்பட்டதால், 'மரணம் விளைக்கும்' குற்றம் ஆகின்றது [299(3) ஆம் பிரிவு].

ஒரு கூட்டத்தை நோக்கி ஒருவர் துப்பாக்கியால் சுடுகின்றார் என வைப்போம். துப்பாக்கிக் குண்டு கூட்டத்தினர்மீது பாய்ந்து மரணத்தை விளைக்கலாம்; அல்லது மரணத்தை விளைக்கக்கூடிய உடற்காயத்தை விளைக்கலாம். எனவே, மரணத்தையோ அல்லது மரணம் விளைக்கும் உடற்காயத்தையோ தவறாது தோற்றுவிக்கும் ஆபத்தான செயலாகும் என்பதை அறிந்தும் செய்ததாகும், கூட்டத்தை நோக்கித் துப்பாக்கியால் சுட்டது. எனவே, இவ்வாறு ஒருவர் சுட்டுக் கூட்டத்தில் இருந்த ஒருவர் இறந்தால் அது 300(4)ஆம் பிரிவுப்படி கொலைக்குற்றமாகிறது.

பொதுமக்களுக்குக் குடிதண்ணீர் அளிக்கும் கிணற்றுக்குள் கொடிய நஞ்சை இட்டு, கிணற்று நீரை ஒருவர் நஞ்சு கலந்ததாக்கி விடுகின்றார் எனக் கொள்வோம். இதன் விளைவு என்ன ஆகும்? அந்தக் கிணற்று நீரை அருந்துவோர் இறந்துவிடுவார்கள். எனவே, குடிநீர்க் கிணற்கில் நஞ்சை இடுவது, பிறருக்கு மரணத்தைத் தவறாது விளைக்கும் ஆபத்தான செயல் என்பதை அறிந்தும் செய்ததாகும். எனவே, இது 'கொலைக்குற்ற'மாகிறது.

பாம்பாட்டி வேடிக்கை பார்த்தவர்மீது பாம்பை வைத்ததும், மரணம் விளைக்கக்கூடிய செயல். ஆனால், கூட்டத்தினரை நோக்கித் துப்பாக்கியால் சுட்டதும், குடிநீர்க் கிணற்றில் நஞ்சிட்டதும், மரணத்தைத் தவறாது தோற்றுவிக்கும் உடனடியான ஆபத்தைக் கொண்ட செயல்கள். பாம்பு கடிக்காமல் இருந்திருக்கலாம்.

எனினும், அது மரணம் விளைக்கக்கூடிய செயல்தான் (act likely to cause death). ஆனால், கூட்டத்தை நோக்கிச் சுட்டதும், குடிநீர்க் கிணற்றில் நஞ்சிட்டதும் நிச்சயமாக மரணத்தை விளைக்கும் செயல்கள். இச் செயல்களால் மரணம் விளைந்தாலும் விளையலாம், விளையாமலும் போகலாம் என்று சொல்லுவதற்கில்லை. இச் செயல்கள், மரணத்தையோ, அல்லது மரணத்தை விளைக்கக்கூடிய உடற்காயத்தையோ தவருது தோற்றுவிக்கும் உடனடியான ஆபத்தைக் கொண்டவை (act so imminently dangerous that it must in all probability cause death, or such bodily injury as is likely to cause death). எனவே, இவ்விருவகைச் செயல்களுக்கும் வேறுபாடு உள்ளது.

ஆதலால், மரணம் விளைக்கக்கூடிய செயல் என்று மனமறிந்து ஒரு செயலைச் செய்து மரணம் விளைந்தால், அது 'மரணம் விளைக்கும் குற்ற'மாகிறது [299(3) ஆவது பிரிவு]. மரணத்தையோ அல்லது மரணம் விளைக்கக்கூடிய உடற்காயத்தையோ தவருது தோற்றுவிக்கும் உடனடியான ஆபத்தைக்கொண்டது ஒரு செயல் என்று மனமறிந்து அச் செயலைச் செய்து மரணம் விளைத்தால், அது 300(4) பிரிவுப்படி 'கொலைக்குற்றம்' ஆகின்றது.

மேலே கூறப்பட்ட உதாரணங்களை நாம் ஊன்றிப் படித்தால், மரணம் விளைக்கும் குற்றத்திற்கும், கொலைக்குற்றத்திற்கும் உள்ள வேறுபாட்டினையும், சட்டம் எந்த அடிப்படையில் இந்த இருதரப் பட்ட குற்றங்களையும் பாகுபடுத்துகிறது என்பதையும் தெளிவாகக் காணலாம்.

**மரணம் விளைத்தல் கொலைக்குற்றமாகாத் தறுவாய்கள்**

ஒருவர் மற்றொருவரின் மரணத்தைக் கருதி விளைத்தால், அது 'மரணம் விளைக்கும் குற்றம்' எனவும், 'கொலைக்குற்றம்' எனவும் இருதரப்படுகின்றது என்று கண்டோம். அவ்வாறு, இருதரப்படுத்துவது குற்றம் செய்தவரின் குற்ற மனநிலைக்குத் தக்கவாறுதான் எனவுங் கண்டோம்.

கொலைக்குற்றத்திற்கான குற்ற மனத்துடன் ஒருவர் பிறருக்கு மரணத்தை விளைத்தாலும், சில சூழ்நிலைகளில், சட்டம் அவருக்கு மரண தண்டனை அளிப்பதில்லை. கொலைச்செயலைக் கொலைக்குற்றமாகக் கருதாமல், 'மரணம் விளைக்கும் குற்றமா'கவே சட்டம் கொள்ளுகின்றது. பிறரின் மரணத்தை விளைத்தவர், கொலைக் குற்றத்திற்கான மனநிலையோடுதான் செயற்படுகின்ருர். அந்த மனநிலை அவருக்கு இருந்தாலுங்கூட, அவர் செயற்பட்ட சூழ்நிலைகளின் காரணமாக அவர்மீது சட்டம் இரக்கங் காட்டுகிறது. அவரது

செயலைக் 'கொலைக்குற்ற'மாகக் கொள்ளாமல், 'மரணம் விளைக்குங் குற்றமாகக்' கொண்டு, அவருக்குச் சட்டம் குறைந்த தண்டனையே அளிக்கின்றது. அவ்விதச் சூழ்நிலைகள் ஐந்து வகைப்படுவன.

கொலைக்குற்றத்தை மரணம் விளைக்குங் குற்றமாகக் குறைக்கும் அந்த ஐந்துவகைச் சூழ்நிலைகள் எவை என்று காண்போம்.

**1. திடீரெனக் கடுஞ்சினமூட்டப்பட்ட நிலையில் மரணம் விளைத்தல்**

ஒருவர் திடீரென்று கடுஞ்சின மூட்டப்பட்டதால், தன் வயமிழந்த நிலையில், தனக்குச் சினமூட்டியவரைக் கொலை செய்து விடுகின்றார்; அல்லது அந்த நிலையில், தவறுதலாகவோ, எதிர் பாராவிதத்திலோ இன்னொருவருக்கு மரணம் விளைத்துவிடுகின்றார். இந் நிலையில், அவரது செயல் கொலைக் குற்றமாகாது; மரணம் விளைத்த குற்றமேயாகும்.

**திடீரென்று கடுஞ்சினங்கொள்ளுதலுக்குள்ள கட்டுப்பாடுகள்**

(i) பிறருக்குக் கேடு அல்லது மரணம் விளைப்பதற்குச் சாக்காகத் தமக்குப் பிறர் சினமூட்டும்படி வேண்டுமென்றே நடந்துகொள்ளுவதும், தமக்குப் பிறர் சினமூட்டும்படி தூண்டுவதும் முறையன்று.

(ii) சட்டத்தை நிறைவேற்றும் வகையில் ஏதேனும் செய்யப் பட்டதாலோ, பொது ஊழியர்கள் தங்கள் பொதுப்பணி முறைக் குள்ள அதிகாரத்தின்படி நடந்தாலோ, எவரும் சினங்கொள்ளுதல் முறையன்று.

(iii) ஒருவருக்குள்ள காப்புரிமைச் செயலை அவர் சட்ட முறைப்படி நிறைவேற்றியதால் எவரும் சினங்கொள்ளுதல் முறையன்று.

குற்றவாளியின் செயலைக் கொலைக்குற்றமாக்காமல் குறைக்கும் அளவுக்குக் குற்றவாளிக்குத் திடீரென்று கடுஞ்சினமூட்டப்பட்டதா என்பதை அந்தந்தச் சூழ்நிலைகளை ஆய்ந்து முடிவு செய்தல் வேண்டும்(300ஆவது பிரிவு, முதல் விதிவிலக்கு).

**உதாரணங்கள்**

(a) இராமனைக் கோபாலன் திடீரென்று கடுஞ்சினமூட்டு கின்றான். சினத்தால் தன்வயமிழந்த நிலையிலுள்ள இராமன் கோபாலனைத் துப்பாக்கியால் சுட்டுக் கொன்றுவிடுகிறான். இப்பொழுது, இராமன் செய்தது கொலைக் குற்றமன்று; மரணம் விளைத்த குற்றமேயாகும்.

(b) இராமனைக் கோபாலன் திடீரென்று கடுஞ்சினமூட்டுகின்றான். சினத்தால் தன்வயமிழந்த நிலையிலுள்ள இராமன் கோபாலனை நோக்கித் துப்பாக்கியால் சுடுகின்றான். ஆனால், குறி தவறிக் கோபாலனின் அருகில் நின்றுகொண்டிருந்த கோவிந்தனின் மீது குண்டு பாய்ந்து கோவிந்தன் இறந்துபோகின்றான். கோவிந்தனைக் கொல்லக் கருதியோ, கோவிந்தனுக்கு மரணம் விளையலாம் என்பதை அறிந்தோ இராமன் செயற்படவில்லை. எனவே, இராமனது செயல் மரணம் விளைத்த குற்றமேயாகும்.

(c) இராமனைக் கோபாலன் திடீரென்று கடுஞ்சினமூட்டுகின்றான். சினத்தால் தன்வயமிழந்த இராமன், கோபாலனது குழந்தையை வேண்டுமென்றே கொன்றுவிடுகிறான். இராமனது இந்தச் செயல் கொலைக்குற்றமாகிறது. ஏனெனில், இராமனுக்குச் சினமூட்டியது கோபாலன்தான்; கோபாலனின் குழந்தையன்று. மேலும், இராமன் கோபாலனின் குழந்தையைக் கொன்றது தவறுதலின் காரணமாகவோ, எதிர்பாராதவிதமாகவோ அன்று; வேண்டுமென்றே கொன்றார். ஆதலால், இராமனின் செயல் கொலைக் குற்றமாகின்றது.

(d) சட்டமுறைப்படி ஒருவரைக் கோர்ட்டு அமீனா கைது செய்கின்றார். இதனால் திடீரென்று ஆத்திரமடைந்து, கைதுசெய்யப் பட்டவர் அமீனாவைக் கொன்றுவிடுகிறார். இது கொலைக்குற்றமேயாகும். ஏனெனில், பொது ஊழியரான அமீனா தமது கடமையைச் செய்வதால் எவரும் சினங்கொள்ளுதல் முறையன்று.

(e) இராமன் கோபாலனது காதைப் பிடித்து இழுக்கின்றான். இதைத் தடுக்கும் வகையில் கோபாலன் இராமனது கையைத் தடுத்து நிறுத்துகின்றான். இதனால், திடீரென்று ஆத்திரமடைந்து இராமன் கோபாலனைக் கத்தியால் குத்திக் கொல்கிறான். இதுவும் கொலைக்குற்றமேயாகும். ஏனெனில், இராமன் சினமுற்றது கோபாலனது காப்புரிமைச் செயலால் விளைந்தது (300ஆம் பிரிவு, முதல் விதிவிலக்கு).

**2. காப்புரிமைச் செயலைச் செய்கையில் வரம்பு கடந்து மரணம் விளைத்தல்**

உடல் அல்லது பொருளைப் பாதுகாப்பதற்கான காப்புரிமைச் செயல்களை நல்லெண்ணத்தோடு செய்பவர், அதற்குச் சட்டம் அளித்துள்ள வரம்பைக் கடந்து, எவருக்கு எதிராகக் காப்புரிமைச் செயல் செய்யப்பட்டதோ அவருக்கு மரணம் விளைத்தார் எனில், அது கொலைக்குற்றம் ஆகாது; மரணம் விளைத்த குற்றமேயாகும்.

ஆனால், அந்தச் செயல், முன்யோசனையின்படியோ, அதிகமாகக் கேடு விளைக்கும் வகையிலோ செய்யப்பட்டிருத்தல் கூடாது.

**உதாரணம்**

இராமனைக் கோபாலன் அடிக்கின்றான். அந்த அடி இராமனுக்குக் கொடுங்காயம் விளைக்கக்கூடியது என்றால், கோபாலனுக்கு இராமன் மரணத்தையும் விளைத்துத் தற்காத்துக் கொள்ளலாம். இவ்வாறு மரணம் விளைப்பது இராமனது காப்புரிமைச் செயலேயாகும். ஆனால், கோபாலனின் அடி இராமனுக்குக் கொடுங்காயம் விளைவிப்பதாக இல்லை. இருந்தாலும், இராமன் காப்புரிமை வரம்பைக் கடந்து கோபாலனுக்கு மரணத்தை விளைத்து விடுகின்றான். இது கொலைக்குற்றமாவதில்லை. மரணம் விளைக்குங் குற்றமேயாகும் (300ஆவது பிரிவு, இரண்டாவது விதிவிலக்கு).

**3. பொது ஊழியர் தமது அதிகார வரம்பினைக் கடந்து மரணம் விளைத்தல்**

ஒரு பொது ஊழியர், அல்லது பொது நீதியை நிலைநாட்டும் பொது ஊழியருக்கு உதவியளிப்பவர், சட்டப்படி தமக்குள்ள அதிகாரவரம்பினைக் கடந்து, தமது கடமையை முறையாகச் செய்வதற்குச் சட்ட இசைவும் அவசியமுங் கொண்டது என நல்லெண்ணத்தோடு நம்பி, பகையெண்ணம் ஏதுமின்றி, ஒருவருக்கு மரணத்தை விளைத்தாரெனின் அதுவும் கொலைக்குற்றமாகாது; மரணம் விளைக்கும் குற்றமேயாகும் (300ஆம் பிரிவு, மூன்றாவது விதிவிலக்கு).

**4. திடீரென்று விளைந்த சண்டையில் முன்னறிவின்றி மரணம் விளைத்தல்**

திடீரென்று ஏற்பட்ட சண்டையினாலோ, திடீரென விளைந்த வாக்குவாதத்தால் தோன்றிய உணர்ச்சி வேகத்தாலோ முன்யோசனை ஏதுமின்றி ஒருவர் மற்றொருவரின் மரணத்தை விளைத்துவிடில், அது கொலைக்குற்றம் ஆவதில்லை; மரணம் விளைக்குங் குற்றமேயாகும். ஆனால், கொலை செய்தவர் கொடிய முறையிலோ, இயல்முறைக்கு மாறாகவோ நடந்திருக்கக்கூடாது; தமக்குச் சாதகமாயுள்ள நிலையை நியாயமின்றிப் பயன்படுத்தியும் நடந்திருத்தல் கூடாது.

இந் நிலையில், எவர் எவருக்குச் சினமூட்டினார் என்பதையோ, எவர் முதலில் தாக்க முனைந்தார் என்பதையோ சட்டம் கவனிப்பது இல்லை (300ஆம் பிரிவு, நான்காவது விதி விலக்கு).

**5. பிறர் சம்மதம் பெற்று அவருக்கு மரணம் விளைத்தல்**

பதினெட்டு வயதிற்கு மேற்பட்ட ஒருவர் சம்மதித்து மரணம் விளைக்கும் செயலைச் சகித்துக்கொண்டாலோ, அல்லது மரணம்

விளைக்கும் ஆபத்தை ஏற்றுக்கொண்டாலோ, அவருக்கு மரணம் விளைப்பதும் கொலைக்குற்றமாவதில்லை; மரணம் விளைக்கும் குற்றமே யாகும் (300ஆம் பிரிவு, ஐந்தாவது விதிவிலக்கு).

இதுவரை, கொலைக்குற்றத்தின் இலக்கணத்தையும், அதன் கூறுபாடுகளையும், அக் குற்றம் எவ்வாறு மரணம் விளைக்குங் குற்றத்தி னின்றும் வேறுபடுகின்றது என்பதையும், எந்தெந்தச் சூழ்நிலை களில் கொலைச் செயல் 'கொலைக் குற்றமாகக்' கருதப்படாமல் மரணம் விளைக்குங் குற்றமாகவே' கொள்ளப்படுகிறது என்றும் கண்டோம். இனி, அக் கொள்கைகளை விளக்கும் சில வழக்குகளின் விவரங்களை நாம் காணலாம்.

### 300 (1ஆவது பிரிவு): மரணம் விளைக்குங் கருத்தோடு ஒரு செயலைச் செய்து மரணம் விளைத்தல்

கொலைக் குற்றம் என்பது, ஒருவரைக் கத்தியால் குத்தி மரணத்தை விளைப்பது என்றோ, கல்லால் எறிந்து மரணத்தை விளைப்பது என்றோ குறிப்பிட்டு எவ்விதச் செயலையும் சட்டம் குறிப்ப தில்லை. ஒருவருக்கு மரணம் விளைக்கவேண்டும் என்று கருதி, ஒரு செயலைச் செய்து, மரணம் விளைப்போர் கொலைக்குற்றம் செய்த வராகின்றார். ஒருவரது செயலால் மற்றவருக்கு மரணம் விளைந் திருக்கவேண்டும்; மேலும், அந்தச் செயல் மரணம் விளைக்குங் கருத் தோடு செய்யப்பட்டிருத்தல் வேண்டும். அது கொலைக்குற்ற மாகிறது. இதுவே 300(1)ஆவது பிரிவில் கூறப்படுவதாகும். மரணம் விளைக்கும் 'செயல்' எத்தனையோ விதமாக இருக்கலாம்.

ஒரு மலையில் உள்ள செங்குத்தான பாறைமீது இருவர் நின்று கொண்டிருக்கின்றனர். பாறையின் ஒரு புறத்தில் அதல பாதாளமாக இருநூறு அடிப் பள்ளம் இருக்கிறது. அந்தப் பாறையின் ஓரத்தில் நின்றுகொண்டிருக்கையில், ஒருவரை மற்றொருவர் பாறையிலிருந்து பள்ளத்தில் தள்ளிவிடுகின்றார். இருநூறு அடிப் பள்ளத்தில் விழுந்தவர் மண்டை நொறுங்கி அங்கேயே இறக் கின்றார். இப்பொழுது, தள்ளிவிட்டவரின் கருத்து எது என்று அறிவது எளிது. அடுத்தவரைக் கொல்லவேண்டும் என்று கருதியே தான் அவர் மற்றவரைத் தள்ளியது. அடுத்தவருக்கு மரணம் விளைக்கவேண்டும் என்ற கருத்துத் தள்ளியவரின் செயலிலிருந்து தெளிவாகத் தெரிகின்றது. அந்தக் கருத்தை நிறைவேற்ற அவர் கையாண்ட செயல் என்ன? கத்தியால் குத்தவில்லை; கழுத்தை நெரிக்கவில்லை; கம்பால் அடிக்கவில்லை; கல்லால் எறியவில்லை; இலேசாகப் பிடித்துத் தள்ளியதுதான் அவர் செய்த செயல். சமமாக

இருக்கும் தரையிலோ, வீதியிலோ ஒருவரை மற்ெருருவர் இவ்வாறு தள்ளியிருந்தால், தள்ளப்பட்டவருக்கு மரணம் விளையாது. ஆனல், இருநூறு அடிப் பள்ளத்திலே அவர் தள்ளியதால் அச் செயல் மரணத்தை விளைக்கும் செயலாகிறது; மரணத்தை விளைக்கக் கருதினுர் என்பதையும் அது புலப்படுத்துகிறது. ஆதலால், அது கொலைக் குற்றமாகின்றது.

மின்சார விளக்குக் கம்பத்தில் ஏறி ஒருவர் மின்சாரக் கம்பியைப் பழுதுபார்த்துக்கொண்டிருக்கின்ருர். அப்பொழுது மின்சாரம் நிறுத்தப்பட்டிருக்கிறது. கம்பத்தில் ஏறியிருப்பவரின் பகைவர் ஒருவர் மின்சாரம் நிறுத்திவைக்கப்பட்டிருந்த விசையை மாற்றிக் கம்பியில் மின்சாரம் பாயும்படி செய்கின்ருர். கம்பத்தின்மேல் இருந்தவரை மின்சாரம் தாக்குகிறது. அவர் இறந்து விழுகின்ருர். இப்பொழுது, விசையை மாற்றிய செயல் எந்தக் கருத்தோடு செய்யப்பட்டது என்பதும், அச் செயலின் தன்மையும் எளிதில் புலனுகின்றன. எனவே, விசையை மாற்றிக் கம்பத்தின்மேல் இருந்தவரின் மரணத்தை விளைத்தவர் கொலைக்குற்றவாளி ஆகின்ருர்.

இவ்வாறு, கத்தியும் இரத்தமும் இன்றி, அடிதடி இன்றி, ஆரவாரம் இன்றி ஒருவர் பிறரது மரணத்தை விளைக்கலாம். அது கொலைக் குற்றமேயாகும். எனவேதான், மரணம் விளைத்த எந்த விதச் செயலையும் மரணம் விளைக்கக் கருதிச் செய்தவர் கொலைக் குற்றவாளி என்று சட்டம் கூறுகிறது.

இரண்டு பேர்கள் ஒரு பெண்ணைக் கொல்லவேண்டும் என்று கருதி அவளை ஓர் இடத்திற்குக் கடத்திச் சென்று, அவளுடைய கழுத்தை நெரித்தனர். அவள் மயக்கமுற்றுக் கிடக்கவே, அவளை இழுத்துச் சென்று ஓர் இரயில் தண்டவாளத்தின்மீது கிடத்திவிட்டார்கள். சிறிது நேரங் கழிந்து வந்த இரயில் வண்டி அவள்மீது ஏறியதால், அவள் உடல் துண்டிக்கப்பட்டது. இப்பொழுது குற்றவாளிகள் என்ன குற்றத்திற்கு ஆளாகின்றனர்?

அவளை இரயில் தண்டவாளத்தின்மீது கிடத்துகையில் அவள் இறக்கவில்லை; எனவே, அவள் கழுத்தை அவர்கள் நெரித்ததால் அவள் மரணம் விளையவில்லை. இரயில் அவள்மீது ஏறியதால்தான் உடல் துண்டிக்கப்பட்டு அவள் மாண்டாள். இருந்தாலும், அவளைத் தாக்கியவர்களின் கருத்து அவளைக் கொல்லவேண்டும் என்பதுதான். அந்தக் கொலைக் கருத்தை நிறைவேற்றத்தான், அவளை அவர்கள் கழுத்தை நெரித்தது; அதற்குப் பின்னும் அவளை இரயில் தண்டவாளத்தில் கிடத்தியுது. தண்டவாளத்தில் கிடத்திய செயல் தங்கள் குற்றத்தை மறைக்கும் கருத்துடனும் அவர்கள்

செய்திருக்கலாம். கழுத்து நெரிப்பினுல் அவளுக்கு மரணம் விளைய வில்லைதான். தண்டவாளத்தில் அவளைக் கிடத்தியது அவள்மீது இரயில் வண்டி ஏறி, அதனுல் அவளுக்கு மரணம் விளையவேண்டும் என்ற கருத்துடன் இன்றியும் இருக்கலாம். அவள் மரணம் கருதிய செயலான கழுத்து நெரிப்பால் அவள் இறக்கவில்லை. இரயில் பாதையில் போடப்பட்ட செயல் அவளுக்கு மரணம் விளைத்தாலும், அவ்வாறு போட்டது அச் செயலால் மரணம் விளையவேண்டும் எனக் கருதி அன்று. எனவே, குற்றவாளிகள் எவ்வாறு கொலைக்குற்றத் திற்குப் பொறுப்பாகின்றனர் என்ற வினு எழலாம். ஒரு பெண்ணைக் கடத்திச் சென்று, கழுத்தை நெரித்து, இரயில் தண்டவாளத்தில் அவளைக் கிடத்திச் சென்றவர்களின் கருத்து எதுவாக இருக்க முடியும்? அப் பெண்ணுக்கு மரணத்தை விளைக்கவேண்டும் என்றுதான் இருக்கமுடியும். எனவே, கழுத்தை நெரித்த செயலையும், தண்டவாளத்தில் கிடத்திய செயலையும் சேர்த்தே, அவற்றை ஒரே தொடர்ச் செயலாகவே நாம் கொண்டு குற்றவாளிகளின் பொறுப்பைத் தீர்மானித்தல் வேண்டும். அவ்வாறு ஆய்ந்தால், குற்றவாளிகள் கொலைக் குற்றத்திற்கே பொறுப்பாகின்றனர். இவ்வாறு, சென்னை உயர் நீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது (Kaliappa Gounder (1933) 57 Madras 158).

ஆனுல், ஏதோ கோபத்தில் ஒரு பெண்ணின் கழுத்தைக் கணவன் நெரித்து, அதனுல் அவள் மயங்கி விழவே, அவள் இறந்து விட்டதாகக் கருதி, தன்மீது கொலைக்குற்றம் ஏற்பட்டுவிடக்கூடாது என்ற அச்சத்தால் மனைவியின் உடலைத் தூக்கிலிட்டு, அவ்வாறு தூக்கிலிட்டதன் பயனுகவே அந்தப் பெண் இறந்துவிட்டாள் என்று வைப்போம். இப்பொழுது, கணவனைக் கொலைக் குற்றத்திற்கு ஆளாக்குவதில்லை. ஏன்? பெண்ணின் கழுத்தைக் கணவன் கோபத்தில் நெரித்தபொழுது அவளைக் கொல்லவேண்டும் என்ற கருத்து இருந்தாலும், அச் செயல் அவள் உயிரைப் போக்கவில்லை. இரண்டாவது செயல் அத்தகைய கொலைக்கருத்தின்றிச் செய்யப் பட்டது. எனவே, மரணம் விளைந்தாலும், கணவன் கொலைக் குற்றவாளி ஆவதில்லை என்பது தீர்ப்பு (Palani Gounder (1919) 42 Madras 547).

ஒரு செயலால் (act) மரணம் விளைப்பது போன்றே சட்ட முர ணுள்ள செய்யாமையாலும் (illegal omission) மரணம் விளைத்தல் கொலைக்குற்றமாகும். ஒருவரது வேலையாள் திடீரென நோய்வாய்ப் பட்டு நகரவும் ஆற்றலின்றி அவரது வீட்டில் ஓர் அறையில் கிடக் கின்ருன். ஏழெட்டு நாட்களாக அவனுக்கு எந்த உணவும் நீரும் கொடுக்காமல், வைத்தியரிடம் எடுத்துச் செல்லாமல் விட்டுவைத் திருந்தார் நோயாளியின் எசமானர். இதனுல் விளைந்த வேலையாளின்

மரணத்திற்கு எசமானர் பொறுப்பாக்கப்பட்டார். வேலையாளைப் பராமரிக்கும், அதிலும் நோயாய்க் கிடக்கும் அவனைக் கவனிக்கும் பொறுப்பு — சட்டப்படியான கடமை— எசமானருக்கு இருந்தும், அதை வேண்டுமென்றே செய்யாதிருந்து மரணத்தை விளைத்த செயல் கொலைக் குற்றமே என்பது தீர்ப்பு (Instan (1893) I.Q.B. 450).

தெருவோரத்தில் நோயால் வாடிக் கிடக்கும் பிச்சைக்காரனைக் கவனியாது ஒருவர் சென்றால், அது மனிதப் பண்பிற்கு எதிரான செயலாகுமே தவிர, சட்டக் கடமையில் தவறிய செயலாகாது. எனவே, அப் பிச்சைக்காரன் மாண்டாலுங்கூட, அவனைக் கவனியாது சென்றவர் எவரும் குற்றவாளி ஆவதில்லை.

இவ்வாறு, ஒன்றைச் செய்வதாலோ அல்லது சட்ட முரணுள்ள செய்யாமையாலோ பிறருக்கு மரணம் விளைக்கக் கருதி மரணம் விளைத்தால், அது 300(1)ஆவது பிரிவுப்படி கொலைக் குற்றமாகிறது.

**300(2)ஆவது பிரிவு: ஒருவருக்கு மரணம் விளைக்கக்கூடிய உடற் காயம் இன்னது என்பதை அறிந்து அந்த உடற்காயத்தை உண்டுபண்ணி மரணத்தை விளைத்தல்**

மரணத்தை விளைக்கும் உடற்காயத்தை அறிந்து, அதை உண்டாக்கி மரணத்தை விளைத்தலைப்பற்றி இந்தப் பிரிவு கூறுகிறது.

இரண்டு பேர்கள் கூடி ஒருவரைத் தடியால் மண்டையில் அடித்தார்கள். அடியின் வேகத்தில் அடிபட்டவரின் மண்டை ஓடு சிதறியது. அதனால் அவரும் இறந்துவிட்டார். அடித்தவர்கள் இருவரும் கொலைக்குற்றவாளிகள் என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

ஒருவர் ஒரு குறிப்பிட்ட வியாதியால் அவதிப்படுகிறார் என்பதை அறிந்து, அந்த வியாதிக்கு ஒவ்வாத செயலைச் செய்து, அந்த நோயாளியின் மரணத்தை விளைப்பதும் கொலைக்குற்றமாகும்.

கல்லீரல் (spleen) வீங்கியுள்ள ஒருவரை அவர் வயிற்றில் உதைத்தாலோ அடித்தாலோ இறந்துவிடுவார் என்பதை அறிந்தவர், அந்த நோயாளியின் வயிற்றில் உதைத்து மரணத்தை விளைப்பது கொலைக்குற்றமாகிறது. ஏனெனில், இறந்தவரின் மரணத்தை விளைக்கக்கூடிய உடற்காயம் இது என்று தெரிந்து, அந்த உடற்காயத்தைக் குற்றவாளி விளைத்திருக்கின்றார். அதனால், மரணமும் விளைந்துவிட்டது. ஆதலால், இறந்தவரின் வயிற்றில் உதைத்தவருக்குக் கொலைக்குற்றத்திற்கான தண்டனை அளிக்கப் படுகிறது.

விளக்கப்பட்ட உடற்காயம் உடல் நலமுள்ள ஒருவருக்கு மரணம் விளைக்கக்கூடியதன்றியிருக்கலாம். ஆயினும், குறிப்பிட்ட நோய் உள்ளவருக்கு அந்தக் காயம் மரணம் விளைக்கலாம். அதை அறிந்த ஒருவர் அந்தக் காயத்தை விளைத்து நோயாளிக்கு மரணம் விளைத்தல் இந்தப் பிரிவின்படி கொலைக்குற்றமாகும்.

## 3. இயல்பான போக்கில் மரணத்தை விளைக்கத்தக்க தன்மை கொண்ட உடற்காயத்தை உண்டுபண்ணி மரணத்தை விளைத்தல்

மரணம் விளைக்கும் இயல்புடைய கொடுங்காயத்தை ஏற்படுத்தி மரணம் விளைத்தல் இப் பிரிவுப்படி கொலைக்குற்றமாகிறது. உண்டு பண்ணப்பட்ட காயத்தால் மரணம் அவசியம் விளையலாம் என்ற நிலை இருந்தால், இந்தப் பிரிவு பொருந்துகிறது. கொடுங்காயமாக இருந்து, உயிருக்கு ஆபத்து விளைக்கும் வகையில் அந்த உடற்காயம் அமைந்தால், அது மரணத்தை அநேகமாக விளைக்கும் என்று நாம் கொள்ளுகிறோம். அத்தகைய உடற்காயத்தை, இயல்பான போக்கில் மரணத்தை விளைக்கத்தக்க தன்மைகொண்ட உடற்காயத்தை உண்டுபண்ணி, பிறரது மரணத்தை விளைப்பவர் கொலைக்குற்றவாளி ஆகின்றார்.

இத்தகைய உடற்காயத்தின் பயனாக மரணம் விளைந்திருக்க வேண்டும். மரணம் உடனே விளையவேண்டும் என்ற அவசியம் இல்லை. சில நாட்கள் கழிந்தும் மரணம் விளையலாம். உண்டு பண்ணப்பட்ட காயத்திற்கும், விளைந்த மரணத்திற்கும் காரண காரியத் தொடர்பு இருந்தால், காயத்தால்தான் மரணம் விளைந்தது என்று நாம் கொள்ளுகிறோம்.

கூரிய ஆயுதத்தால் ஒருவர் மற்றொருவரின் வயிற்றில் குத்தியதால், குடல் சரிந்து குத்தப்பட்டவர் இறந்தார். குத்தியவரின் செயல் கொலைக்குற்றம் என்று தீர்ப்பளிக்கப்பட்டது. உலக்கையால் மண்டையில் அடித்து மரணத்தை விளைத்தல், கூரிய வாளால் மண்டையில் வெட்டி மரணம் விளைத்தல் இவையும் கொலைக்குற்றங்கள் என்பது தீர்ப்பு. மூங்கில் தடியால் ஒருவரை மாறிமாறி அடித்து, எலும்புகளை நொறுக்கி, அவருக்கு மரணம் விளைத்த இருவர் கொலைக்குற்றவாளிகள் என்று தண்டிக்கப்பட்டனர். சாதாரணமாக மூங்கில் தடியால் ஒரு முறை அடிப்பதால் மரணம் விளையாது. ஆனால், மாறிமாறி எலும்புகள் ஒடியும்படி அடிப்பது மரணம் விளைக்கப் போதுமானபடி காயத்தை விளைத்தலாகும்; எனவே, அது கொலைக்குற்றமாகும்.

**4. ஒரு செயல் மரணத்தையோ, அல்லது மரணம் விளைக்கக்கூடிய உடற்காயத்தையோ தவருது தோற்றுவிக்கும் உடனடியான ஆபத்தைக்கொண்டது என்பதை அறிந்தும், தக்க காரணமின்றி அச்செயலைச் செய்து மரணத்தை விளைத்தல்**

இந்தப் பிரிவில், மரணம் விளைத்தவரின் கருத்தைப்பற்றி எதுவும் கூறப்படவில்லை. அவர் மனமறிந்து செய்த செயலின் விளைவால் மரணம் விளைதலைப்பற்றி இப் பிரிவு கூறுகிறது.

மரணத்தையோ, மரணம் விளைக்குங் காயத்தையோ தவருது விளைக்கும் உடனடியான ஆபத்துடைய செயல் என்று அறிந்தும் அச் செயலைச் செய்திருத்தல் வேண்டும்; மேலும், அத்தகைய ஆபத்தான செயலைச் செய்வதற்குப் போதுமான காரணமும் இல்லாதிருக்கவேண்டும். இந் நிலையில் அந்த ஆபத்தான செயலைச் செய்து மரணம் விளைப்பது கொலைக்குற்றமாகிறது.

ஒரு கூட்டத்தினரை நோக்கிச் சுடுதல், குடிநீர்க் கிணற்றில் நஞ்சிடுதல்போன்ற செயல்களில் எந்தக் குறிப்பிட்ட நபருடைய மரணத்தையும் குற்றவாளி கருதவில்லை. எனினும், எவருக்காவது மரணம் விளையலாம் என்பதை அறிந்தும், மரணம் விளைந்தால் விளையட்டும் என்ற கேடான மனப்பான்மையோடு குற்றவாளி செயற்படுகின்ருர். எனவே, கூட்டத்தினரை நோக்கிச் சுட்டதால் நின்ற எவருக்கு மரணம் விளைந்தாலும், சுட்டவர் கொலைக்குற்றவாளியாகின்ருர். கூட்டத்தில் இருந்தவர்கள் ஒருவர்மீது கற்களை வீசி எறிகின்றனர். தம்மைக் காத்துக்கொள்ளவேண்டும் என்று அவர் கூட்டத்தை நோக்கிச் சுட்டால், அது தகுந்த காரணத்தோடு சுடுதல் ஆகும். அவ்வாறு சுட்டதால் கூட்டத்தில் எவரேனும் இறந்தால், அது கொலைக்குற்றம் ஆகாது.

வெடிகுண்டைப் பலர் செல்லும் வீதியில் ஒருவர் வெடிக்கவைக்கின்ருர். குண்டு வெடித்தால் வீதியில் செல்வோருக்கு மரணம் விளையலாம் என்பதை அறிந்தும், ஒருவர் குண்டை வீதியில் வெடிக்க வைத்து அதனுல் ஏவராவது மரணமுற்ருல், அது கொலைக் குற்றமாகும்.

குறிப்பிட்ட எவரையும் கொல்லவேண்டும் என்ற கொலைக் கருத்து இல்லாமலேயே, மரணத்தை விளைக்கும் ஆபத்தான செயலைச் செய்து எவருக்காவது மரணத்தை விளைவிப்பவர், இந்தப் பிரிவின்படி கொலைக்குற்றவாளி ஆகின்ருர்.

**கொலைச்செயல் கொலைக்குற்றமாகாத் தறுவாய்கள்**

மரணம் விளைத்தல் 300 (1), (2), (3), (4) ஆவது பிரிவுகளில் கூறப்பட்ட குற்ற மனத்தோடு செய்யபபடும்பொழுது கொலைச்செய

லாகிறது. இருந்தாலும், குறிப்பிட்ட சூழ்நிலைகளில், அந்தக் கொலைச் செயலைச் செய்தவருக்குச் சட்டம் மரணதண்டனை விதிக்காமல் இரக்கம் காட்டுகிறது. கொலைச் செயலைக் கொலைக்குற்றமாகக் கொண்டால் மரணதண்டனை விதித்தேயாகவேண்டும். எனவே, அச் செயலைக் கொலைக்குற்றமாகக் (murder) கொள்ளாமல், மரணம் விளைக்கும் குற்றமாகவே (culpable homicide) கொண்டு, மரண தண்டனையைச் சட்டம் விலக்குகிறது. இத்தகைய சூழ்நிலைகள் எவை என்பதை 300ஆம் பிரிவின்கீழ்க் கொடுக்கப்பட்ட விதி விலக்குகள் விளக்குகின்றன.

## (1) திடீரெனக் கடுஞ்சினமூட்டப்பட்டதால் தன்வயமிழந்த நிலையில் மரணம் விளைத்தல்

'தன்னைத்தான் காக்கின் சினங்காக்க' என்றும், 'சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி' என்றும் அறநூல் சினத்தின் தீமையை எடுத்துக்கூறுகிறது. இருந்தாலும், நம்மில் பலராலும் சினத்தை அடக்க இயலுவதில்லை. நல்லோரும் தீயோரும் சினத்திற்கு ஆட்பட்டுவிடுகின்றனர். கடுஞ்சினம் நம் கண்களை மறைத்துவிடுகின்றது. சினம் நம்மை ஆட்கொண்டுவிட்டால், நாம் நமது வயத்தில் இயங்குவதில்லை. தன்வயமிழந்த நிலையில் வினையின் விளைவை ஆராயுந் திறனின்றித் தீய செயல்களை இழைத்துவிடுகிறோம். சில வேளைகளில், கடுஞ்சினத்தால் தம்வயமிழந்தோர் பிறருக்கு மரணத்தையுங்கூட விளைத்துவிடுகின்றனர். இவர்களைப் பணத்தின் ஆசையாலோ, பகைமை உணர்வாலோ நெஞ்சில் ஈரமின்றிப் பிறரைக் கொல்லும் வன்கணர்களோடு ஒப்பிடுவதற்கில்லை. சினத்தில் எழுந்த உணர்ச்சி வேகத்தால், தம்வயமிழந்த நிலையில், ஒருவர் இழைக்கும் கொலைச் செயல்களைச் சட்டம் இரக்கத்தோடு மதிப்பிடுகின்றது. இந் நிலையில் கொலைச்செயலைச் செய்தோருக்கு மரண தண்டனை விதிக்கவேண்டாமென்று கருதி, அச் செயலைக் கொலைக்குற்றமாகக் கொள்ளாமல் மரணம் விளைக்குங் குற்றமாகச் சட்டம் கொள்ளுகிறது.

### கடுஞ்சினமூட்டப்படுதல், அதனால் தன்வயமிழத்தல்

சிலருக்கு எடுத்ததற்கெல்லாம் கோபம் வரலாம். சிறிய நிகழ்ச்சிகள்கூட அவர்களுடைய சினத்தை மூட்டலாம். இம்மாதிரிச் சினங் கொள்ளுவோர்மீது சட்டம் பரிவு காட்டுவதில்லை.

சாதாரண மனிதனுக்குக் கடுஞ்சினமூட்டக்கூடிய செயல் எதுவோ அதுபோன்ற செயல் நிகழ்ந்து, அதனால் ஒருவர் கடுஞ்சினமடைதல் வேண்டும். சினத்தால் தம்வயமிழந்த நிலையில் அவர் பிறரது மரணத்தை விளைத்திருத்தல் வேண்டும். தம்வயமிழந்த

நிலையில் (deprived of the power of selfcontrol) ஒருவர் பிறரது மரணத்தை விளைத்தால், அவ்வாறு மரணத்தை விளைக்கவேண்டும் என்ற உறுதியான கருத்து இன்றியே அவர் செயற்படுகின்றார். மரணத்தை விளைக்கும் உடற்காயத்தை உண்டுபண்ண வேண்டுமென்று கருதியோ, ஒருவருக்கு மரணம் விளைக்கும் உடற்காயம் இன்னது என்பதை அறிந்து அதை விளைக்கக் கருதியோ சினங் கொண்டவர் செயற்படுவதில்லை. கொலைச்செயலுக்கான குற்றமனம் கடுஞ்சினங்கொண்டு தம்வயமிழந்தவருக்கு இருப்பதில்லை. எனவே தான், கடுஞ்சினங் கொண்டவர் இழைக்கும் கொலைச் செயலைச் சட்டம் கொலைக்குற்றமாகக் கொள்ளுவதில்லை.

தம்வயமிழக்கும் நிலை ஒருவருக்கு எப்பொழுது ஏற்படுகின்றது? கடுஞ்சினமூட்டப்படுவதால், அதுவும் திடீரென்று கடுஞ்சினமூட்டப் படுவதால்தான் தம்வயமிழந்த நிலை ஏற்படுகிறது.

நம்மிடம் கடன் வாங்கியவர் அதைத் திருப்பித் தரவில்லையானால் நமக்கு அவர்மீது கோபம் வருகிறது. ஆனால், அது திடீரென்று ஏற்படுவதில்லை. அது கடுஞ்சினமன்று. எனவே, கடனைத் திருப்பிக் கொடுக்கவில்லை என்ற கோபத்தால் ஒருவர் மற்றவரைக் கொலை செய்தால், அது கடுஞ்சினத்தால் கொலை செய்தல் ஆவதில்லை.

பொதுவாகப் பிறரது வசவு மொழிகளாலோ, அநாகரிகமான சொற்களாலோ ஒருவர் சினங்கொள்ளுவதைச் சட்டம் ஏற்பது இல்லை.

ஒருவர் மற்றவரைச் செருப்பால் அடித்தார். அடிபட்டவர் அடித்தவரை உடனே கத்தியால் குத்திக் கொலைசெய்தார். இது கடுஞ் சினமூட்டப்பட்டதால் செய்யப்பட்ட செயலாவதால், இது மரணம் விளைத்த குற்றமாகவே கொள்ளப்பட்டது.

**தன்வயமிழந்த நிலை**

செருப்பால் அடிபட்டவர் அடிபட்ட மறுநாள் தம்மை அடித்தவரைக் குத்திக் கொன்றார் என்றால், அது கடுஞ்சினத்தால் கொன்றதாகாது. ஏன்? சினமூட்டப்பட்ட செயல் நடந்தவுடனேயே கொலை நடந்தால், அது திடீரென்று சினமூட்டியதால் விளைந்தது என்று கொள்ள முடியும். சினமூட்டப்பட்ட சில நாட்களோ, சில மணி நேரமோ கழிந்து சினமூட்டப்பட்டவர் பிறரின் மரணத்தை விளைப்பது சினமூட்டப்பட்ட வேகத்தில் செய்யப்பட்ட செயலாகாது. கடுஞ்சினமூட்டப்பட்டதால் ஏற்படும் தம்வயமிழந்த நிலை பல மணி நேரத்திற்கோ, சில நாட்களுக்கோ இருக்கிறது என்று கூற முடியாது.

திடீரென்று கடுஞ்சினமூட்டப்பட்ட நிலையில் உடனேயே திடீ ரென்று மரணம் விளைக்கப்பட்டால்தான் அது தன்வயமிழந்த நிலையில் மரணம் விளைத்ததாகும். ஆர அமரச் சிந்தித்து, பழிவாங்கும் எண்ணத்தோடு திட்டமிட்டு மரணம் விளைப்பது தன்வயமிழந்த நிலை யில் அதைச் செய்வதாகாது.

கடுஞ்சினமூட்டப்பட்டவரின் உணர்ச்சி வேகம் அடங்குவதற்கு, உள்ளத்துணர்ச்சி தன்னிலை பெறுவதற்கு அவகாசம் இருந்ததா என்பதைச் சட்டம் கவனிக்கிறது. அவகாசம் இருந்து, அதற்குப் பின் பழிவாங்கும் நிலையில் பிறரது மரணத்தை விளைத்தால், அது கொலைக்குற்றமேயாகும். அவகாசம் ஏதுமின்றி, உணர்ச்சி வேகம் அடங்குவதற்கு முன்பே கொலைச்செயலைச் செய்தால், அது குற்றத் தைக் குறைக்கிறது.

## கடுஞ்சினம் விளைவதற்குத் தக்க காரணம் இருத்தல் வேண்டும்

ஒருவர் முகத்தில் இன்னொருவர் காறி உமிழ்ந்துவிட்டார் என்றாலோ, கன்னத்தில் திடீரென்று அறைந்துவிட்டார் என்றாலோ, இவை கடுஞ்சினமூட்டக் காரணமாகும் செயல்களாகும்.

தாய்வீட்டில் இருக்கும் மனைவி தன்னுடன் வர மறுத்தாள் என்பதால், கோபங்கொண்ட கணவன் குத்திக் கொன்றான் மனை வியை. கட்டிய மனைவி கணவன் சொல்லைக் கேட்காத செயல் கடுஞ் சினமூட்டப் போதியதன்று என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

தன் மனைவி அந்நியன் ஒருவனோடு சேர்ந்திருப்பதைத் திடீ ரென்று காணும் கணவனுக்குக் கடுஞ்சினம் ஏற்படுவது இயல்பு. இந் நிலையில் தன் மனைவியையோ, மனைவியின் ஆசைநாயகனையோ கணவன் கொன்றால், அது 'மரணம் விளைக்கும்' குற்றமேயாகும்; கொலைக்குற்றம் ஆவதில்லை.

தன் மனைவியோடு அயலான் கலந்திருப்பதைக் கண்ட கண வன் உடனே அயலானைக் கொன்றான்; அந் நிலையில் மற்றொரு கண வன், மனைவியையும் அயலானையும் சேர்த்துக் கொன்றான். தன் மனைவியைப் புணருவதற்கென்று தன் வீட்டிற்குள் வந்த ஒருவனைக் கணவன் கொலைசெய்தான். இச் செயல்கள் எல்லாம் கொலைக்குற்ற மாவதில்லை; மரணம் விளைத்த குற்றமேயாகும் என்று தீர்ப்புகள் உள்ளன. இந் நிலையில், கொலைசெய்தல், சரியான காரணத்தினால் திடீரெனக் கடுஞ்சினமூட்டப்பட்டவர் தன்வயமிழந்த நிலையில் செய்த செயலாகும். எனவே, இந்தக் கொலைச்செயல்களைச் சட்டம் கொலைக் குற்றமாகக் கொள்ளுவதில்லை; மரணம் விளைக்கும் குற்றமாகவே கொள்ளுகிறது.

மனைவியின் மாசுற்ற நடத்தையைக் கணவன் திடீரென்று கண்டு, கடுஞ்சினங்கொண்டு, தன்வயமிழந்த நிலையில் கொலை செய்திருந்தால் மட்டுமே இந்த விதி பொருந்தும். இம்மாதிரிக் கடுஞ்சினமூட்டப்படும் கணவன், வேண்டுமென்றே திட்டமிட்டுத் தன் மனைவியையோ அவளது கள்ளக் காதலனையோ கொல்லுதல் கொலைக்குற்றமேயாகும். தன் மனைவியின் நடத்தையைச் சந்தேகித்த கணவன், மனைவி தன் வீட்டைவிட்டு வெளியே செல்லும் பொழுது மறைவாக அவளைத் தொடர்ந்து சென்றான். கொடுவாளையும் எடுத்து வைத்துக்கொண்டு சென்றான். அவன் மனைவி ஒரு தோப்புக்குள் சென்று அங்குக் காத்திருந்த தனது கள்ளக் காதலனோடு உறவாடிக்கொண்டிருந்தாள். இதைக் கண்ட கணவன் தன் மனைவியைக் கொடுவாளால் கொன்றான். இது கொலைக்குற்றம் என்றே முடிவுசெய்யப்பட்டது. ஏன்? கணவனின் கொலைச்செயல் தன்வயமிழந்த நிலையில் செய்யப்பட்டதன்று. தன் மனைவியின் நடத்தையில் ஐயுற்று அவளைத் தொடர்ந்து சென்ற கணவன், கையிலே கொடுவாளுடனேயே சென்றான். அப்படியெனில், அவன் ஏற்கெனவேயே திட்டமிட்டுவிட்டான், மனைவி சோரம் போனால் அவளைக் கொல்லவேண்டுமென்று. எனவே, அவளைக் கொடுவாளால் கொன்ற செயல் கடுஞ்சினத்தால் தன்வயமிழந்த நிலையில் செய்யப்பட்டது என்று சொல்வதற்கில்லை. திட்டமிட்டுச் செய்யப்படும் கொலைச்செயல், தன்வயமிழந்த நிலையில் செய்யப்பட்டதாகாது.

மனைவியின் நடத்தையைச் சந்தேகித்த கணவன், கையில் கத்தியோடு வீட்டில் ஒளிந்திருந்து, விபசாரத்திற்கென விரைந்து வந்த சோரநாயகனை வெட்டிக் கொன்றான். இப்பொழுதும் இச் செயல் திட்டமிட்ட செயலாகும். தன்வயமிழந்த நிலையில் செய்யப்பட்டதன்று. எனவே, இது கொலைக்குற்றமாகியது.

தன் தங்கையுடன் கள்ளக் காதலன் சேர்ந்திருப்பதைக் கண்டவன் உடனே இருவரையும் கொன்றுவிட்டான். இது தன்வயமிழந்த நிலையில் செய்யப்பட்டதால் கொலைக்குற்றம் அன்று என்பது தீர்ப்பு. சோரம்போனது தனது மனைவியாகத்தான் இருக்கவேண்டும் என்பதில்லை. தனது காமக்கிழத்தி இன்னொருவனுடன் கள்ளமாகக் கலந்திருப்பதைக் கண்டவன் இருவரையும் கொன்றுவிட்டான். அதுவும் கொலைக்குற்றமாகாது என்பது தீர்ப்பு.

தன் தமையனின் மனைவியோடு தகாத முறையில் நடந்தவனைத் துரத்திச் சென்று கொன்றான் ஒருவன். இதுவும் கொலைக்குற்றமாகாது என்று தீர்ப்பளித்தனர்.

தான் ஒழுக்கங்கெட்டவள் என்று ஒப்புக்கொண்ட மனைவியை, அதைக் கேட்ட ஆத்திரத்தில் கணவன் கொன்றுவிட்டால், இதையும் கொலைக்குற்றமாகச் சட்டம் கொள்ளுவதில்லை.

தன் மனைவியின் ஒழுங்கீனம் கணவனுக்குத் தெரிகிறது. அது பற்றிச் சில நாட்கள் தீர யோசித்தான். பிறகு ஒரு முடிவுக்கு வந்து, தன் மனைவியையும், அவளது கள்ள நாயகனையும் கொன்றுவிட்டான். இப்பொழுதும் கணவனின் செயல் கொலைச்செயலேயாகும். ஏனெனில், திடீரெனக் கணவன் சினமூட்டப்படவில்லை. அவனது செயலும் தன்வயமிழந்த நிலையில் அவனால் செய்யப்படட்டதன்று; திட்டமிட்டபடியே செய்திருக்கிறான்.

எனவே, கடுஞ்சினமூட்டப்பட்டதால் செய்யப்படும் கொலைச் செயல் கொலைக்குற்றமாகாது இருக்கவேண்டும் எனில், (i) கொலை செய்தவருக்குச் சினமூட்டப்பட்டிருத்தல் வேண்டும்; (ii) அதுவும் கடுஞ்சினமூட்டப்பட்டிருத்தல் வேண்டும்; (iii) திடீரென்று நடந்த செயலால் கடுஞ்சினம் விளைந்திருக்கவேண்டும்; (vi) இதன் விளைவாகத் தன்வயமிழந்த நிலையில் அவர் கொலைச் செயலைச் செய்திருக்கவேண்டும். இவையனைத்தும் பொருந்தியுள்ள நிலையில் மட்டுமே ஒருவரின் கொலைச்செயல் ‘கொலைக்குற்ற’மாகாமல் மரணம் விளைத்த குற்றமாகிறது.

இந் நிலையில், சினமூட்டியவருக்கு, அல்லது தவறுதலாகவோ, எதிர்பாராவிதத்திலோ வேறு ஒருவருக்கு மரணம் விளைக்கப்படலாம்; அது கொலைக்குற்றமாகாது.

ஒருவரது காப்புரிமைச் செயலாலோ, பொது ஊழியர்களின் அதிகாரத்தின்படி செய்யப்பெறும் செயலாலோ எவரும் கடுஞ்சினங் கொள்ளுதல் முறையாகாது. அதைச் சட்டம் ஏற்பதில்லை. நமக்குப் பிறர் சினமூட்டும்படி நாம் நடந்துகொண்டு, அதன் பயனாகப் பிறர் நமக்குச் சினமூட்டினால், அதுவும் கடுஞ்சினமூட்டும் செயலாவதில்லை.

## (2) காப்புரிமைச் செயலில் வரம்பு கடந்து மரணம் விளைத்தல்

நமது உடலையும் உடைமையையும், அடுத்தவரது உடலையும் உடைமையையும் பிறரது தாக்குதலிலிருந்து காப்பாற்றிக்கொள்ளும் உரிமை நம் ஒவ்வொருவருக்கும் உண்டு என்றும், அது காப்புரிமையாகும் (right of private defence) என்றும் முன்னர்க் கண்டோம். நம் உடலுக்கோ, சொத்திற்கோ ஊறு விளைக்க முற்படுவோரைத் தடுப்பதற்கென்று மரணத்தைக்கூடச் சில வேளைகளில் விளைக்கலாம் என்று சட்டம் அனுமதிக்கிறது (100, 103ஆவது

பிரிவுகள்). சில வேளைகளில் மரணம் விளைக்காத வகையில் வேறு எந்தவிதக் கேட்டையும் விளைத்து நம்முடைய உடலையும் சொத்தையும் காத்துக்கொள்ளலாம் என்றும் சட்டம் கூறுகிறது (101, 104ஆவது பிரிவுகள்). இவ்வாறு மரணம் விளைக்காதபடி வேறு கேடுகளைக் காப்புரிமையாகச் செய்யும் நிலையில், காப்புரிமைச் செயலில் ஈடுபடுவோர் வரம்பு கடந்து செயற்படுவதால் மரணத்தையே விளைத்துவிடலாம்.

நமது பொருளைக் கொள்ளையடிக்க முயலுபவருக்கு நாம் மரணத்தையும் விளைக்கும் காப்புரிமை நமக்கு உண்டு. ஆனால், நமது பொருளைத் திருட முயலுபவருக்கு நாம் மரணத்தை விளைக்காமல் வேறு கேடுகளை மட்டுமே விளைக்கலாம். நாம் நமது பொருளைத் திருட முயலுபவர்களை அடிக்கின்றோம். ஆனால், அடி அளவுமீறி விட்டதால் திருட முயன்றவன் இறந்துவிடுகின்றான் எனில், நம் செயலைக் கொலைச்செயலாகச் சட்டம் கொள்ளுவதில்லை. மரணம் விளைத்த செயலாகவே அதைக் கொள்ளுகிறது. ஏனெனில், இது காப்புரிமைச் செயல் வரம்பு கடந்து செய்யப்பட்டதால் விளைந்த மரணம்.

நம் பொருளைத் திருட முயலுபவனுக்கு நாம் கொடுங்காயத்தை விளைக்கலாம். இது காப்புரிமைச் செயல் என்று சட்டம் கூறுகிறது. தடியால் ஓங்கித் திருடனின் மண்டையில் அடிக்கிறோம். அதனால் அவன் மண்டையில் கீறல் ஏற்பட்டுக் கொடுங்காயம் விளைகிறது. இது காப்புரிமைச் செயலாவதால் குற்றமாவதில்லை. அடித்த அடியால் மண்டை பிளந்து திருடன் இறந்துவிட்டான் என்று கொள்ளுவோம். இவ்வாறு, காப்புரிமையால் அடித்தவருக்கு மரண தண்டனை என்று சட்டம் இருந்தால், அது முறையற்றதாகும். காப்புரிமைச் செயலைச் செய்பவர் ஒருசிறிது தவறிப் பிறருக்கு மரணத்தை விளைத்துவிட்டால், அவருக்கு மரணதண்டனை என்று சட்டம் விதிக்கிறது எனில், எவரும் காப்புரிமைச் செயலில் இறங்க மாட்டார்கள். சட்டம் அளிக்கும் காப்புரிமை பயனற்றதாகிவிடும். எனவேதான், காப்புரிமைச் செயலில் வரம்பு கடந்து மரணம் விளைத்தலைக் கொலைக்குற்றமாகச் சட்டம் கொள்ளுவதில்லை.

### (3) பொது ஊழியர் தமது அதிகார வரம்பினைக் கடந்து மரணம் விளைத்தல்

மக்களிடை நீதியை நிலைநாட்டும் பொது ஊழியர் அல்லது அந்த ஊழியருக்கு உதவியளிப்பவர் சட்டப்படியான தங்கள் அதிகார வரம்பை மீறிப் பிறருக்கு மரணம் விளைத்தால், அது கொலைக் குற்றமாவதில்லை. ஆனால், அவர் நல்லெண்ணத்தோடும், எவர்

மீதும் பகையுணர்வின்றியும் செயற்பட்டிருத்தல் வேண்டும். அவரது செயல் சட்ட விரோதமானதாகவும் இருத்தல் கூடாது.

போலீசார் ஒருவரைக் கைதுசெய்யவேண்டியிருக்கிறது. கைது செய்யப்படுபவர் தன்னைக் கைதுசெய்யக்கூடாது என்று எதிர்த்துப் பலாத்காரத்தைப் பயன்படுத்துகிறார். எனவே, போலீசு அதிகாரியும் பலத்தை உபயோகித்தே அவரைக் கைது செய்யவேண்டியதாகிறது. போலீசு அதிகாரி பலத்தை உபயோகிக்கவும், கைதுசெய்யப்படவேண்டியவர் அதைப் பலாத்காரமாக எதிர்க்கவும், நிலைமை மோசமாகிறது. எனவே, போலீசு அதிகாரி தடியால் ஓங்கி எதிர்ப்பவரை அடித்துவிடுகிறார். அந்த அடி எதிர்த்தவரின் மண்டையில் பலமாக விழுந்ததால் அவர் இறந்துவிடுகிறார் என்று வைப்போம். இப்பொழுது போலீசு அதிகாரிமீது கொலைக்குற்றம் ஏற்படுவதில்லை. மரணம் விளைத்த குற்றமாகவே போலீசு அதிகாரியின் செயல் கருதப்படுகிறது. ஒருவரைக் கைது செய்வதற்கு வேண்டிய அளவு பலாத்காரத்தைப் பயன்படுத்துதல் முறையேயாகும். தடியால் மண்டையில் அடிக்காமல் உடலில் வேறு பாகங்களில் அடித்திருந்தால் அது முறையானதுதான். மண்டையில் ஓங்கி அடித்ததால் விளைந்த மரணம், போலீசு அதிகாரி தனது அதிகார வரம்பினைக் கடந்து செய்த செயலாகும்; ஆனால், நல்லெண்ணத்தோடு செய்த செயலாகும். எனவே, இந்த விதிவிலக்கு போலீசு அதிகாரியின் செயலுக்குப் பொருந்துகிறது.

கைதுசெய்யப்படவேண்டியவர் தப்பி ஓடுகையில் அவரைப் போலீசார் துப்பாக்கியால் சுட்டுக் கொன்றுவிட்டார் எனில், அது கொலைக்குற்றமாகிவிடும். கைதுசெய்யப்படுவதிலிருந்து தப்ப முயலுபவரைத் துப்பாக்கியால் சுடுதல் நல்லெண்ணத்துடன் நடப்பதாகாது. ஒருவரைக் கைதுசெய்வதற்கு அவரின் மரணத்தை வேண்டுமென்றே விளைத்தல் அவசியமான செயலன்று.

இந்த வகையில் நல்லெண்ணத்தோடும், எவர்மீதும் பகையுணர்வின்றியும் செயற்பட்டு மக்களிடை நீதியை நிலைநாட்டும் பொது ஊழியர் தமது அதிகார வரம்பினைக் கடந்து மரணத்தை விளைத்தல் கொலைக்குற்றமாவதில்லை.

## (4) திடீரென்று தோன்றிய சண்டையில் முன்னறிவின்றி மரணம் விளைத்தல்

இருவருக்குள் திடீரென்று ஏற்படும் வாய்ச்சண்டை கைச்சண்டையாகத் திடீரென மாறிவிடலாம். அதனால் தோன்றிய உணர்ச்சி வேகத்தில் முன்யோசனையின்றி ஒருவர் மற்றவரின் மரணத்தை

விளைக்கலாம். இந்த நிலையில் இது கொலைக்குற்றமாவதில்லை. மரணத்தை விளைத்த குற்றமேயாகும். ஆனால், ஒருவரைக் கொல்ல வேண்டும் என்று திட்டமிட்டு, அதற்கென அவரோடு சண்டையை வரவழைத்து, அதைச் சாக்கிட்டு அவருக்கு மரணத்தை விளைத்தல் கொலைக்குற்றமாகிவிடும்.

மேலும், சண்டையில் ஈடுபட்டிருப்பவர்களில் ஒருவருக்கிருக்கும் அனுகூலமான நிலையை அவர் தகாத வகையில் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்தியோ, கொடுமையாக நடந்தோ, இயல் முறைக்கு மாறாக நடந்தோ அவர் பிறரின் மரணத்தை விளைத்தல் கூடாது. சண்டையில் ஈடுபட்ட இருவருள் ஒருவரிடம் கத்தி இருந்தது என்றும், மற்றவரிடம் இல்லை என்றும் வைப்போம். கத்தி வைத்திருப்பவரிடம் பிறரைக் கொல்லும் ஆயுதம் இருப்பதால் அவர் தமக்கு அனுகூலமான நிலையில் உள்ளார். இதைப் பயன்படுத்தி அவர் கத்தியால் அடுத்தவரைக் குத்துவது கொலையே ஆகும். ஆனால், அருகில் கிடந்த ஒரு கம்பியை எடுத்து அடித்து மரணத்தை விளைத்தால் அது கொலையாவதில்லை. ஏனெனில், கொல்லப்பட்டவருக்கு இல்லாத தனி அனுகூலம் எதையும் கொன்றவர் பயன்படுத்தவில்லை.

பத்து வயது சிறுவனுக்கும் முப்பது வயது நிறைந்த ஒருவருக்கும் சண்டை வருகிறது. உணர்ச்சி வேகத்தினால் அந்தச் சிறுவனை வயது நிறைந்தவர் கொன்றார் எனில், அதுவும் கொலைக்குற்றமேயாகும். காரணம், பத்து வயது சிறுவன் முப்பது வயது சென்ற ஒருவருடன் சமமாக நின்று சண்டையிடும் உடல்வலி இல்லாதவன். சிறுவனின் பலவீனத்தைப் பயன்படுத்திக் கொடுமையாக நடந்து கொண்டவராகின்றார், சிறுவனைக் கொலைசெய்தவர். எனவே, அவரது செயல் கொலைக்குற்றமாகவே கொள்ளப்படும்.

**முதலில் தாக்கியவருக்கும் இது பொருந்தும்:** பொதுவாக இருவர் சண்டையிட்டால், முதலாவதாக யார் சண்டையை ஆரம்பித்தவரோ அல்லது கோபத்தை மூட்டியவரோ, அவரையே சட்டம் சண்டையின் விளைவுக்குப் பொறுப்பாக்குவதுண்டு. ஆனால், இந்தப் பிரிவுப்படி, எவர் முதலில் சண்டையை ஆரம்பித்து அடுத்தவருக்குக் கோபத்தை மூட்டியிருந்தாலும், இருவரும் சண்டையில் இறங்கி விடுவதால், இருவர் நிலையையும் சட்டம் ஒன்றாகவே மதிக்கின்றது. எனவே, சண்டைக்குக் காரணமாக இருந்தவரே சண்டையின் நடுவில் உணர்ச்சி வேகத்தில் அடுத்தவரைக் கொன்றுவிட்டால், அவரும் இந்தப் பிரிவுப்படி கொலைக்குற்றவாளி ஆவதில்லை.

இருவருக்குள் சண்டை நடந்து சில மணி நேரம் கழிந்து, ஒருவர் மறுபடியும் வந்து மற்றவரின் மரணத்தை விளைத்தால், அது

கொலைக்குற்றமாகிவிடும். நடக்கும் சண்டையினடுவே, உணர்ச்சி வேகத்தில் செய்யப்படும் கொலைச்செயலையே சட்டம் பரிவுடன் கவனிக்கிறது. சண்டை முடிந்து உணர்ச்சி வேகம் அடங்கியபிறகு, ஒருவர் மீண்டும் வந்து அடுத்தவரைத் தாக்கி மரணம் விளைத்தல் உணர்ச்சி வேகத்தில் செய்த செயலாவதில்லை; முன்யோசனையின்றி செய்த செயலாவதில்லை; அது சிந்தித்துத் திட்டமிட்ட செயலே யாகும். எனவே, இந்த விதிவிலக்கு அச் செயலுக்குப் பொருந்துவ தில்லை.

ஒரு நிலத்தை உழுவதுபற்றி இருவரிடை பூசல் ஏற்படுகிறது. ஒருவர் தமக்குத் துணையாகச் சிலரைச் சேர்த்துக்கொண்டு வேல், கம்பு, அரிவாள் முதலிய ஆயுதங்களைத் தாங்கியவாறு நிலத்திற்குச் செல்லுகிறார்; மற்றவரும், அவ்வாறே, ஆயுதங்களுடன் துணை சேர்த்துக்கொண்டு அங்கு வருகின்றார். இருவருக்கும் வாக்கு வாதம் நடந்து, முடிவில் இரு கட்சியினரும் ஆயுதங்களால் சண்டையிட்டு, மாற்றுக் கட்சியினரின் மரணங்களை விளைவிக்கின் றனர். இது இந்த விதிவிலக்குக்குக்கீழ் வருவதில்லை. ஏனெனில், இரு கட்சியினருமே சண்டையை எதிர்பார்த்து, சண்டை வந்தால் பிறருக்கு மரணம் விளைக்கவேண்டும் என்ற திட்டத்தோடு, ஆயுதங்களை எடுத்துக்கொண்டு தயாராக வந்தவர்கள். எனவே, இவர்கள் ஈடுபட்ட சண்டை திடீரென எதிர்பாராமல் ஏற்பட்டதன்று. சண்டையில் ஏற்பட்ட கொலைகள் முன்யோசனையின்றி உணர்ச்சி வேகத்தில் செய்யப்பட்டவையுமல்ல. எனவே, இந்த விதிவிலக்கு இத்தகைய திட்டமிட்ட சண்டைகளுக்குப் பொருந்துவதில்லை.

எனவே, (i) திடீரென விளைந்த சண்டையில், (ii) திட்டமிட்ட செயலாக இல்லாமல் உணர்ச்சி வேகத்தில் செய்யப்பட்டதாகவும், (iii) தமக்குள்ள அனுகூல நிலையைத் தகாத வகையில் ஒருவர் பயன்படுத்தாமலும் மரணம் விளைத்த செயலுக்கு மட்டும் இந்த விதிவிலக்குப் பொருந்துவதாகும்.

### (5) பிறர் சம்மதம் பெற்று அவருக்கு மரணம் விளைத்தல்

பதினெட்டு வயதைக் கடந்த ஒருவர் மனமிசைந்து மரணத்தை ஏற்கும் நிலையில் அவரைக் கொல்லுதல் கொலைக்குற்றம் ஆவதில்லை.

பொதுவாகப் பகையுணர்வாலோ, பொருளாசையாலோ, பொறாமையாலோதாம் கொலைச்செயல்கள் செய்யப்படுகின்றன. இச் செயல்களைக் கொலைக்குற்றங்கள் எனக் கொண்டு கொலையாளி களுக்கு மரணதண்டனையளிப்பது முறையேயாகும். ஆனால், சில

வேளைகளில், கடுமையான உடல் நோயைக் கடிதில் முடிக்கக் கருதியும், தன்மானங் காக்கும் தகைமையுணர்வாலும், பிறர் நலம் பேணும் பெற்றிமைக் குணத்தாலும் சிலர் மரணத்தை விழைகின் றனர் அல்லது மரணம் விளைக்கும் இன்னலை மகிழ்வோடு ஏற்கின்றனர். கொடிய உடற்காயத்தால் குற்றுயிராய்க் கிடக்கும் போர்வீரன், அருகில் நிற்கும் வீரனிடம், தன் உயிரைப் போக்கிக் குற்றுயிராய்த் துடிப்பதை நிறுத்தும்படி வேண்டுகிறான். கற் பழிக்கும் கயவர்களின் பிடியில் அகப்படவிருக்கும் மங்கையர்கள், தம் மானத்தை மங்கவைக்க மனமின்றித் தங்கள் உயிரைப் போக்கி விடும்படி அருகில் துணையிருப்போரை வேண்டலாம். இந்த நிலையில் குற்றுயிராய்க் கிடக்கும் போர்வீரனைக் கொல்லுதலும், மானத்தை இழக்காமலிருப்பதற்கு மரணத்தை விரும்பியேற்கும் மங்கையைக் கொல்லுதலும் கொலைக்குற்றம் ஆகாது; மரணம் விளைக்குங் குற்றமேயாகும்.

கைக்குழந்தை இறந்ததால் கவலை மிகக்கொண்ட பெற்றோர் தங்கள் உயிரையும் போக்கிக்கொள்ள விரும்பினர். தன்னை முதலில் கொன்றுவிடுமாறு மனைவி வேண்டிக்கொண்டாள். தன் மனைவியைக் கொன்றபின் தன்னையும் மாய்த்துக்கொள்ளக் கருதிய கணவன், முதலில் மனைவியைக் கொன்றான். ஆனால், அவன் தன்னை மாய்த்துக்கொள்ளுவதற்குமுன் அவனைப் பிறர் தடுத்து விட்டனர். இந் நிலையில் அவன் மனைவியைக் கொன்ற செயல் மரணம் விளைத்த குற்றமாகவே கொள்ளப்பட்டது.

இதுவரை மரணம் விளைக்கும் குற்றம் என்பது எது என்றும், கொலைக்குற்றம் எது என்றும் விரிவாகக் கண்டோம். இரண்டுமே உயிருக்கு ஊறு விளைக்கும் குற்றங்கள். உயிருக்கு ஊறு விளைக்கும் செயலை 'மரணம் விளைத்தல்' என்றும், 'கொலை' என்றும் இரு தரங் களாகச் சட்டம் பாகுபடுத்துகிறது. ஒவ்வொரு கொலைக்குற்றத் திலும் மரணம் விளைக்குங் குற்றம் அடங்கியிருக்கிறது; ஆனால், மரணம் விளைக்குங் குற்றமனைத்தும் கொலைக் குற்றங்கள் ஆவதில்லை.

300ஆம் பிரிவில் 1,2,3,4ஆம் உட்பிரிவுகளில் கூறப்பட்ட கொலைச்செயல்கள் அந்தப் பிரிவிற்குள்ள ஐந்து விதிவிலக்குகளின் கீழ் வரவில்லையெனில், கொலைக் குற்றங்கள் ஆகின்றன; அந்த விதிவிலக்குகளின்கீழ் வந்துவிடில், மரணம் விளைக்கும் குற்றங்களே ஆகின்றன. 299ஆம் பிரிவில் கூறப்பட்ட செயல்கள் 300ஆம் பிரிவிலுள்ள 1,2,3,4ஆம் பிரிவுகளின்கீழ் வரவில்லையெனில், அவையும் மரணம் விளைக்குங் குற்றங்களேயாகின்றன.

## இருபத்திரண்டு வகையான மரணம் விளைக்குங் குற்றச் செயல்கள்; நான்கு வகையான கொலைக்குற்றச் செயல்கள்

குற்ற இயல் சட்டத்தின் 299ஆம், 300ஆம் பிரிவுகள் இரண்டும் 'மரணம் விளைக்குங் குற்றம்', 'கொலைக்குற்றம்' இவை பற்றிக் கூறுகின்றன. இந்த இரண்டு பிரிவுகளையும் ஆய்ந்துபார்த்தால், மரணம் விளைக்கும் குற்றச் செயல்கள் எவை, கொலைக் குற்றச் செயல்கள் எவை என்று நாம் காணலாம்.

300ஆம் பிரிவுப்படி கீழ்க்கண்ட செயல்கள் கொலைக்குற்றங்கள் ஆகின்றன:

1. மரணம் விளைக்கவேண்டும் என்ற கருத்துடன் ஒரு செயலைச் செய்து மரணம் விளைத்தல்;

2. ஒருவருக்கு மரணம் விளைக்கக்கூடிய உடற்காயம் இன்னது என்பதை அறிந்து, அந்த உடற்காயத்தை உண்டுபண்ணும் கருத்துடன் ஒரு செயலைச் செய்து அவருக்கு மரணம் விளைத்தல்;

3. இயல்பான போக்கில் மரணத்தை விளைக்கத்தக்க தன்மை கொண்ட உடற்காயத்தை உண்டுபண்ணும் கருத்துடன் ஒரு செயலைச் செய்து மரணம் விளைத்தல்;

4. ஒரு செயல், மரணத்தையோ அல்லது மரணம் விளைக்கக் கூடிய உடற்காயத்தையோ தவருது தோற்றுவிக்கும் உடனடியான ஆபத்தைக்கொண்டது என்பதை அறிந்தும், தக்க காரணமின்றி அச் செயலைச் செய்து மரணம் விளைத்தல்.

இந்த நான்கு வகைக் கொலைச்செயல்களில் எதையாவது,

(i) திடீரென்று கடுஞ்சினமூட்டப்பட்டதால் தன்வயமிழந்த நிலையிலோ,

(ii) காப்புரிமைச் செயலில் வரம்பு கடந்த நிலையிலோ,

(iii) பொது ஊழியர் தமது அதிகார வரம்பினைக் கடந்த செயலாலோ,

(iv) திடீரென்று விளைந்த சண்டையில் முன்னறிவின்றியோ,

(v) மரணம் விளைக்கப்பட்டவரின் சம்மதம் பெற்ருே செய்தால், அது கொலைக்குற்றமாகாது; மரணத்தை விளைத்தகுற்றமே யாகும். இவ்வாறு, 300ஆம் பிரிவு கொலைக்குற்றத்தின் இலக்கணத்தைக் கூறி, அக் குற்றத்திற்கான விதிவிலக்குகளையும் விவரிக்கிறது.

299ஆம் பிரிவில், 'மரணம் விளைக்குங் குற்றம்' விளக்கப்படுகிறது:

(i) மரணம் விளைக்கக்கூடிய உடற்காயத்தை உண்டு பண்ணும் கருத்தோடு ஒரு செயலைச் செய்து மரணம் விளைத்தல்;

(ii) ஒரு செயல் மரணம் விளைக்கக்கூடியது என்பதை அறிந்தும் அதைச் செய்து மரணம் விளைத்தல்.

எனவே, 299ஆம் பிரிவில் கூறப்படும் இந்த இருவகைச் செயல்களும், 300ஆம் பிரிவில் கூறப்படும் நான்கு வகைக் கொலைச் செயல்கள் ஐந்து விதிவிலக்குகளின்கீழ் வரும்பொழுதும் மரணம் விளைக்குங் குற்றங்கள் ஆகின்றன.

ஆதலால், கொலைக்குற்றச் செயல், 300ஆம் பிரிவில் 1,2,3,4 உட்பிரிவுகளில் கூறியுள்ளபடி நான்கு வகைப்படுகின்றன. 300ஆம் பிரிவில் உள்ள நான்கு வகைக் கொலைச்செயல்கள் ஒவ்வொன்றும் ஐந்து விதிவிலக்குகளுக்கும் தனித்தனியாகப் பொருந்தும்பொழுது, இருபது வகையான மரணம் விளைக்கும் குற்றச் செயல்கள் ஆகின்றன. 299ஆம் பிரிவில் உள்ள இருவகைச் செயல்களுடன் சேர்ந்து, 'மரணம் விளைக்குங் குற்றச்' செயல்களை இருபத்திரண்டு வகைகளாகச் சட்டத்தில் காணுகிறோம். இவ்வாறு, சட்டத்தில் இருபத்திரண்டு வகையான மரணம் விளைக்கும் குற்றச் செயல்களும், நான்கு வகையான கொலைக்குற்றச் செயல்களும் கூறப்படுகின்றன.

**தண்டனை**

கொலைக்குற்றத்திற்கான தண்டனை மரண தண்டனை அல்லது ஆயுட்காலச் சிறையும் அபராதமுமாகும் (302ஆம் பிரிவு).

ஆயுட்காலச் சிறைத்தண்டனை பெற்றவர் கொலைக்குற்றம் செய்தால், அதற்கு மரண தண்டனை விதிக்கப்படுகிறது (303ஆம் பிரிவு).

பொதுவாக, ஒருவர் கொலைக்குற்றம் செய்திருக்கிறார் என்று நீதிமன்றம் முடிவுசெய்தால், அவருக்கு மரணதண்டனையே விதிக்கப்படவேண்டும். மரணதண்டனையை விதிக்காமல் ஆயுட்காலச் சிறைத்தண்டனை அளித்தால் அதற்கான தக்க காரணங்கள் இருக்கவேண்டும். குற்றவாளியின் வயது, ஆத்திரத்தால் அறிவிழந்த நிலையில் கொலைசெய்தல் இவ்வாறான காரணங்கள் இருந்தால்தான் மரணதண்டனையை விடுத்து ஆயுட்காலச் சிறைத்தண்டனையை நீதிமன்றம் அளிக்கின்றது.

## ஒருவருக்கு மரணம் விளைப்பதற்கென்று செய்யப்பட்ட செயல் மற்றொருவருக்கு மரணம் விளைத்தல்

ஒருவருக்கு மரணம் விளைக்கக் கருதிச் செய்யப்பட்ட செயலால் மற்றொருவரின் மரணம் விளைகின்றது. இப்பொழுது, மரணம் விளைத்த செயலைச் செய்தவர் குற்றவாளியா, இல்லையா? அவர் குற்றவாளிதான். யாருடைய மரணத்தைக் கருதி அச் செயலைச் செய்தாரோ அவரது மரணம் விளைந்திருந்தால் எந்த வகையில் அவர் குற்றவாளியாவாரோ, அந்த வகையிலேயே அவர் மற்றொருவரின் மரணத்திற்கும் பொறுப்பாகின்றார்.

இரவுநேரம் தம் பகைவனை இராமன்தான் நிற்கின்றான் என்று நினைத்துக்கொண்டு, அவனைக் கொல்லக் கருதி ஒருவர் துப்பாக்கியால் சுடுகின்றார். ஆனால், அங்கு நின்றுகொண்டிருந்தவர் இராமன் அல்ல; கோபாலன் என்பவர்தான் நின்றுகொண்டிருந்தார். கோபாலன்மீது குண்டு பாய்ந்து அவர் இறந்துவிடுகின்றார். இப்பொழுது துப்பாக்கியால் சுட்டுக் கோபாலனின் மரணத்தை விளைத்தவர், 'நான் சுட்டுக்கொல்லக் கருதியது இராமனைத்தான், கோபாலனை அன்று; ஆதலால், கோபாலனின் மரணத்திற்கு நான் பொறுப்பில்லை' என்று வாதாடினால் அது பொருந்தாது. குறிப்பிட்ட ஒருவரைக் கொலைசெய்தல் வேண்டுமென்ற கருத்துடன்தான் குற்றவாளி துப்பாக்கியால் சுட்டார். அதன் விளைவாகக் குற்றவாளி எவரைக் கருதினாரோ அவர் இறந்தாலும், குற்றவாளியால் கருதப்படாத இன்னொருவர் இறந்தாலும் பலன் ஒன்றுதான்; அதாவது, மரணம் விளைதல். எவருக்கு மரணம் விளைத்தாலும் குற்றந்தான். ஒருவரது செயலால் அவர் குறித்தவர் இறந்தாலும், அவர் குறியாத மற்றொருவர் இறந்தாலும், அவரது குற்றச் செயல் பூர்த்தியாகிவிட்டது. எனவே, மரணம் விளைத்ததற்கான பொறுப்பு அவரைச் சேருகின்றது. சுட்டவர் கொலைக் குற்றத்திற்கு ஆளாகின்றார்.

ஒருவருக்கு மரணம் விளைக்கக் கருதி, அல்லது அவருக்கு மரணம் விளைக்கக்கூடியது என்று மனமறிந்து ஒன்றைச் செய்ததன் பயனாக, எதிர்பாராதவிதத்தில் மற்றொருவருக்கு மரணம் விளைந்தால், அந்த மரணத்திற்கான பொறுப்பு அச் செயலைச் செய்தவரையே சேருகின்றது (301ஆம் பிரிவு).

ஒருவன் தன் மனைவியைக் கொல்லக் கருதி நஞ்சு கலந்த ஒரு பழத்தை அவளிடம் கொடுத்து அருந்தச் சொன்னான். அவளுக்கு அந்தப் பழம் நஞ்சு இடப்பட்டது என்று தெரியாது. அவள் அந்தப் பழத்தைத் தன் குழந்தைக்குக் கொடுத்துச் சாப்பிடச்

செய்தாள். பழத்தை அருந்திய குழந்தை இறந்துவிட்டது. இப்பொழுது இந்தக் குழந்தையின் மரணத்திற்கு யார் பொறுப்பு? நஞ்சிட்ட பழத்தைக் கொடுத்தவன்தான் பொறுப்பு. குழந்தையைக் கொன்ற கொலைக்குற்றத்திற்கு அதன் தந்தையே தண்டனை பெற்முன்.

நரசிம்மலு என்பவரைக் கொலைசெய்யக் கருதிய சூரிய நாராயணு என்பவர், நஞ்சு கலந்த இனிப்புப் பண்டத்தை நரசிம் மலுவிடம் உண்ணும்படி கொடுத்தார். நரசிம்மலு அந்தப் பண்டத்தில் சிறு பகுதியை உண்டுவிட்டு, மீதியைக் கீழே எறிந்து விட்டார். அவர் கீழே எறிந்த இனிப்புப் பண்டத்தை அந்த வீட்டி லிருந்த இரண்டு குழந்தைகள் எடுத்து உண்டன. பண்டத்தில் கலந்திருந்த நஞ்சினுல் அந்தக் குழந்தைகள் இறந்துவிட்டன. ஆனுல், அந்தப் பண்டத்தின் ஒரு பகுதியை உண்ட நரசிம்மலு சிகிச்சையின் பயனுக மரணத்திலிருந்து தப்பிவிட்டார். இப்பொழுது நஞ்சு கலந்த பண்டத்தைக் கலந்து நரசிம்மலுவிடம் கொடுத்தவர் குழந்தைகளின் மரணத்திற்கும் பொறுப்பாகின்முர்; அதாவது, கொலைக்குற்றத்திற்கே பொறுப்பாகின்முர் என்று கொண்டு, அவருக்குக் கொலைக்குற்றத்திற்குரிய தண்டனையைச் சென்னை உயர் நீதிமன்றம் அளித்தது [Public Prosecutor V. Suryanarayanamoorthi—(1912) M.W.N. 136].

இவ்வாறு, ஒருவருக்கு மரணம் விளைக்கும் கருத்தோடு செய்யப் பட்ட செயலின் பயனுக மற்ருெருவருக்கு மரணம் விளைந்தால், அந்த மரணத்திற்கும் அச் செயலைச் செய்தவர் பொறுப்பாகின்முர்.

## கவனமின்மையால் மரணம் விளைத்தல்
## (Causing Death by Negligence)

கவனமின்மையாகவோ (negligence), அசட்டுத் துணி வுடனே (rashness) ஒரு செயலைச் செய்து, அதன் பயனுகப் பிறருக்கு மரணம் விளைந்தால், அச் செயலைச் செய்தவர் 'கவனமின்மையால் மரணம் விளைத்தல்' என்ற குற்றத்திற்கு ஆளாகின்முர். இக் குற்றத் திற்கான தண்டனை இரண்டாண்டுக் காலம்வரை சிறை, அபராதம் ஆகும் (304—A பிரிவு).

ஒருவரைக் கொல்லவேண்டுமென்ற கருத்தின்றியும், ஒருவருக்கு மரணம் விளையலாம் என்று மனமறிந்தும் செய்யப்படாத ஒரு செய லாலும் மரணம் விளைவதுண்டு. அச் செயல் கவனமின்மையாகவோ (negligence) அல்லது அசட்டுத் துணிவுடனே (rashness) செய்யப்பட்டிருந்தால், அச் செயலைச் செய்தவர் இந்தப் பிரிவுப்படி குற்றவாளியாகின்முர்.

**அசட்டுத் துணிவு** (Rashness)

ஓர் ஆபத்தான செயலால் பிறருக்கு மரணம் விளையலாம் என்பது ஒருவருக்குத் தெரிகின்றது. விளைந்தாலும் அக்கறையில்லை யென்ற மனநிலையில் அச் செயலைச் செய்வது அசட்டுத் துணிவான செயலாகும். பிறருக்கு மரணம் விளைவதைத் தவிர்க்கும் முறையில் தாம் நடக்கவேண்டுமென்ற கொள்கையைப் புறக் கணித்து, பிறருக்கு மரணம் விளைந்தால் விளையட்டும் என்ற அசட்டையான துணிச்சலுடன் ஒருவர் நடந்து, அதனால் பிறருக்கு மரணமும் விளைந்தால், அது இந்தப் பிரிவின்கீழ்க் குற்ற மாகிறது.

மக்கள் நெருக்கடியாக நடமாடும் வீதியில் ஒருவர் அறுபது மைல் வேகத்தில் தமது மோட்டார்க் காரை ஓட்டி, மற்றவர்மீது மோதி அவருக்கு மரணத்தை விளைக்கிறார். இது அசட்டுத் துணிவான செயலாகும் (rash act). மோட்டார் ஓட்டுபவருக்கு நன்கு தெரியும், மக்கள் நெருக்கடி உள்ள வீதியில் இருபது மைல் வேகத் திற்குமேல் மோட்டாரை ஓட்டுவது பிறர் உயிருக்கு ஆபத்தானது என்பது. இருப்பினும், அவர் அறுபது மைல் வேகத்தில் ஓட்டியது எந்த மனநிலையில்? பிறருக்கு அதனால் மரணம் விளைந்தாலும் அக்கறையில்லை என்ற அசட்டையான மனநிலையில்தான் அவ்வாறு ஓட்டினார். எனவே, இந்த அசட்டை பொருந்திய மனநிலையைச் சட்டம் குற்றமாகக் கொள்கிறது. இவ்வாறு, செய்யத்தகாததைச் செய்தல் அசட்டுத் துணிவான செயலாகும்.

**கவனமின்மை** (Negligence)

'கவனமின்மை' என்று எதைச் சொல்லுகிறோம்? ஒருவர் ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் தகுந்த கவனத்துடன் நடந்துகொண்டாரா என்பதை அந்தச் சூழ்நிலையின் பல்வேறு கூறுகளையும் ஆராய்ந்து முடிவுசெய்ய வேண்டும். நல்லறிவுள்ள ஒருவர் (reasonable man) குறிப்பிட்ட சூழ்நிலையில் எந்த முறையில் கவனமாக நடந்துகொள் வாரோ, அந்த அளவு கவனத்துடன் அனைவரும் நடக்கவேண்டும் என்பது நியாயமான கொள்கை. இந்தக் கருத்தின் அடிப்படை யிலேயே 'கவனமின்மை' என்பதை நீதிபதிகள் விளக்கியிருக் கின்றனர்.

முன்மதியும் நல்லறிவும் உள்ள மனிதன் குறிப்பிட்ட காரியத் தைப் பொறுத்து எதைச் செய்வானோ அதைச் செய்யாதிருத்தலும், எதைச் செய்யமாட்டானோ அதைச் செய்தலும் 'கவனமின்மை' ஆகின்றது. முன்னறியத்தக்க ஆபத்துகளைத் தவிர்ப்பதில் கவனத்தைச் செலுத்தி ஒரு காரியத்தைச் செய்தலே அறிவுடைமை யாகும். நிகழத்தக்க ஆபத்துகளைத் தடுப்பதிலும் , தவிர்ப்ப

திலும் ஒருவர் கவனத்தைச் செலுத்தவேண்டும். முன்னறிய முடியாத இடையூறுகளைத் தவிர்ப்பது எவராலும் இயலாது. நிகழத் தக்க இடையூறுகளை (probable dangers) ஒருவர் தவிர்க்கலாம்; நிகழக்கூடிய எல்லா ஆபத்துகளையும் (possible dangers) எவராலும் தவிர்த்தல் இயலாது. ஒரு செயலின் பயனாக யாரும் எதிர்பார்க்க முடியாத எத்தனையோ ஆபத்துகள் விளையலாம். முன்னறிய முடியாத, ஆனால், நிகழக்கூடிய ஆபத்துகள் அனைத்தையும் (unforeseen possible dangers) தவிர்ப்பது யாராலும் முடியாது. முன்னறியக்கூடியவும், நிகழத்தக்கவுமான ஆபத்துகளைத் (forseeable probable dangers) தவிர்ப்பது நல்லறிவுள்ள ஒருவரின் இயல்பாகும். இதையே, முன்மதியும் நல்லறிவுமுள்ள மனிதனின் நடத்தை என்கிறோம்.

இந்த முறையில், ஓர் அறிவுள்ள மனிதன் காட்டவேண்டிய கவனத்தைக் காட்டாது, ஒரு செயலைச் செய்து, அதனால் பிறருக்கு மரணம் விளைந்தால், அச் செயலைச் செய்தவர், 'கவனமின்மையால் மரணம் விளைத்தல்' என்ற குற்றத்திற்கு ஆளாகின்றார்.

### அசட்டுத் துணிவும் கவனமின்மையும்

அசட்டுத் துணிவான செயலைச் செய்பவர் ஆபத்து விளையலாம் என்பதை அறிகின்றார்; அறிந்தும் அவ்வாறு ஆபத்து விளையாது என்ற ஒரு துணிச்சலோடு செயற்படுகின்றார். கவனமின்மையான செயலைச் செய்பவர், தக்க கவனத்தைச் செலுத்தாத காரணத்தால், விளைய இருக்கும் ஆபத்தை அறியாமலே செயற்படுகின்றார். ஒன்று, நிகழத்தக்க ஆபத்தை அறிந்தும், அதைத் தவிர்ப்பதில் அக்கறை காட்டாத மனத்துணிச்சல் கொண்ட செயல்; மற்றொன்று, போதிய கவனமில்லாததால் நிகழத்தக்க ஆபத்தை அறியாத, அதனால் முன் கவனம் காட்டாத செயல். முதலாவது அசட்டுத் துணிச்சலான (rash) செயல்; இரண்டாவது கவனமின்மையான (negligent) செயல். இந்த இருவகைச் செயல்களில் எதாவது ஒன்றினால் பிறருக்கு மரணம் விளைந்தாலும், அதைச் செய்தவர் குற்றவாளியாகின்றார்.

இரவுநேரத்தில் மோட்டார் வண்டியின் முன்விளக்கை ஏற்றாமல் ஓட்டியதால் வீதியில் சென்றவர்மீது மோதி அவருக்கு மரணத்தை விளைத்தல், கவனமின்மையால் மரணம் விளைத்தலாகும்; இது அசட்டுத் துணிவான செயலுமாகும். வீதி மூலைகளில் திரும்பும் பொழுது, மோட்டார் ஓட்டி மோட்டாரின் 'ஹாரனை' (ஒலிக்குழலை) அடிக்கவேண்டும். இல்லையெனில், திருப்பத்தின் அடுத்த புறமிருந்து வருவோருக்கு மோட்டார் திரும்புவது தெரியாது. இவ்வாறு லியெழுப்பாமல் வீதி மூலையில் மோட்டாரைத் திருப்பி, அதனால்

பிறர்மீது மோதி மரணத்தை விளைத்தல் கவனமின்மையால் மரணம் விளைத்தலாகிறது. மருந்து கலந்துகொடுப்பவர், மருந்துப் புட்டிமீது எழுதியிருப்பதைப் பாராமல் கவனமின்றி நஞ்சு கலந்த மருந்தைக் குழந்தைக்குக் கொடுத்து, அதனால் குழந்தை இறந்துவிட்டது. இது கவனமின்மையால் மரணம் விளைத்த குற்றமாகும்.

நோயுடையோர்களைச் சிகிச்சை செய்யும் வைத்தியர் தக்க கவனத்தோடு நடந்துகொள்ளவேண்டும். தக்க திறமையின்றி அறுவைச் சிகிச்சை செய்தோ, அல்லது அறுவைச் சிகிச்சையைக் கவனமின்றிச் செய்தோ நோயாளிக்கு மரணம் விளைந்தால், அந்த வைத்தியர் கவனமின்மையால் மரணம் விளைத்தவர் ஆகின்றார். இம்மாதிரி எத்தனையோ வகைகளில் கவனமின்மையான, அசட்டுத் துணிவான செயல்களில் மரணம் விளையலாம்.

மரணத்தைக் கருதி விளைத்த செயல்களும், மனமறிந்து விளைத்த செயல்களும் கவனமின்மைச் செயலாவதில்லை யென்பதை நாம் மறந்துவிடலாகாது.

ஒருவர் செயலால் இன்னொருவருக்கு விளையும் மரணம் இருவழிகளில் நடைபெறலாம். வேண்டுமென்றே கருதிச் செய்யும் செயலால் மரணம் விளைவது ஒன்று; கவனக்குறைவான செயலால் மரணம் விளைவது மற்றொன்று. கருதிச் செய்தாலும், கவனமின்மையாகச் செய்தாலும் விளையும் பலன் ஒன்றுதான். எனவேதான், கவனமின்மையால் மரணம் விளைத்தலைச் சட்டம் தடைசெய்து குற்றமென விதிக்கின்றது. இருப்பினும், கவனமின்மையாகச் செயற்படுவோருக்குக் கொலை செய்யவேண்டுமென்ற குற்ற மனநிலை இல்லையாதலால், குறைந்த தண்டனையைச் சட்டம் அளிக்கின்றது.

## கொலைக்குற்ற முயற்சி (Attempt to Murder)

ஒரு செயல் குற்றமானது என்றால், அந்தச் செயலைச் செய்ய முயலுவதையும் குற்றமானதாகவே சட்டம் கொள்கிறதென்பதை முன்னர்க் கண்டோம். 511ஆம் பிரிவு பொதுவாகக் குற்ற முயற்சிகளைப்பற்றியும், அதற்கான தண்டனைபற்றியும் கூறுகிறது. சில குற்றங்களைப் பொறுத்த முயற்சிச் செயல்கள்பற்றித் தனித்தனியாகவும் சட்டத்தில் காணுகிறோம்.

கொலைக்குற்ற முயற்சியைக் கடுமையான குற்றமாகச் சட்டம் கருதுகிறது. கொலைசெய்பவர்களுக்கு மரணதண்டனை விதிக்கும் சட்டம், கொலைசெய்ய முயன்று அதில் வெற்றி பெறுதவர்களை விட்டுவிட்டால், அவர்கள் மேலும்மேலும் முயற்சி செய்வதற்கு வழி வகுப்பதாகிவிடும். எனவே, கொலைக்குற்ற முயற்சியைச் சட்டம் கடுமையாகத் தண்டிக்கிறது.

மரணம் விளைந்தால் கொலைக்குற்றமாகும் ஒரு செயலை அக் குற்றத்திற்குரிய கருத்தோடு அல்லது அறிவோடு அதற்கேற்ற சூழ்நிலையில் செய்பவர் 'கொலைக்குற்ற முயற்சி' (கொலைமுயற்சிக் குற்றம்) செய்தவராகின்றார்.

இக் குற்றத்திற்குப் பத்தாண்டுக் காலம்வரை சிறைத்தண்டனையும் அபராதமும் உண்டு. இச் செயலால் பிறருக்கு உடற்காயம் விளைந்திருந்தால், அதற்குத் தண்டனை ஆயுட்காலச் சிறையாகும்.

ஆயுட்காலச் சிறைத்தண்டனையை அனுபவித்துக்கொண்டிருக்கும் ஒருவர் கொலைமுயற்சிக் குற்றத்தைச் செய்தால், அதற்கு மரணதண்டனை விதிக்கப்படும் (307 ஆம் பிரிவு).

**உதாரணங்கள்**

(1) இராமன் கோபாலனைக் கொல்லவேண்டுமென்ற கருத்தோடு, கோபாலனை நோக்கித் துப்பாக்கியால் சுடுகின்றான். ஆனால், கோபாலன் இறக்கவில்லை. இராமன் கொலைக்குற்ற முயற்சி செய்தவனாகின்றான்.

(2) இராமன் கோபாலனைச் சுட்டுக்கொல்ல வேண்டுமென்ற கருத்தோடு, ஒரு துப்பாக்கியை விலைக்கு வாங்குகிறான். அதில் குண்டுகளைப் போட்டு வைத்துக்கொள்கிறான். இது கொலைக்குற்ற முயற்சி நிலையை அடையவில்லை. கோபாலனை நோக்கிச் சுட்டுவிடுகிறான்; ஆனால், குறி தவறிவிடுகிறது. இப்பொழுது கொலைமுயற்சிக் குற்றம் நிறைவேறிவிட்டது. இராமனுக்குரிய தண்டனை பத்தாண்டுக் காலம்வரை சிறையாகும். அவ்வாறு சுட்டதால் கோபாலனுக்குக் காயம் விளைகிறது. ஆனால், அவன் இறக்கவில்லை. இப்பொழுது இராமனுக்குரிய தண்டனை ஆயுட்காலச் சிறையாகும்.

(3) இராமன் கோபாலனை நஞ்சிட்டுக் கொல்லவேண்டுமென்று கருதி, விஷத்தை வாங்கி, அதைப் பாலில் கலக்கின்றான்; நஞ்சு கலந்த பால் இராமனிடமே இருக்கிறது. இந் நிலையில் அச் செயல் கொலை முயற்சியாகவில்லை. அந்தப் பாலைக் கோபாலன் பருகுவதற்கென உள்ள மேசைமீது இராமன் வைத்துவிடுகிறான், அல்லது கோபாலனிடம் கொடுக்கும்படி ஒரு வேலையாளிடம் பாலைக் கொடுத்து அனுப்புகிறான். இப்பொழுது கொலைக்குற்ற முயற்சிக்கு இராமன் ஆளாகின்றான்.

(4) பிறந்து பத்து நாட்களான ஒரு குழந்தையைக் கொல்லக் கருதி, அதை ஒரு துணியில் பொதிந்து வீதியின் ஓரத்தில் வைத்துவிட்டு, அதன் தாய் சென்றுவிட்டாள். சிறிது நேரங்கழிந்து அதை மற்றொருவர் கண்டெடுத்துப் பிழைக்கவைக்கிறார். தாயின் செயல் கொலைக்குற்ற முயற்சியாகும்.

'குற்ற முயற்சி' (Criminal Attempt) என்ற முன் அத்தியாயத்தில், ஒரு செயல் எப்பொழுது குற்ற முயற்சி நிலையை அடைகிறதென்றும், எப்பொழுது முன்னேற்பாட்டு நிலையில், (preparation) இருக்கிறதென்றும் விரிவாகக் கண்டோம். முன்னேற்பாடான நிலையிலுள்ள செயல், பொதுவாகத் தண்டனைக்குள்ளாவதில்லை. முயற்சிச் செயலே குற்றமாகின்றது. எது முன்னேற்பாடான நிலை, எது முயற்சி நிலை, முன்னேற்பாட்டு நிலை எந்தச் சமயத்தில் முயற்சி நிலையை எட்டுகிறது என்பனபற்றியெல்லாம் அந்த அத்தியாயத்தில் விரிவாகக் கூறப்பட்டது. அங்குக் கூறியவையனைத்தும் இந்தப் பிரிவில் கூறப்படும் கொலைக்குற்ற முயற்சிக் குற்றத்திற்கும் பொருந்துவன.

இந்தப் பிரிவில் கூறப்பட்ட மூன்றும் உதாரணத்தில் விஷங் கலந்த பாலை இராமன் தன்வசமே வைத்திருக்கும்வரையில் முன்னேற்பாடான நிலையிலேதான் அந்தச் செயல் இருக்கிறது. பாலைக் கோபாலனின் மேசைமீது வைத்தபிறகுதான் அது முயற்சிச் செயலாகின்றது. பாலைக் கோபாலன் குடிக்காமலே இருந்துவிட்டாலும் சரி, அல்லது கோபாலன் குடித்து அதனால் நோயுற்று முடிவில் இறக்காமல் தப்பிவிட்டாலும் சரி, இராமனின் செயல் கொலைக்குற்ற முயற்சிச் செயலாகும்.

கல்கத்தாவில் பொதுக்கூட்டத்தில் பேசிக்கொண்டிருந்த கவர்னரை நோக்கி ஒருவர் கைத்துப்பாக்கியை நீட்டி விசையை இழுத்தார். ஆனால், துப்பாக்கியில்உள்ள கோளாறினால் குண்டு துப்பாக்கியிலிருந்து வெளிவரவில்லை. அவர் கொலைமுயற்சிக் குற்றத்திற்குத் தண்டிக்கப்பட்டார்.

குற்றச் செயல், கொலைக்குற்றத்திற்கான குற்ற மனத்தோடு, அதாவது, பிறரைக் கொல்லவேண்டுமென்று கருதியோ அல்லது பிறருக்கு மரணம் விளையலாம் என்று மனமறிந்தோ செய்யப்பட்டிருத்தல் வேண்டும்; குற்றத்திற்கேற்ற சூழ்நிலையிலும் செய்யப்பட்டிருத்தல் வேண்டும். இல்லாவிடில், கொலை முயற்சிக் குற்றம் எழுவதில்லை.

## மரணம் விளைக்குங் குற்ற முயற்சி
## (Attempt to commit culpable homicide)

பிறருக்கு மரணம் விளைத்தால், 'மரணம் விளைக்குங் குற்ற'மாகும் ஒரு செயலை, அக் குற்றத்திற்குரிய கருத்தோடு அல்லது அறிவோடு அதற்கேற்ற சூழ்நிலையில் செய்பவர் 'மரணம் விளைக்குங் குற்ற முயற்சி' செய்தவராகின்றார். இக்குற்றத்திற்கு மூன்றுண்டுக்

காலம்வரை சிறை, அபராதம் தண்டனையாகும். இத்தகைய செயலால் பிறருக்கு உடற்காயம் விளைந்திருந்தால், அதற்குத் தண்டனை ஏழாண்டுக் காலம்வரை சிறை, அபராதமாகும் (308ஆம் பிரிவு).

**உதாரணம்**

இராமனுக்குத் திடீரென்று கடுஞ்சினமூட்டப்பட்டதால், சினமூட்டிய கோபாலனை நோக்கித் துப்பாக்கியால் சுடுகின்றான். ஆனால், குறி தவறிவிடுகிறது, அல்லது கோபாலனுக்குக் காயம் மட்டும் விளைகிறது. இச் செயல் மரணம் விளைக்கும் குற்ற முயற்சியாகும்.

இவ்வாறு, பிறருக்கு மரணம் விளையாத நிலையிலும், குற்ற மனத்தோடு, அதற்கேற்ற சூழ்நிலையில் செய்யப்பட்ட செயலைக் 'கொலைக்குற்ற முயற்சி' என்றும், 'மரணம் விளைக்கும் குற்ற முயற்சி' என்றும் கொண்டு சட்டம் தண்டனை அளிக்கிறது.

## தற்கொலை முயற்சி
## (Attempt to commit suicide)

கொலையும் தற்கொலையும்—தற்கொலை முயற்சிக் குற்றம்—முயற்சியும் முன்னேற்பாடும்—உயிரைப் போக்கிக்கொள்ளும் கருத்து வேண்டும்—உண்ணா நோன்பு—தற்கொலைக்கு உடந்தையாக இருத்தல்—சிறுவர், சித்த சுவாதீனமில்லாதவர் முதலியோரின் தற்கொலைக்கு உடந்தையாக இருத்தல்.

**கொலையும் தற்கொலையும்**

ஒருவர் மற்றொருவரைக் கொன்றால் அவர் கொலைக் குற்றத்திற்கு ஆளாகின்றார். ஒருவர் தம்மையே கொன்றுகொண்டால் அது சட்டத்திற்கு உகந்த செயலாகுமா? ஆகாது. இரு செயல்களாலும் மரணம் விளைகிறது. ஒன்றில், இறந்தவரின் மரணம் மற்றொருவரால் விளைவிக்கப்படுகிறது. இரண்டாவதில் இறந்தவரின் மரணம் அவராலேயே விளைவிக்கப்பட்டது. இரு செயல்களாலும் சமுதாயத்திற்குக் கேடு விளைகின்றது.

ஒவ்வொரு குடிமக்களின் உயிரும் சமுதாயத்தின் ஒப்பற்ற சொத்தாக இருக்கிறது. ஆதலால், ஒவ்வொருவருடைய உயிரையும் பேணிக் காப்பது அரசின் கடமையாகும். எனவே, ஒருவர் உயிரை மற்றவர் போக்குவது எவ்வாறு சட்டவிரோதச் செயலாகின்றதோ, அவ்வாறே ஒருவர் உயிரை அவரே போக்கிக்கொள்வதும் சட்டவிரோதச் செயலாகும்.

ஒருவர் மற்றவரைக் கொலை செய்தால், கொலையுண்டவர் இறக்கின்றார்; கொலை செய்தவர் இருக்கின்றார். இருக்கும் கொலையாளியைச் சட்டம் தண்டிக்கின்றது. தற்கொலையில் கொலையாளியே இறந்துவிடுகின்றார். இறந்தபின் அவரைச் சட்டம் எவ்வாறு தண்டிப்பது? தற்கொலையில் கொலையுண்டவரும் கொலையாளியும் ஒருவராக இருப்பதால் கொலையுண்ட நபர் மீது தற்கொலைக் குற்றத்தைச் சாற்றுவது இயலாது.

எனவே, தற்கொலைச் செயல் முடிவடைந்துவிட்டதெனில் எவரையும் குற்றவாளியெனத் தண்டிப்பதற்கில்லை. சில வேளைகளில் தற்கொலை செய்துகொள்ள முற்படுவோர் தங்கள் முயற்சியில் வெற்றி பெறுவதில்லை. தற்கொலைச் செயலால் உயிரிழக்காமல் தப்பி விடுகின்றனர். இவ்வாறு தற்கொலையில் இருந்து தப்பிவிடுபவர் களைச் சட்டம் தண்டனைக்கு ஆளாக்குகிறது. இவர்களையே சட்டம் தண்டிக்கவும் இயலும்.

தற்கொலை முடிவடைந்துவிடவில்லையாதலால் அது, 'தற்கொலை முயற்சி' (attempt to commit suicide) என்ற குற்றமாகிறது.

தற்கொலையிலிருந்து தப்பியவர் 'தற்கொலை முயற்சிக்' குற்றத் திற்கு ஆளாகின்றார்.

முடிவடைந்த செயல் குற்றமாகாமல் முயற்சி நிலையில் மட்டும் குற்றமாகும் செயல் 'தற்கொலை முயற்சி' யாகும்! தற்கொலை முயற்சியில் வெற்றி பெற்றவர் இறந்துவிடுகிறார். எனவே, சட்டத்தின் ஆளுகைக்கு அப்பாற்பட்டுப் போகிறார். ஆதலால், முடிவடைந்த தற்கொலையைக் குற்றம் என்று சட்டம் விதிப்பதால் பயனேதும் இல்லை. அந்த முயற்சியில் வெற்றிபெறாதவர் உயிர் வாழ்வதால் சட்டத்தின் வரம்பிற்குக் கட்டுப்பட்டிருக்கிறார். எனவே, முயன்ற குற்றத்திற்கு அவர் ஆளாகின்றார். இவ்வாறு, சட்டத்தில், முடிவடைந்த செயல் குற்றமாகாமல் முயற்சி நிலையில் மட்டும் குற்றமாகிறது, 'தற்கொலை முயற்சி' என்ற ஒரே ஒரு செயல்தான்.

## தற்கொலை முயற்சிக் குற்றம்

ஏதாவது ஒரு செயலைச் செய்து தற்கொலை செய்துகொள்ள முயல்பவர் குற்றவாளியாகின்றார். இந்தத் 'தற்கொலை முயற்சி' என்ற இக் குற்றத்திற்கு ஓராண்டுக் காலம்வரை சிறை அல்லது அபராதம் தண்டனையாகும் (309ஆம் பிரிவு).

## முயற்சியும் முன்னேற்பாடும்

முயற்சிக்கும் (attempt) முன்னேற்பாட்டிற்கும் (preparation) உள்ள வேறுபாட்டினை முன்னர்க் கண்டோம். குற்ற முயற்சி

யையே சட்டம் தண்டிக்கிறது. குற்றத்திற்கான முன்னேற்பாட்டைப் பொதுவாகச் சட்டம் தண்டிப்பது இல்லை. எனவே, 'தற்கொலை முயற்சி' என்று எந்த நிலையில் ஒரு செயலைக் கொள்வது என்பது ஆராயத்தக்கதாகும்.

ஒரு பெண் கிணற்றில் விழுந்து உயிரை விடப்போவதாகக் கூறிக்கொண்டு கிணற்றை நோக்கி ஓடுகின்றாள். பிறர் அவளைப் பிடித்து நிறுத்திவிடுகின்றனர். இப்பொழுது அவளைத் 'தற்கொலை முயற்சிக்' குற்றத்திற்குத் தண்டிக்கலாமா? இது முயற்சி நிலையை இன்னும் எட்டவில்லை. கிணற்றருகே சென்றதும் அந்தப் பெண்ணின் மனம் மாறலாம்; கிணற்றில் விழாமலே அவள் நின்றுவிடலாம். ஆதலால், கிணற்றை நோக்கி ஓடிய செயல் ஆயத்தச் செயலேயாகும்; தற்கொலைக்கு முன்னேற்பாடான செயலேயாகும்; முயற்சிச் செயல் அன்று. எனவே, அந்தப் பெண் குற்றவாளி ஆவதில்லை.

ஊமத்தை விதையை உண்டு உயிரிழக்க வேண்டும் என்ற கருத்தோடு ஒருவர் ஊமத்தை விதையை அரைத்துக்கொண்டிருந்தார். இந் நிலையில் அவரைப் பிடித்துக் குற்றவாளி ஆக்க முடியாது. ஏனெனில், விதைகளை அரைத்து முடித்த பின்னும் அதை உண்ணாமல், அவர் இருக்கலாம்.

ஆனால், கிணற்றில் விழுந்துவிட்ட பெண்ணைப் பிறர் தப்ப வைக்கின்றனர் என்றாலோ, ஊமத்தை விதையை உண்டவர் பிறர் செய்த வைத்திய சிகிச்சையால் பிழைத்துக்கொண்டார் என்றாலோ, அவர்கள் தற்கொலை முயற்சிக் குற்றத்திற்கு ஆளாகின்றனர்.

**உயிரைப் போக்கிக்கொள்ளும் கருத்து வேண்டும்**

போலிசாரால் துரத்தப்பட்ட ஒருவன் தான் தப்புவதற்கென்று கிணற்றுக்குள் குதித்துவிட்டான். பிறகு அவனை வெளியில் எடுத்துக் காப்பாற்றினார்கள். அவன் கிணற்றில் குதித்த செயலைத் 'தற்கொலை முயற்சி'ச் செயல் என்று கொள்ளமுடியாது. தன் உயிரைப் போக்கிக்கொள்ளும் கருத்தோடு அவன் கிணற்றுக்குள் குதிக்கவில்லை. போலிசிடமிருந்து தப்பும் நோக்கத்துடனேயே அவன் கிணற்றிற்குள் குதிக்கின்றான். எனவே, அது தற்கொலை முயற்சிச் செயல் அன்றெனத் தீர்ப்புக் கூறப்பட்டது.

**உண்ணா நோன்பு**

சிலர் ஏதாவது ஒரு குறிக்கோள் நிறைவேற வேண்டும் என்ற கருத்தோடு உண்ணா நோன்பு இருக்கின்றனர். உண்ணா விரதத்தால் பிறர் மனத்தை மாற்றித் தாம் எடுத்த காரியத்தை

நிறைவேறச் செய்யவேண்டும் என்பதே அவர்கள் நோக்கமாகும். பல நாட்கள் உணவுண்ணவில்லை எனில் முடிவில் உறுவது மரணந் தான். ஆதலால், உண்ணாவிரதம் இருப்பவர்களைத் தற்கொலை முயற்சி செய்பவர்களாகக் கொள்ளுதல் தகுமா? தகாது. ஏன்?

உண்ணா நோன்பிருப்பவரின் நோக்கம் தம் உயிரைப் போக்கிக் கொள்ளவேண்டும் என்பதன்று. அந்த நோன்பின்மூலம் தமது குறிக்கோள் கைகூடவேண்டும் என்பதேயாகும். உயிரைப் போக்கிக் கொள்ளும் கருத்து இல்லாத நிலையில், உண்ணா நோன்பு 'தற்கொலை முயற்சி' ஆவதில்லை.

நீரில் மூழ்குவதும் தூக்குப்போட்டுக் கொள்வதுமே பெரும் பாலோர் கையாளும் தற்கொலை முயற்சிச் செயலாகும். நஞ்சு கலந்த மருந்துகள் எளிதிற் கிடைக்கும் இந்நாளில் நச்சு மருந்துகளை உட்கொண்டு உயிரைப் போக்கிக்கொள்ள முனைபவர்களும் இருக் கின்றனர். ஆறு, கிணறு முதலியவற்றில் விழுந்து நீரில் மூழ்கியும், தூக்குப் போட்டுக்கொண்டும், நஞ்சினை உட்கொண்டும் உயிரிழக் காது தப்புவோர் பலருண்டு. அவ்வாறு தப்புவோர்மீதுதான் தற்கொலை முயற்சிக் குற்றம் சாற்றப் பெறுகின்றது.

இராணுவத்திலும் போலிசிலும் இருப்போர் கோழைத்தனமாக நடந்தால் அவர்கள்மீது கடும் நடவடிக்கை எடுக்கப்படுகிறது. போர்முனையில் அஞ்சிப் பின் வாங்குவோர் கோழைகள் எனக் கருதப் படுகின்றனர். கூட்டத்தை அடக்குவதில் போலீசுப் படையினர் போதுமான தைரியத்தைக் காட்டவில்லையெனில், அவர்கள்மீது கோழைத்தனக் (cowardice) குற்றம் சாட்டப்படுகிறது. 'கோழைத் தனம்' என்பது படையினர்மீது சாற்றப்பெறும் கடுங்குற்றச் செயலாகும்.

இதுபோல்தான் வாழ்க்கைப் போரில் வாழ்க்கையை எதிர் நோக்கி இன்னல்களை எதிர்த்துச் செல்ல அஞ்சுபவர்களைச் சட்டம் கோழைகளாகவே மதிக்கின்றது. வாழ்க்கைப் போராட்டத்தில் இருந்து தப்புவதற்கு வழியாகத் தற்கொலை செய்ய முயற்சி செய்ப வர்களைக் குற்றவாளிகள் என்று சட்டம் கொண்டு தண்டனையை அளிக்கின்றது.

வறுமையால் வாடுவோர், ஆத்திரத்தால் அவதிப்படுவோர், உடல் நோயால் உழலுவோர், குடும்பச் சச்சரவால் கொடுந்தொல்லை அடைவோர், இன்னோரன்ன சிலர் வாழ்வினை வெறுத்து வாழ்க் கையை முடித்துக்கொள்ள முயலுகின்றனர். தற்கொலை செய்யத் துணிந்துவிட்டவர் இறக்காமல் தப்பினால் தண்டனை கிடைக்குமே என்று அஞ்சித் தற்கொலை முயற்சியைக் கைவிடப்போவதில்லை.

வாழ்வை வெறுத்து, அதை முடித்துக்கொள்ள விழைபவர்களுக்குச் சட்டம் விதிக்கும் தண்டனையால் எந்த அச்சமும் ஏற்படுவதற்கில்லை. ஆதலால், தற்கொலை முயற்சியைத் தண்டனையால்மட்டும் தடுப்பது இயலாததாகும். எனவேதான், கொலைக் குற்றத்திற்கு மரண தண்டனை விதிக்கப்பட்டாலும், தற்கொலை முயற்சிக் குற்றத்திற்கு ஓராண்டுக் காலம்வரை சிறைத் தண்டனையே விதிக்கப்பெறு கின்றது. தற்கொலைகள் அதிகமாக ஒரு சமுதாயத்திலே நிகழ்ந் தால், அந்தச் சமுதாய அமைப்பில் ஏதோ அடிப்படைக் குறைகள் இருக்கின்றன என்பதே பொருளாகும். ஆதலால், இக் குற்றத்தை இழைப்போர் மீது இரக்கம் காட்டிச் சட்டம் குறைந்த தண்டனை யையே அளிக்கின்றது.

### தற்கொலைக்கு உடந்தையாக இருத்தல் (Abetment of suicide)

ஒருவர் தற்கொலை செய்து இறந்துவிடுகிறார் எனில், அவர் தற்கொலை செய்துகொள்வதற்கு உடந்தையாக இருந்தவர்களும் குற்றவாளியாகின்றனர்.

தற்கொலை செய்துகொள்ளும்படி ஒருவரைத் தூண்டுதல் (Instigation), அச்செயலுக்கான உதவி செய்தல் (aid), அச் செயலை நிறைவேற்றுவதற்கென்று சதி செய்தல் (conspiracy) இச் செயல் களில் ஈடுபடுவோர்களைத் தற்கொலைக்கு உடந்தையாக இருப்ப வர்கள் என்கிறோம்.

ஒருவர் தூக்குப் போட்டுத் தற்கொலை செய்துகொள்ள விரும்பு கிறார். இதற்கு உதவியாக மற்றொருவர் கயிறு முதலியவற்றை எடுத்துக் கொடுத்து அதற்கான ஏற்பாட்டினைச் செய்து, அவரைத் 'தற்கொலை செய்துகொள்ள உதவியவர் குற்றவாளியாகின்றார். ஒருவரைத் தூண்டிவிட்டுத் தற்கொலை செய்துகொள்ளச் செய்வதும் குற்றமாகும்.

தற்கொலை செய்துகொண்டவருக்கு உடந்தையாக இருந்தவர் 'தற்கொலைக்கு உடந்தை' (abetment of suicide) என்ற குற்றம் செய்தவர் ஆகின்றார். இக் குற்றத்திற்கான தண்டனை பத்தாண்டுக் காலம்வரை சிறையும் அபராதமும் ஆகும் (306ஆம் பிரிவு).

பொதுவாக, நொந்த மனநிலையில் இருப்பவர்களே தற்கொலைச் செயலில் இறங்குகின்றனர். அவர்களைத் தடுப்பதே மற்றவர்களின் நேர்மையான கடமையாகும். இதைவிட்டுத் தற்கொலைக்கு உடந் தையாக இருப்பது சமுதாயத்திற்கு இழைக்கும் பெருந்தீங்காகும். தற்கொலை விழைபவர்களைத் தடுத்து வாழவைப்பதற்குப்

பதிலாக அடுத்துக் கொல்லுவதாகும்; அச் செயலுக்கு உடந்தை யாக இருப்பது. எனவே, தற்கொலை முயற்சிக்கான தண்டனையை விட அதிக தண்டனையை இக் குற்றத்திற்குச் சட்டம் விதிக் கின்றது.

### சிறுவர், சித்த சுவாதீனமில்லாதவர் முதலியோரின் தற்கொலைக்கு உடந்தையாக இருத்தல்

பதினெட்டு வயதுக்குட்பட்ட சிறுவர், சித்த சுவாதீனமில்லா தவர், அறிவு முதிர்ச்சியடையாதவர்கள், மதி மயக்க வெறியி லுள்ளோர், போதையால் வெறியிலுள்ளோர் இவர்கள் தற்கொலை செய்து இறந்தால் இதற்கு உடந்தையாக இருந்தவர்களுக்கு மரண தண்டனையோ, ஆயுட்காலச் சிறைத்தண்டனையோ விதிக்கப் படலாம் (305ஆம் பிரிவு).

சிறுவர்கள், மதி மயக்கத்திலுள்ளோர், குடி போதையில் இருப் பவர்கள், பைத்தியம் பிடித்தவர்கள், இவர்கள் தங்களது செயலின் விளைவுகளை அறியாதோர். இவர்கள் தற்கொலைச் செயலில் ஈடுபடு வதற்கு உடந்தையாக இருத்தல் அவர்களைக் கொலை செய்வ தற்கு ஒப்பாகிறது. ஆதலால்தான், இக் குற்றத்திற்கு மரணதண் டனைகூட விதிக்கப்படலாம் எனச் சட்டம் விதிக்கின்றது.

சட்டம் மக்களை வாழ வைப்பதற்கென்று இருப்பதாகும்; மக்களைச் சாக வைப்பதற்கன்று சட்டம். எனவேதான், நம்மை நாமே சாகடித்துக்கொள்ள முயலுவதைத் 'தற்கொலை முயற்சிக்' குற்றம் எனச் சட்டம் கொள்ளுகிறது. தற்கொலைக்கு உடந்தையாக இருப்போரையும் சட்டம் கடுமையாகத் தண்டிக்கின்றது.

## 'கருச்சிதைத்தல்' முதலிய குற்றங்கள்

வாழ்வின் நன்கலம் நன்மக்கட் பேருகும்—கருச்சிதைத்தல்—சூலி யின் சம்மதம் இன்றிக் கருச்சிதைத்தல்—கருச்சிதைவுக்கான செயலால் சூலிக்கு மரணம் விளைதல்—குழந்தையை இறக்கவைத்துப் பிறக்க வைத்தல் அல்லது பிறந்தவுடன் இறக்க வைத்தல்—சூலியைத் தாக்குவது சூலைத் தாக்குவதாகும்—கருச்சிதைவை மேற்கொள்ளல் கணக்கில்லா இடர் விளைக்கும் — குழந்தைகளைக் கைவிடுதல் — குழந்தையின் பிறப்பை மறைப்பதற்கென அதன் சடலத்தை மறைத்து ஒழித்தல்

### வாழ்வின் நன்கலம் நன்மக்கட் பேருகும்

உலக வாழ்வு முடிவின்றி ஓடிக்கொண்டிருப்பதாகும். ஓயாத கடலலைகள் போல் பிறப்பும் இறப்பும் மாறிமாறி நிகழ்கின்றன. நேற்றைய சமுதாயத்தில் இருந்து இன்றுள்ள சமுதாயம் பிறந்திருக் கிறது. இன்றைய சமுதாயத்தில் இருந்து நாளைய சமுதாயம் மலரு

கின்றது. இன்றைய நல்வாழ்வின் பயன் நாளை வாழவிருப்பவர்களை நயமுறப் பெறுதல் ஆகும்.

'அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை' என்கிறார் வள்ளுவர்; அறம் என்பது இல்வாழ்க்கை. இல்லறம் இன்றி நல்லறம் இல்லை. அந்த இல்லறத்தின் குறிக்கோள் 'மக்கட் பேறு'. மனைமாட்சி மங்கலமுடையது என்றால் அதன் நன்கலம் நன்மக்கட்பேறாகும்.

'மங்கலம் என்ப மனைமாட்சி மற்று அதன்
நன்கலம் நன் மக்கட் பேறு' —(குறள் - 60)

சமுதாயம் நலமுற நடைபெற வேண்டுமெனில் நன் மக்கட் பேற்றைப் போற்றவேண்டும். எனவே, சமுதாயத்தின் நல் வாழ்வைக் காத்து நிற்கும் சட்டம், நன்மக்கட் பேற்றையும் பேணி நிற்கிறது.

ஆதலால், கருவிலே உதித்திருக்கும் உயிர்களையும் காத்து நிற்கின்றது சட்டம். கருவுறாமல் தன்னை ஒரு பெண் பேணிக் கொள்ளலாம். ஆனால், அவள் கருவுற்றபின், கருவைக் கலைக்கும் உரிமை அந்தப் பெண்ணுக்கு இல்லை. கருவிலுள்ள உயிர்மீது சமுதாயமும் சட்டமும் அக்கறை காட்டத் தொடங்கிவிடுகின்றன. கருவைக் கலைப்பது குற்றம் என்று சட்டம் விதிக்கின்றது. கருவுற்றிருக்கும் ஒரு பெண் வேண்டுமென்றே தனது கருவைச் சிதைப்பது குற்றச் செயலாகிறது. கருச்சிதைவுக்கு மருந்து கொடுப்பவர்களும் கருச் சிதைவுக்கு உதவும் பிறரும் குற்றவாளியாகின்றனர்.

சில வேளைகளில் ஒரு கருவுற்ற பெண்ணின் உயிருக்கு விளையவிருக்கும் ஆபத்தைத் தவிர்ப்பதற்கென்று கருச்சிதைவு செய்வது அவசியமாகலாம். இந் நிலையில் கருச்சிதைவு குற்றமாவதில்லை.

ஒரு பெண் காச நோயால் பீடிக்கப்பட்டிருக்கலாம். குழந்தையை ஈன்றெடுக்கும் வலிமை உடலில் இல்லாமல் இருக்கலாம். அத்தகைய நோயுடைய பெண் ஒருத்தி, கருவுற்றால் அந்தக் கருவைச் சிதைப்பது பெண்ணின் உயிரைக் காப்பதற்கெனச் செய்யப்படுவதாகும். எனவே, இந் நிலையில் இது குற்றமாவதில்லை.

ஒரு பெண் கருவுற்று ஒன்று அல்லது இரண்டு மாதங்கள்தாம் ஆயின என்றாலும், அந்தக் கருவையும் சிதைத்தல் குற்றமாகும். கருவுற்று நான்கு அல்லது ஐந்து மாதங்கள் கழிந்துவிட்டால், கருவுற்ற பெண்ணின் கருப்பைக்குள்ளிருக்கும் கரு உருள ஆரம்பிக்கின்றது. இவ்வாறு, கருவுருளும் நிலையில் உள்ள பெண்ணை ஆங்கிலத்தில் 'woman quick with child' என்பார்கள். இப்பொழுது கரு உயிர் பெற்று வளர்ந்திருக்கிறது என்பது தெளிவு. இந் நிலையில் கருச்சிதைவு செய்தால் அதற்கு அதிக தண்டனை அளிக்கப்படுகின்றது.

### 'கருச் சிதைத்தல்' குற்றம்

ஒரு பெண்ணின் கருவை வேண்டுமென்றே சிதைத்தல் குற்றமாகும். இதற்கு மூன்று ஆண்டுக் காலம்வரை சிறை, அபராதம் தண்டனையாகும்.

கருவுருளும் நிலையிலுள்ள சூலியின் கருவைச் சிதைத்தால், அதற்கு ஏழு ஆண்டுக் காலம்வரை சிறையும் அபராதமும் விதிக்கப்படலாம்.

தன்னுடைய கருச்சிதைவுக்குத் தானே வழிவகுத்த பெண்ணும் குற்றவாளிதான்; மேலே கண்ட தண்டனைக்கு அவளும் உள்ளாகின்றாள்.

சூலியாகவுள்ள பெண்ணின் உயிரைக் காப்பதற்கென்று அவளது கருவைச் சிதைத்தால் அது குற்றச் செயலாவதில்லை (312ஆம் பிரிவு).

இந்த 312ஆம் பிரிவின்கீழ்த் தண்டனைக்குள்ளாக்கும் குற்றம் சூலியின் இசைவோடு கருச்சிதைத்தலாகும். அந்தச் சூலியும், கருச்சிதைவைச் செய்தோரும் குற்றவாளியாகின்றனர்.

### சூலியின் சம்மதம் இன்றிக் கருச்சிதைத்தல்

சூலியின் சம்மதமின்றிக் கருச்சிதைவு செய்வோருக்குக் கடுந்தண்டனை விதிக்கப்படுகிறது. இதற்கு ஆயுட்காலச்சிறையும் அபராதமும் தண்டனையாகும் (313ஆம் பிரிவு).

### கருச்சிதைவுக்கான செயலால் சூலிக்கு மரணம் விளைதல்

கருச்சிதைவுக்கென்று செய்யப்பட்ட செயலால் கருவுற்ற பெண்ணே இறந்துவிடலாம். இவ்வாறு பெண் மரணமுற்றால், அச்செயலைச் செய்தவருக்குப் பத்து ஆண்டுக் காலம்வரை சிறையும் அபராதமும் தண்டனையாகும். இறந்த பெண்ணின் சம்மதமின்றி அச்செயல் செய்யப்பட்டிருந்தால் அதற்கு ஆயுட்காலச் சிறைத்தண்டனை உண்டு (314ஆம் பிரிவு).

கருச்சிதைவுக்கென்று மருந்தை வைத்தியர் கொடுக்கலாம்; அல்லது வேறு முறைகளைக் கையாளலாம். இதன் பயனாகக் கருவுற்ற பெண்ணே இறந்துவிட்டால், அந்தப் பெண்ணின் மரணத்திற்கு வைத்தியர் பொறுப்பாகின்றார்.

### குழந்தையை இறக்க வைத்துப் பிறக்க வைத்தல் அல்லது பிறந்தவுடன் இறக்க வைத்தல்

குழந்தை உயிருடன் பிறக்காதிருக்கும்படியோ அல்லது பிறந்தவுடன் இறந்துபோகும்படியோ செய்யவேண்டும் என்ற கருத்துடன்

குழந்தை பிறப்பதற்கு முன் ஒரு செயலைச் செய்து, அதன் பயனுக-அக் குழந்தை இறந்தபின் பிறக்கிறது, அல்லது பிறந்தவுடன் இறந்து விடுகிறது எனில், அதுவும் குற்றச் செயலேயாகும். அதற்கும் பத்து ஆண்டுக் காலம்வரை சிறை, அபராதம் விதிக்கப்படலாம்.

இச் செயல் சூல் கொண்ட பெண்ணின் உயிரைக் காப்பதற்கென்று செய்யப்பட்டால் அது குற்றமாவதில்லை.

**சூலியைத் தாக்குவது சூலைத் தாக்குவதாகும்**

கருவுற்றிருக்கும் பெண்ணைக் கருத்தோடு காக்கவேண்டும். அவளுடலுக்கு விளையும் நோயால் அவள் ஏற்றிருக்கும் கருவிற்கு ஆபத்து விளைவதுண்டு. எனவே, அந்தப் பெண்ணின் உயிருக்கு ஆபத்து விளைக்க வேண்டுமென்ற கருத்தோடு செய்யப்பட்ட செயலால் கருவில் வளர்ச்சியடைந்த குழந்தை சிதைந்துவிட்டால் அதுவும் குற்றமாகிறது.

ஆறு மாதச் சூலியான பெண்ணின் மண்டைமீது தடியால் ஓங்கி ஒருவன் அடிக்கிறான் என வைப்போம். இது சாதாரணமாக அந்தப் பெண்ணின் மரணத்தை விளைக்கும் செயல். செய்யப்பட்ட வைத்தியத்தால் அடிபட்ட பெண் உயிர் பிழைத்து விடுகின்றாள். ஆனால், அவளது கருவிலே வளர்ச்சியடைந்திருந்த குழந்தை இதன் பயனாய்ச் சிதைந்துவிடுகிறது. இக் குற்றச் செயலுக்குப் பத்தாண்டுக் காலம்வரை சிறையும் அபராதமும் தண்டனையாகும் (316ஆம் பிரிவு).

சூலிக்கு மரணம் விளைக்கத்தக்க செயல் சூலைச் சிதைத்து விட்டது. அச்செயல் சூலிக்கு மரணத்தை விளைக்கவில்லையாயினும், சூலைக் கலைத்துவிட்டதால் அதற்குக் கடுந்தண்டனையைச் சட்டம் விதிக்கின்றது.

**கருச்சிதைவை மேற்கொள்ளல் கணக்கில்லா இடர் விளைக்கும்**

மக்கள் தொகையை மட்டுப்படுத்துவதற்கென்று பல முறைகள் இன்று கையாளப்பெறுகின்றன. கருச்சிதைவைக் குற்றமெனக் கொள்ளவேண்டாம் என்ற கருத்தும் கூறப்படுகின்றது. கருச்சிதைவைச் சட்டத்திற்கு இயைந்த செயலாக, குற்றமற்ற செயலாக ஆக்கவேண்டும் என்று சிலர் கூறுகின்றனர்.

பெருகும் மக்களினத்தை அளவோடு அமைப்பது அவசியந்தான். அதற்குப் பிறப்புகளைக் குறைப்பதும் இன்றியமையாததுதான். ஆனால், அதற்கான வழி என்ன?

கருவுறுவதைத் தடுத்துக்கொள்ளுவது ஒன்று; கருவுற்றபின் அக் கருவைச் சிதைப்பது மற்றொன்று. முன்னதைப் பலரும் எதிர்ப்பதில்லை; ஆனால், கருச்சிதைத்தலைக் கருத்துடையோர் பலரும் எதிர்க்கின்றனர். எதனால்?

கருவில் வளரும் குழந்தையைக் கணக்கில் எடுத்துக்கொள்ளுகிறது சட்டம். ஒருவர் இறக்கும்பொழுது அவரது மனைவி கருவுற்றிருந்தால், அவர் இறந்தபின் பிறக்கும் குழந்தைக்கும் அவரது சொத்திலே பங்கு உண்டு. கருவில் உள்ள குழந்தைக்கு ஒருவர் சொத்தை எழுதிவைப்பதற்கும் சட்டம் இடமளிக்கின்றது. மரண தண்டனை விதிக்கப்பட்ட ஒரு பெண் கருவுற்றிருந்தால், பிள்ளை பிறந்த பின்னரே அந்தத் தண்டனை நிறைவேற்றப்படுகின்றது. இவ்வாறு, கருவில் வளரும் குழந்தை சட்டத்தின் கண்களுக்கு ஒரு தனி நபராகவே (legal person) காட்சியளிக்கிறது.

குழந்தை பிறந்த இரண்டு நாட்களில் அதைக் கொன்றால் கொலைக்குற்றந்தான். இதை யாரும் மறுப்பதற்கில்லை. அது பிறப்பதற்கு இரண்டு நாட்கள் முன் அதன் நிலை என்ன? உலகில் உதித்து வாழத் தகுதியோடு வளர்ச்சியடைந்து, பிறக்கவிருக்கின்றது. தாயின் கருப்பையில் இருந்து தரைக்கு இன்னும் வரவில்லை. குழந்தை பிறந்த பின்னும் தாயின் உதவியின்றி அக் குழந்தையால் வாழ முடியாது. அதுபோல் பிறப்பதற்கு முன்னும் தாயின் உடலோடு அமைந்து அது உயிர்வாழுகின்றது. அது பிறப்பதற்கு இரண்டு நாட்கள் முன்னும், பிறந்து இரண்டு நாட்கள் ஆன பின்னும் உள்ள நிலைகளிலுள்ள வேறுபாடு இது ஒன்றுதான். அதாவது, தாயின் உடலிலிருந்து தனித்து வரவில்லை என்பதுதான். எனவே, கருவில் வளரும் குழந்தைக்கும், பிறந்துவிட்ட குழந்தைக்கும் உள்ள வேறுபாடு, அறையில் உள்ள மனிதனுக்கும், அம்பலத்தில் இருக்கும் மனிதனுக்கும் உள்ள வேறுபாட்டை ஒத்ததேயாகும். இதை நினைவிற்கொண்டுதான் கருச்சிதைவைக் கடுங்குற்றமெனச் சட்டம் விதிக்கின்றது.

கருவில் வளரும் உயிர்களையும் கருத்திற்கொண்டு இயங்கும் சமுதாயமே நாகரிகமடைந்த சமுதாயமாகும். இன்றிருப்போர் எல்லோரும் நலிந்து மறைந்தபின் சமுதாயம் மறைந்துவிட வேண்டும் என்ற நோக்கோடு எந்தச் சமுதாயமும் இயங்குவதில்லை. சென்ற காலத்தின் பழுதிலாத் திறனை நினைவிற்கொண்டு 'இனி எதிர்காலத்தின் சிறப்பை' எதிர்நோக்கி முன்னேறுவதே நல்லதொரு சமுதாயமாகும். சென்ற காலத்தின் திறனை நம் முன்னோர்கள் ஆக்கினர்கள். எதிர்காலச் சிறப்பினை நம் பின்னோர்கள் ஆக்கவேண்டும். கடந்த காலத்தையும் எதிர்காலத்தையும் பிரிக்கும் கோடு எதுவும்

இல்லை. இன்றைய நிகழ்காலம் நாளை இறந்தகாலமாகிறது. இறந்த காலத்தை மாற்றுவது இயலாததுபோல், வருங்காலத்தை வரை யறுப்பதும் இயலாததேயாகும். எனவே, கருவில் உறையும் செல் வங்களை, வருங்காலக் குழந்தைகளை வருத்தி வதைத்தலைச் சட்டம் தடை செய்கின்றது; குற்றமெனக் கொள்ளுகிறது.

பெருகிச்செல்லும் மக்களினத்தைப் பிடித்து நிறுத்துவதற்கென்று கருச்சிதைவை மேற்கொள்ளல் கணக்கில்லா இடர் விளைக்கும்.

## குழந்தைகளைக் கைவிடுதல்

'ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே,
சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடனே' (புறம், 312)

என்று பெற்றோர்களின் கடமையை நம் முன்னோர்கள் உற்றபடி உணர்த்தியிருக்கின்றனர்.

பெற்ற பிள்ளைகளை வளர்ப்பது பெற்றோர்களின் கடமையாகும். அவர்களைப் பேணி வளர்க்காமல், உண்டியும் உடையும் அளிக்கா மல் விட்டுவிடுதல் சமுதாயத்திற்கெதிரான தீங்காகிறது. அதிலும், பன்னிரண்டு வயதுக்கு உட்பட்ட குழந்தைகளைக் கைவிட்டுச் செல்வதோ, ஆபத்துகளுக்கிரையாக்குவதோ அக் குழந்தைகளைக் கொன்றுவிடுவதை யொத்த செயல்களாகின்றன. ஆறு மாதக் குழந்தையைத் தெருவில் போட்டுவிட்டு அதன் தாய் சென்றுவிட் டாள் எனில், வெயிலில் கருகி உணவின்றிக் குழந்தை மடிந்துவிடும்.

## குழந்தைகளைக் கைவிடுங் குற்றம்

எனவே, பன்னிரண்டு வயதிற்குக் குறைந்த குழந்தைகளை நிலையாகக் கைவிடும் கருத்தோடு, ஓர் இடத்தில் விட்டுச் செல்லு தல் குற்றமாகும். அவ்வாறு விட்டுச் செல்பவர் குழந்தையின் தந்தையாக இருக்கலாம்; தாயாக இருக்கலாம்; அல்லது அதைக் கவனித்துக்கொள்ளும் பொறுப்புடையவராக இருக்கலாம். இவர் கள் ஏழாண்டுக் காலம்வரை சிறை, அபராதம் என்ற தண்டனைக் குள்ளாகின்றனர் (317ஆம் பிரிவு).

இவ்வாறு, விட்டுச்சென்றதால் குழந்தை இறந்து விட்டால் அது கொலைக்குற்றமாகிவிடும். அந்தக் குற்றத்திற்கும் குழந்தையை விட்டுச் சென்றவர் ஆளாகலாம்.

முறை தவறிய நடத்தையின் பயனாய்ப் பிள்ளையைப் பெறும் தாய் சமுதாயக் கண்டனத்திற்கு அஞ்சி இயல்பான தாய்ப்பாசத்தை வென்று நிற்கின்றாள். பெற்ற பிள்ளையைக் கொல்லுவதற்கு மனம் வருவதில்லை; வைத்து வளர்த்தாலோ வற்றாத பழியாகும். என்ன

செய்வாள்? எங்கோ ஓரிடத்தில் குழந்தையை விட்டுவிட்டு, பற்றிய பழிச்சின்னம் தன்னை ஒட்டாது விலக்குகிருள். இது குற்றச் செயலாகும். வினையின் விளைவை விலக்குதல் இயலாது. முறை தவறியதால் விளைந்ததை மறைப்பதற்கென்று முறை மீறிய மற்ருென் றைச் செய்தல் தகாது.

எனவே, பன்னிரண்டு வயதிற்குட்பட்ட குழந்தைகளைக் காப் பாற்றும் கடமையுடையோர், அவ்வாறு காப்பாற்ருமல், கடமையில் தவறிக் குழந்தைகளைக் கைவிடுவதைக் குற்றம் எனச் சட்டம் விதிக்கின்றது.

## குழந்தையின் பிறப்பை மறைப்பதற்கென அதன் சடலத்தை மறைத்து ஒழித்தல்

குழந்தை பிறந்ததை மறைக்கவேண்டும் என்ற கருத்தோடு அதன் உடலை ஒளித்துப் புதைத்தோ, வேறு வகையில் அதை மறைத்தோ அழித்தல் குற்றமாகும். அந்தக் குழந்தை பிறப்பதற்கு முன்னமேயே இறந்திருக்கலாம், அல்லது பிறந்த பின்னே அல்லது பிறக்கும்பொழுதேயோ இறந்திருக்கலாம். எனினும், இறந்த குழந்தை பிறந்த செய்தி பிறரறியலாகாது என்ற கருத்தோடு அக் குழந்தையின் சடலத்தை மறைத்து ஒழித்தல் குற்றமாகிறது. இதற்கு இரண்டாண்டுக் காலம்வரை சிறை, அபராதம் தண்டனை யாகும் (318ஆம் பிரிவு).

பொதுவாகக் குழந்தைகள் பிறந்தவுடன் அவற்றைக் கொல்லு வது எளிதாகும். இறந்த குழந்தை வன்முறையால் இறந்ததா, இயல் பாக இறந்ததா என்பதை அறிவதற்கு அதன் சடலமே சான்ருக இருக்கிறது; சடலத்தைச் சோதித்தால் மரணத்தின் காரணத்தைத் தெரிந்துகொள்ளலாம். வன்முறையால் இறந்தது என்று கண்டால் புலன் விசாரணை செய்து, கொன்றவர் யார் என்பதைக் கண்டு கொள்வதற்கு ஏதுவாகும். சடலமே இல்லையெனில், கொன்றவர் களின் கொலைச்செயல் எவருக்கும் தெரிவதில்லை. பொதுவாகக் கொலைச்செயலை மறைப்பதற்குச் சடலமும் மறைக்கப்படுகிறது.

மேலும், முறை தவறிய நடத்தையால் குழந்தைகளைப் பெறும் தாய்மார்கள், அக் குழந்தைகளைப் பழிச்சின்னங்களாகக் கருதி, அச் சின்னங்களை மறைப்பதிலே ஈடுபடுகின்றனர். இதற்கு முதற்படி குழந்தையைக் கொல்லுதல்; அடுத்தபடி, கொல்லப்பட்ட குழந்தை யின் சடலத்தை ஒளிவாக அழித்தல். சடலத்தை ஒளித்து ஒழித்தல் கொலைக் குற்றத்தையும் மறைக்கும் செயலாகிவிடுகின்றது. குழந்தையின் பிறப்பினைப் பிறரிடமிருந்து ஒளிக்கவேண்டும் என்ற கருத்தோடு அதன் சடலத்தை ஒளித்து அழிப்பவர், அக் குழந்தை

வாழ்வதில் அக்கறை காட்டாதவராகவே இருத்தல் வேண்டும். குழந்தையின் வாழ்வினை விரும்பாதவர் அதன் சடலத்தை மறைத்துப் புதைப்பதோ, அழிப்பதோ என்றால் அது கொலைக்குற்றத்திற்கான ஐயப்பாட்டினை எழுப்பும் செயலாகும். எனவே, குழந்தையின் பிறப்பை மறைக்கும் கருத்தோடு அதன் பிணத்தை ஒழிக்கும் செயலைக் குற்றம் எனச் சட்டம் விதிக்கின்றது.

> 'பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த
> மக்கட்பே றல்ல பிற' —(குறள்-61)

வாழ்விலே பெறத்தக்க பேறுகளனைத்திலும் சிறந்த பேறு மக்கட்பேறேயாகும். எதிர்கால சமுதாயத்தின் ஆணிவேராக இன்றைய சமுதாயத்தினரின் மக்கட்பேறு அமைகின்றது. இந்த மக்கட் பேற்றினைக் கண்ணும் கருத்துமாகக் காத்து நிற்கின்றது சட்டம்.

# 18. அவதூறு

## (Defamation)

பிறர் மதிக்க வாழ்வதையே அனைவரும் விரும்புகின்றோம்—மதிப்பைக் கெடுக்கும் செயல் 'அவதூறு' எனப்படும்—ஒருவருடைய மதிப்பைக் கெடுப்பது எவ்வாறு?—வசை சாற்றும் சாதனங்கள்—அவதூறு (Defamation) என்ற குற்றத்தின் இலக்கணம்—ஒருவர் கூறிய அவதூற்றை மீண்டும் மற்றொருவர் கூறுவது குற்றமாகும்—மறைமுக அவதூறு.

மதிப்பைக் கெடுப்பது என்றால் என்ன?—ஒருவருடைய ஒழுக்கம், அறிவு, குணம் இவைபற்றிய மதிப்பைக் குறைத்தல்—ஒருவருடைய தொழிற் பண்பு, சாதியொழுக்கம் இவைபற்றிய மதிப்பைக் குறைத்தல்—ஒருவருடைய உடல் அவமானப்படத்தக்க அல்லது அருவருக்கத்தக்க நிலையில் இருப்பதாகப் பிறர் நம்பச் செய்தல்.

இறந்தவரைக் குறித்து 'அவதூறு'—கூட்டாக இயங்குபவர்களைக் குறித்தும் அவதூறு இழைக்கப்படலாம்.

அவதூற்றில் அடங்கியுள்ளது உண்மையா, பொய்ம்மையா என்பது முக்கியமன்று—குற்றத்திற்கான மனநிலை—அவதூறான செயலின் விளைவு முக்கியமானதன்று

அவதூற்றுச் செயல்களுக்குச் சில உதாரணங்கள்:

**பிறர் குறைசாற்றுவது குற்றமாகாத் தறுவாய்கள்**

1. உண்மையான பிறர் குறையை, உற்ற பொது நன்மைக்கென உரைத்திடுதல்;

2. பொது ஊழியரின் பொதுப்பணி நடத்தையையும் குணத்தையும்பற்றி அபிப்பிராயம் தெரிவித்தல்;

3. பொதுக்காரியங்கள் சம்பந்தமான ஒருவருடைய நடத்தை, குணம் இவை குறித்து அபிப்பிராயம் தெரிவித்தல்;

4. நீதிமன்ற நடவடிக்கைகள், தீர்ப்புகள் இவைகளை வெளியிடுதல்;

5. தீர்வடைந்த வழக்கு, வழக்கில் சம்பந்தப்பட்டவர்களின் நடத்தை இவைபற்றி அபிப்பிராயம் தெரிவித்தல்;

6. அரங்கேறிய செயல் குறித்து அபிப்பிராயம் தெரிவித்தல்;

7. ஒருவர் நடத்தையை உற்ற அதிகாரம் பெற்றவர் கண்டனம் செய்தல்;

8. ஒருவரைப்பற்றி அவர்மீது அதிகாரம் உள்ளவரிடம் குற்றம் சாட்டுதல்;

9. தம் நலனேயோ, அடுத்தவர் நலனேயோ, பொது நலனேயோ காப்பதற்கெனப் பிறர் குணவியல்புபற்றிக் குறை கூறுதல்;

10. பிறர் நலனேயோ, பொது நலனேயோ காப்பதற்கென ஒருவர் குறித்து மற்றவரை எச்சரித்தல்.

அவதூற்றுச் செய்திகளை அச்சடிப்பவரும் விற்பவரும் குற்றவாளிகள்—அவதூற்றுச் செயல் தீங்காகவும் (tort) குற்றமாகவும் (crime) இருக்கிறது—அவதூற்றுக் குற்றத்திற்கும் அவதூற்றுத் தீங்கிற்கும் உள்ள வேறுபாடுகள்.

**பிறர் மதிக்க வாழ்வதையே அனைவரும் விரும்புகிறோம்**

நாம் ஒவ்வொருவரும் பிறர் மதிக்க வாழவேண்டும் என்றே விரும்புகிறோம். மனிதன் படிக்கின்றான், பட்டம் பெறுகின்றான், உழைக்கின்றான், உயர்கின்றான், செயற்கரிய செய்கின்றான், பிறர்க்குதவி நிற்கின்றான். இவை எல்லாம் எதற்காக? சமுதாயத்தில் நன்மதிப்போடு வாழவேண்டும் என்பதற்காகத்தான். பொருளை விரும்பாதவர் இருக்கலாம். ஆனால், புகழை விரும்பாதவரை நாம் காண்பது அரிது.

புகழ்பெற்று வாழவேண்டும், இகழற்று வாழவேண்டும் என்பதே நம் அனைவரின் குறிக்கோளாகும்.

'வசை ஒழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய
வாழ்வாரே வாழா தவர்' — (குறள் - 240)

இசையோடு வாழவேண்டும்; வசையொழிய வாழவேண்டும்; இதுவே வாழ்வாங்கு வாழும் வகை என்பது அறநூலின் அறிவுரை. உயிரினும் அரிதாகப் புகழைப் போற்றி வாழ்ந்தவர் சான்றோர்கள்.

'...புகழ் எனின் உயிரும் கொடுக்குவர்,
பழி எனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர்...' (புறம் 182)

எனச் சான்றோர்களின் சால்பு கூறப்படுகிறது.

ஒருவன் ஈட்டும் பொருளும் எழுப்பும் மனைகளும் கால வெள்ளத்தில் கரைந்துபோகின்றன. ஆனால், அவனை அடைந்த புகழ் அழியாத செல்வமாக நிலைத்து நிற்கிறது. எனவே, பொன்றாது நிற்கும் புகழைப் போற்றி வாழ்கின்றனர் நன்மக்கள்.

பிறர் தன்னைப்பற்றி இழிவாக நினைக்கின்றனர் என்று உணரும் மனிதன் மனவேதனையுறுகின்றான். தன் உடலிற்கு விளைக்கப் பட்ட புண்ணைப் பொறுத்துக்கொள்ளும் அவனால், தன் மதிப்பிற்கு விளைவிக்கப்படும் கேட்டைத் தாங்கமுடிவதில்லை. 'மயிர் நீப்பின் வாழாக் கவரிமான்'போல், அவமானம் வரின் உயிர் நீக்கும் உத் தமர்கள் நம்மிடையே உள்ளார்கள். எனவே, உடல் நலனையும் உடைமையையும்விட ஒருவர் இன்ப வாழ்விற்கு இன்றியமை யாதது அவருக்குள்ள தன்மானமே ஆகும்.

ஆதலால், ஒருவரது உடலையும் உடைமையையும் காக்கும் சட்டம், அவருக்குள்ள நன்மதிப்பையும் காத்து நிற்கின்றது. பிறரது உடலுக்கு ஊறு விளைவித்தலும் உடைமையை அகற்றலும் எவ்வாறு குற்றமாகிறதோ, அவ்வாறே பிறரது மதிப்பிற்கு மாசு விளைத்தலும் குற்றம் எனச் சட்டம் விதிக்கிறது.

### மதிப்பைக் கெடுக்கும் செயல் 'அவதூறு' எனப்படும்

ஒருவருடைய மதிப்பை, நற்பெயரைக் கெடுக்கும் செயலை 'அவதூறு' (defamation) என்று குறிப்பிடுகிறோம். பிறருக்கு 'அவதூறு' இழைப்பது குற்றமாகின்றது. அதற்கு இரண்டு ஆண்டு வரை சிறை அல்லது அபராதம் தண்டனையாக விதிக்கப்படலாம் (500ஆம் பிரிவு).

### ஒருவருடைய மதிப்பைக் கெடுப்பது எவ்வாறு?

ஒருவருடைய மதிப்பு என்பது எது? பிறர் அவரைப்பற்றிக் கொண்டுள்ள உயர்ந்த எண்ணமேயாகும். ஒருவர் புகழோடு வாழ்கிறார் என்று கூறினால், மக்கள் அவரைப்பற்றி உயர்வாக மதிக் கின்றனர் என்பதே பொருள். பிறர் அவரைக் குறைவாக எண்ணினால் அவருடைய புகழும் குறைகின்றது. எனவே, ஒருவரைக் குறித்துப் பிற மக்கள் என்ன நினைக்கின்றார்கள் என்ற அடிப்படையிலேயே அவரது மதிப்பு, நற்பெயர் அமைகிறது.

ஆதலால், ஒருவருடைய மதிப்பைக் கெடுப்பது என்பது, அவருடைய உடலுக்கோ, உடைமைகளுக்கோ ஊறு விளைவிப்பதால் ஆவதில்லை. மற்றவர்களின் மனத்திலே இவரைக் குறித்து உள்ள நல்லெண்ணத்தை மாற்றுவதன் வாயிலாகவே அது முடியும். ஒருவரைப்பற்றிப் பிறர் இழிவாக எண்ணுவதால்தான் அவருக்கு மதிப்பிழப்பு ஏற்படுகிறது. எனவே, அவரைப்பற்றிப் பிற மக்கள் குறைவாக, இழிவாக எண்ணும்படி செய்தல் வேண்டும். அதை எவ்வாறு செய்வது? அவர்மீது குறை சாட்டவேண்டும், வசை ஏற்றவேண்டும். இவ்வாறு கூறப்படும் குறையும் குற்றமும் மற்றவர்கள் அறியும்படி சாற்றல் வேண்டும். அப்பொழுதுதான் மற்றவர்களின் மனத்தில் அவரைப்பற்றியுள்ள மதிப்புக் குறைகிறது.

எனவே, ஒருவரைப்பற்றிப் பிறர் மனத்தில் இழிவு எண்ணம் தோன்றச் செய்யவேண்டும் என்றால், அவர்மீது வசை சாட்டி (imputation) அதைப் பிறர் அறியவும் செய்தல் வேண்டும். இராமனது புகழைக் கெடுக்கக் கண்ணன் என்பவர் முற்படுகின்றார் எனில், இராமன்மீது அவர் சாட்டும் குறைகளை யெல்லாம் தம் மனத்திலேயே கண்ணன் வைத்திருப்பதால் பயன் ஏற்படுவதில்லை. அக் குறைகளை மற்றவர் அறியும்படி வெளியிடுதல் வேண்டும். வசை சாட்டுவதால் (imputation) மட்டும் பயனில்லை; அதைச் சாற்றவும், பலர் அறிய வெளியிடவும் வேண்டும். இந்த வெளியிடுதல் (publication) இல்லையெனில், பிறர் மனத்தில் இராமனைக் குறித்துள்ள மதிப்பைக் குறைப்பது இயலாது. எனவே, ஒருவரது மதிப்பைக் கெடுக்கவேண்டும் எனில், அவரைக் குறித்து வசை (குறை) சாற்றுதல் (publication of imputation) வேண்டும். ஒருவரைப்பற்றி வசை சாற்றுவதாலேயே அவருக்கு மதிப்பிழப்பு ஏற்படுகிறது.

**வசை சாற்றும் சாதனங்கள்**

பிறரிடம் பேசுவதன்மூலம் ஒருவர்பற்றிய குறைகளை வெளியிடலாம். அதை எழுதிப் பிறர் அறியும்படி செய்யலாம். மற்றவரின் குறையைப் புலப்படுத்தும் வகையில் வரைந்த சித்திரங்களையோ, வனைந்த உருவங்களையோ பிறர் பார்க்கும்படி வைக்கலாம். பிற அறிகுறிகளாலோ சைகைகளாலோ அதைப் பிறருக்குத் தெரிவிக்கலாம். இவ்வாறு, பிறரிடம் பேசுவது, பிறருக்கு எழுதுவது, பிறர் பார்த்து அறிந்துகொள்ளும் வகையில் சைகை காட்டுவது, காட்சிப் பொருளாக வைப்பது இவையெல்லாம் ஒன்றைப் பிறருக்கு அறிவிக்கும், வெளியிடும் சாதனங்கள் ஆகின்றன; சாட்டும் குறைகளைச் சாற்றும் சாதனங்கள் ஆகின்றன.

இந்த வழிகளில் ஏதாவது ஒன்றைக் கையாண்டு ஒருவருடைய நன்மதிப்பை வேண்டுமென்றே கெடுக்க முற்படுவது குற்றமான

செயல் ஆகின்றது. பிறர் மதிப்பைக் குறைக்கவென அவர்மீது வசை சாற்றல், 'அவதூறு'க் குற்றமாம்.

**அவதூறு (Defamation) என்ற குற்றத்தின் இலக்கணம்**

மேலே கண்ட கூறுகளையெல்லாம் புலப்படுத்தும் வகையில் 'அவதூறு' (defamation) என்ற குற்றத்திற்கான இலக்கணத்தை 499ஆம் பிரிவில் காணுகிறோம்.

ஒருவரது நன்மதிப்பைக் கெடுக்கவேண்டும் என்ற கருத்தோடு (அல்லது அவரது நன்மதிப்புக் கெட்டுவிடலாம் என்பதைத் தெரிந்தே),

பேச்சு, எழுத்து, சைகை, அறிகுறி, காட்சிப் பொருள் இவைகளில் ஏதாவது ஒன்றின் வழி,

அவர்மீது குறை சாட்டிப் பிறரறிய வெளியிடுதல் (வசைசாற்றுதல்) அவதூறு (defamation) என்ற குற்றம் ஆகிறது.

எனவே, ஒருவர்மீது வசை கூறிப் பேசுவதுதான் குற்றம் என்பதில்லை; எழுதுவதும் குற்றம்தான். அவர்மீது வசை சாற்றும் வகையில் சித்திரம் வரைதலும், உருவம் அமைத்தலும், சைகைகள் காட்டலும் குற்றமேயாகும்.

**ஒருவர் கூறிய அவதூற்றை மீண்டும் மற்றொருவர் கூறுவது குற்றமேயாகும்**

ஒருவரது மதிப்புக் கெடுமாறு பலர் அறியக் குறைகூறுபவர் ஒருவராக இருக்கலாம். அதை மீண்டும் மற்றொருவர் பிரசுரித்தால், அவ்வாறு செய்வதும் குற்றமாகும். முதலில் குறை சாற்றுபவரும் குற்றவாளியாகின்றார்; அதை மீண்டும் வெளியிடுபவரும் (publisher) குற்றவாளியாகின்றார். எனவே, ஒருவர் வெளியிட்ட அவதூற்றையே மீண்டும் மற்றொருவர் வெளியிடுவதும் குற்றமாகிறது.

ஒருவர்மீது வசை கூறி எழுதி அதைப் பிறர் அறியாத முறையில் அவருக்கே அனுப்பிவைப்பது குற்றமாவதில்லை. மூன்றாவது மனிதருக்குத் தெரியவில்லையெனில் மதிப்பிழப்பு நேருவதற்கே வழியில்லை. எனவே, அது அவதூறுக் குற்றம் ஆகாது.

**மறைமுக அவதூறு**

சில வேலைகளில், அவதூறான செயல் வெளிப்படையாக ஒருவரை இழிவுபடுத்தாமல் இருப்பதுண்டு. ஆனால், அதிலுள்ள அவதூறு உள்ளடங்கியிருக்கும்.

ஒரு பாங்கியில் பொறுப்பான வேலையிலுள்ள ஒருவரைப்பற்றி 'இவர் பணத்தைக் கையாடல் செய்யமாட்டார்' என்று ஓர் அட்டையில் எழுதிப் பலரும் படிக்கும்படி வைக்கப்படுகிறது. அந்த அட்டையைப் படிப்பவர்கள் என்ன நினைப்பார்கள்? 'அவர் கையாடல் செய்பவர் போலும்' என்றுதான் கருத இடமுண்டு. எனவே, அவ்வாறு அட்டையில் எழுதிவைப்பவர் குற்றத்திற்கு ஆளாகின்றார்.

எவருக்கும் ஈயாத ஓர் உலோபியைக் குறித்து, 'அவர் கொடையில் கர்ணன்' என்று கூறினால், இதைக் கேட்பவர்களின் மனத்தில் அவரது உலோபத்தனந்தான் மீண்டும் நினைவுபடுத்தப் படுகிறது. இவ்வாறு, வஞ்சப் புகழ்ச்சியாகவும் அவதூறு இழைக்கப் படலாம்.

எனவே, ஒருவருக்கு அவதூறு விளைவிக்க வேண்டும் என்ற கருத்துடன் நேரடியாக இன்றி மறைமுகமாக அதைச் செய்தாலும், அது குற்றமேயாகும்.

**'மதிப்பைக் கெடுப்பது' என்றால் என்ன?**

(a) ஒருவருடைய ஒழுக்கம், அறிவு, குணம் இவைபற்றிய **மதிப்பைக் குறைத்தல்** (Lowering the moral or intellectual character or character of a person in the estimation of others)

ஒழுக்கம், அறிவாற்றல், பண்புடைமை இவையே ஒருவருக்கு நன்மதிப்பைத் தருகின்றன. 'ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை', 'அறிவுடையார் எல்லாம் உடையர்', 'பண்புடையார்ப் பட்டுண்டு உலகம்' என்பன பொய்யா மொழிகள். ஒருவருடைய ஒழுக்கமும், அறிவும், பண்புமே அவருடைய புகழுக்கு அடிப்படையாக அமைகின்றன. ஒழுக்கத்தில் உயர்ந்தோரை, அறிவாற்றலில் மிகுந்தோரை, பண்பிலே சிறந்தோரை உலகம் மதிக்கின்றது; போற்றுகின்றது. 'இழுக்கத்தின் எய்துவர் எய்தாப் பழி', 'அறிவிலார் என்னுடையரேனும் இலர்', 'மரம் போல்வர் மக்கட் பண்பு இல்லாதவர்' என்று இந்த நற்சீலங்கள் இல்லாதவர்கள்மீது வசை கூறப்படுகின்றது அறநூலில். எனவே, ஒருவருடைய ஒழுக்கம் (moral character), அறிவாற்றல் (intellectual character), குணம் (character) இவைகளில் ஒன்றைக் குறித்து அவர்மீது பிறருக்கு உள்ள மதிப்புக் குறைந்தால், அது அவருடைய நற்பெயருக்குக் கேடு விளைவதாகும்; இகழ்வு தருவதாகும்.

(b) ஒருவருடைய தொழிற்பண்பு, சாதியொழுக்கம் இவை பற்றிய **மதிப்பைக் குறைத்தல்** (Lowering the character of a person in respect of his caste or calling).

இது தவிர, தமது தொழிலைக் குறித்தும் ஒருவருக்குப் புகழ் ஏற்படுவதுண்டு. அந்தந்தத் தொழிலுக்கேற்ற பண்புகள் ஒருவரிடம் இருந்தால்தான் அவர் தொழிலில் முன்னேற்றம் காணலாம்; பிறர் மதிப்பையும் பெறலாம். பெயர்பெற்ற வைத்தியராக ஆவதற்கு வைத்தியத் தொழிலில் நல்ல பயிற்சி, மக்கள்மீது அன்பு, பொறுமை, இன்னும் பல பண்புகள் இருக்கவேண்டும். 'தம்மிடம் வந்த நோயாளிகளின் உயிரைக் காப்பாற்றவேண்டும் என்ற ஆர்வம் அவருக்கு இல்லை' என்று ஒரு வைத்தியரைப்பற்றி வசை கூறினால், அது அவருடைய தொழிற் பண்பைப்பற்றிக் குறை கூறுவதாகும்; தொழில்துறைபற்றி அவர்மீது பிறர் கொண்டுள்ள மதிப்பைக் குறைப்பதாகும். இதனால் ஒருவருடைய நற்பெயர் கெடுகின்றது.

சாதிப் பிரிவுகள் தலைதூக்கி நிற்கும் சமுதாயத்தில், ஒருவருடைய சாதியொழுக்கத்தைப் பொறுத்துக் குறையாகப் பிறர் எண்ணினால், அதுவும் அவருடைய நற்பெயரைக் கெடுப்பதாகின்றது. புலால் உண்ணும் பழக்கத்தை விலக்குகின்ற சாதியிற் பிறந்த ஒருவரைப்பற்றி அவர் 'புலால் உண்ணுகிறார்' என்று வெளியிட்டால், அதனால் அந்தச் சாதியாரிடம் அவருக்குள்ள மதிப்புக் குறைகின்றது.

(c) ஒருவருடைய **நாணயத்தையும் பெறுமானத்தையும் பற்றிய மதிப்பைக் குறைத்தல்**

வணிகத் துறையில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு அவர்களுடைய நாணயம், பெறுமானம் (credit) இவை குறித்துள்ள மதிப்பு முக்கியமானதாகும். ஒருவர் நாணயம் இல்லாதவர், பெறுமானம் குறைந்தவர் என்று பிறர் எண்ணினால், அது அவருடைய தொழிலை பாதிக்கின்றது; அவருடைய மதிப்பைக் குறைக்கின்றது. ஒருவர் 'இன்சால்வென்ட்' (insolvent) ஆகிவிட்டார், கடனிறுக்கும் சக்தி இல்லாதவர் ஆகிவிட்டார் என்று கூறினால், அது அவருடைய மதிப்பைக் கெடுப்பதாகும்.

(d) ஒருவருடைய **உடல் அவமானப்படத்தக்க அல்லது அருவருக்கத்தக்க நிலையில் இருப்பதாகப் பிறர் நம்பச் செய்தல்.**

ஒருவர் தொழுநோய் பிடித்தவர் என்று பிறருக்குத் தெரிந்தால், அவரிடமிருந்து அருவருப்பால் பிறர் விலகியிருக்கவே விரும்புவார்கள். ஒழுக்கக்கேட்டினால் வரும் மேகநோய்களால் ஒருவர் பீடிக்கப்பட்டிருக்கிறார் என்றால், அது அவர் அவமானப்படத்தக்கதாகும். எனவே, அவமானம், அருவருப்பு இவைகளைத் தோற்றுவிக்கும் உடல்நோயால் ஒருவர் வாடுகின்றார் என்று கூறுவது அவருக்கு இகழ்வைத் தருவதாகும்.

மேலே கண்ட கருத்துகள் அனைத்தும் அடங்கும் வகையில் 'ஒருவரின் நன்மதிப்பைக் கெடுத்தல்' (harming a person's reputation) என்றால் என்ன என்பது பற்றிச் சட்டத்தில் (499ஆம் பிரிவு 4ஆம் விளக்கம்) விளக்கம் தரப்பட்டிருக்கிறது.

ஒருவருடைய ஒழுக்கம், அறிவாற்றல், பண்பாடு (சீலம்), நாணயம், செல்வநிலை, தொழிற் பண்பு, சாதியொழுக்கம் இவைகளில் ஒன்றைக் குறித்து ஒருவர்மீது பிறருக்குள்ள மதிப்புக் குறையும் வகையில் குறை சாட்டுவது அவருடைய நன்மதிப்பைக் கெடுப்பதாகும்.

மேலும், ஒருவர் அவமானப்படத்தக்க அல்லது அருவருக்கத்தக்க உடல்நிலை உள்ளவராக இருக்கின்றார் எனப் பிறர் நம்பும்படி செய்வதும் அவருடைய மதிப்பிற்குத் தீங்கு விளைவிப்பதாகும்.

இவையன்றி வேறு வகையில் கூறப்படும் குறைபாடுகள் ஒருவரின் மதிப்பைக் கெடுப்பனவாகக் கொள்ளப்படுவதில்லை.

இவ்வாறு ஒருவருடைய மதிப்பிற்குக் கேடு, அவதூறு எப்படியெல்லாம் விளைவிக்கப்படலாம் என்பதைச் சட்டம் விளக்குகிறது.

**இறந்தவரைக் குறித்த 'அவதூறு'**

ஒருவருடைய புகழ் அவர் இறந்த பின்னும் நிலைத்து நிற்பது எனக் கண்டோம். எனவே, இறந்த ஒருவரைப்பற்றியும் அவதூறு இழைத்தல் கூடாது. ஒருவர் உயிரோடு இருந்தால் எந்தெந்தச் செயல்கள் அவரைக் குறித்த 'அவதூறு' எனக் கருதப்படுகின்றனவோ அச் செயல்கள் அவர் இறந்தபின் செய்யப்பட்டாலும் 'அவதூறு' ஆகின்றன. இறந்தவரின் குடும்பத்தினர் அல்லது நெருங்கிய உறவினர் உணர்ச்சியைப் புண்படுத்தும் கருத்துடன், இறந்தவரைக் குறித்து 'அவதூறு' இழைப்பவர் அக் குற்றத்திற்கு ஆளாகின்றார்.

**கூட்டாக இயங்குபவர்களைக் குறித்தும் அவதூறு இழைக்கப்படலாம்**

தனி மனிதர்களைப்பற்றி மட்டும்தான் அவதூறு இழைக்க முடியும் என்பதல்ல. ஒரு கம்பெனி (company), சங்கம் (association), கூடி இயங்குபவர்கள் (collection of persons) இவர்கள் குறித்தும் இக் குற்றம் இழைக்கப்படலாம். ஒரு வணிகக் கம்பெனியின் செல்வநிலை (credit) சரியானபடி இல்லை என்று கூறுவது அந்தக் கம்பெனிக்கு எதிரான அவதூறு ஆகும். குறிப்பிட்ட சிலர் சேர்ந்து ஒரு சங்கம் வைத்து நடத்துகிறார்கள் என வைப்போம். 'அந்தச் சங்கத்தில் சேர்ந்தவர்கள் எல்லாம் அயோக்கியர்கள்' என்று கூறினால், அது அச் சங்கத்தில் சேர்ந்திருப்பவர்கள் எல்லோரையும் குறிப்பதேயாகும். எனவே, அது குற்றமாகிறது.

அவதூறு, குறிப்பிட்ட ஒருவரையோ அல்லது குறிப்பிட்ட பலரையோ குறிப்பதாக இருத்தல் வேண்டும். பொதுவாக, எவரைக் குறிப்பது என்று தெளிவில்லாத அவதூறு குற்றமாவதில்லை. 'வழக்கறிஞர்கள் பொய் பேசுபவர்கள்' என்ருல், அது எந்த வழக்கறிஞரையும் குறிப்பிட்டுக் கூறுவதாகாது. எனவே, அவ்வாறு கூறியவர்மீது வழக்கிட முடியாது.

'அவதூறு' என்ற குற்றம்பற்றி நாம் இதுவரை ஆராய்ந்ததிலிருந்து விளங்கும் மூன்று கூறுகளை நாம் மனத்திற் கொள்ள வேண்டும்.

**(i) அவதூற்றில் அடங்கியுள்ளது உண்மையா, பொய்ம்மையா என்பது முக்கியமன்று.**

அவதூருகக் கூறப்பட்ட செய்தி உண்மையானதாகவே இருக்கலாம். அவதூற்றில் அடங்கியுள்ளது உண்மையா பொய்யா என்பது முக்கியமானதன்று. 'அவதூறு' என்ற குற்றத்திற்கான இலக்கணத்தில் அவதூருன செயலில் உள்ள செய்தி பொய்யானதாக இருந்தால் தான் குற்றமாகிறது என்று கூறப்பெறவில்லை. ஆதலால், அச் செய்தி உண்மையானதாக இருந்தாலும் குற்றமேயாகும் என்பதை நாம் கருத்திற் கொள்ளவேண்டும். எனவே, அவதூருன செயலைச் செய்தவர் 'நான் கூறியது உண்மைதான்' என்று சொல்லிக் குற்றத்திலிருந்து தப்புவது முடியாது.

**(ii) குற்றத்திற்கான மனநிலை**

அவதூறு இழைத்ததாகக் குற்றம் சாட்டப்பட்டவரின் கருத்து என்ன, மனநிலை என்ன என்பதையே நீதிமன்றம் ஆராய்கின்றது. பிறரது மதிப்பைக் குறைக்கவேண்டும் என்று கருதி அவதூருன செயலைச் செய்தல் குற்றமாகிறது. சில வேளைகளில் இந்தக் கருத்து இன்றியும் அவதூறு இழைக்கப்படலாம். ஒருவரைக் குறித்து, 'அவர் திருடர்' என்று பலர் அறியக் கூறிஞல், அதஞல் அவரது மதிப்புக் குறையத்தான் செய்யும். அவ்வாறு கூறியவர், 'நான் அவரது மதிப்புக் குறையவேண்டும் என்று கருதவில்லை' என்று சொல்லுவதில் பயனில்லை. ஒவ்வொருவரும் தங்கள் செயலில் இயல்பான விளைவுகளைத் தெரிந்திருக்கிருர்கள் என்றே சட்டம் கருதுகின்றது. ஆதலால், ஒரு செயலிஞல் ஒருவருடைய மதிப்புக் குறையலாம் என்பது தெரிந்தும் அச் செயலைச் செய்தல் அவதூறேயாகும்.

எனவே, பிறரது மதிப்புக்குக் கேடு விளைவிக்கும் செயலைச் செய்தவர், அவ்வாறு கேடு விளைவிக்கவேண்டும் என்று கருதியே அதைச் செய்தாரா அல்லது அவ்வாறு கேடு விளையலாம் என்பதைத் தெரிந்தும் அவ்வாறு செய்தாரா என்பதுதான் நீதி மன்றத்தில்

ஆராயப்படும். பிறருடைய மதிப்பிற்குக் கேடு விளைவிக்கவேண்டும் என்ற கருத்துக் கொண்டிருத்தல் அல்லது பிறருடைய மதிப்பிற்குக் கேடு விளையும் என்பதைத் தெரிந்துகொண்டிருத்தல்—இதுவே இக் குற்றத்திற்கான மனநிலை (mens rea) ஆகும்.

**(ii) அவதூருன செயலின் விளைவு முக்கியமானதன்று**

அவதூருன செயலால் பிறருடைய மதிப்புக் குறைந்திருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை.

புகழ்பெற்ற ஒருவருடைய ஒழுக்கம்பற்றி எல்லோருமே நன்கு அறிந்திருக்கலாம். ஆதலால், 'அவர் நல்ல ஒழுக்கம் இல்லாதவர்' என்று ஒருவர் பிறரிடம் கூறினுலும் அதனுல் பலன் ஏதும் இல்லாமற் போகலாம். அதாவது, அதைக் கேட்டவர்கள் எவர் மனத்திலும் அவதூற்றுக்கு ஆளானவர்மீதுள்ள மதிப்பு ஒருசிறிதும் குறையாது இருக்கலாம். இவ்வாறு இருந்தாலும், அவதூருன செயலைச் செய்தவர் குற்றவாளிதான். 'நான் இழைத்த அவதூற்ருல் அதற்கு ஆளானவரின் மதிப்புதான் குறையவில்லையே' என்று கூறி, அவதூறு இழைத்தவர் தம் குற்றப் பொறுப்பை விலக்கிக்கொள்ள முடியாது.

எனவே, அவதூருன செயலில் அடங்கியுள்ளது உண்மையா பொய்யா என்பதும், அச் செயலால் அதற்கு ஆளானவரின் மதிப்புக் குறைந்ததா இல்லையா என்பதும் 'அவதூறு' என்ற குற்றத்தின் கூறுகளுக்குச் சம்பந்தம் இல்லாதவை; அவதூறு இழைத்தவரின் மனநிலை என்ன என்பதே முக்கியமானதாகும்.

**அவதூறுச் செயல்களுக்குச் சில உதாரணங்கள்**

ஒருவரைப்பற்றி, 'அவர் தண்டிக்கத்தக்க குற்றம் செய்தவர்' என்று கூறுவது அவரது மதிப்பைக் குறைப்பதாகும். எனவே, அது குற்றமாகிறது. 'கொலை செய்தவர்', 'திருடியவர்', 'கொள்ளை அடித்தவர்', 'பொய்ச் சாட்சி கூறியவர்', 'பிறரை ஏமாற்றியவர்', 'கைக்கூலி வாங்கியவர்', 'தண்டிக்கப்பட்டவர்' என்று ஒருவரைக் குறித்துக் குறைசாற்றல் அவதூறு ஆகின்றது என்று தீர்ப்புகள் உள்ளன. ஒரு வணிகரைக் குறித்து, 'அவர் கள்ளச் சந்தை வியாபாரி' (black-marketeer) என்று கூறுவது குற்றமாகும்.

வைத்தியர், பொறியியலர், வழக்கறிஞர் இவர்கள்போன்ற தொழிலில் ஈடுபட்டிருப்போரின் திறமையையும் தகுதியையும் குறைத்துக் கூறுவதும் அவதூறுதான். ஒரு வழக்கறிஞரைக் குறித்து, அவர் 'மூளையில்லாதவர்' என்ருே, 'கட்சிக்காரரை ஏமாற்றுபவர்' என்ருே கூறுவது அவதூறு. 'வைத்தியரின் கவனக்குறைவால் நோயாளி இறந்துவிட்டார்' என்று கூறினுல், அது வைத்தியரின்

தொழில் திறமையைக் குறைப்பதாகும். ஒரு சமய போதகரைப் பற்றி 'அவர் நல்லொழுக்கம் இல்லாதவர்' என்பதும் அவதூறுதான்.

பெண்ணின் பெருமை அவளது கற்பு ஆதலால், 'அவள் கற்பிழந்தவள்' என்று கூறுவது குற்றம்.

ஒரு குறிப்பிட்ட பெண்ணிற்குக் குழந்தை பிறந்திருப்பதாகச் செய்தி ஒன்றைப் பத்திரிகை வெளியிட்டது. ஆனால், அந்தப் பெண்ணிற்கு அதற்கு ஒரு மாதத்திற்குமுன்தான் திருமணம் நடந்தது. எனவே, இது அப் பெண்ணின் கற்புக்குக் களங்கம் விளைப்பது என்றும், குற்றம் என்றும் தீர்ப்பளிக்கப்பட்டது.

பிளேக், அம்மை போன்ற தொற்றுநோயால் ஒருவர் பீடிக்கப்பட்டிருக்கிறார் என்பதும் குற்றம்தான்.

இதுவரை 'அவதூறு' என்றால் என்ன என்பதுபற்றியும், அதன் பொது இலக்கணம்பற்றியும் கண்டோம்.

## பிறர் குறைசாற்றுவது குற்றமாகாத் தறுவாய்கள்

ஒருவருடைய நன்மதிப்பைக் கெடுக்கும் கருத்துடன் அவர் குறித்துக் குறைசாற்றுவது குற்றமாகும் என்று கண்டோம். ஆனால், சில வேளைகளில் பிறரிடம் உள்ள குறைகள்பற்றிக் கூறாமல், பிறர் மீது குற்றம் சாட்டாமல் இருக்க முடிவதில்லை; அவ்வாறு குறை கூறுவது இன்றியமையாததாகின்றது.

மாணவன் படிக்காத குறையை ஆசிரியர் கூறுகின்றார்; பிள்ளைகளின் குற்றங்குறைகளைப் பெற்றோர்கள் கூறுகின்றனர். பொதுவாழ்வில் சம்பந்தப்பட்டவர்களின் தகுதிபற்றிப் பலரும் அறிய விவாதிக்கவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. எனவே, பிறர்மேல் குற்றங்குறைகளைச் சாட்டுவது எந்தச் சூழ்நிலையிலும் குற்றமேயாகும் என்று சட்டம் இருந்தால், அதனால் சமுதாய வாழ்விற்கு நன்மையை விடத் தீமையே விளையும். தன்னைப்பற்றிப் பிறர் கொள்ளும் மதிப்பைப் பேணி நடக்கும் மனிதன், அந்த மதிப்பை நிலைநிறுத்திக் கொள்ளும் வகையில் நடக்கவும் வேண்டும். தனது தகாத நடத்தையால் மதிப்பை இழக்க நேரலாம் என்ற அச்சம் அவன் மனத்தில் இருந்தால்தான் அவன் நேர்மை வழி நடப்பது நிலைபெற்று இருக்கும். எனவே, சில தறுவாய்களில் பிறர்பற்றிக் குற்றமோ, குறையோ கூறுவதைச் சட்டம் தடுப்பது இல்லை. அவ்வாறு கூறுவது 'அவதூறு' என்ற குற்றமும் ஆவதில்லை.

பிறர் குறை சாற்றுவது குற்றமாகாச் சூழ்நிலைகள் எவை என்று காண்போம்:

### (1) உண்மையான பிறர் குறையை, உற்ற பொது நன்மைக்கென உரைத்திடுதல் குற்றமன்று

ஒருவருடைய மதிப்பைக் கெடுக்கும் குற்றச்சாட்டில் அடங்கியது உண்மையாகவே இருந்தாலும், அது அவதூறேயாகும் எனக் கூறப் பட்டது. ஆனல், அவ்வாறு குறையைக் கூறியது பொதுநலனுக்கு என்று செய்யப்பட்டிருந்தால் அது அவதூறு ஆவதில்லை.

ஒருவருக்குக் குட்டநோய் இருக்கின்றது. இதையறியும் பிறர் அவரிடமிருந்து விலகியிருக்கவே விரும்புவார்கள். எனவே, அவர் ஒதுங்கித் தம்முடைய கிராமத்தில் வசிக்கின்ருர். இந் நிலையில், அவர் தொழுநோய் உடையவர் என்று கூறி வெளியிடுதல் குற்றமே யாகும். ஏனெனில், பிறர் அவர் உடல்நிலைபற்றி அருவருப்புக் கொள்ளுகின்றனர். கூறிய குறைபாடு உண்மையானதுதான்; இருந் தாலும், அது அவதூறேயாகும்.

கூறுவது உண்மையாக இருப்பதால்மட்டும் அது வாய்மையாகி விடுவதில்லை. அது எவருக்கும் தீமை பயக்காது இருத்தலும் வேண்டும். அப்பொழுதுதான் அது 'வாய்மை' ஆகின்றது:

> 'வாய்மை எனப்படுவது யாதெனில் யாதொன்றும்
> தீமை இலாத சொலல்' (குறள் 291)

ஒருவர் நோயால் வருந்துவது உண்மையாக இருந்தாலும் அதைப் பிறரறியக் கூறியதால் விளைந்த பயன் என்ன? நோயாளிக்கு ஏற்பட்ட மதிப்புக்கேடு, மனவருத்தம் இவைதாம். உண்மையே கூறப்பட்டாலும் நோயாளியின் மதிப்புக்குத் தீமை விளைந்ததால், வேறு நன்மை ஏதும் விளையாததால், அந்த உண்மைக் கூற்று வாய்மையாவதில்லை; அவதூறு என்ற குற்றமே ஆகின்றது.

ஆனல், இந்த உண்மைக் கூற்றும் பொதுநலனுக்கு (public good) உகந்தது என்ருல், அதைச் சட்டம் குற்றமாகக் கொள்ளுவ தில்லை.

மேலே கண்ட உதாரணத்தில், தொழுநோய் உடையவர் ஒரு பொது வைத்தியசாலையில் வைத்தியத் தொழில் பார்த்துக்கொண் டிருக்கிருர் என வைப்போம். இவ்வாறு பிறருக்கு வைத்தியம் செய்பவரே தொழு நோய் உடையவராய் இருந்தால் அது மக்களுக்குக் கேடு பயப்பதாகும். பொது நன்மை குறித்து அவரை அந்தப் பதவியிலிருந்து அகற்றுவது அவசியமாகிறது. இந்தப் பொது நன்மைக்கென அந்த வைத்தியரின் தொழுநோய் பற்றி வெளியிட்டால், அது குற்றம் ஆவதில்லை.

'பொய்ம்மையும் வாய்மை யிடத்த, புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்' (குறள் 292)

என்கிறார் வள்ளுவர். 'புரைதீர்ந்த நன்மை பயக்கும்' பொய்ம்மையே வாய்மையாகும்பொழுது, பொது நன்மைக்கு வேண்டிய உண்மைக் கூற்றை நாம் எவ்வாறு குற்றம் எனக் கொள்ளுதல் தகும்?

எனவே, குற்றச்சாட்டு உண்மையாக இருந்து அது பொது நன்மையைக் கருதிச் செய்யப்பட்டால் அவதூறு ஆவதில்லை.

பொது நன்மை ஏதுமின்றித் தனி நபரின் குறை சாற்றுவது குற்றமேயாகும்.

தனிமனிதர் ஒருவரின் நடத்தையையோ, தகுதியையோ குறித்து அவரைக் கேவலப்படுத்தும் வகையில் உண்மையான செய்தியையே வெளியிட்டாலும், அதனால் விளையும் பயன் என்ன?' அவருக்கு ஏற்படும் மனவேதனை ஒன்றுதான் பயனாகும். ஒருவர் மற்றொரு பெண்ணை ஆசைநாயகியாக வைத்துக்கொண்டிருக்கிறார் என்றோ, அவர் குடிகாரர் என்றோ, பார்ப்பதற்கு அவர் விகாரமாக இருக்கிறார் என்றோ வெளியிடுவதால் பொதுநலனுக்கு எந்தவிதப் பயனும் இல்லை. ஆதலால், இவ்வாறான செய்திகளை அவை உண்மையாயிருப்பினும் வெளியிடுவது குற்றமாகும் என்பதை நாம் உணரவேண்டும்.

நம் நாட்டில் ஒன்றிரண்டு செய்திப் பத்திரிகைகள் இவ்வாறு தனி நபர்களைப்பற்றிய அவதூறுகளைப் பரப்புவதிலேயே முனைந்திருக்கின்றன. பிறர் பழி காண்பதிலே நம்மில் சிலருக்கு ஒருவகைத் திருப்தி. எனவே, அப் பத்திரிகைகளும் விலையாகின்றன. எவருடைய மதிப்பைக் குறைக்கும் செய்திகள் பிரசுரிக்கப்பட்டனவோ, அவரும் வாளா இருந்துவிடுகின்றார். அவ்வாறு பிரசுரம் செய்வது 'அவதூறு'க் குற்றமேயாகும்; வெளியிடப்பட்ட செய்திகள் ஒருவேளை உண்மையாகவே இருந்தாலுங்கூட, அந்த வெளியீட்டால் பொது நலன் ஏதும் இல்லையாதலால் அந்தப் பத்திரிகை ஆசிரியரும் பிரசுரம் செய்பவரும் குற்றவாளிகள் ஆவார்கள்.

பிறர் மதிப்பைக் கெடுக்கும் வதந்திகளையெல்லாம் பத்திரிகைகளில் பிரசுரிப்பதும் குற்றமேயாகும். 'பொது நலனுக்கென்று பிரசுரிக்கப்பட்டது' என்ற வாதம் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. அதை விசாரித்து உண்மை என்று தெரிந்தபின் அது பொது நலனுக்கு உகந்ததா என்பதையும் ஆராய்ந்து, அதன் பின்னர்ப் பிரசுரித்தலே பொறுப்புள்ள பத்திரிகை ஆசிரியர்களின் கடமையாகும்.

**சாட்டப்பெற்ற குறை முழுவதும் உண்மையானதாக இருத்தல் வேண்டும்**

சாட்டப்பட்ட குறை முழுவதும் உண்மையானதாக இருக்க வேண்டும். ஒருமுறைமட்டும் தண்டனை பெற்றுச் சிறை சென்றவரைக் குறித்து 'வழக்கமாகச் சிறை சென்றவர்' என்று கூறினால், அது உண்மைக்கு மாறானதேயாகும். அளவிற்கு அதிகமான வேகத்தில் காரை ஓட்டி அதற்காகத் தண்டனை பெற்றவரைக் குறித்து, 'அவர் திருடிய குற்றத்திற்காகத் தண்டனை பெற்றவர்' என்று கூறினால், அதுவும் உண்மைக்கு மாறான வசைச்சாட்டாகும். 'தண்டனைதான் பெற்றிருந்தாரே? அது எதற்காக இருந்தால் என்ன? எனவே, அக்கூற்று உண்மையானதுதான் என்று சொன்னால் அது பொருந்தாது. சாட்டப்பட்ட குறை உண்மையானதாகவேண்டுமெனில் அது முழு அளவிலும் உண்மையானதாக இருத்தல் வேண்டும்.

ஒருவரைப்பற்றிய குறையைப் பிறர் சொல்லக் கேட்டு, மற்றொருவர் அதை மீண்டும் வெளியிடலாம்; இரண்டாவதாக வெளியிட்டவர் தாம் வெளியிட்ட செய்தி உண்மையானது என்று காட்ட வேண்டும். 'நாம் மற்றவர்களிடமிருந்து கேட்ட வதந்தியின் அடிப்படையில் கூறினேன்' என்று அவர் சொல்லிவிட்டால்மட்டும் போதாது. பிறர் குறையைக் கூறுபவர் அதை அவராகவே முதலாவதாகக் கூறினாரா அல்லது மற்றவர்கள் முன்னரே வெளியிட்டதைக் கேட்டுக் கூறினாரா என்பது முக்கியமன்று. அவர் கூற்றில் அடங்கியது உண்மையானதா என்பதுதான் முக்கியமானதாகும்.

குறை சாற்றியது பொது நன்மைக்கு உகந்ததா என்பதை அந்தந்தச் சூழ்நிலைகளிலிருந்துதான் தீர்மானிக்க வேண்டும். 'பொது நன்மை' (public good) இதுதான் என்று வரையறுத்துக் காட்டுவதற்கில்லை.

பொது ஊழியர் (public servant) ஒருவர் கைக்கூலி வாங்கினார் என்று வெளியிட்டால் அது பொது நன்மைக்கு உகந்ததுதான். ஆனால், கூறப்படும் குற்றச்சாட்டு உண்மையென்று மெய்ப்பிக்கப்படுதல் வேண்டும். அப்பொழுது அது குற்றமாவதில்லை.

எனவே, உண்மையான பிறர் குறையை உற்ற பொது நன்மைக்கென உரைத்திடுதல் குற்றமன்று.

**(2) பொது ஊழியரின் பொதுப்பணி சார்ந்த நடத்தையையும் குணத்தையும்பற்றி அபிப்பிராயம் தெரிவித்தல்**

நாட்டில் நல்ல நிர்வாகம் நடைபெற வேண்டும் எனில், பொது ஊழியர்கள் (public servants) திறம்பட, செப்பமுறச் செயலாற்றல்

வேண்டும். அவ்வாறு அவர்கள் கடமைகளைச் செய்கின்றனரா என்று கண்காணிப்பது பொது மக்களுக்குள்ள உரிமையாகும். எனவே, பொது ஊழியர்களின் பொதுப்பணி சார்ந்த நடத்தையையும் குணத்தையும் குறித்து அபிப்பிராயம் தெரிவிப்பதைச் சட்டம் அனுமதிக்கின்றது. அவ்வாறு அபிப்பிராயம் தெரிவிப்பது பொது ஊழியர்மீது குறை சாற்றுவதாக இருந்தாலும் அது குற்றமாவதில்லை.

**வெளியிடுவதும் அபிப்பிராயமாக (opinion) இருத்தல் வேண்டும்:** ஒரு மாவட்டத்தின் ஆட்சித் தலைவர் (District Collector) ஒருவர் இருக்கிறார். அவர் வயதில் மிக இளைஞர். அந்த மாவட்டத்தில் கலகங்கள் பல தொடர்ந்து நடைபெறுகின்றன. 'வயதில் இளைஞராக, அனுபவம் அதிகம் இல்லாதவராக ஆட்சித் தலைவர் இருப்பதால்தான் அங்குக் கலகங்கள் நடக்காமல் தடுக்க அவரால் முடியவில்லை' என்று ஒருவர் கூறுகிறார் அல்லது ஒரு பத்திரிகையில் எழுதுகிறார். இது எழுதியவரின் அபிப்பிராயம். அந்த அபிப்பிராயம் சரியானதாக இருக்கலாம் அல்லது தவறாக இருக்கலாம். இருந்தும், அது நல்லெண்ணத்துடன் (good faith) கூறிய அபிப்பிராயம். எனவே, இவ்வாறு அபிப்பிராயத்தை வெளியிட்டது குற்றமாவதில்லை.

ஒரு நகராட்சி மன்றத் தலைவரின் நிர்வாகத்தில் பொதுச் சந்தைக் கடைகள் கட்டப்படும்பொழுது, அதற்கான விதிமுறைகளைப் பின்பற்றாமல் சில ஒழுங்கீனங்கள் நடைபெற்றன. அதைப் பற்றித் தணிக்கையாளரும் (auditor) அரசாங்கமும் கடுமையாகக் கண்டனம் தெரிவித்தார்கள். இந்தக் கண்டனங்களைச் சிறு புத்தக வடிவில் வெளியிட்டு, 'இதைவிட மோசடி என்ன இருக்கமுடியும்? இந்தப் பகற் கொள்ளைக்கு வேறு என்ன சாட்சியம் வேண்டும்' என்று கூறி, அந்த ஆட்சி மன்றத் தலைவர் அடுத்த தேர்தலுக்கு நின்றபொழுது, அவருக்கு எதிராகப் பிரசாரம் செய்யப்பட்டது. இது வாக்காளர்களை நல்லெண்ணத்தோடு எச்சரிப்பதேயாகும் என்றும், அவதூறு ஆகாது என்றும் சென்னை உயர் நீதிமன்றம் தீர்ப்புக் கூறியது. (Rengaraju V. Khan Bahadur Abdul Razack Sahib, (1935) M.W.N. 253).

**நல்லெண்ணத்தில் எழுந்த அபிப்பிராயமாக இருத்தல் வேண்டும்:** 'அவர் கைக்கூலி வாங்குபவர். எனவே, அவர் அந்தப் பதவிக்குத் தகுதியுடையவர் அல்லர்' என்று ஒரு பொது ஊழியரைக் குறித்து ஒருவர் அபிப்பிராயம் தெரிவிக்கின்றார். 'அவர் கைக்கூலி வாங்குபவர்' என்பது கூறுபவரின் அபிப்பிராயமாகத்தான் இருக்கிறது. ஆனால், இந்த அபிப்பிராயத்திற்குத் தகுந்த ஆதாரம்

இருக்கவேண்டும். வெறும் வதந்திகளை ஆதாரமாக ஏற்றல் முடியாது. எனவே, பொது ஊழியர் கைக்கூலி வாங்குபவர் என்று கூறுவதற்கான ஆதாரங்களை அவர் காட்டினால், அவர் வெளியிட்ட அபிப்பிராயம் நல்லெண்ணத்தில் (good faith) கூறிய அபிப்பிராயமே ஆகும். ஆதாரம் ஏதும் இன்றி அவ்வாறு கூறியிருந்தால், அது நல்லெண்ணம் ஏதுமின்றிக் கூறியதாகிவிடும்; அது குற்றமேயாகும்.

மேலும், பொய்யான நிகழ்ச்சிகளைக் கூறி, அந் நிகழ்ச்சிகளின் அடிப்படையில் அபிப்பிராயம் தெரிவிப்பதும் முறையன்று. அபிப்பிராயத்திற்கு ஆதாரமாகக் காட்டப்படும் நிகழ்ச்சிகள் உண்மையில் நடந்தனவாக இல்லையெனில், அந்த அபிப்பிராயத்தை நல்லெண்ணத்துடன் கூறப்பட்டது என்று கொள்ளுவதற்கு இல்லை.

ஒரு பொது ஊழியரைக் குறித்து, 'அவருக்குக் கடன் அதிகமாக இருக்கிறது; ஆதலால், அவர் நேர்மையுடன் அந்த உத்தியோகத்தை வகிப்பது இயலாது' என்று கூறப்படுகிறது. அந்த ஊழியருக்குக் கடன் ஏதும் இல்லையெனில், கூறப்பட்ட அபிப்பிராயம் நல்லெண்ணத்தில் எழுந்தது என்று சொல்லுவது சரியன்று. 'கடன் அதிகமாக இருக்கிறது' என்பது இருப்பதாகக் கூறப்படும் ஒரு நிகழ்நிலை (statement of fact). இது பொய்யென்றால், இதன் அடிப்படையில் எழுந்த அபிப்பிராயமும் நல்லெண்ணத்துடன் கூடியதன்று என்றே கொள்ளவேண்டியதாகிறது.

**அபிப்பிராயம் தெரிவிப்பது வேறு, நிகழ்ச்சிகளைக் கூறுவது வேறு:** நல்லெண்ணத்துடன் கூறப்படும் அபிப்பிராயத்தையே சட்டம் அனுமதிக்கிறது. நிகழ்ச்சிகளை நடந்ததாகக் கூறுவது அபிப்பிராயம் தெரிவிப்பது போல் அன்று. ஒரு பொது ஊழியர் கைக்கூலி வாங்கினார் என்று திட்டவட்டமாகக் கூறினால், இது அபிப்பிராயம் தெரிவிப்பது ஆகாது; ஒரு நிகழ்ச்சியைக் (statement of fact) கூறுவதேயாகும். நடந்ததாகக் கூறப்படும் நிகழ்ச்சி உண்மையானதாக இருத்தல் வேண்டும். அவ்வாறு இல்லை எனில், அதை வெளியிட்டவர் குற்றவாளியாகின்றார். 'நான் நல்லெண்ணத்துடன் தான் அச் செய்தியை வெளியிட்டேன்' என்று வெளியிட்டவர் வாதாடுவது முடியாது. பொது ஊழியரின் மதிப்பைக் கெடுக்கும் வகையில், நடந்தவையென வெளியிடப்படும் குறிப்பிட்ட நிகழ்ச்சிகள் உண்மையென மெய்ப்பிக்கத்தக்கனவாக இருக்க வேண்டும்.

**தனிப்பட்ட வாழ்வைத் தாக்குதல் கூடாது:** பொது ஊழியரின் பொதுப்பணி சார்ந்த பண்புகளைப் பற்றி அபிப்பிராயம் தெரிவிக்கலாம். ஆனால், பொதுப்பணிக்குத் தொடர்

பில்லாத அவரது தனி வாழ்க்கையில் உள்ள குறைகளைக் கூறுவது தகாது. அரசாங்கத்தில் ஒருவர் பொறியியல் வல்லுநராக (engineer) இருக்கின்றார். 'பொறியியல்' அறிவில் அவருக்கு ஆற்றல் குறைவு; ஏனெனில், அவர் கண்காணிப்பில் கட்டப்பெற்ற மூன்று பாலங்கள் சில வருடங்களுக்குள்ளாகவே விழுந்துவிட்டன, என்று ஒருவர் கூறலாம். அவர் கட்டிய மூன்று பாலங்கள் விழுந்துவிட்ட செய்தி உண்மையானதாக இருந்தால், கூறப்பட்ட அபிப்பிராயம் குற்ற மாவதில்லை. 'இந்தப் பொறியியலர் தம் மூதாதையர் சொத்தைத் தமது தம்பிக்குக் கொடுக்காமல் அவரை ஏமாற்றிவிட்டார்' என்றோ, 'அவர் தமது மனைவியைக் கொடுமைப்படுத்துகிறார்' என்றோ கூறினால், அந்தக் கூற்று உண்மையானதாக இருந்தாலும், அது அந்த ஊழியரின் தனி வாழ்வைப் பொறுத்து அவதூறு இழைப்பதாகும். ஏனெனில், அவருடைய பொதுப்பணிக்கும் கூறப்பட்ட செயல்களுக்கும் சம்பந்தம் ஏதும் இல்லை.

பொது ஊழியரின் பொதுப்பணி முறையோடு இயைந்த நடத்தை குறித்து அல்லது அந்த நடத்தையிலிருந்து காணப்படும் அவரது குணம் குறித்து ஒருவர் அபிப்பிராயம் தெரிவிக்கலாம். அது நல்ல எண்ணத்தில் எழுந்த அபிப்பிராயமாக இருத்தல் வேண்டும். ஏனெனில், இந்த அபிப்பிராயம் பொது ஊழியருக்கு இழிவு ஏற்படுத்தக்கூடியதாக இருந்தாலும், அது அவதூறுக் குற்றம் ஆவதில்லை.

### (3) பொதுக் காரியங்கள் சம்பந்தமான ஒருவருடைய நடத்தை, குணம் இவை குறித்து அபிப்பிராயம் தெரிவித்தல்

சமுதாய வாழ்வில் பொதுக்காரியங்கள் பல நடைபெறுகின்றன. அரசாங்க அலுவல்கள்மட்டுமே மக்கள் அனைவருக்கும் பொதுவான காரியங்கள் என்று கூறுதல் சரியன்று. அரசாங்க அலுவல்களைத் தவிரப் பொதுமக்களைப் பாதிக்கும் செயல்கள் எத்தனையோ உள்ளன. ஒரு கம்பெனியைத் (company) தோற்றுவித்து நடத்துவது பொதுக் காரியம்; ஒரு கோவிலை நிர்வகிப்பது பொதுவான காரியம்; எல்லோருக்கும் பொதுவான ஒரு பள்ளியை நடத்துவதும் பொதுக் காரியம்தான்.

பொதுநலனுக்கென்று செய்யப்பெறும் பொதுக்காரியங்கள் செம்மையுற நடைபெறவேண்டுமென்பதில் மக்கள் அனைவருக்கும் அக்கறை உண்டு. பல பேர்கள் பங்கெடுத்துள்ள வாணிகக் கம்பெனி சரியாக நடைபெறவில்லையெனில், அது பங்குதாரர்கள் அனைவரையும் பாதிக்கின்றது. பொதுப் பள்ளியின் நிர்வாகம் சரியாக இல்லையென்றால், அது அப் பள்ளியில் படிக்கும் மாணவர்களையும், மாணவர்களின் பெற்றோர்களையும் பாதிக்கின்றது. ஆதலால், பொதுக் காரியங்களில்

ஈடுபடுவோர் அந்தப் பணிகளை நல்ல முறையில் செய்யும்படி கண்காணிக்கும் கடமை பொதுமக்களுக்கு இருக்கிறது.

'பொதுக் காரியம்' என்றால், நாட்டு மக்கள் அனைவருக்கும் சம்பந்தமுள்ள காரியமாக இருக்கவேண்டும் என்பதன்று. ஒரு குறிப்பிட்ட தொகுதியினர், ஒரு நகரில் அல்லது கிராமத்தில் வாழும் மக்கள், ஒருசமயத்தினர், சமுதாயத்தின் ஒரு பகுதியினர் இவர்களின் நலனைப்பொறுத்த காரியங்கள் பொதுக் காரியங்களே ஆகின்றன.

பொதுக்காரியங்களில் ஈடுபடுவோர் பொது ஊழியர்களாகவோ, அரசாங்க அலுவலகராகவோ இருக்கவேண்டும் என்ற அவசியமில்லை. எவரும் பொதுக் காரியங்களை ஏற்று நடத்தலாம். அவ்வாறு பொதுக் காரியங்களை ஏற்று நடத்துபவர்கள் ஏறக்குறைய பொது ஊழியர்களின் நிலையிலேயே உள்ளனர். எனவே, பொது ஊழியர்களைக் குறித்து எந்த வகையிலும் அளவிலும் நாம் குறை சாற்றலாமோ, அதே வகையிலும் அளவிலும் பொதுக் காரியங்களை ஏற்று நடத்துபவர்கள்மீதும் குறைசாற்றலாம். அஃதாவது, பொதுக் காரியங்களுடன் இணைந்த அவர்களின் நடத்தை குறித்தும், அந்த நடத்தை காட்டும் அவர்களின் பண்பு குறித்தும் நல்லெண்ணத்துடன் அபிப்பிராயம் கூறலாம். அந்த அபிப்பிராயம் அவரது மதிப்பைக் குறைக்கத்தக்கதாக இருந்தாலும் அது 'அவதூறு' ஆகாது.

செய்யப்படும் பொதுக் காரியங்களிலிருந்து அதில் பங்கெடுத்துக்கொள்பவரின் பண்பும் நடத்தையும் வெளியாகின்றன. எனவே, அந்த நடத்தை குறித்துமட்டும் நல்லெண்ணத்தோடு அபிப்பிராயத்தைத் தெரிவிப்பது குற்றமாவதில்லை. பொதுக்காரியங்களுக்குச் சம்பந்தப்படாத வகையில், அவருடைய பண்பு அல்லது நடத்தை பற்றிக் குறைசாற்றி அபிப்பிராயம் தெரிவித்தால் அது அவதூறேயாகும்.

ஓர் இலாகாவை நிர்வகிக்கும் மந்திரி ஒருவரின் நிர்வாகத்திறமை குறித்துக் குறைசாற்றி ஒருவர் அபிப்பிராயம் தெரிவிக்கலாம். அது குற்றமாகாது. ஆனால், அந்த மந்திரியின் தனிப்பட்ட குடும்ப வாழ்க்கைபற்றியோ, பொதுவாழ்விற்குச் சம்பந்தப்படாத வேறெதையுங் குறித்தோ குறைசாற்றி அபிப்பிராயம் தெரிவிப்பது குற்றமேயாகும்.

பொதுக்காரியங்களில் ஈடுபடுவோர்கள், பிறர் நல்லெண்ணத்துடன் கூறும் குறைசாட்டுதல்களைத் தவிர்ப்பதற்கில்லை. பொதுக் காரியங்களைச் செய்து புகழ்பெற விரும்புவோர்கள் பிறர் குறை கூறாதவகையில் பொதுக்காரியம் சம்பந்தமான தம்முடைய நடத்தையை அமைத்துக்கொள்ளுதல் அவசியமாகும். எனவே,

அவர்களைப்பற்றிப் பிறர் கூறுங் குறை, பொதுக்காரியத்தோடு சம்பந்தப்பட்டதா, நல்லெண்ணத்தில் எழுந்ததா என்ற இரண்டை மட்டுமே சட்டம் கவனிக்கிறது.

## (4) நீதிமன்ற நடவடிக்கைகள், தீர்ப்புகள் இவைகளை வெளியிடுதல்

'நீதி வழங்குவது அனைவருக்கும் தெரியும்படி நடைபெற வேண்டும்' என்பது சட்டத்தின் அடிப்படைக் கொள்கையாகும். எனவேதான், சாதாரணமாக நீதிமன்ற நடவடிக்கைகள் எல்லாம் எவரும் சென்று பார்க்கும்படி நடைபெறுகின்றன. நீதி எவ்வாறு வழங்கப்பெறுகிறது என்பதைப்பற்றி அறிந்துகொள்ளுவதில் பொது மக்கள் அனைவருக்கும் அக்கறை உண்டு. ஆதலால், நீதிமன்ற நடவடிக்கைகளை வெளியிட்டு எல்லோருக்கும் தெரியப்படுத்துவது பொது நலனுக்கு உகந்தது எனக் கருதப்பெறுகிறது.

ஒரு வழக்கில் சம்பந்தப்பட்டவர்கள், தங்களைக் குறித்துக் கோர்ட்டில் கூறப்படும் விவரங்கள் பலருமறிய வெளியிடப்படுவதை விரும்பாமல் இருக்கலாம். அவ்வாறன பிரசுரம் அவர்களுக்கு இழுக்கை ஏற்படுத்தி அவர்கள் மதிப்பைக் குறைக்கலாம். ஒரு குற்ற வழக்கில் (criminal case) சம்பந்தப்பட்ட எதிரி திருடினர் என்றோ, மோசடி செய்து ஏமாற்றினர் என்றோ சாட்சிகள் கூறுகின்றனர். அதைப் பிரசுரிக்கும்பொழுது பலரும் இதைப்பற்றித் தெரிந்து கொள்கின்றனர். எனவே, குற்றம் சாட்டப்பட்டவர் இந்தப் பிரசுரத்தை விரும்பாமல் இருப்பது இயல்பேயாகும். இருந்தாலும், கோர்ட்டு நடவடிக்கைகள் பலருமறியப் பிரசுரமாவது நீதி வழங்கும் முறைமைக்கு மிகவும் அவசியமாகும்.

அம்மாதிரியே, நீதிமன்றத் தீர்ப்பில் ஒருவர் குற்றவாளி என்று முடிவு செய்யப்பட்டுத் தண்டனை அளிக்கப்படுகிறது. இவ்வாறு நீதிமன்றம் தீர்ப்பு வழங்கிய செய்தி எல்லோருக்கும் தெரிவது பொது நலனுக்கு உகந்தது. ஒரு வழக்கில் சாட்சியாக வந்தவர் பொய்ச்சான்று கூறினர் என்றோ, இடப்பெற்ற அந்த வழக்குப் பொய் வழக்கு என்றோ தீர்ப்பில் கூறப்படலாம். இது சாட்சியாக வந்தவருக்கும், வழக்கிட்ட வாதிக்கும் மதிப்பிழப்பை விளைவிக்கிறது. இருந்தாலும், தீர்ப்பிலுள்ள விவரங்களைப் பலருமறிவது பொதுவாழ்விற்கு நலன் அளிப்பதாகும்.

இவ்வாறன பிரசுரங்களால் ஒரு சிலருக்கு விளையுங் கேட்டைவிடப் பொதுவாழ்விற்கு விளையும் நன்மை மிகவும் அதிகமானதாகும். நீதி வழங்கும் முறைமைக்கும் இது ஏற்றதாகும்.

ஆனல், நீதிமன்ற நடவடிக்கைகளும் தீர்ப்புகளும் உண்மைக்கு மாறுபாடின்றிப் பிரசுரிக்கப்படவேண்டும். அவைகளைத்

திரித்துக் கூறுவது அல்லது தவருன தலைப்புகளைக் கொடுத்துப் பிரசுரிப்பது கூடாது. ஒரு கட்சிக்குச் சாதகமான விவரங்களை மட்டும் வெளியிட்டு அதற்குப் பாதகமான விவரங்களை வெளியிடாமல் விடுதல் திரித்துக் கூறுவதேயாகும். நடவடிக்கைகளை உள்ளவாறு பிரசுரித்தல் வேண்டும். நீதிமன்ற நடவடிக்கைகளைச் சுருக்கமாகவோ அல்லது சுருக்கியோ உண்மைக்குச் சிறிதும் மாறுபாடின்றி வெளியிடலாம்.

விவாகரத்துக்கான வழக்குகள் போன்றவைகளை நீதிபதி, பொதுமக்கள் அறியாவண்ணம் தனித்து நடத்தலாம். அந்த நடவடிக்கைகளைப் பிரசுரிக்கக்கூடாது என்று நீதிபதி உத்தரவிடலாம். இப்பொழுது அவை பற்றிய விவரங்களை வெளியிடுதல் கூடாது.

இவ்வாறு நீதி வழங்கும் முறையையும், பொது நலனையும் கருத்திற்கொண்டு, நீதிமன்ற நடவடிக்கைகள், தீர்ப்புகள் இவைகளை உள்ளவாறு வெளியிடுதல் குற்றமாவதில்லை என்று சட்டம் விதிக்கிறது.

**(5) தீர்வடைந்த வழக்கு, வழக்கில் சம்பந்தப்பட்டவர்களின் நடத்தை இவைபற்றி அபிப்பிராயம் தெரிவித்தல்**

நீதி வழங்குவது நேர்மை தவருது நடைபெறுதல் வேண்டும் என்பதில் மக்கள் அனைவருக்கும் அக்கறை உண்டு.

வழக்கு என்று ஒன்று எழுந்தால், அதில் இரு கட்சியினர் இருக்கின்றனர். அவர்களில் ஒருவர் கூறுவதை மற்றவர் ஏற்பதில்லை. அவர்கள் கூறுவதில் எது உண்மை, எது நியாயம் என்பதை நீதிபதி முடிவு செய்கின்ருர். இவ்வாறு வழக்குகளைத் தீர்க்கும் நீதிபதிகள் நடுவுநிலை தவருது செயற்படவேண்டும். வழக்குகளின் விசாரணையில் வெளிவரும் சாட்சியங்களை ஆய்ந்து, அவற்றின் அடிப்படையில் நீதிபதி முடிவு செய்கின்ருர். வழக்கில் வரும் சாட்சியங்களைத் தவிர வேறு எதையும் அவர் மனத்தில் கொள்ளுவதில்லை; கொள்ளவுங்கூடாது. ஒருவர்மீது கொலைக் குற்றம் சாட்டப்பெற்று அந்த வழக்கு நீதிமன்றத்தின் விசாரணையில் இருக்கிறது எனவைப்போம். இந்த வேளையில், பொதுக் கூட்டங்களைப்போட்டு அவர் கொலை செய்தவர்தான் என்ருே, அல்லது அவர் கொலை செய்யவில்லை என்ருே பலரும் பேசினுல் அதன் விளைவு என்ன? அது நடுவுநிலையோடு வழக்கை விசாரிக்கும் நீதிபதியின் மனத்தில் பாரபட்சம் ஏற்படுமாறு செய்துவிடும். ஆதலால், விசாரணையிலிருக்கும் வழக்குபற்றி எவரும் அபிப்பிராயம் தெரிவித்தல் கூடாது என்பது பொதுவான சட்டவிதி. தனிப்பட்ட முறையிலும் சரி,

அதிகார முறையிலும் சரி, எவரும் நீதிமன்றத்தின் ஆய்விலுள்ள எந்த ஒரு காரியங்குறித்தும் கருத்துத் தெரிவிப்பது குற்றமான செயலாகும். இந்த விதி நீதிமன்ற விசாரணையில் முடிவடையாமல் இருக்கும் வழக்குகள் குறித்தே பொருந்துவதாகும்.

ஒரு வழக்கில் நீதிமன்றம் தீர்ப்பளித்தபின் உள்ள நிலை என்ன? அந்த வழக்கின் தீர்ப்புபற்றி அதில் வந்த சாட்சிகள், கட்சிக் காரர்கள் இவர்கள்பற்றி அபிப்பிராயம் தெரிவிக்கலாமா? தெரிவிக் கலாம் என்று சட்டம் கூறுகிறது.

சரியான முறையில் நீதி நிர்வாகம் நடைபெறுவதில்தான் மக்கள் அனைவரின் நலன் இருக்கிறது. மக்கள் எல்லோருக்கும் தெரியும்படி நீதி நிர்வாகம் நடைபெறவேண்டுமென்று கூறிவிட்டு வழக்கின் முடிவுபற்றி அபிப்பிராயம் தெரிவித்தல் கூடாது என்றால் அது பொருளற்றதாகிவிடும். ஆதலால், ஒரு வழக்கில் தீர்ப்பளிக் கப்பட்டு அது முடிந்தபின், அந்த வழக்கின் தராதரத்தைப்பற்றியும் அதில் வந்த சாட்சிகள், கட்சிக்காரர்கள் நடத்தை குறித்தும் நல்லெண்ணத்தோடு அபிப்பிராயம் தெரிவிக்கலாம் என்று சட்டம் கூறுகிறது. அவ்வாறு, அபிப்பிராயத்தை வெளியிடுவதால் அவர்களுக்கு மதிப்பிழப்பு விளைந்தாலும் அது 'அவதூறு' ஆவ தில்லை.

இந்த வழக்கில் வந்த சாட்சி ஓர் இடத்தில் இவ்வாறு கூறுகின்றார்; மற்றோர் இடத்தில் மாறிக் கூறுகின்றார்; அதனால் அந்த சாட்சியத்தை நம்புவதற்கில்லை என்று கூறலாம். இந்த வழக்குத் தொடருவதற்குச் சரியான காரணங்கள் இல்லை என்று கூறலாம். அந்த வழக்கில் அளிக்கப்பட்ட தீர்ப்பின் தன்மைபற்றி யும் அபிப்பிராயம் தெரிவிக்கலாம். அளிக்கப்பட்ட தீர்ப்புத் தவறானது என்று காரணம் காட்டி விளக்கலாம். வழக்கில் வந்த சாட்சியத்தைச் சரியானபடி நீதிபதி மதிப்பிடவில்லை என்று காரணங்களோடு கூறலாம்.

ஆனால், இவ்வாறு வெளியிடும் அபிப்பிராயங்கள் நேர்மையான கருத்துரைகளாக (fair comments) நல்லெண்ணத்தில் எழுந் தவையாக இருத்தல் வேண்டும். நீதிபதியின் தீர்ப்புத் தவறானது என்று காரணங்காட்டி விவாதிப்பது நேர்மையானது. அவர் கைக்கூலி வாங்கி இவ்வாறு தீர்ப்புக் கூறினார் என்று கூறினால் அது நேர்மைக் கருத்துரை ஆகாது. சாட்சியாக வந்தவர் ஒருவரைக் குறித்து 'அவர் கூறிய சாட்சியத்தில் முரண்பாடுகள் பல இருக் கின்றன. எனவே, அவர் ஒன்று, முட்டாளாக இருக்கவேண்டும், அல்லது நேர்மையற்றவராக இருக்கவேண்டும்' என்று கூறினால் அது, சாட்சியத்தை வைத்து சாட்சியை மதிப்பிடுவதாகும். இது

நேர்மைக் கருத்துரை ஆகின்றது. ஆனால், 'சாட்சியாக வந்த கண்ணன் நம்பத்தக்கவனல்லன். அவன் பொய் பேசுபவன். எனவே, அவனது சாட்சியம் பொய்யானதுதான்' என்று கூறுவது நேர்மைக் கருத்துரை ஆகாது. ஏன்? ஒரு சாட்சியைப்பற்றி மதிப்பிடுகையில் வழக்கில் அவரளித்த சாட்சியத்தின் அடிப் படையில் மதிப்பிடலாம். ஆனால், அவரைப்பற்றித் தனிப்பட்ட முறையில் குறைகூறிவிட்டு, அதனால் அவர் சாட்சியம் பொய் யானது என்று கூறுவது வழக்கின் தரத்தை ஆய்வதாகாது. சாட்சிக்கு அவதூறு விளைவிப்பதேயாகும்.

தீர்ந்துபோன வழக்கிலுள்ள கட்சிக்காரர்கள், சாட்சிகள் இவர்கள் வழக்கில் எவ்வாறு நடந்துகொண்டார்கள் என்றும், அந்த நடத்தையிலிருந்து அவர்களுடைய பண்பும் குணமும் எவ்வாறு காணப்பட்டன என்றும் கூறலாம். எனவே, வழக்கோடு இயைந்த அவர்களின் நடத்தையையும், அந்த நடத்தையிலிருந்து காணப்படும் அவர்கள் குணத்தையும்பற்றி மட்டும் நல்லெண் ணத்தோடு அபிப்பிராயத்தைத் தெரிவிக்க ஒருவருக்கு உரிமை யுண்டு. அது போன்றே வழக்கின் தராதரத்தைப்பற்றியும், தீர்ப்பைப்பற்றியும் நேர்மையான முறையில் கருத்துரை கூறலாம்.

ஒரு கோர்ட்டில் வழக்கு முடிந்திருக்கலாம். அந்த கோர்ட்டின் தீர்ப்பின்மீது 'அப்பீல்' மேல் கோர்ட்டிற்குச் செய்திருந்தால் அந்த 'அப்பீல்' முடியும்வரை அந்த வழக்குப்பற்றி அபிப்பிராயம் தெரிவித்தல் கூடாது. ஏனெனில், அந்த வழக்கு அப்பொழுது அப்பீல் நீதிமன்றத்தின் ஆய்வில் உள்ளதாகிவிடுகிறது.

ஒரு வழக்குப்பற்றிய அபிப்பிராயம் தெரிவிப்பது கீழ்க்கண்ட நிபந்தனைகளுக்கு உட்பட்டது:

1) அந்த வழக்கு முடிந்து தீர்ப்பளிக்கப்பட்டிருத்தல் வேண்டும்; அதாவது, அது நீதிமன்ற ஆய்வில் உள்ளதாக இருப் பது கூடாது;

2) வழக்கின் தராதரம்;

வழக்கில் உள்ள சாட்சி, கட்சிக்காரர்கள் இவர்களின் வழக்கோடு இயைந்த நடத்தை;

இந்த நடத்தையில் இருந்து வெளியாகும் இவர்களது குணம், இவை குறித்தே அபிப்பிராயம் இருத்தல் வேண்டும்.

3) அந்த அபிப்பிராயம் நேர்மையானதாக நல்லெண்ணத்தில் உதித்ததாக இருக்கவேண்டும்.

மேலே கண்ட நிபந்தனைகளுக்கு உட்பட்டு ஒரு வழக்குப்பற்றிய அபிப்பிராயத்தைத் தெரிவித்து, அதனால் பிறருக்கு மதிப்பிழப்பு ஏற்பட்டாலும் அது அவதூறு ஆவதில்லை.

**(6) அரங்கேறிய செயல் குறித்து அபிப்பிராயம் தெரிவித்தல்**

சில செயல்கள் பொதுமக்களின் அங்கீகாரத்திற்கென, மக்களின் பாராட்டுதலைப் பெறவேண்டும் என்ற நோக்குடன் செய்யப் பெறுகின்றன. பொதுமக்கள் அதைப் படித்துப் பயன்பெறவேண்டும் என்பதற்காக ஒருவர் புத்தகமொன்றை எழுதி வெளியிடுகின்றார். அவையிலுள்ளோர்களை மகிழ்வித்து அதனால் புகழடையும் ஆசையால் பொது அரங்கில் ஒருவர் பாடுகின்றார்; நடனத்தில் தேர்ச்சியுற்ற பெண் நாட்டியம் ஆடுகின்றாள். இதுபோல் கலை களிலே புலமை பெற்றவர்கள் தங்கள் திறனைக் காட்டி மக்களின் ஆதரவையும் பாராட்டுதலையும் பெறுகின்றனர்.

இவ்வாறு, தங்கள் தீர்ப்புக்கென்று நிகழ்த்தப்பெறும் அரங் கேற்றங்கள் குறித்த மக்கள் அவரவர்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிவிப்பது இயல்பேயாகும். இனிமையாகப் பாடுபவரை இசைந்து பாராட்டும் மக்கள், நன்றாகப் பாடாதவரைப்பற்றிக் குறை கூறலாம். பாடுபவருக்கு இனிய குரல் இல்லை என்றோ, ஆடிய பரதநாட்டியம் அந்தக் கலைக்கான விதிமுறைகளை ஒட்டியதாக இல்லை என்றோ, வெளியிடப்பட்ட புத்தகத்திலே குறைகள் உள்ளன என்றோ பிறர் கூறினால் அது அந்தக் கலைஞருக்கோ, புத்தக ஆசிரிய ருக்கோ ஓரளவு மதிப்பிழப்பைத் தோற்றுவித்தாலும், அதைக் குற்றமெனக் கொள்ளுதல் தகாது. சட்டமும் அவ்வாறு கொள்ளுவ தில்லை.

இவ்வாறான பொதுச் செயல்களை ஆய்ந்து அவைபற்றிய கருத்து களை வெளியிடும் சுதந்திரம் மக்களுக்கு இருந்தால்தான் இலக் கியமும், இன்கலைகளும், அறிவியலும், அரிய பல முயற்சிகளும் மக்களிடைப் பரவி வளர ஏதுவாகும். இவ்வாறு கருத்துகளை வெளியிடும்போது, தனி மனிதர்களின் திறமை, தகுதி இவை குறித்துப் புகழ்ந்தோ இகழ்ந்தோ கூறும் அவசியம் ஏற்படலாம். ஆனால், அது தவிர்க்க முடியாதது. குணத்தைக் கண்டு பாராட்டு பவர்கள், குற்றங்கண்டு பழிக்கவும் செய்யலாம். எனவே, பாராட்டுதலைப் பெற முயலுவோர் பழிக்கு அஞ்சிப் பயன் இல்லை.

ஒரு செயலின் குணங்களையும் குற்றங்களையும் ஆராய்ந்ததன் பயனாக எழும் கருத்துகளை ஆய்வுரை, திறனாய்வு அல்லது விமரிசனம் (criticism) என்கிறோம். பொது அரங்கில் ஏறும் பல செயல்களால் கலைகளின் கண்ணியம் குறையலாம். சமுதாய ஒழுக்க நிலை சரிந்து போகலாம். கீழ்த்தரமான நூல்களால் இலக்கியத்தின் தரம் இறங்

குவ்தோடு, அவைகளைப் படிப்போரின் மனத்திலே பல விரும்பத் தகாத உணர்ச்சிகள் எழலாம். இந்த ஆபத்து விளைவிக்கும் போக்குகளைத் தடுப்பதற்கு அந்தந்தச் செயல்களின் ஆய்வுரைகளை இலக்கிய விமரிசனமாக, கலை விமரிசனமாக வெளியிடுவது அவசிய மாகிறது. இழிவுணர்ச்சிகளை எழுப்பும் கலைநிகழ்ச்சிகளைக் கண்டிக் கவும், தரமில்லாத நூல்களைத் தாக்கி எழுதவும், தீமை பயக்கும் செயல்கள் குறித்து மக்களை எச்சரிக்கவும், நமக்கு உரிமை உண்டு. இந்த நோக்கத்தோடு விமரிசனங்களை வெளியிடுதல் சமூக சேவையேயாகும். எனவே, இதைச் சட்டம் அனுமதிக்கின்றது.

ஒரு நூல் எழுதுவது, பொதுமக்கள் அவையில் பாடுவது, ஆடுவது, நாடகங்களை நடத்துவது, ஓவியங்களை வரைந்தும் உருவங்களை வனைந்தும் காட்சிப் பொருள்களாக மக்களுக்குக் காட்டுவது, திரைப்படங்கள் வெளியிடுவது, திறமை காட்டும் விளையாட்டுகளில் ஈடுபடுவது, இவை போன்ற செயல்கள் எல்லாம் மக்கள் தீர்ப்புக்காக அரங்கேற்றப்பெறும் செயல்கள். இவ்வாறு, பொது அரங்கில் ஏறிய செயல்கள் (public performances) புகழையோ, பழியையோ ஏற்றுத்தான் ஆகவேண்டும். எனவே, பொது அரங்கேறிய செயல்களின் தகுதி குறித்தும், அவைகளில் இருந்து காணப்படும் அச் செயலாசிரியர்களின் திறம் குறித்தும், ஒருவர் தமது நேர்மையான அபிப்பிராயத்தை வெளியிடலாம். எனவே, அரங்கேறும் செயல் குறித்து அபிப்பிராயம் தெரிவித்தல் அவதூறு ஆகாது.

ஓர் இசை நிகழ்ச்சியை விமரிசனம் செய்யும் ஒருவர் அது நன்ருக இருந்தது என்று கூறலாம். மற்ருெருவர் அந்த இசை நிகழ்ச்சி பற்றிக் குறை கூறலாம். இதில் எந்தக் கருத்து சரியானது, உண்மையானது என்று கூறுதல் இயலாது. ஆய்வுரைகளின் தன்மை அதை அளிப்போரின் மன நிலையைப் பொறுத்து இருக் கின்றது. நேர்மையோடு ஆராயும் ஒருவருக்கு உயர்ந்ததாகத் தோன்றும் ஒரு செயல், நேர்மையோடு ஆராயும் மற்ருெருவருக்கு வேறு வகையாகத் தோன்றலாம். எனவே, எவருடைய ஆய்வுரை உண்மையானது என்று கூறுதல் இயலாது. ஆதலால், கூறப்படும் ஆய்வுரை உண்மையை ஒட்டி இருக்கவேண்டும் என்று சட்டம் கூறவில்லை. அது நேரிய கருத்துரையாக (fair commentr) நல்லெண்ணத்தில் (good faith) எழுந்ததாக இருக்கவேண்டும் என்பதே முக்கியமாகும். பிறரை வேண்டுமென்றே பழித்துரைக்கும் முறையில் இருத்தல் தகாது.

ஒரு நூலைப்பற்றி மதிப்புரை எழுதுகையில் அந் நூலிற் காணப் படும் குறைகளையும் பிழைகளையும் எடுத்துக்காட்டலாம். அந்தப்

புத்தகம் தக்க முறையில் எழுதப்பெறவில்லை என்று காரணத்தோடு கூறலாம். இன்னின்ன பிழைகளும் குறைகளும் நூலில் இருப்பதால் இந்நூலாசிரியர் நல்லபுலமை இல்லாதவர் என்று காட்டி ஆசிரியரின் தகுதியின்மையை வெளிப்படுத்தலாம். ஆனால், புத்தகத்தை விட்டு விட்டு ஆசிரியரைத் தனித்துக் குறை கூறினால் அது நேர்மைக் கருத்துரை ஆகாது. 'இந்தப் புத்தகத்தில் இவ்வளவு குறைகள் இருப்பதால், இதன் ஆசிரியரின் அறியாமை நன்கு புலப்படுகிறது' என்று கூறுவது நேர்மைக் கருத்துரை. 'இந்த நூலின் ஆசிரியர் அறியாமை மிக்கவர், தகுதியற்றவர்; எனவே, இந்த நூலில் பிழைகள் மலிந்திருப்பது வியப்பன்று' என்று கூறினால் இது நேர்மைக் கருத்துரை ஆகாது. ஏனெனில், 'ஆசிரியர் அறியாமை மிக்கவர்' என்ற கருத்துரை நூலின் தன்மையிலிருந்து ஊகிக்கப் பெறவில்லை. காரணம் காட்டாது ஆசிரியரைக் குறை கூறி அதன்பின் நூலும் பழிக்கப்படுகிறது. இது நல்லெண்ணத்தால் எழுந்த கருத்துரை ஆவதில்லை.

எனவே, அரங்கேறிய செயலின் ஆசிரியருடைய தகுதி குறித்து மதிப்பிடுவது அச் செயலின் அடிப்படையிலேயே அமைதல் வேண்டும். அஃதாவது, அரங்கேறிய செயலின் தன்மை, அச் செயலிலிருந்து காணப்பெறும் அதன் ஆசிரியரின் தகுதி, இவை குறித்து மட்டுமே பிறர் தமது அபிப்பிராயத்தை, நேர்மைக் கருத்துரையை வெளியிடலாம். அது குற்றம் ஆவதில்லை.

### (7) ஒருவர் நடத்தையை உற்ற அதிகாரம் பெற்றவர் கண்டனம் செய்தல்

பள்ளிப்பையன் நன்றாகப் படிப்பதில்லை என்று அவன் ஆசிரியர் பெற்றோருக்கு எழுதியனுப்புகிறார். தன் கீழ் வேலை பார்ப்பவர் பொறுப்புடனும் காலதாமதம் இன்றியும் கடமைகளைச் செய்வதில்லை என்று மேலதிகாரி குறை கூறுகின்றார். இப்பொழுது ஆசிரியரும் அதிகாரியும் அவதூறு இழைத்துவிட்டனர் என்று கொள்ளுவது முறையா? இல்லை. ஏன்?

பள்ளி மாணவனது படிப்பை மேற்பார்க்கும் அதிகாரம் ஆசிரியருக்கு உண்டு. தன் கீழ்ப் பணியாற்றுபவர்களின் வேலைத் திறனை மதிப்பிடும் அதிகாரம் மேலதிகாரிக்கு இருக்கிறது. இந்த அதிகாரத்தின்படியேதான் அவர்கள் குறை கூறினார்கள், எனவே, அது குற்றம் ஆவதில்லை.

ஒரு வழக்கிலே சாட்சியாக வந்தவர் பொய்ச் சான்றுரைத்தார் என்று நீதிபதி கூறி, சாட்சியின் நடத்தையைக் கண்டனம் செய்து தமது தீர்ப்பில் எழுதலாம். வழக்கில் சம்பந்தப்பட்டவர்களின்

நடத்தை குறித்துக் கண்டனம் செய்யும் அதிகாரம் நீதிபதிக்கு உண்டு. பெற்ருேர்கள் தம் பிள்ளைகளைப் பிறர் முன்னிலையில் கண்டிக்கலாம். வேலையாளின் திறமையின்மையை எசமானர் குறை கூறலாம். இவ்வாறு ஒருவர் நடத்தை குறித்து உற்ற அதிகாரம் பெற்றவர்கள் கண்டனம் தெரிவிக்கலாம். இந்தக் கண்டனம் பிறரறியச் செய்யப்பட்டாலும் குற்றம் ஆகாது.

ஒருவருக்குள்ள அதிகாரம் சட்டப்படி உள்ளதாகவோ, ஒப்பந்தப்படி வந்ததாகவோ இருக்கிறது. நம்மிடம் வேலை செய்ய ஒப்புக் கொண்ட வேலையாள்மீது நமக்குள்ள அதிகாரம் நமக்கும் வேலையாளுக்கும் உள்ள ஒப்பந்தத்தால் எழுவதாகும். சாட்சிமீது நீதிபதிக்குள்ளது சட்டமளிக்கும் அதிகாரமாகும். பிள்ளைகள்மீது பெற்ருேருக்குள்ள அதிகாரம் உறவு முறையால் தோன்றுவது, சட்டமும் ஒப்புவது. இவ்வாறு, சட்டத்தாலோ, ஒப்பந்தத்தாலோ அதிகாரம் உள்ளவர்கள், அந்த அதிகாரத்திற்கு உட்பட்டவர்களின் நடத்தை குறித்துக் கண்டனத்தைத் தெரிவிப்பதைச் சட்டம் அனுமதிக்கின்றது.

எந்த நடத்தை கண்டிக்கப்படுகின்றதோ அது கண்டிப்பவரின் அதிகார வரம்பிற்கு உட்பட்டதாக இருத்தல் வேண்டும். தன்கீழ் வேலை பார்ப்பவர் கவனத்தோடு கடமைகளைச் செய்வதில்லை என்று மேலதிகாரி குறை கூறலாம். ஆனல், கீழ் அதிகாரியின் தனிப்பட்ட, அலுவல் முறைக்குச் சம்பந்தமில்லாத நடத்தையை மேலதிகாரி கண்டனம் செய்வது கூடாது. கீழ் அதிகாரியின் தனிப்பட்ட நடத்தையைக் குறை கூறிக் கண்டனம் செய்வது முறையாகாது.

தெரிவிக்கும் கண்டனம் நல்லெண்ணத்தில் எழுந்ததாக இருத்தல் வேண்டும். பிள்ளைகளைத் திருத்துவதற்குப் பெற்ருேர்கள் கண்டிக்கின்றனர்; நீதி வழங்கும் நேர்மை குன்ருதிருப்பதற்காக, வழக்கில் சம்பந்தப்பட்டவர்களின் நடத்தையை நீதிபதி கண்டிக்கின்ருர். கீழதிகாரியின் திறமை இன்மையை விளக்கி அச்சடித்துப் பலருக்கும் மேலதிகாரி அறிவித்தால் அது நல்லெண்ணத்தில் எழுந்த கண்டனம் ஆகாது. அந்தக் கண்டனத்தை எவருக்கு அறிவிக்கவேண்டுமோ, அவருக்கு அறிவிக்கலாம். இதைவிட்டு, எல்லோருக்கும் அறிவித்தால் அது கீழதிகாரியை வேண்டுமென்றே இழிவுபடுத்தும் செயலாகிவிடும். ஆதலால், அதிகாரம் உள்ளவர்கள் பிறர்மீது கண்டனம் தெரிவிப்பதை நல்லெண்ணத்தோடு செய்தல் வேண்டும்.

இந்த முறையில், சட்டத்தாலோ, ஒப்பந்தத்தாலோ அதிகாரம் பெற்றவர்கள், அந்த அதிகாரத்திற்கு உட்பட்டவர்களின் நடத்தை குறித்து, தமது அதிகார வரம்பிற்குள்ளான நடத்தை குறித்து, நல்லெண்ணத்துடன் கண்டனத்தை அறிவித்தல் குற்றம் ஆகாது.

## (8) ஒருவரைப்பற்றி அவர்மீது அதிகாரம் உள்ளவரிடம் குற்றம் சாட்டுதல்

சில சந்தர்ப்பங்களில் ஒருவர்மீது குற்றஞ்சாட்டிப் பிறரிடம் கூறுவது அவசியமாகின்றது. இன்னொருவரின் வேலையாள் குற்றம் செய்துவிட்டால் அதை அந்த வேலையாளின் எசமானரிடம் நாம் தெரிவிக்கின்றோம். அடுத்த வீட்டுப் பையன் செய்த குற்றத்தை அவனது தகப்பனாரிடம் நாம் கூறுகின்றோம். ஒருவர் இன்ன குற்றம் செய்தார் என்று கூறி நீதிபதியிடம் விண்ணப்பம் (முறையீடு) செய்கின்றோம். இவ்வாறு, மற்றவர்மீது குற்றஞ் சாட்டி அதைப் பிறருக்குத் தெரிவிப்பது தவிர்க்கமுடியாதது ஆகிறது. அந்தக் குற்றத்திற்கான பரிகாரத்தைப் பெறுவதற்கு அவ்வாறு தெரிவிப்பதுதான் வழியாக இருக்கிறது. எனவே, இதைச் சட்டம் அனுமதிக்கின்றது.

ஒருவர்மீது சட்டப்படி அதிகாரம் உள்ளவர்களிடமே அவர்மீதுள்ள குற்றச் சாட்டை நாம் தெரிவிக்கலாம். ஒரு தாசில்தார் கைக்கூலி கேட்டார் என்ற குற்றச்சாட்டை மாவட்டக் கலெக்டருக்குத் தெரிவித்தல் முறையானது. இதை, சம்பந்தமில்லாத மற்றொருவருக்குத் தெரிவித்தல் கூடாது. தாசில்தார்மீது குற்றஞ் சாட்டி அந்த மாவட்ட இன்ஜினீயருக்கு அறிவிப்பது முறையன்று. நாம் யாருக்குத் தெரிவிக்கின்றோமோ அவருக்குக் குற்றம் சாட்டப்பெற்றவர்மீது நேரடியான அதிகாரம் இருக்க வேண்டியது அவசியம் இல்லை. எந்த ஓர் அரசாங்க ஊழியரின் குற்றங்குறித்தும் அந்த மாநில முதன் மந்திரிக்கோ, பிரதம காரியதரிசிக்கோ தெரிவிக்கலாம். நம் குடியரசின் தலைவர், மாநில கவர்னர் இவர்களுக்குத் தெரிவிக்கலாம். குற்றம் சாட்டப்பெற்றவர்மீது எவ்வித அதிகாரமும் இல்லாதவரிடம் அதைத் தெரிவித்தால் அது முறையற்றதாகும், அவதூறு ஆகிவிடும்.

தெரிவிக்கப்பட்ட குற்றச்சாட்டு நல்லெண்ணத்துடன் செய்யப்பட்டிருத்தல் வேண்டும். போதிய கவனத்துடனும், அக்கறையுடனும் நாம் ஒரு காரியத்தைச் செய்தால்தான் அது நல்லெண்ணத்துடன் செய்யப்பட்டதாகின்றது. நாம் சாட்டும் குற்றம் உண்மையானதா என்பதைக் கூடியவரை நாம் விசாரித்து அறிந்துகொள்ளுதல் அவசியமாகும். தீர விசாரியாமல் யாரோ சொன்னதை வைத்து நாம் குற்றம் சாட்டுதல் கூடாது. குற்றம் சாட்டுவது நேர்மையான நோக்கத்தோடு இருக்கவேண்டும். ஒரு மாஜிஸ்ட்ரேட்டிடம் கொடுக்கப்படும் குற்ற முறையீடும், போலீசாரிடம் நாம் தெரிவிக்கும் முறையீடுகளும் நல்லெண்ணத்தில் எழுந்தவையாக இருந்தால்தான் அவைகளுக்கு இந்த விதிவிலக்குப் பொருந்தும்.

குற்றச்சாட்டில் உள்ளவைகளையெல்லாம் சாட்டியவர் உண்மை யென மெய்ப்பிக்கவேண்டுமென்பதில்லை. சாட்டப்பட்ட குற்றங்கள் உண்மையானவை என்று தாம் நம்புவதாகவும், அவ்வாறு நம்பியே நல்லெண்ணத்தோடு குற்றச்சாட்டுகளைத் தெரிவித்ததாகவும் அவர் காட்டினால் போதுமானது. ஆதலால், குற்றச்சாட்டில் கூறப்பட்டிருந்தவை விசாரணையில் பொய்யானவை என்று நிரூபிக்கப்பட்டாலும், குற்றம் சாட்டியவர் நல்லெண்ணத்துடன் நடந்திருந்தால் அவர் 'அவதூறு'க் குற்றத்திற்கு ஆளாவதில்லை.

## 9. தம் நலனையோ, அடுத்தவர் நலனையோ, பொது நலனையோ காப்பதற்கெனப் பிறர் குணவியல்பு பற்றிக் குறை கூறுதல்

நம்முடைய நலன், அடுத்தவர் நலன், பொது நலன் இவற்றில் ஒன்றைப் பாதுகாப்பதற்கென நாம் பிறருடைய பண்பைப்பற்றியோ குணத்தைப்பற்றியோ குறை கூறலாம். இவ்வாறு குறை கூறுவது நல்லெண்ணத்தில் எழுந்ததாக இருக்கவேண்டும்.

**நம்முடைய நலனைப் பாதுகாப்பது:** நாம் ஒரு வியாபாரம் செய்கிறோம். நம் வாடிக்கைக்காரரில் ஒருவர் கடனாகச் சரக்கு வாங்கினால் பணத்தைக் குறித்த காலத்தில் தருவதில்லை. எனவே, புதிதாக வந்த நம் வேலைக்காரரிடம் அந்த வாடிக்கைக்காரர் கடனாகச் சரக்குகள் கேட்டால் கொடுக்கவேண்டாம் என்றும், அவர் நாணயம் இல்லாதவர் என்றும் கூறுகிறோம். இப்பொழுது வாடிக்கைக்காரரைப்பற்றிக் குறைவாக நம்முடைய வேலைக்காரரிடம் பேசியது நம்முடைய நலனைப் பாதுகாப்பதற்கேயாகும். எனவே, இது அவதூறு ஆவதில்லை.

நம்மைப்பற்றி ஒருவர் குறைவாகக் கூறுகிறார் என்று வைப்போம். நம்மீது அவர் குறைகூறியது சரியன்று என நாம் நிரூபிக்க முயலுகிறோம். இப்பொழுது அவர், நம்மீது கூறிய குறை பொய்யானது, நல்லெண்ணத்தில் கூறப்படாதது என்பதைக் காட்டுவதற்கு அவர்பற்றிய குறைகளை நாம் கூற வேண்டிய அவசியம் ஏற்படலாம். இந்த நிலையில் அவர் குறையைக் கூறுவது குற்றம் ஆவதில்லை. ஏனெனில், நம் நலனைப் பாதுகாப்பதற்கெனவே, அவர் குறையை நாம் கூறுகிறோம்.

ஒருவர் ஒரு பேசும் படத்தைப்பற்றிக் குறைகள் கூறி வானொலியில் விமரிசனம் செய்தார். அந்த விமரிசகர் மக்களின் இயல்பை அறியாதவர் என்றும், பொழுதுபோக்குக் காட்சிகளில் மக்கள் விரும்பும் கூறுகள்பற்றித் தெரியாதவர் என்றும், அறியாமை மிக்க அவரை இனியும் பேசும் படங்களைப்பற்றி விமரிசனம் செய்ய அனுமதிக்க வேண்டாம் என்றும் கூறி அந்தப் படத் தயாரிப்பாளர் வானொலி நிலையத்தினருக்கு எழுதி அனுப்பினார். இது படத்

தயாரிப்பாளரின் நலனுக்கென்ச் செய்யப்பட்டதால், விமர்சகருக்கு எதிரான அவதூறு ஆகாது என்று தீர்ப்பளிக்கப்பட்டது. [Turner Vs. Metro Goldwyn Mayor Pictures Ltd., (1950) I. A.E.R. 449]

ஓர் அரசாங்க ஊழியரைப்பற்றிக் குறை கூறி அவரது மேலதிகாரிக்கு ஒருவர் மனு அனுப்புகின்றார். அந்த மனுவில் உள்ள குற்றச்சாட்டுகளுக்குப் பதில் என்ன என்று கேட்டு, அந்த அரசாங்க ஊழியருக்கு உத்தரவு வருகின்றது. இப்பொழுது அரசாங்க ஊழியர் அந்த மனுவிற்கண்ட விவரங்கள் பொய்யானவை என்றும், அந்த மனு அனுப்பியவருக்கும் தமக்கும் பகைமை இருக்கிறது என்றும், அந்தப் பகைமையின் காரணமாகவே தீய நோக்கத்தோடு பொய்யான மனுவை அவர் அனுப்பியிருக்கிறார் என்றும் அரசாங்க ஊழியர் தமது பதிலில் கூறுகின்றார். இந்தப் பதிலில் மனு அனுப்பியவரைப்பற்றிய குறைகள் கூறப்பட்டே இருக்கின்றன. இருந்தாலும் அரசாங்க ஊழியரின் செயல் அவதூறு ஆகாது. ஏனெனில், அது அவரது நலனைப் பாதுகாப்பதற்கெனச் செய்யப்பட்டதாகும்.

இந்த முறையில் ஒருவர் தமது நலனைப் பாதுகாக்கும் நோக்கத்துடன் பிறர் குறையைக் கூறுவது குற்றம் ஆவதில்லை.

**அடுத்தவர் நலனைப் பாதுகாப்பது:** நம்முடைய உற்றார் உறவினருக்கோ அல்லது மற்றவருக்கோ ஏற்படவிருக்கும் கேடுகளைத் தவிர்ப்பதற்கென, அவர்களின் நலன்களைப் பாதுகாப்பதற்கென நாம் பிறர்பற்றிய குறைகளைக் கூறலாம்.

என்னிடம் வேலை செய்த பணியாளை எனது நண்பர் தம்மிடம் பணியாளாக வைத்துக்கொள்ள எண்ணுகிறார். அதற்குமுன், அந்தப் பணியாளின் நடத்தைபற்றி அவர் தெரிந்துகொள்ள விரும்புவது இயல்பேயாகும். அதுகுறித்து என்னைக் கேட்கிறார். அந்த வேலையாள் என்னுடைய பணத்தைத் திருடியதால் அவனை வேலையிலிருந்து நான் விலக்கியிருந்தேன். இப்பொழுது இந்தத் தகவலை எனது நண்பருக்குத் தெரிவிப்பதா, இல்லையா? இந்த உண்மையை அவருக்குத் தெரிவித்தால்தான் அவர் முன் கவனத்தோடு நடந்துகொள்ள முடியும். நான் வேலையாளின் திருட்டுக் குணத்தைப்பற்றி நண்பருக்குத் தெரிவிக்கவில்லையெனில் நண்பரிடமும் அவன் திருடலாம். எனவே, நண்பரின் நலன் கருதி அவரிடம் வேலையாளின் தீய நடத்தைபற்றித் தெரிவிக்கிறேன். இது அவதூறு ஆகாது.

என் நண்பர் தம் மகளுக்கு ஏற்ற மணமகனைத் தேடிக்கொண்டிருக்கிறார். எனக்குத் தெரிந்த ஒரு வாலிபனைக் குறிப்பிட்டு, அவனைப் பற்றி என்னுடைய கருத்தைக் கேட்கின்றார். அந்த வாலிபன்

நல்லொழுக்கம் இல்லாதவனாக இருக்கின்றான். ஆதலால், அவனது ஒழுக்கக் குறைகளை விளக்கி என் நண்பருக்குக் கடிதம் எழுதுகின்றேன். அவன் மணமகனாகத் தேர்ந்தெடுப்பதற்குத் தகுதியற்றவன் என்று கூறுகிறேன். இவ்வாறு நான் கூறியது வாலிபனைப் பற்றிக் குறைகூறும் செயல்தான். இருந்தாலும் அது எனது நண்பரின் நலனைப் பாதுகாப்பதற்கு என்று கூறப்பட்டதால் அது குற்றமாவதில்லை.

இவ்வாறு, அடுத்தவரின் நலனைப் பாதுகாக்கும் நோக்கத்துடன் பிறருடைய குணங்குறித்து குறைகூறுதல் அவதூறு ஆவதில்லை.

**பொது நலனைப் பாதுகாப்பது:** பொதுமக்களின் நலன்களைப் பாதுகாக்கும் எண்ணத்தால் நாம் ஒருவரின் தன்மை குறித்துக் குறை கூறலாம். கையாடல்குற்றம் செய்து தண்டிக்கப்பட்ட ஒருவர் கோயில் டிரஸ்டியாக நியமனம் செய்யப்படுகிறார் என்று வைப்போம். இவர் குற்றம் செய்து தண்டிக்கப்பட்டவர் என்பதை மேலதிகாரிகளுக்குத் தெரிவிப்பது குற்றமாகாது.

**நீதிபதிகள்:** ஒரு வழக்கை விசாரிக்கும்பொழுது நீதிபதி கூறியவை குறித்து அவர்மீது அவதூறு நடவடிக்கை எடுத்தல் முடியாது. நீதிபதிகள் தங்கள் கடமையைச் செய்வதில் எவ்வித அச்சமும் இன்றி, நடுவு நிலையோடு செயற்பட வேண்டியவர்கள். ஏதாவது கூறினால் அதனால் நாம் குற்றம் இழைத்தவர்களாவோம் என்ற அச்சமோ, சந்தேகமோ அவர்களுக்கு ஏற்படக்கூடாது. அப்பொழுதுதான், நீதி வழங்குவது நேர்மை தவறாது அமைதல் இயலும். நீதி வழங்கும் நேர்மையைப் பாதுகாக்கும் பொது நலக் கொள்கையைப் பேணும் வகையில், வழக்குகளை விசாரிக்கும் பொழுது நீதிபதிகள் கூறும் எவையும் அவதூறெனக் கொள்ளப் படுவது இல்லை [Sullivan V. Norton (1886) 10 Mad. 28 F.B.]

வழக்கறிஞர்கள்: வழக்கறிஞர்கள் தங்கள் கட்சிக்காரர்களின் சார்பில் வழக்குகளை நடத்துகின்றனர். எதிர்தரப்புச் சாட்சிகளைக் குறுக்கு விசாரணை செய்வது வழக்கறிஞர்களின் கடமையாகும். ஒரு சாட்சி கூறிய சாட்சியத்தை நம்புவதா இல்லையா என்பது, அந்த சாட்சியின் தன்மையையும், தகுதியையும், இதர சூழ்நிலைகளையும் பொறுத்திருக்கிறது. எனவே, சாட்சியின் ஒழுக்கம், சீலம், நடத்தை இவை பற்றிக் குறுக்கு விசாரணையில் கேட்பதுண்டு. அவ்வாறு கேட்கப்படும் கேள்விகள் சாட்சியின் மதிப்பைக் குறைப்பதாக இருக்கலாம். இந்நிலையில், அவதூறான கேள்விகளைக் கேட்கும் வழக்கறிஞர்மீது நடவடிக்கை எடுக்கலாமா என்பது கேள்வி.

இங்கிலாந்தில் பாரிஸ்டர்களுக்குக் காட்டப்படும் சலுகை அளவற்றது. 'வழக்கறிஞருக்குள்ள சிறப்பு உரிமைகளும் அதிகாரமும் எல்லையில்லாதவை. தம் உயிருக்கும்; வாழ்விற்கும், நற்பெயருக்கும் கட்சிக்காரர் தம்முடைய வழக்கறிஞரையே நம்பியிருக்கின்றனர். எனவே, சட்டமும் அவருக்கு அளவற்ற பேச்சு சுதந்திரத்தை அளிக்கின்றது. சமுதாய வாழ்வின் அடிப்படை நலன்கள் பற்றியும், ஆன்மாவின் ஆழமான உள்ளுணர்வுகள்பற்றியும் அவர் பேசவேண்டிய நிலை ஏற்படலாம். அப்பொழுதெல்லாம் அவர் தமது கடமையுணர்வால்—கட்சிக்காரர்பற்றிய கடமையுணர்வால்—கட்டுண்டு செயல்படுகின்றனர். கட்சிக்காரரின் உரிமை, நீதிமன்றத்தைப் பொறுத்துத் தமக்குள்ள கடமை, நியாய வரம்பினுள் நிற்கவேண்டும் என்ற கட்டுப்பாட்டுணர்வு இவைகளுக்குத் தக்கபடி தமக்கு அளிக்கப்பட்டுள்ள தனி உரிமைகளையும் அதிகாரங்களையும் தவறாகப் பயன்படுத்தாமல் வழக்கறிஞர் செயற்படுகின்றனர். இவ்வாறு நீதிமன்றத்தில் வழக்குகளை நடத்தும்பொழுது வழக்கறிஞர்களுக்குள்ள உரிமை குறித்து Kennedy V. Brown (1863) - 32 L J என்ற வழக்கில் கூறப்படுகிறது. இது இங்கிலாந்தில் உள்ள நிலை.

ஆனால், நம் நாட்டில் உள்ள நிலை சிறிது வேறுபட்டது. வழக்கறிஞர்கள் நீதிமன்றத்தில் தங்கள் கடமையைச் செய்யும் வகையில் அவதூறான, பிறரை இழிவுபடுத்தும் உரைகளைக் கூறலாம். இதை வைத்து அவர் தீய எண்ணத்துடன் அவ்வாறு கூறினர் என்று கொள்ளுவதில்லை. நீதிமன்றத்தில் வழக்கறிஞர் கூறும் உரைகள் எல்லாம் நல்லெண்ணத்தோடு கூறப்படுகின்றன என்பதாகவே கொள்ளப்படுகின்றன. தீய நோக்கத்தோடுதான் பிறரை இழிவுபடுத்தும் உரை கூறப்பட்டது என்பதை மெய்ப்பிப்பது வழக்கறிஞர் மீது அவதூறுக் குற்றம் சாட்டுபவரின் பொறுப்பாகும். இவ்வாறு, வழக்கறிஞர்களின் நிலையை சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி Wallace என்பார் விளக்கியுள்ளார். [Mir Anwaruddin V. Fathim Bai Abidin, 50 Madras 667].

ஒரு குற்ற வழக்கில் சாட்சியாக வந்த ஒரு பெண்ணைக் குறுக்கு விசாரணை செய்கையில் அவளது நன்னடத்தைக்கும் கற்புக்கும் களங்கம் விளைக்கும் முறையில் அவசியமல்லாத கேள்விகள் கேட்கப்பட்டன என்று குற்றம் சாட்டி வழக்கறிஞர் மீது ஓர் அவதூறு வழக்குத் தொடரப்பட்டது. அவ்வாறான கேள்விகளை வழக்கறிஞர் தீய எண்ணத்தோடோ அல்லது தனிப்பட்ட பகைமையைத் தீர்த்துக்கொள்ளவோ கேட்டார் என்று அவர்மீது பழி கூறப்படவில்லை; அது நிரூபிக்கப்படவுமில்லை. ஆதலால் வழக்கறிஞர் அவதூறுக் குற்றத்திற்கு ஆளாகமாட்டார் என்று

தீர்ப்பளிக்கப்பட்டது. [Bashyam Ayyangar, V. Andal Ammal (1934) M. W. N. 481]

ஓர் ஊரில் நற்பெயருடன்வாழும் ஒருவர் ஒரு வழக்கில் சாட்சியாக வந்தார். அவர் ஒழுக்கத்தில் உயர்ந்தவர் எனப் பெயரும் புகழும் பெற்றவர். அவரைக் குறுக்கு விசாரணை செய்யும்பொழுது, அவர் திருடுபவரா, சூதாடுபவரா என்றும், அவருடைய மனைவி விபசார வாழ்க்கை நடத்துகின்றுளா என்றும் கேள்விகள் கேட்கப்பட்டன. சாட்சி வாழும் அதே ஊரில்தான் இந்தக் கேள்விகளைக் கேட்ட வக்கீலும் வாழ்கின்ருர். அந்த வக்கீல்மீது அவதூறு வழக்கு இடப்பட்டது. சாட்சியின் நற்பெயர்பற்றி நன்கு தெரிந்திருந்தும், வழக்கிற்கு சம்பந்தம் இல்லாத முறையில் அவரது மனைவியின் கற்பிற்குக் களங்கம் கற்பித்துக் கேள்விகளைக் கேட்டதால் அந்த வக்கீல் அவதூறுக் குற்றத்திற்கு ஆளாகின்ருர் என்று தீர்ப்பளிக்கப்பட்டது. வக்கீல் அவதூறுக் குற்றத்திற்குத் தண்டிக்கப்பட்டார். [Fakir Prasad Ghose V. Kripasindu Pal Bhuti (1926) 54 Calcutta 137].

எனவே, கட்சிக்காரருக்காக வழக்கை நடத்தும் வக்கீல், வழக்கில் வரும் சாட்சியின் ஒழுக்கத்தையோ, சீலத்தையோ இழிவு படுத்தும் கேள்விகளைக் கேட்கலாம். ஆனால், அவை நல்லெண்ணத் துடனும், தங்கள் கட்சிக்காரரின் நலனைப் பாதுகாப்பதற்கெனவும் கேட்கப்பட்டிருத்தல் வேண்டும்.

தமது கட்சிக்காரர் கொடுக்கும் தகவலின் பேரிலேயே வழக்கறிஞர் சாட்சிகளைக் குறுக்கு விசாரணை செய்கின்ருர். அந்தத் தகவல்கள் உண்மையா, பொய்யா என்று விசாரித்து அறிதல் வழக்கறிஞரால் முடியாது; எனவே, அத் தகவல்களை நம்பி அவைகளின் அடிப்படையில் கேள்விகள் கேட்பது நல்லெண்ணத்தோடு கடமையாற்றுவதாகும்.

**வழக்கில் சம்பந்தப்பட்டவர்கள், சாட்சிகள்:** இவர்கள் கூறும் வாக்குமூலங்களிலும் சாட்சியங்களிலும் அவதூருன தகவல்களைக் கூறினுல் அதற்கு அவர்கள் பொறுப்பாகின்றனர். அவை நல்லெண்ணத்தோடு தங்கள் நலனைக் காப்பதற்கென்று கூறப் பட்டன என்பதை அவர்கள் காட்டினுல்தான் அவதூறுக் குற்றப் பொறுப்பில் இருந்து தப்ப முடியும்.

சாட்சிகளைப் பொறுத்தவரை, அவர்கள் சில கேள்விகளுக்குப் பதில் கூறுவதற்குக் கடமைப்பட்டிருக்கின்றனர். பதில் கூற முடியாது என்று அவர்கள் மறுப்பதற்கில்லை. இவ்வாறு காட்டாய மாகப் பதிலளிக்க வேண்டிய நிலையில் அவர்கள் கூறிய சாட்சியம் குறித்து, அவர்கள் மீது அவதூறு வழக்குத் தொடருவதற்கில்லை.

இந்தியச் சான்றியல் சட்டத்தின் 132 ஆம் பிரிவு அவர்களுக்கு இந்தப் பாதுகாப்பளிக்கின்றது. [Nanjayya Pillai V. Suppanna Goundan (*1954*) M. W. N. *399*].

**செய்திப் பத்திரிகைகள்:** செய்திப் பத்திரிகைகளைப் பொறுத்தவரையில் அவைகளுக்கென்று தனிச் சலுகை சட்டத்தில் ஏதும் இல்லை. தனிப்பட்ட ஒருவர், அவதூறுக் குற்றத்திற்கு எந்தெந்த நிலையில் ஆளாகின்றனரோ அந்தந்த நிலைகளில் எல்லாம் செய்திப் பத்திரிகையும் குற்றத்திற்கு ஆளாகின்றது. எனவே, பத்திரிகைகளுக்குத் தனிச் சுதந்திரம் இருப்பதாக எண்ணுவது தவறாகும்.

**சட்டமன்ற உரைகள்:** சட்டமன்ற உறுப்பினர்கள் சட்டமன்றத்தில் ஆற்றும் உரைகள் சிறப்புரிமை (Privileges) பெற்றவை. எனவே, அந்தப் பேச்சுக்களில் எவரைப்பற்றிய இழிவுரை இருந்தாலும், எவர்மீது குற்றமோ குறையோ சாட்டப்பெற்றிருந்தாலும், அது குறித்து எவ்வித நடவடிக்கையும் எடுக்க முடியாது. அத்தகைய உரையாற்றியவர்கள் அவதூறுக் குற்றத்திற்கு ஆளாவது இல்லை.

நாட்டின் ஆட்சி முறை சீராகவும் தூய்மையானதாகவும் இருக்க வேண்டும் எனில், சட்டமன்றத்தில் பேசும் உறுப்பினர்கள் தங்கள் கருத்துகளை எவ்வித அச்சமும் ஒளிவுமறைவு மின்றி வெளியிட வேண்டியது அவசியமாகிறது. எனவே, நம் நாட்டு மத்திய சட்ட மன்றங்கள், இராச்சியங்களிலுள்ள சட்ட மன்றங்கள், இவைகளின் குழுக்கள், இங்கு நடைபெறும் நடவடிக்கைகள் குறித்து உறுப்பினர்மீது எவ்வித நடவடிக்கையும் எடுக்க முடியாது. இந்தப் பாதுகாப்பு நம் அரசியல் சட்டத்தில் (*194* ஆம் பிரிவு) அளிக்கப்பட்டிருக்கிறது. இங்கிலாந்து நாட்டுப் பாராளுமன்றத்திற்குள்ள இந்தத் தனிஉரிமையும் பாதுகாப்பும் நம்நாட்டு சட்டமன்றங்களுக்கு உண்டு.

சட்ட மன்றங்களுக்கு வெளியே சட்டமன்ற அங்கத்தினர்கள் பேசும் பேச்சுக்களுக்கு இந்தப் பாதுகாப்பு இல்லை.

இந்த வகையில் ஒருவர் தம் நலன், பிறர் நலன், பொது நலன் இவைகளைப் பாதுகாப்பதற்கென்று நல்லெண்ணத்துடன் மற்றவரின் குணவியல்புபற்றிக் குறை கூறுவது அவதூறு ஆவதில்லை.

### 10. பிறர் நலனையோ, பொது நலனையோ காப்பதற்கென ஒருவரைக் குறித்து மற்றவரை எச்சரித்தல்

ஒருவருடைய குறையைக் கூறுதல் ஒன்று. அவரைப்பற்றிக் குறை ஒன்றும் கூறாமல் அவரைக் குறித்து மற்றவரை எச்சரிப்பது

மற்றொன்று. நமக்கு வேண்டிய ஒருவருடைய நலனைப் பாதுகாப்பதற்கென்று, "கண்ணன் வாங்கிய கடனைக் கொடுக்காதவன்" என்று கூறுகிறோம். அதே நோக்கோடு 'கண்ணனுக்குக் கடன் எதுவும் கொடுக்கவேண்டாம்' என்று அவரை எச்சரிக்கையும் செய்யலாம். இவ்வித எச்சரிக்கையால் ஓரளவு கண்ணனின் மதிப்பிற்கு இழுக்கு ஏற்படத்தான் செய்கின்றது. இருந்தாலும், இது போன்ற எச்சரிக்கை பிறரின் நலனைப் பாதுகாப்பதற்கு என்றோ, அல்லது பொதுநலனுக்கென்றோ செய்யப்பட்டால் அது குற்றமாவதில்லை. அந்த எச்சரிக்கை நல்லெண்ணத்தில் எழுந்ததாக இருத்தல்வேண்டும்.

பிறரது குறையையோ, குற்றத்தையோ வெளியிடும் செயல்கள் அவதூறுக் குற்றங்கள் ஆகாத சூழ்நிலைகள் எவை என்று இதுவரை கண்டோம். அவையாவன :—

(1) உண்மையான பிறர் குறையை உற்ற பொது நன்மைக்கென உரைத்திடுதல்.

(2) பொது ஊழியரின் பொதுப்பணி நடத்தையையும் குணத்தையும் பற்றி அபிப்பிராயம் தெரிவித்தல்.

(3) பொதுக்காரியங்கள் சம்பந்தமான ஒருவருடைய நடத்தை, குணம் இவை குறித்து அபிப்பிராயம் தெரிவித்தல்.

(4) நீதிமன்ற நடவடிக்கைகள், தீர்ப்புகள் இவைகளை வெளியிடுதல்.

(5) தீர்வடைந்த வழக்கு, வழக்கில் சம்பந்தப்பட்டவர்களின் நடத்தை, இவை பற்றிக் கருத்துத் தெரிவித்தல்.

(6) அரங்கேறிய செயல் குறித்து அபிப்பிராயம் தெரிவித்தல்.

(7) ஒருவர் நடத்தையை உற்ற அதிகாரம் பெற்றவர் கண்டனம் செய்தல்.

(8) ஒருவரைப்பற்றி அவர்மீது அதிகாரம் உள்ளவரிடம் குற்றம் சாட்டுதல்.

(9) தம் நலனையோ, அடுத்தவர் நலனையோ, பொது நலனையோ காப்பதற்கெனப் பிறர் குணவியல்பு பற்றிக் குறை கூறுதல்.

(10) பிறர் நலனையோ, பொது நலனையோ காப்பதற்கென ஒருவரைக் குறித்து மற்றவரை எச்சரித்தல்.

இந்தப் பத்து நிலைகளும் குற்றவியல் சட்டத்தின் 499 ஆம் பிரிவிற்கு விதிவிலக்குகளாகத் ( exceptions ) தரப்பட்டிருக்கின்றன.

**அவதூறுச் செய்திகளை அச்சடிப்பவரும் விற்பவரும் குற்றவாளிகள்**

அவதூறான செய்தியை அச்சடிப்பவரும், அதை விற்பவரும் குற்றவாளிகள் என்று சட்டம் கூறுகிறது. இவர்களுக்கு இரண்டு ஆண்டுகள்வரை சிறைத் தண்டனை விதிக்கப்படலாம் (501, 502ஆவது பிரிவுகள்).

அவதூறான ஒரு செய்தியைக் கூறுவதைவிட, அதை மீண்டும் வெளியிடுவதுதான் அக் குற்றத்தின் தன்மையை அதிகப்படுத்துகின்றது. எனவே, பலருமறிய வெளியிடுவதற்குச் சாதகமாக, அதை அவதூறு எனத் தெரிந்தும் அச்சடிப்போரையும், விற்பவர்களையும் சட்டம் குற்றத்திற்குப் பொறுப்பாக்குகிறது. எனவே, ஒரு செய்திப் பத்திரிகையில் அவதூறான செய்தி ஒன்று வெளியாகி இருந்தால் அதற்கு அச் செய்தியை அனுப்பியவர், அப் பத்திரிகையின் ஆசிரியர், அதை அச்சடிப்பவர், அதை விற்பவர்கள் எல்லோருமே குற்றவாளிகள் ஆகின்றனர். அச்சடிப்பவருக்கும் விற்பவருக்கும் அது அவதூறான செய்தி என்பது தெரிந்திருக்கவேண்டும். அவ்வாறு அவர்களுக்குத் தெரியாவிடில் அவர்கள் குற்றவாளிகள் ஆவதில்லை.

**வழக்கிடும் முறை**

அவதூறுக் குற்றம் எவர் குறித்துச் செய்யப்பட்டதோ அவருடைய மனுவின் பேரில்தான் நீதிமன்றம் அவதூறு வழக்கை விசாரணைக்கு எடுத்துக்கொள்ளுகிறது (குற்ற வழக்கு முறைச் சட்டம் 198ஆம் பிரிவு).

ஆனால், ஒரு பெண்ணின் கற்புக்குக் களங்கம் விளைக்கும் அவதூறு குறித்து அந்தப் பெண்ணின் கணவன் வழக்கிடலாம்.

**அவதூறுச் செயல் தீங்காகவும் (Tort), குற்றமாகவும் (Crime) இருக்கிறது**

அவதூறு என்பதைச் சட்டம் ஒரு தீங்காகவும் (Tort), ஒரு குற்றமாகவும் (Crime) கொள்ளுகிறது. அஃதாவது, அவதூறு இழைப்பவர்மீது உரிமை வழக்கிட்டு (Civil case) அவதூறால் விளைந்த மதிப்பிழப்பிற்குத் தக்கபடி நட்டஈடு பெறும் உரிமை அவதூறால் பாதிக்கப்பட்டவருக்கும் உண்டு. மேலும் அவதூறு இழைத்தவர்மீது குற்றவழக்கிட்டு (Criminal case) அவரைத் தண்டனைக்கும் ஆளாக்கலாம்.

அவதூறுக் குற்றம் எவ்வாறு இழைக்கப்படுகிறது என்று விரிவாகக் கண்டோம். ஆனால், அதைத் தீங்காகக் கொள்ள வேண்டும் எனில், அதற்கு வேண்டிய கூறுகள் வேறுபடுவன.

**அவதூறுக் குற்றத்திற்கும் (Defamation as Crime) அவதூறுத் தீங்கிற்கும் (Defamation as Tort) உள்ள வேறுபாடுகள்**

1) அவதூறுக் குற்றத்தை இழைப்பவர் பிறர் மதிப்பிற்கு இழுக்கு ஏற்படுத்தவேண்டும் என்ற கருத்தோடு அல்லது அவ்வாறு இழுக்கு ஏற்படலாம் என்று தெரிந்து செயற்பட்டிருக்க வேண்டும்.

அவதூறுத் தீங்கு விளைவிப்பவரின் மனநிலை பற்றிச் சட்டம் கவனிப்பது இல்லை. அவர் அதை எந்தக் கருத்தோடு செய்தார் என்பது முக்கியமானதன்று.

(2) அவதூறுக் குற்றத்தால் ஒருவருக்கு மதிப்பிழப்பு ஏற்பட்டிருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. எவரைக் குறித்து அவதூறு இழைக்கப்பட்டதோ அவருக்கு எவ்வித மதிப்பிழப்பும் ஏற்படவில்லையென்றாலும், அவதூறுச் செயலைச் செய்தவர் குற்றவாளி ஆகின்றார், தண்டனை அடைகின்றார்.

அவதூறின் பேரில் ஏற்படும் தீங்கியல் வழக்கில் உள்ள பரிகாரம் வாதிக்கு நட்ட ஈடு கொடுப்பதாகும். நட்டஈடு கொடுப்பதற்கு அடிப்படையாக வாதிக்கு மதிப்பிழப்பு ஏற்பட்டிருத்தல் வேண்டும். மதிப்பிழப்பு ஏற்படவில்லை எனில், வாதிக்கு நட்டஈடு கிடைப்பதில்லை. எனவே, அவதூறுத் தீங்கில் வாதிக்கு மதிப்பிழப்பு ஏற்பட்டிருத்தல் வேண்டும்.

(3) ஒரு செயல் அவதூறுக் குற்றமா என்பது அதைச் செய்தவரின் கருத்து, அச்செயலின் தன்மை இவற்றைப் பொறுத்தது.

ஒரு செயல் அவதூறுத் தீங்கா என்பது அந்தச் செயலின் விளைவைப் பொறுத்தது.

# 19. பொது அமைதி குலைக்கும் குற்றங்கள்

## (Offences Against the Public Tranquility)

அமைதியான வாழ்வே அமைந்த நல்வாழ்வாகும்—பலர் கூடிச் செயல்பட்டால் பயம் விளைத்தல் எளிதாகும்— 'கூட்டம்' என்று எதை கூறுகிறோம்?—சட்ட விரோதக் கூட்டம் (unlawful assembly) —சட்ட விரோதக் கூட்டத்தில் இருப்பது குற்றமாகும்—கூடியிருக்கும் செயலே குற்றமாகிவிடுகிறது—கூட்டத்தின் குறிக்கோள் குற்றம் புரிவதாக இருக்க வேண்டியதில்லை—எந்தக் கூட்டமும் சட்ட விரோதக் கூட்டமாக மாறலாம்—கலகம் செய்தல் (rioting)—'சேருங் குற்றப் பொறுப்பு'—இதன் விளக்கம்—கூட்டுக் குற்றப் பொறுப்பும் சேருங் குற்றப் பொறுப்பும்—கூலி கொடுத்துச் சட்ட விரோதக் கூட்டஞ் சேர்த்தல்—கலைந்து செல்ல உத்தரவிட்டால் கூட்டம் கலைந்து விடவேண்டும்—ஓர் இடத்தை உடையவரின் பொறுப்பு—சொத்தின் மீது பாத்தியதை கொண்டாடுபவரின் பொறுப்பு—'பொது இடச் சச்சரவு' (affray)—வேறுபட்ட வகுப்பினரிடை வெறுப்பை வளர்ப்பது குற்றமாகும்.

### அமைதியான வாழ்வே அமைந்த நல் வாழ்வாகும்

பொது வாழ்வில் அமைதி நிலவ வேண்டும். அமைதியான வாழ்வே அமைந்த நல்வாழ்வாகும். இந்த அமைதியை நிலை நிறுத்துவது அரசின் கடமை.

மக்கள் உள்ளத்தின் அமைதியே உண்மையான அமைதி. ஒருவர் மனத்தில் அச்சம் ஏற்பட்டால் அவரது மன அமைதி குலைந்து விடுகிறது. மக்கள் மனத்திலே எவ்வித அச்சமும் எழாதவாறு வாழ்வு அமைந்தால்தான், அதை அமைதியான வாழ்வு என்கிறோம்.

எனவே, ஒருவருடைய நடத்தையால் மற்றவருக்கு அச்சம் ஏற்படாமல் சட்டம் கண்காணிக்கிறது. ஒரு தனி நபர் மற்றொருவரை வேண்டுமென்றே அச்சுறுத்தினால் அது 'மிரட்டல்' (அச்சுறுத்தல்—crimial intimidation) என்ற குற்றமாகும். அது பற்றிப் பின்னால் காண்போம். தனி ஒருவர் பிறருக்கு அச்சம்

உண்டாக்குவதைச் சட்டம் தடை செய்வதைப் போலவே, பலர் கூடிப் பொது மக்களுக்கு அச்சம் உண்டாக்குவதையும் சட்டம் தடை செய்கிறது. பொதுமக்கள் மனத்தில் அச்சத்தை விளைவிக்கும் செயல்களைப் பொது அமைதிக்கு மாறான குற்றங்கள் (offences against the public tranquility) எனச் சட்டம் விதிக்கிறது.

**பலர் கூடிச் செயற்பட்டால் பயம் விளைத்தல் எளிதாகும்**

ஒரு மனிதன் தன்னந்தனியாகப் பொதுமக்களின் மனத்தில் அச்சத்தை ஏற்படுத்துவது சாதாரணமாக இயலுவதில்லை. ஆனால், ஒரு கூட்டத்தினர் அவ்வாறு அச்சத்தை விளைவித்து விடலாம். ஓர் அளவிற்கு அதிகமான பேர்கள் கூடி முயன்றால் பொதுமக்களைப் பயமுறுத்தி அவர்கள் வாழ்வின் அமைதியைக் குலைத்துவிடுவது எளிதாகும்.

ஒரு குற்றமான செயலை ஒருவரோ அல்லது இருவரோ செய்ய முடியாமல் போகலாம். ஆனால், ஒரு கூட்டத்தினர் அதை எளிதில் செய்துவிடலாம். எனவே, ஒரு தகாத செயலைச் செய்வதற்கென்று ஒரு கூட்டம் கூடிவிட்டது எனில், அக்கூட்டத்தினரின் ஆற்றல் பெருகுகிறது; பிற மக்கள் மனத்தில் அச்சத்தையும் எழுப்புகிறது. எனவே, குற்றங்கள் அல்லது தகாத செயல்கள் செய்யும் குறிக்கோளுடன் கூட்டங்கள் கூடுவதைச் சட்டம் தடை செய்கிறது.

**'கூட்டம்' என்று எதைக் கூறுகிறோம்?**

ஐந்து அல்லது அதற்கு மேற்பட்ட நபர்கள் கூடினால் அதைக் 'கூட்டம்' (assembly) என்று சட்டம் கருதுகிறது.

நல்ல காரியங்கள் பலவற்றிற்கும் மக்கள் கூடுகின்றனர். திருமணப் பந்தலிலும், திருக்கோவில்களிலும் கூடுகிறோம். நல்விழாக் கொண்டாடவும், நல்லுரைகள் கேட்பதற்கும் மக்கள் கூடுகின்றனர். அரசியல் இயக்கங்களுக்கும், அரிய காரியங்களைச் செய்வதற்கும் மக்கள் கூடுவது அவசியமாகிறது. எனவே, மக்கள் ஆயுதங்கள் ஏதுமின்றி அமைதியாகக் கூடி இயங்குவதை ஓர் அடிப்படை உரிமையாக (fundamental right) நம் அரசியல் சட்டம் விதிக்கின்றது. இம்மாதிரித் தக்க காரியங்களைக் குறிக்கோளாகக் கொண்டு மக்கள் கூடுவதைக் குற்ற இயல் சட்டம் தடை செய்வதில்லை.

**சட்டவிரோதக் கூட்டம்**

ஆனால், தகாத செயல்களைக் குறிக்கோளாகக்கொண்டு கூட்டம் கூடுவதைச் சட்டம் அனுமதிப்பதில்லை. தகாத செயல்களைப் புரிவதற்கென்று ஐந்து அல்லது அதற்கு மேற்பட்ட பேர்கள் கூடினால் 'அந்தக் கூட்டத்தைச் 'சட்ட விரோதக் கூட்டம்' (unlawful assembly) எனச் சட்டம் விதிக்கிறது.

எந்த விதச் செயல்களைக் குறிக்கோளாகக் கொண்டு கூட்டங் கூடலாகாது என்பதைச் சட்டத்தில் காணுகிறோம். விலக்கப்பட்ட தகாத செயல்களாவன:-

1) வன்முறையில் தாக்கியோ, தாக்கப்போவதாகக் காட்டியோ, அரசு, சட்டசபை, அரசாங்க ஊழியர்கள் இவர்களைப் பயங்காட்டுவது.

2) சட்டப்படியான உத்தரவுகள் நிறைவேற்றப்படுவதை எதிர்ப்பது.

3) சொத்தழிப்பது (mischief), அத்துமீறி நுழைவது (criminal trespass), வேறு குற்றங்கள் இழைப்பது.

4) வன்முறையில் தாக்கியோ, தாக்கப் போவதாகக் காட்டியோ தங்கள் உரிமைகளை நிலைநாட்டுவது.

ஒரு சொத்தின் உடைமையைக் கைப்பற்றுவது, பிறர் அனுபவித்துக்கொண்டிருக்கும் பாதை உரிமை, நீரெடுக்கும் உரிமை போன்ற வசதியுரிமைகளைப் பறிப்பது.

5) சட்டப்படியான கடமையை ஒருவர் செய்வதைத் தடுப்பது அல்லது அவர் சட்டப்படி செய்ய வேண்டாததைச் செய்யும்படி வற்புறுத்துவது.

மேலே கூறப்பட்ட செயல்களில் எதையேனும் குறிக்கோளாகக் கொண்டு ஐந்து அல்லது அதற்கு மேற்பட்ட பேர்கள் கூடினால் அக்கூட்டம் 'சட்ட விரோதமான கூட்டம்' (unlawful assembly) ஆகிறது (141 ஆவது பிரிவு).

## 'சட்ட விரோதக் கூட்ட'த்தில் இருப்பது குற்றமாகும்

ஒரு கூட்டம் சட்ட விரோதமானது என்பதைத் தெரிந்தும் அக்கூட்டத்தில் சேருவது, அல்லது அக்கூட்டத்தில் தொடர்ந்து சேர்ந்திருப்பது, இவை குற்றமான செயல்களாகும்.

சட்ட விரோதக் கூட்டத்தில் சேர்ந்திருப்போர் ஒவ்வொருவரையும் 'சட்ட விரோதக் கூட்டத்தினர்' (member of unlawful assembly) என்று சட்டம் கொள்ளுகிறது. சட்ட விரோதக் கூட்டத்தினராகுங் குற்றத்திற்கு ஆறு மாதச் சிறைத் தண்டனையோ, அபராதமோ விதிக்கப்படலாம் (142, 143ஆவது பிரிவுகள்).

## கூடியிருக்கும் செயலே குற்றமாகிவிடுகிறது

இந்தக் குற்றத்தின் தன்மையை நாம் நன்கு உணரவேண்டும். சட்ட விரோதக் கூட்டத்தினர் எந்த விதக் குறிப்பிட்ட

குற்றத்தையோ, தகாத காரியத்தையோ செய்திருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. மேலே கூறப்பட்ட தகாத செயல்களைக் குறிக்கோளாகக் கொண்டு ஐந்து பேர்கள் அல்லது அதற்கும் அதிக மானவர்கள் கூடினாலே அது ஒரு தனிக் குற்றமாகி விடுகிறது. தகாத காரியத்தைச் செய்யவேண்டும் என்று கூட்டமாகக் கூடிய செயலே ஒரு குற்றமாகும். அந்தக் கூட்டத்தில் சேர்ந்த ஒவ்வொருவரும் சட்ட விரோதக் கூட்டத்தைச் சேர்ந்தவர்—சட்டவிரோதக் கூட்டத்தினர்—என்ற முறையில் குற்றவாளி ஆகின்றார். கூட்டத்தின் குறிக்கோளான தகாத செயல்களைக் கூட்டத்தினர் புரிந்திருக்க வேண்டியதில்லை. எனவே, சட்ட விரோதக் கூட்டத்தில் சேருவதும், அதில் இருப்பதும் கூடாது என்பதை நாம் நன்கு தெரிந்து கொள்ள வேண்டும்.

**கூட்டத்தின் குறிக்கோள் குற்றம் புரிவதாக இருக்கவேண்டியதில்லை**

கூட்டத்தினரின் குறிக்கோள் தண்டிக்கத்தக்க குற்றங்களைப் புரிவதாகத்தான் இருக்கவேண்டும் என்ற கட்டாயம் இல்லை, முன்னர்க் கூறப்பட்ட தகாத செயல்களின் பட்டியலில் 'உரிமைகளை நிலைநாட்டுவது' என்ற செயலையும் காணுகிறோம். நமக்குச் சொந்தமான நிலத்தை இன்னொருவர் ஆக்கிரமித்துக்கொண்டார் எனில், அந்த ஆக்கிரமிப்பை அகற்றி நிலத்தை நம் வசமாக்குவதற்கு நமக்கு உரிமை உண்டு. ஆனால், அந்த உரிமையை நாம் நீதிமன்றத்தின் வாயிலாகவோ அல்லது வன்முறையில்லாத வழியிலோதான் நிலைநாட்டவேண்டும். இதுவன்றி, நாம் பத்துப் பேர்களைக் கூட்டமாகச் சேர்த்துக் கொண்டு ஆக்கிரமிப்பாளரை அச்சுறுத்தி நம் நிலத்தின் உடைமையைக் கைப்பற்றுவது கூடாது. அவ்வாறு நிலத்தைக் கைப்பற்றும் நோக்கத்துடன் கூட்டம் கூடுவதும் 'சட்ட விரோதக் கூட்டமே'யாகும்.

ஒவ்வொருவரும் தங்கள் உரிமைகளை நிலைநாட்டும் வாயிலாகக் கூட்டத்தைத் திரட்டி வன்செயல்களில் இறங்கிவிட்டால் பொது அமைதி குலைந்துவிடும் என்பதில் ஐயம் இல்லை: எனவேதான், நம்முடைய உரிமைகளை நிலைநாட்டுவதற்கு என்றுகூட வன்முறையைக் கையாளும் கூட்டத்தைச் சேர்க்கவோ, கூட்டத்தில் சேரவோ கூடாது என்று சட்டம் விதிக்கிறது.

சட்ட விரோதக் கூட்டத்தைக் கலைந்து செல்லுமாறு உத்தரவிடப்பட்டும் அது கலையாமல் இருந்தால் அக் கூட்டத்தினருக்கு அதிகமான தண்டனை விதிக்கப்படுகிறது. இரண்டு ஆண்டுச் சிறைத் தண்டனைவரை அவர்களுக்கு விதிக்கலாம். கொடிய ஆயுதங்களைத் தாங்கிக்கொண்டு சட்ட விரோதக் கூட்டத்தினராக இருப்

போருக்கும் இரண்டாண்டுச் சிறைத் தண்டனைவரை விதிக்கப்படலாம்.

**எந்தக் கூட்டமும் சட்ட விரோதக் கூட்டமாக மாறலாம்**

முதலாவதாகக் கூடும்பொழுது கூட்டம் சட்ட விரோதம் இல்லாததாக இருக்கலாம். ஆனால், கூட்டத்தினரின் செயலால் அக்கூட்டம் சட்ட விரோதக் கூட்டமாக மாறலாம்.

படக்காட்சிக்கு டிக்கட்டுகள் வாங்குவதற்கு என்று கொட்டகை முன்பு கூட்டம் கூடுகிறது. இவ்வாறு கூடுவது சட்ட விரோதமான செயல் அன்று. டிக்கட்டுகளைப் பெறமுடியாத காரணத்தால் கூட்டத்தினர் அக் கொட்டகைமீது கற்களை எறிகின்றனர் என வைப்போம். கூட்டத்தினரின் இச்செயல் குற்றமானதாகும். உடனே, போலீசார் அங்கு வந்து அக்கூட்டத்தைக் கலைந்து போகுமாறு உத்தரவிடுகின்றனர். இருந்தும் அக்கூட்டம் கலையவில்லை. இப்பொழுது அக்கூட்டம் 'சட்ட விரோதக் கூட்டம்' ஆகிறது. அக்கூட்டத்தில் இருந்தவர் ஒவ்வொருவரும் 'சட்ட விரோதக் கூட்டத்தினர்' ஆகின்றனர். படக்காட்சிக்கு நுழைவுச் சீட்டுகளை வாங்க வேண்டும் என்ற குறிக்கோளுடன் நின்ற கூட்டம் சட்ட விரோதக் கூட்டம் அன்று; ஆனால், அக்கூட்டத்தினரின் பின் நடவடிக்கைகளால் அது சட்ட விரோதக் கூட்டமாக மாறிவிட்டது. இவ்வாறு, ஆரம்பத்தில் ஒரு கூட்டம் சட்ட விரோதமற்றதாக இருந்து, பிறகு சட்டவிரோதக் கூட்டமாக மாறுவது உண்டு.

முதற் கூட்டத்தில் இருந்தவர்கள் அது சட்ட விரோதக் கூட்டமாக மாறுகிறது என்பதை அறிந்ததும் கூட்டத்தை விட்டு அகன்றுவிடவேண்டும். அவ்வாறு அகலாமல் தொடர்ந்து அக்கூட்டத்தோடு சேர்ந்து இருப்பவர்கள் சட்ட விரோதக் கூட்டத்தினர் ஆகிவிடுகின்றனர். எனவே, நல்ல நோக்கத்தோடு கூடிய ஒரு கூட்டத்தில் நாம் சேர்ந்திருந்தாலும், அது சட்ட விரோதக் கூட்டமாக மாறிய உடன் நாம் அக்கூட்டத்திலிருந்து பிரிந்து விடவேண்டும்.

**'கலகம் செய்தல்' (Rioting)**

சட்ட விரோதக் கூட்டத்தினர் அல்லது அக்கூட்டத்தினரில் ஒருவர், அக்கூட்டத்தின் குறிக்கோளை நிறைவேற்றுவதற்கென்று பலாத்காரத்தைப் பயன்படுத்தினால் 'கலகம் செய்தல்' (rioting) என்ற குற்றம் விளைகின்றது. அக்கூட்டத்தில் இருக்கும் ஒவ்வொருவரும் கலகக் குற்றத்திற்கு ஆளாகின்றனர்.

எதிரியை அடித்துத் துன்புறுத்த வேண்டும் என்ற குறிக்கோளுடன் ஒரு கூட்டம் கூடுகிறது. மற்றவரை அடித்துத் துன்புறுத்

துவது குற்றமான செயல்; எனவே, அந்த நிலையில் அக்கூட்டத்தைச் 'சட்ட விரோதக் கூட்டம்' என்கிறோம். அக்கூட்டத்தினரில் ஒருவர் கூட்டத்தின் நோக்கத்தை நிறைவேற்றும் வகையில் எதிரியை அடித்துவிட்டார் எனில், அக்கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் ஒவ்வொருவரும் கலகக்காரர் ஆகிவிடுகின்றனர்.

எதிரியின் பயிரை அழித்துவிடவேண்டும் என்று ஒரு கூட்டம் சேருகிறது. இந்தச் சட்ட விரோதக் கூட்டம் பயிரை அழிக்கும் செயலில் ஈடுபட்டுவிட்டால் அந்தக் கூட்டத்தினர் கலகம் விளைத்த குற்றவாளிகள் ஆகின்றனர்.

பிறரைத் தாக்குவது (using force) அல்லது பிறர் சொத்துக்களின்மீது பலாத்காரத்தைப் பயன்படுத்துவது (using violence), இந்தச் செயல்கள், சட்ட விரோதக் கூட்டத்தின் குறிக்கோள் நிறைவேற்றப்படுவதற்கெனக் கையாளப்படுமானால், அக்கூட்டத்தினர் அனைவரும் கூட்டாகவும், தனித் தனியாகவும், கலகக் குற்றத்திற்கும் பொறுப்பாகின்றனர். இக்குற்றத்திற்கு இரண்டு ஆண்டுகள் வரை சிறைத்தண்டனை உண்டு *(146, 147ஆம் பிரிவுகள்)*.

இவ்வாறு, பலாத்காரத்தில் ஈடுபடாத நிலையில் உள்ள 'சட்ட விரோதக்' கூட்டம் பலாத்காரத்தைக் கையாண்டவுடன் கலகக் கூட்டமாகி விடுகின்றது. அக்கூட்டத்தில் உள்ள எவர் பலாத்காரத்தைக் கையாண்டாலும் அது கூட்டத்தினர் அனைவரையும் பொறுப்பாக்குகிறது.

**சேருங் குற்றப் பொறுப்பு**

சட்ட விரோதக் கூட்டத்தில் சேர்ந்திருப்பது குற்றம் எனக் கண்டோம். இனி, அக்கூட்டத்தினர் இழைக்கும் குற்றங்களுக்கான பொறுப்புப்பற்றிக் காண்போம்.

ஐந்து பேர்கள் சேர்ந்துகொண்டு அவர்களின் விரோதியைத் தடியால் தாக்கி அடிப்பதற்கென்று கூடிச் செல்லுகின்றனர். அந்த ஐந்து பேர்களில் ஒருவர் விரோதியைத் தடியால் அடித்துக் கொடுங்காயங்களை ஏற்படுத்துகிறார். இப்பொழுது, தடியால் அடித்துக் கொடுங்காயங்கள் உண்டாக்கிய குற்றத்திற்கு அந்தக் கூட்டத்திலுள்ள ஐந்து பேர்களுமே பொறுப்பாகின்றனர்.

விரோதியை அடித்தது ஒருவர்தாம். மற்ற நான்கு பேர்களும் சட்ட விரோதக் கூட்டத்தில் இருந்தவர்கள்; ஆனால், அவர்கள் அடிக்கவில்லை. இருந்தாலும், அக்கூட்டத்தில் ஒருவர் செய்த செயலுக்கு மற்றவர்களும் பொறுப்பாகின்றனர்.

ஐந்து பேர்கள் கூடியதன் குறிக்கோள் என்ன? குறிப்பிட்ட ஒருவரைத் தடியால் தாக்கவேண்டும் என்பது. அந்தக் குறிக்

கோளை நிறைவேற்றும் வகையில் ஐந்து பேர்களில் ஒருவர் விரோதியை அடித்தார். கூட்டத்தினரின் குறிக்கோளை கூட்டத்தின் சார்பில் அவர் நிறைவேற்றினார். எனவே, அச்செயல் கூட்டத்தினர் அனைவரும் சேர்ந்து செய்த செயல்தானே? ஆதலால் அச்செயலுக்குக் கூட்டத்தில் சேர்ந்திருந்த அந்த ஐந்து பேர்களுமே பொறுப்பாகின்றனர். அதாவது, கொடுங்காயம் விளைவித்த குற்றத்திற்கான தண்டனை ஐந்து பேர்களுக்கும் விதிக்கப்படுகிறது.

இவ்வாறு, ஒரு சட்ட விரோதமான கூட்டத்தில் உள்ளவர் எவரேனும் அக்கூட்டத்தினரின் குறிக்கோளை நிறைவேற்றும் வகையில் செய்யும் குற்றச் செயலுக்கு அக்கூட்டத்தில் உள்ள ஒவ்வொருவரும் பொறுப்பாகின்றனர். இவ்விதப் பொறுப்பை, 'சேருங் குற்றப் பொறுப்பு' என்று கூறுகிறோம் (149 ஆம் பிரிவு).

சட்ட விரோதக் கூட்டத்தினர் குறிப்பிட்ட ஒரு நபரின் வைக்கோற் போருக்குத் தீ வைக்க வேண்டும் என்ற குறிக்கோளுடன் செல்லுகின்றனர். அக்கூட்டத்தில் ஒருவர் அந்த நபரின் வைக்கோற் போரைத் தீக்கிரையாக்குகிறார். அந்த நெருப்பு அருகில் இருந்த மற்றவர்கள் வீடுகளுக்கும் பரவி அந்த வீடுகளையும் அழித்துவிடுகிறது. இப்பொழுது, சட்ட விரோதக் கூட்டத்தினர் ஒவ்வொருவரும் வைக்கோற்போருக்குத் தீ வைத்த குற்றத்தோடு மட்டுமன்றி, மற்ற வீடுகளை அழித்த குற்றத்திற்கும் ஆளாகின்றனர். ஏன்? வைக்கோற் போருக்குத் தீ வைத்தால் அது பரவி அருகிலுள்ள சொத்துகளையும் அழிக்கலாம் என்பதை அக்கூட்டத்தினர் அறிவார்கள். இவ்வாறு, அறியத்தக்க விளைவுகளுக்கும் கூட்டத்தினர் ஒவ்வொருவரையும் சட்டம் பொறுப்பாக்குகின்றது.

ஒருவர் வசம் உள்ள நிலத்தைப் பலாத்காரமாகக் கைப்பற்றி விடவேண்டும் என்ற குறிக்கோளுடன் சட்ட விரோதக் கூட்டத்தினர் செல்லுகின்றனர். அவர்களில் சிலரிடம் தடிகள் இருக்கின்றன. நிலத்தைத் தம் வசம் வைத்திருப்பவர் நிலத்தை விட்டு அகலுவதற்கு மறுக்கின்றார். எனவே, கூட்டத்திலுள்ள ஒருவர் நிலத்தில் உள்ளவரைத் தடியால் தாக்கிக் காயப்படுத்துகிறார். இப்பொழுது காயம் விளைவித்த குற்றத்திற்குக் கூட்டத்தினர் ஒவ்வொருவருக்கும் பொறுப்பு உண்டு. 'நிலத்தை வசப்படுத்துவதுதானே கூட்டத்தினரின் குறிக்கோள். காயம் விளைவித்ததற்குக் கூட்டத்திலுள்ள மற்றவர்கள் எவ்வாறு பொறுப்பாவார்கள்'? என்று வாதாடினால் அது ஏற்கப்படுவதில்லை. ஏன்? சட்ட விரோதக் கூட்டத்தில் சிலர் தடிகள் வைத்திருந்தனர். நிலத்தை உடையவர் தம்முடைய உடைமையை எளிதில் விட்டுவிடுவார் என்று எதிர்

பார்ப்பதற்கில்லை. ஆதலால், பலாத்காரம் பயன்படுத்தப்படலாம்; அதனால் நில உடைமை உள்ளவருக்குக் காயம் ஏற்படலாம் என்பது கூட்டத்தினர் அறியத் தக்கதுதான். எனவே, கூட்டத்தினரின் குறிக்கோளை நிறைவேற்றும் வகையில் இன்னின்ன செய்யப் படலாம் என்று அறியத்தக்க செயல் ஒன்றை ஒருவர் செய்தாலும், அதற்கான பொறுப்புக் கூட்டத்தினர் ஒவ்வொருவரையும் சேருகிறது என்று சட்டம் விதிக்கிறது.

இவ்வாறு, நில உடைமையைக் கைப்பற்ற வேண்டும் என்று சென்ற கூட்டத்தைச் சேர்ந்த ஒருவர் திடீரென்று தாம் மறைவாக வைத்திருந்த கத்தியால் நில உடைமைக்காரரைக் குத்திக் கொன்று விட்டார் என வைப்போம். இந்தக் கொலைக் குற்றத்திற்குக் கத்தியால் குத்தியவர் மட்டுமே பொறுப்பாவார். கூட்டத்தைச் சேர்ந்த மற்றவர்கள் பொறுப்பாவதில்லை. ஏனெனில், நில உடைமைக்காரரைக் கொல்ல வேண்டும் என்பது கூட்டத்தினரின் குறிக்கோள் அன்று; அவரைக் கூட்டத்தினரில் எவராவது ஒருவர் கொன்றுவிடலாம் என்பதையும் கூட்டத்தினர் அறிவதற்கில்லை. எனவே, குறிக் கோளாக இல்லாத குற்றங்களுக்கும், குறிக்கோளை நிறைவேற்றும் வகையில் செய்யப்படலாம் என்று அறிய முடியாத செயல்களுக்கும், கூட்டத்தைச் சேர்ந்த ஒவ்வொருவரும் பொறுப்பாவதில்லை. அந்தக் குற்றத்தைப் புரிந்தவர் மட்டுமே அதற்குப் பொறுப்பாகின்றார்.

இந்த முறையில் சட்ட விரோதக் கூட்டத்தினரின் பொறுப்புச் சட்டத்தின் 149ஆம் பிரிவில் வகை செய்யப்பட்டிருக்கிறது.

**'சேருங் குற்றப்' பொறுப்புக் கொள்கையின் விளக்கம்**

ஒரு செயலைக் குறிக்கோளாகக் கொண்டு இயங்கும் கூட்டத் தினர் பலராக இருக்கலாம். எனினும், கொண்ட குறிக்கோளை நிறை வேற்ற வேண்டும் என்ற வகையில் அக்கூட்டத்தினர் ஒரே மனத் துடன்தான் இயங்குகின்றனர். அதாவது, ஒருமனத்துடன் அக் கூட்டம் ஒருமைப்பட்டு செயலாற்றுகிறது. அந்தக் கூட்டத்திலுள்ள ஒவ்வொருவரும் கூட்டத்தின் உறுப்புகளாகவே இருக்கின்றனர். கூட்டம் தன் குறிக்கோளை நிறைவேற்றுவதற்குத் தன் உறுப்பு களாக இயங்கும் நபர்களின் மூலமாகச் செயல்படுகிறது. எனவே, அந்த உறுப்புகளின் செயல்கள் உண்மையில் கூட்டத்தின் செயல்களே ஆகின்றன. ஆதலால், அந்தச் செயல்களுக்கான பொறுப்பு ஒருமனத்துடன் இயங்கும் அக்கூட்டத்தையே சேருகின் றது. அதாவது, அக்கூட்டத்தைச் சேர்ந்த ஒவ்வொரு உறுப்பையும் —ஒவ்வொரு நபரையும்—சேருகின்றது. இவ்வாறு, கூட்டத்தைச் சேர்ந்த ஒருவர் புரிந்த குற்றம் கூட்டத்திலுள்ள மற்றவர்களையும் சேருகின்றது. சட்ட விரோதக் கூட்டத்தைச் சேர்ந்த ஒருவர்

செய்யும் குற்றம் அக் கூட்டத்திலுள்ள ஒவ்வொருவரையும் சேருவதால், இந்தப் பொறுப்புக் கொள்கையை 'சேருங் குற்றப் பொறுப்பு' என்று கூறுகிறோம்.

சட்ட விரோதக் கூட்டத்தில் நாம் சேருவதால், அக் கூட்டத்திலுள்ள பிறர் செய்யுங் குற்றமும் நம்மை வந்து சேருகின்றது. இதுவே 149ஆம் பிரிவில் கூறப்படும் 'சேருங் குற்றப் பொறுப்பு'க் கொள்கையின் தத்துவமாகும்.

**கூட்டுக் குற்றப் பொறுப்பும், சேருங் குற்றப் பொறுப்பும்**

'பொதுவான கருத்தை நிறைவேற்றும் வகையில் பலர் கூட்டாக ஒரு குற்றத்தைச் செய்தனர் எனில், அவர்கள் தனித் தனியே அக்குற்றத்தைச் செய்தால் எவ்வாறு அதற்குப் பொறுப்பாகின்றனரோ, அவ்வாறே அவர்கள் ஒவ்வொருவரும் பொறுப்பாகின்றனர்'—இந்தக் கொள்கையை 34ஆம் பிரிவிற் கண்டோம். இதைக் 'கூட்டுக் குற்றப் பொறுப்பு' என்கிறோம்.

சட்ட விரோதக் கூட்டத்தினருக்கு ஏற்படும் பொறுப்பைச் 'சேருங் குற்றப் பொறுப்பு' என்று 149ஆவது பிரிவு கூறுகிறது.

34ஆவது பிரிவில் கூறப்பட்ட 'கூட்டுக் குற்றப் பொறுப்பிற்கும்' 149ஆவது பிரிவிற் கூறப்படும் 'சேருங் குற்றப் பொறுப்பிற்கும்', உள்ள வேறுபாட்டை நாம் காண வேண்டும்.

**'கூட்டுக் குற்றப் பொறுப்பு' (34 ஆவது பிரிவு)**

(1) இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நபர்கள் சேர்தலே போதுமானது.

(2) கூட்டாக இயங்குபவர்களின் பொதுக் கருத்தை நிறைவேற்றும் வகையில் குற்றங்கள் புரியப்பட்டிருக்க வேண்டும்.

(3) அவர்கள் கூட்டாகச் செயற்படுவதற்கு முன்னமேயே பொதுக் கருத்துப் பற்றி அவர்கள் உடன்பட்டிருக்கின்றனர்.

(4) கூட்டாக இயங்குபவர்கள் ஒவ்வொருவரும் குற்றச் செயலுக்கு உதவும் வகையில் ஏதாவது ஒரு செயலைச் செய்திருத்தல் வேண்டும்.

(5) பொதுக் கருத்தை நிறைவேற்றும் வகையில் செய்யப்பட்ட குற்றங்களுக்கே பொறுப்பு உண்டு.

**'சேருங் குற்றப் பொறுப்பு' (149ஆவது பிரிவு)**

(1) ஐந்து அல்லது அதற்கு மேற்பட்ட நபர்கள் கூட வேண்டும்.

(2) சட்ட விரோதக் கூட்டத்தினராக அவர்கள் இருக்க வேண்டும். அதாவது, அக்கூட்டத்தினரின் பொதுவான குறிக்கோள் 141ஆம் பிரிவில் குறிக்கப்பட்டுள்ள தகாத செயல்களில் ஒன்ருக இருத்தல் வேண்டும்.

(3) தகாத குறிக்கோள்பற்றிக் கூட்டத்தினர் முன்னமேயே கூடி ஓர் உடன்பாட்டிற்கு வந்திருக்க வேண்டியதில்லை. கூட்டத்தினரின் நடத்தையிலிருந்து இந்தக் குறிக்கோளை ஊகித்தறிகிருேம்.

(4) கூட்டத்தில் சேர்ந்தவர்கள் ஒவ்வொருவரும் குறிப்பிட்ட குற்றச் செயலைச் செய்வதில் பங்கு கொள்ள வேண்டும் என்ற அவசியம் இல்லை. அக்கூட்டத்தில் சேர்ந்திருப்பதே போதுமானது.

(5) பொதுக் குறிக்கோள் நிறைவேறுவதற்கெனச் செய்யப்படலாம் என்று அறியத்தக்க செயல்களுக்கும் பொறுப்பு உண்டு.

'கூட்டுக் குற்றப் பொறுப்பில்' உள்ளது குற்றத்தைக் கூட்டாகச் செய்த குற்றம். 'சேருங் குற்றப் பொறுப்பில்' உள்ளது குற்றம் செய்யுங் கூட்டத்தில் சேர்ந்த குற்றம். ஒரு குற்றத்தைக் கூட்டாகச் செய்வதால் விளைவது 'கூட்டுக் குற்றப் பொறுப்பு'; குற்றம் செய்யும் கூட்டத்தில் சேருவதால் விளைவது 'சேருங் குற்றப் பொறுப்பு.'

இவ்வாறு ஒரு குற்றத்தைப் பலர் சேர்ந்து கூட்டாகச் செய்தால் அவர்கள் ஒவ்வொருவரையும் சட்டம் தண்டிப்பது போன்றே, விலக்கப்பட்ட குறிக்கோள்கள் கொண்ட கூட்டத்தினர் செய்யும் குற்றங்களுக்கு அக்கூட்டத்தில் சேர்ந்திருப்பவர்களையும் சட்டம் தண்டிக்கின்றது.

### கூலி கொடுத்துச் சட்ட விரோதக் கூட்டஞ் சேர்த்தல்

சட்ட விரோதக் கூட்டத்தில் சேருவதற்கு ஆட்கள் தேவைப்படுகின்றனர். தீய வழியில் ஒருவருக்கு உதவியாகப் பலர் கூடுவது என்ருல், அவ்வாறு கூடுவோர், கிடைக்கும் பணத்திற்கென்ருே அல்லது வேறு வகையில் வரும் ஆதாயத்திற்கென்ருேதான் கூடுகின்றனர். கூலி கொடுத்து ஆட்களைத் திரட்டிக் கூட்டத்தைக் கூட்டுவதற்கு ஒருவர் முற்படலாம். இவ்வாறு, கூலி கொடுத்துக் கூட்டம் சேர்த்து, சட்ட விரோதச் செயல்களில் இறங்குவதைத் தடை செய்தல் வேண்டும். எனவே, கூலி கொடுத்துச் சட்ட விரோதக் கூட்டத்திற்கு ஆட்களைச் சேர்ப்பதையும், அதற்கென்று ஆட்களை வேலைக்கமர்த்துவதையும் குற்றம் எனச் சட்டம் கூறுகிறது (159ஆவது பிரிவு). 141ஆம் பிரிவிற் கூறப்படும் சட்ட விரோதச் செயல்களைச் செய்வதற்கென்று கூலி பெறுவோர்களும், அச்செயல்

களில் ஈடுபடுவதற்கு முன்வருபவர்களும். தண்டனை பெறுகின்றனர் (157ஆவது பிரிவு).

**கலைந்துவிட உத்தரவிட்டால் கூட்டம் கலைந்துவிடவேண்டும்**

நல்லதொரு காரியத்திற்கென்று ஒரு கூட்டம் கூடியிருக்கலாம். இது சட்டவிரோதக் கூட்டம் அன்று. ஆனல், அக்கூட்டத்தினரின் நடத்தை பொது அமைதிக்கு ஊறு விளைவிக்கும் வகையில் மாறுவதுண்டு. இந்த வேளையில் அக்கூட்டத்தைக் கலைந்து போகுமாறு அதற்கு உரிய அதிகாரிகள் உத்தரவிடுகின்றனர். அவ்வாறு உத்தரவிட்ட பின்னும் அக்கூட்டத்தில் ஒருவராகச் சேர்ந்து இருப்பது ஒரு குற்றமாகும்.

அமைதியான முறையில் ஒரு பெரிய ஊர்வலம் புறப்படுகிறது. அந்த ஊர்வலத்தில் சேர்ந்து செல்லுவது குற்றமன்று. ஊர்வலத்திலுள்ள சிலர் ஏதாவது ஒரு காரணத்தைக் கொண்டு சட்ட விரோதச் செயல்களில் இறங்க முற்படலாம். இப்பொழுது இக்கூட்டம் பொது அமைதியைக் குலைக்கும் கூட்டமாக மாறிவிடுகிறது. உடனே, போலீசு அதிகாரிகள் அக்கூட்டத்தைக் கலைந்து செல்லுமாறு உத்தரவிடுகின்றனர். இவ்வாறு உத்தரவிடப்பெற்ற பின்னும் அக்கூட்டத்தில் தொடர்ந்து சேர்ந்திருப்பதும், அல்லது அக்கூட்டத்தில் போய்ச் சேருவதும் குற்றமாகிறது (151ஆம் பிரிவு).

**ஓர் இடத்தை உடையவரின் பொறுப்பு**

சட்ட விரோதமாகக் கூடுவதோ, கலகம் விளைவித்தலோ பொது இடங்களில் மட்டுமே கூடாது என்பது சட்டமன்று. தனிப்பட்ட ஒருவருடைய இடத்தில் நடைபெறுவதும் கூடாது. ஒருவருடைய இடத்தில் சட்ட விரோதக் கூட்டம் கூடியதாகவோ அல்லது கலகம் நடந்ததாகவோ தெரிந்தால் அவர் உடனே அதைப் போலீசாருக்குத் தெரிவிக்க வேண்டும். அவ்வாறு நடைபெருமல் தடுப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகளையும் அவர் தம்மால் இயன்ற அளவு எடுத்துக்கொள்ள வேண்டும். இந்தப் பொறுப்பு அந்தச் சொந்தக்காரரின் வேலையாளுக்கும் உண்டு. அந்த வேலையாள் கடமையில் தவறினல் அதற்கான பொறுப்பும் சொந்தக்காரரைச் சேருகிறது. அந்த நிலம் யாருடைய உடைமையில் இருக்கிறதோ அவருக்கும் இந்தப் பொறுப்பு உண்டு.

**சொத்தின்மீது பாத்தியதையைக் கொண்டாடுபவரின் பொறுப்பு**

நிலத் தகராறுகளால் கலகம் விளையலாம். அவ்வாறு கலகம் விளையாமல் தடுப்பது அந்த நிலத்தில் பாத்தியம் கொண்டாடுபவரின் கடமையாகும். ஒரு தாவரச்சொத்தின்மீது பாத்தியதை கொண்

டாடுபவர் அந்தப் பாத்தியதையைக் கைப்பற்றும் வகையில் எந்த விதக் கலகமும் விளையாமல் பார்த்துக்கொள்ளவேண்டும்.

இவ்விதக் கடமைகளில் தவறுபவர்களுக்கு அபராதம் விதிக்கப் படலாம் (154, 155, 156 பிரிவுகள்).

பொதுவாக ஒரு நிலம், வீடு இவை குறித்து பாத்தியதை கொண்டாடுபவர்கள் அதை நிலைநாட்டிக் கொள்ளும் வகையில் ஆட்களைச் சேர்த்து, சட்ட விரோதக் கூட்டத்தைச் சேர்க்கவோ அல்லது கலகம் விளைவிக்கவோ கூடாது என்பது சட்டம். சட்டம் அதோடு நில்லாமல், அந்தப் பாத்தியங் குறித்துச் சட்ட விரோதக் கூட்டம் சேருவதையும், கலகம் விளைவதையும் தடுக்கும் பொறுப்பையும் சொத்தில் பாத்தியதை கொண்டாடுபவரின் மீது சுமத்துகிறது. சட்டம் இவ்வாறு இல்லையெனில், சட்ட விரோதக் கூட்டத்தின் உதவியால் தம் சொத்துரிமைகளை நிலைநாட்டப் பலரும் முனைந்து விடுவார்கள். பொது அமைதி இதனால் பெரிதும் குலைந்துவிடும்.

**'பொது இடச் சச்சரவு' (Affray)**

பொது இடங்களில் சண்டையிடுவது பொது அமைதியைக் குலைப்பதாகும்.

பொதுப்பாதை, சந்தை, பொதுப் பூங்கா முதலிய இடங்களில் ஒருவருக்கொருவர் சண்டையிடுவது உண்டு. 'சண்டை' என்றால் ஒருவரையொருவர் அடித்துக்கொள்ள வேண்டும் என்பதில்லை. பிறர் மனத்தில் கிலி உண்டாகுமாறு அவர்கள் சச்சரவு செய்தாலே போதுமானது. இருவருக்குள் வாய்ச்சண்டை முற்றி ஒருவர் மற்றொருவரை அடிப்பதற்குக் கையை ஓங்குவதும் மற்றொருவரும் திருப்பி அடிக்கப்போவதாகக் கூறித் தம் கையை ஓங்குவதும் நடந்தாலே அது சண்டைதான். இச்செயல், அக்கம்பக்கத்தில் உள்ளவர்களின் அமைதியைக் குலைப்பதேயாகும்.

எனவே, இருவர் அல்லது அதற்கு மேற்பட்ட பேர்கள் பொது இடத்தில் பொது அமைதியைக் குலைக்கும் வகையில் சண்டை சச்சரவில் ஈடுபடுதல், "பொது இடச் சச்சரவு" (Affray) என்ற குற்றமாகும். இக்குற்றத்திற்கு ஒரு மாதச் சிறைத் தண்டனையோ அல்லது நூறு ரூபாய்வரை அபராதமோ விதிக்கப்படலாம் (159, 160 ஆம் பிரிவுகள்).

இக் குற்றத்திற்குச் சச்சரவில் ஈடுபட்ட அனைவருமே ஆளாகி விடுகின்றனர். இரண்டு பேர்கள் சண்டையில் ஈடுபட்டிருந்தால் அந்த இருவருக்கும் தண்டனை உண்டு. 'முதலில் சண்டைக்கு வந்தவர் அவர்தாம்' என்று கூறியோ, 'சண்டைக்குக் காரணமான

வர் அவர்தாம்' என்று கூறியோ மற்றவர் தப்ப முடியாது. மற்றவரும் சச்சரவிடும் செயலில் ஈடுபட்டதால் அவரும் 'பொது இடச் சச்சரவு' என்ற குற்றத்திற்கு ஆளாகின்றார். ஆதலால், பொது இடங்களில் நாமாகவோ பிறரால் கோபமூட்டப்பட்டோ சண்டை சச்சரவுகளில் நாம் ஈடுபடுவது கூடாது.

### வேறுபட்ட வகுப்பினரிடை வெறுப்பை வளர்ப்பது குற்றமாகும்

நம் நாட்டில் பல்வேறு வகுப்பினர் ஒற்றுமையாக வாழுகின்றனர். தொழிலால், கொள்கையால், இனத்தால், மொழியால், வாழும் பகுதியால் நாட்டு மக்களிடை வேறுபாடுகள் உண்டு; ஆனால், மாறுபாடுகள் இல்லை. வேறுபட்ட வகுப்பினர்கள் ஒற்றுமையாக வாழுவதைக் குலைப்பது நாட்டின் நல்வாழ்விற்கு உகந்ததன்று. எனவே, வேறுபட்ட வகுப்பினரிடை வெறுப்பை வளர்ப்பது குற்றம் எனச் சட்டம் கூறுகிறது.

வாய்ச் சொல்லால், எழுத்தால், சைகையால், வேறு வகையால் வெறுப்பையோ, விரோதத்தையோ வெவ்வேறு வகுப்பினரிடை சமயம், இனம், மொழி சாதி குலம் என்ற பெயரால் வளர்ப்பது அல்லது வளர்க்க முயலுவது, அல்லது வெவ்வேறு சமயத்தினர், இனத்தினர், மொழியினர் சாதியினர், குலத்தினர் இவர்களின் இணக்கமான வாழ்விற்குப் பாதகமானதும் பொது அமைதியைக் குலைக்கத் தக்கதுமான செயலைச் செய்வதும் குற்றமாகும். அதற்கு மூன்று ஆண்டுகள்வரை சிறைத் தண்டனை, அபராதம் அளிக்கப்படலாம் (153-எ. பிரிவு).

வேறுபட்ட வகுப்பினரிடை வெறுப்பை வளர்ப்பது பொது அமைதிக்குப் பாதகமாவதால், அதைப் பொது அமைதிக்கு மாறான குற்றம் எனச் சட்டம் கொள்கிறது.

# 20. மிரட்டுதல், அவமதித்தல் முதலிய குற்றங்கள்
## (Criminal Intimidation, Insult and Annoyance)

மிரட்டுதல்—மறைந்திருந்து மிரட்டுதல்—பெண்ணின் நாணம் பிழைத்து நடத்தல்—தெய்வத்தின் பெயரால் அச்சுறுத்தல்—அமைதியைக் குலைக்கவென அவமதிப்புச் செய்தல்—பொதுக்கேடு விளைக்கவெனச் செய்திகளைப் பிரசுரித்தல்.

## 'மிரட்டுதல்' (Criminal Intimidation)

தீங்கு வருமோ என்ற அச்சம் துன்பத்தை அளிக்கின்றது—'மிரட்டுதல்' (Criminal Intimidation) என்ற குற்றத்தின் இலக்கணம்—மறைந்திருந்து மிரட்டுதல்.

### தீங்கு வருமோ என்ற அச்சம் துன்பத்தை அளிக்கின்றது

ஒருவருக்குத் தீங்கு விளையும்பொழுது எவ்வாறு அவருக்கு மனவேதனை ஏற்படுகின்றதோ, அவ்வாறே, தீங்கு விளையுமோ என்ற அச்சம் தோன்றும்பொழுதும் அவர் மனவேதனைப் படுகின்றார். நம் குழந்தை நோய்வாய்ப்பட்டு உயிருக்கு ஆபத்தான நிலையில் இருக்கும்போது நம் மனம் வேதனையுறுவது ஏன்? குழந்தை இறந்துவிடக் கூடாதே என்ற அச்சத்தால். நம் உறவினர் ஒருவர் ஆபத்தான நிலையில் உள்ளார் என்று தந்தி வந்ததும் நாம் ஏன் துன்பப்படுகிறோம்? தந்தி கிடைத்ததும் நம் மனத்தில் மருட்சி ஏற்பட்டுவிடுகிறது. அவர் இறந்துவிடுவார் என்ற அச்சமும் மருட்சியும் (alarm) நமக்கு மனவேதனையை அளிக்கின்றன. இவ்வாறு, நேர்ந்த ஒரு தீங்கு நமக்குத் துன்பத்தை அளிப்பது போன்றே, தீங்கு நேர்ந்துவிடுமோ என்ற அச்சத்தால் ஏற்படும் மருட்சியும் துன்பத்தை அளிக்கின்றது. ஆதலால், ஒருவரை அச்சுறுத்தி மருளச் செய்வதைச் சட்டம் குற்றமாகக் கொள்ளுகிறது.

பொதுவாக ஒருவருக்கு எப்பொழுது அச்சம் ஏற்படுகிறது? நாம் எதை மதிக்கின்றோமோ, எதன்மீது பற்றுடன் இருக்கின்றோமோ அதற்குத் தீங்கு விளைகிறது என்றால் நாம் அஞ்சுகிறோம். நம் உடல், பொருள், நன்மதிப்பு இவற்றில் எதற்காவது தீங்கு விளைவதென்றால் நமக்கு அச்சந் தோன்றுகிறது. அன்பினாலோ, வேறு தொடர்பாலோ எவர்மீது நாம் அக்கறை கொண்டுள்ளோமோ அவருடைய உடலுக்கோ, நன்மதிப்பிற்கோ தீங்கு விளைந்தாலும் நாம் துன்புறுகிறோம். அவர்களுக்குத் தீங்கு விளையலாம் என்று தெரிந்தால் அதற்கு அஞ்சுகிறோம். இந்த வகையில் நம் மனத்தில் அச்சத்தை விளைத்து மருட்சியை ஏற்படுத்துவதைச் சட்டம் தடைசெய்கின்றது.

**'மிரட்டுதல்' (Criminal Intimidation) என்ற குற்றத்தின் இலக்கணம்**

அடுத்தவர் மனத்தில் மருட்சியை (alarm) உண்டாக்கும் கருத்தோடு, ஒருவர் அடுத்தவரின் உடலுக்கோ, நன் மதிப்பிற்கோ, பொருளுக்கோ அல்லது அடுத்தவர் அக்கறை கொண்டுள்ள இன்னொருவரின் உடலுக்கோ, நன்மதிப்பிற்கோ தீங்கு விளைக்கப்போவதாக அடுத்தவரை அச்சுறுத்துவது 'மிரட்டுதல்' (Intimidation) என்ற குற்றமாகிறது (503ஆம் பிரிவு).

இறந்துபோன ஒருவருக்குள்ள நன்மதிப்புக் குறையாமல் இருக்கவேண்டும் என்பதில் ஒருவருக்கு அக்கறை இருக்கலாம். அந்த நன்மதிப்பிற்குத் தீங்கு இழைக்கப்போவதாக அவரை மற்றவர் பயமுறுத்துவதும் 'மிரட்டுதல்' என்ற குற்றமாகும்.

பொதுவாக, ஒருவரை மற்றொருவர் அச்சுறுத்தி மிரட்டுவதன் நோக்கம், அச்சுறுத்தப்படுபவர் அச்சுறுத்துபவரின் விருப்பப்படி நடக்கவேண்டும் என்பதுதான். தான் விரும்புகிறபடி அடுத்தவர் நடக்கவேண்டும் என்ற நோக்கத்துடனேயே ஒருவர் மற்றொருவரை மிரட்டுகின்றார்.

கொடுத்த கடனை வரப்பற்றுவதற்குக் கடனாளிமீது வழக்குத் தொடரும் உரிமை ஒருவருக்கு உண்டு. அவ்வாறு வழக்கிட்டால் அவருடைய வீட்டிற்குத் தீவைக்கப்போவதாக அவரை அச்சுறுத்தினால் அது குற்றம். எந்த ஒரு பொதுக்காரியத்திற்கும் நன்கொடை கொடுக்கவேண்டும் என்ற கட்டாயம் எவருக்குமில்லை. நன்கொடை அளிக்காவிடில் ஒருவருடைய கையை வெட்டிவிடப்போவதாக மற்றொருவர் அச்சுறுத்தினால் அது குற்றம்.

இவ்வாறு, ஒன்றைச் செய்வதற்கு உரிமையுள்ளவரை அதைச் செய்யாதிருக்குமாறு கூறி மிரட்டுவதும், ஒன்றைச் செய்யாதிருக்க

உரிமையுள்ளவரை அதைச் செய்யுமாறு கூறி மிரட்டுவதும் குற்ற மாகிறது (503ஆம் பிரிவு).

மேலே கூறியபடி, ஒருவருக்கு மருட்சி ஏற்படுத்த வேண்டும் என்று, அல்லது அவரது நடத்தையைக் கட்டுப்படுத்த வேண்டும் என்று ஒருவரை மற்றவர் அச்சுறுத்துவது 'மிரட்டுதல்' என்ற குற்ற மாகும்.

'மிரட்டுதல்' என்ற குற்றத்தில் இரு பகுதிகள் உண்டு. ஒன்று அச்சுறுத்தல்; மற்றொன்று அச்சுறுத்துபவரின் கருத்து.

(1) அச்சுறுத்தல்:

ஒருவருடைய உடல், நன்மதிப்பு, பொருள் அல்லது அவர் அக் கறைகொண்டுள்ள இன்னொருவரின் உடல், நன்மதிப்பு இவற்றில் ஒன்றுக்குத் தீங்கு விளைவிக்கப்போவதாக ஒருவரைப் பயமுறுத்து வது.

(2) அச்சுறுத்துபவரின் கருத்து:

(i) அச்சுறுத்தப்படுபவரின் மனத்தில் மருட்சியை ஏற்படுத்த வேண்டும் என்ற கருத்து; அல்லது

(ii) உரிமைச் செயலைச் செய்யாதிருக்கவும், செய்ய வேண்டா ததைச் செய்யும்படியும் அச்சுறுத்தப்படுபவரை நிர்ப்பந்திக்கும் கருத்து.

இக் குற்றத்திற்கு இரண்டு ஆண்டுகள் சிறை, அபராதம் என்ற தண்டனை உண்டு.

(i) மரணம் விளைத்தல், (ii) கொடுங்காயம் ஏற்படுத்துதல், (iii) சொத்திற்குத் தீவைத்தல், (iv) மரண தண்டனை, (v) ஆயுட் சிறைத்தண்டனை, ஏழு ஆண்டுகள் சிறைத்தண்டனை—இவ்விதத் தண்டனைகளுக்குரிய குற்றச் செயல்களை விளைத்தல்; இந்தக் கொடுந் தீங்குச் செயல்களில் ஒன்றைச் செய்யப்போவதாக அச்சுறுத்தி மிரட்டினால், அக் குற்றத்திற்கு ஏழு ஆண்டுகள்வரை சிறைத்தண் டனை என்பது சட்டம் (506ஆவது பிரிவு).

ஒருவரை அடித்துவிடுவதாகக் கூறிப் பயமுறுத்துவதைவிடக் கொன்றுவிடப்போவதாகக் கூறிப் பயமுறுத்துவது, பயமுறுத்தப்படு பவரை அதிகமாக பாதிக்கின்றது. ஒரு பெண்ணின் கற்பிற்குக் களங்கம் கற்பிக்கப்போவதாக பயமுறுத்தினால், அச்சுறுத்தப் படுபவர் எளிதில் அரண்டுபோய்விடுவார். எனவே, இதுபோன்ற கொடுஞ்செயல்களைச் செய்யப்போவதாக அச்சுறுத்தினால், அதற்கு அதிகமான தண்டனையைச் சட்டம் விதிக்கிறது.

நேரடியாகத்தான் ஒருவரை அச்சுறுத்தி மிரட்டவேண்டும் என்பதில்லை. மூன்றுவது நபர்மூலமாகச் செய்தியனுப்பியோ, ஒரு

கூட்டத்தில் பேசுவதன் வாயிலாகவோ ஒருவர் இன்னொருவரை அச்சுறுத்தலாம்; நேரடியாக எழுதியும் ஒருவரை மற்றொருவர் பயமுறுத்தலாம்.

அச்சுறுத்தப்பட்டவரின் நடத்தை அச்சுறுத்தலால் எந்த வகையிலும் பாதிக்கப்படாமல் இருக்கலாம். அச்சுறுத்தப்பட்டவர் உண்மையில் மிரண்டுபோனாரா என்பது முக்கியமன்று. அச்சுறுத்தியவரின் கருத்து என்ன என்பதுதான் குற்றத்தின் அடிப்படையாகும்.

'உன்னைக் கொன்றுவிடுவேன்', 'தொலைத்துவிடுவேன்', 'குழி தோண்டிப் புதைத்துவிடுவேன்'—இவைபோன்ற சொற்களால் ஒருவருக்கொருவர் பழிப்புரையைப் பரிமாறிக்கொள்ளுவதை நாம் கேட்கிறோம். இவைகளையெல்லாம் அச்சுறுத்தல்கள் என்று கொள்ள முடியாது. அந்தந்தச் சூழ்நிலைகளில் கூறப்பட்ட சொற்களோ, செயலோ உண்மையில் பிறர் மனத்தில் மருட்சியை ஏற்படுத்த வேண்டும் என்ற கருத்துடன் வெளிவந்தனவா என்பதை நாம் கவனித்தல் வேண்டும்.

வலியார் தங்கள் காரியங்களைச் சட்ட விரோதமாகச் சாதித்துக் கொள்ளுவதற்குப் பிறரை அச்சுறுத்தி மிரட்டுதலையே பெரும்பாலும் கைக்கொள்ளுகின்றனர். எனவே, இதைச் சட்டம் குற்றம் எனத் தடை விதிக்கின்றது.

## 'மறைந்திருந்து மிரட்டுதல்'
## (Criminal intimidation by anonymous communication)

நேரடியாக ஒருவர் நம்மை அச்சுறுத்தினால், நாம் அந்த அச்சுறுத்தலின் உண்மைத் தன்மையை உணர்வதற்கு ஏதுவாகும். ஆனால், நம்மை மிரட்டுபவர் யார் என்று தெரியாத நிலையில் நம் கவலை அதிகமாகிவிடுகிறது; நம் மனக்கலக்கம் மிகுதியாகிறது.

நம்மைக் கொல்லப்போவதாக நமது பகைவர் ஒருவர் கையெழுத்திட்ட கடிதம்மூலமாக நம்மை அச்சுறுத்தினால், அதை நாம் சமாளிப்பதில் அதிக இடர்ப்பாடுகள் இருப்பதில்லை. அதற்கு ஏற்ற காப்பு நடவடிக்கைகளை நாம் எடுத்துக்கொள்ள முடியும். நம்மை அவ்வாறு மிரட்டுபவர் எவர் என்பது நமக்குத் தெரியவில்லையெனில், நாம் யார்யாரையோ சந்தேகிக்கிறோம். யார், எங்கு, எப்போது, எப்படி அந்த அச்சுறுத்தலை நிறைவேற்றுவார்களோ என்ற 'பீதி' நம்மைப் பற்றிக்கொள்ளுகிறது.

இவ்வாறு, கையெழுத்தை மறைத்து, தாம் யாரென்று காட்டாமல் அல்லது தம்மை மாற்றிக் காட்டி எழுதப்படும் கடிதங்களை நாம்

பொதுவான வழக்கில் 'மொட்டைக் கடிதம்' (anonymous communication) என்று கூறுகிறோம்.

மிரட்டலை எழுத்துமூலமாகத்தான் தெரிவிக்கவேண்டும் என்பதில்லை; தொலைபேசி (telephone) மூலமாகவும் நம்மை ஒருவர் மிரட்டலாம். தான் யார் என்று தெரிவித்துக் கொள்ளாமல் நம்மை மிரட்டலாம்.

இவ்வாறு, தன்னை யாரென்று அறிவித்துக்கொள்ளாமல், மறைந்திருந்து பிறரை மிரட்டும் குற்றத்திற்குச் சட்டம் அதிக தண்டனையை விதிக்கின்றது. 506ஆம் பிரிவில் உள்ள சாதாரண மிரட்டலுக்கு உள்ள தண்டனையைவிட 'மறைந்திருந்து மிரட்டும்' (Criminal intimidation by anonymous communication) குற்றத்திற்கு இரண்டாண்டுக் காலச் சிறைத்தண்டனை அதிகமாக அளிக்கப்படலாம் (507ஆம் பிரிவு).

## 'பெண்ணின் நாணம் பிழைத்து நடத்தல்'
## (Insulting the modesty of a woman)

பெண்களுக்கு இயல்பாயமைந்த குணம் நாணம். அந்த நாணம் பெண்மைக்கு ஓர் அணிகலனாக அமைகின்றது. நாணத்தைப் பழிக்கும் செயல், பெண்ணை அவமதிக்கும் செயலாகிறது; பெண்ணின் மனத்தைத் துன்புறுத்தும் செயலாகிறது.

பெண்மையின் நாணம் காக்கப்படாத சமுதாயம் நாகரிகமடைந்த சமுதாயமாகாது. பெண்மையைப் பேணி, பெண்களின் நாணத்தைப் போற்றி வாழ்வதே நல்வாழ்வாகும்; நாகரிக வாழ்வாகும். ஆதலால், ஒரு பெண்ணின் நாணத்தைப் பழிக்கும் செயலைச் சட்டம் குற்றமாகக் கொள்ளுகிறது.

காமவெறியூட்டும் சொற்களை ஒரு பெண்ணிடம் அயலான் கூறுவது, இழிபொருள் தரும் பாடலை அவள் கேட்கப் பாடுவது, நிர்வாண உருவத்தைக் காட்டும் படத்தைக் காட்டுவது—இவை போன்ற செயல்கள் பெண்களின் நாணத்தைப் பழிக்கும் செயல்கள். தனித்திருக்கும் பெண்களின் தனிமையைக் குலைக்கும் வகையில் நடப்பதும் அத்தகையதேயாகும். ஒரு பெண்ணின் நாணத்தை அவமதிக்கவேண்டும் என்ற கருத்துடன் இச் செயல்கள் செய்யப்பட்டால், அவை குற்றங்களாகின்றன.

ஒரு பெண்ணிடம் நேரடியாகப் பேசினால்தான் குற்றம் என்பதன்று. அவள் கேட்கும்படி ஒன்றைச் சொல்லுவதும், அவள் பார்க்கும்படி ஒன்றைக் காட்டுவதும் அவள் நாணத்தை அவமதிக்கும் கருத்துடன் செய்யப்பட்டால் அது குற்றமேயாகும்.

'பெண்ணின் நாணம் பிழைத்து நடத்தல்' (Insulting the modesty of a woman) என்ற இக் குற்றத்தின் விளக்கத்தை 509ஆம் பிரிவில் காணுகிறோம்.

ஒரு பெண்ணின் நாணத்தைப் பழிக்கும் கருத்தோடு, அவள் கேட்கும்படி ஒரு சொல்லைச் சொல்லுவது, ஒலி எழுப்புவது, அல்லது அவள் பார்க்கும்படி சைகை காட்டுவது, ஒரு பொருளைக் காண்பிப்பது அல்லது ஒரு பெண்ணின் தனிமையைக் கெடுத்துப் புகுவது— இச் செயல்கள் 'பெண்ணின் நாணம் பிழைத்து நடத்தல்' என்ற குற்றச் செயல்கள். இக்குற்றத்திற்கு ஓர் ஆண்டுவரை சிறை, அபராதம் என்ற தண்டனை உண்டு.

தகாத முறையில் ஒரு பெண்ணிற்குக் கடிதம் எழுதுவதும் இப் பிரிவின்கீழ்க் குற்றமாகும். கடிதத்திலுள்ள வாசகம் பெண்ணின் நாணத்தைப் பழிப்பதாக இருந்தால் அது குற்றமாகிறது.

பெண்மையின் நலனைப் பேணும் வகையில், 'பெண்ணின் நாணம் பிழைத்து நடத்தலை'க் குற்றம் எனச் சட்டம் கொள்ளுகிறது.

## தெய்வத்தின் பெயரால் அச்சுறுத்தல்
## (Inducing person to believe that he will be rendered an object of divine displeasure)

ஒருவரை அச்சுறுத்துவதற்குப் பல வழிகள் இருக்கின்றன. தெய்வ நம்பிக்கையுள்ள மக்கள் வாழும் நம் நாட்டில், தெய்வத்தின் பெயரால் ஒருவரை மற்றவர் பயமுறுத்தலாம். 'நான் கூறுவதை நீங்கள் கேட்டு அதன்படி செய்யாவிடில், நான் சில மந்திரங்களைக் கூறி உங்களைத் தெய்வத்தின் கோபத்திற்கு ஆளாக்கிவிடுவேன்' என்று ஒருவர் அச்சுறுத்தினால், அதைக் கேட்பவரின் மனத்தில் மருட்சி உண்டாகலாம். இதைப் பயன்படுத்திக்கொண்டு அச்சுறுத்துபவர் அடுத்தவரைத் தாம் விரும்பியபடி நடக்கச் செய்கின்றார். இவ்வாறு அச்சுறுத்துவதையும் குற்றம் எனச் சட்டம் விதிக்கின்றது. இதற்கு ஓராண்டுக் காலம் வரை சிறை, அபராதம் என்ற தண்டனை உண்டு (508ஆம் பிரிவு).

அறிவும் திறனும் படைத்தவர்கள் இந்த வகையான அச்சுறுத்தலுக்குப் பொதுவாக அஞ்சமாட்டார்கள். ஆனால், பெரும்பாலான மக்கள் மந்திர மாயங்களில் நம்பிக்கை கொண்டவர்கள். தெய்வத்தின் கோபத்தால் தமக்குத் தீங்கு விளையலாம் என்று எண்ணுபவர்கள். எனவே, இந்த நம்பிக்கையைப் பயன்படுத்திப் பயமுறுத்துவது எளிதாகின்றது.

அந்த நாட்களில் தானம் கொடுக்க இசையாதவரின் வீட்டு வாசலில் தானங் கேட்பவர் நிலையாக உட்கார்ந்துகொண்டு, அந்த

இடத்தைவிட்டு அசைய மறுப்பது உண்டு. இதனுல் அந்த வீட்டுக் காரருக்குத் தீங்கு விளேயும் என்ற நம்பிக்கை இருந்தது. இவ்வாறு உட்காருவது போன்ற வழக்கங்களேப் போக்கவேண்டும் என்ற நோக்கத்துடன் இது குற்றச் செயல் என்று சட்டத்தில் கொள்ளப் பட்டது.

அச்சுறுத்தப்படுபவர்தான் தெய்வத்தின் கோபத்திற்கு ஆளா வார் என்று கூருமல், அவர் அக்கறை கொண்டுள்ள இன்னெருவர் அவ்வாறு ஆகலாம் என்று பயமுறுத்துவதும் குற்றந்தான். 'நான் போடும் மந்திரத்தால் உங்கள் மகன் தெய்வத்தின் கோபத்திற்கு ஆளாவார்' என்று அச்சுறுத்துவதும் குற்றமேயாகும்.

'எனக்குக் கடன் தராவிட்டால் உன்னேத் தெய்வம் தண்டிக் கும்' என்று கடன் கேட்பவர் மிரட்டுகிருர். ஆனுல், இது குற்றமாகி விடாது. அச்சுறுத்துபவர் ஏதாவது ஒரு செயலேச் செய்யப்போவ தாகவும், அந்தச் செயலின் பயனுகத் தெய்வத்தின் கோபம் ஏற்படும் என்றும் கூறினுல்தான் இந்தப் பிரிவின்படி குற்றமாகும். அஃதா வது, தெய்வத்தின் கோபம் ஏற்படும் வகையில் தாம் ஒன்றைச் செய்யப்போவதாகக்கூறி அச்சுறுத்தல் வேண்டும். அப்பொழுதுதான் அது குற்றமாகிறது. 'எனக்குக் கடன் தராவிட்டால், நான் மந்திரங்கள் கூறிப் பூசை செய்வேன். அந்தப் பூசையின் பயனுக உன்மீது தெய்வம் கோபங் கொள்ளும்' என்று கூறினுல் அது குற்றம்.

சட்டப்படி செய்ய வேண்டாததைச் செய்யும்படியும் அல்லது சட்டப்படி செய்ய வேண்டியதைச் செய்யாமல் இருக்கும்படியும் 'தெய்வத்தின் கோபம்' என்ற பெயரால் அச்சுறுத்துவதையே சட்டம் விலக்குகிறது. ஒருவர் சட்டப்படி செய்யவேண்டிய காரியத் தைச் செய்யும்படி வற்புறுத்தி, அவ்வாறு செய்யாவிடில் தெய்வத் தின் குற்றத்திற்கு ஆளாகலாம் என்று கூறுவது இந்தப் பிரிவுப்படி குற்றம் ஆவதில்லே.

இந்த வகையில், தெய்வத்தின் பெயரால் ஒருவர் இன்னெரு வரின் நடத்தையைக் கட்டுப்படுத்துவதைச் சட்டம் தடைசெய் கின்றது.

## அமைதியைக் குலேக்கவென அவமதிப்புச் செய்தல் (Intentional insult with intent to provoke breach of the peace)

பொது அமைதியைப் பாதுகாப்பதே சட்டத்தின் முக்கிய நோக்கமாக இருக்கிறது. எனவே, பொது அமைதியைக் குலேக்கும் எந்த நடவடிக்கையையும் சட்டம் தடை செய்கின்றது. பொது

அமைதிக்கு எதிரான செயலை ஒருவர் நேரடியாகச் செய்வது ஒரு வகை; மற்றொருவரைத் தூண்டி அவர்மூலம் அதைச் செய்வது மற்றொரு வகை. சில வேளைகளில் ஒருவர் கோபமூட்டப்படலாம். அந்தக் கோபத்தால் அவர் ஒரு குற்றத்தையோ, பொது அமைதிக்கு எதிரான ஒரு காரியத்தையோ செய்யலாம்.

சினத்தை மேற்கொண்டவர் சிந்தனை குழம்பிப் பல கேடுகளை விளைவிக்கின்றார். சினத்தால் வரும் தீமைகள் பலப்பல. எனவே, சினத்தை ஒழிக்கவேண்டும் என்று அறநூல் கூறுகிறது. ஒருவர் சினங்கொள்ளுவது நல்லதன்று எனில், ஒருவரைச் சினமூட்டுவதும் நல்லதன்று. ஒருவரைச் சினமுறச் செய்வதால் அவர் சினத்தின் வயப்பட்டுப் பல தீய செயல்களைச் செய்வதற்கு ஏதுவாகிறது. எனவே, ஒருவரை மற்றொருவர் சினமூட்டுவது கூடாது.

**சினமூட்டுவது எவ்வாறு?:** பொதுவாக ஒருவருக்குக் கோபம் எப்பொழுது வருகிறது? தன்னை மற்றொருவர் அவமதிக்கும்பொழுது, அவமானப்படுத்தும்பொழுது ஒருவர் சினங்கொள்ளுகின்றார். தன்னை மற்றவர் நேருக்கு நேராக அவமதிக்கும் வேளையில் எவரும் பொறுமையோடு இருப்பது அருமை.

ஒருவருடைய குறைபற்றி மற்றவர் பிறரறிய எழுதலாம்; பிறரிடம் கூறலாம். ஆனால், அவர் முகத்திற்கு நேராக அந்தக் குறைகளைக் கூறி அவமதித்தால் நிலைமை வேறுகிறது. ஒரு பொது ஊழியர் கைக்கூலி வாங்குகிறார் என்று வைப்போம். இந்த ஊழியரின் நடத்தைபற்றி ஒருவர் மேலதிகாரிகளுக்குத் தெரிவிக்கலாம். இதைச் சட்டம் அனுமதிக்கிறது. ஆனால், அந்த ஊழியரை நேருக்கு நேராகச் சந்தித்து, 'நீ கைக்கூலி வாங்கும் கயவன்' என்று அவர் கூறினால், அது அந்த ஊழியரை அவமதிப்பதாகும். ஒரு பெண் கற்பிழந்தவள் என்ற உண்மையைச் சில வேளைகளில் பிறருக்குச் சொல்லலாம் என்று 499ஆம் பிரிவில் கண்டோம். ஆனால், அந்தப் பெண்ணிடம் நேரில் சென்று, 'நீ கற்பிழந்தவள், கடையானவள்' என்று கூறுவது அவளை அவமதிப்பதாகும். அவள் தெருவில் செல்லும்பொழுது அவளுக்குப் பின்னால் இதைக் கூறிச் சென்றால், அது கொடுமையான அவமதிப்பாகும். எனவே, கூறப்படும் பழிப்புரை உண்மையாக இருந்தாலுங்கூட, அதை அந்தப் பழிக்கு ஆளானவரிடம் நேருக்கு நேராகக் கூறுவது கூடாது என்று சட்டம் விதிக்கின்றது. உண்மையான பழிப்புரையையே இவ்வாறு கூறுதல் கூடாது எனில், பொய்யான பழிப்புரையைக் கூறுதல் கூடவே கூடாது.

**அவமதித்துச் சினமூட்டுபவரின் கருத்து:** அவமதிப்புச் செயல்கள் ஒவ்வொன்றும் இந்தப் பிரிவின்படி குற்றம் ஆவதில்லை.

அவமதிக்கப்பட்டவர் கோபப்பட்டு ஒரு குற்றச் செயலைச் செய்ய வேண்டும், அல்லது பொது அமைதியைக் குலைக்கும் செயலைச் செய்யவேண்டும் என்ற கருத்தோடு அல்லது அவ்வாறு அவர் செய்யலாம் என்பதைத் தெரிந்தும் அவரை அவமதிப்பதுதான் குற்றமாகிறது. அத்தகைய மனநிலையோடு அவமதிப்புச் செயலைச் செய்தலே குற்றமாகின்றது.

இரு நபர்களிடையே வாய்ச்சண்டை திடீரென்று ஏற்பட்டால் ஒருவர்மீது ஒருவர் வசைமாரி பொழிவதை நாம் பார்க்கிறோம். இழிவான சொற்களால் அவர்கள் நிந்தனைகளைப் பரிமாறிக்கொள்ளுகின்றனர். இந்த நிந்தனையும் அவமதிப்பு விளைப்பதுதான். இருந்தாலும், இதை இந்தப் பிரிவின்கீழ்க் குற்றமாகக் கொள்ளுவதற்கில்லை. ஏனெனில், நிந்திக்கப்பட்டவர் கோபமடைந்து ஒரு குற்றத்தைச் செய்யவேண்டும் என்ற கருத்தோடு அந்த நிந்தனைகள் நிகழவில்லை.

**குற்றத்தின் இலக்கணம்:** ஒருவர் கோபத்தினால் ஒரு குற்றமான செயலையோ, அல்லது பொது அமைதிக்குப் பங்கம் விளைவிக்கும் செயலையோ செய்யவேண்டும் என்ற கருத்தோடு அவருக்குக் கோபம் வரும்படி அவரை அவமதிப்புச் செய்தலைச் சட்டம் குற்றமாகக் கொள்ளுகிறது. இந்தக் குற்றம் 'அமைதியைக் குலைக்கவென அவமதிப்புச் செய்தல்' (Intentional insult with intent to provoke breach of the peace) எனப்படும். இதற்கு இரண்டு ஆண்டுவரை சிறை, அபராதம் விதிக்கப்படலாம் (504ஆவது பிரிவு).

அவமதிக்கப்பட்டவர் மிகவும் பொறுமையுள்ளவராக இருந்து சிறிதும் கோபப்படாதவராக இருக்கலாம். இருந்தாலும் செய்யப்பட்ட அவமதிப்பு சாதாரண ஒருவருக்குக் கோபமூட்டிக் குற்றமான செயலைச் செய்யும் நிலைக்குக் கொண்டுபோகலாம் என்றால், அவமதிப்புச் செயலைச் செய்தவர் குற்றவாளிதான். இந்தக் குற்றம் அவமதிக்கப்பட்டவரின் குணநலத்தைப் பொறுத்தது அன்று; அவமதித்தவரின் கருத்தைப் பொறுத்தது.

ஒரு செயல் அவமதிப்புச் செயலா என்பதை அந்தந்தச் சூழ்நிலைகளிலிருந்தே நாம் உறுதி செய்யவேண்டும். அவமதிப்புச் செயல் பழிப்புரையாக இருக்கலாம், சைகையாக இருக்கலாம் அல்லது வேறு வகையிலும் அமையலாம்.

இவ்வாறு அமைதியைக் குலைக்கச் செய்யவேண்டும் என்ற நோக்கத்தோடு ஒருவரை மற்றவர் அவமதிப்புச் செய்வதைச் சட்டம் தடைசெய்கிறது.

## பொதுக் கேடு விளைவிக்கவென் அறிக்கைகளைப் பிரசுரித்தல்
## (Statements conducing to public mischief)

நாட்டில் நடக்கும் செய்திகளை மக்கள் அறிந்துகொள்ளுதல் அவசியமானதுதான். எனவே, செய்திகளும் அறிக்கைகளும் மக்களுக்குத் தெரியும்பொருட்டுச் செய்தித்தாள்கள் அவைகளைப் பிரசுரிக்கின்றன. சில வேளைகளில் செய்திகள் பரவுவதால் தீமையும் விளைகிறது. ஓர் ஊரில் வகுப்புக் கலவரம் (communal riot) நடந்தது என்ற செய்தி பரவியதும் பல ஊர்களில் அம்மாதிரிக் கலகங்கள் விளைவது உண்டு. சில செய்திகள் பரவியதும் மக்கள் மனத்திலே ஒரு பீதி விளைவதுண்டு. சில அறிக்கைகள் சமுதாயத்தில் வாழும் ஒரு வகுப்பினருக்கும் மற்றொரு வகுப்பினருக்கும் இடையே மனக்கசப்பை ஏற்படுத்தி வகுப்புக் கலவரங்களைத் தூண்டுகின்றன.

செய்திகளையும் அறிக்கைகளையும்விட வதந்திகளால் விளையும் தீங்குகள் அதிகமானவை. சமுதாயத்தில் பொறுப்பற்றவர்களால் பரப்பப்படும் வதந்திகள் பலருக்குங் கேடு விளைவிப்பன. ஆதலால், சட்டம் வதந்திகளையும் அறிக்கைகளையும் பரப்புவதில் சில கட்டுப் பாடுகளை விதிக்கிறது.

ஒரு வகுப்பினருக்கும் மற்றொரு வகுப்பினருக்கும் பிணக்கை ஏற்படுத்தி, ஒரு வகுப்பினர் மற்ற வகுப்பினருக்கு எதிராகக் குற்றங்கள் இழைக்குமாறு தூண்டும் கருத்தோடு, அல்லது பொது மக்கள் மனத்திலே அச்சத்தையோ மருட்சியையோ ஏற்படுத்தி மக்களை அரசுக்கெதிரான குற்றங்களை அல்லது பொது அமைதியைக் குலைக்கும் குற்றங்களை இழைக்கும்படி செய்யும் கருத்தோடு, அல்லது தரைப்படை, கப்பற்படை, விமானப்படை, இந்த முப்படை வீரர்களைக் கிளர்ச்சி செய்யும்படியோ கடமைகளைப் புறக்கணிக்கும் படியோ செய்யும் கருத்தோடு ஏதாவது ஓர் அறிக்கையையோ, வதந்தியையோ பிரசுரிப்பதும், பரப்புவதும் குற்றமாகும் (Statements conducing to public mischief).

இக் குற்றத்திற்குள்ள தண்டனை மூன்று ஆண்டுவரை சிறை, அபராதம்.

மேற்கண்ட தீய கருத்துகள் இன்றி, தான் உண்மை எனக் கருதும் ஓர் அறிக்கையையோ, வதந்தியையோ பரப்புவதும் பிரசுரிப்பதும் குற்றமாவதில்லை (505ஆம் பிரிவு).

# 21. நீதிமுறைக்கு எதிரான குற்றங்கள்
## (Offences Against Public Justice)

குற்றச் சான்றினை அழித்தல்—குற்றச் செயலை அறிவிக்கும் கடமையில் தவறுதல்—குற்றச் செயல்பற்றிப் பொய்த்தகவல் தெரிவித்தல்—சான்று ஆவணங்களை அழித்தல், மறைத்தல், மாற்றி எழுதுதல்—வழக்குகளில் ஆள்மாருட்டம் செய்தல்—சொத்து கைப் பற்றப்படுவதைத் தடுப்பதற்கென மோசடியாக அதை மாற்றுதல், மறைத்தல், அகற்றுதல்—மோசடியாக வழக்கிட்டுப் பாத்தியம் கொண் டாடுதல், மோசடியாக வழக்கில் பொறுப்பேற்றுக்கொள்ளுதல்—பொய்யாகக் குற்ற வழக்கிடுதல், பொய்யாகக் குற்றம் சாட்டுதல்—குற்றம் புரிந்தோருக்குப் புகல் அளித்தல்—காவலிலிருந்து தப்பிய வருக்குப் புகல் அளித்தல்—கொள்ளை, கூட்டுக் கொள்ளைக்காரருக்குப் புகலளித்தல்—குற்றவாளியை மறைப்பதற்கென்று பொருள் கொடுத் தலும் பெறுதலும்—துப்புக்கூலி பெறுதல்—குற்றவாளிக்குச் சாதகமாகப் பொது ஊழியர் தன் கடமையில் வேண்டுமென்றே தவறி நடத்தல்—தான் கைதுசெய்யப்படுவதை எதிர்த்துத் தடுத்தல், காவலிலிருந்து தப்புதல்—பிறர் கைதுசெய்யப்படுவதைத் தடுத்தல், அவரைக் காவலி லிருந்து தப்புவித்தல், மீட்டல்—குற்றச் சம்பந்தமில்லாத கைதும் காவலும் —நீதிமன்றத்தை அவமதித்தல், நீதிமன்ற அலுவல்களில் குறுக்கிட்டுத் தடை விளைத்தல்.

## குற்றச் சான்றினை அழித்தல்

குற்றங்களைச் செய்தவர்கள் தண்டிக்கப்படுதல் வேண்டும். குற்றவாளிகள் தண்டனையிலிருந்து தப்பிவிட்டால் குற்றங்கள் மலிந்துவிடும். அவர்கள் குற்றங்களைப் புரிந்தார்கள் என்று குற்ற வழக்குகளில் நிரூபிக்கப்பட்டால்தான் குற்றவாளிகளைத் தண்டிக்க முடியும். அவ்வாறு நிரூபிப்பதற்குத் தக்க சான்றுகள் வேண்டும். தகுந்த சான்றுகள் இல்லையேல், ஒருவரது குற்றப் பொறுப்பை (criminal liability) நிலைநாட்ட முடியாது. எனவே, குற்றம் இழைத்தவரைக் காட்டும் சான்றுகளை எவரும் அழித்தலோ, மறைத்தலோ கூடாது என்று சட்டம் விதிக்கின்றது (201ஆம்

பிரிவு). அம்மாதிரியே, குற்றவாளி தண்டனையிலிருந்து தப்பிக்க வேண்டும் என்ற கருத்தோடு, அந்தக் குற்றம்பற்றிப் பொய்த் தகவலை வேண்டுமென்றே கொடுப்பதும் குற்றமாகும் (201ஆம் பிரிவு).

ஒருவர் மற்றொருவரைக் கொலை செய்துவிட்டார். அந்தக் கொலைக்குற்றத்தை மறைப்பதற்கெனக் கொலையுண்டவரின் உடலை எவரும் காணமுடியாதபடி மறைத்து வைப்பதற்கு மூன்றாமவர் உதவி செய்கின்றார். இவ்வாறு உதவி செய்தல் குற்றமாகும்.

ஒரு குற்றத்தைச் செய்தவரே அந்தக் குற்றத்திற்கான சான்றுகளை அழித்துவிடுவதும் உண்டு. அவர் மூலக்குற்றத்தைச் செய்தார் என்பது நிரூபிக்கப்பட்டு அவர் தண்டனை பெற்றால், குற்றச் சான்றை அழித்த குற்றத்திற்கு அவரை மீண்டும் தண்டிப்ப தில்லை. சில வேளைகளில் மூலக் குற்றத்தை அவர் செய்தார் என்பதற்குச் சரியான சாட்சியங்கள் கிடைக்காமற்போகலாம். எனவே, மூலக் குற்றத்திற்கு அவரைத் தண்டிக்க முடியாமல் இருக்கலாம். இருந்தாலும், குற்றச் சான்றை அழித்த குற்றத்திற்கு அவர் உள்ளாகின்றார்.

ஒருவர் மற்றொருவரை அரிவாளால் வெட்டிக் காயத்தை ஏற்படுத்துகின்றார். வெட்டியவர் தண்டனையிலிருந்து தப்ப வேண்டும் என்ற கருத்துடன், அச் செயல் நடந்த இடத்தில் சிந்திய இரத்தம் தோய்ந்த மண்ணை அப்புறப்படுத்தினால் அது குற்றமாகும். இரத்தம் தோய்ந்த மண் அங்குக் கிடந்தால் அதைப் போலீசார் புலன்விசாரணையில் பார்ப்பார்கள். அந்தக் குறிப்பிட்ட இடத்தில் தான் வெட்டிக் காயப்படுத்திய செயல் நடந்தது என்று நிரூபணம் ஆவதற்கு அது முக்கியச் சான்றாக அமையும். எனவே, இச் சான்றை அழிப்பது குற்றம். இக் குற்றத்தை வெட்டிக் காயப் படுத்தியவரும் செய்யலாம்; வேறொருவரும் செய்யலாம். இவ்வாறு குற்றச் சான்றினை அழிப்பது, குற்றவாளியைத் தண்டனையிலிருந்து தப்பவைக்க வேண்டும் என்ற கருத்துடன் செய்யப்பட்டிருத்தல் அவசியம்.

கொலை போன்ற தலைபோகும் குற்றச் சான்றுகளை அழிப் போருக்கு ஏழு ஆண்டுகள்வரை சிறைத்தண்டனை அளிக்கலாம். குறைந்த குற்றச் சான்றுகளை அழிப்போருக்குக் குறைந்த தண்டனை என்று விதிக்கப்படுகிறது (201ஆம் பிரிவு).

## குற்றச் செயலை அறிவிக்கும் கடமையில் தவறுதல்

ஒரு கிராமத்தில் சிலவகைக் குற்றங்கள் நடந்தால் அதுபற்றி உடனே போலீசுக்குத் தெரிவிக்கவேண்டிய கடமை கிராம

முன்சீபுக்கு உண்டு. அவ்வாறு, அவர் அக் குற்றங்கள் குறித்து அறிவிக்கத் தவறினுல் அது குற்றமாகும். குற்றங்கள் குறித்து அறிவிக்கும் சட்டப்படியான கடமை இருந்தும் அவ்வாறு அறிவிக்காமல் இருப்பது குற்றம் (202ஆம் பிரிவு.)

## குற்றச் செயல்பற்றிப் பொய்த்தகவல் தெரிவித்தல்

குற்றம் நடந்தது என்பதை அறிந்த ஒருவர் அது குறித்துப் பொய்யான தகவலை அதிகாரிகளுக்கு அறிவித்தல் கூடாது (203ஆம் பிரிவு).

குத்துக் காயங்களுடன் ஒருவருடைய சவம் காணப்படுகிறது. அவர் காலராவினுல் இறந்துபோனுர் என்று ஒருவர் போலீசாருக்குத் தகவல் கூறினுல், அது குற்றமாகும். அவர் கொலைச் செயலால் இறந்தார் என்பது தெரிந்தும் வேண்டுமென்றே பொய்த் தகவலை இவ்வாறு கொடுப்பது நீதி வழங்கப்படுவதைத் தடைசெய்யும் செயலாகும்.

## சான்று ஆவணங்களை அழித்தல், மறைத்தல், மாற்றி எழுதுதல்

நீதி முறையான நடவடிக்கைகளில் ஓர் ஆவணத்தைத் (document) தாக்கல் செய்யவேண்டிய கடமையுள்ளவர், அந்த ஆவணத்தை அழித்தலோ, மறைத்தலோ, மாற்றலோ குற்றமாகும் (204ஆம் பிரிவு).

உரிமை வழக்குகளிலும் குற்ற வழக்குகளிலும் ஆவணங்கள் முக்கியச் சான்ருக அமைவதுண்டு. அந்த ஆவணங்களை நீதி முறை நடவடிக்கைகளில் தாக்கல் செய்யும் கடமை சிலருக்கு உண்டு. அந்தக் கடமையுள்ளவர்கள் சான்ருக உள்ள ஆவணங்களை அழித்தலோ, மறைத்தலோ கூடாது.

ஒரு குற்றம் குறித்து முதன்முதலாகப் போலீசுக்குத் தெரிவிக்கப்பட்டதும், போலீசார் அந்தத் தகவலைப் பதிவு செய்வார்கள். அதற்கு முதல் தகவல் அறிக்கை (First Information Report) என்று பெயர். இது மிகவும் முக்கியமான ஆவணமாகும். குற்ற விசாரணையில் இதைத் தாக்கல் செய்வது போலீசாரின் கடமை. இந்த ஆவணத்தைப் போலீசார் அழிப்பதோ, மறைப்பதோ குற்றமாகும். இந்த ஆவணத்தைத் திருத்தி எழுதினுலும், அதிலுள்ள சில சொற்களை அழித்தாலும் அதுவும் குற்றம்.

## வழக்குகளில் ஆள்மாருட்டம் செய்தல்

கோவிந்தன் என்பவர்மீது குற்ற வழக்கு இடப்படுகிறது. கோவிந்தன் தனது வேலையாளான கோபாலனைக் கோர்ட்டுக்கு அனுப்புகிருர். கோபாலன் தாம்தான் கோவிந்தன் என்று

பொய்யாகக் கூறிக் கோர்ட்டில் ஆஜரானால், அது குற்றம் (205ஆம் பிரிவு).

உரிமை வழக்குகளிலும் ஆள்மாருட்டம் செய்து ஒருவராக மற்றொருவர் நடித்து வழக்கை நடத்துதல் குற்றமாகும்.

## சொத்துக் கைப்பற்றப்படுவதைத் தடுப்பதற்கென மோசடியாக அதை மாற்றுதல், மறைத்தல், அகற்றுதல்

கடன்பட்ட ஒருவர்மீது வழக்கிட்டுக் கடன் கொடுத்தவர் 'டிகிரி' (Decree) பெறுகின்றார். கடன்பட்டவருக்கு உள்ள சொத்து ஒரே ஒரு வீடுதான். அந்த வீட்டை ஜப்தி செய்து, ஏலத்திற்குக் கொண்டுவந்துதான் 'டிக்ரி' பெற்றவர் தனக்கு வரவேண்டிய தொகையை வரப்பற்ற வேண்டும். 'டிக்ரி'யை நிறைவேற்றும் (execution of decree) வகையில் அந்த வீட்டை 'ஜப்தி' செய்வது அவசியமாகிறது. இந்த நிலையில் வீட்டின் சொந்தக்காரர் (கடன் பட்டவர்) அந்த வீட்டை இன்னொருவருக்கு விற்றுவிடுகிறார் என வைப்போம். டிகிரி நிறைவேற்றப்படாமல் தடுக்க வேண்டும், 'டிக்ரி' கடனுக்கு இந்த வீடு கிடைக்காமற் போகவேண்டும் என்ற மோசடிக் கருத்தோடு அந்த வீட்டை மூன்றாவது மனிதருக்குக் கடன்பட்டவர் விற்றால் அது குற்றமாகும்.

கோர்ட்டில் ஒருவர்மீது அபராதம் விதிக்கப்படலாம். அந்த அபராதத் தொகையை வசூலிப்பதற்கு அவருடைய சொத்தை ஜப்தி செய்யவேண்டிய அவசியம் ஏற்படலாம். இப்பொழுதும் மோசடியாக அந்தச் சொத்தை மற்றவருக்கு மாற்றுவது கூடாது.

ஒருவரது ஜங்கம சொத்துகளை ஜப்தி செய்யும் உத்தரவு கோர்ட்டில் பிறப்பிக்கப்படுகிறது. ஜப்திக்குத் தப்பும் வகையில் அந்தச் சொத்துகளை அவர் மறைத்துவிட்டால் அதுவும் குற்றமாகும்.

ஒருவர்மீது 'டிக்ரி' ஏற்பட்ட பின்னர்தான், அல்லது அபராதம் விதிக்கப்பட்ட பின்னர்தான் இவ்வாறு சொத்தை மாற்றுவதும் மறைப்பதும் நடந்திருக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை. டிகிரி ஏற்படலாம், அபராதம் விதிக்கப்படலாம் என்பதைத் தெரிந்தும் அவ்வாறு செய்தல் குற்றமாகும்.

நீதிமன்றம் உத்தரவு இட்டால் அந்த உத்தரவு நிறைவேற்றப் படவேண்டும். இல்லாவிடில், அந்த உத்தரவுக்கு எவ்வித மதிப்பு மின்றிப்போய்விடுகிறது. அதனால், கோர்ட்டு உத்தரவுகள் பயனற்றுப்போகும்படி செய்யும் செயல்களைச் சட்டம் குற்றமென விதிக்கின்றது. அவை நீதிமுறைக்கு எதிரான குற்றங்களாகின்றன (206ஆம் பிரிவு).

நீதிமன்ற உத்தரவுகள் நிறைவேருமல் தடுக்கும் தீய கருத்துடன் ஒரு சொத்தின்மீது மோசடியாக பாத்தியம் கொண்டாடுவதும், அதைப் பெற்றுக்கொள்வதும், ஏற்பதும் குற்றமாகும் (207 ஆம் பிரிவு).

## மோசடியாக வழக்கிட்டு பாத்தியம் கொண்டாடுதல், மோசடியாக வழக்கில் பொறுப்பேற்றுக் கொள்ளுதல்

மோசடிகளில் பல வகையுண்டு. மனிதன் தன் அறிவைப் பயன்படுத்தி எத்தனையோ விதங்களில் பிறரை ஏமாற்றலாம்.

கண்ணன் என்பவர் இராமனுக்கு ஐயாயிரம் ரூபாய் கடன் கொடுக்கவேண்டும். இராமன் கண்ணன்மீது அந்தக் கடனை வரப் பற்றுவதற்கு வழக்கிட இருக்கின்ருர். இராமன் வழக்கிட்டுக் கண்ணன்மீது 'டிகிரி' பெற்றுவிட்டால், கண்ணனுக்குள்ள ஒரே சொத்தான இரண்டு ஏக்கர் நிலம் கோர்ட்டு ஏலத்தில் போய்விடும். இதிலிருந்து தப்பவேண்டும், தம் நிலத்தைக் காப்பாற்றி, இராமனை மோசம் செய்யவேண்டும் என்று திட்டமிடுகிருர் கண்ணன். கோவிந்தன் என்பவர் பெயருக்கு எட்டாயிரம் ரூபாய்க்குக் கண்ணன் பொய்யாக ஒரு 'புரோநோட்டு' எழுதிக்கொடுக்கின்ருர். அந்த நோட்டின்மீது கோவிந்தனை வழக்கிடச் செய்கின்ருர். அந்த வழக்கில், கோவிந்தனுக்கு அந்தத் தொகையைத் தாம் கொடுக்க வேண்டியதுதான் என்று பொய்யாகக் கண்ணன் ஒப்புக்கொள்ளுகிருர். அதன்பேரில் டிகிரியும் நீதி மன்றத்தில் ஏற்படுகிறது. இவ்வாறு, கோவிந்தனுக்குத் தன்பேரில் டிகிரி ஏற்படும்படி செய்த கண்ணனின் நோக்கம் அந்த டிகிரி நிறைவேற்றப்படும் வகையில் தன் நிலம் ஜப்தி செய்யப்படவேண்டும், உண்மையாகக் கடன் கொடுத்த இராமனுக்குச் சேரவேண்டிய கடனுக்கு இந்தச் சொத்துக் கிட்டாமற்போகவேண்டும் என்பதுதான். இந்த மோசடிக் கருத்துடன் கண்ணன், கோவிந்தன் இடும் வழக்கில் டிகிரியை ஒப்புக்கொள்வது குற்றமாகும்.

கண்ணனுடைய மோசடிக்குக் கோவிந்தனும் இசைந்து போலியாக ஏற்பட்ட எட்டாயிரம் ரூபாய் புரோநோட்டின்மீது வழக்கிட்ட செயலும் குற்றமானதுதான்.

மோசடியாக இன்னொருவருக்குக் கேடு விளைவிக்கவேண்டும் என்ற கருத்துடன் பொய்யாக பாத்தியம் கொண்டாடி வழக்கிடுதலும், அந்த வழக்கில் மோசடிக் கருத்துடன் டிகிரியை ஏற்றுக் கொள்ளுதலும் குற்றங்களாகின்றன. மோசடி வழக்கு இடுபவரும் குற்றவாளி; மோசடி வழக்கினை இடச் செய்து அந்த வழக்கில்

டிகிரியை ஏற்பவரும் குற்றவாளி. இவ்வாறே, மோசடியாக டிகிரியை நிறைவேற்றுவதும் குற்றமாகும்.

நீதிமன்றங்கள் நீதி வழங்குவதற்கென்று ஏற்பட்டிருக்கின்றன. அந்த நீதிமன்றங்களையே கருவிகளாகப் பயன்படுத்தி ஒருவர் மற்றவரை மோசடி செய்வது அடாத செயலாகும்; நீதிமுறையைப் பழிக்கும் செயலாகும். எனவே, இவ்வாறு மோசடியாகப் பொய் வழக்கிடலும் மோசடியாகப் பொய்ப் பொறுப்பேற்றலும் குற்றங்கள் என்று சட்டம் விதிக்கிறது. இக் குற்றங்கள் செய்வோருக்கு இரண் டாண்டுவரை சிறைத்தண்டனை அளிக்கப்படலாம் (208, 209, 210ஆம் பிரிவுகள்).

## பொய்யாகக் குற்ற வழக்கிடுதல்; பொய்யாகக் குற்றம் சாட்டுதல்

குற்றவாளி தண்டனை பெறுதல் வேண்டும் என்று சட்டம் எவ்வளவு அக்கறை காட்டுகின்றதோ, அதைவிடப் பன்மடங்கு அக்கறை காட்டுகின்றது நிரபராதி குற்றவாளியெனத் தண்டனை பெறுதல் கூடாது என்பதில். ஆதலால், குற்றமற்றவர்மீது பொய் யாகக் குற்றம் சாட்டுவதையும் குற்ற வழக்கிடுவதையும் குற்றங்கள் எனச் சட்டம் விதிக்கின்றது (211ஆம் பிரிவு).

பிறர் கேடு சூழுவோர் பிறர்மீது பொய்யான குற்றச்சாட்டுகளைச் சுமத்துகின்றனர். எனது பகைவருக்குக் கேடு விளைவிக்கக் கருதி, 'அவர் எனது பொருளைத் திருடிவிட்டார்' என்று பொய்யாகப் போலீசில் பிராது கொடுக்கிறேன். இது பொய்யாகக் குற்றம் சாட்டுவதாகும். கோர்ட்டில் நேராகப் புகார் செய்கிறேன்; இது பொய்யாக வழக்கிடுவதாகும். இரண்டையுமே சட்டம் தடை செய்கின்றது.

ஒருவருக்குக் கேடு விளைவிக்கவேண்டும் என்ற கருத்துடன், நியாயமான, சட்டப்படியான காரணம் எதுவுமின்றி ஒருவர்மீது பொய்யாகக் குற்ற வழக்கிடுதல், பொய்யாகக் குற்றம் சாட்டுதல் இரண்டும் குற்றங்கள். இதற்கு இரண்டு ஆண்டுகள்வரை சிறைத் தண்டனை விதிக்கலாம். பொய்வழக்கில் கூறப்பட்ட குற்றம் மரண தண்டனை அல்லது ஆயுள் தண்டனைபோன்ற கொடுந்தண்டனைகள் விதிக்கத்தக்க குற்றமாக இருந்தால், பொய் வழக்கிட்டவருக்கு ஏழாண்டுக் காலம்வரை சிறைத்தண்டனை விதிக்கலாம்.

ஒருவர்மீது மற்றவர் சாட்டிய குற்றம் விசாரணைக்குப் பிறகு பொய்யெனத் தெரியலாம். இருந்தாலும், குற்றம் சாட்டுவதற்குத் தக்க காரணம் இருந்தால் அது குற்றமாகாது. உள்ள சூழ்நிலைகளை ஆராய்ந்து, என் பொருளைத் திருடியவர் இவராகத்தான் இருக்க வேண்டும் என்று கருதி ஒருவர்மீது குற்ற வழக்கிடுகிறேன்.

அவ்வாறு நான் கருதியது தவருக இருக்கலாம்; இருந்தாலும், நான் குற்றவாளி ஆவதில்லை. அவர்மீது குற்றம் சாட்டுவதற்கு அல்லது குற்ற வழக்கிடுவதற்கு நியாயமான காரணம் இருந்தால், அது குற்றமாகாது. மற்ருெருவர்மீது பழிபோட்டுக் குற்றம் சாட்டிப் போலீசில் கூறினல், அது இந்தப் பிரிவுப்படி குற்றமாகும்.

## குற்றம் புரிந்தோருக்குப் புகல் அளித்தல்

தஞ்சம் என்று நம்மிடம் வந்தவருக்குப் புகல் அளிப்பது நல்ல செயல்தான். ஆனல், குற்றம் புரிந்தவர்களுக்குத் தஞ்சம் அளித்துத் தண்டனையிலிருந்து அவர்களை மறைக்க முயலுவது கூடாது.

ஒருவர் குற்றவாளி என்று நமக்குத் தெரிந்து, அவரைச் சட்டப்படியான தண்டனையைப் பெருதவாறு மறைக்கவேண்டும் என்ற கருத்துடன், நாம் அவருக்குப் புகல் அளிப்பதோ, மறைத்து வைப்பதோ குற்றச் செயல் (212ஆம் பிரிவு).

ஒருவர் குற்றவாளி என்று தெரியாத நிலையில் புகல் அளிப்பது குற்றமன்று; தண்டனையிலிருந்து மறைக்கவேண்டுமென்ற கருத்தின்றிப் புகல் அளிப்பதும் குற்றமன்று.

**புகல் அளிப்பது என்ருல் என்ன?**

ஒருவருக்கு உணவு, உடை, பணம் இவற்றைக் கொடுப்பது புகலளிப்பதாகும். அவர் தங்குவதற்கு இடம் கொடுப்பதும், வாகன வசதி அளிப்பதும் புகலளிப்பதுதான். ஆயுதங்கள் கொடுத்து உதவுவது, அவர் போலீசாரிடம் பிடிபடாமல் தப்புவதற்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுப்பது இச் செயல்களும் புகலளித்தலேயாகும் (52-A பிரிவு).

ஒருவர் கொலைக்குற்றம் புரிந்தவர் என்பது எனக்குத் தெரியும். அவரைப் பிடிப்பதற்குப் போலீசார் தேடிக்கொண்டிருக்கின்றனர். அவர் எனது நண்பர். இரவில் இரகசியமாக என் வீட்டில் வந்து இரண்டு நாட்கள் தங்க இடம் கேட்கின்ருர். நானும் இசைந்து அவரை என் வீட்டில் இருக்க அனுமதிக்கிறேன். இது குற்றமாகும். அவர் தப்பிச் செல்லவேண்டும் என்று, என் மோட்டாரில் வைத்து அவரை மற்ருேர் ஊருக்கு அனுப்புகிறேன். இதுவும் குற்றமே.

குற்றவாளியால் செய்யப்பட்ட குற்றம் எதுவாக இருந்தாலும் சரி, அவரைத் தண்டனையிலிருந்து காப்பாற்றவேண்டும் என்ற கருத்தோடு நான் அவருக்குப் புகலளித்தால் அது குற்றமாகிறது.

கொலை, கொள்ளை, கூட்டுக் கொள்ளை முதலிய குற்றங்களை இந்தியாவிற்கு வெளியிலுள்ள நாட்டில் செய்தவராயினும், இந்தியாவில் தண்டிக்கத் தக்கவராக இருந்தால், அவரும் குற்றவாளியே ஆகின்ருர். அவருக்குப் புகலளிப்பது குற்றம்.

தன் மகன் குற்றவாளி என்று தகப்பன் புகல் அளித்தலும் குற்றமேயாகும்; அம்மாதிரியே மகன் தகப்பனுக்கு அளித்தலும் கூடாது.

ஆயினும், சட்டம் கணவன் - மனைவி உறவின்மீது கருணை காட்டுகிறது.

குற்றம் புரிந்த கணவனுக்கு மனைவியும், குற்றம் புரிந்த மனைவிக்குக் கணவனும் புகல் அளித்தலைக் குற்றமாகச் சட்டம் கருதுவது இல்லை. பொதுவாக, கணவனைக் காப்பதற்கு மனைவி எத்தகைய ஆபத்தையும் ஏற்றுக்கொள்ளுகிருள். இதுபோல் மனைவியைக் காப்பாற்றுவதற்குக் கணவன் எந்த ஆபத்தையும் பெரிதாக மதிப்பதில்லை. கருத்தொருமித்த கணவன்–மனைவியிடை உள்ள இந்த அன்புப் பிணைப்பைச் சட்டம் மறப்பதற்கில்லை. எனவே, கணவன் மனைவி இவர்கள் ஒருவருக்கொருவர் புகலளித்தலைக் குற்றமெனச் சட்டம் கொள்ளுவதில்லை.

புகலளிக்கப்பட்ட குற்றவாளி இழைத்த குற்றத்தின் கொடுமைக்குத் தக்கவாறு, புகலளித்தவருக்கான தண்டனை அமைகிறது.

கொலைக்குற்றம் செய்த ஒருவருக்குப் புகலளித்தால் அதற்கு ஐந்து ஆண்டுவரை சிறைத் தண்டனை.

**காவலில் இருந்து தப்பியவருக்குப் புகல் அளித்தல்**

குற்றம் சாட்டப்பட்ட அல்லது குற்றத்திற்கென தண்டிக்கப் பட்ட ஒருவர் சட்டப்படியான காவலில் இருந்து தப்பிச் சென்ருல் அவருக்குப் புகல் அளித்தலும்,

ஒருவரைக் குற்றவாளி எனக் கருதி அவரைக் கைது செய்யும்படி பொது ஊழியர் உத்தரவிட்டிருந்தால், அவருக்குப் புகலளித்தலும் குற்றமாகும் (216ஆம் பிரிவு).

**கொள்ளை, கூட்டுக்கொள்ளைக்காரர்களுக்குப் புகலளித்தல்**

கொள்ளை (Robbery), கூட்டுக்கொள்ளை (Dacoity) அடிக்க இருப்பவர்களுக்கு அக் குற்றங்களைச் செய்வதற்கு ஏற்ற வசதி செய்து கொடுக்கும் வகையில் புகல் அளிப்பதும்,

அல்லது அக் குற்றம் செய்தவர்களைத் தண்டனையிலிருந்து தப்புவிப்பதற்கெனப் புகல் அளிப்பதும் குற்றமாகும் (216 A பிரிவு).

**குற்றவாளியை மறைப்பதற்கென்று பொருள் கொடுத்தலும் பெறுதலும்**

ஒரு குற்றத்தை மறைப்பதற்கென்று, அல்லது குற்றவாளியை மறைப்பதற்கென்று ஒருவர் மற்றவரிடம் இருந்து பொருள் பெறுதலும்

பெறுவதாக ஒப்புக்கொள்ளுதலும் கூடாது. அதற்கென பொருள் கொடுப்பதும், கொடுப்பதாக ஒப்புக்கொள்ளுதலும் கூடாது. இவை குற்றங்கள் (213, 214ஆம் பிரிவு).

## துப்புக் கூலி பெறுதல்

சாதாரணமாகக் கிராமங்களில் மாடுகள் திருட்டுப்போவதுண்டு. காணாமற்போன மாடுகளைக் கண்டுபிடித்துத் தருவதாகச் சிலர் அந்த மாட்டுக்காரரிடம் பொருள் பெறுவார்கள். சில நாட்களில் திருட்டுப்போன மாடுகளைத் திரும்பக் கொண்டுவந்து சேர்ப்பார்கள். நியாயமாகவே இவ்வாறு பணம் பெறுபவர்கள், அலைந்து சிரமப் பட்டு மாடுகளைக் கண்டுபிடித்துத் திருடிய குற்றவாளிகளையும் பிடித்துக் கொடுப்பதைச் சட்டம் தடை செய்வதில்லை.

ஆனால், நடைமுறையில் உள்ளது என்ன? திருட்டில் சம்பந் தப்பட்டவர்களே இவ்வாறு பணம் பெற்று மாடுகளைத் திருப்பிக் கொடுக்கின்றனர். இது தகாத செயலாகும்.

பிறர் செய்த திருட்டு முதலிய குற்றத்தின் பயனாக அசை பொருள்களை இழந்த ஒருவரிடம், அப் பொருள்களை மீட்டுத் தருவதாகக் கூறிப் பொருள் பெறுவதோ, பொருள் பெறுவதற்கு ஒப்புக்கொள்ளுவதோ குற்றமாகும் எனச் சட்டம் விதிக்கிறது (215 ஆம் பிரிவு).

சட்டம் இவ்வாறு இல்லையெனில், இப்படிப் பொருள் பெறுவ தற்கென்றே, குற்றச் செயல்களில் இறங்கிப் பிறர் பொருளைச் சிலர் அகற்றலாம். தாம் செய்த குற்றத்தையே பயன்படுத்தி அதற் கெனப் பணமும் பெறலாம். இது பெரிய மோசடியாகும். காணமற் போன பொருளைக் கொண்டுவந்து பொருளுக்குரியவரிடம் கொடுத் தாலுங்கூட, அதற்கெனப் பொருள் பெறுவது குற்றமேயாகும். அப்படிப் பொருளைத் தேடிக்கொண்டு வந்தவர், உண்மையான குற்றவாளியைக் கண்டுபிடித்து அவனைத் தண்டனைக்குள்ளாக்கினர் எனில், சட்டம் அவரைத் தண்டிப்பது இல்லை.

இவ்வாறு, குற்றத்தால் மறைந்த பொருளை மீட்டுக் கொடுப்பதற் கென்று பொருள் பெறுதலைத் 'துப்புக் கூலி' பெறுதல் என்று கிராமங் களில் கூறுவார்கள்.

## குற்றவாளிக்குச் சாதகமாகப் பொது ஊழியர் தம் கடமையில் வேண்டுமென்றே தவறி நடத்தல்

ஒரு குற்றவாளிக்குக் குறைந்த தண்டனையைக் கிடைக்கச் செய்யவேண்டுமென்றோ, அல்லது அவரைத் தண்டனையிலிருந்து தப்புவிக்கவேண்டுமென்றோ, சட்ட விதிகளை மீறித் தமது கடமை யில் ஒரு பொது ஊழியர் தவறி நடந்தார் எனில் அது குற்றம்..

ஒரு சொத்து அரசுக்குப் பறிமுதல் ஆவதைத் தடுக்கும் கருத் துடன் தம் கடமையில் பொது ஊழியர் தவறி நடத்தலும் குற்ற மாகும் (217ஆவது பிரிவு).

பொது மக்களுக்குத் தீங்கு விளைவிக்கும் கருத்தோடு அல்லது குற்றவாளியைத் தண்டனையிலிருந்து தப்புவிக்கும் கருத்தோடு தாம் தயாரிக்கவேண்டிய ஆவணங்களை வேண்டுமென்றே தவரு கத் தயாரிக்கும் பொது ஊழியருக்கு அதிகத் தண்டனை உண்டு (218ஆம் பிரிவு).

குற்றவாளியைச் சட்டப்படியான தண்டனைக்கு ஆளாக்கும் பொறுப்பு அதற்கென நியமிக்கப்பட்ட பொது ஊழியர்களுக்கு உண்டு. அந்தப் பொறுப்பில் சிறிதும் வழுவாது அதை நிறை வேற்றும் கடமை அவர்களுக்கு இருக்கிறது. அந்தக் கடமையில் வேண்டுமென்றே தவறி நடப்பவர்களைச் சட்டம் தண்டிக்கின்றது.

நீதி முறை நடவடிக்கையில் ஒரு பொது ஊழியர், தீய எண் ணத்தோடு சட்டத்திற்கு விரோதமான அறிக்கை, உத்தரவு, தீர்ப்பு இவற்றை அளிப்பது குற்றமாகும் (219ஆம் பிரிவு).

அதிகாரம் பெற்ற பொது ஊழியர், ஒருவரைச் சட்ட விரோத மாகக் காவலில் வைப்பதும் குற்றம் (220ஆம் பிரிவு).

குற்றத்தில் சம்பந்தப்பட்ட ஒருவரைக் கைது செய்யவும், காவலில் வைத்திருக்கவும் கடமையுடைய பொது ஊழியர் வேண்டு மென்றே அவரைக் கைது செய்யாமல் விட்டு வைப்பதும், காவலில் இருந்து அவர் தப்பிப் போவதைத் தடுக்காமல் இருப்பதும், தப் பிப் போவதற்கு உதவி செய்வதும் கொடுங் குற்றங்கள். இவ் வாறு கைது செய்யப்படாமல், அல்லது காவலில் இருந்து தப்பு கையில் தடுக்கப்படாமல் விடப்பட்டவர் ஏற்கெனவே நீதிமன்றத் தால் தண்டிக்கப்பட்டவர் எனில் சம்பந்தப்பட்ட பொது ஊழி யருக்கு அதிகமான தண்டனை விதிக்கப்படுகிறது.

தூக்குத் தண்டனை விதிக்கப்பட்ட ஒரு கைதியைத் தப்பி ஓடுவதற்கு உதவி செய்யும் பொது ஊழியருக்கு ஆயுட்காலச் சிறைத் தண்டனைகூட விதிக்கலாம் (221, 220ஆம் பிரிவுகள்).

கவனக் குறைவால் இவ்வாறு, குற்றவாளியையோ, தண்டிக் கப்பட்டவரையோ காவலில் இருந்து தப்புவதற்கு வாய்ப்பளிப்ப தும் குற்றமேயாகும் (223ஆம் பிரிவு).

## தாம் கைது செய்யப்படுவதை எதிர்த்துத் தடுப்பது, காவலிலிருந்து தப்புவது

குற்றம் சாட்டப்பெற்ற அல்லது தண்டிக்கப்பெற்ற ஒருவர் தம்மைச் சட்டப்படி கைது செய்வதை எதிர்த்துத் தடுப்ப

அதற்குச் சட்ட விரோதமான தடைகளை ஏற்படுத்துவதும் குற்றமாகும். சட்டப்படியான காவலிலிருந்து தப்புவதும், தப்பிச்செல்லுவதற்கு முயலுவதும் குற்றம். இக் குற்றத்திற்கு இரண்டு ஆண்டுகள்வரை சிறைத் தண்டனை உண்டு. ஏற்கெனவே செய்த குற்றத்திற்கான தண்டனையை அனுபவிப்பதோடு இக் குற்றத்திற்கு விதிக்கப்படும் தண்டனையையும் தனியாக அனுபவிக்க வேண்டும் (224ஆவது பிரிவு).

எனவே, காவலில் உள்ள ஒருவர், காவலாளியாக இருக்கும் போலீஸ்காரர் கவனக் குறைவாக இருப்பதைப் பயன்படுத்தித் தப்பிச் செல்லுவது கூடாது. அந்தப் போலீசுக்காரரே சம்மதித்தாலும் காவலில் இருந்து தப்புவது குற்றம். தப்புவதற்குச் சம்மதித்து அல்லது தப்புவதற்குத் தம் கவனக்குறைவால் வாய்ப்பளித்த போலீசு அதிகாரி, தப்பிச் செல்பவர் இருவருமே குற்றவாளிகள் ஆகின்றனர்.

## பிறர் கைது செய்யப்படுவதைத் தடுப்பது, அவரைக் காவலிலிருந்து தப்புவிப்பது, மீட்பது

அவ்வாறே, குற்றம் சாட்டப்பட்ட ஒருவர் கைது செய்யப்படுவதை மற்ருெருவர் தடுப்பதும், அவரைக் காவலிலிருந்து மற்ருெருவர் மீட்பதும் அதற்கு முயல்வதும் கூடாது. தூக்குத் தண்டனை பெற்றவரைக் காவலிலிருந்து தப்புவித்தவருக்கு ஆயுட்காலச் சிறைத்தண்டனை கூட விதிக்கப்படலாம் (225ஆம் பிரிவு).

போலீசாரின் காவலில் இருக்கும் ஒரு கைதியைப் பலர் கூடி மீட்டுச் செல்வது பெருங்குற்றமாகும்.

## குற்ற சம்பந்தமில்லாத கைதும் காவலும்

ஒருவரைக் கைது செய்வது குற்றத்தில் சம்பந்தப்பட்டதற்காகவும் இருக்கலாம்; அல்லது வேறு காரணங்களுக்காகவும் இருக்கலாம். உதாரணமாக, உரிமை வழக்குகளில் (Civil Cases) டிகிரி ஆன கடன் தொகையைக் கடன்காரர் செலுத்தவில்லை எனில் அவரைக் கைது செய்து வசூலிப்பது உண்டு. அவரைக் கைது செய்வதற்கு சிவில் கோர்ட்டுகள் வாரண்டுகளைப் (பிடி ஆணைகளை) பிறப்பிக்கின்றன. கோர்ட்டுச் சேவகர் அல்லது அமீன் இந்த வாரண்டுகளை நிறைவேற்றும்வகையில் எதிர்வாதியைக் கைது செய்கிருர். இவ்வாறு, கைது செய்யப்பட்டவர் அமீனின் காவலிலிருந்து தப்புவது குற்றமாகும். கைது செய்யப்படுவதை எதிர்த்துத் தடுப்பதும் கூடாது. இம்மாதிரியே காவலில் உள்ளவர்களைப் பொதுஊழியர்கள் தப்பவிடுவதும், வேண்டுமென்றே அவர்களைக் கைது செய்யத் தவறுவதும் குற்றங்களாகின்றன.

எனவே, ஒருவர் குற்றவாளி என்ற முறையில் கைது செய்யப்பட்டாலும் சரி, வேறு வகையில் கைது செய்யப்பட்டாலும் சரி, அவர் காவலிலிருந்து தப்புவது, தப்ப முயலுவது, அவரைத் தப்புவிப்பது, தப்புவிக்க முயலுவது, கைது செய்யப்படுவதை எதிர்த்துத் தடுப்பது அனைத்தும் குற்றமாகிறது. இந்த முறையில் ஒருவரைக் கைது செய்யவேண்டிய ஒரு பொது ஊழியர் கைது செய்யத் தவறுவதும், கைது செய்யப்பட்டவரைத் தப்பிச்செல்ல விடுவதும் குற்றமாகிறது (225-A, 225-B பிரிவுகள்).

## நீதிமன்றத்தை அவமதித்தல், நீதிமன்ற அலுவல்களில் குறுக்கிட்டுத் தடைவிளைத்தல்

நீதிமன்ற அலுவல்கள் செப்பமாக நடைபெறவேண்டும். நடுவு நிலை தவறாமல் நீதி வழங்கும் நீதிபதிக்குத் தக்க மரியாதை காட்டப்பட்டால்தான் நீதி வழங்கும் முறை நன்கு அமைய முடியும்.

எல்லா நீதிமன்றங்களிலும் நீதிபதியின் இருக்கை ஒரு மேடை மீது அமைக்கப்படுகிறது. வழக்கறிஞர்களும் கட்சிக்காரர்களும் தனியாகச் சற்றுத் தணிவான இடத்தில் அமர்கின்றனர். நீதிபதி அதற்கென்று விதிக்கப்பெற்ற கறுப்புச்சட்டையும், வெண் கழுத்துப் பட்டையும், கறுப்பு மேலங்கியும் அணிந்து அமர்ந்திருக்கின்றார். வழக்கறிஞர்களும் விதிக்கப்பெற்ற உடைகளோடு கோர்ட்டில் அலுவல் புரிகின்றனர். இவையெல்லாம் எதற்காக? நீதிமன்றத்தின் புனிதத் தன்மையும், தூய்மையும், மேன்மையும், சிறப்பும் பாதுகாக்கப்படவேண்டும் என்பதற்காகத்தான். மனிதப் பண்பின் ஒப்பற்ற ஒரு நீர்மை நியாய உணர்வாகும். அந்த நியாயவுணர்வின் உருவாக அமைந்து ஒழுகுபவர் நீதிமன்ற நடுவர். இத்தகைய உயர்நிலையிலுள்ள நீதிபதியை, அவர் நீதிமுறை அலுவலில் ஈடுபட்டு அமர்ந்திருக்கும்பொழுது அவமதித்தல் நீதிமுறையையே அவமதிப்பதாகும். எனவே, அவ்வாறு அவமதிப்பது குற்றம் எனச் சட்டம் விதிக்கின்றது.

மேலும், நீதிமன்ற நடுவர் ஈடுபட்டுள்ள நீதிமன்ற அலுவல்களில் குறுக்கிட்டு அதற்குத் தடை விளைவிப்பதும் கூடாது.

நீதிமுறையான அலுவல்கள் நீதிமன்றங்களைத் தவிர வேறு இடங்களிலும் நடப்பது உண்டு. தாசில்தார், உதவி கலெக்டர் போன்றோர் நீதி முறையான விசாரணைகளைச் செய்கின்றனர். போலீசார் ஒரு கூட்டத்தில் சுட்டுவிட்டால் அவ்வாறு சுட்டதுபற்றி விசாரணை நடைபெறுகிறது. உதவி கலெக்டர் அந்த விசாரணையை நடத்தலாம். அந்த விசாரணையை நடத்தும் உதவி கலெக்டர் நீதி முறையான அலுவல்களில் ஈடுபடுபவராவார். எனவே, அந்த

விசாரணை நடக்கும்பொழுது அவரை அவமதிப்பதும், அவருடைய அலுவல்களில் குறுக்கிட்டுத் தடை விளைவிப்பதும் கூடாது.

சிவில், கிரிமினல், ரெவின்யூ கோர்ட்டுகளுக்கும், நீதிமுறை விசாரணையில் (judicial proceedings) ஈடுபட்டிருக்கும் பொது ஊழியர் எவர்க்கும், இந்த விதி பொதுவானது.

நீதிமுறை அலுவலில் ஈடுபட்டு அமர்ந்திருக்கும்பொழுது ஒரு பொது ஊழியரை வேண்டுமென்றே அவமதிப்பது, அந்த அலுவலில் குறுக்கிட்டு வேண்டுமென்றே தடை விளைவிப்பது குற்றச் செயலாகும். இதற்கு ஆறுமாதகாலம்வரை சிறைத்தண்டனை, ஆயிரம் ரூபாய்வரை அபராதம் விதிக்கலாம் (228ஆவது பிரிவு).

கோர்ட்டில் அமர்ந்திருக்கும் நீதிபதியைப் பார்த்து அவர் பாரபட்சம் காட்டுபவர் என்று கூறுவது, அவரை அவமதிக்கும் குற்றமாகும். கிரிமினல் வழக்கில் உள்ள எதிரி வழக்கில் வரும் சாட்சியைக் கோர்ட்டிலேயே அச்சுறுத்துவது, எச்சரிக்கை செய்த பின்னும் வெற்றிலைப் போட்டுக் குதப்பிக்கொண்டே சாட்சியம் கூறுவது, நீதிபதியின் நியாய உணர்வில் தமக்கு நம்பிக்கை இல்லை என்று கூறுவது அல்லது மனுவில் எழுதிக்கொடுப்பது இவை யெல்லாம் நீதிமன்றத்தை அவமதிக்கும் செயல்கள் என்று தீர்மானிக்கப்பட்டிருக்கின்றன.

விசாரணையில் ஈடுபட்டிருக்கும்பொழுதுதான் இக் குற்றம் எழும் என்பதன்று. நீதிபதி நீதிமன்றத்திலுள்ள தம் இருக்கையில் அமர்ந்ததில் இருந்து எழுந்து செல்லுவதுவரை அவர் நீதிமுறை அலுவலில் ஈடுபட்டிருப்பதாகவே கருதப்படுகிறது. எனவே, கோர்ட்டில் நீதிபதி அமர்ந்திருக்கும் எந்த வேளையிலும் அவரை அவமதிப்பதும் அவர் அலுவலில் குறுக்கிடுவதும் கூடாது.

சில வேளைகளில் கோர்ட்டை அவமதித்த நபரை உடனே தண்டிக்கவேண்டிய அவசியம் ஏற்படலாம். அப்பொழுதுதான் நீதிமன்றத்தின் தனிப்பெருமையைக்காட்டி நிலைநிறுத்த முடியும். அவமதித்தவரை அப்பொழுது ஒன்றும் செய்யாமல் இருந்துவிட்டுப் பிறகு அவர்மீது நடவடிக்கை எடுத்துத் தண்டிப்பதால் அதிகப் பலன் ஏற்படாது போகலாம். எனவே, இந்தக் குற்றம் செய்தவரை உடனே காவலில் இருக்கும்படி உத்தரவிட்டு, அன்றைய தினமே அவரைத் தண்டித்து அபராதம் விதிக்கலாம். இதற்குக் குற்ற வழக்கு முறைச் சட்டத்தின் 480ஆம் பிரிவு வகை செய்கின்றது. ஆனால், இந்த 480ஆம் பிரிவுப்படி அளிக்கப்படும் அதிக அளவுத் தண்டனை 200 ரூபாய் அபராதமும், அபராதம் கட்டுவதற்குத் தவறினால் ஒரு மாதச் சிறையும் ஆகும். கோர்ட்டை அவமதித்த குற்றம் செய்தவருக்கு ரூ. 200-க்குள் அபராதம் விதித்தால் போது

மானது என்று நீதிபதி கருதினால், மேலே கண்ட 480ஆவது பிரிவுப் படி அப்பொழுதே நடவடிக்கை எடுத்து குற்றவாளிக்கு உடனே அபராதத்தை விதித்துவிடலாம்.

இவ்வாறு, நீதிமன்றத்தை அவமதிப்பதும், நீதிமுறை அலுவல்கள் மன்றத்தில் நடைபெறுவதில் குறுக்கிட்டுத் தடை ஏற்படுத்துவதும் குற்றமாகிறது.

இதுவரை நீதிக்கு எதிரான குற்றங்களைப்பற்றி விரிவாகக் கண்டோம்.

# 22. பொய்ச்சான்று

பொய்ச் சான்றளித்தல்—பொய் கூறுதல் என்று எதைக் குறிக்கிறோம்?—சான்று அளிப்பது நீதிமன்றத்தில் மட்டுமன்று—குற்ற வழக்கில் எதிரி கூறுவது சான்றளிப்பது ஆகாது—பொய்ச்சான்று புனைதல் —பொய்ச் சான்றைப் பயன்படுத்தல்—பொய்ச் சான்றிதழ் அளித்தல்.

## பொய்ச்சான்று (False Evidence)

'பொய்யுரை அஞ்சுமின்.............பொய்க்கரி போகன்மின்' என்பது இளங்கோவடிகளின் அறவுரை.

பொய்ம்மையே பல தீமைகளுக்கும் வித்தாக இருக்கிறது. தீச்செயல்களைப் பொய்யால் மறைத்துவிடலாம் என்று நம்பியே பலரும் அச் செயலில் இறங்குகின்றனர். பொய்யுரை புகலுவதில்லை என்ற உறுதி பூண்டோர் எவரும் தீச்செயல்களைத் துணிந்து செய்ய மாட்டார்கள். தீமையைச் செய்தது நாம்தான் என்று உண்மையை ஒளிக்காமல் உரைத்தல் வேண்டும் என்ற நிலையில் யார்தான் துணிவுடன் தீமையில் இறங்குவார்கள்? ஆதலால், பொய்யாமை என்ற உறுதியைப் பற்றி நிற்பவர்கள் எவரும் அறமல்லாத செயல்களை விரும்புவதில்லை. எனவே, மற்ற அறங்கள் பொய்யாமையைப் போற்றுவோரிடம் இயல்பாகவே அமைந்துவிடுகின்றன. ஆதலால்தான், பொய்யாமையாகிய நல்லறத்தை ஆற்றுபவர்கள் வேறு எந்த அறச்செயலையும் தனித்துச் செய்யவேண்டியதில்லை என்கிறார் வள்ளுவர்.

> 'பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
> செய்யாமை செய்யாமை நன்று'
>
> —(குறள் 297)

சாதாரணமாகவே, வாழ்க்கையில் பல துறைகளிலும் பொய்ம்மையால் விளையும் தீங்கு அதிகமானது. அதிலும், அந்தப் பொய்ம்மை நீதித் துறையில் புகுந்துவிட்டால் அதனால் எழும் கேடு அளவற்றதாகும்.

உண்மைக்கு உறைவிடமாக விளங்கவேண்டியது நீதித்துறை. நீதி என்ற சொல்லிற்கே உண்மை என்ற பொருள் உண்டு. அந்தப் புனிதமான நீதி முறையிலே கலக்கும் பொய்ம்மை, நல்ல பாலில் கலக்கும் நஞ்சை ஒப்பதாகும். நீதி முறையின் நீர்மையே அதனால் அழிந்துவிடுகின்றது. பொய்ம்மை விளைக்கும் தீமையால், உண்மை யான குற்றவாளி தண்டனையிலிருந்து தப்பிவிடுகிறான் என்பது மட்டுமன்று, நிரபராதி, குற்றமற்றவன், குற்றத்திற்கு ஆளாகித் தண்டிக்கப்படுகிறான். 'பொன்செய் கொல்லன்தன்' பொய்யுரை யால்தானே பாண்டியன் நெடுஞ்செழியன் குற்றமேதுமறியாத கோவலனைக் கொடுமைப்படுத்தினான்? அதன் பயனாக, தாழ்ந்த குடையனாய், தளர்ந்த செங்கோலனாய் உயிரையே துறந்தான் மன்னவன். நீதிமுறையிலே பொய்ம்மை புகுந்துவிடில் எவ்வளவு பெரிய கேடு விளைகிறது என்பதனைக் கோவலன் கதை குறித்து நிற்கிறது. எனவேதான் 'பொய்க்கரி போகன்மின்' (பொய்ச் சான்று கூறவேண்டா) என்று தெளிவாகக் கூறுகின்றார் இளங்கோவடிகள்.

## பொய்ச்சான்றளித்தல் (Giving False Evidence)

நீதி செலுத்துவது அரசின் முக்கிய கடமை என்று கண்டோம். மக்களுக்குள் ஏற்படும் வழக்குகளை நீதிமன்ற நடுவர்கள் தீர்த்து நியாயம் வழங்குகின்றனர். அவ் வழக்குகளைத் தீர்ப்பதற்கு சாட்சி யங்களே ஆதாரமாக அமைகின்றன. சாட்சியங்கள் இன்றிப் பெரும்பாலான வழக்குகளை நியாயமான முறையில் தீர்ப்பது இயலாது.

உதாரணமாக, ஓர் உரிமை வழக்கை (civil case) எடுத்துக் கொள்வோம். ஒரு நிலம் தன்னுடையது என்று ஒருவர் வழக்காடு கின்றார். அந்த வழக்கிலுள்ள எதிர்வாதி அந்த நிலத்தை 12 வருட காலங்களுக்கு மேலாகத் தாமே சொந்தத்தில் அனுபவித்து வந்ததாக எதிர்வழக்காடுகிறார். இப்போது நிலத்தின்மீதுள்ள பாத்தியதையை வாதி நிலைநிறுத்தவேண்டுமெனில், தமக்கு அச் சொத்து எப்படிக் கிடைத்தது என்பதற்கான உரிமை மூலப் பத்திரங்களை (Title Deeds) நீதிமன்றத்தில் தாக்கல் செய்யவேண்டும். அந்தப் பத்திரங்கள் உண்மையானவை என்பதையும் அவர் நிரூபிக்கவேண்டும். பன்னிரண்டு ஆண்டுக் காலத்திற்குள் அந்த நிலம் வாதியின் அனுபோகத்தில் இருந்தது என்பதையும் காட்ட வேண்டும். இதுபோன்றே எதிர்வாதி 12 வருடங்களாக அந்த நிலத்தைச் சொந்தமாக அனுபவித்து வந்தார் என்பதற்குப் பக்கத்து நிலத்துக்காரர்களின் வாய்மொழிச் சாட்சியம் அல்லது அவர் நிலத்தை அனுபவித்ததற்கு ஏற்பட்டிருக்கும் 'கிஸ்தி ரசீது'

போன்ற இதர எழுத்து மூலமான சான்றுகளை அவர் காட்ட வேண்டும். இவ்வாறு, இரு தரப்பினரும் காட்டிய சான்றுகளில் எது நம்பத்தக்கதோ, அதை நீதிமன்ற நடுவர் ஏற்றுக்கொண்டு அதன் அடிப்படையில் தீர்ப்பளிக்கின்றார்.

ஒரு குற்ற வழக்கில் ஒருவரைத் தண்டிப்பதற்கு முன், குற்றம் சாட்டப்பட்டவர்தாம் அந்தக் குற்றத்தைச் செய்தார் என்பது சந்தேகமற நிருபிக்கப்படவேண்டும். ஏதோ சந்தேகத்தின் பேரில் ஒருவரைத் தண்டனைக்குள்ளாக்க முடியாது. எனவே, ஒருவர்மீது கொலைக்குற்றம் சாட்டப்பட்டால், அவர் கொலைச்செயல் புரிந்ததை நேரில் பார்த்தவர்கள் சாட்சியம் கூறுகின்றனர். நேரில் பார்த்த சாட்சியங்கள் இல்லை எனில், வேறு சந்தர்ப்பங்களிலிருந்து இவர் தாம் கொலை செய்தாரா என்பதை நீதிமன்றம் ஆராய்கிறது. அந்தச் சந்தர்ப்பங்களைப் பொறுத்த சாட்சியங்களை நீதிமன்றம் ஆராய்ந்து தீர்ப்பளிக்கிறது. இவ்வாறு, உரிமை (சிவில்) வழக்குகள், குற்ற (கிரிமினல்) வழக்குகள் எல்லாமே சாட்சியங்களை அடிப்படையாக வைத்தே ஆராயப்படுகின்றன. வழக்கில் உறுதி செய்யப்படும் ஒருவருடைய உரிமையும் (right) பொறுப்பும் (liability) அந்த வழக்கிலுள்ள சாட்சியத்தின் அடிப்படையிலேயே எழுகின்றன.

எனவே, வழக்கில் வரும் சாட்சிகள் உண்மையை உரைத்தால் தான் நீதிமுறை செப்பமாக அமைதல் இயலும்.

ஒருவர் கூறுவது மெய்யா, பொய்யா என்பதை உடனே கண்டு அறிவதற்கு எந்த விஞ்ஞானக் கருவியும் இதுவரையில் கண்டு பிடிக்கப்படவில்லை. எனவே, அவரவர்கள் மனச்சான்றுக்கு மாற்றம் செய்யாமல் ஒவ்வொருவரும் மெய்யே கூறவேண்டும் என்று சட்டம் வற்புறுத்துகிறது. அதற்காக நீதிமன்றத்தில் ஒருவர் சாட்சியம் கூறுவதற்கு முன், 'சத்தியமாகக் கூறுகிறேன்' என்று பிரமாணம் எடுக்கும்படி ஒவ்வொரு சாட்சியையும் சட்டம் கட்டளையிடுகிறது. அவ்வாறு பிரமாணம் செய்தபின்தான் நீதிமன்றங்களில் சாட்சிகள் விசாரிக்கப்படுகின்றனர்.

நீதிமன்றங்களைத் தவிர வேறு இடங்களிலும் சூழ்நிலைகளிலும் ஒருவர் ஒரு காரியம் குறித்துச் சான்று அளிக்கும் அவசியம் ஏற்படுவதுண்டு. அந்தந்தக் காரியங்களின் தன்மைக்கு ஏற்றவாறு அளிக்கப்படும் சான்றுகள்பற்றி விதி முறைகள் வகுக்கப்பட்டிருக்கின்றன. ஒரு பத்திரப் பதிவாளரோ (Registrar of Documents), வருமானவரி அதிகாரியோ நடத்தும் விசாரணையிலும் உண்மையே உரைத்தல் வேண்டும் என்று சட்ட விதிகள் உள்ளன. இந்தச் சட்ட விதிகளின்

படி ஒருவர் உண்மையே உரைத்தல் வேண்டும் என்ற கட்டாயம் இருக்கையில் ஒருவர் பொய் கூறுவது கூடாது.

**'பொய் கூறுதல்' என்று எதைக் குறிக்கிறோம்?**

ஒருவர் 'மெய் கூறினார்' அல்லது 'பொய் கூறினார்' என்று குறிப்பிடுகின்றோம். 'மெய் கூறுதல்' 'பொய் கூறுதல்' என்பவற்றில் அடங்கும் உட்பொருள் என்ன என்று காண்போம்.

ஒரு சாட்சி இராமன் என்பவரை ஒரு பர்லாங்கு தூரத்தில் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் கண்டதாகக் கூறுகிறார். கண்டதாகக் கூறப்படும் நேரம் மாலை, பொழுது விழும் வேளை. சாட்சி சொல்பவர் வயதானவர்; சிறிது மங்கிய கண்பார்வையுடையவர். மற்ற சாட்சியத்திலிருந்து இவர் பார்த்தது இராமனை அன்று; கண்ணன் என்பவரைத்தான் இவர் பார்த்திருக்கின்றார் என்பது நன்கு தெரிகிறது. இராமனும் கண்ணனும் ஓரளவு உருவத்திலும் உயரத்திலும் ஒற்றுமையுடையவர்கள். எனவே, சாட்சி, தூரத்தில் தெரிந்த கண்ணனின் உருவத்தை இராமன் என்று தவறாக எண்ணிக் கொண்டு இராமனைப் பார்த்ததாக சாட்சியம் கூறிவிட்டார். அவர் உண்மையில் பார்த்தது கண்ணனைத்தான்; ஆனால், அவர் தவறாக எண்ணிக்கொண்டது இராமனைப் பார்த்ததாக. எனவே, சாட்சி இராமனைப் பார்த்ததாகவே நம்பி, அந்த நம்பிக்கைப்படி இராமனைப் பார்த்ததாக சாட்சியம் கூறினார். இப்பொழுது அவரைப் பொய் சாட்சியம் கூறினார் என்று கொள்ளலாமா?

மெய் என்று தாம் நம்பிய ஒன்றையே மெய்யென சாட்சியத்தில் அவர் கூறினார். எனவே, அவரைப் பொய்ச்சாட்சி கூறியவர் என்று கொள்ளுதல் தகாது. அவர் கூறியது மெய்யில்லை தான்; ஆனால், அவர் அதை நம்பியது மெய்யென்றுதான். சான்றிலே கூறப்பட்டது மெய்யன்று; ஆனால் அதை மெய்யென்று நம்பியே அவர் கூறினார். அவர் உள்ளம் மெய்யென்று நம்பியதையே அவர் உரைத்தார். எனவே, அவர் பொய்ச்சான்று கூறினார் என்று கொள்ள முடியாது.

'பொய் கூறுதல்' என்பது வேறு. 'கூறியது பொய்யாக (தவறுதலாக) இருத்தல்' என்பது வேறு. 'பொய் கூறுதல்' என்பது கூறியவரின் மனத்தைப் பொறுத்தது. 'கூறியது பொய்யாக இருக்கிறது' என்பது புற நிகழ்வு நிலையைப் பொறுத்தது. ஒருவர் மெய்யென நம்பிக் கூறுவதும் பொய்யாகப் (தவறாகப்) போவது உண்டு. இதுபோல், 'பொய்ச்சான்றுரைப்பது' என்பது வேறு, 'உரைத்த சான்று பொய்யாக இருப்பது' வேறு.

நான் ஒன்றை மெய்யானது என்று கூறினுல் அதன் பொருள் என்ன? நான் கூறுவதை மெய் என்று நான் நம்பியே கூறுகிறேன் என்பதேயாகும். மெய்யென நான் ஒன்றை நம்பிக் கூறுவதைத்தான் 'மெய்யாகக் கூறுகிறேன்' என்று நான் எடுக்கும் உறுதிமொழி குறிக்கின்றது. எனவே, நான் மெய் கூறினேனு என்று அறியவேண்டுமெனில், நான் அதை மெய் என என் மனத்தில் நம்பிக் கூறினேனு என்பதையே காணவேண்டும். எனது மன நிலையை, என் மனங் கொண்ட நம்பிக்கையை அடிப்படையாக வைத்தே நான் மெய்யுரைத்தேனு, பொய்யுரைத்தேனு என்பதை உறுதி செய்ய வேண்டும். நான் உரைத்தது சரியாக இருக்கிறதா, தவருக இருக்கிறதா என்பதை வைத்து எனது நடத்தையின் தன்மையை நிச்சயிப்பது கூடாது.

எனவே, 'மெய் உரைத்தல்' என்ருல், 'மெய் என்று நம்பும் ஒன்றை உரைத்தல்' என்பதே பொருளாகும். 'பொய்யுரைத்தல் என்ருல்', 'பொய் என்று நம்பும் ஒன்றை மெய்யென உரைத்தல்' என்பதாகும்.

ஆதலால், நான் பொய் என்று நம்பும் ஒன்றை, மெய் என்று கூறுவது பொய்யுரைத்தல் ஆகிறது. அதுபோல், நான் மெய் என்று நம்பாத ஒன்றை மெய் என்று கூறுவதும் பொய்யுரைத்தல் ஆகிறது. ஒன்றைப் பொய்யென்று நம்புகிறேன்; ஆனுலும், அதை மெய் என்று நம்புவதாகப் பொய் கூறுகிறேன். ஒன்றை மெய் என்று நம்பவில்லை. இருந்தும் அதை மெய்யென்று நம்புவதாகப் பொய் கூறுகிறேன். இவ்வாறு, எனது நடத்தையிலுள்ள பொய்ம்மை, எனது மன நிலையை மாற்றிக் கூறுவதில்தான் அமைந்திருக்கிறது.

இப்பொழுது 'பொய்யுரைத்தல்' என்ருல் என்ன என்று தெளிகின்ருேம். தாம் பொய்யென்று நெஞ்சார நம்பும் ஒன்றை ஒருவர் மெய் என்று கூறுவது பொய்யுரைத்தல் ஆகிறது. இவ்வாறு நம் நெஞ்சறிவதை மறைத்துக் கூறுதலே 'பொய்யுரைத்தல்' ஆகும். இதுவே, 'நெஞ்சாரப் பொய்தன்னைச்' சொல்லுவதாகும்.

'தன் நெஞ்சறிவது பொய்யற்க' என்று நெஞ்சத்தின் நிலையை உரைகல்லாக வைத்துப் 'பொய்ம்மையின் இலக்கணத்தைக் கூறும் அறநூலின் கருத்தே சட்டத்தின் கொள்கையாகவும் அமைகின்றது.

ஒருவர் உரைத்த காரியம் மெய்யா அல்லது பொய்யா, சரியாக இருக்கிறதா தவருக இருக்கிறதா என்பதை வைத்து உரைத்த செயலின் தன்மையை உறுதி செய்வது பொருந்தாது. உரை பொய்த்துப் போகலாம். ஆனுலும், அதை உரைத்தவர் பொய்

யுரைத்தார் என்று கூறுவதற்கில்லை. அவர் அதை மெய்யென நம்பியே உரைத்திருக்கலாம்.

எனவே, ஒருவர் பொய்ச்சான்றுரைத்தாரா என்பதை உறுதி செய்வது அவருடைய மனநிலையை வைத்தேயாகும். தாம் உரைத்ததைப் பொய்யென்று நம்பியும் அதை மெய்யென உரைத்தாரா, அதை மெய்யென்று நம்பாமலே மெய்யென உரைத்தாரா என்பதை வைத்தே, அவருடைய நடத்தையின் தன்மையைத் தீர்மானிக்கிறோம்.

'பொய்ச்சான்று அளித்தல்' என்பதில் அடங்கும் நுட்பத்தை இப்பொழுது எளிதில் புரிந்துகொள்ளுகிறோம். அஃதாவது, தாம் சான்று அளிக்கும்பொழுது, பொய்யென்று நம்பும் ஒன்றை அல்லது மெய்யென நம்பாத ஒன்றை, மெய்யென்று ஒருவர் அளித்தல் 'பொய்ச்சான்றளித்தல்' ஆகின்றது.

191ஆம் பிரிவில் 'பொய்ச்சான்றளித்தல்' என்ற குற்றத்திற்குக் கூறப்படும் இலக்கணம் மேலே கூறப்பட்ட கருத்துகளனைத்தையும் உள்ளடக்கி நிற்கிறது :

தாம் எடுத்துக்கொண்ட பிரமாணத்திற்கு அல்லது சட்ட விதிக்குக் கட்டுப்பட்டு மெய்யுரைக்கவேண்டிய ஒருவர் பொய்யுரை அளித்தல்—தமக்குப் பொய்யென்று தெரிந்த, அல்லது தாம் பொய் யென்று நம்பும், அல்லது தாம் மெய்யென்று நம்பாத, ஒரு பொய்யான உரையை அளித்தல்—'பொய்ச்சான்றளித்தல்' (giving false evidence) என்ற குற்றமாகும்.

ஒரு பொருள் குறித்துச் சட்டப்படி உறுதிமொழி அளிக்க வேண்டிய ஒருவர் மேற்கூறியபடி பொய்யான உறுதிமொழி அளித்தலும் குற்றமாகும்.

'உரை' என்பது வாய்மொழியான வாக்குமூலமாகவும் இருக்கலாம், அல்லது எழுதித் தயாரித்ததாகவும் இருக்கலாம்.

சான்றளிக்கும் ஒருவர் தாம் நம்பாத ஒன்றை நம்புவதாக அறிவிப்பதும், தமக்குத் தெரியாத ஒன்றைத் தெரிந்ததாகக் கூறுவதும் பொய்ச்சான்றளிப்பதேயாகும்.

ஒருவர் எங்குப் பொய் கூறினாலும் அது பொய்ச்சான்று ஆகாது. சட்டம் விதித்துள்ளபடி பிரமாணம் செய்து, அல்லது சட்டப்படி மெய்யுரைக்கவேண்டிய கட்டாயம் இருந்து, அங்குப் பொய்யுரைத்தாலே அது பொய்ச்சான்றாகும். நீதிமன்றத்தில் கூறப்படுவதற்கு மட்டுமே இது பொருந்தும் என்பதன்று. வேறு பல அதிகாரிகளிடமும் மெய்யே கூறவேண்டும் என்ற சட்ட

விதிகள் உண்டு. அங்குக் கூறப்படும் பொய்யுரைகளும் பொய்ச் சான்றுகளேயாவன.

**உதாரணங்கள்:** (1) நியாயமான ஒரு காரணத்திற்கு என்றுகூடப் பொய் கூறுவது கூடாது. இராமனிடம் இருந்து கண்ணன் ஆயிரம் ரூபாய் கடன் வாங்கியிருந்தான். ஆனால், குறித்த காலத்தில் அதைத் திருப்பித் தரவில்லை. எனவே, இராமன் கண்ணன்மீது வழக்கிடுகின்றான். இந்த வழக்கில் கோபாலன் என்பவர் இராமனுக்காகச் சாட்சியாக வந்து, இராமனிடம் கண்ணன் கடன் வாங்கியபொழுது தானும் கூட இருந்ததாகப் பொய் கூறுகின்றார் என வைப்போம். வழக்கு உண்மையானதுதான். இராமன் கண்ணனுக்குக் கடன் கொடுத்ததும் உண்மைதான். இருந்தாலும், கோபாலன் கூறிய சாட்சியம் பொய்யானதால், கோபாலன் பொய்ச்சான்றளித்த குற்றத்திற்கு ஆளாகின்றான்.

(2) ஒரு பத்திரத்தில் உள்ள கையெழுத்து இராமனுடையதா என்பதை ஒரு வழக்கில் தீர்மானிக்கவேண்டியிருக்கிறது. இராமனுடைய கையெழுத்துகள் பலவற்றைப் பார்த்துப் பழக்கமுள்ள ஒருவர் சாட்சியாக விசாரிக்கப்படுகிறார். அவருக்கு அந்தப் பத்திரத்தில் உள்ள கையெழுத்து இராமனுடையதன்று என்று தோன்றுகிறது. அவ்வாறே அவர் நம்புகிறார். இருப்பினும், அது இராமன் கையெழுத்துதான் என்று தாம் நம்புவதாகச் சாட்சியம் கூறினார் எனில் அது குற்றம். ஏனெனில், இது தாம் உண்மையென்று நம்பாத ஒன்றை உண்மையென நம்புவதாகக் கூறும் பொய்யுரையாகும்.

(3) மேலே கூறப்பட்ட உதாரணத்தில், பத்திரத்தில் உள்ள கையெழுத்து இராமனுடையது போன்றே அவருக்குத் தோன்றுகிறது. அது இராமனுடையதுதான் என்று நம்புகிறார். அவ்வாறு தாம் நம்புவதாகச் சாட்சியமும் அளிக்கின்றார். ஆனால், உண்மையில் அது இராமனுடைய கையெழுத்து அன்று என வைப்போம். இருந்தாலும், இது பொய்ச்சான்றளித்தது ஆகாது. ஏனெனில், சாட்சி உண்மையெனத் தாம் நம்பிய ஒன்றையே கூறினார்.

(4) ஒரு குறிப்பிட்ட தேதியில் குறிப்பிட்ட நேரத்தில் கண்ணன் என்பவர் எழும்பூர் இரயில் நிலையத்தில் இருந்தாரா என்பது தீர்ப்புக்குரிய விஷயமாக இருக்கிறது. இது குறித்துக் கூறவந்த சாட்சிக்கு உண்மையில் கண்ணன் அந்த நேரத்தில் எழும்பூர் இரயில் நிலையத்தில் இருந்தாரா அல்லது வேறு எங்காவது இருந்தாரா என்பது தெரியாது. இருந்தும், கண்ணன் அந்த வேளையில் எழும்பூர் இரயில் நிலையத்தில் இருந்ததாக அவர்

கூறுகின்றார். இது பொய்ச்சான்றளிப்பதாகும். உண்மையிலேயே கண்ணன் அப்பொழுது எழும்பூர் இரயில் நிலையத்தில் இருந்திருந் தாலுங்கூட சாட்சி கூறியது பொய்ச்சான்றுதான். ஏனெனில், கண்ணன் அப்பொழுது எங்கிருந்தார் என்பது சாட்சிக்குத் தெரியாது. தெரியாத ஒன்றைத் தெரிந்ததாகக் கூறியது பொய்ச் சான்றேயாகும்.

**சான்று அளிப்பது நீதிமன்றத்தில் மட்டுமன்று:** சான்று அல்லது சாட்சியம் என்பது நீதிமன்றத்தில் மட்டுமே அளிக்கப்பட வேண்டும் என்பதன்று. சில அதிகாரிகள் முன்னிலையில் கொடுக் கப்படும் சாட்சியமும் அறிவிப்புகளும் உண்மையாக இருத்தல் வேண்டும் எனச் சட்ட விதிகள் இருக்கின்றன. எனவே, அந்த அதிகாரிகளிடம் உண்மை உறுதியின் பேரில் கூறப்படும் தகவல்கள் 'சான்றுகளே' ஆவன. அப்பொழுது பொய் கூறினால் அதுவும் பொய்ச்சான்றளிப்பதேயாகும்.

'எடுத்த பிரமாணத்திற்குக் கட்டுப்பட்டு உண்மையை உரைக்க வேண்டியவர்' என்று கூறும்பொழுதும், எந்தவிதமான பிரமாணத்தைக் குறிப்பிடுகிறோம் என்பதை நாம் நினைவிற்கொள்ள வேண்டும். மத சம்பந்தமான நூல்களை—குரான், பைபிள் போன்ற புனித நூல்களை—வைத்துப் பிரமாணம் செய்யலாம். அல்லது சட்டம் விதித்துள்ள சடங்கு முறைப்படியுள்ள உறுதி கூறியும் பிரமாணம் செய்யலாம். பொது ஊழியரிடம் சட்டப்படி கொடுக்கவேண்டிய உறுதிமொழிகளும் பிரமாணமேயாகும். நீதி மன்றத்தில்தான் பிரமாணம் எடுக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை. நீதிமன்றத்திலோ அல்லது வேறிடத்திலோ ஒன்றை மெய்ப் பிப்பதற்கு வேண்டிய சட்டபூர்வமான உறுதிமொழியும் பிரமாணம் என்றே கொள்ளப்படுகிறது.

ஒருவர் நீதிமன்றத்தில் தாக்கல் செய்யும் பிராதில் கண்டவை யெல்லாம் உண்மை என்று அந்தப் பிராதின் அடியில் உறுதிமொழி கூறிக் கையெழுத்து இடவேண்டும். அந்தப் பிராதில் பொய் கூறப் பட்டிருந்தால் அதுவும் குற்றமேயாகும்.

சந்தேகத்திற்கு இடந்தரும் சூழ்நிலைகளில் ஒருவரின் மரணம் விளைந்தது என்றால், அந்த மரணத்தின் காரணத்தை அறியும் பொருட்டு போலீசார் 'பிரேத விசாரணை' நடத்துவதுண்டு. அப் பொழுது போலீசார் இறந்தவரின் மரணம் குறித்து மற்றவர்களிடம் விசாரிக்கலாம். இவ்வாறு விசாரிக்கப்படுபவர்கள் உண்மையையே கூறவேண்டும் என்று குற்ற வழக்குமுறைச் சட்டத்தின் 175 ஆம் பிரிவு விதிக்கின்றது. ஆதலால், போலீசார் நடத்தும் அந்தப் 'பிரேத விசாரணை'யில் ஒருவர் தெரிந்தே பொய் கூறினால் அது பொய்ச்

சான்றளிக்கும் குற்றமாகிவிடும். இதுபோன்று, நீதிமன்றத்தோடு இணைப்பில்லாத பல சூழ்நிலைகளில் உண்மை உரைக்கப்பட வேண்டும் என்று சட்டம் விதிக்கிறது. அங்கெல்லாம் பொய்யை நெஞ்சாரக் கூறுவது குற்றமேயாகும்.

**முரண்பட்ட சாட்சியங்கள்:** சில வேளைகளில் சான்றளிப்பவர் ஓர் இடத்தில் ஒரு காரியம் குறித்து ஒன்றைக் கூறுகின்றார். மற்றோர் இடத்தில் அதே காரியம் குறித்து முன் கூறியதற்கு மாறுபாடாகக் கூறுகிறார். ஒரு கொலை வழக்கில் வரும் சாட்சி, மாஜிஸ்டிரேட்டிடம் நடக்கும் 'முன் விசாரணையில்' (preliminary enquiry) அளிக்கும் சாட்சியத்திற்கு மாறாக மாவட்ட நீதிபதி முன் நடக்கும் விசாரணையில் கூறலாம். இந்தச் சாட்சியத்தில் எது உண்மை எது பொய் என்று உறுதி செய்வது இயலாது. எப்படியும் முரண்பாடான இரண்டு வகைக் கூற்றுகளும் உண்மையாக இருத்தல் முடியாது; இரண்டில் ஒன்று பொய்யானதுதான். எனவே, இவர் மீது பொய்ச்சான்றுக் குற்றம் சாட்டப்படும்பொழுது, மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் பொய் கூறினார் என்றோ, மாவட்ட நீதிமன்றத்தில் பொய் கூறினார் என்றோ குறிப்பிட்டுச் சொல்லவேண்டியதில்லை. 'இரண்டு கோர்ட்டுகளில் ஒன்றுக்கொன்று முரணான சாட்சியம் கூறியிருக்கிறார். இதில் ஏதாவது ஒன்று பொய்யானது; எனவே, இவர் குற்றவாளி' என்று குற்றம் சாட்டினாலே போதுமானது.

### குற்ற வழக்கில் எதிரி கூறுவது சான்றளிப்பது ஆகாது

குற்ற வழக்கில் குற்றம் சாட்டப்பட்டு எதிரியாக (accused) நீதிமன்றத்தில் நிற்பவரிடம் நீதிபதி கேள்விகள் கேட்பதுண்டு. இப்போது, எதிரி தாம் குற்றம் செய்யவில்லை என்பதையும், மற்ற விபரங்களையும் கூறுகிறார். முடிவில் எதிரி குற்றவாளிதான் என்று தீர்மானிக்கப்பட்டுத் தண்டிக்கப்படுகிறார். நீதிபதி அவரை விசாரிக்கையில் தாம் குற்றம் செய்யவில்லை என்று கூறியதும், இதர விவரங்களைக் கூறியதும் பொய்யெனக் காணப்பட்டாலும் அந்த எதிரி கூறியது பொய்ச்சான்றளிப்பது ஆவதில்லை. அவர்மீது எந்த நடவடிக்கையும் எடுப்பதில்லை. இதற்குக்குற்ற வழக்கு முறைச்சட்டம் 342(2)ஆவது பிரிவு வகை செய்கிறது.

ஆனால், அந்தச் சட்டத்தின் 342 (A) பிரிவுப்படி குற்றம் சாட்டப்பட்டவர் தன்னையும் ஒரு சாட்சியாக விசாரிக்க வேண்டுமென்று கோரி, பிரமாணத்தின் பேரில் முறையாக சாட்சியம் கூறினார் என்றால், அப்பொழுது அவர் உண்மையே கூறவேண்டும்.

## பொய்ச்சான்று புனைதல்
## (Fabricating False Evidence)

பொய்ச்சான்று அளித்தல் என்ற குற்றம்பற்றி இதுவரை கண்டோம்.

சான்று என்பது ஒருவர் கூறுவதாக இருக்கலாம்; ஒருவர் எழுத்து மூலம் அறிவிப்பதாகவும் இருக்கலாம்; இவை தவிர, சூழ்நிலைகளாகவும் (circumstances) அமையலாம். அந்தச் சூழ்நிலைகளை ஆராய்ந்துதான் ஒருகாரியத்தின் உண்மை உறுதி செய்யப்படுகிறது. எனவே, பொய்ச்சான்றை அளிக்கும் முயற்சியில் சூழ்நிலைகளைப் பொய்யாக ஏற்படுத்துவதும் உண்டு.

கண்ணன்மீது திருட்டுக்குற்றம் சாட்டி அவனைத் தண்டனைக்கு உள்ளாக்கவேண்டும் என்று இராமன் நினைக்கிறான். அதற்காகத் தன்னுடைய நகை ஒன்றைக் கண்ணனுடைய பெட்டிக்குள் கண்ணனுக்கும் தெரியாமல் வைத்துவிட்டுத் தம் நகை திருட்டுப்போய் விட்டதாகப் போலீசில் புகார் செய்கிறான். போலீசார் கண்ணனுடைய பெட்டியைச் சோதித்து அதில் நகை இருந்ததால் கண்ணன் மீது திருட்டுக்குற்றத்திற்கென வழக்கிடலாம். இப்பொழுது இராமன் செய்த செயல் என்ன? கண்ணன்மீது திருட்டுக்குற்றம் நிருபிக்கப் படவேண்டும் என்ற தீய கருத்தோடு ஒரு பொய்ச்சான்றினை உருவாக்கியதாகும். கண்ணன் பெட்டிக்குள் இராமனது நகை இருந்தது உண்மைச்சான்று அன்று; இராமனால் புனையப்பட்ட பொய்ச்சான்று. இது பொய்ச்சான்று புனைதல் (Fabricating False Evidence) என்ற குற்றமாகிறது.

போலீசார் கண்ணன் பெட்டியைச் சோதித்த பின்பும் உண்மை தெரிந்து கண்ணன்மீது வழக்கிடாமலும் இருக்கலாம்; அல்லது வழக்கிட்ட பிறகு, நீதிமன்றம் உண்மையைக் கண்டுபிடித்துக் கண்ணனை விடுதலை செய்யலாம். எப்படியும், பொய்ச்சான்று புனைந்த குற்றத்திற்கு இராமன் ஆளாகின்றான். கண்ணன் பெட்டிக்குள் நகையை வைத்த இராமன் கருத்து என்ன என்பதையே சட்டம் கவனிக்கிறது. நீதிமன்ற விசாரணையில் இந்தச் சூழ்நிலை கண்ணனுக்கு எதிரான சான்றாக அமைதல்வேண்டும் என்ற தீய கருத்தோடுதான் இராமன் அவ்வாறு செய்தான். எனவே, கண்ணனுக்கு எதிராக வழக்குத் தொடரப்படாவிட்டாலுங்கூட, இராமன் செயல் பொய்ச்சான்று புனைந்த குற்றமாகும்.

முருகன் வேலனிடம் ஆயிரம் ரூபாய் கடன் வாங்கியிருந்தான். ஆனால், அதைக் குறித்த கெடுப்படி திருப்பிக் கொடுக்கவில்லை. வேலன் அந்தப் பணத்தை வரப்பற்றுவதற்கு வழக்கிடுகின்றான்.

அந்த வழக்கில் சாட்சியமாக இருப்பதற்கென்று வேலன் தன் கணக்குப் புத்தகத்தில் ஒரு தேதியில் முருகனுக்குக் கடன் கொடுத்த தாகக் குறிப்புஎழுதிவைக்கிருன். கடன் கொடுத்தபொழுது உண்மை யில் அந்தக் கணக்கில் குறிப்பு எழுதப்படவில்லை. வழக்கில் சாட்சியமாக அமையவேண்டும் என்ற எண்ணத்தில் கணக்குக் குறிப்புப் பொய்யாக எழுதப்படுகிறது. இவ்வாறு செய்தலும் பொய்ச் சான்று புனைதலேயாகும். கடன் கொடுத்தபொழுது முறைப்படி கணக்கில் குறிப்பு எழுதப்பட்டிருந்தால் அது சரியான சாட்சிய மாகும். ஆனல், வழக்கிற்கென்று பொய்யாகக் குறிப்பெழுதுவது உண்மையாகவே கடன் கொடுத்ததைக் காட்டினுலுங்கூட, அது பொய்ச்சான்று புனைதல்தான்.

இம்மாதிரியே, நீதிமன்றத்திலோ அல்லது ஓர் அதிகாரியால் நடத்தப்பெறவிருக்கும் சட்டப்படியான நடவடிக்கையிலோ பயன் படுத்தப்படுவதற்கென ஓர் ஆவணத்தைப் பொய்யாக எழுதுவதும், பத்திரங்களைத் திருத்துவதும், சூழ்நிலைகளை உண்டுபண்ணுவதும் குற்றமாகும்.

192ஆம் பிரிவில் 'பொய்ச்சான்று புனைதல்' என்ற குற்றத் திற்கான இலக்கணத்தைக் காண்கின்ருேம்.

நீதி முறையான நடவடிக்கை, பொது ஊழியர் நடத்தும் சட்டப்படியான நடவடிக்கை, இவற்றில் சம்பந்தப்பட்டவர்கள் அதிலுள்ள ஒரு முக்கியமான விஷயம் குறித்துத் தவருன அபிப் பிராயம் கொள்ளவேண்டும் என்ற கருத்தோடு, புத்தகத்திலோ பத்திரங்களிலோ பொய்யாக எழுதி அல்லது பொய்ப்பத்திரம் தயாரித்து, அல்லது ஒரு சூழ்நிலையை உண்டுபண்ணி, அதன்மூலம் அந்த நடவடிக்கைக்கான பொய்ச்சான்று தயாரித்தல் குற்றமாகும். இதைப் 'பொய்ச்சான்று புனைதல்' (Fabricating False Evidence) என்று கூறுகிருேம்.

'நீதி முறை நடவடிக்கைகள்' என்ருல் நீதிமன்றங்களில் நடப்பவைதாம் என்பதல்ல. சாட்சிகள் பிரமாணத்தின்பேரில் சான்றளிக்கும் நடவடிக்கைகள் எல்லாம் நீதிமுறை நடவடிக்கை களே.

ஒரு பத்திரம் எழுதினல், அது எழுதப்பட்ட தேதியிலிருந்து ஒரு குறிப்பிட்ட காலவரைக்குள் பதிவு (ரிஜிஸ்டர்) செய்யப்பட வேண்டும். அந்தக் காலவரை தாண்டியபின் அந்தப் பத்திரத்தின் தேதியை மாற்றிப் பதிவாளரிடம் தாக்கல் செய்தால் அது இந்தப் பிரிவின்கீழ்க் குற்றமாகிறது.

கடனை வரப்பற்றுவதற்கு ஒருவர் வழக்கிட்டார். கடன் கொடுக்கவேண்டிய எதிர்வாதி, தாம் கடனைச் செலுத்திவிட்டதாக

வாதிட்டு, அதற்குச் சான்றாக ஒரு 'போஸ்டல் ரசீதைத்' தாக்கல் செய்தார். எதிர்வாதி அனுப்பிய ஓர் இன்ஷூர் கவரை வாதி பெற்றுக்கொண்டதற்கான ரசீது அது. அந்த இன்ஷூர் கவரில் பண நோட்டுகளை அனுப்பிக் கடனைத் தீர்த்ததாக எதிர்வாதி வாதம் செய்தார். ஆனால், அந்த இன்ஷூர் கவரில் அனுப்பப் பட்டது பணநோட்டுகள் அல்லவென்றும், வெறும் காகிதங்களே என்றும் வாதி நிரூபித்தார். இவ்வாறு, 'போஸ்டல் ரசீதை' எதிர் வாதி கோர்ட்டில் தாக்கல்செய்த செயல் 'பொய்ச்சான்று புனைதல்' ஆகும் என்று தீர்மானிக்கப்பட்டது.

இவ்வாறு 'பொய்ச்சான்று அளித்தலும்' 'பொய்ச்சான்று புனை தலும்' குற்றங்கள் ஆகின்றன. நீதிமுறையான நடவடிக்கைகளைப் பொறுத்து இக் குற்றங்கள் செய்யப்பட்டால் அதற்கான தண்டனை ஏழு ஆண்டுகள் வரை சிறை, அபராதம்; இதர நடவடிக்கைகளில் செய்யப்பட்டால் மூன்று ஆண்டுகள் வரை சிறை, அபராதம் (193ஆம் பிரிவு).

இன்னொருவரை மரண தண்டனைக்கு ஆளாக்கவேண்டும் என்ற கருத்துடன் பொய்ச்சான்று அளித்தவருக்கும், புனைந்தவ ருக்கும் ஆயுள் சிறைவாசம் கூட அளிக்கலாம். இந்தப் பொய்ச் சான்றின் பயனாக நிரபராதி ஒருவர் மரணதண்டனை விதிக்கப் பட்டுத் தூக்கிலிடப்பட்டார் எனில், பொய்ச்சான்றளித்தவருக்கும் புனைந்தவருக்கும் இதே தூக்குத் தண்டனை அளிக்கப்படலாம் (194ஆம் பிரிவு).

எனவே, ஒருவர்மீது பொய்ச்சான்று கூறியோ, பொய்ச்சான்று புனைந்தோ அவரைத் தூக்குத் தண்டனைக்கு உட்படுத்துபவரும் அதே தண்டனைக்கு ஆளாகின்றார் என்பதை நாம் கவனத்தில் கொள்ளவேண்டும்.

## பொய்ச்சான்றைப் பயன்படுத்துதல்
## (Using Evidence Known to be False)

ஒரு சாட்சியம் பொய்யானது, அல்லது புனையப்பட்டது என்பதைத் தெரிந்தும், தீய கருத்துடன் அதை உண்மைச் சான் றெனப் பயன்படுத்துவோரும், பயன்படுத்த முயலுவோரும் குற்ற வாளிகள். பொய்ச்சான்று அளிப்பவர்களுக்கும், புனைபவர்களுக் கும் என்ன தண்டனையோ அதே தண்டனை அதைப் பயன்படுத்து வோருக்கும் உண்டு (196ஆம் பிரிவு).

ஒருவர் தமது வழக்கு வெற்றிபெறவேண்டும் என்று, மற்றொரு வரைப் பொய்ச்சான்று கூறச் செய்கின்றார் எனில், அவர் இந்தப் பிரிவுப்படி குற்றவாளியாகின்றார். பொய்யான பத்திரங்களை ஒருவர்

கோர்ட்டில் தாக்கல் செய்வது குற்றமாகிறது. அந்தப் பத்திரத்தைப் பொய்யாக ஒருவர் எழுதியிருக்கலாம். இன்னொருவர் அதைக் கோர்ட்டில் தாக்கல் செய்யலாம். முன்னவர் 'பொய்ச்சான்று புனைதல்' என்ற குற்றத்திற்குப் பொறுப்பாகின்றார். இரண்டாமவர், 'பொய்ச்சான்றைப் பயன்படுத்தல்' என்ற குற்றத்திற்கு ஆளாகின்றார்.

## பொய்ச்சான்றிதழ் அளித்தல்
## (Issuing or Signing False Certificates)

சான்றாகப் பயன்படுத்தத்தக்க, அல்லது சட்டப்படி தேவைப்படும் ஒரு சான்றிதழைப் (சர்ட்டிபிகேட்) பொய்யாக அளிப்பது குற்றம்.

பொய்யான தகவலுடைய ஒரு சான்றிதழை அளிப்பது குற்றமாகிறது. அவ்வாறு அளிப்பவர் 'பொய்ச்சான்று அளிக்கும்' குற்றத்தைச் செய்தவராகின்றார் (197ஆம் பிரிவு).

பதிவு செய்யப்பட்ட பத்திரங்களுக்கு நகல்களைப் பெறுகிறோம். அவை பதிவாளர்களால் சரிபார்க்கப்பட்டு, மூல பத்திரத்தின் உண்மையான நகல் என்று சான்றிடப்பட்ட (certified copies) நகல்கள். மூல பத்திரத்தில் உள்ளவைகளை மாற்றி வேண்டுமென்றே எழுதப்பட்ட பொய்யான நகல்களைப் பதிவாளர் சான்றுக் கையெழுத்திட்டு அளித்தல் குற்றமாகிறது.

அம்மாதிரியான பொய்ச்சான்றிதழ்களைப் பயன்படுத்துவதும் பயன்படுத்த முயலுவதும் குற்றங்கள் (198ஆம் பிரிவு).

நீதி மன்றம் அல்லது பொது ஊழியர் சட்டப்படி ஏற்கக்கூடிய உறுதி அறிவிப்பில் (declaration) பொய் கூறுபவரும் அத்தகைய பொய்யறிவிப்பைப் பயன்படுத்துபவரும் குற்றவாளிகள் ஆகின்றனர் (199, 200ஆம் பிரிவுகள்).

# 23. பொது ஊழியர் சம்பந்தமான குற்றங்கள்

## (Offences by or relating to Public Servants)

**பொது ஊழியர்கள் யார்?—பொது ஊழியர் பணிமுறைச் செயல் குறித்துச் சட்ட முரணாக அவா நிறைவு பெறுதல் (இலஞ்சக் குற்றம்)—மதிப்புள்ள பொருளை எதிர்பயன் அல்லது தக்க எதிர்பயன் கொடுக்காமல் பெறுதல்—இக் குற்றங்களுக்கு உடந்தையாக இருத்தல்—இலஞ்சம் கொடுப்பதற்கென இலஞ்சம்பெறுதல்—செல்வாக்கைப் பயன்படுத்த இலஞ்சம் பெறுதல்—பிறருக்குக் கேடு விளைக்கக் கருதிய பொது ஊழியர் சட்ட விதிகளைப் புறக்கணித்து நடத்தல்—பிறருக்குக் கேடு விளைக்கக் கருதிய பொது ஊழியர் தவருன ஆவணங்களை வேண்டுமென்றே தயாரித்தல்—பொது ஊழியர் வாணிபத்தில் ஈடுபடுதல்—பொது ஊழியர் சட்ட விரோதமாக ஒரு சொத்தை வாங்குதல் அல்லது ஏலத்தில் கேட்டல்—பொது ஊழியராக நடித்தல்—மோசடிக் கருத்துடன் பொது ஊழியருக்கான உடை அல்லது சின்னம் அணிதல்.**

நாட்டின் நல்லாட்சியே மக்களின் நல்வாழ்விற்கு அடிப்படையாக அமைகின்றது. நீதித்துறை, நிர்வாகத் துறை, சட்டமியற்றும் துறை இந்த மூவகைத் துறைகளும் செப்பமுறப் பணியாற்றினுல் தான் நல்லாட்சி நடைபெறுகிறது என்று கூறமுடியும். நடுவுநிலைமை என்ற சீரிய பண்பு நீதித்துறைக்கு மட்டும் பொருந்துவதன்று; எல்லாத் துறைகளில் பணியாற்றுவோர்களும் நடுவுநிலைமை தவருது செயல்பட்டால்தான் நல்லாட்சி நடைபெற இயலும். பகைவர், நண்பர், ஏழை, செல்வர் என்ற பாகுபாடின்றி யார்மாட்டும் 'சமன் செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்து ஒருபாற் கோடாது' பணியாற்றும் பொது ஊழியர்களைக்கொண்ட அரசு முறையே சிறந்ததாகும். எனவே, பொது ஊழியர்களின் பொதுப் பணி சார்ந்த செயல்களைச் சட்டம் உன்னிப்பாகக் கண்காணிக்கின்றது. குடிமக்கள் இருவரிடையே ஒருவருக்கு மட்டும் பொது ஊழியர் உதவியாக இருந்து தமது பொதுப்பணியை ஓர வஞ்சகமாகச் செய்து மற்றவருக்கு நீதியை மறுத்தால், அதனுல் கேடு விளைவது மற்றவருக்குத்தான், அரசாங்கத்திற்கு அன்று. இருப்பினும்

அத்தகைய செயலை அரசுக்கெதிரான செயல் என்றே சட்டம் கொண்டு, அதைக் குற்றமெனக் கொள்கிறது.

இந்த இடத்தில், பொது ஊழியர் (Public Servants) என்று யாரைச் சட்டம் குறிக்கின்றது என்பதை நாம் காணவேண்டும்.

## பொது ஊழியர்கள் யார்?

குற்ற இயல் சட்டத்தின் 21ஆம் பிரிவு பொது ஊழியர்கள் யார் என்பதைக் கூறுகிறது.

(1) தரைப்படை, கடற்படை, விமானப்படை இவற்றில் பணி செய்யும் உயர் அதிகாரி.

(2) நீதிபதி; ஒரு வழக்கைத் தீர்ப்பதற்கென்று அல்லது முடிவு கூறுவதற்கென்று தனியாகவோ, குழுவினரில் ஒருவராகவோ சட்டப்படி அதிகாரம் பெற்றவர்.

(3) புலன் விசாரணை செய்து அறிக்கை அளிப்போர்; ஆவணங்களை வைத்திருப்போர்; கணக்குகளை வைத்திருப்போர்; சொத்துகளை ஏற்று, வைத்திருந்து விற்போர்; நீதிமன்ற உத்தரவுகளை நிறைவேற்றுவோர்; சத்தியம் செய்து வைப்பவர்; மொழிபெயர்ப்பாளர்; நீதிமன்றத்தில் ஒழுங்கை நிலைநாட்டுவோர் (லிக்குவிடேட்டர், ரிசீவர், கமிஷனர் இவர்கள் உட்பட) இவ்வாறான நீதிமன்ற அலுவலர்கள்.

(4) ஜூரி, அசெசர், நீதிமன்றத்திற்கு உதவியாக இருக்கும் பஞ்சாயத்து அங்கத்தினர்கள்.

(5) நீதிமன்றம் அல்லது வேறு அதிகாரி இவர்களால் அனுப்பப்பட்ட காரியங்களைக் கவனித்து முடிவு செய்வோர் (Arbitrators).

(6) ஒருவரைச் சிறை செய்யும் அல்லது சிறையில் வைத்திருக்கும் அதிகாரம் உள்ள பதவியிலுள்ளோர்;

(7) குற்றங்களைத் தடுப்பது, குற்றங்கள்பற்றித் தகவல் கொடுப்பது, குற்றவாளிகளை நீதிமன்றத்தின்முன் விசாரணைக்குக் கொண்டு வருவது, பொதுமக்களின் நலத்தையும், பாதுகாப்பையும், வசதியையும் கவனிப்பது, இந்தக் கடமைகள் உடைய அதிகாரிகள்.

(8) அரசாங்கத்தின் சார்பில் ஒரு பொருளைப் பெறவும், வைத்திருக்கவும், செலவு செய்யவும் கடமையுள்ளவர்; நிலம் அளவிடல், தீர்வை நிர்ணயம், ஒப்பந்தம் இவற்றை அரசாங்கத்தின் சார்பில் செய்தல், ரெவின்யூ இலாகா

உத்திரவுகளை நிறைவேற்றுதல், அரசாங்க நிதிநிலைபற்றி விசாரித்து அறிக்கை அளித்தல், அரசாங்க நிதிநிலைபற்றிய ஆவணங்களை வைத்திருத்தல், நிதிநிலையைப் பாதுகாக்கும் சட்டங்கள் மீறப்படாமல் தடுத்தல், இந்தக் கடமைகள் உள்ளவர்கள்.

(9) ஒரு கிராமம், நகரம், மாவட்டம் இங்குள்ளவர்களின் சொத்துரிமைகளைக் காட்டும் கணக்குகளை வைத்திருப்போர்; அம் மக்களின் சொத்துகளை எடுக்கவும், பெறவும், வைத்திருக்கவும், செலவழிக்கவும் அதிகாரமுடையோர்; பொது மக்களின் நன்மைக்கென நில அளவு, தீர்வை விதித்தல் இவற்றைச் செய்வோர்.

(10) தேர்தல் நடத்துவோர்; வாக்காளர்கள் பட்டியலைத் தயாரிக்கவும், பிரசுரிக்கவும், எழுதவும், திருத்தியமைக்கவும் அதிகராம் உள்ளோர்.

(11) (i) பொது ஊழியம் செய்வதற்கென்று அரசாங்கத்திடமிருந்து சம்பளமாகவோ கமிஷனுகவோ பணம் பெறுவோர்.

(ii) தலநிர்வாகம், மத்திய, மாநில அரசாங்கங்கள் ஏற்படுத்திய கம்பெனிகள், இவற்றில் ஊதியம் செய்வோர்.

இவர்கள் அனைவரும் அரசாங்கத்தால் நியமிக்கப்பட்டாலும், படாவிடிலும், 'பொது ஊழியர்கள்' (Public Servants) ஆகின்றனர்.

பொதுப் பதவியை ஒருவர் வகிப்பதில் சட்டப்படி குறைபாடு இருக்கலாம். இருந்தாலும் அவர் அந்தப் பதவியில் இருந்தால் அவர் பொது ஊழியரே ஆகின்றார்.

சட்டசபை, நகராட்சி முதலிய பொது நிலையங்களுக்குத் தேர்ந்தெடுப்பதற்கென நடத்தும் தேர்தல்களையே, 'தேர்தல்கள்' என்று சட்டம் குறிக்கின்றது.

இவ்வாறு 'பொது ஊழியர்கள்' யார் என்பதற்கான விளக்கத்தை 21ஆம் பிரிவில் காணுகிறோம்.

இந்தப் பொது ஊழியர்களைப்பற்றிய குற்றங்களே இப் பகுதியில் கூறப்படுகின்றன. இந்த அத்தியாயத்திலும் சட்டத்தின் வேறு இடங்களிலும் 'பொது ஊழியர்' என்று குறிப்பிடுவது சட்டத்தின் 21ஆம் பிரிவில் கூறப்பட்ட வகையிலுள்ள அலுவலர்களையே என்பதை நாம் நினைவிற் கொள்ளவேண்டும்.

## பொது ஊழியர் பணிமுறைச் செயல் குறித்துச் சட்டமுரணுக அவா நிறைவு (illegal gratification) பெறுதல் (இலஞ்சக் குற்றம்)

பொது ஊழியராக இருப்பவர் அல்லது அவ்வாறு ஆவதை எதிர் பார்த்து இருப்பவர்,

தமது பணிமுறைச் செயல் எதையும் (official act) செய்யவோ, செய்யாதிருக்கவோ,

பணிமுறைக் காரியங்களில் ஒருவருக்குச் சலுகை காட்டவோ, காட்டாதிருக்கவோ,

மத்திய அரசு அல்லது மாநில அரசு, பார்லிமென்டு அல்லது சட்டசபைகள், தலநிர்வாகம், அரசாங்கம் நிறுவும் கம்பெனி பிற பொது ஊழியர், இவர்களிடமிருந்து ஒருவருக்கு உபகாரம் பெற்றுத் தரவோ அல்லது அபகாரம் விளைக்கவோ, இவற்றில் ஒன்றைச் செய்வதற்கென்று,

ஊக்குதலாகவோ அல்லது ஊதியக் கொடையாகவோ

சட்டப்படியான ஊதியம் தவிர, வேறு எந்தவகையான அவா நிறைவையும்,

பிறரிடமிருந்து,

தனக்கென்றே, வேறொருவருக்கென்றே,

ஏற்றல், பெறுதல், ஏற்பதற்கு இசைதல், பெறுதலுக்கு முயலல்

இவற்றில் ஒன்றைச் செய்தால், இதற்கு மூன்று ஆண்டுக் காலம் வரை சிறை, அபராதம் தண்டனையாகும் (161ஆம் பிரிவு).

விளக்கம்: (1) பணமாகப் பெறுவது அல்லது பண மதிப் புள்ளவைகளைப் பெறுவதுதான் இலஞ்சம் என்பதன்று.

(2) செய்யக் கருதாத ஒன்றைச் செய்யப்போவதாகப் பொய் கூறி அதற்கு ஓர் அவா நிறைவை ஊக்குதலாகப் பெற்றாலும், செய்யாத ஒன்றிற்கு ஊதியக் கொடையாக ஒன்றைப் பெற்றாலும், அது 'ஒன்றைச் செய்வதற்கெனப் பெறும் ஊக்குதலாகவோ, ஊதியக் கொடையாகவோ' தான் கருதப்பெறும்.

உதாரணங்கள்: (1) ஒரு வங்கியாளர் (Banker) ஒரு வழக்கில் கட்சிக்காரராக இருக்கிறார். அவ் வழக்கில், நீதிபதி வங்கியாளருக் குச் சாதகமாகத் தீர்ப்பளித்துவிட்டு, அதற்கு ஊதியக் கொடையாக, நீதிபதி தம்முடைய தம்பிக்கு வங்கியாளரின் வங்கிநிலையத்தில் ஒரு வேலையைப் பெறுகிறார். நீதிபதியின் செயல் இந்தப் பிரிவுப்படி குற்றமாகும்.

(2) ஒரு மாவட்ட ஆட்சித் தலைவர் ஒருவரிடமிருந்து பத்தாயிரம் ரூபாயைப் பெற்றுக்கொள்கிறார். ஒரு குறிப்பிட்ட எந்தச் செயலையும் செய்வதற்கென்று அவர் பணத்தைப் பெறவில்லை. பொதுவாக, எந்தக் காரியத்திலும் பணம் கொடுத்தவருக்குச் சலுகை காட்டுவதற்கென்றுதான் அவ்வாறு பணத்தைப் பெற்றார். இச் செயலும், இந்தப் பிரிவுப்படி குற்றமாகும்.

மேலே காணப்படும் சட்டப் பிரிவை ஊன்றிப் படித்தால் இக் குற்றத்தின் பல கூறுகள் தெளிவாகத் தெரியும்.

பொதுவாக, இக் குற்றத்தை 'இலஞ்சக் குற்றம்' (Bribery) என்று கூறுவார்கள். 'இலஞ்சம்' என்பது என்ன? சட்டம் எந்தச் செயல்களையெல்லாம் இலஞ்சக் குற்றமாகக் கொள்ளுகிறதென்று இப் பிரிவு எடுத்துக்காட்டுகிறது.

**பதவியை எதிர்பார்த்திருப்போர்**

இலஞ்சம் பெறுபவர் பொது ஊழியராக இருக்கவேண்டுமென்ற அவசியமில்லை. குறிப்பிட்ட பொது ஊழியராக வர இருப்பவரும், அந்தப் பதவியை எதிர்பார்த்திருப்பவரும், இலஞ்சம் பெறுதல் குற்றமேயாகும்.

இன்று ஒருவர் எழுத்தராக (clerk) இருக்கிறார். இன்னும் இரண்டு மாதங்களில் அவர் தாசில்தாராகப் பதவிபெறப்போகின்றார். தாசில்தாராக ஆனபின் அவர் செய்யவேண்டிய ஒரு பணிமுறைச் செயல்குறித்து அவர் எழுத்தராக இருக்கும்பொழுது, இலஞ்சம் வாங்குவதும் குற்றமாகும்.

**சட்டமுரணான அவா நிறைவு (Illegal Gratification)**

ஒருவருக்குள்ள ஆசையே பல இன்னல்களுக்குக் காரணமாகின்றது. 'ஆசைக்கோர் அளவில்லை' என்பது நம் முன்னோர் வாக்கு. அளவற்ற அந்த ஆசைக்கு ஒரு நிறைவுகாண நாம் முயலும்போது துன்பங்கள் விளைகின்றன.

ஆசைகள் எத்தனையோ வகைப்படுகின்றன. பணத்தை ஈட்டவேண்டுமென்ற அவா ஒருவருக்கு; வீடு கட்டவேண்டுமென்ற அவா மற்றொருவருக்கு; நகை வேண்டுமென்ற ஆசை மூன்றாமவருக்கு. மனிதருக்குள்ள ஆசைகளின் வகைகளை வரையறுத்தல் இயலாது. இந்த அவா நிறைவேறியதால் மனிதன் பெறும் மனமகிழ்வை, 'அவா நிறைவு' என்று கூறுகிறோம். 'அவா நிறைவு' என்பதை ஆங்கிலத்தில் 'gratification' என்பார்கள்.

பிறருக்குத் தீங்கு விளைக்காமல் ஒருவர் தமது அவாவை நிறைவேற்றிக்கொள்வதைச் சட்டம் அனுமதிக்கின்றது. அது சட்ட

முரணல்லாத அவா நிறைவேற்றம் ஆகின்றது. ஆனால், பொது ஊழியர் ஒருவர் தமது பணிமுறையான (official) கடமைகளைச் செய்வதில் பாரபட்சம் காட்டியோ அல்லது காட்டுவதாகக் கூறியோ, உதவி செய்வதாகச் சொல்லியோ, தாம் விரும்பியதைப் பிறரிடமிருந்து பெற்று, தம் அவாவை நிறைவேற்றுதலைச் சட்டம் தடை செய்கின்றது. இதைச் 'சட்ட முரணான அவா நிறைவு' (Illegal Gratification) என்று சட்டம் குறிப்பிடுகின்றது. இந்தச் சட்ட முரணான அவா நிறைவையே 'இலஞ்சம்', 'கைக்கூலி' என்று சாதாரணமாகக் கூறுகிறோம். இலஞ்சத்தைப் பணமாகவோ, வேறு பொருளாகவோ பொது ஊழியர் பெற்றிருக்க வேண்டியதில்லை. பணம் வேறுவகைப் பொருள்கள் இன்றியும், ஒருவரின் அவா நிறைவு பெறலாம். எந்த வகையில் ஒருவர் ஆசை நிறைவுற்றாலும் அதுவும் குற்றத்தின் இலக்கணத்தில் அமையவேண்டுமென்ற கருத்துடனேயே, 'bribery' என்ற சொல்லைப் பயன்படுத்தாமல் 'illegal gratification' என்ற சொற்றொடர் சட்டப் பிரிவில் கையாளப் படுகின்றது. இவ்வாறு, 'சட்ட முரணான அவா நிறைவு' என்பதில் உள்ளடங்கும் பொருளை நாம் உணர்ந்துகொள்ள வேண்டும்.

**சட்ட முரணான அவா நிறைவை ஏற்பது பெறுவது, ஏற்பதற்கு இசைவது, பெறுவதற்கு முயல்வது**

இலஞ்சத்தை ஏற்பதும் (accept), பெறுவதும் (obtain), ஏற்பதற்கு இசைவதும் (agrees to accept), பெறுவதற்கு முயலுவதும் (attempts to obtain) குற்றச் செயல்கள். எனவே, ஒரு பொது ஊழியர் தமக்கு இலஞ்சம் கொடுக்குமாறு கேட்பது குற்றமாகிறது. ஒருவர் இலஞ்சம் கொடுப்பதாகச் சொல்லுகிறாரெனில், அதை ஏற்றுக்கொள்வதற்கு இசைவதும் குற்றம்; இசைந்த செயலே குற்றமாகிவிடுகிறது.

**'தனக்கென்றோ, வேறொருவருக்கென்றோ'':** வாங்கும் இலஞ்சத்தைப் பொது ஊழியர் தமக்கென்று பெறவேண்டியதில்லை; வேறொருவருக்கென்று அதைப் பெற்றாலும் குற்றந்தான். அந்த வேறொருவர் பொது ஊழியராக இருக்கலாம் அல்லது பொது ஊழியரல்லாதவராகவும் இருக்கலாம்.

**அவா நிறைவின் வகை:** 'அவா நிறைவு' என்றால் பணமாகவோ தங்கமாகவோ, வெள்ளியாகவோ பெறவேண்டுமென்பதன்று. இலஞ்சமாகக் கொடுக்கப்படும் பொருள், பணத்தால் மதிப்பிடும் படியாக இருக்கவேண்டுமென்ற அவசியமுமில்லை.

ஒருவர் வேலையிலிருந்து நீக்கப்பட்டுவிட்டார். மீண்டும் வேலையில் சேர்த்துக்கொள்ளவேண்டுமென அவர் மனுப்போட்டிருக்

கிருர்; அந்த மனுமீது உத்தரவு போடவிருக்கும் அதிகாரி, அந்த ஊரில் இடிந்துகிடந்த கோவிலைக் கட்டுவதற்கென்று ரூ. 300 கொடுத்தால் வேலை தருவதாக வேலையிழந்து நிற்பவரிடம் கூறி, அவ்வாறு பணத்தையும் செலுத்தச் செய்தார். இது குற்றமாகும். அந்தப் பணத்தை அதிகாரி தமக்கு எடுத்துக்கொள்ளவில்லை என்ருலுங்கூட 'வேருெருவருக்கென்று' வாங்கியதுதான். வேருெரு நபருக்கென்றும் வாங்குவது கூடாதென்பது சட்டம்.

சட்டம் இவ்வாறு இல்லையெனில் பொது ஊழியர்கள் இலஞ்சம் வாங்குவது எளிதாகிவிடும். தமக்கென்று பணம் பெருமல், இன்னெரு நிலையத்தின் பெயரால் வாங்க ஆரம்பித்துவிடுவார்கள்.

இலஞ்சம் பணமாக இருக்கவேண்டியதில்லை. ஒரு நீதிபதி தம்முன் வழக்காடும் ஒருவரோடு துணிக்கடைக்குச் சென்று, வழக்காடி வாங்கிக்கொடுத்த துணியைப் பெற்றுக்கொண்டார். அந்த வழக்கில் நீதிபதியிடமிருந்து சலுகை பெறுவதற்கென்றே வழக்காடி துணியை வாங்கிக்கொடுத்தார். நீதிபதியின் இச்செயல் குற்றம் என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

161ஆம் பிரிவுடன் மேலே கண்ட முதல் உதாரணத்தில் நீதிபதி தமது தம்பிக்கு வேலை வாங்கிக்கொடுத்தார். வேலை வாங்கிக் கொடுப்பதைப் பணத்தால் மதிப்பிட்டுக் கூறுதல் எளிதன்று. இருந்தும் அச் செயல் குற்றமாகிறது.

ஒரு பொது ஊழியர் குடிகாரராக இருக்கலாம். பொதுப்பணி முறையான காரியங்களில் அவரிடம் சலுகை பெறுவதற்கென்று அவருக்கு மற்றெருவர் விலையுயர்ந்த மதுப்புட்டிகளை வாங்கி அளிக்கிருர். அவைகளைப் பொது ஊழியர் பெற்றுக்கொண்டால் அதுவும் இலஞ்சச் செயல்தான்.

**ஊக்குதல் (motive) அல்லது ஊதியக்கொடை (reward):** பணி முறையான செயலை இனிச் செய்வதற்கென்று அளிக்கப்படுவதை 'ஊக்குதல்' (motive) என்கிருேம். ஏற்கெனவே செய்யப்பட்ட செயலுக்கு அளிக்கப்படுவதை 'ஊதியக்கொடை' (reward) என்கிருேம்.

ஊக்குதல், ஊதியக்கொடை இவற்றிற்கும், பணிமுறைச் செயலுக்கும் உள்ள தொடர்பை நாம் ஊகித்தேயறியவேண்டும். 'இன்ன செயலுக்கு உள்ளது இந்த ஊதியக்கொடை' 'இன்ன செயலைச் செய்வதற்கென்று, அதற்கு எதிர்பயனுக இந்த ஊக்குதல்' என்ற ஒரு கருத்துப் பரிமாற்றம் (understanding) இலஞ்சம் வாங்குபவருக்கும், கொடுப்பவருக்கும் இருக்கிறது. ஆனல், ஓர் ஒப்பந்தமாகவோ, பலருக்கும் தெரியும்படியாகவோ எவரும்

இந்தக் கருத்துப் பரிமாற்றத்தைச் செய்துகொள்ளுவதில்லை. இதை நாம் ஊகித்தே அறிந்துகொள்ள வேண்டியிருக்கிறது.

**பணிமுறைச் செயல் நியாயமானதாகவே செய்யப்பட்டிருக்கலாம் ஆயினும் அதற்கென்று இலஞ்சம் பெறுதல் குற்றந்தான்**

'நான் சட்டப்படி எந்த உத்தரவு போடவேண்டுமோ அதைத்தான் போட்டேன்', 'நியாயமாக எதைச் செய்யவேண்டுமோ அதைத்தான் செய்தேன்', 'இலஞ்சம் கொடுத்தார் என்பதற்காக அவருக்கு நான் எந்தவிதச் சலுகையும் காட்டவில்லை' என்று இலஞ்சம் வாங்கிய பொது ஊழியர் கூறிக் குற்றத்திலிருந்து தப்புவது முடியாது. இந்தக் குற்றத்தின் சாரம் இலஞ்சம் பெறுவதுதான்; இலஞ்சம் பெற்றதற்காக ஒன்றை முறைதவறிச் செய்தல் அன்று. எனவே, இலஞ்சம் பெற்ற செயலே குற்றமாகி விடுகிறது. இலஞ்சத்தின் விளைவான, காரணமான பணிமுறைச் செயல் எவ்வாறு செய்யப்பட்டது என்பதைப்பற்றிச் சட்டம் கவனிப்பதில்லை.

**பணிமுறையான செயல்:** ஒரு செயலை ஒரு பொது ஊழியரால் செய்ய இயலுமோ, இயலாதோ என்பதைப்பற்றி அக்கறையில்லை. ஒரு செயலை அவர் செய்யக் கருதியிருக்கிருரா என்பதுபற்றியும் அக்கறையில்லை; ஒன்றைச் செய்வதாகக் கூறி இலஞ்சம் வாங்கினுரா என்பதையே சட்டம் கவனிக்கிறது. இவ்வாறு, நம் உச்ச நீதிமன்றம் (Supreme Court) தீர்ப்பளித்திருக்கிறது.

**இன்னெருவர் மூலமாக உபகாரம் அல்லது அபகாரம் பெற வைப்பது:** தாமாக ஒரு பொது ஊழியர் ஒரு செயலைச் செய்ய முடியாதவராக இருக்கலாம். அவர் அதைச் செய்யும் அதிகாரமுடைய மற்றெருரு பொது ஊழியர் மூலம் அதைச் சாதித்துவிடுவதாகக் கூறி இலஞ்சம் வாங்குவதும் குற்றமாகும்.

**இலஞ்சக் குற்றத்திற்கு உடந்தையாக இருத்தல்:** இலஞ்சம் வாங்குவது எவ்வாறு குற்றமாகிறதோ, அவ்வாறே ஒரு பொது ஊழியருக்கு இலஞ்சம் கொடுப்பதும் குற்றமாகிறது. இலஞ்சம் கொடுப்பவர் இலஞ்சம் பெறும் குற்றச் செயலைத் தூண்டியவர் ஆகின்ருர். குற்ற இயல் சட்டத்தின் 116ஆம் பிரிவுப்படி எந்தக் குற்றச் செயலுக்கும் உடந்தையாக இருப்பவர் குற்றவாளியாகின்ருர்.

165A பிரிவு இக் குற்றத்திற்கு உடந்தையாக இருப்பவர்க்குரிய தண்டனையைக் கூறுகிறது.

அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட அதிகாரிகள்மீது இலஞ்ச வழக்கு இடுவதெனில் அரசாங்கத்தின் அனுமதி வேண்டு

மென்று குற்ற விசாரணை முறைச் சட்டத்தின் 197ஆம் பிரிவு விதிக்கின்றது.

## மதிப்புள்ள பொருளை, எதிர்பயன் அல்லது தக்க எதிர்பயன் கொடுக்காமல் பெறுதல்

பொது ஊழியர் என்ற முறையில் தாம், அல்லது தம் கீழ்ப் பணியாற்றும் ஊழியர், செய்யும் பணிமுறைச் செயல்களுடன் தொடர்புகொண்ட அல்லது கொள்ளவிருக்கும் அல்லது கொள்ளக் கூடிய ஒருவரிடமிருந்து, அல்லது அவரோடு உறவுள்ள அல்லது அவரிடம் அக்கறைகொண்ட பிறரிடமிருந்து—விலை மதிப்புள்ள பொருளை, எதிர்பயன் ஏதும் கொடுக்காமலோ அல்லது மனமறிந்து குறைந்த எதிர்பயன் கொடுத்தோ, தமக்கென்று அல்லது பிறருக் கென்று—ஒரு பொது ஊழியர்—ஏற்றல், பெறுதல், ஏற்பதற்கு இசை தல், பெறுவதற்கு முயலுதல் குற்றமாகும். இக் குற்றத்திற்கு மூன் றாண்டுக் காலம்வரை சிறை, அபராதம் தண்டனையாகும் (165ஆம் பிரிவு).

உதாரணம் : (1) தம் பணிமுறைக் காரியங்களில் தொடர் புடைய ஒருவரது வீட்டில் ஓர் அதிகாரி குடியிருக்கிறார். அந்த வீட் டிற்குச் சாதாரணமாக மாத வாடகை ரூ. 200 கொடுக்கலாம்; ஆனால், அந்த அதிகாரி கொடுப்பதோ மாதம் ரூ. 50 தான்; இது தக்க எதிர்பயன் அளிக்காமல் மதிப்புள்ள ஒரு பொருளைப் பெறுவதாகிறது.

161ஆம் பிரிவில் பொது ஊழியர் பெறும் 'அவா நிறைவு' பணிமுறையான செயலைச் செய்வதற்கு அல்லது செய்யாதிருப்ப தற்கு ஊக்குதலாகவோ அல்லது ஊதியக் கொடையாகவோ இருக் கிறது. அதனால் அது குற்றமாகிறது. இந்தப் பிரிவின்படி பொது ஊழியர் பெறும் பொருள்கள் ஊக்குதலாகவோ, ஊதியக் கொடை யாகவோ இருக்கவேண்டியதில்லை. பணிமுறையான காரியங்க ளோடு தொடர்புடையவர்களிடம் இருந்து ஒரு பொருளை இனமாகப் பெறும் செயலே குற்றமாகிவிடுகிறது. பொருளைப் பெற்றதன் நோக் கத்தைப்பற்றி இந்தப் பிரிவின்படி அக்கறையில்லை.

தகுந்த விலைக்கு ஒரு பொருளைப் பொது ஊழியர் வாங்கு வதற்கோ, விற்பதற்கோ எவ்விதத் தடையுமில்லை. தக்க விலை கொடுக்காமல், அதிலும், அவருடைய அதிகாரக் காரியங்களில் தொடர்புடையவர்களிடமிருந்து ஒரு பொருளைப் பொது ஊழியர் இனமாகப் பெறுதல் குற்றமாகிறது. பொது ஊழியர் பிறரிடமிருந்து பொருள்களை இனமாகப் பெற்றுக்கொள்ளலாமென்று சட்டம்

அனுமதித்தால், சட்ட முரணான அவா நிறைவுகள் 'இனாம்கள்' என்ற பெயரில் நடைபெற ஏதுவாகிவிடும்.

பொது ஊழியர்கள், எவரிடமிருந்துமே பொருளுதவி பெறுதல் கூடாது என்று சட்டம் தடைசெய்யவில்லை. மகனுக்குத் தந்தை பொருள் கொடுத்து உதவலாம்; தந்தைக்கு மகன் கொடுக்கலாம். சகோதரர்கள் ஒருவருக்கொருவர் உதவியளிக்கும் வகையில் பணத்தையோ, வேறு சொத்துகளையோ அளிக்கலாம். நெருங்கிய உறவினர்கள் திருமணம் முதலியன குறித்துப் பரிசுகளையோ இனாம்களையோ வழங்குவதுண்டு. இத்தகைய உறவினர்கள் அளிக்கும் இனாம்களை ஒரு பொது ஊழியர் பெறுவதைச் சட்டம் தடை செய்வதில்லை. ஆனால், பணிமுறைக் காரியங்களில் மட்டும் தொடர்புகொண்டு ஒரு பொது ஊழியருடன் சம்பந்தப்பட்டவர் அவருக்கு விலை மதிப்புள்ள பொருள்களை இனாமாகவோ, குறைந்த விலைக்கோ கொடுப்பதெனில், அது ஐயப்பாட்டை எழுப்புவதாகும். சட்ட முரணான அவா நிறைவினைப் பொது ஊழியர் ஏற்பதாகும். எனவே, இத்தகைய செயல்களைச் சட்டம் குற்றமென விதிக்கின்றது.

நம்நாட்டு வழக்கப்படி ஒருவரிடமிருந்து ஓர் எலுமிச்சம் பழம், மலர்மாலை, வெற்றிலைபாக்குப் போன்ற பொருள்களைப் பொது ஊழியர் இனாமாகப் பெறுவது குற்றமாகாது.

## 161, 165ஆம் பிரிவுக் குற்றங்களுக்கு உடந்தையாயிருத்தல்

பொது ஊழியர் ஒருவர் சட்ட முரணாக அவா நிறைவு பெறுவதற்கோ, மதிப்புள்ள பொருளை எதிர்பயனளிக்காமல் பெறுவதற்கோ உடந்தையாக இருப்பவர்களுக்கு மூன்றாண்டுக் காலம்வரை சிறை, அபராதம் என்ற தண்டனையாகும். இக் குற்றத்தைத் தூண்டியவர், குற்றம் நிகழ்ந்தாலும் நிகழாவிட்டாலும் குற்றவாளியேயாகின்றார் (165A பிரிவு).

இலஞ்சம் கொடுப்பவர்களும், பொது ஊழியர் இலஞ்சம் பெறுவதற்கு உதவி செய்பவர்களும் இந்தப் பிரிவுப்படி குற்றவாளிகள் ஆகின்றனர்.

## இலஞ்சம் கொடுப்பதற்கென இலஞ்சம் பெறுதல்

இலஞ்சம் கொடுத்தோ அல்லது சட்ட முரணான வழிகளைக் கையாண்டோ ஒரு பொது ஊழியரைத் தூண்டுவதற்கென ஊக்குதலாகவோ, ஊதியக் கொடையாகவோ ஒருவர் பிறரிடமிருந்து, தனக்கென்றோ, மற்றொருவருக்கென்றோ அவா நிறைவு

எதையும் ஏற்றல், பெறுதல், ஏற்பதற்கு இசைதல், பெறுவதற்கு முயலுதல் குற்றமாகும். இக் குற்றத்திற்கு ஓராண்டுக் காலம்வரை சிறை, அபராதம் தண்டனையாகும் (162ஆவது பிரிவு).

## செல்வாக்கைப் பயன்படுத்தி இலஞ்சம் பெறுதல்

செல்வாக்கைப் பயன்படுத்தி ஒரு பொது ஊழியரைத் தூண்டுவதற்கென, ஊக்குதலாகவோ, ஊதியக் கொடையாகவோ, ஒருவர் பிறரிடமிருந்து தனக்கென்றோ, மற்றொருவருக்கென்றோ, அவா நிறைவு எதையும் ஏற்றல், பெறுதல், ஏற்பதற்கு இசைதல், பெறுவதற்கு முயலுதல் குற்றமாகும். இக் குற்றத்திற்கு ஓராண்டுக் காலம் சிறை, அபராதம் தண்டனை (163ஆவது பிரிவு).

ஒருவருடைய குறையைக் கூறிப் பொது ஊழியர்முன் வாதிக்கும் வழக்குரைஞரின் செயல் தமது செல்வாக்கைப் பயன்படுத்துவதாகாது. எனவே, இந்தப் பிரிவுப்படி குற்றமாகாது.

162, 163ஆம் பிரிவுப்படியான குற்றங்களைப் பிறர் செய்வதற்கு ஒரு பொது ஊழியர் உடந்தையாக இருந்தால் அவருக்கு மூன்றாண்டுக் காலம்வரை சிறை, அபராதம் தண்டனையாகும் (164ஆம் பிரிவு).

பொது ஊழியர் ஒருவரின் உறவினர் அந்தப் பொது ஊழியரிடம் தமக்குள்ள செல்வாக்கைப் பயன்படுத்துவதாகக் கூறிப் பிறரிடமிருந்து பொருள் பெறுகின்றார். அவ்வாறு தம் உறவினர் பொருள் பெறுவதற்குப் பொது ஊழியரும் உடந்தையாக இருந்தாரெனில், அது 164ஆம் பிரிவுப்படி குற்றமாகிறது. உறவினருக்கு ஓராண்டுக் காலம் வரை சிறைத் தண்டனையும், அதற்கு உடந்தையாக இருந்த பொது ஊழியருக்கு மூன்றாண்டுக் காலம்வரை சிறைத் தண்டனையும் விதிக்கப்படலாம்.

## பிறருக்குக் கேடு விளைக்கக் கருதிய பொது ஊழியர் சட்ட விதிகளைப் புறக்கணித்து நடத்தல்

பிறருக்குக் கேடு விளைக்கும் கருத்துடன் ஒரு பொது ஊழியர், சட்ட விதிகளின்படி தமது கடமையாற்றாமல் வேண்டுமென்றே புறக்கணித்து நடந்தால், அதற்கு ஓர் ஆண்டுக் காலம் வரை சிறை, அபராதம் தண்டனையாகும் (166ஆம் பிரிவு).

## பிறருக்குக் கேடு விளைக்கக் கருதிய பொது ஊழியர் தவறான ஆவணங்களை வேண்டுமென்றே தயாரித்தல்

பிறருக்குக் கேடு விளைக்கும் கருத்துடன் அல்லது பிறருக்கு அதனால் கேடு விளையலாமென்பதை அறிந்தும்,

ஆவணம் ஒன்றைத் தயாரிக்கும் அல்லது மொழிபெயர்க்கும் கடமையுள்ள ஒரு பொது ஊழியர்,

அந்த ஆவணத்தை மனமறிந்து தவறுதலாகத் தயாரிப்பதும், மொழிபெயர்ப்பதும் குற்றமாகும்.

மூன்றுண்டுக்காலம்வரை சிறை, அபராதம் இதற்குரிய தண்டனை யாம் (167ஆம் பிரிவு).

கடன்காரரின் பொருள்களை சப்தி செய்யுமாறு நீதிமன்றம் கட்டளையிடுகிறது. அதை நிறைவேற்றச் செல்லும் அமீன், கடன்காரரின் பொருள்கள் ஏதுமில்லையென்று பொய்யாக அறிக்கை கொடுக்கிருர். இது இந்தப் பிரிவின்கீழ்க் குற்ற மாகும்.

## பொது ஊழியர் வாணிபத்தில் ஈடுபடுதல்

வாணிபம் செய்தல் கூடாது என்ற சட்டத் தடைக்குக் கட்டுப் பட்டுப் பணிபுரியும் பொது ஊழியர், அதை மீறி, வாணிபம் செய்தல் குற்றமாகும். ஓர் ஆண்டுக் காலம்வரை சிறை, அபராதம் இதற்குரிய தண்டனை (168ஆம் பிரிவு).

ஊதியங் கருதியது வாணிபத் தொழில். அதிகாரமுடைய பொது ஊழியர்கள் சொந்த வாணிபத்தில் ஈடுபட்டால், அந்த ஊழியர்கள் இலஞ்சமாகப் பெறவேண்டியதை வாணிபத்தின் வாயி லாகப் பெறுவதற்கு ஏதுவாகிறது. எனவே, இதைச் சட்டம் தடை செய்கின்றது.

## பொது ஊழியர் சட்ட விரோதமாக ஒரு சொத்தை வாங்குதல் அல்லது ஏலத்தில் கேட்டல்

ஒரு சொத்தை வாங்குவதற்கோ, ஏலத்தில் கேட்பதற்கோ கூடாதென்ற சட்டத் தடைக்குக் கட்டுப்பட்டுப் பணிபுரியும் பொது ஊழியர், தம் பெயரிலோ, அல்லது இன்னெருவர் பெயரிலோ, அல்லது பிறருடன் பங்கு சேர்ந்தோ சொத்தை வாங்குவதும், ஏலத்தில் கேட்பதுங் குற்றம். இதற்கு இரண்டு ஆண்டுக் காலம் வரை சிறை, அபராதம் தண்டனையாகும் (169ஆம் பிரிவு).

நீதித்துறையில் பணிபுரிபவர்கள் கோர்ட்டு ஏலங்களில் வரும் சொத்துகளை வாங்குதல் அல்லது ஏலங்கேட்டல் கூடாதென்ற விதியுண்டு. இதை மீறி அச் சொத்தை வாங்கினல் குற்றமாகும். தம் நலனுக்காக மற்றெருவர் பெயரால் நீதித்துறைப் பணியாளர் அச் சொத்தை வாங்குவதும் குற்றமாகும். சட்டம் இவ்வாறு இல்லை யெனில், குறைந்த விலைக்குச் சொத்துகள் விற்கப்பட்டு சொத்துக் குரியவர்களுக்கு நட்டம் விளையலாம்.

## பொது ஊழியராக நடித்தல்

ஒருவர் பொது ஊழியராக நடித்து, அல்லது குறிப்பிட்ட பொது ஊழியராக ஆள் மாருட்டம் செய்து, அந்தப் பதவிக்குள்ள அதிகாரத்தின்கீழ் எந்தச் செயலையாவது அவர் செய்தலும் அல்லது செய்ய முயல்வதும் குற்றமாகும். இதற்குத் தண்டனை இரண்டாண்டுக்காலம் சிறை, அபராதம் ஆகும் (170ஆம் பிரிவு).

பொது ஊழியராக நடித்துச் செய்யப்படும் செயல் அந்தப் பதவிக்கு உற்ற கடமைச் செயலாக இருக்கவேண்டுமென்ற அவசியமில்லை. ஒருவர் போலீசு அதிகாரிபோல் நடித்து, மற்ருெருவரிடம் பணம்பெற முயன்ருர். இது இப் பிரிவின்கீழ்க் குற்றமென்று தீர்ப்பளிக்கப்பட்டது.

## மோசடிக் கருத்துடன் பொது ஊழியருக்கான உடை அல்லது சின்னம் அணிதல்

பிறரை ஏமாற்றும் மோசடிக் கருத்துடன் பொது ஊழியருக்கான உடைகளையோ சின்னங்களையோ அணிவது குற்றமாகும். இதற்கு மூன்று மாதகாலம் வரை சிறை, இருநூறு ரூபாய்வரை அபராதம் தண்டனையாகும் (171ஆம் பிரிவு).

பொது ஊழியர்கள் முறைகெட்ட கருத்தோடு கைக்கூலி பெற்ருே, சட்டமுரணுன வகையில் அவா நிறைவு பெற்ருே இயங்குவது கூடாதென்று சட்டம் விதிப்பதன் நோக்கம் நாட்டின் நிர்வாகம் நலம்பெற நடைபெறவேண்டுமென்பதுதான்; பிறருக்குக் கேடு விளைக்கும் நோக்குடன் பொது ஊழியர்கள் ஆவணங்களைத் தவருகத் தயாரிப்பதும், தங்கள் சட்டப்படியான கடமைகளைப் புறக்கணித்து நடப்பதும், முறையான அரசாங்கத்தைச் சீர்குலைப்பதாகும். எனவே, இத்தகைய செயல்களைச் சட்டம், குற்றங்கள் எனக்கொண்டு தடை செய்கின்றது.

நாட்டில் பரவலாகக் காணப்படும் இலஞ்சக் குற்றங்களை ஒழிப்பதற்கென வேறு சில சட்டங்களும் இயற்றப்பட்டிருக்கின்றன.

# 24. பொது ஊழியர்களின் சட்டமுறையான அதிகாரத்தை அவமதித்தலால் விளையும் குற்றங்கள்

## (Of Contempt of Lawful Authority of Public Servants)

அதிகார அழைப்பையோ, உத்தரவையோ பெற்றுக்கொள்ளாமல் தலைமறைவாதல்—அதிகார அழைப்போ உத்தரவோ சார்வு ஆகாமல் தடுத்தல்—அதிகார அழைப்பிற்குப் பணிந்து ஆஜராகாமல் இருத்தல்—ஆவணத்தை அனுப்பாமலோ கொடுக்காமலோ இருத்தல்—அறிக்கையோ தகவலோ பொது ஊழியருக்கு அனுப்பாமல் இருத்தல்—பொய்த் தகவல் அறிவித்தல்—பிரமாணம் செய்ய அல்லது உறுதிமொழி எடுக்க மறுத்தல்—விடையளிக்க மறுத்தல்—மெய்யுறுதி அளித்தவர் பொய்யுரையைக் கூறல்—பொய்த்தகவல் அளித்துப் பொது ஊழியரை இயக்குதல்—பொது ஊழியரின் சட்டப்படியான அதிகாரத்தின்படி பொருள்கள் அகற்றப்படுவதைத் தடுத்தல்—பொது ஊழியர் நடத்தும் ஏலத்தைத் தடுத்தல்—பொது ஊழியர் பொது அலுவல்கள் செய்வதைத் தடுத்தல்—பொது ஊழியர்களுக்கு உதவி செய்ய மறுத்தல்—பொது ஊழியர்களின் உத்தரவை மீறுதல்—பொது ஊழியரை அச்சுறுத்தல்; பொது ஊழியரின் பாதுகாப்பை நாடக்கூடாது என்று பிறரை அச்சுறுத்தல்.

நாட்டில் நல்ல முறையாக ஆட்சி நடைபெறுவதற்குப் பொது ஊழியர்களின் (Public Servants) பொதுப்பணி செப்பமுற நடைபெறுதல் வேண்டும். பொதுமக்கள் அனைவரும் பொது ஊழியர்களின் அதிகாரத்தை மதித்து, அதற்கு அடங்கி நடந்தால்தான் பொது ஊழியர்களின் பணி சிறந்து விளங்க முடியும். அதிகாரிகளின் சட்டப்படியான உத்தரவுகளுக்கு மக்கள் பணியவில்லையெனில் ஆட்சி நடைபெறுவது இயலாததாகிவிடும். எனவே, பொது ஊழியர்களின் அதிகாரத்தை அவமதிக்கும் செயல்களைக் குற்றங்கள் எனச் சட்டம் விதிக்கின்றது.

இங்கு, 'பொது ஊழியர்கள்' என்று கூறுகையில் நீதி, நிர்வாகப் பிரிவில் உள்ள ஊழியர்கள் அனைவரையும் சேர்த்தே கூறுகிறோம்.

நியாயம் வழங்கும் நீதிபதியும் பொது ஊழியர்; வரி வசூலிக்கும் அதிகாரியும் பொது ஊழியர்; போலீசு அதிகாரியும் பொது ஊழியர். இவர்களுக்கு உற்ற அதிகாரத்தை உதாசீனம் செய்வது குற்றமாகிறது.

இக் குற்றங்களின் வகைகளை இப்பொழுது காண்போம்:

## அதிகார அழைப்பையோ, உத்தரவையோ பெற்றுக்கொள்ளாமல் தலை மறைவாதல்

பொது ஊழியர்கள் அனுப்பும் உத்தரவு (order) அறிக்கை (notices), அதிகார அழைப்பு (summons) இவைகள் தம்மீது சார்வாகாதபடி தப்புவதற்கெனத் தலைமறைவாகிப்போவது குற்றமாகும். அந்த உத்தரவும், அதிகார அழைப்பும் நீதிமன்றத்திற்கு நேரில் வரவேண்டும் அல்லது ஏதாவது ஓர் ஆவணத்தை (document) நீதிமன்றத்தில் தாக்கல் செய்யவேண்டும் என்று இருந்து, அதைப் பெற்றுக்கொள்ளாமல் மறைவாகும் குற்றத்திற்கு அதிகமான தண்டனை உண்டு (172ஆம் பிரிவு).

## அதிகார அழைப்போ, உத்தரவோ சார்வு ஆகாமல் தடுத்தல்

அதிகார அழைப்பையோ, உத்தரவையோ, அறிக்கையையோ தன்னிடம் அல்லது பிறரிடம் சார்வு ஆகாமல் தடுப்பது - அவற்றைச் சட்டப்படியான ஏதாவது ஓர் இடத்தில் ஒட்டவிடாமல் தடுப்பது—ஒட்டியவற்றை வேண்டுமென்றே அகற்றுவது—அதிகார அறிக்கைகள் வெளியிடுவதைத் தடுப்பது—இவை குற்றமாகும் (173ஆம் பிரிவு).

## அதிகார அழைப்பிற்குப் பணிந்து ஆஜராகாமல் இருத்தல்

அதிகார அழைப்பிற்குப் பணிந்து குறிப்பிட்ட இடத்திலும் நேரத்திலும் வேண்டும் என்றே ஆஜராகாமல் இருப்பதும், ஆஜரான பின்னும் குறிக்கப்பட்டுள்ள நேரத்திற்கு முன்னரே அந்த இடத்தை விட்டு அகன்றுவிடுவதும் குற்றமாகும் (174ஆவது பிரிவு).

இந்த மூவகைக் குற்றங்களுக்கும் உள்ள தண்டனை ஒரு மாதம் வரை சிறை, ஐநூறு ரூபாய்வரை அபராதம்.

அந்த அதிகார அழைப்பு அல்லது உத்தரவு நீதிமன்றத்தில் இருந்து அனுப்பப்பட்டிருந்தால் அக் குற்றத்திற்கான தண்டனை ஆறு மாதம் வரை சிறை, ஆயிரம் ரூபாய்வரை அபராதம் ஆகும்.

ஓர் அதிகாரியிடமிருந்து அவர் முன்னால் ஆஜராகும்படி ஓர் அதிகார அழைப்பு (summons) வருகிறது. அதை வாங்காமல் தப்புவதற்கு என்று ஒருவர் தம் ஊரைவிட்டுச் சில நாட்களுக்கு எங்கேயோ போய்விடுகிறார் என்றால் அது குற்றம். நீதிமன்றத்தி லிருந்து ஒரு குறிப்பிட்ட தேதியில் அந்த மன்றத்தில் சாட்சி கூறு வதற்கு நேரில் வரவேண்டும் என்று அதிகார அழைப்பைப் பெற்ற வர் வேண்டுமென்றே அவ்வாறு நேரில் சென்று ஆஜராகாமல் இருப்பது குற்றமாகும். நிலவரி பாக்கிக்காக ஒருவருடைய சொத்து ஏலம் போடப்படும் என்று கிராமத்தில் தண்டோராமூலம் அறிவிக்கும்படி தாசில்தார் உத்தரவிடுகிறார். அப்படித் தண்டோரா அடித்து அறிவிப்பதைத் தடுப்பது குற்றமாகும். இவ்வாறு ஏலம் போடப்படும் என்ற அறிக்கைத்தாள் கிராமச் சாவடியில் அல்லது தாலுக்கா காரியாலயத்திலுள்ள அறிக்கைப் பலகையில் ஒட்டப்பட் டிருக்கலாம்; அந்த அறிக்கைத் தாளைக் கிழித்து அறிக்கைப் பலகை யிலிருந்து அகற்றுவதும் குற்றமாகும்.

**சட்டப்படி தக்க அதிகாரம் பெற்றவர்களால் இடப்படும் உத்தரவு களுக்கே இது பொருந்தும்:** மேலே கூறப்பட்ட உத்தரவு, அறிக்கை, அதிகார அழைப்பு இவை சட்டப்படி தக்க அதிகாரம் பெற்றவர் களால் இடப்பட்டிருத்தல் வேண்டும். தக்க அதிகாரம் இல்லாத பொது ஊழியர்கள் இடும் உத்தரவுகள் குறித்த செயல்கள் குற்றங்கள் ஆவதில்லை.

## ஆவணத்தை அனுப்பாமலோ, கொடுக்காமலோ இருத்தல்

பொது ஊழியரிடம் ஓர் ஆவணத்தைக் காட்டவோ, கொடுக்கவோ சட்டப்படி கடமைப்பட்டிருந்தும் அவ்வாறு செய்யா மல் இருத்தல் குற்றம் (175ஆவது பிரிவு).

ஒரு சொத்தைப்பொறுத்த உரிமைப்பத்திரத்தைத் தாக்கல் செய்யுமாறு ஒருவருக்கு நீதிமன்றம் உத்தரவிடுகின்றது. அவர் வேண்டுமென்றே அதைத் தாக்கல் செய்யாமலிருந்தால் அது குற்றமாகும்.

## அறிக்கையோ, தகவலோ பொது ஊழியருக்கு அனுப்பாமல் இருத்தல்

சில காரியங்கள் குறித்துப் பொது ஊழியருக்குத் தகவல் அனுப்பும் கடமை பொது மக்களுக்கும் சில அதிகாரிகளுக்கும் உண்டு. கொலை, கொள்ளை போன்ற குற்றங்கள் நிகழ்ந்தால் அது பற்றித் தெரிந்தவர் உடனே அருகிலுள்ள போலீசு நிலையத்திற்கோ

மாஜிஸ்டிரேட்டிற்கோ தகவல் அனுப்பவேண்டும் என்று குற்ற விசாரணை முறைச் சட்டத்தின் 44ஆம் பிரிவு விதிக்கின்றது. இவ்வாறு, சட்டப்படி பொது ஊழியருக்குத் தகவல் அனுப்ப வேண்டும் என்ற கடமை இருந்தும், அதைச் செய்யாமல் இருப்பது குற்றமாகும். தகவல் அனுப்புவது சட்டம் வகுத்துள்ள காலத்திற்குள்ளும், முறைப்படியும் இருத்தல் வேண்டும் (176ஆவது பிரிவு).

## பொய்த் தகவல் அறிவித்தல்

பொது ஊழியருக்குத் தகவல் அறிவிக்கும் கடமையுள்ளவர்கள் பொய்யான தகவலை உண்மை என்றுகூறி அறிவிப்பது கூடாது.

குற்றங்களைத் தடுப்பதற்கெனவும், குற்றவாளிகளைப் பிடிப்பதற்கெனவும் உள்ள தகவல்களைப் பொய்யாக அறிவித்தல் பெருங் குற்றமாகும். அதற்கு இரண்டு ஆண்டுவரை சிறை, அபராதம் தண்டனையாக விதிக்கலாம் (177ஆம் பிரிவு).

ஒரு நிலத்தில் கொலைநடந்தால் அதை உடனே மாஜிஸ்டிரேட்டிற்கோ போலீசிற்கோ தெரிவிக்கும் பொறுப்பு, அந்த நிலம் எவர் உடைமையில் இருக்கிறதோ அவருக்கு உண்டு. ஒருவர் கொலை செய்யப்பட்டு இறந்தவர்; அப்படியிருக்க அவர் பாம்புகடியால் இறந்தார் என்று பொய்யாக மாஜிஸ்டிரேட்டுக்குத் தகவல் அனுப்பினால் அது குற்றமாகும்.

## பிரமாணம் செய்ய அல்லது உறுதிமொழி எடுக்க மறுத்தல்

சில பொது ஊழியர்களுக்கு சாட்சிகளை பிரமாணத்தின்பேரில் விசாரிக்கும் அதிகாரம் இருக்கிறது. நீதிமன்றத்தில் வரும் சாட்சிகள் எல்லோருக்கும் உண்மையே கூறுவதாகப் பிரமாணம் (உறுதி மொழி) எடுத்துக்கொண்ட பின்னரே சாட்சியம் கூறவேண்டும். இன்னும் சில அதிகாரிகளுக்கும் இதுபோல் பிரமாணத்தின்பேரில் கூறப்படும் சாட்சியத்தைப் பெறும் அதிகாரம் உண்டு. இவர்கள் முன் ஆஜராகும் சாட்சிகள் 'பிரமாணத்தின்பேரில் உண்மை பேசுவதாக' சத்தியம் செய்யவோ, உறுதிமொழிகூறவோ மறுத்தால் அது குற்றமாகும் (178ஆம் பிரிவு).

## விடையளிக்க மறுத்தல்

பொது ஊழியர்களிடம் ஒரு காரியம் குறித்து உண்மையை உரைக்கும் கடமை உள்ளவர்கள், கேட்கப்படும் கேள்விகளுக்கு விடையளிக்க மறுப்பது குற்றமாகும். அவ்வாறே பொது ஊழியரிடம் தாம் கொடுத்த அறிக்கையில் ஒருவர் கையெழுத்திட மறுப்பதும் குற்றம் ஆகும் (179, 180ஆவது பிரிவுகள்).

## மெய்யுறுதியளித்தவர் பொய்யுரையைக் கூறல்

உண்மையே கூறுவதாகப் பிரமாணமோ, உறுதி மொழியோ அளித்தவர் ஒரு காரியங்குறித்துப் பொய்யென்று தமக்குத் தெரிந்த அல்லது உண்மையென்று தாம் நம்பாத ஒன்றை (பொய்யை) உண்மையெனக் கூறுதல் பெருங்குற்றமாகும். இதற்கு மூன்று ஆண்டுக் காலம்வரை சிறைத்தண்டனை விதிக்கலாம் (181ஆம் பிரிவு).

## பொய்த்தகவல் அளித்துப் பொது ஊழியரை இயக்குதல்

பொய் என்று தெரிந்த தகவலைப் பொது ஊழியரிடம் தெரிவித்து அவரை ஒன்றைச் செய்யும்படியோ அல்லது செய்யாதிருக்கும் படியோ வைத்தல் குற்றம்.

இன்னொருவருக்குத் தீங்கு அல்லது தொந்தரவு விளையும்படி பொது ஊழியர் தமது சட்டப்படியான அதிகாரத்தைப் பயன்படுத்த வேண்டும் என்ற கருத்தோடு அவரிடம் பொய்த்தகவல் கூறுதலும் குற்றமாகும் (182ஆம் பிரிவு).

திருட்டுப்போன பொருள் ஒரு வீட்டிற்குள் இருப்பதாகப் போலீசுக்கு ஒருவர் தகவல் கொடுக்கிறார். இது வேண்டுமென்றே பொய்யாகக் கொடுக்கப்படும் தகவல். அவருடைய நோக்கம் அந்த வீட்டைப் போலீசார் சோதனையிடவேண்டும், அதனால் அந்த வீட்டுக்காரருக்குத் தொந்தரவும் மதிப்பிழப்பும் ஏற்பட வேண்டுமென்பது. இப்பொழுது இந்தப் பிரிவுப்படி பொய்த் தகவலைப் போலீசாருக்குக் கொடுத்தவர் குற்றவாளி ஆகிறார். போலீசார் அந்த வீட்டைச் சோதனையிட்டாலும்சரி, சோதனை யிடாவிட்டாலுஞ்சரி, பொய்த்தகவல் கொடுத்தது குற்றமேயாகும். பொய்யென்று தெரிந்த தகவலைக் கொடுத்தவர் என்ன கருத்தோடு கொடுத்தார் என்பதுதான் முக்கியமானதாகும்.

ஒருவர் தமது பகைவருக்கு நேரடியாகத் தீங்கு செய்ய அஞ்சலாம். ஆனால், பொது ஊழியரைப் பயன்படுத்தி, அவரிடம் பொய்த் தகவல்களைக் கூறி, பகைவருக்குத் தீங்கிழைக்க அவர் முற்படலாம். பொது ஊழியரிடம் பொய்யென்று தெரிந்த தகவல்களைக் கூறி, அவர்கள் மூலமாகப் பிறருக்குத் தீங்கிழைப்பதைச் சட்டம் தடை செய்கின்றது.

பொய்யாக, நம் வீட்டிலிருந்து சாமான்கள் களவுபோய் விட்டன என்று போலீசாரிடம் தகவல் கொடுப்பது இந்தப் பிரிவின் படி குற்றமாகும். ஒருவர் லைசென்சு இன்றி மோட்டார் ஓட்டிச்

சென்றார். அவரை நிறுத்திப் போலீசார் விசாரிக்கையில் தமது பெயரை மாற்றிப் பொய்யாக இன்னொரு பெயரைக் கொடுத்தார். இது குற்றமாகும் என்று தீர்ப்பளிக்கப்பட்டது. ஒருவர் தமது வீட்டில் திருடர்கள் புகுந்து கொள்ளையடித்துச் சென்றனர் என்று பொய்யாக மாஜிஸ்டிரேட்டிற்குத் தந்தி கொடுத்தார். மாஜிஸ்டிரேட் அந்தத் தகவலின்பேரில் எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை. இருந்தாலும், பொய்த் தகவலைக் கொடுத்த செயல் குற்றம்தான் என்பது தீர்ப்பு.

பொது ஊழியர்களிடம் பொய்த்தகவல்களைக் கொடுப்பது பொது ஊழியர்களை ஏமாற்றும் செயலாகும்; மேலும் அதனால் பொதுப் பணிமுறைக்கும் மக்களுக்கும் கேடு விளைகிறது. எனவே, இதைக் குற்றம் எனச் சட்டம் கொள்ளுகின்றது.

## பொது ஊழியரின் சட்டப்படியான அதிகாரத்தின்படி பொருள்கள் அகற்றப்படுவதை எதிர்த்தல்

நீதிமன்ற உத்தரவின்படி ஒருவருடைய அசை பொருள்களை அமீன்(Amin) சப்தி (attachment) செய்து அவைகளை அகற்றுகிறார். அவ்வாறு அவர் அகற்றுவதை எதிர்த்துத் தடுப்பது குற்றமாகும். ஆனால், நீதிமன்றம் பிறப்பித்த சப்தி உத்தரவு எதுவும் இன்றி, அமீன் பொருள்களை சப்தி செய்தால் அதைத் தடுக்கலாம். சட்டப் படியான உத்தரவு எதுவும் இன்றி அசை பொருள்கள் அகற்றப் படுவதைத் தடுப்பது குற்றமாகாது.

183ஆம் பிரிவில் இக் குற்றத்தின் விளக்கம் தரப்பட்டிருக்கிறது.

பொது ஊழியரின் சட்டப்படியான அதிகாரத்தின்கீழ்ப் பொருள்கள் அகற்றப்படுவதை எதிர்த்துத் தடுப்பது குற்றம். இதற்கு ஆறு மாதம் வரை சிறை, ஆயிரம் ரூபாய்வரை அபராதம் தண்டனை யாகும்.

## பொது ஊழியர் நடத்தும் ஏலத்தைத் தடுத்தல்

சட்டப்படி அதிகாரமுள்ள பொது ஊழியர் ஒரு சொத்தை ஏலம் போடுவதைத் தடுப்பது குற்றம் (184ஆம் பிரிவு). அந்த ஏல விற்பனையில் சட்ட விரோதமாக ஏலம் கேட்டு, ஏலத்தின் நோக்கத்தை நிறைவேறாமல் செய்தலும் குற்றமாகும்.

## பொது ஊழியர் பொது அலுவல்கள் செய்வதைத் தடுத்தல்

பொது ஊழியர்கள் தங்கள் அலுவல்களைத் தங்கு தடையின்றிச் செய்தால்தான் நாட்டின் நிர்வாகம் நன்கு நடைபெற இயலும்.

எனவே, அவர்கள் அலுவல்கள் புரிவதைத் தடுப்பது குற்றமெனச் சட்டம் விதிக்கிறது.

பொது ஊழியர்கள் பொது அலுவல்கள் செய்வதை வேண்டுமென்றே தடுப்போருக்கு மூன்று மாதம்வரை சிறை அல்லது அபராதம் தண்டனையாக விதிக்கலாம் (186ஆம் பிரிவு).

பொது ஊழியரை அச்சுறுத்தி அவர் வேலையைச் செய்தல் கூடாது என்று வாயால் மிரட்டுவதும் அவர் அலுவலைத் தடுப்பதேயாகும்.

ஒரு வீட்டைச் சோதனையிடுவதற்குப் போலீசார் தகுந்த உத்தரவுடன் வருகின்றனர், அவர்கள் சோதனையிடமுடியாதபடி தடுப்பது குற்றமாகும். நீதிமன்ற உத்தரவைச் சார்வு செய்வதற்குக் கோர்ட்டுச் சேவகர் வருகின்றார். அவர் அதைச் சார்வு செய்ய முடியாதபடி அவரைத் தடுப்பது குற்றம்.

பொதுச்சாலைகளில் மோட்டார் கார்கள் அளவுக்கு மீறிய வேகத்தில் செல்லுகின்றனவா என்பதைச் சோதிப்பதற்குப் போலீசார் மறைவாக நின்று கண்காணிப்பது உண்டு. சாலைகளில் த்க்க இடங்களில் குறியிட்டு, மோட்டார்களின் வேகத்தை அளவிடுகின்றனர். இவ்வாறு போலீசார் மறைந்திருக்கின்றனர் என்பதை அந்தச் சாலையில் தூரத்தில் வந்துகொண்டிருக்கும் மோட்டார் ஓட்டிகளுக்கு அறிவித்து ஒருவர் எச்சரிக்கை செய்துவிட்டார். எனவே, அளவுக்கு மீறிய வேகத்தில் வந்துகொண்டிருந்த அந்த மோட்டார் ஓட்டிகள் வேகத்தைக் குறைத்துக்கொண்டனர். ஆதலால், போலீசாரின் சோதனையில் இருந்து தப்பிவிட்டனர். இவ்வாறு, பிறரை எச்சரித்த செயல் பொது ஊழியர்களான போலீசாரின் அலுவல்களைத் தடைசெய்வதாகும் என்று இங்கிலாந்தில் தீர்ப்பளிக்கப்பட்டது. [Betts v. Stevens. (1910) I. K. B. 1.] சென்னை நகரத்தில் இவ்வாறு எச்சரிக்கைகள் கொடுக்கப்படுவதை நாம் பார்க்கிறோம். மோட்டார் கார்களின் முன் விளக்குகளை விட்டு விட்டு ஏற்றி அணைத்து எதிரில் வரும் கார்களை எச்சரிக்கின்றனர். இது குற்றம் என்பதை நாம் தெரிந்துகொள்ளவேண்டும்.

பொது ஊழியர்கள் செய்யும் அலுவல்கள் சட்டப்படியானவையாக இருக்கவேண்டும். மாஜிஸ்டிரேட்டின் கையெழுத்து இல்லாத 'வாரண்டை' வைத்துக்கொண்டு வீட்டைச் சோதனையிடவரும் போலீசாரைத் தடுப்பது குற்றமன்று. ஏனெனில், 'வாரண்ட்' கையெழுத்திடப்படவில்லை. ஒரு 'முன்சீப்' தமது அதிகார எல்லைக்கு அப்பாற்பட்ட இடத்திலுள்ள பொருளை சப்திசெய்வதற்கு உத்தரவிட்டிருந்தார். அவ்வாறு சப்தி செய்ய முற்பட்ட கோர்ட்டு அமீனவைத் தடுப்பது குற்றமன்று என்பது தீர்ப்பு.

இவ்வாறு, பொது ஊழியர்கள் சட்டப்படி செய்யும் பொது அலுவல்களைத் தடுப்பதைச் சட்டம் தடை செய்கின்றது.

## பொது ஊழியர்களுக்கு உதவிசெய்ய மறுத்தல்

பொது ஊழியர்கள் தங்களுடைய பொதுக் கடமைகளை நிறை வேற்றுவதற்கு மற்றவர்களும் சில குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் உதவவேண்டும் என்று சட்டம் கூறுகிறது. உதாரணமாக, குற்ற விசாரணை முறைச் சட்டத்தின் 42ஆம் பிரிவுப்படி ஒருவரைக் கைது செய்வது, ரெயில்வே தந்தி, பொதுச்சொத்து முதலியவை களுக்குச் சேதம் விளையாமல் பாதுகாப்பது, பொது அமைதி குலையாமல் பாதுகாப்பது இந்தக் காரியங்களில் ஈடுபடும் போலீசா ருக்கும், மாஜிஸ்டிரேட்டிற்கும் மற்றவர்கள் உதவியாக இருத்தல் வேண்டும். இந்த வகையில் உதவியாக இருக்கவேண்டும் என்ற சட்டப்படியான கடமையிருக்கையில், அவ்வாறு உதவியளிக்காமல் இருப்பது குற்றமாகிறது (187ஆம் பிரிவு).

அவ்வாறு உதவிசெய்யவேண்டும் என்ற சட்டப்படியான கடமை இல்லாத சந்தர்ப்பங்களில் உதவிக்கு வர மறுப்பது குற்றமாகாது.

## பொது ஊழியர்களின் உத்தரவை மீறுதல்

பொது அமைதியைப் பாதுகாக்கவும், நிர்வாகம் நடைபெறவும் எனப் பொது ஊழியர்கள் உத்தரவுகளைப் பிறப்பிக்கின்றனர். அந்த உத்தரவுகளுக்கு மக்கள் அடங்கி நடந்தால்தான் ஆட்சிமுறை நன்கு அமையும். அதிலும் அந்த உத்தரவுகளை மீறுவது பிறருக்குத் தீங்கு, தொந்தரவு, தடை, இவற்றை விளைவிக்கலாம் என்றால் அவ்வாறு மீறுவது கூடாது. மற்றவர்களின் உயிருக்கு, உடல் நலனுக்கு ஆபத்து விளைவிக்கும் வகையிலும் கலகம், சண்டை இவற்றை விளைவிக்கும் வகையிலும் பொது ஊழியரின் உத்தரவை மீறி நடப்பது கூடாது. இந்த வகையில் பொது ஊழியரின் உத்தரவை மீறுவது குற்றமாகிறது (188ஆவது பிரிவு).

**இந்தக் குற்றத்தின் கூறுகள்**

(1) பொது ஊழியரால் பிரகடனம் செய்யப்பட்ட உத்தரவாக இருத்தல்வேண்டும்.

(2) அது சட்டப்படியானதாக இருத்தல் வேண்டும்.

(3) ஒரு செயலைச் செய்யக்கூடாது என்றோ, ஒருவர் வசமுள்ள சொத்தைக் குறித்தோ அந்த உத்தரவு அமைந்திருக்கவேண்டும்.

(4) அந்த உத்தரவை மீறினால் பிறருக்குத் தீங்கு, தொந்தரவு, கலகம் விளையலாம், அல்லது கலகம், சண்டை ஏற்படலாம் என்ற நிலை இருக்கவேண்டும்.

இத்தகைய சூழ்நிலையில் பொது ஊழியரின் உத்தரவை மீறுவது குற்றமாகிறது.

பொது ஊழியரின் உத்தரவு எதையும் மீறுவது குற்றமாகி விடுவதில்லை. மேலே காணும் கூறுகள் இருந்தால்மட்டுமே அந்த மீறுகை குற்றமாகிறது. அஃதாவது, உத்தரவை மீறியதால் பிறருக்குத் தீங்கு, தொந்தரவு விளையலாம், அல்லது உயிருக்கு உடல் நலனுக்கு ஆபத்து விளையலாம்; அல்லது கலகம், சண்டை ஏற்படலாம் என்ற நிலை இருந்தால்தான் அது குற்றமாகும்.

குற்ற விசாரணை முறைச் சட்டத்தின் 144ஆம் பிரிவுப்படி ஒரு மாஜிஸ்டிரேட் ஐந்து பேர்களுக்கு மேல் ஓர் இடத்தில் கூடியிருப்பதைத் தடைசெய்யலாம். ஒரு பொதுக்கூட்டம் கூடுவதைத் தடை செய்து உத்தரவு பிறப்பிக்கலாம். இந்தத் தடை உத்தரவை மீறிப் பொதுக்கூட்டத்தை நடத்துவது குற்றமாகும். ஆனால், இந்த உத்தரவு மீறப்பட்டதால் மேலே கூறப்பட்ட விளைவுகள் நேரும் ஆபத்து இருந்தது என்பது காட்டப்பட வேண்டும். அப்பொழுதுதான் தடை உத்தரவை மீறுபவர் தண்டனைக்கு ஆளாகின்றார்.

மேள வாத்தியத்துடன் வரும் ஓர் ஊர்வலம் தொழுகை நடந்து கொண்டிருக்கும் மசூதியுள்ள ஒரு வீதியின் வழியாகச் செல்லுவது கூடாது என்று மாஜிஸ்டிரேட் உத்தரவு பிறப்பிக்கின்றார். இதை மீறி அந்த வீதி வழியாக ஊர்வலத்தை எடுத்துச் செல்லுவது குற்றமாகும். ஏனென்றால், இதை மசூதியில் தொழுதுகொண்டிருப்பவர்கள் எதிர்க்கலாம், இதனால் கலகம் விளையலாம்.

## பொது ஊழியரை அச்சுறுத்தல்; பொது ஊழியரின் பாதுகாப்பை நாடக் கூடாதென்று அச்சுறுத்தல்

பொது ஊழியரை மிரட்டி அவரது பொதுப்பணியில் குறுக்கிடுதலும், பொது ஊழியரின் பாதுகாப்பை நாடக்கூடாதென்று இன்னொருவரை அச்சுறுத்துவதும் குற்றங்களாகின்றன (189, 190ஆவது பிரிவுகள்).

இவ்வாறு, பொது ஊழியர்களின் பொதுப்பணி நன்கு நடைபெற்று நல்லாட்சிமுறை நிலைப்பதற்குச் சட்டம் வகை செய்கிறது.

## 25. பொதுச் சுகாதாரம், பொதுப் பாதுகாப்பு, ஒழுக்கம், உயர்பண்பு இவற்றுக்கெதிரான குற்றங்கள்

## (Of Offences Affecting Public Health, Safety, Decency and Morals)

பொதுத்தொல்லை—உடல் நலனுச்கு ஊறு விளைக்குங் குற்றங்கள்—பொதுப் பாதுகாப்பிற்கெதிரான குற்றங்கள்—ஒழுக்கத்திற்கெதிரான குற்றங்கள்—இலாட்டரி நடத்துதல்.

### பொதுத் தொல்லை

### (Public Nuisance)

தொல்லை என்று எதைக் குறிக்கின்றோம்?—தனித்த தொல்லை—பொதுத் தொல்லை—பொதுத் தொல்லைச் செயல்கள்—தண்டனை,

ஒருவர் மற்றொரு தனிப்பட்ட நபருக்குத் தீங்கு விளைவிப்பதைச் சட்டம் தடுப்பது போன்றே, ஒருவர் பொதுமக்களைப் பாதிக்கும் வகையில் தீங்கு விளைவிப்பதையும் தடை செய்கின்றது. தங்கள் நலன் ஒன்றையே கருத்தில் கொண்டு செயற்படுபவர்கள், அதனால் பொது மக்களுக்கு ஏற்படும் தீங்கையோ, கேட்டையோபற்றி அக்கறை கொள்ளாமல் இருப்பதுண்டு.

மாவு அரைக்கும் மில் ஒன்றை ஒருவர் நடத்துகின்றார். அந்த மில் பலரும் குடியிருக்கும் தெருவில் இருக்கிறது. இரவு பகலாக அதில் அரைத்தால் அவருக்கு இலாபந்தான். இரவு முழுவதும் அந்த மில் வேலை செய்கிறது எனில், அதனால் ஏற்படும் இரைச்சல் அந்தத் தெருவில் உள்ளோர் எல்லோருடைய தூக்கத்தையும் கெடுத்துவிடும். அங்கு வாழ்வோரின் உடல்நலம் கெட்டுவிடும். எனவே, பொது மக்களுக்குத் தீங்கு விளைக்கும் வகையில் இரவு நேரத்தில் அந்த மில்லை ஓட்டுவது கூடாது.

ஒருவர் வீட்டுச் சுவர் இடிந்துவிடும் நிலையில் இருக்கிறது. அது பொதுமக்கள் நடமாடும் வீதியை அடுத்து உள்ளது. அந்தச் சுவரை அவர் இடித்து அப்புறப்படுத்தாவிடில் திடீரென அதுவாக இடிந்து வீதியில் நடப்போர்மீது விழுந்துவிடலாம். இவ்வாறு பொது மக்களுக்கு ஆபத்தை ஏற்படுத்தும் நிலையில் அந்தச் சுவரை வீட்டுக்காரர் விட்டு வைத்திருப்பது கூடாது.

ஒருவர் தமது நிலத்தில் ஒரு பெரிய பள்ளம் தோண்டி வைத்திருக்கின்றார். அந்தப் பள்ளம் பொது வீதியை அடுத்து ஒட்டினாற் போல் இருக்கிறது. பொதுவீதியில் நடமாடுபவர்கள் அல்லது வண்டி ஓட்டுபவர்கள் சிறிது கவனமின்றி இருந்தால், அந்தப் பள்ளத்தில் விழுந்துவிடலாம். இந்த நிலையில் பள்ளத்தையுடைய நிலத்தின் சொந்தக்காரர் அந்த நிலத்திற்கு வேலி போட வேண்டியது அவசியமாகிறது; முக்கியமாகப் பொது வீதிக்கும், பள்ளத்திற்கும் இடையில் வேலி இல்லையெனில் ஆபத்து விளைகின்றது. இவ்வாறு, வேலி அமைக்காமல் விட்டுவைத்திருத்தல் பொது வீதியைப் பயன்படுத்தும் பொது மக்களுக்கு ஆபத்து விளைக்கும் செயலாகும்.

இதுபோன்று, பொது மக்களுக்குத் தீங்கு அல்லது ஆபத்து விளைக்கும் செயல்களைச் செய்வது குற்றம் எனச் சட்டம் விதிக்கிறது.

இவ்வாறு, பொது மக்களுக்குத் தீங்கு அல்லது ஆபத்து விளைவது ஒன்றைச் செய்வதாலும் ஏற்படலாம்; செய்ய வேண்டியதைச் செய்யாமையாலும் ஏற்படலாம். மாவு மில்லை இரவு பகலாக ஓட்டுவதால் ஏற்படும் தொல்லை ஒன்றைச் செய்வதால் எழுவது; இடிந்து விழும் நிலையிலுள்ள சுவரை இடிக்காமல் விட்டுவிடுவதாலும், பள்ளத்திற்கும் வீதிக்கும் இடையில் வேலியிடாமல் வைத்திருப்பதாலும் ஏற்படும் ஆபத்து, செய்ய வேண்டியதைச் செய்யாமையால் (illegal omission) எழுவது.

தனிப்பட்ட ஒருவருக்கு அதனால் வசதி, நன்மை ஏற்படுகிறது என்பதால் பொது மக்களுக்குத் தொல்லை விளைக்கும் செயலைச் சட்டம் மன்னிப்பது இல்லை.

**தொல்லை (Nuisance) என்று எதைக் குறிக்கிறோம்?**

தீங்கு (injury) விளைவிப்பது, ஆபத்து (danger) நேரச் செய்வது, தொந்தரவு (annoyance) அளிப்பது இவை எல்லாவற்றையும் தொல்லை (nuisance) என்ற சொல் குறிக்கின்றது. பொது உரிமையைப் (public right) பயன்படுத்துவதில் தடங்கல் ஏற்படுத்துவதும் தொல்லையேயாகும். பொது வீதியை அடைத்து ஒருவர் கூட்டத்தைக் கூட்டினால், பிற மக்கள் அந்த வீதியைப் பயன்படுத்துவதில்

தடங்கல் ஏற்படுகிறது. அந்த வீதியில் குறுக்கே பள்ளத்தைத் தோண்டி வைத்தலும் அத்தகைய செயலேதான். இம்மாதிரி பொது உரிமையைப் பயன்படுத்துவதில் தடைகளை ஏற்படுத்துவதும் தொல்லை விளைவிப்பதாகும்.

**தனித்த தொல்லை** (Private Nuisance)

ஒருவருடைய செயலால் விளையும் தொல்லை தனி நபரைமட்டும் பாதிப்பதும் உண்டு; பொது மக்களைப் பாதிப்பதும் உண்டு. தனிப்பட்ட ஒருவரைமட்டும் பாதிக்கும் தொல்லைச் செயலைத் தனித்த தொல்லை (private nuisance) என்பார்கள். அந்தத் தொல்லையால் யாருக்குக் கேடு விளைகின்றதோ அந்த நபர் வழக்கிட்டு அதற்கான நட்ட ஈடு (damages)பெறலாம்.

தனித் தொல்லை என்பது ஓர் உரிமைத் தீங்காகும் (civil wrong or tort).

(1) அண்டைநிலச் சொத்திற்குள் உடல் நலனுக்கு ஒவ்வாத அயல்பொருள்களைப் புகவிட்டு இடைஞ்சல் விளைவித்தல்: (நீர், புகை, ஆவி, நாற்றம், ஒலி, செடி கொடிகள், நோய் பரப்பும் கிருமிகள் இவை போன்ற பொருள்களை அயல் நிலத்திற்குள் அல்லது வீட்டிற்குள் புகவிடுதல்).

(2) அண்டை நிலச் சொத்திற்குக் கிடைக்கும் காற்று, வெளிச்சம், நீர், அதற்குப் போகும் பாதை, இவற்றைத் தடுத்து அதனால் தொல்லை விளைத்தல்.

இந்த இருவகைத் தொல்லைகளும் தனித்த தொல்லை எனப்படுவன (tort of private nuisance).

**பொதுத் தொல்லை** (Public Nuisance)

பொது மக்களுக்கோ அல்லது குறிப்பிட்ட இடத்தில் வசிக்கும் மக்களுக்கோ தீங்கு (injury), ஆபத்து (danger) அல்லது தொந்தரவு (annoyance) விளைவித்தல்.

பொது உரிமைகளைப் பயன்படுத்தும் மக்களுக்குத் தீங்கு, ஆபத்து, தடங்கல் (obstruction) அல்லது தொந்தரவு விளைவித்தல்.

ஒரு காரியத்தைச் செய்வதாலோ, அல்லது செய்யவேண்டிய காரியத்தைச் செய்யாமல் இருப்பதாலோ மேலே கண்ட விளைவுகள் நேரலாம்.

இதைப் பொதுத் தொல்லை (public nuisance) என்கிறோம். (268ஆவது பிரிவு)

**பொதுத் தொல்லைச் செயல்கள்**

வெட்டிய செடிகளையும் கொடிகளையும் பொதுவான வாய்க்காலில் ஊறவைத்து, அதனால் அந்த வாய்க்கால் நீரின் தன்மை கெட்டு விடுதல் பொதுத் தொல்லைச் செயலாகும். பொதுப்பாதையைச் சிறிது அடைக்கும் வகையில் தம் கட்டடத்தைக் கட்டுதல், தம் தோட்டத்திலுள்ள முட்செடிகளைப் பொது வீதியின் மேல் வளர விட்டு வீதியில் நடப்போருக்கு இடைஞ்சல் விளைத்தல், சண்டையிடப் பழக்கப்பட்ட மாடுகளைப் பொது இடங்களில் அலையவிடுதல் இவையெல்லாம் பொதுத் தொல்லைக் குற்றங்கள் (public nuisance) ஆவன.

பொதுப் பாதைக்கருகில் இடிந்து விழும் நிலையிலுள்ள வீட்டை அப்படியே விட்டு வைத்திருத்தல், இரவு முழுவதும் ஒலிபெருக்கி வைத்து ஒலியெழுப்பி அருகில் குடியிருப்போரின் தூக்கத்தைக் கெடுத்தல், நிர்வாணமாகப் பொது இடத்தில் நிற்றல், பொதுப் பாதையருகிலுள்ள குளத்தில் நிர்வாணமாகக் குளித்தல், இது போன்ற செயல்கள் பொதுத் தொல்லைக் குற்றங்கள் எனத் தீர்ப்பளிக்கப்பட்டிருக்கின்றன.

ஒரு கடையில் ஒரு வேடிக்கைச் சித்திரமோ, பொருளோ காட்சிக்கென வைக்கப்பட்டு, அதைப் பார்ப்பதற்கென்று வீதியில் கூட்டம் கூடி, அதனால் போக்குவரத்துத் தடைப்பட்டால், அதற்கு அந்தக் கடைக்காரரே பொறுப்பாளி ஆகின்றார். பொதுத் தொல்லை விளைத்த குற்றத்திற்கு அவர் ஆளாகின்றார்.

**தண்டனை:** இவ்வாறு, பொதுமக்களுக்குத் தொல்லை விளைவிப்பதைச் சட்டம் குற்றம் என விதிக்கின்றது. இந்தக் குற்றம் இழைப்பவர்களுக்கு ரூபாய் இருநூறு வரை அபராதம் விதிக்கப்படலாம் (290 ஆம் பிரிவு.)

பொதுத் தொல்லைச் செயலைத் தடைசெய்து பொது ஊழியர் உத்தரவிட்ட பின்னரும் தொடர்ந்து அல்லது மீண்டும் மீண்டும் அச் செயலை ஒருவர் செய்தால், அக் குற்றத்திற்கு ஆறுமாதம் வரை சிறைத்தண்டனை, அபராதம் விதிக்கப்படலாம் (291 ஆம் பிரிவு).

## மக்களின் உடல்நலனுக்கு ஊறுவிளைவிக்கும் குற்றங்கள்

உயிருக்கு ஆபத்தான தொற்று நோயைப் பரவ விடும் காரியங்களைச் செய்தல்—உணவுப் பொருள்களில் கலப்படம் செய்தல்—மருந்துகளில் மாற்றுப் பொருள்களைக் கலத்தல்—பொதுக்குளங்கள், கிணறுகள் இவற்றின் நீரைக்கெடுத்தல்—சூழ்நிலைக் காற்றைக் கெடுத்தல்,

## உயிருக்கு ஆபத்தான தொற்றுநோயைப் பரவவிடும் காரியங்களைச் செய்தல்

வைசூரி, காலரா, பிளேக் போன்ற கொடிய வியாதிகள் உயிருக்கு ஆபத்து விளைவிப்பவை; எளிதில் ஒருவரிடம் இருந்து பிறருக்குப் பரவக்கூடியவை. எனவே, இவற்றைத் தொற்று வியாதிகள் (infectious edseases) என்கிறோம். நமக்கோ, நம் குழந்தைகளுக்கோ தொற்று வியாதி வரலாம். அது பிறருக்குப் பரவும் விதத்தில் நாம் நடந்துகொள்வது குற்றமாகும். வைசூரி நோயுள்ள குழந்தையை எடுத்துக்கொண்டு பொதுமக்கள் ஏறியுள்ள பஸ்ஸில் ஒருவர் சென்றால் அது குற்றச்செயல்.

கவனமின்மையாக இக் குற்றத்தைச் செய்தால் ஆறு மாதம்வரை சிறைத்தண்டனை, அபராதம் விதிக்கப்படலாம். வேண்டுமென்றே தீய கருத்தோடு இக் குற்றத்தைச் செய்பவர்களுக்கு இரண்டு ஆண்டுகள் வரை சிறைத்தண்டனை விதிக்கலாம் (269, 270 பிரிவுகள்).

வைசூரி, காலரா போன்ற கொடிய நோய்கள் வராமல் தடுப்ப தற்கென்று அரசாங்கம் எவ்வளவோ பணத்தைச் செலவழிக்கிறது. அதற்கென அதிகாரிகளை நியமித்திருக்கிறது. அந் நோய்கள் பரவத் தக்க செயல்களைச் செய்தால் பொது மக்களுக்குப் பெருங்கேடு விளையும். எனவே. அச் செயல்களைக் குற்றங்களாகச் சட்டம் விதிக் கிறது.

## உணவுப் பொருள்களில் கலப்படம் செய்தல்

விற்பனை செய்வதற்கென, உண்ணும் அல்லது பருகும் உணவுப் பண்டங்களில் உடலுக்குத் தீங்கு பயக்கும் பொருள்களைக் கலப்பது குற்றமாகும்.

அம்மாதிரியான கலவைப் பண்டங்களைத் தெரிந்தே விற்பனை செய்வதும், விற்பனைக்கென வைத்திருப்பதும் குற்றம். அருந்துவ தற்குத் தகுதியில்லாத கெட்டுப்போன பண்டங்களை விற்பதும் குற்றம் (272, 273ஆம் பிரிவுகள்).

உணவுப் பண்டங்களுடன் கலக்கப்படும் பொருள்கள் உடலுக் குத் தீங்கு பயப்பனவாக இருத்தல் வேண்டும். அப்போதுதான் அது குற்றம் ஆகிறது. நீர் உடலுக்குக் கேடு பயக்கும் பொருளன்று. எனவே, பாலிலே நீரைக் கலத்தல் இப் பிரிவுகளின்கீழ்க் குற்றமாவ தில்லை. ஆனால், அவ்வாறு தீங்கு பயவாத பொருள்களையும் உணவுப் பொருள்களுடன் கலப்பதைத் தடுக்கும் வேறு சட்டங்கள் உள்ளன.

## மருந்துகளில் மாற்றுப் பொருள்களைக் கலத்தல்

நோயைப் போக்குவதற்கென்று மருந்தைச் சாப்பிடுகிறோம். அந்த மருந்தே நோயளிப்பதாக இருந்தால் அதைவிடக் கேடு வேறென்ன வேண்டும்?

விற்பனை செய்வதற்கென உள்ள மருந்து அல்லது மருந்துப் பொருள்கள் இவற்றுடன் உடற்கேடு விளைக்கும் பொருள்களைக் கலத்தல், அல்லது இவற்றின் குணத்தைக் குறைக்கவோ அல்லது மாற்றவோ செய்யும் வேறு பொருள்களைக் கலத்தல் இவை குற்றங்கள். இந்தக் கலப்பட மருந்துப் பொருள்களைத் தெரிந்தே விற்பனை செய்வதும், விற்பனை செய்வதற்கென்று வைத்திருப்பதும் குற்றம்.

ஒரு மருந்தை வேறொரு மருந்தாகக் கூறி விற்றலும், தயாரித்துக் கொடுத்தலும் குற்றங்கள் (274, 275, 276ஆம் பிரிவுகள்).

## பொதுக் குளங்கள், கிணறுகள் இவற்றின் நீரைக் கெடுத்தல்

பொது மக்களின் உபயோகத்திற்கென்றுள்ள குளங்கள், கிணறுகள், ஊற்றுகள் இவற்றிலுள்ள நீரை அசுத்தப்படுத்தி, அதை மக்கள் பயன்படுத்துவதற்குத் தகுதியில்லாதவாறு செய்தல் குற்றமாகும்.

குடிநீருக்கென்று மட்டும் தனியாக ஒதுக்கப்பட்ட குளத்தில் குளிப்பதோ, துணி துவைப்பதோ அந்தக் குளத்து நீரின் தன்மையைக் கெடுப்பதாகும். அவ்வாறு செய்தல் கூடாது.

## சூழ்நிலை காற்றைக் கெடுத்தல்

ஒருவர் உடல் நலம், உண்ணும் உணவாலும், பருகும் நீராலும் பாதிக்கப்படுவதுபோல், மூச்சாக உள்ளிழுக்கும் காற்றாலும் பாதிக்கப் படுகின்றது.

நம் அண்டை வீட்டுக்காரர் அமிலத்தைத் தயார் செய்து அதனால் சூழ்ந்து பரவும் ஆவி கலந்த காற்றை நாம் சுவாசித்துக் கொண்டேயிருந்தால் நம் உடல்நலம் கெட்டுவிடுகிறது. சரியாகப் பதனம் செய்யப்படாத மாட்டுத் தோல்கள் குவித்து வைத்திருக்கப் படும் மண்டியிலிருந்து வரும் நாற்றத்தால் அருகில் வாழ்வோரின் உடல்நலம் பாதிக்கப்படலாம்.

இவ்வாறு, அருகில் வாழ்வோர், பொதுப் பாதையைப் பயன் படுத்துவோர் இவர்களின் உடல்நலனைப் பாதிக்கும் வகையில் அங்குள்ள காற்றின் தன்மையைக் கெடுக்கும் செயல் குற்றமாகும் (278ஆம் பிரிவு).

# பொதுப் பாதுகாப்பிற்கெதிரான குற்றங்கள்

(i) பொதுப் பாதையில் கவனமின்றி ஓட்டுதல், சவாரி செய்தல்—கவனமின்மையும் அசட்டுத் துணிவும்—பிறரின் தற்கவனமின்மை சமாதானம் ஆகாது—கேடு விளைந்திருக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை—(ii) கவனமின்மையாகக் கலத்தைச் செலுத்துதல்—(iii) பழுது பட்ட கலத்தில், பாரம் அதிகமுள்ள கலத்தில் ஆட்களைக் கூலிக்கு ஏற்றிச் செல்லுதல்—(iv) பொதுப் பாதையில் செல்வோருக்கு ஆபத்தையோ, தடையையோ விளைத்தல்—(v) நச்சுப் பொருள், நெருப்பு, எரிபொருள், வெடிபொருள், இயந்திரங்கள் இவற்றைப் பொறுத்த கவனமின்மை—(vi) கட்டிடத்தை இடிக்கும்பொழுதும் பழுதுபார்க்கும்பொழுதும் கவனமின்மை—(vii) விலங்குகளைக் கவனமின்மையாக விட்டுவைத்தல்—(viii) தடையுத்தரவிற்குப் பின்னும் பொதுத் தொல்லைச் செயலைத் தொடர்ந்து செய்தல்.

## (i) பொதுப் பாதையில் கவனமின்றி ஓட்டுதல், சவாரி செய்தல்

பொதுப்பாதையில் குதிரை முதலிய பிராணிகள்மீது இவர்ந்து செல்லும்பொழுதும், வண்டி, மோட்டார் முதலியவைகளைச் செலுத்தும் பொழுதும் ஒருவர் கவனமாக இருத்தல்வேண்டும். இல்லையெனில், பிறருக்கு அதனால் கேடு விளைகின்றது. எனவே, மற்றவர்களின் உயிருக்கு ஆபத்து விளைக்கும் வகையிலோ, பிறருக்குக் காயம் அல்லது கேடு விளைவிக்கும் வகையிலோ கவனமின்றி அல்லது கண்மூடித்தனமாகப் பொதுப்பாதையில் ஓட்டுவதும் சவாரி செய்வதும் குற்றங்களாகின்றன (279ஆம் பிரிவு).

வேகமாகச் செல்லும் மோட்டார்போன்ற இயந்திர வண்டிகள் மிகுதியாக இயங்கும் இந் நாளில், பொது வீதியில் போவது ஓர் ஆபத்தான காரியமாகிறது. போதிய கவனமின்றியோ (negligence) அசட்டுத் துணிவுடனோ (rashness) ஒருவர் தமது காரை ஓட்டிச் செல்லுவது பொது வீதியில் உள்ள மக்களுக்கு ஆபத்து விளைவிப்பதாகும்.

**கவனமின்மையும் அசட்டுத் துணிவும்:** இரவு நேரத்தில் செல்லும் மோட்டார் கார்களின்முன் விளக்கு எரிதல்வேண்டும். விளக்கைப் போடாமல் இரவில் மோட்டாரைச் செலுத்தினால், எதிரில் வரும் வண்டியோ ஆளோ தெரியாமற்போகலாம்; அதனால் மோதல் ஏற்பட்டுப் பிறர் உயிருக்கு ஆபத்து விளையலாம். இவ்வாறு, இரவில் முன்விளக்கை ஏற்றி ஓட்டவேண்டும் என்ற கடமையில் தவறி, விளக்குகள் இன்றி மோட்டாரை ஓட்டுதல் கவனமின்மையாக (negligence) மோட்டார் ஓட்டிய செயலாகிறது. ஒன்றைச் செய்ய வேண்டும் என்ற கடமை (duty) இருந்தும், அதைச் செய்யாமல் தவறுதலைக் 'கவனமின்மை' என்கிறோம்.

கூட்டமாக மக்கள் நடமாட்டமுள்ள நெருக்கடி மிகுந்த வீதி களில் மணிக்குப் பதினைந்து அல்லது இருபது மைல் வேகத்திற்கு மேல் மோட்டாரைச் செலுத்துவது கூடாது. அந்த வேகத்திற்கும் அதிகமாகச் சென்றால் பிறர்மீது கார் மோதலாம் என்று நமக்கு நன்கு தெரிகிறது. இருந்தாலும், அவ்வாறு ஒன்றும் நேராது என்ற அசட்டுத் துணிவுடன் நாற்பது அல்லது ஐம்பது மைல் வேகத்தில் காரை ஓட்டிச் செல்லுவது கண்மூடித்தனமான, அசட்டுத் துணிவான (rash) செயலாகும். இவ்வாறு செய்யக்கூடாத ஒன்றைச் செய்தலை 'அசட்டுத் துணிவு' என்கிறோம். செய்யவேண்டியதைச் செய்யாமையே 'கவனமின்மை' (negligence); செய்யத்தகாத தைச் செய்தல் 'அசட்டுத் துணிவுடைமை' (rashness). தமது கடமைச் செயலைப் புறக்கணித்து நடத்தல் கவனமின்மையாகும்; தம் செயலால் விளையும் பலன்களைப் புறக்கணித்து நடத்தல் அசட்டுத் துணிவாகும்.

வீதியில் உள்ள திருப்பங்களில் காரைத் திருப்பிச் செலுத்தும் பொழுது 'ஹாரன்' அடிக்கவேண்டும். இல்லாவிடில், திருப்பத்தின் மறுபுறமிருந்து வரும் வண்டிகளைத் தெரிந்துகொள்ள இயலாது. இந் நிலையில் ஒருவர் 'ஹாரன்' கொடுக்காமல் வீதி மூலைகளில் காரைத் திருப்புவது அசட்டுத் துணிவான செயலாகும்.

இவ்வாறு, கவனமின்றியோ, அசட்டுத் துணிவுடனோ ஓட்டிய தால் மற்றெவருக்காவது காயமோ, கேடோ விளைந்திருக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை. கவனக்குறைவான அல்லது கண்மூடித் தனமான செயல், பிறர் உயிருக்கு ஆபத்து விளைக்கக்கூடியதாக, பிறருக்குக் காயத்தை ஏற்படுத்தக்கூடியதாக இருந்தாலே போது மானது. அவ்வாறு ஓட்டிய செயலே இந்தப் பிரிவின்கீழ்த் தனிக் குற்றமாகும். இதனால் பிறருக்குக் காயமோ, மரணமோ விளைந்தால், வேறு பிரிவுகளின்கீழ் அதிகப்படியான குற்றமாகும்.

**பிறரின் தற்கவனமின்மை சமாதானம் ஆகாது:** தெருவில் நடந்து சென்றுகொண்டிருந்தவர்மீது ஒருவர் காரை மோதிக் காயத்தை விளைத்துவிட்டார் என வைப்போம். 'காயம்பட்டவர் நடு வீதியில் நடந்து சென்றுகொண்டிருந்தார். அவர் வீதியின் ஓரத்தி லுள்ள மேடைமீது முறைப்படி நடந்து சென்றிருந்தால், இந்த விபத்து ஏற்பட்டிருக்காது. எனவே, 'காரை ஓட்டிச் சென்ற நான் குற்றவாளி அல்லன்' என்று காரை ஓட்டியவர் வாதாடிக் குற்றத்தி லிருந்து தப்புவது முடியாது. நடந்துசென்றவர் கவனமின்றியே நடந் திருக்கலாம். எனினும், அவர்மீது காரை மோதிக் காயத்தை விளைத்த தற்கு அது போதிய சமாதானமாகாது. நடந்துசென்றவர் தமக்கு ஏற்பட்ட காயத்திற்கு நட்டஈடு கோரித் தீங்கியல் சட்டத்தின் (Tort)

கீழ் வழக்கிட்டால், அவரது தற்கவனமின்மையையும் (contributory negligence) நீதிமன்றம் ஆராய்ந்து அதற்குத் தக்கபடி நட்ட ஈட்டுத் தொகையைக் குறைக்கிறது. ஆனால், குற்ற வழக்குகளில் நீதிமன்றம் ஆராய்வது ஒன்றைப்பற்றிதான். அஃதாவது, காரை ஓட்டியவர் சாதாரண அறிவுள்ள ஒருவர் காட்டும் அக்கறையுடனும் கவனத்துடனும் நடந்துகொண்டாரா? அவ்வாறு நடந்திருந்தால் ஏற்பட்ட விபத்து தவிர்க்கப்பட்டிருக்கலாமா? என்பதைப்பற்றிதான். எனவே, வீதியில் நடந்து சென்றவர் விதிகளின்படி ஓரமாகச் செல்லவில்லை என்றோ, எதிரில் வந்த மோட்டார் ஓட்டி போக்கு வரத்து விதிகளையொட்டி நடக்கவில்லை என்றோ காரணங்காட்டிக் கவனமின்மையால் விபத்தை விளைவித்தவர் குற்றத்திலிருந்து தப்புவதற்கில்லை.

### கவனமின்மையான, அசட்டுத் துணிவான செயலால் கேடு விளைந்திருக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை

ஒரு குறிப்பிட்ட வேளையில், தற்செயலாக, முக்கியமான பொது வீதியில் ஆள் நடமாட்டம் இல்லாதிருக்கலாம். வீதியில் நடமாட்டம் இல்லை என்பதை வைத்துக்கொண்டு ஒருவர் தமது மோட்டாரை அறுபது மைல் வேகத்தில் செலுத்தலாமா? கூடாது. எந்த நேரத்திலும் திடீரென்று ஒருவர் வீதியின் குறுக்கே வந்துவிடலாம். எதிர்பாராதவிதமாக ஒரு குழந்தை வீதியில் இறங்கி ஓடலாம். அறுபது மைல் வேகத்தில் செலுத்தப்படும் மோட்டாரைத் திடீரென்று நிறுத்தி விபத்தைத் தவிர்ப்பது இயலாததாகிவிடலாம். எனவே, 'வீதியில் எவரும் நடமாடாத காரணத்தால், வேறு வண்டிகள் இல்லாத காரணத்தால் நான் அறுபது மைல் வேகத்தில் காரை ஓட்டினேன்' என்று ஒருவர் கூறுதல் பொருந்தாது. ஒருவர் குதிரை வண்டியை அதிவேகமாகச் செலுத்திச் செல்லுகிறார். வீதியில் நடந்துகொண்டிருந்த ஒருவர்மீது வண்டி ஏறி, அவருக்கு மரணம் விளைகின்றது என வைப்போம். இப்பொழுது, குதிரை வண்டியை வேகமாக ஓட்டிவந்தவர் கவனமின்மையால் மரணத்தை விளைத்த குற்றத்திற்கு ஆளாகின்றார். வேகமாக நெருங்கிவரும் குதிரை வண்டியைக் கண்டதும், வீதியில் நடந்துகொண்டிருந்தவரை மற்றொருவர் தக்க வேளையில் பிடித்து ஓரமாக இழுத்துவிட்டுக் காப்பாற்றுகிறார் என வைப்போம். இவ்வாறு, வேகமாக வந்த குதிரை வண்டி வீதியில் நடந்துசென்றவர்மீது ஏறுவது தவிர்க்கப்படுகிறது. இப்பொழுது, வீதியில் நடந்தவருக்கு ஆபத்து விளையாமற்போனது வண்டியை ஓட்டியவரின் கவனத்தால் அன்று; வீதியில் நடந்தவரைத் தக்க வேளையில் காப்பாற்றியவரின் நடத்தையால்தான். நடந்துசென்றவருக்கு மரணத்தை விளைவித்தபொழுது வண்டியை

ஓட்டியவர் காட்டிய கவனக்குறைவும், நடந்துசென்றவர் பிறருதவி யால் தப்பியபொழுது வண்டியை ஓட்டியவர் காட்டிய கவனக் குறைவும் ஒரே தன்மையுடையன; வேறுபட்டவையல்ல. ஆதலால் தான், பிறருக்குக் காயமோ, மரணமோ விளைக்காத நிலையிலும், அத்தகைய ஆபத்தை ஏற்படுத்தும் விதத்தில், கவனமின்றியும் அசட்டுத் துணிவுடனும் பொது வீதியில் வண்டிகளைச் செலுத்துபவர் களைச் சட்டம் தண்டனைக்குள்ளாக்குகிறது.

இந்தக் கொள்கையைக் கருத்தில் வைத்துக்கொண்டுதான் பிறருக்குக் காயமோ, கேடோ, உயிருக்கு ஆபத்தோ விளைக்கத்தக்க விதத்தில் ஒருவர் பொது வீதியில் வண்டியை ஓட்டினரா என்பது நிச்சயிக்கப்படுகிறது. அவர் கவனமின்மையாகவோ, அசட்டுத் துணிச்சலுடனே நடந்துகொண்டாரா என்பது அந்தந்தச் சூழ்நிலை களிலிருந்து உறுதி செய்யப்பெறுகின்றது.

### (ii) கவனமின்மையாகக் கலத்தைச் செலுத்துதல்

வீதிகளில் வாகனங்களை எவ்வாறு கவனம் இன்றிச் செலுத்து தல் கூடாதோ, அவ்வாறே நதிகளில் அல்லது குளங்களில் கலங் களைச் செலுத்தும்பொழுதும் பிறருக்குக் காயம் அல்லது கேடு விளைவிக்காத வகையில், உயிருக்கு ஆபத்து விளைக்காத வகையில் கவனமாகச் செலுத்தவேண்டும். கவனமின்மையாகவோ, அசட்டுத் துணிவுடனே கலங்களை நீர்வழிச் செலுத்துவதும் குற்றமாகும் (280ஆம் பிரிவு).

### (iii) பழுதுபட்ட கலத்தில், பாரம் அதிகமுள்ள கலத்தில் ஆட்களைக் கூலிக்கு ஏற்றிச் செல்லுதல்

'இருபது பேர்கள் ஏறக்கூடிய ஒரு படகில் நாற்பது பேரை ஏற்றிக்கொண்டு நதியைக் கடக்கும்போது படகு நதியில் மூழ்கியது. படகில் இருந்த நாற்பது பேர்களில் மூன்று பேர்களே நீந்திக் கரை சேர்ந்து தப்பினர். மற்றவர்கள் நதியில் மூழ்கி மாண்டனர்...'

இதுபோன்ற செய்திகளை நாம் கேட்கிறோம்; பத்திரிகைகளில் படிக்கிறோம். இந்த விபத்து, படகு ஓட்டுபவரின் கவனமின்மை யால் விளைந்ததாகும். சட்டம் இதையும் தடைசெய்கிறது.

ஒரு படகு அல்லது கலன் பழுதுபட்டிருக்கிறது என்பதைத் தெரிந்தும், அல்லது அதில் ஏற்றிய பாரம் அதிகமாக இருக்கிறது என்பதைத் தெரிந்தும், கூலிக்கு ஆட்களை அதில் ஏற்றி அவர்களின் உயிருக்கு ஆபத்து விளைப்பது குற்றமாகும். அவ்வாறு, கூலிக்கு ஆட்களை ஏற்றிச் செல்லுவதற்கு ஏற்பாடு செய்வதும் குற்றமாகும் (282ஆம் பிரிவு).

அளவிற்கு அதிகமாக ஆட்களைக் கூலிக்கு ஏற்றிச் செல்லும் படகோட்டி குற்றத்திற்கு ஆளாவது போலவே, அச் செயலுக்கு இசைந்து ஏற்பாடு செய்பவர்களும் (படகின் சொந்தக்காரர் அல்லது அதற்கான அதிகாரி) குற்றவாளியாகின்றனர்.

**(iv) பொதுப்பாதையில் செல்வோருக்கு ஆபத்தையோ, தடையையோ விளைத்தல்**

நாம் நம்வசமுள்ள நிலத்தையோ, கட்டடத்தையோ நம் விருப்பப்படி பயன்படுத்தலாம். ஆனால், அவ்வாறு பயன்படுத்துகையில் அச் சொத்தை அடுத்திருக்கும் பொதுப் பாதையில் செல்லுவோருக்கு எவ்வித ஆபத்தோ, தடையோ அல்லது கேடோ ஏற்படுவது கூடாது. அப்படி ஏற்பட்டால் அது குற்றமாகும். அதற்கு 200 ரூபாய்வரை அபராதம் விதிக்கப்படலாம் (283ஆம் பிரிவு).

ஒரு வியாபாரியின் தானியக் கிடங்கு பொது வீதியின் புறமாக இருக்கலாம். அந்தக் கிடங்கின் முன்னால் இரண்டு மூன்று லாரிகள் (lorries) எப்பொழுதும் நின்றுகொண்டிருப்பதால் அந்த வீதியில் தடை ஏற்பட்டால், அது குற்றமாகும்.

ஒருவர் தம் நிலத்துக்கு சப்பாத்திக் கள்ளிச் செடிகளை வைத்து வேலி போட்டிருந்தார். வேலியிலுள்ள சப்பாத்திச் செடி படர்ந்து வளர்ந்து அடுத்திருந்த வீதியின் ஒரு பாகத்தை அடைத்துக் கொண்டது. இவ்வாறு வீதியை ஓரளவு அடைக்கும்படி சப்பாத்தியை வளரவிட்டது குற்றம் எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

தீபாவளி விழாவையொட்டி ஒருவர் தம் கடை ஜன்னல்களில் வேடிக்கைப் பொம்மைகளை ஆடவிட்டிருந்தார். அதைக் காண்பதற்கென வீதியில் அதிகமான கூட்டம் கூடி, அதனால் கூட்டத்தில் நெரிசல் ஏற்பட்டு, வீதியில் போக்குவரத்துத் தடைப்பட்டது. கடைக்காரர் மேலே கூறிய பிரிவின்கீழ்க் குற்றம் செய்ததாகத் தீர்ப்பளிக்கப்பட்டது.

பொதுப்பாதைக்குத் தடை ஏற்படுத்துவது எவ்வாறு கூடாதோ, அவ்வாறே கலன்கள் செல்லும் நீர் வழிகளில் தடையையோ, ஆபத்தையோ ஏற்படுத்துவதும் கூடாது.

**(v) நச்சுப் பொருள்கள், நெருப்பு, எரிபொருள்கள், வெடி பொருள்கள், இயந்திரங்கள் இவற்றைப்பொறுத்த கவனமின்மை**

நச்சுப் பொருள்கள், நெருப்பு, எரிபொருள்கள், வெடி பொருள்கள், இயந்திரங்கள் இவைகளைப் பொறுத்துக் கவனமின்மையாகவோ அசட்டுத் துணிவுடனோ இருந்து, அதனால் பிறருடைய உயிருக்கு ஆபத்து ஏற்படும்படியாகவோ அல்லது கேடு விளையும்

படியாகவோ நடப்பது குற்றமாகும் (284, 285, 286, 287ஆம் பிரிவுகள்).

(vi) கட்டடத்தை இடிக்கும்பொழுதும் பழுதுபார்க்கும்பொழுதும் கவனமின்மை

ஒரு கட்டடத்தை இடிக்கும்பொழுதோ, பழுதுபார்க்கும் பொழுதோ அதனால் எவருடைய உயிருக்கும் ஆபத்து விளையாத வாறு தகுந்த முன்னேற்பாடுகளைச் செய்துகொள்ள வேண்டும். தகுந்த பாதுகாப்பு எடுக்காமல், கவனமின்மையாகக் கட்டடத்தை இடிப்பதும் பழுதுபார்ப்பதும் குற்றமாகும் (288ஆம் பிரிவு).

(vii) விலங்குகளைக் கவனமின்மையாக விட்டுவைத்தல்

காட்டு விலங்குகளாலும் வீட்டு விலங்குகளாலும் மக்களுக்குக் கேடு விளையலாம். மாடு முட்டுகிறது; குதிரை உதைக்கிறது; சில நாய்கள் கடிக்கின்றன. புலி, கரடி போன்ற காட்டு விலங்குகள் மனித உயிருக்கே ஆபத்து விளைக்கின்றன. எனவே, இவ் விலங்கு களை வைத்திருப்பவர்கள் அவைகளால் பிறருக்குக் கேடு விளையாத வாறு கவனமாகப் பார்த்துக்கொள்ளவேண்டும். பிறர் உயிருக்கு ஆபத்து விளையாமலும், எவருக்கும் கொடுங்காயம் (grievous hurt) விளையாமலும் தடுக்கும் முறையில் தக்க பாதுகாப்பின்றி விலங்கு களை வைத்திருப்பது குற்றமாகும் (289ஆம் பிரிவு).

எல்லா மாடுகளும் எதிரில் வருபவர்களை முட்டித் தள்ளுவ தில்லை. எல்லா நாய்களும் மக்களைக் கடிப்பதில்லை. எனவே, முட்டித் தள்ளும் இயல்புடைய மாடுகளையுடையவர்கள்தாம், கடிக்கும் குணமுடைய நாயை உடையவர்கள்தாம், பிறருக்கு அவற்றால் கொடுங் காயம் விளையாதபடி பார்த்துக்கொள்ள வேண்டும்.

ஒரு குறுகலான பொதுவழிச் சந்தில் குதிரையைக் கட்டி வைத்திருந்தார் ஒருவர். குதிரையின் பின்னங்கால்களையொட்டிச் சென்றால்தான் அச் சந்துவழியே ஒருவர் போகமுடியும். இப்பொழுது குதிரை உதைக்கலாம்; இதனால் அச் சந்தில் போவோருக்குக் கொடுங்காயம் விளையலாம். எனவே, இவ்வாறு குதிரையைக் கட்டிவைத்த செயல் குற்றமாகும் எனத் தீர்ப்பளிக்கப் பட்டது.

(viii) தடையுத்தரவிற்குப் பின்னும் பொதுத் தொல்லையான செயலைத் தொடர்ந்து செய்தல்

பொதுத்தொல்லை விளைவிப்போரை அவ்வாறு செய்யாது தடை செய்வதற்கான அதிகாரம் நீதிமன்றங்களுக்கு உண்டு.

பொது வீதியின் குறுக்கே ஒருவர் பள்ளம் வெட்டி வீதியில் மக்கள் செல்லுவதைத் தடைசெய்து பொதுத்தொல்லை விளைவிப்பவரை, உடனே அந்தப் பள்ளத்தை மூடிவிடுமாறு நீதிமன்றம் உத்தரவிடலாம். இரவு பகலாக மாவு மில்லை ஓட்டி ஒலியெழுப்பி அதனால் அருகில் குடியிருப்பவர்களுக்குத் தொல்லை விளைவிப்பவரை, இரவு நேரத்தில் மில்லை ஓட்டவேண்டாம் என்று நீதிமன்றம் கட்டளை இடுவது உண்டு. இவ்வாறு தடைக்கட்டளை (prohibitory injunction) இடப்பட்ட பின்னும் தொடர்ந்து தொல்லைச் செயலை செய்பவர் குற்றவாளியாகின்றார். உத்தரவுக்குப் பின்னும் இரவில் மில்லை ஓட்டுவதும், வீதியில் தோண்டிய பள்ளத்தை மூடாமல் இருப்பதும் தடைக்கட்டளையை மீறும் செயல்கள்.

குற்ற விசாரணைமுறைச் சட்டம் 142, 143ஆம் பிரிவுகளின்படி பொதுத் தொல்லையை நீக்குவதற்கென்று மாஜிஸ்ட்ரேட்டே உத்தரவு பிறப்பிக்கலாம். இந்த உத்தரவுகளுக்குப் பின்னும் பொதுத்தொல்லைச் செயலைத் தொடர்ந்து செய்வது குற்றம். இதற்கு ஆறு மாதம்வரை சிறைத்தண்டனை உண்டு (291ஆம் பிரிவு).

## ஒழுக்கத்திற்கெதிரான குற்றங்கள்

இழிவான பிரசுரங்கள்—இலாட்டரி நடத்துதல்

**இழிவான பிரசுரங்கள்:** நூல்கள், பிரசுரங்கள் முதலியன மக்களின் அறிவைப் பெருக்கும் வகையில் அமைதலே சிறப்பாகும். ஏதோ பொழுதுபோக்குக்கென்று எழுதப்படும் கதைகளால் அறிவு வளர்ச்சிக்குப் பயன் எதுவும் இல்லையாயினும், தீங்கு ஏதும் விளைவதில்லை. ஆனால், மக்கள் மனத்திலே இழிவுணர்ச்சிகளையோ, அருவருப்பூட்டும் காமவுணர்ச்சிகளையோ எழுப்பும் புத்தகங்கள், சித்திரங்கள் முதலியவற்றால் சமுதாயத்திற்குத் தீங்கே விளைகின்றது. இழிவான நூல்களால் மக்களின்உள்ளம் உயருவதற்குப் பதிலாகத் தாழ்கின்றது. காதலும் வீரமும், நேர்மையும் நீதியும், தியாகமும் சீலமும் நெஞ்சிலே தோன்றுவதற்கின்றி, கீழ்த்தரமான அருவருக்கத்தக்க உணர்ச்சிகளே அத்தகைய புத்தகங்களால் ஏற்படுகின்றன. மக்களின் ஒழுக்கமான வாழ்வைக் குலைத்து இழுக்கத்தில் அவர்களைச் சேர்க்கின்றன.

தூய்மைக்கும் நாகரிகத்திற்கும் மாறுபட்டதாக, மக்கள் மனத்தை மாசுறச் செய்வதாக இருப்பதை இழிவானது (obscene) அருவருக்கத்தக்கது என்கிறோம். அது ஒரு நூலாக இருக்கலாம்; வரைபடமாகவோ, வண்ணச் சித்திரமாகவோ இருக்கலாம்; வனையப்பட்ட பொருள்களாகவும் இருக்கலாம்.

இத்தகைய நூல்கள், பிரசுரங்கள், சித்திரங்கள், உருவங்கள், பொருள்கள் முதலியவற்றை விற்பது, வினியோகிப்பது, காட்சிப் பொருள்களாகக் காட்டுவது, பலரிடைப் பரவச் செய்வது, இப் பொருள்களை ஆக்குவது, வைத்திருப்பது இவையெல்லாம் குற்றங்கள்.

இவைகளை இறக்குமதி, ஏற்றுமதி செய்வது; விற்பனை, வினியோகம் முதலிய காரியங்களுக்காக அனுப்புவது; இவற்றைச் செய்யும் தொழிலில் பங்கெடுப்பது; இவற்றிற்கான விளம்பரங்களைச் செய்வது இவையும் குற்றங்கள்.

இக் குற்றத்திற்கு இரண்டு ஆண்டுவரை சிறைத்தண்டனை அபராதம் உண்டு. இரண்டாம் முறையாக இக் குற்றத்தைச் செய்பவர்கள் ஆறு மாதத்திற்குக் குறையாமல் சிறைத்தண்டனை பெறுவார்கள். மீண்டும்மீண்டும் இக் குற்றத்தை இழைப்போர்க்கு இவ்வாறு சிறைத்தண்டனை கட்டாயமாக்கப்படுகின்றது (292ஆம் பிரிவு).

மத சம்பந்தமான நூல்கள், கோவில்களில் உள்ள சிற்பங்கள் சித்திரங்கள், தேர்களில் உள்ள சிற்பங்கள் சித்திரங்கள் இவைகளைப் பொறுத்து இப் பிரிவு பொருந்துவதில்லை.

ஆண், பெண் உறவு முறைபற்றி ஆராய்ச்சி செய்து அறிவு புகட்டும் நூல்கள் உள்ளன. வைத்தியப் படிப்பிற்கென்றோ, வேறு ஆராய்ச்சிக்கென்றோ படங்கள் வரைந்துள்ள நூல்கள் இருக்கின்றன. இவற்றையெல்லாம் இழிவுணர்ச்சியூட்டும் நூல்கள் என்று கொள்ளுவதற்கில்லை. சாதாரண மக்கள் படிப்பதற்கென்று எழுதப்பட்டு, அம் மக்களின் மனத்தைக் கெடுப்பதாக, சீர்கேடடையச் செய்வதாக உள்ள நூல்களையே சட்டம் தடை செய்கின்றது. படிப்போர் மனத்திலே இழிவான காமவுணர்ச்சி யூட்டும் நூல்களையே, இளஞ்சிறுரின் இதயங்களில் இழிவுணர்ச்சிகளை எழுப்பும் நூல்களையே இழிந்த நூல்கள் எனக் கொள்ளுகிறோம்.

ஒரு நூல் பொதுவாக நல்லதாகவே இருக்கலாம். ஆனால், அதில் ஏதாவது ஒரு பகுதி இழிவுணர்ச்சி எழுப்புவதாக இருந்தால், அந்த நூலும் தடைக்குள்ளாகிறது.

## அருவருப்பான, இழிதகவான, அல்லது அச்சுறுத்திப் பணம் பறிப்பதானவற்றை அச்சடித்தல், வெளியிடுதல் முதலியன.

(a) மிகவும் அருவருப்பான அல்லது இழிதகவான அல்லது அச்சுறுத்திப் பணம் பறிப்பதான ஆவணத்தையோ, படத்தையோ

அச்சிடுதல், அச்சிட ஏற்பாடு செய்தல், இத்தகைய செய்தித்தாள், பத்திரிகை, சுற்றறிக்கை முதலியவற்றை அச்சிடுதல், அச்சிட ஏற்பாடு செய்தல், இத்தகையவற்றைப் பொதுமக்கள் பார்ப்பதற்கென்று காட்சிப் பொருளாக வைத்தல், விநியோகித்தல்; அல்லது

(b) மேலே கூறப்பட்டபடி, அருவருப்பான, இழிதகவான, அச்சுறுத்திப் பணம் பறிப்பதான ஆவணத்தையோ, படத்தையோ ஒருவர் விற்றல், வாடகைக்குக் கொடுத்தல், தயாரித்தல் அல்லது வைத்திருத்தல்;

(c) மேற்கண்டபடியான தொழிலில் பங்கெடுத்தல், அதில் வரும் ஊதியத்தைப் பெறுதல்,

இவை அனைத்தும் குற்றங்கள் ஆகும்.

இக் குற்றத்திற்கு இரண்டாண்டுக்காலம்வரை சிறை, அபராதம் தண்டனை உண்டு.

ஒரு முறை குற்றம் செய்து, மீண்டும் அதே குற்றத்தை மறுபடியும் செய்வோர் குறைந்தது ஆறு மாத சிறைத்தண்டனை பெறுகின்றனர்.

**விளக்கம்:** ஒழுக்கத்திற்கு ஊறு விளைவிப்பது, ஒருவருக்குக் கேடு விளைவிப்பதுபோன்ற காரியங்கள் இழிதகவானவை எனக் கொள்ளப்படும்.

பொது ஊழியரின் பணிமுறை நடவடிக்கை குறித்தோ, அல்லது பொதுக்காரியங்கள் குறித்தோ, பொதுக் காரியங்களோடு தொடர்புடைய ஒருவரின் பொது நடவடிக்கை குறித்தோ நல்ல எண்ணத்துடன் கருத்துரை கூறுவது இழிதகவானவை என்று கருதப்படுவதில்லை.

பொதுவாக, இளைஞர்கள், நற்பண்பு இல்லாதவர்கள் அருவருப்பான அல்லது இழிதகவான பிரசுரங்களையோ, பத்திரிகைகளையோ படிப்பதில் அதிக அக்கறை காட்டுகின்றனர். பெரும்பாலான மக்களிடையே உள்ள இந்த இயல்பைப் பயன்படுத்திச் சிலர் பிறருக்கு அவதூறு விளைவித்து அச்சுறுத்திப் பணம் பெறுவதிலும், சமுதாயத்தின் ஒழுக்கநிலையைக் குறைக்கும்படியான அருவருப்பான செய்திகளை வெளியிடுவதிலும் முனைகின்றனர். இத்தகைய முயற்சியால் எளிதில் பணம் சேர்க்க முயலுகின்றனர். இதனால் சமுதாயத்திற்கு விளையும் கேடு அதிகமானது.

இத்தகைய இழிதகவான பிரசுரங்களைப் படிப்போரின் மனத்திலே ஒழுக்கத்திற்கு மாறுன எண்ணங்கள் தோன்றுகின்றன; சமுதாயத்தின் ஒழுக்கநிலை சீர்குலைகிறது. எனவே, நமது தமிழ்நாட்டு அரசினர் மேலே கூறப்பட்ட 292(A) பிரிவை இந்தியக் குற்ற இயல் சட்டத்திற்குத் திருத்தமாக இயற்றி, இச் செயல்களைத் தண்டனைக்கு உள்ளாக்கியிருக்கின்றனர்.

மேலே கூறப்பட்ட பொருள்களை இருபது வயதுக்குக் கீழ்ப்பட்டவர்களுக்கு விற்பது, வினியோகிப்பது, காட்டுவதுபோன்ற செயல்களைச் செய்பவர்களுக்கு ஆறு மாதம்வரை சிறை, அபராதம் உண்டு (293ஆம் பிரிவு).

பொது இடங்களில் அல்லது பொது இடங்களுக்கு அருகில், பிறருக்கு அருவருப்பு ஏற்படும் வகையில் இழிவான செயலைச் செய்வோர், இழிவான பாடல்களைப் பாடுவோர், இழிந்த சொற்களைக் கூறுவோர் இவர்களும் தண்டனைக்குள்ளாகின்றனர் (294 ஆம் பிரிவு).

## இலாட்டரி நடத்துதல் (Keeping Lottery Office)

சூதாடுதல் என்பது தீய பழக்கமாக என்றும் கருதப்பட்டு வந்துள்ளது.

> 'சிறுமை பலசெய்து சீரழிக்கும் சூதின்
> வறுமை தருவதொன்று இல்' (குறள், 934)

என்கிறார் வள்ளுவர். சிறுமை பல செய்து, சீரழித்து, வறுமை தரும் சூதாட்டத்தைச் சட்டமும் தடை செய்கின்றது.

பகடையை உருட்டி ஆடுவதுமட்டுமே சூதாட்டம் என்பதன்று; குலுக்குச் சீட்டு, பொறுக்குச் சீட்டு( Lottery)நடத்தலும் சூதாட்டமேயாகும். ஏனெனில், இச் சீட்டில் பரிசு பெறுவதற்கு எவ்விதத் திறமையும் தேவையில்லை. குருட்டடியாக, அதிருஷ்டவசமாகக் கிடைக்கும் பரிசுகளைக் கொடுப்பதாகும் குலுக்குச் சீட்டு முறை.

எனவே, குலுக்குச் சீட்டுகளை நடத்துவது கூடாது எனச் சட்டம் விதிக்கின்றது. அச் சீட்டுகள் நடத்துவதற்கென்று அலுவலகத்தை நடத்துதல் குற்றமாகும். அவ்வாறு நடத்துவோருக்கு ஆறு மாதம்வரை சிறைத்தண்டனை, அபராதம் விதிக்கப்படலாம் (294-A பிரிவு).

முடிந்த குலுக்குச் சீட்டின் வகைக்காகப் பரிசுத்தொகை, பரிசுப் பொருள்கள் கொடுப்பதாகப் பிரசுரிப்பதும் குற்றமாகும்.

ஆனல், இச் சீட்டு நடத்துவதற்கு அரசாங்கத்திற்கு அதிகாரம் உண்டு. மேலும், அரசாங்கத்திடம் அனுமதி பெற்று இவ்வகைச் சீட்டை நடத்துவது குற்றமாவதில்லை.

முதற் பரிசுத்தொகை ரூ. 1000 என்றும், அடுத்த பரிசுத்தொகை ரூ. 500 என்றும் பரிசுச் சீட்டுகள் விற்கப்படுகின்றன. ஒரு பரிசுச் சீட்டின் விலை ஒரு ரூபாய். குறித்த நாளில் விற்பனையான சீட்டு களின் இலக்கங்கள் குறித்த சீட்டுகளை மொத்தமாக ஒரு பெட்டி யில் போட்டு, அவற்றிலிருந்து ஒரு சீட்டு எடுக்கப்படுகிறது. முதலில் எடுக்கப்பட்ட சீட்டில் உள்ள இலக்கத்திற்கு முதற் பரிசும், அடுத்து எடுக்கப்பட்டதற்கு இரண்டாவது பரிசும் அளிக்கப்படு கிறது. இது 'இலாட்டரி'ச் சீட்டாகும். ஏனெனில், பரிசுகளைப் பெறு வது அதிர்ஷ்டத்தைப் பொறுத்தது. எனவே, சூதாட்டத்தைப் போன்றது.

மாதாந்தரச் சீட்டுகள் நடத்தப்படுகின்றன. இருபது மாதங் களாக மாதம் ரூ. 50 வீதம் கட்டவேண்டும். முதல் மாதத்தில் இருபது பேர்கள் ரூ. 50 கட்டியவுடன் அவர்கள் பெயரை எழுதிய சீட்டுகள் போட்டு ஒரு சீட்டு எடுக்கப்படுகிறது. அந்தச் சீட்டில் வந்த பெயருள்ளவருக்கு ரூ. 1000 கொடுக்கப்படுகிறது. ஆயினும், அவர் அடுத்து வரும் 19 மாதங்களுக்கும் ரூ. 50 வீதம் செலுத்த வேண்டும். இது 'இலாட்டரி' ஆவதில்லை. ஏனெனில், பரிசாகக் கிடைக்கும் தொகை இதில் ஏதும் இல்லை. ஆனால், முதல் மாதம் ரூ. 1000 பெறுபவர் அடுத்த மாதங்களில் எந்தப் பணமும் செலுத்த வேண்டியதில்லை என்றிருந்தால், அது இலாட்டரியேயாகும்.

ஒருவருடைய திறமையைச் சோதிக்கும் முறையில் போட்டி நடத்தி அதற்குப் பரிசுகள் அளிக்கப்பட்டால், அது 'இலாட்டரி' ஆவதில்லை.

உழைக்காமல் ஊதியம் பெறவேண்டும், குருட்டடியாகக் குபேர ஞாக வேண்டும் என்ற தவறான எண்ணம் மக்களில் பெரும்பாலோ ருக்கு உண்டு. மதியைவிட விதியையே பெருமளவு நம்பியிருப்பவர் கள் நம்மில் அநேகர். எனவே, 'ஒன்றெய்தி நூறிழக்கும்' மனப் பான்மை மக்களிடம் மலிந்திருக்கின்றது. சூதாட்டத்தில் இழப்பு வந்துகொண்டேயிருந்தாலும், 'அடுத்தது கிடைக்கும்' என்ற ஆசையால் இழப்பு எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாகின்றதோ அவ் வளவுக்கவ்வளவு சூதாட்டத்தின்மீதுள்ள ஆசையும் அதிகமாகின் றது. 'இழத்தொறூஉம் காதலிக்கும் சூது' வாழ்வினைக் குலைப்ப தாகும்; 'பழகின செல்வமும் பண்பும் கெடுப்ப'தாகும். எனவே, சூதினைக் கருவிற்கொண்ட 'இலாட்டரி'யை நடத்துவதைச் சட்டம் குற்றம் எனக் கொள்ளுகிறது.

## 26. சமய சம்பந்தமான குற்றங்கள்

## (Offences against Religion)

வழிபாட்டிற்குரிய இடம், பொருள் இவற்றை அழித்தல், சேதித்தல், புனிதத்தைக் கெடுத்தல்—சமயத்தைப் பழித்தல்—சமய வழிபாடு, சடங்கு இவற்றில் ஈடுபட்டிருக்கும் கூட்டத்தினருக்கு இடையூறு செய்தல்—வழிபாட்டிடங்களிலும் கல்லறைகளிலும் அத்துமீறி நுழைதல்.

மக்கள் வாழ்விற்கு சமயம் ஓர் அடிப்படையாக அமைகின்றது. சமயக் கொள்கைகளும் நம்பிக்கையும் அவர்களது நல்வாழ்விற்கு வழிகாட்டி நிற்கின்றன. சமுதாய ஒருமைப்பாட்டிற்கும் சமயம் அடிகோலுகிறது என்றால் மிகையாகாது. எனவே, ஒவ்வொரு மனிதனுக்கும் அவனது நம்பிக்கைக்கு ஏற்றவாறு சமய வாழ்க்கை நடத்துவதற்கு உரிமை வேண்டும். அதில் பிறர் தலையிட்டு எவ்விதத் தீங்கும் செய்யக்கூடாது என்று சட்டம் விதிக்கிறது.

நம் நாட்டு அரசியல் அமைப்புச் சட்டத்திலும் மக்களின் சமயக் கொள்கைகளை அரசு போற்றி நடக்கவேண்டுமென்று விதிக்கப்பட்டிருக்கிறது. மதச்சுதந்திரம் ஓர் அடிப்படை உரிமையாகும்.

நம் நாட்டில் பல சமயங்களைப் பின்பற்றும் மக்கள் வாழ்கின்றனர். எல்லா மக்களையும் ஒரே சமயத்தைத்தான் பின்பற்ற வேண்டுமென்று அரசாங்கம் கட்டாயப்படுத்துவது இல்லை. நம் நாட்டு அரசுமுறை சமயச் சார்பற்றதாகும் (secular); எல்லாச் சமயத்தினரையும் ஏற்று நிற்கும் ஏற்றமுடையதாகும். எனவே, எல்லாச் சமயங்களும், எல்லா மதக்கொள்கைகளும் போற்றிப் பாதுகாக்கப்படுகின்றன. ஒவ்வொரு வகுப்பினருக்கும் அவர்களது சமயக் கொள்கைகளின்படி வாழவும், வழிபாட்டை நடத்தவும் உரிமை உண்டு. மக்களின் நல்வாழ்வுக்கு இந்தப் பாதுகாப்பு மிகவும் அவசியமாகும்.

சமயக் கொள்கைகளைப்பற்றி மக்களுக்கு ஆழ்ந்த நம்பிக்கை இருப்பதால், அக் கொள்கைகளை அவமதிப்பது கூடாது. மக்களின் மத உணர்ச்சியைப் புண்படுத்தும் செயல்களால் பொதுஅமைதிக்குப் பங்கம் ஏற்படுகிறது. எனவே, பிறரது சமய உணர்ச்சிகளைப் புண்படுத்தும் வகையில் நடப்பது குற்றமான செயல் என்று சட்டம் விதிக்கிறது.

சமயக் கொள்கைகள் என்றால், பெரும்பாலான மக்கள் பின்பற்றும் இந்து, கிறிஸ்துவ, முகமதியச் சமயங்களாகத்தான் இருக்கவேண்டுமென்ற அவசியமில்லை. ஒரு குறிப்பிட்ட வகுப்பைச் சேர்ந்த சிலர் பின்பற்றும் சமயக் கொள்கைகளாக இருந்தாலும், அவர்களது வழிபாட்டு முறையையோ, கொள்கையையோ அவமதிக்கும் வகையில் எதையும் செய்வது கூடாது.

## வழிபாட்டிற்குரிய இடம், பொருள் இவற்றை அழித்தல், சேதித்தல், புனிதத்தைக் கெடுத்தல்

ஒரு வகுப்பினரின் சமயத்தை அவமதிக்கவேண்டுமென்ற கருத்துடன், அந்த வகுப்பினரின் வழிபாட்டிற்குரிய இடம் அல்லது அவர்கள் புனிதமெனக்-கொள்ளும் பொருள் இவற்றை அழிப்பது, சேதப்படுத்துவது, அதன் தூய்மையைக் கெடுப்பது இச் செயல்கள் குற்றங்கள். இதுபோன்ற செயல்கள் தங்கள் சமயத்தைப் பழிப்ப தாகும் என்று ஒரு வகுப்பினர் கருதுவதற்கு இடமுண்டு என்பதைத் தெரிந்தும் அச் செயல்களைச் செய்தால் அதுவும் குற்றமேயாகும் (295ஆம் பிரிவு). இக் குற்றத்திற்கு இரண்டாண்டுக் காலம் சிறை, அபராதம் தண்டனையாகும்.

விநாயகர்போன்ற உருவம் செய்து, அதைப் பலரும் அறிய உடைப்பது இந்து மதத்தைப் பின்பற்றுபவர்களின் மனத்தைப் புண்படுத்தும் செயல். எனவே, அது குற்றம் என்று அண்மையில் உச்ச நீதிமன்றம் (Supreme Court) தீர்ப்பளித்தது.

**சமயத்தைப் பழித்தல்:** ஒரு வகுப்பினரின் சமய உணர்ச்சியைப் புண்படுத்தவேண்டுமென்ற திடமான தீய எண்ணங்கொண்டு, எழுத்து, பேச்சு, காட்சிச் செயல் (visible representation)இவற்றின் மூலமாகவோ, வேறு வகையிலோ அவ் வகுப்பினரின் சமயத்தை அல்லது சமயக் கொள்கையைப் பழித்தலும், பழிக்க முயலுவதும் குற்றங்கள் (295-A பிரிவு).

இக் குற்றத்திற்கு மூன்று ஆண்டுவரை சிறைத்தண்டனை, அபராதம் விதிக்கலாம்.

பல சமயங்களைப்பற்றி ஆராய்ச்சி செய்யும்பொழுது ஒரு சமயத்தைப்பற்றிக் குறைவாகக் கூறுவது அல்லது எழுதுவது அவசியமாகலாம். ஆனால், அதை அந்த மதத்தினரைப் புண்படுத்த வேண்டுமென்ற திடமான தீய கருத்துடன் (with deliberate and malicious intention) செய்யப்பட்டதாகக் கொள்ள முடியாது; அது குற்றமுமாகாது. ஒரு சமயத்தைச் சீர்திருத்தவேண்டும் என்ற ஆர்வத்தில் எழும் நூல் ஒன்றில் அந்தச் சமயத்தினரின் குறைபாடுகள் கூறப்படலாம். அந்தச் சமயத்தினர் அக் குறைகளை உணர்ந்து திருந்தவேண்டும், அக் குறைகளைப் போக்கவேண்டும் என்ற நல்ல நோக்கத்துடன் அது எழுதப்பெறுகிறது. எனவே, குறைபாடுகளைக் கூறும் அந்த நூல் அந்தச் சமயத்தினர் சிலரின் சமய உணர்ச்சியைப் புண்படுத்துவதாக இருந்தாலும்கூட, அது குற்றமாவதில்லை. ஏனெனில், அந்த நூல் வேண்டுமென்றே புண்படுத்தும் திடமான தீய எண்ணத்தால் எழுதப்பட்டதன்று. இம்மாதிரியான சீர்திருத்தங்களுக்கும், நேரிய ஆராய்ச்சிக்கும் வழி செய்யும் வகையால்தான் இந்தப் பிரிவில், 'சமய உணர்ச்சியைப் புண்படுத்தவேண்டுமென்ற திடமான தீய கருத்துக்'கொண்டு செய்வதுதான் குற்றம் என்பது தெளிவாக்கப்பட்டிருக்கிறது.

## சமய வழிபாடு, சடங்கு இவற்றில் ஈடுபட்டிருக்கும் கூட்டத்தினருக்கு இடையூறு செய்தல்

சமய வழிபாடு அல்லது சமயச் சடங்குகள் இவற்றில் ஈடுபட்டிருக்கும் ஒரு கூட்டத்தினரை வேண்டுமென்று கலைப்பது அல்லது அக் கூட்டத்திற்கு இடைஞ்சல் விளைவிப்பதும் குற்றமாகும் (296ஆம் பிரிவு).

## வழிபாட்டிடங்களிலும், கல்லறைகளிலும் அத்துமீறி நுழைதல்

ஒருவருடைய உணர்ச்சியைப் புண்படுத்தும் அல்லது அவருடைய சமயத்தைப் பழிக்கும் கருத்துடன் வழிபாடு நடக்கும் இடங்கள், கல்லறைகள் (புதைகுழிகள்) இருக்கும் இடங்கள், இறுதிச் சடங்குகள் நடக்கும் இடங்கள் இங்கு அத்துமீறி நுழைதல் குற்றமாகும். இறந்தவரின் உடலைச் சமய முறைப்படி எரிப்பதோ, புதைப்பதோ புனிதச் சடங்காகக் கருதப்படுகிறது. எனவே, அந்த உடலை அவமதிக்கும் வகையில் எந்தச் செயலையும் செய்தல் கூடாது (297ஆம் பிரிவு).

கொலையினாலோ, தற்கொலையினாலோ மரணம் அடைந்தவர்களின் உடலை மருத்துவப் பரிசோதனை செய்து மரணத்தின் காரணத்தைக் கண்டறிவார்கள். இவ்விதச் சவப் பரிசோதனை

கொலைக்குற்றம் செய்தவர்கள்மீது வழக்கிடுவதற்கு அவசியமாகும். இதற்குச் சட்டம் இடமளிக்கிறது. எனவே, இவ்வாறு சவப் பரிசோதனை செய்வது இறந்தவர்களின் உடலை அவமதிக்கும் செயல் ஆவதில்லை.

மத சம்பந்தமான சர்ச்சைகளில் ஒருவர் ஈடுபடலாம். சமய வாதங்களில் கலந்துகொண்டு ஒருவர் காரசாரமாக விவாதிக்கலாம். ஆனால், பிறரின் சமய உணர்ச்சியைப் புண்படுத்தவேண்டுமென்ற ஒரே தீய கருத்துடன் அவர்கள் முன்னிலையில் பேசுவதோ, சைகை காட்டுவதோ கூடாது (298ஆம் பிரிவு).

மத மாற்றங்கள் நம் நாட்டில் நடைபெறுகின்றன. ஒருவருடைய சமயத்திலுள்ள குறைகளை அவரிடம் கூறி அவரை உணர வைத்துதான் அவரைப் புது மதத்திற்குக் கொண்டுவரவேண்டியிருக்கிறது. இந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு மதத்தைப்பற்றிக் குறைகூறுவது அந்த மதத்தினரின் மனத்தைப் புண்படுத்தும் நோக்கத்தால் அன்று. எனவே, அது இந்தப் பிரிவின்படி குற்றமாவதில்லை.

இந்துக்களின் முன்னிலையில் பசுவைக் கொல்வது அல்லது கொல்லப்பட்ட பசுவின் உடலை அவர்கள்முன் எடுத்துச்செல்வது போன்ற செயல்கள் அவர்களது மதக்கொள்கைகளைப் புண்படுத்தும் செயல்கள் என்று தீர்ப்பளிக்கப்பட்டிருக்கிறது.

* • *

உலகில் சமயங்கள் பல இருக்கின்றன. இவற்றில் எந்த மதம் உண்மையானது, எந்த மதம் பொய்யானது; எந்தச் சமயக் கோட்பாடு உயர்ந்தது, எது தாழ்ந்தது என்பதுபற்றி எவரும் இறுதியாகக் கூறுதல் இயலாது. அவரவர்கள் தங்கள் தங்கள் சமயநெறியையொட்டி ஒழுகுகின்றனர். அந்தச் சமயக் கொள்கைகளைப் புனிதமெனப் போற்றுகின்றனர். ஒரு சமயத்தினரின் சடங்குகள், மற்றச் சமயத்தைச் சேர்ந்தவருக்கு மூடத்தனமாகத் தோன்றலாம். ஒரு சமயத்தினர் கனிமனத்துடன் செய்யும் காரியத்தைக் கண்மூடித்தனமான செய்கை என்று மற்றொரு மதத்தினர் கொள்ளலாம்.

ஒரு மதம் உண்மையையொட்டி இருக்கலாம், இல்லாமலும் போகலாம்; ஆனால், அந்த மதத்தைப் பழிக்கும் செயல் அந்த மதத்தினரின் மனத்தைப் புண்படுத்துகிறது என்பது உண்மையானது; மறுக்க முடியாதது. தம் சொத்தை இழந்தவர் துயருறுவதுபோல், மானமிழந்தவர் மயங்குவதுபோல், தம் புனிதச் சமயத்திற்குப் புன்மை சேர்ந்தால் அதை எவரும் பொறுப்பதில்லை.

பொய்ச்சமயக் கொள்கைகளைப் போற்றுதல் வேண்டா எனில், மெய்ச்சமயக் கொள்கைகளும் மெதுவாய் நலிந்துவிடும். சமயங்களனைத்திற்கும் சம வாய்ப்பு அளிப்பதுவே, சமயங்களின் தன்மையைத் தக்கபடி உணர்த்துவதாம். எல்லா மதங்களுக்கும் இடர்ப்பாடு இல்லை எனில், பொல்லாமை அகன்றுவிடும்; பொது வாழ்வு சிறந்துவிடும்.

இது குற்றவியல் சட்டத்தை வகுத்த அறிஞர் குழுவின் ஆய்வுக் கருத்துரையாம்.

'வேறுபடு சமயம் எல்லாம் புகுந்து பார்க்கின்
விளங்கு பரம் பொருளே! நின் விளையாட்டு
அல்லால், மாறுபடும் கருத்தில்லை.........'

என்ற தாயுமானவரின் கருத்துப்படி சமயங்களனைத்திற்கும் சமப் பாதுகாப்பளிக்கின்றது சட்டம்.

# 27. இல்வாழ்விற்கு இடர் விளைக்கும் குற்றங்கள்

## (Of Offences Relating to Marriage)

பிறன் மனை புணர்தல் (adultery)—இது கணவனுக்கு எதிரான குற்றம்—குற்றத்தின் கூறுகள்—கற்பிழந்த மனைவி குற்றவாளி ஆவதில்லை—வழக்கிடும் முறை—கள்ளப் புணர்ச்சிக்கென்று பிறன் மனைவியை அகற்றுதல், மறைத்து வைத்தல்—மறுதுணை மணம்—குற்றத்தின் கூறுகள்—ஏமாற்றி மறுதுணை மணம் புரிதல்—போலித் திருமணச் சடங்குகள்—பொய்மண உறவு காட்டிப் புணர்ந்திடும் ஆணின் குற்றம்.

'இல்லறமல்லது நல்லறமன்று' என்பது ஆன்றோரின் பொன்மொழி. அன்பும் அறனும் பொருந்திய இல்வாழ்க்கையே இவ்வுலக வாழ்வின் பண்பும் பயனுமாக அமைகின்றது.

'அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.' (குறள்—45)

சமுதாய வாழ்வின் அடிப்படையாக அமைவது இல்வாழ்க்கையே ஆகும். அன்புடைய கணவனும் மனைவியும் அருமைக் குழந்தைகளுங்கொண்ட குடும்பங்களே சமுதாயத்தை இணைத்து இனிது நடைபெறச் செய்கின்றன. இன்பமான இல்வாழ்வே சமுதாயத்தின் நல்வாழ்வாகும். எனவே, இல்வாழ்விற்கு இடையூறு விளைவிப்பதைக் குற்றமாகச் சட்டம் கொள்ளுகிறது. அக் குற்றங்கள் பற்றி இனிக் காண்போம்.

### 'பிறன் மனை புணர்தல்' (Adultery)

ஒருவனுக்கு வாழ்க்கைத்துணை அவன் மனைவியேயாவாள். மனைவியின் நற்பண்பே இல்வாழ்க்கைக்கு மங்கலத்தை அளிக்கின்றது. கற்பு என்ற உறுதிநிலை இல்லாளிடம் இருக்கப்பெற்றால், அவளைவிட மேம்பட்ட செல்வம் ஒருவனுக்கு எதுவுமில்லை.

'பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மை யுண்டாகப் பெறின்.' (குறள்—54)

கற்பிழந்த மனைவியைக் கடிந்து ஒதுக்குகிறான் கணவன். 'உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்துதல்' உலக இயல்பு. ஆனால், கற்பிழந்த பெண் கடைநிலை அடைகின்றாள். இல்லற வாழ்க்கையின் இன்பத்திற்கு இல்லாளின் கற்புநிலை இன்றியமை யாததாகும்.

சமுதாயத்தின் நல்வாழ்விற்கு வகை செய்யும் சட்டம் இல் வாழ்விற்கு ஏற்றந்தரும் கற்பினைக் காக்க முற்படுவது அவசிய மாகிறது. எனவே, பிறர் மனை நயப்பதைப் பெருங்குற்றமாகக் கொள்ளுகிறது சட்டம்.

'பிறர் மனை அஞ்சுமின்' என்ற இளங்கோவடிகளின் அறவுரை இன்றைய சட்டத்தின் கட்டளையாகவும் அமைகின்றது. 'பிறனில் விழையும்' பேதையை அறநூல் கண்டிக்கிறது; சட்டம் தண்டிக் கிறது.

'பிறன் மனை புணர்தல்' (Adultery) ஒரு குற்றமான செயல். அக் குற்றத்திற்கு ஐந்து ஆண்டுகள்வரை சிறை அல்லது அபராதம் அல்லது இரண்டும் தண்டனையாக விதிக்கப்படலாம் (497ஆம் பிரிவு).

ஒரு பெண் பிறர் மனைவியாக இருக்கிறாள் என்பதைத் தெரிந்தும் அல்லது அவ்வாறு தெரியக் காரணம் இருந்தும், அவளைப் புணர் பவன் 'பிறன் மனை புணர்தல்' என்ற குற்றத்திற்கு ஆளாகின்றான். ஆனால், அவள் கணவனின் சம்மதத்தைப் (consent) பெற்றோ, அல் லது அவள் கணவனின் மறைமுக இணக்கத்தைத் (connivance) தெரிந்துகொண்டோ இந்த இழிசெயலில் இறங்குபவனைச் சட்டம் குற்றவாளியெனக் கொள்ளுவது இல்லை (497ஆவது பிரிவு).

### இது கணவனுக்கு எதிரான குற்றம்

'பிறற்குரியாள் தோள் தோய்தல்' பேதமையான செயல், அறத்திற்கும் ஒழுக்கத்திற்கும் மாறுபட்ட செயல் என்று அறநூல் கூறுகிறது. சட்டம் அச் செயலைக் கணவனுக்கு எதிரான குற்றமாக (offence against the husband), 'கணவனது உரிமைக்கு ஊறுவிளைக் கும்' குற்றமாகக் கொள்ளுகிறது. மனைவி மனமிசைந்துதான் பிறனது தோள் சேர்கின்றாள். அதனால் மனம் உடைபவன் அவளது கண வன்தானே? மாசுற்ற மனைவியை மனத்தாலும் தீண்டுதல் தகாது என்று உறுதி கொள்பவன் யார்? அவள் கணவன். தன் மனைவாழ் வைக் கெடுத்தவன்மீது வஞ்சினங்கொண்டு பழி தீர்க்க முற்படு பவன் யார்? அவள் கணவன். 'புகழ் புரிந்த இல் இல்லாததால்', தன்னை 'இகழ்வார்முன் ஏறுபோல் பீடுநடை' போட இயலாது தவிப்பவன் யார்? கற்பிழந்த காரிகையின் கணவன்தான். இவ்வாறு

இக் குற்றச் செயலால் பாதிக்கப்பட்டு இல்லற வாழ்வின் இன்பத்தை இழப்பவன் கணவனே ஆகின்றுன். எனவேதான், அந்தக் கணவனது சம்மதத்தோடு அவன் மனைவியின் மாண்பைக் கெடுப்பவனைச் சட்டம் குற்றவாளி எனக் கருதுவதில்லை.

கணவனின் 'சம்மதம்' பெறுவது என்ருல், எழுத்துமூலமாகவோ நேரடியாகவோ பெறவேண்டுமென்பதன்று. கணவன் நடத்தையிலிருந்து அவன் சம்மதத்தை ஊகித்தறியலாம். தன் மனைவியின் தீய நடத்தைக்குக் கணவன் மறைமுகமாக இணக்கம் தெரிவிப்பதும் உண்டு. 'மறைமுக இணக்கம்' என்ருல், அதைப்பற்றித் தெரிந்தும் தெரியாததுபோல் இருத்தலேயாகும். மனைவியின் தீய நடத்தையைக் கண்டும் காணுதவன்போல், பார்த்தும் பாராதவன்போல் கணவன் இருந்தால், அதை அவனது 'மறைமுக இணக்கம்' என்கிறேம். மனைவியைப் பிரிந்து ஒருவன் வாழலாம்; அல்லது அவளை விட்டுவிட்டு தூரத்திலுள்ள வேற்றூருக்குச் சென்றிருக்கலாம். இதை வைத்துக்கொண்டு, அவன் மனைவி கற்பிழப்பதற்குச் சம்மதித்திருக்கிறுன் என்று கூறுதல் தவருகும். ஒரு குறிப்பிட்ட நடத்தைதான் அவனது சம்மதத்தையோ, மறைமுக இணக்கத்தையோ காட்டுகிறது என்று நாம் கூறுதல் இயலாது. அதை அந்தந்தச் சூழ்நிலைகளிலிருந்தே காணவேண்டியிருக்கிறது.

ஒரு பெண் 'பிறரின் மனைவியாக' இருப்பதைக் குற்றவாளி அறிந்திருக்கவேண்டும் என்று கண்டோம். குற்றம் இழைத்தவன், 'அந்தப் பெண்ணிற்குத் திருமணம் நடந்தபொழுது நான் நேரில் பார்க்கவில்லை' என்று கூறித் தப்ப முடியாது. 'அந்தப் பெண்ணின் கணவர் இன்னுர் என்று எனக்குத் தெரியாது' என்று அவன் கூறினுல், அதுவும் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. இந்துப் பெண்களைப் பொறுத்தவரையில், அவர்கள் கழுத்திலுள்ள மாங்கலியத்திலிருந்தும், அல்லது மஞ்சள் நூலிலிருந்தும், அணிகலன்களிலிருந்தும், ஆடையணிவதிலிருந்தும் அவர்கள் மாங்கலியப் பெண்கள் என்பதை அறியமுடிகிறது. கிறித்துவ மதப் பெண்கள் அணியும் 'திருமண மோதிரங்கள்' அவர்களின் நிலையைக் காட்டுகின்றன. இந்தக் கூறுகளையெல்லாம் ஆராய்ந்து, குற்றம் சாட்டப்பட்டவரின் குற்றப் பொறுப்பு உறுதி செய்யப்படுகிறது.

மணமாகாத பெண்ணுடனே, கணவனை இழந்த பெண்ணுடனே கூடி முயங்குபவர் இந்தக் குற்றத்திற்கு ஆளாவது இல்லை.

### குற்றத்தின் கூறுகள்

'பிறன் மனை புணர்தல்' என்ற குற்றத்தில் பின்வரும் கூறுகள் அடங்குகின்றன:

(1) குற்றம் சாட்டப்பட்டவர் பிறன் மனையைப் புணர்ந்தார்;

(2) அந்தப் பெண் பிறன் மனைவியாக இருப்பதைக் குற்றம் சாட்டப்பட்டவர் தெரிந்திருந்தார் அல்லது அவ்வாறு தெரிந்து கொள்ளுவதற்குக் காரணம் இருந்தது;

(3) அச் செயலுக்குக் கணவனின் சம்மதமோ அல்லது மறைமுக இணக்கமோ இல்லை.

இந்த மூன்று கூறுகளும் மெய்ப்பிக்கப்பட்டால்தான் குற்றம் சாட்டப்பட்டவருக்குத் தண்டனை அளிக்கப்படுகிறது.

**கற்பிழந்த மனைவி குற்றவாளி ஆவதில்லை**

பொதுவாக ஒருவர் ஒரு குற்றம் இழைத்தால், அக் குற்றம் செய்வதற்கு உடந்தையாக இருந்த பிறரும் தண்டிக்கப்படுகிறார்கள் என்று கண்டோம். ஒரு குற்றத்திற்கு உடந்தையாக இருப்பதே தனிக் குற்றம் என்பது 108, 109ஆம் பிரிவுகளில் கூறப்பட்டது. பிறரது மனைவியைப் புணர்தல் குற்றம் என்றால், அந்தப் புணர்ச்சிக்கு உதவியாக, உடந்தையாக இருப்பவள் அந்த மனைவி. பிறர் மனைவியின் சம்மதத்தின்பேரிலேயே, அவளுடைய கூட்டுறவின் பேரிலேயே இந்தக் குற்றம் இழைக்கப்படுகிறது. அப்படியெனில், சம்பந்தப்பட்ட பெண்ணும், அந்தக் குற்றத்திற்கு உடந்தையாக இருந்ததற்காகத் தண்டனைக்கு ஆளாகவேண்டுமல்லவா? ஆனால், சட்டம் அவனைக் குற்றவாளியாகக் கொள்ளுவதில்லை. 'பிறன் மனை புணர்தல்' என்ற குற்றத்திற்கு ஒத்திருந்து ஈடுபட்ட பெண், அக் குற்றத்திற்கு உடந்தையாக இருந்ததற்கெனத் தண்டிக்கப்படக் கூடாது என்று 497ஆம் பிரிவில் திட்டமாகக் கூறப்பட்டிருக்கிறது.

நம் நாட்டில் பெண்கள் நிலை தகுந்த முறையில் ஏற்றமடையவில்லை. எத்தனையோ இக்கட்டான நிலைகளிலும், தந்நிலை தடுமாறும் சோதனையான கட்டங்களிலும் அவர்கள் சிக்கிவிடலாம். அறியாமை, வறுமை, பொருளாசை, சபலம் இவைகள் காரணமாக மங்கலப் பெண்கள் மதிமயக்கத்தால் தங்கள் மாண்பினை மறந்துவிடுகின்றனர். எனவே, அவர்களைக் குற்றவாளிகள் எனக் கொண்டு தண்டனையளித்தால், அது சமுதாயத்தின் நன்மையைப் பேணுவதாகாது. மேலும், ஒருமுறை வாழ்க்கையில் தவறி வழுக்கி விழுந்த ஒரு பெண்ணைத் தண்டித்துவிட்டால், மீண்டும் எழுந்து நேர்மை வழியில் நடக்க முடியாதவளாகிவிடுவாள். இவற்றையெல்லாம் கருத்திற்கொண்டு, இந்தியக் குற்றவியல் சட்டத்தைத் தொகுத்த அறிஞர்கள், இக் குற்றத்திற்கு உடந்தையாக இருக்கும் மனைவியருக்கு உய்தி அளித்திருக்கின்றனர்.

பிரான்சு, சீனு முதலிய சில நாடுகளில் இக் குற்றத்திற்கு உடந்தையாக இருக்கும் மனைவியருக்கும் தண்டனை உண்டு.

**வழக்கிடும் முறை**

பிறர் மனைவியைப் புணர்ந்த குற்றவாளிக்கு எவ்வாறு தண்டனை கிடைக்கும்படி செய்வது? திருட்டு, கொலை முதலிய குற்றங்களுக்குப் போலீசில் தகவல் கொடுக்கிறேம். போலீசாரே புலன் விசாரித்து, அதற்குமேல் நீதிமன்றத்தில் குற்றவாளிமீது குற்ற வழக்கு இடுகின்றனர். ஆனுல், 'பிறன் மனை புணர்தல்' குற்றத்தைக் குறித்துப் போலீசார் புலன் விசாரிப்பதில்லை. அதுகுறித்துக் குற்ற நீதிமன்றத்தில் நேரடியாகவேதான் முறையீடு செய்துகொள்ளவேண்டும். அதுவும், அக் குற்றத்தால் மாண்பிழந்த பெண்ணின் கணவன் அல்லது அவன் சார்பில் வேருெருவர்—இவர்களின் முறையீட்டின் பேரில்தான் நீதிமன்றம், இக் குற்றம்பற்றி விசாரணை எடுத்துக் கொள்ளும். இந்த நடைமுறை (procedure)பற்றிக் கிரிமினல் வழக்கு முறைச் சட்டத்தின் 199ஆம் பிரிவு கூறுகிறது.

ஒரு பெண்ணின் கணவன் தன் மனைவியைத் தனது பெற்றேர், தமையன், வேறு உறவினர்கள் இவர்களின் பாதுகாப்பில் வைத்து விட்டு வேற்றூருக்கோ, வெளிநாட்டிற்கோ சென்று இருக்கலாம். இப்பொழுது அந்தப் பெண் எவருடைய பாதுகாப்பில் இருக்கிருளோ, அவர், அந்தப் பெண்ணின் கற்பைக் கெடுத்தவர்மீது நீதிமன்றத்தில் பிராது கொடுப்பதற்குச் சட்டம் இடமளிக்கிறது. அம்மாதிரியே, அந்தப் பெண்ணின் கணவன் பித்துப் பிடித்தவராகவோ, அறிவு முதிராதவராகவோ இருந்தாலும், வேறு ஒருவர் கோர்ட்டில் பிராது கொடுக்கலாம். கணவனன்றிப் பிறர் இவ்வாறு நடவடிக்கை எடுப்பது என்றுல், நீதிமன்றத்தின் அனுமதியைப் பெறவேண்டும். இவ்வாறு வழக்கிடும் முறை அடுத்து வரும் 498ஆம் பிரிவுக் குற்றத்திற்கும் பொருந்தும்.

## கள்ளப் புணர்ச்சிக்கென்று பிறன் மனைவியை அகற்றுதல், மறைத்துவைத்தல் முதலியன

கள்ளப் புணர்ச்சிக்கென்று பிறன் மனைவியை அவளது கணவனிடமிருந்து பிரித்து அழைத்துச் செல்லுதல் அல்லது ஆசை காட்டி அகற்றுதல் (enticing) இதுவும் குற்றமாகும். கணவன் வேறு இடத்திற்குச் சென்றிருந்தால் மனைவி பிறரது பாதுகாப்பில் இருக்கலாம். அவ்வாறு பாதுகாப்பாளராக இருப்பவரிடமிருந்து அவளை அழைத்துச் செல்வதும் குற்றமாகும். பிறன் மனைவியைக் கள்ளப் புணர்ச்சிக்கென்று மறைத்துவைத்தல் (concealment), தடுத்து நிறுத்திவைத்தல் (detention) இவைகளும் குற்றங்கள்.

அந்தப் பெண்ணை அகற்றிச் சென்றவர், மறைத்துவைத்தவர், அல்லது தடுத்து நிறுத்திவைப்பவர் இவர்களுக்கு அவள் பிறர் மனைவி என்பது தெரிந்திருக்கவேண்டும், அல்லது அவ்வாறு தெரிவதற்கான காரணம் இருத்தல் வேண்டும். இந்தக் குற்றத்திற்கு இரண்டு ஆண்டுகள்வரை சிறை அல்லது அபராதம் தண்டனையாகும் (498ஆம் பிரிவு).

பிறன் மனைவியை அகற்றிச் செல்பவர்தான் இவளுடன் கள்ளப் புணர்ச்சியில் ஈடுபடவேண்டும் என்ற அவசியம் இல்லை. அகற்றிச் செல்பவரோ, மறைத்துவைப்பவரோ ஒருவராக இருக்கலாம்; கள்ளப் புணர்ச்சியில் கலந்துகொள்பவர் மற்றொருவராக இருக்கலாம். பெண்ணை அகற்றிச் சென்றவர் அல்லது மறைத்துவைத்தவர் 498ஆம் பிரிவின்படி குற்றவாளி ஆகின்றார்; கள்ளப் புணர்ச்சியில் கலந்துகொண்டவர் 497ஆம் பிரிவின்கீழ்க் குற்றவாளியாகிறார்.

கள்ளப் புணர்ச்சி நேர்ந்தாலும் நேராவிட்டாலும், கடத்திச் சென்ற செயலே குற்றமாகிவிடுகிறது.

பிறன் மனை புணர்ச்சியைத் தடுக்கவேண்டுமெனில், அதற்கு ஆயத்தமாகப் பிறன் மனைவியை அகற்றிச் செல்லுவதையும், மறைத்துவைப்பதையும் குற்றங்களாகக் கொள்ளுவது அவசியமாகிறது. எனவே, அச் செயல்களும் குற்றங்கள் ஆகின்றன.

இவ்வாறு, மங்கலப் பெண்களின் மாண்பான கற்பினைக் காப்பதில் சட்டம் முனைந்து நிற்கிறது.

## ‘மறுதுணை மணம்’

## (Marrying again during the life time of husband or wife)

ஒரு தலைவன், ஒரு தலைவி இருவரும் கருத்தொருமித்து நடத்தும் குடும்ப வாழ்வில்தான் இன்பம் உண்டு. ‘காதலர் இருவர் கருத்தொருமித்து ஆதரவுபட்டதே இன்பம்’ என்பது ஆன்றோர் மொழி.

நாகரிகம் வளராத சமுதாயத்தில் ஆண்கள் பலர் ஒரு பெண்ணை மனைவியாகக் கொண்டிருக்கலாம். இந்தப் பழக்கம் நீண்ட நாட்களுக்கு முன்னரே மறைந்துபோயிற்று. ஆனால், ஓர் ஆண் பல பெண்களை மணந்துகொள்வது என்ற வழக்கம் இன்னும் பூராவாக மறையவில்லை.

1955ஆம் ஆண்டுவரை, நம் நாட்டு வழக்கமுறைப்படி, இந்து சமயத்தைச் சேர்ந்த ஓர் ஆண் எத்தனை பெண்களையும் மணந்து

கொள்ளலாம் என்று இருந்தது. அந்த நிலை இன்று மாறிவிட்டது. 1955ஆம் வருடத்திய இந்து திருமணச் சட்டத்தின்படி, (The Hindu Marriage Act XXV of 1955) இந்து மதத்தைச் சேர்ந்த ஓர் ஆண் ஒரு மனைவியைத்தான் கொண்டிருத்தல் வேண்டும். அந்த மனைவி இறந்த பின்னே, அல்லது அவளை மணவிலக்குச் (divorce) செய்துகொண்ட பின்னேதான் கணவன் மறுமணம் செய்துகொள்ள முடியும். கிறிஸ்துவ மதத்தைச் சேர்ந்தவர்களும் ஒருதார மணவொழுக்கத்தை மதக்கொள்கையாகப் போற்றுகின்றனர். முகம்மதியர்களைப் பொறுத்தவரையில், ஒரு கணவனுக்கு ஒரே வேளையில் நான்கு மனைவியர் இருக்கலாம். அவர் ஐந்தாவதாக இன்னொரு பெண்ணை மணத்தல் கூடாது. முதல் நான்கு மனைவியரில் ஒரு மனைவியை மணவிலக்குச் செய்துவிட்டு, வேண்டுமானால் அந்த இடத்திற்கு மற்றொரு மனைவியைக் கொண்டு வரலாம். இது முகமதியர்களின் சமய நெறி. எனவே, இன்றிருக்கும் சட்டப்படி, நம் நாட்டில் இந்து அல்லது கிறிஸ்துவர் எவரும் ஒரு மனைவி இருக்கும்பொழுது மற்றொரு பெண்ணைத் திருமணம் முடித்தால் அந்தத் திருமணம் செல்லாததாகும். ஒரு முகம்மதியர், நான்கு மனைவிகளிருக்கும்பொழுது மற்றொரு பெண்ணை மணந்தால், இதுவும் செல்லாததாகும். பெண்களைப் பொறுத்தவரை, கணவன் உயிரோடிருக்கையில், எந்தப் பெண்ணும்—இந்து, கிறித்துவ, முகம்மதிய மதத்தைச் சேர்ந்த எந்தப் பெண்ணும்—இன்னொருவரைக் கலியாணம் செய்துகொள்வது சட்டப்படி செல்லத் தக்கதன்று. இவ்வாறு, சட்டப்படி செல்லத்தகாத திருமணத்தைச் சட்டம் தடைசெய்கிறது; அதைக் குற்றமெனக் கொள்ளுகின்றது.

சட்டப்படி செல்லுபடியாகாத ஒரு திருமணத்தில் ஈடுபடுவது சமுதாய வாழ்விற்குக் கேடு பயப்பதாகும். திருமணம் என்பது ஒரு புனிதமான சடங்கு; சமுதாய நல்வாழ்வோடு இணைந்து நிற்கும் செயல். திருமணச் சடங்கில் ஈடுபடுவோர் ஓர் ஆண்மகனும் ஒரு பெண்ணும்தாம் என்றாலும், அவர்களின் கூட்டு வாழ்வு சமுதாயப் பொதுவாழ்வோடு நெருங்கிய தொடர்பு கொண்டதாகும். அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகள் சமுதாயத்தின் உறுப்பினர்களாக, நாட்டின் நற்குடிகளாக விளங்கவேண்டியவர்கள். பெற்றோர்களின் முறையான திருமண உறவில் உதித்த பிள்ளைகளாக இருந்தால்தான், அவர்களின் வமிசா வழியினை உறுதி செய்தல் இயலும். ஒருவருக்கு எவரைத் தகப்பனர் எனக் கொள்வது என்பது பொது நிர்வாகத்திற்கு முக்கியமான காரியமாகும். சட்டப்படி செல்லுபடியாகாத திருமண உறவில் உதித்த பிள்ளைகளின் தந்தைவழியை நிர்ணயிப்பதில் சிக்கல்கள் ஏற்படுகின்றன. தன் கணவன் உயிரோடிருக்கும்பொழுது மற்றொருவனை ஒரு பெண் மணந்து

கொண்டாலும் சரி, தன் மனைவி உயிரோடிருக்கையில் மற்றொரு பெண்ணை ஓர் ஆண் மணந்துகொண்டாலும் சரி, அது சமுதாயத்தின் நல்வாழ்வைக் குலைப்பதுமட்டுமன்றி, அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகளின் எதிர்காலத்தையும் பெரிதும் பாதிக்கின்றது. எனவேதான், 'மறுதுணை மணம்' புரிவதைச் சட்டம் விலக்குகிறது; அதைச் செய்பவர்களைக் குற்றவாளிகள் எனத் தண்டிக்கிறது.

எந்த நாட்டினராயினும், எந்த மதத்தினராயினும், திருமணம் என்கிற சடங்கினைப் புனிதமாகக் கருதுகின்றனர். அச் சடங்கில் ஈடுபடும் ஆணும் பெண்ணும் தங்கள் வாழ்விலேயே அதை ஒரு முக்கியமான, தெய்வத்தன்மை பொருந்திய இணைப்பாக மதிக்கின்றனர். திருமணச் சடங்கிலிருந்து எழும் கணவன்-மனைவி என்ற உறவு முறை குடும்பத்தின் அடித்தளமாக அமைகின்றது. அந்தத் தூய்மையான, தெய்வீக உறவு முறை என்றுமே மாற்றப்பட முடியாதது, உடலுறவாகமட்டுமன்றி உயிருறவாகவும் இருப்பது, இவ்வுலக வாழ்விற்குப் பின்னும் நீடித்து நிலைத்து நிற்பது என்று மதிப்போர் பலருண்டு. கத்தோலிக்கர்களின் சமய நெறிப்படி, மணமக்களுக்குள் ஏற்படும் இந்தப் பிணைப்பினை எந்த நீதிமன்றமும் அறுத்துவிட முடியாது. அவர்களிடை நீதிமன்றத்தின் வழியாகவோ, அல்லது வேறு முறையிலோ திருமண விலக்கு என்பது இயலாததாகும். 1955ஆம் ஆண்டுவரை, இந்து சமயத்தினரில் பெரும்பாலோருக்கு இந்தக் கொள்கையே ஒழுக்க நெறியாகவும், சமய நெறியாகவும் இருந்துவந்தது. எனவே, கணவன்-மனைவி என்ற புனித உறவு முறையை ஏற்படுத்தும் திருமணச் சடங்கு உண்மையானதாக, சட்டத்துக்குப் புறம்பில்லாததாக அமைதல் அவசியமாகும். சட்டப்படி செல்லுபடியாகாத, போலியான திருமணச் சடங்குகள், கணவன்-மனைவி என்ற உறவு முறையை ஏற்படுத்தாத திருமணச் சடங்குகள் சமுதாய நல்வாழ்வை ஏளனம் செய்வனவாக, இழிவுபடுத்துவனவாக அமைகின்றன. எனவேதான், இந்த முறையற்ற திருமணங்களைச் சட்டம் குற்றச் செயலாகக் கொள்ளுகிறது.

**'மறுதுணை மணம்'**

ஓர் ஆணோ அல்லது பெண்ணோ தனக்கு வாழ்க்கைத் துணை இருக்கும்பொழுதே, இன்னொருவரை வாழ்க்கைத்துணையாக ஏற்று மணம் செய்துகொள்ளுவதை 'மறுதுணை மணம்' என்கிறோம். மனைவியுள்ள ஒரு கணவனோ, கணவனுள்ள ஒரு மனைவியோ மறுமணம் செய்து, அந்த மறுமணம் மனைவியோ, கணவனோ

உயிரோடு இருப்பதால் சட்டப்படி செல்லுபடியாகாதது எனில், அது 'மறுதுணை மணம்' என்ற குற்றமாகிவிடுகின்றது.

இது தண்டிக்கத்தக்க குற்றம் என்றும், ஏழு ஆண்டுகள்வரை சிறையோ அபராதமோ இந்தக் குற்றத்திற்குத் தண்டனை என்றும் 494ஆம் பிரிவு கூறுகின்றது.

உறுதுணை இருக்கும்பொழுது மறுதுணை தேடுவதைச் சட்டம் விலக்குகிறது.

இந்தக் குற்றத்திற்குக் கணவனை உயிரோடு கொண்டுள்ள மனைவியோ, மனைவியை உயிரோடு கொண்டுள்ள கணவனோ ஆளாகலாம். அவர்கள் செய்யும் மறுமணம் சட்டப்படி செல்லுபடி யாவதா இல்லையா என்பதைப் பொறுத்தே அக் குற்றம் எழுகின்றது. ஒரு முகம்மதியர் நான்கு மனைவியரை ஏற்றுக்கொள்ளலாம் என்பது இஸ்லாம் மதத்தின் விதி. எனவே, நான்கு மனைவியர் உயிரோடு இருக்கையில் ஐந்தாவதாக மற்றொரு பெண்ணை அவர் மணம் புரிந்துகொண்டால்தான், அந்த மணம் சட்டப்படி செல்லாததாகி விடுகிறது. ஆனால், கிறித்துவ, இந்து சமயத்தைச் சேர்ந்தவர்கள் ஒரு தாரம் இருக்கையில் மறுதாரம் ஏற்பது சட்டப்படி செல்லாத தாகும்.

பொதுவாக ஆங்கிலத்தில் உள்ள 'Bigamy' என்ற சொல்லை 'இருதார மணம்' என்று குறிப்பிடுகிறோம். ஆனால், குற்றவியல் சட்டத்தில் 494ஆம் பிரிவில் கூறப்படும் குற்றம் 'இருதார மணத்தை' மட்டும் குறிப்பதில்லை. முன்னர்க் கூறியபடி முகமதியர் ஒருவர் இருதாரம்மட்டுமன்றி, மூன்று அல்லது நான்கு தாரம் வரை ஏற்றுக்கொள்ளலாம். எனவே, 'இருதார மணம்' என்று இக் குற்றத்தைக் குறிப்பிடுவது பொருத்தமன்று. மேலும், 'தாரம்' என்ற சொல் மனைவியைக் குறிக்கின்றது. எனவே, ஒரு மனைவி இருக்க, மறுமனைவியை ஏற்றுக்கொள்ளும் கணவன்மட்டுமே குற்றத்திற்கு ஆளாகின்றான் என்ற பொருள் படுகின்றது. இது சரியன்று. ஏனெனில், தம் கணவன் உயிரோடு இருக்கையில் மற்றொருவரைக் கணவனாக ஏற்கும் மனைவியும் இக் குற்றத்திற்கு ஆளாகின்றாள். ஆதலால், 'இரு' என்ற சொல்லும், 'தாரம்' என்ற சொல்லும் பொருத்தமற்றவையாகின்றன. எனவே, 'மறுதுணை மணம்' என்பதே பொருத்தமாகும். ஒரு துணை இருக்க மற்றொரு துணையை மணக்க முற்படும் ஆணும் பெண்ணும் இக் குற்றத்திற்கு ஆளாகலாம் என்பதை 'மறுதுணை மணம்' என்ற தொடர் தெளிவாகக் காட்டுகின்றது,

இக் குற்றம் 'மறுதுணை மணம்' ஆவதால், மறுதுணையைச் சேர்த்தல்மட்டும் போதாது; மறுதுணையை மணம் செய்திருத்தல்

வேண்டும். அவ்வாறு மணம் புரியும் செயல்தான் குற்றச் செயல் ஆகின்றது. 'மணம் புரிதல்' என்றால் அந்தந்த மதத்திற்கேற்பத் திருமணச் சடங்கில் ஈடுபடுதல் என்றே பொருளாகும். திருமணச் சடங்கு நடைபெறவில்லையெனில் அது குற்றமாவதில்லை.

தன் மனைவி உயிரோடு இருக்கும்பொழுது ஒருவர் இன்னொரு பெண்ணுடன் கூடி வாழ்கின்றார். அவரை ஆசைநாயகியாகச் சேர்த்துவைத்துக்கொள்கின்றார். இது 'மறுதுணை மணம்' ஆவதில்லை. இது 'கூடா ஒழுக்கம்' ஆகின்றது; ஒழுக்கத்திற்கு மாறுபாடான செயலாகிறது. ஆனால், குற்றம் ஆவதில்லை. அந்தப் பெண்ணை அவர் திருமணம் புரிந்தால்மட்டுமே, அது இந்தப் பிரிவின்படி குற்றமாகும். சட்டத்தால் விலக்கப்பட்ட, செல்லுபடியாகாத திருமணச் சடங்கில் ஈடுபடுவதே குற்றச் செயலாகும்.

ஒரு கணவனும் மனைவியும் தங்களுக்குள்ள மண உறவை நீதிமன்றத்தின்மூலமாக முறித்துக்கொள்ளலாம். அவ்வாறு மண உறவைத் தீர்த்துக்கொண்ட (Divorce) பின் அவர்கள் மறுமணம் செய்துகொள்வது குற்றமாவதில்லை.

ஒரு கணவனைவிட்டு மனைவி பிரிந்துபோய் ஏழு வருடங்கள் ஆகிவிட்டன; மனைவி உயிரோடு இருப்பதாகக் கணவனுக்குத் தகவல் ஏதும் இல்லை என்றால், அந்தக் கணவன் மறுமணம் செய்துகொள்ளலாம். உண்மையிலேயே முதல் மனைவி உயிரோடு இருந்தாலும், கணவனின் மறுமணம் குற்றமாவதில்லை. ஆனால், புதிதாக வரும் மனைவியிடம் கணவன் உள்ள நிலையை எடுத்துக் கூறியிருக்கவேண்டும். இந்த விதி கணவனைப் பிரிந்த மனைவிக்கும் பொருந்தும்.

## 'மறுதுணை மணம்' என்ற குற்றத்தின் கூறுகள்

(1) குற்றம் சாட்டப்பட்டவரின் கணவனோ, மனைவியோ உயிரோடு இருத்தல் வேண்டும்.

(2) அவர் மறுமணம் செய்தல் வேண்டும்.

(3) கணவனோ, மனைவியோ உயிரோடு இருப்பதால், அந்த மறுமணம் சட்டப்படி செல்லாததாக இருத்தல் வேண்டும்.

'மறுதுணை மணம்' புரிந்தார் என்பதாக ஒருவரைக் குற்றவாளி என்று தீர்மானிப்பதற்குமுன் நீதிமன்றம் ஒன்றை முக்கியமாகக் கவனிக்கின்றது. குற்றம் சாட்டப்பட்டவருக்கும், ஏற்கெனவே அவரின் இல்லத் துணையாக இருப்பவருக்கும் சட்டம் ஏற்கும் வகையில் திருமணம் நடந்திருந்ததா என்பதைக் கவனிக்கிறது. எனவே, இது மெய்ப்பிக்கப்படவேண்டும். முன்மனைவி உயிரோடு

இருக்கையில், கணவன் மற்றொரு பெண்ணை மணம் செய்தார் என்று குற்றம் சாட்டப்படுகிறார் என வைப்போம். முன்மனைவி என்று கூறப்படும் பெண்ணிற்கும் குற்றம் சாட்டப்பட்டவருக்கும் ஏற்கெனவே சட்டப்படி செல்லுபடியாகும் திருமணம் நடந்திருக்கிறதா என்பதை நீதிமன்றம் ஆராய்கிறது. அவ்வாறு நடந்திருந்தால்தான் குற்றம் சாட்டப்பட்டவருக்கு ஏற்கெனவே சட்டப்படியான மனைவி இருக்கிறாள் என்பதாகக் கொள்ளமுடியும்; மேலும், இதன் காரணமாக அடுத்த திருமணம் செல்லுபடியாகாது என்பது முடிவு செய்ய இயலும். முதல் திருமணம் மெய்பிக்கப்படவில்லை எனில், அடுத்த திருமணம் சட்டப்படி செல்லத்தக்கதன்று என்பதை அறுதியிட்டுக் கூறுவது முடியாது; ஆதலால், அதைக் குற்றமான செயல் என்று கொள்ளவும் முடியாது. எனவே, குற்றம் சாட்டப்பட்டவரின் முன் திருமணம் சந்தேகத்திற்கு இடமின்றி மெய்ப்பிக்கப்படவேண்டும்.

இக் குற்றத்தால் தண்டனை பெறுபவர்கள் யார்?

ஏற்கெனவே சட்டப்படி திருமணம் செய்துகொண்டுள்ள மனைவி இருக்கும்பொழுது மறுமணம் செய்துகொள்ளும் கணவன் இந்தப் பிரிவுப்படி குற்றவாளியாகின்றார். இதை நன்கு அறிந்திருந்தும் மறுமணத்திற்கு ஒப்புக்கொண்டு மறுமனைவியாக வந்த பெண்ணும் இக் குற்றத்திற்கு உடந்தையாக இருந்ததால், அவளும் குற்றவாளியாகின்றாள். சட்ட முரணான மறுமணத்தை நடத்திவைத்த புரோகிதர், புதுப்பெண்ணின் பெற்றோர்கள், இந்த மணத்தை முன்னின்று நடத்திய மற்றவர்கள் அனைவருமே இக் குற்றத்திற்கு உடந்தையாக இருப்பவர்களாதலால், அவர்களும் தண்டனைக்கு உள்ளாகின்றனர். ஆனால், இவர்களுக்கு முதல் திருமணம்பற்றித் தெரியும் என்பது மெய்ப்பிக்கப்படவேண்டும்.

## ஏமாற்றி மறுதுணை மணம் புரிதல்

ஒருவர் தமக்கு ஏற்கெனவே திருமணம் ஆகியிருப்பதையும், மனைவியோ, கணவனோ உயிரோடு இருப்பதையும் மறைத்து, ஏமாற்றி, மற்றொருவரைத் திருமணம் செய்வதைச் சட்டம் கொடுங் குற்றமாகக் கருதுகிறது. பொதுவாகவே, ஒருவரைப் பிறர் ஏமாற்றிப் பொருள் பறிப்பது குற்றமாகும். இதில் வஞ்சனையாக ஒருவரின் வாழ்வே பாழ்படுத்தப்படுகிறது. இக் குற்றத்திற்குப் பத்து ஆண்டுச் சிறையும் அபராதமும் விதிக்கப்படலாம் (495ஆம் பிரிவு).

## போலித் திருமணச் சடங்குகள்

நெஞ்சத்தில் நேர்மையின்றி, வஞ்சக எண்ணத்தோடு போலியாகத் திருமணச் சடங்கிற்கு உட்படுதலும் குற்றமாகும். ஒருவருக்கு

மனைவி உயிரோடு இருக்கிருள். மறுமணம் செய்வது சட்டப்படி செல்லாது என்று தெரியும். இருந்தாலும் வஞ்சகமாகப் பிறரை ஏமாற்றவேண்டும் என்ற நோக்கத்தோடு மறுமணச் சடங்கில் பங் கெடுத்துக்கொள்ளுகிருர் எனில், அதுவும் குற்றமாகும். இதற்கு ஏழு ஆண்டுகள்வரை சிறைத்தண்டனை உண்டு (496ஆவது பிரிவு).

## பொய்மண உறவு காட்டிப் புணர்ந்திடும் ஆணின் குற்றம்

சட்டப்படி செல்லாத திருமணத்தால் கணவன்–மனைவி உறவு ஏற்படுவதில்லை. ஆயினும், அந்தப் போலித் திருமணத்தில் மணந்து கொண்ட பெண்ணை ஏமாற்றி, அவள் தனது முறையான மனைவி தான் என்று வஞ்சனையால் நம்பச்செய்து அவளோடு உடனுறைதலை யும், அவளோடு கூடி மகிழ்தலையும் குற்றங்களாகச் சட்டம் விதிக் கிறது. வேறு பல வகையிலும் பொய்மண உறவு காட்டி ஒரு பெண் ணைப் புணர்ச்சிக்கு இசையச் செய்யலாம். ஒரு பெண்ணை வஞ் சித்து, பொய்மண உறவை நம்பும்படி செய்து அவளைக் கூடுவது குற்றமாகும். இந்தக் குற்றத்தை இழைக்கும் ஆண்மகனுக்குப் பத்து ஆண்டுகள்வரை சிறைத் தண்டனையும் அபராதமும் உண்டு (493ஆம் பிரிவு).

இந்த முறையில் இல்லற வாழ்வின் தூய்மையையும், புனிதத் தையும், மங்கல மாட்சியான கற்பையும் சட்டம் பாதுகாக்கின்றது.

## 28. எடை, அளவு இவைபற்றிய குற்றங்கள்
### (Offences Relating to Weights and Measures)

நிறுத்தல், நீட்டல், முகத்தல் அளவையில் பொய்க்கருவிகளைப் பயன்படுத்துதல்—பயன்படுத்துவதற்கென்று அவற்றை வைத்திருத்தல்—அக் கருவிகளை ஆக்குதல், விற்றல்.

'தமவும் பிறவும் ஒப்ப நாடிக்
கொள்வதூஉ மிகை கொளாது,
கொடுப்பதூஉங் குறை கொடாது
பல்பண்டம் பகர்ந்து வீசும்'

என்று பட்டினப்பாலையில் வணிகர்களின் சிறப்புக் கூறப்படுகிறது. 'தாம் வாங்குவதை அளவிற்கு மிகுதியாகப் பெறுதல் கூடாது; தாம் கொடுப்பதை அளவிற்குக் குறைத்துக் கொடுத்தல் கூடாது' என்ற வாணிப ஒழுக்கத்தை அந்த நாளிலேயே நம் முன்னோர்கள் போற்றிவந்திருக்கின்றனர்.

பிறர் பொருளையும் தம் பொருள்போலப் பேணிச் செய்தலே வாணிகஞ் செய்வோர்க்கு நன்றாய வாணிகம் என்கிறார் வள்ளுவர்:

'வாணிகம் செய்வோர்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோல் செயின்' (குறள்—120)

'பிறவும் தமபோல் செய்தல்' என்பது கொள்வது மிகையும், கொடுப்பது குறையுமாகாமல் ஒப்ப நாடிச் செய்தலாகும்.

பொதுவாழ்வில் வாணிபம் முக்கிய இடம் பெறுகிறது. வாணிபத்தில் ஈடுபட்டிருப்பவர்கள் தங்களுக்குக் கிடைக்கும் இலாபத்தைக் குறிக்கோளாகக்கொண்டு தொழில் நடத்தினாலும், வாணிபத்தில் நேர்மையும் நாணயமும் அவசியம்.

பொது மக்கள் வாங்கும் பொருள்களை நிறுத்தல் அளவை, முகத்தல் அளவை, நீட்டல் அளவை என்ற அளவு முறைகளின்

அடிப்படையில் வாங்குகின்றனர். இவ்வாறு பொருள்களை அளந்து கொடுப்பதற்குப் பயன்படுத்தப்படும் கருவிகள் சரியானவையாக இருக்க வேண்டும். ஒரு படி அரிசி என்று கூறி ஒரு வியாபாரி முக்கால் படி அளவுள்ள ஒரு படியை வைத்து அளந்து விற்ருர் எனில், அது மக்களை ஏமாற்றுவதே ஆகும். அம்மாதிரியே, நீட்டல் அளவையிலும் நிறுத்தல் அளவையிலும் அளவைக் கருவிகளில் ஏமாற்றுதலும் மோசடியும் இருத்தல் கூடாது. அவ்வாறு இருந்தால், வியாபாரத்தில் நாணயமின்மையும் மக்களிடை நம்பிக்கை யின்மையும் பரவிவிடும். எனவே, இந்த அளவைகளில் மோசடி இருக்கக்கூடாது என்று சட்டம் விதிக்கின்றது.

ஒருவர் மோசடிக் கருத்துடன் பொய்யான நிறுத்தல் கருவியை, துலாக்கோலைப் (தராசு) பயன்படுத்துவது குற்றம். இன்னொருவரை மோசம் செய்யவேண்டுமென்ற கருத்துடன் நிறுத்தல், நீட்டல், முகத்தல் அளவையில் பொய்க்கருவிகளைப் பயன்படுத்தினுல், அது வும் குற்றமாகும். நிறுவைப் படிக்கற்கள், முகவைக்குரிய நாழி, படி முதலியன, நீட்டலளவைக் கோல்கள் இவையெல்லாம் இருக்க வேண்டிய அளவிற்குக் குறைந்து இருக்க, அவற்றை ஒருவர் மற்ருெருவரை ஏமாற்றும் கருத்துடன் பயன்படுத்துதல் குற்றம்.

ஆதலால், ஒரு மீட்டருக்குக் குறைவான நீளமுள்ள ஒரு கோலைத் தமது கடையில் வைத்துக்கொண்டு, அக் கோல் ஒரு மீட்டர் நீள முள்ளது என்று பொய்யாகக் கூறி, அதனுல் துணிகளை அளந்து விற்பது குற்றமான செயலாகும். இக் குற்றங்களுக்கு ஓர் ஆண்டுக் காலம்வரை சிறைத்தண்டனையும் அபராதமும் விதிக்கலாம் (பிரிவு 264, 265).

பொதுவாக, அளவைக் கருவிகளில் அவற்றின் அளவு பொறிக் கப்பட்டிருக்கின்றன. அவ்வாறு பொறிக்கப்பட்டிருக்கும் அளவிற்கும், அந்தக் கருவியின் உண்மையான அளவிற்கும் வேறுபாடு இருக்கும் பொழுதுதான் அவற்றைப் ‘பொய்யான கருவிகள்’ என்று கூறு கிருேம். அளவு எதுவும் பொறிக்கப்படாத கருவியைப் ‘பொய்க் கருவி’ என்று கூறுவதற்கில்லை.

இன்னொருவரை ஏமாற்றுவதற்குப் பயன்படுத்தவேண்டுமென்ற கருத்துடன் அம்மாதிரியான பொய்க்கருவிகளை ஒருவர் வைத்திருப் பதும் குற்றமாகும். பொய்க்கருவிகளை ஒருவர் தயார் செய்வது, அக் கருவிகளை விற்பது, இன்னொருவருக்குக் கொடுப்பது இவையும் குற்றங்கள் (பிரிவு 266, 267).

பொய்யான அளவைக் கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன என்று சந்தேகம் இருந்தால், போலீசார் தம் சரகத்திலுள்ள எந்த

இடத்திலும் நுழைந்து சோதனை நடத்தலாம். பொய்யான அளவைக்கருவிகள் அங்கு அகப்பட்டால், அவற்றைக் கைப்பற்றி, சம்பந்தப்பட்ட மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டிற்கு அனுப்பலாம். குற்ற வழக்குமுறைச் சட்டம் 153ஆம் பிரிவுப்படி இந்த அதிகாரம் போலீசாருக்கு அளிக்கப்பட்டிருக்கிறது.

வாணிப முறை நம்பிக்கையுடனும் நாணயத்துடனும் நடை பெறுவதற்குச் சட்டம் இவ்வாறு வகை செய்கிறது.

## 29. நாணயங்கள், பணநோட்டுகள், அரசாங்க முத்திரைக் காகிதங்கள் இவைகுறித்த குற்றங்கள்

## (Offences Relating to Coins and Government Stamps)

'போலியாகச் செய்தல்' என்றால் என்ன?—நாணயம் என்றால் என்ன?—போலி நாணயங்கள், போலிப் பணநோட்டுகள், போலி முத்திரைக் காகிதங்கள் இவைகளைச் செய்வது, செய்வதற்கு வேண்டிய கருவிகளை வைத்திருப்பது, இவைகளைப் புழங்குவது முதலியன குற்றங்கள்.

ஒரு நாட்டின் பொருளாதார நிலைக்கு அந்த நாட்டின் நாணயச் செலாவணியே அடிப்படையாகும். நாட்டின் பொருளாதாரத் தேவைகளுக்குத் தக்கவாறு அரசு நாணயங்களையும் பணநோட்டுகளையும் வெளியிடுகிறது. தங்கம், வெள்ளி இந்த நாணயங்களை எடுத்துக் கொண்டால், அந்த நாணயங்களில் பொறிக்கப்பட்டிருக்கும் மதிப்பிற்கும், அவைகளில் அடங்கியிருக்கும் உலோகத்தின் இயல்பான மதிப்பிற்கும் வேறுபாடு இருக்கலாம். நாணயத்தில் அடங்கியிருக்கும் உலோக மதிப்பைவிட அதன் செலாவணி மதிப்பு அதிகமாகவே இருக்கும். எனவே, சிலர் பொருள் சேர்க்க வேண்டுமென்ற பேராசையால் கள்ள நாணயங்களைச் செய்ய ஆரம்பிக்கின்றனர்.

தற்காலத்தில் நாணயங்களைவிடப் பணநோட்டுகளே புழக்கத்தில் உள்ளன. கள்ள நாணயங்கள் செய்வதென்றாலாவது உலோகத்தை வாங்க வேண்டும். கள்ளக் கரன்ஸி நோட்டுகளை (currency notes) உண்டாக்குவதென்றால், காகிதமும் அச்சு இயந்திரமும் போதுமன்றோ! கரன்ஸி நோட்டுகளை அரசாங்கம் நுட்பமான இயந்திர சாதனங்களைக்கொண்டு அச்சடிக்கிறது. எனவே, கள்ள நோட்டுகளைப் பிறர் அச்சடிப்பது எளிதன்று. கள்ள நோட்டுகளை எளிதில் கண்டுபிடித்துவிடலாம். எனினும், பேராசையால் உந்தப்பட்டுச் சிலர் இந்தக் கள்ள நோட்டுகளை அடிக்கும் கயமைத் தொழிலில் ஈடுபடுகின்றனர்.

'ஆசைக்கோரளவில்லை.........
அளகேசன் நிகராக அம்பொன் மிக வைத்தபேரும்
நேசித்து ரசவாத வித்தைக்கு அலைந்திடுவர்......'

என்று தாயுமானவர் அன்று பாடிய நிலை என்றும் உலகில் இருப்பதாகும். செம்பைப் பொன்னுக்கும் அன்றைய இரசவாத வித்தை இன்று காகிதத்தைக் கரன்ஸி நோட்டுகளாக்கும் நவீன இரசவாத வித்தையாகிவிட்டது. இதை அரசு தடுக்காவிட்டால், நாட்டின் பொருளாதார நிலை சீர்குலைந்து நாட்டின் நல்லாட்சிக்கு ஆபத்து விளையக்கூடும். எனவே, கள்ள நாணயம், கள்ள நோட்டுகள் அடிக்கும் செயலைக் கடுங் குற்றம் என்று சட்டம் விதிக்கிறது.

## 'போலியாகச் செய்தல்' என்றால் என்ன?

போலியாகச் செய்தல் (counterfeit) என்றால், பிறரை ஏமாற்றும் கருத்துடன் ஒரு பொருளைப்போலத் தோன்றும்படி இன்னொரு பொருளைச் செய்வதாகும். போலியாகச் செய்யப்பட்ட பொருள் அசல் பொருளை எல்லா வகையிலும் ஒத்ததாக இருக்க வேண்டுமென்ற அவசியமில்லை. அசல் பொருளுக்கும் போலிப் பொருளுக்கும் வேறுபாடுகள் இருக்கலாம். கூர்ந்து கவனிக்கும் போது அந்த வேறுபாடுகள் தெரியலாம். பொதுவான தோற்றத்தில் இருபொருள்களும் ஒன்றுபோல் இருந்தால், ஒன்றை மற்றொன்றின் போலி என்று கூறுகிறோம். சாதாரண மக்கள் ஏமாறும் வகையில் இருபொருள்களின் வெளித்தோற்றம் இருந்துவிட்டாலே போதுமானது. அது 'போலியாகச் செய்தல்' (counterfeit) எனப்படும். ஒரு பொருளைப்போலப் போலியாக இன்னொரு பொருளை ஒருவர் செய்தாரானால், அவ்வாறு செய்தது பிறரை ஏமாற்றும் கருத்துடன் தான், அல்லது போலிப்பொருள் பிறரை ஏமாற்றப் பயன்படுத்தப் படலாம் என்பதைத் தெரிந்துதான் என்று சட்டம் அனுமானிக்கிறது. இதுவே போலியாகச் செய்தல் (counterfeit) என்ற சொல்லின் விளக்கமாகும் (28ஆவது பிரிவு).

## நாணயம் என்றால் என்ன?

'நாணயம்' (coin) என்றால் நமது நாட்டு அரசாங்கத்தால் வெளியிடுவதுமட்டுமன்று; உலகிலுள்ள மற்ற அரசுகளின் நாணயங்களையும் இச் சட்டத்தில் வரும் 'நாணயம்' என்ற சொல் குறிக்கின்றது. எனவே, போலி நாணயம் தயாரிப்பது கூடாது என்றால், நம் நாட்டு நாணயங்கள் அல்லது பிற நாட்டு நாணயங்கள் எதையுமே தயாரிக்கக்கூடாது என்பதாகும்.

போலி நாணயங்கள் செய்வது, அவ்வாறு செய்வதற்கு உள்ள செய்முறைகளில் ஏதாவது ஒன்றைச் செய்வது இவை குற்றங்கள்.

பிறரை ஏமாற்றும் கருத்துடன், அசல் நாணயம் ஒன்றை வேறொரு நாணயம்போலத் தோன்றும்படி செய்தலும் 'போலி நாணயம்' செய்வதேயாகும்.

பிறநாட்டு நாணயங்களைப்போலப் போலி நாணயங்கள் செய்தால், அதற்கு ஏழு வருடங்கள்வரை சிறைத்தண்டனை. நம் நாட்டு நாணயம்போலப் போலி நாணயங்கள் செய்தால், அதற்கு ஆயுட் காலச் சிறைத்தண்டனைவரை விதிக்கலாம் (231, 232 பிரிவுகள்).

செய்யப்பட்ட போலி நாணயம் அசல் நாணயத்திலிருந்து சிறிது வேறுபட்டு இருக்கலாம். அசல் நாணயத்திலுள்ள படங்கள் முத்திரைகள், வரைவுகள் இவை போலி நாணயத்தில் சிறிது மாறி யிருக்கலாம். இவ்வாறு மாறியிருப்பதை வைத்து அது போலி நாணயம் இல்லை என்று கூற முடியாது. சாதாரணமாக, ஒருவர் போலி நாணயத்தைக் கண்டு அது அசல் நாணம் என்று நம்பும்படி இருந்தால், அதுவும் கள்ள நாணயம் அடித்தலேயாகும்.

போலி நாணயம் அடிப்பதற்குப் பயன்படுத்தும் நோக்கத்துடன் அதற்கான கருவிகள், வார்ப்புகள் இவைகளைச் செய்வோர், பழுது பார்ப்போர், அல்லது இவைகளை வாங்குவோர், விற்போர் இவர் களும் தண்டனைக்கு உள்ளாகிறார்கள் (233, 234ஆம் பிரிவுகள்).

போலி நாணயங்கள் செய்வதற்கான கருவிகளைப் பயன் படுத்தும் நோக்கத்துடன் ஒருவர் வைத்திருப்பதும் குற்றமாகும். அவ்வாறு வைத்திருந்தால், அவருக்குப் பத்து ஆண்டுகள்வரை சிறைத்தண்டனை விதிக்கப்படலாம் (235ஆம் பிரிவு).

இந்தியாவில் ஒருவர் இருந்துகொண்டு, வெளிநாட்டில் ஒருவர் கள்ள நாணயம் செய்வதற்கு உடந்தையாக இருந்தால், அதுவும் குற்றச் செயலேயாகும் (236ஆவது பிரிவு). போலி நாணயங்களை இறக்குமதி, ஏற்றுமதி செய்வதும் கூடாது (237, 238ஆம் பிரிவுகள்).

போலி நாணயத்தை ஒருவர் மோசடிக் கருத்துடனோ, அல்லது பிறரை ஏமாற்றும் எண்ணம் கொண்டோ இன்னொருவரிடம் கொடுப் பதும், அல்லது பிறரை வாங்கும்படி தூண்டுவதும் கூடாது (239, 240ஆம் பிரிவுகள்).

போலி நாணயங்களை ஒருவர் பிறரை ஏமாற்றும் எண்ணத் துடன் தம்வசம் வைத்திருந்தால், அதுவும் குற்றமாகும். இதற்கு மூன்று வருடங்கள்வரை சிறைத்தண்டனை விதிக்கப்படலாம்

(242ஆம் பிரிவு). இது இந்திய நாணயமாக இருந்தால் ஏழு வருடச் சிறைத்தண்டனைவரை விதிக்கப்படலாம் (243ஆம் பிரிவு).

இந்திய அரசின் நாணயச்சாலைகளிலிருந்து (Mint) நாணய உற்பத்திக் கருவி எதையும் அதிகாரம் இன்றி அகற்றிச் செல்லுதல் குற்றமாகும். அதற்கு ஏழு ஆண்டுவரை சிறைத்தண்டனை உண்டு (245ஆவது பிரிவு).

அசல் நாணயங்களில் உள்ள உலோகத்தின் எடையையோ அல்லது அந்த உலோகச் சேர்க்கையையோ மாற்றுவதும் குற்றமாகும் (247ஆம் பிரிவு).

வேறொருவகை நாணயமாகப் பிறர் நினைத்து ஏமாறும்படி செய்யும் எண்ணத்துடன் அசல் நாணயங்களின் தோற்றத்தை மாற்றுவதும் குற்றம் (249ஆவது பிரிவு).

எடையிலும் உலோகச் சேர்க்கையிலும் மாற்றப்பட்ட நாணயங்கள், தோற்றத்தில் மாற்றப்பட்ட நாணயங்கள் இவைகளை ஒருவர் வேண்டுமென்றே ஏமாற்றும் நோக்கத்துடன் தம்வசம் வைத்திருப்பதும், பிறரிடம் அதைக் கொடுப்பதும் குற்றங்களாகும் (250, 251ஆம் பிரிவுகள்).

போலி நாணயம் ஒன்றை நாம் தெரியாமல் பிறரிடமிருந்து பெற்றுவிடுகிறோம். நம்வசம் வந்தபின் அது கள்ள நாணயம் என்று தெரியவருகிறது. நம்மைத்தான் பிறர் ஏமாற்றிவிட்டாரே, நாமும் இன்னொருவரை ஏமாற்றி இந்த நாணயத்தைக் கொடுத்துவிடுவோம் என்ற எண்ணங்கொண்டு, அந்த நாணயத்தை இன்னொருவரிடம் கொடுத்தால் அது குற்றமாகும். எனவே, ஒரு நாணயத்தை நாம் பெறும்பொழுது நல்ல நாணயம் என்று நம்பி வாங்கியிருந்தாலும், அதற்குப் பிறகு அது கள்ள நாணயம் என்று தெரிந்துவிட்டால், அதைப் பிறரிடம் செலுத்த முற்படுவது கூடாது. கள்ள நாணயப் புழக்கத்தைத் தடுப்பது சட்டத்தின் நோக்கம். எனவே, கள்ள நாணயம் என்று தெரிந்தபின் அதைச் செலாவணியாக்க முற்படுவதைச் சட்டம் தடைசெய்கிறது (254ஆவது பிரிவு).

கள்ள நாணயந்தான் என்பதைத் தெரிந்துகொண்டே அதைத் தாம் பெற்று மீண்டும் இன்னொருவருக்குக் கொடுத்தால், அதற்கு அதிகத் தண்டனை; கள்ள நாணயம் என்று தெரியாமல் அதைப் பெற்று அதன்பின் அது கள்ள நாணயம் என்பதை அறிந்து மீண்டும் இன்னொருவரிடம் அதைச் செலுத்த முயன்றால், அதற்குக் குறைந்த தண்டனை. எனவே, ஒரு நாணயம் கள்ள நாணயம் என்பதைத் தெரிந்தபின் அதைப் பிறரிடம் செலுத்துவது, செலுத்த முற்படுவது கூடாது.

**போலிப் பணநோட்டுகள்:** போலி நாணயங்கள் வார்ப்பது எவ்வாறு குற்றமோ, அவ்வாறே போலி 'கரன்ஸி நோட்டுகளை' (Currency notes) அச்சடிப்பதும் குற்றமாகும். அரசாங்கத்தாரால் வெளியிடப்படும் பண நோட்டுகள் 'கரன்ஸி நோட்டுகள்' (Currency notes) என்றும், பாங்குகளால் வெளியிடப்படும் நோட்டுகள் 'பாங்கு நோட்டுகள்' (Bank-notes) என்றும் கூறப்படுகின்றன. போலிக் கரன்ஸி நோட்டுகள், போலி பாங்கு நோட்டுகள் இவைகளை அச்சடித்தல் அல்லது அவ்வாறு அச்சடிப்பதற்கு வேண்டும் செய்முறைகளில் ஏதாவது ஒன்றைச் செய்தல் இவையும் குற்றமாகும். இதற்கும் ஆயுட்காலச் சிறைத்தண்டனைவரை விதிக்கப்படலாம் (489-A பிரிவு).

இந்தப் போலி நோட்டுகளை அசல் நோட்டுகள் என்று கூறி, ஏமாற்றும் நோக்கத்துடன் வாங்குபவர், விற்பவர் இவர்களும் மேலே கூறியபடி தண்டனைக்கு ஆளாகிறார்கள். போலி கரன்ஸி நோட்டுகளையும் பாங்கு நோட்டுகளையும் அவைகள் போலியானவை என்பது தெரிந்தும், உண்மையான நோட்டுகளாக அவைகளைப் பயன்படுத்தும் நோக்கத்துடன் தம்வசம் வைத்திருப்பது குற்றமாகும். போலி நோட்டுகள் அச்சடிப்பதற்கான இயந்திரங்களையும் கருவிகளையும் செய்வது, வாங்குவது, விற்பது கூடாது. வைத்திருப்பதும் கூடாது (489–B, C, D பிரிவுகள்.)

மோசடிக் கருத்து ஏதுமின்றி அசல் நோட்டுகளைப்போல அச்சடித்து அல்லது புகைப்படம் எடுத்து அதைப் புழங்குவதும் குற்றமாகும். எனவே, அசல் நோட்டுகளைப்போலத் தோற்றம் அளிக்கும்படி இன்னொன்றைச் செய்வதோ, அதைப் பிறரிடம் கொடுப்பதோ குற்றம் ஆகிறது. அவ்வாறு போலியாக உள்ள நோட்டில் ஒருவர் பெயர் அச்சடிக்கப்பட்டிருந்தால், அவர் இந்தக் குற்றத்திற்கு ஆளாகிறார். அந்தப் போலி நோட்டைப் புகைப்படம் எடுத்ததோ, அல்லது அச்சடித்ததோ யார் என்று போலீசார் விசாரித்தால், அதற்கு அந்த நோட்டில் யாருடைய பெயர் அச்சடிக்கப்பட்டிருக்கிறதோ அவர் உதவி செய்யவேண்டும்.

சாதாரணமாக, வியாபார விளம்பரத்திற்கென்ற கருத்துடன் கரன்ஸி நோட்டுகள் மாதிரியாகவும், பாங்கு நோட்டுகள் மாதிரியாகவும் அச்சடிக்கப்படுகின்றன; அல்லது அசல் நோட்டுகளைப் புகைப்படம் எடுத்து அந்தப் புகைப்படங்கள் அச்சிடப்படுகின்றன. இவ்வாறு அச்சடிக்கப்படுவது போலி நோட்டுகள் தயாரிக்கவேண்டுமென்ற கெட்ட கருத்துடன் அன்று. இருந்தும், நம் நாட்டில் படிக்கத் தெரியாதவர்கள் அதிகமாக இருப்பதால், இவ்வித வியாபார விளம்பர நோட்டுகளும் மக்களை ஏமாற்றிவிடலாம். எனவே,

மோசடிக் கருத்துடன் கள்ள நோட்டு அடித்தல் கடுங் குற்றம் என்று சட்டம் கூறியிருந்தாலும், மோசடிக் கருத்து இன்றி இவ்விதமாகப் போலித் தோற்றமளிக்கும் நோட்டுகளை அச்சிடுவதும் வெளியிடுவதும் கூடாது என்று 1943ஆம் வருடம் சட்டம் இயற்றப்பட்டது (489-E பிரிவு). அசல் நோட்டுகளை ஒத்த நோட்டுகளை அடித்து விநியோகம் செய்வதும் குற்றமெனக் கொண்டு ரூ. 100 வரை அபராதம் விதிக்கலாம் என்று சட்டம் கூறுகிறது.

'கரன்ஸி நோட்டுகள்' என்றால் நம் நாட்டில் அரசாங்கத்தால் வெளியிடப்படும் நோட்டுகள்மட்டுமல்ல; உலகத்தில் உள்ள எந்த அரசால் வெளியிடப்படும் நோட்டுகளும் 'கரன்ஸி நோட்டு' என்ற சொல்லில் அடங்குவன. அம்மாதிரியே உலகில் எந்த பாங்கியால் வெளியிடப்பட்ட நோட்டும் 'பாங்கி நோட்டு' எனப்படுகிறது.

ஆகவே, போலி நாணயங்களையும் போலி கரன்ஸி நோட்டுகளையும் தயாரிப்பது, விநியோகிப்பது, வைத்திருப்பது, அவைகளைச் செய்வதற்கு வேண்டிய கருவிகளைச் செய்வது, விநியோகிப்பது, வைத்திருப்பது எல்லாமே குற்றங்கள் ஆகின்றன. இவை கடுந் தண்டனைக்குரிய குற்றங்கள்.

**அரசாங்க முத்திரைக் காகிதங்கள்:** நாணயம், கரன்ஸி நோட்டு இவைகளைப்போல அரசாங்க முத்திரைக் காகிதங்களும் விலைமதிப்பு உள்ளவை. ஒப்பந்தங்கள், கிரயப் பத்திரங்கள் முதலியன அரசாங்க முத்திரைக் காகிதங்களிலேயே எழுத வேண்டுமென்று சட்டம் விதிக்கின்றது. அம்மாதிரியே நீதிமன்றங்களில் வழக்கிடும்போது அதற்குள்ள கட்டணத்தை நீதிமன்ற முத்திரைக் காகிதங்களாகக் (Court fee stamps) கொடுக்கவேண்டுமென்று சட்டம் கூறுகிறது. இதுபோன்றே தபால் ஸ்டாம்புகளும் உள்ளன. இந்த முத்திரைக் காகிதங்கள் விலைமதிப்பு உள்ளமையால், இவைகளைப் பிறர் போலியாக அச்சிடக்கூடாது என்று சட்டம் விதிக்கின்றது (255ஆவது பிரிவு).

போலி முத்திரைக் காகிதங்கள் செய்வது, அல்லது அதற்கான செய்முறைகளில் ஒன்றைச் செய்வது—இதற்கு ஆயுட்காலச் சிறைத் தண்டனைவரை அளிக்கப்படலாம்.

ஒரு குறிப்பிட்ட மதிப்புள்ள அரசாங்க முத்திரைக் காகிதத்தைத் திருத்தி வேறு மதிப்புள்ளதாகக் காட்டுவதும் குற்றமாகும். போலி முத்திரைக் காகிதங்கள் செய்வதற்கான கருவிகள், சாமான்கள் இவைகளைக் கெட்ட எண்ணத்துடன் வைத்திருப்பதும் குற்றச் செயலாகும். அவைகளை வாங்குவது, விற்பது, பிறருக்கு அளிப்பது இவைகளும் குற்றமாகும்.

போலி முத்திரைக் காகிதங்களைத் தெரிந்தே விற்பது, விற்க முயலுவது, அவைகளை உண்மையானவை என்று பயன்படுத்தும் நோக்கத்துடனோ அல்லது விற்கும் எண்ணத்துடனோ வைத் திருப்பது இவையும் குற்றங்கள் (258, 259ஆம் பிரிவுகள்).

முத்திரைக் காகிதம் போலியானது என்று தெரிந்து அதை உபயோகப்படுத்துவதும் குற்றம் (260ஆவது பிரிவு).

அரசாங்கத்திற்கு நட்டம் விளைவிக்கவேண்டுமென்ற நோக்கத் துடன் ஒரு முத்திரைக் காகிதத்தின்மேல் உள்ள எழுத்தை வேண்டுமென்றே அழிப்பதும், ஒரு முத்திரைக் காகிதத்தின் மேல் போட்ட முத்திரைகளை அழித்து மாற்றுவதும் குற்றச்செயல்கள் (261ஆம் பிரிவு).

மோசடிக் கருத்துடனோ, அரசாங்கத்திற்கு நஷ்டம் விளைவிக்க வேண்டுமென்ற கருத்துடனோ ஏற்கெனவே பயன்படுத்தப்பட்ட முத்திரைக் காகிதங்களை மீண்டும் உபயோகப்படுத்துவதும் குற்ற மாகும் (262ஆவது பிரிவு).

தபால் காரியங்களுக்காகப் போலி ஸ்டாம்புகளைப் பயன்படுத்து வது, சரியான காரணம் இன்றி அவைகளைத் தம்வசம் வைத் திருப்பது, போலி ஸ்டாம்புகள் செய்வதற்கு வேண்டிய கருவிகளை யும் சாமான்களையும் தம்வசம் வைத்திருப்பது இவைகளும் குற்ற மாகும் (263-A பிரிவு).

முத்திரைக் காகிதங்கள் (Governm^nt Stamps) அரசாங்க வருவாய்க்கு ஆதாரமானவை. சொத்துகளை விற்பது, ஒப்பந்தம் செய்துகொள்ளுவது, வழக்கிடுவது, இன்னும் பல காரியங்களுக்கு முத்திரைக் காகிதங்கள் சட்டப்படி அவசியமாகின்றன. இவை போலியாகத் தயாரிக்கப்பட்டுவிட்டால் அரசாங்க வருமானம் பெரிதும் பாதிக்கப்பட்டுவிடும். எனவே, அரசாங்க முத்திரைக் காகிதங்களைப் போலியாகத் தயார்செய்வது, அவைகளை மீண்டும் உபயோகிப்பது முதலிய செயல்களைக் குற்றங்கள் எனச் சட்டம் விதிக்கிறது.

இவ்வாறு போலி நாணயங்கள், போலிப் பணநோட்டுகள், போலி முத்திரைக் காகிதங்கள் இவைகள் தயாரிக்கப்படுவதையும் புழங்கப்படுவதையும் சட்டம் தடைசெய்கிறது.

# 30. ஆவணங்கள்குறித்த குற்றங்கள்
## (Offences Relating to Documents)

உரிமைகளுக்கும் கடமைகளுக்கும் ஆவணமே சான்ருகிறது—'ஆவணம்' என்ருல் என்ன?—பொய்யாவணம் என்ருல் என்ன?—'பொய் ஆவணம் புனேதல்' என்ருல் என்ன?—உதாரணங்கள்—தம்முடைய கையொப்பம் இட்டே ஒருவர் 'பொய்யாவணம் புனேதல்' குற்றத்திற்கு ஆளாகலாம்—புனேயப்பட்ட பொய்யாவணத்தின் தன்மைக்குத் தக்க வாறு தண்டனே அளிக்கப்படுகிறது—பொய்க்கணக்கு எழுதுதல்—பொய் யாவணத்தை மெய்யாவணமாகப் பயன்படுத்தல்—மெய்யாவணத்தை அழித்தலும் அகற்றலும்.

### உரிமைகளுக்கும் கடமைகளுக்கும் ஆவணம் சான்ருகிறது

நாம் ஒரு சொத்தை வாங்குகின்ருேம் எனில் அதற்கு ஒரு சான்று வேண்டும். எனவே, அச் சொத்தை விற்பவர் நமக்கு விற்ற தற்குச் சான்ருக ஓர் ஆவணம் (பத்திரம்—document) எழுதித்தரு கின்ருர். நூறு ரூபாய்க்கு அதிகமான மதிப்புள்ள நிலம், வீடு போன்ற அசையாப்பொருளே நாம் விலைக்கு வாங்குவதென்ருல், அதற்கு எழுத்துமூலமாக ஆவணம் வேண்டும் என்பது சட்டம். சட்ட முறையாக எழுதப்பட்டுப் பதிவு செய்யப்பெற்ற ஆவணமே நாம் அந்தச் சொத்தை விலைக்கு வாங்கியதற்குச் சட்டப்படியான சான்ருக இருக்கின்றது. விலைக்கு வாங்கிய நமக்கு அச் சொத்தின் மீது உரிமை வந்ததையும், விற்றவருக்கு அதன்மீதிருந்த உரிமை மறைந்ததையும் அந்த ஆவணமே காட்டுகிறது.

நாம் ஒருவருக்குக் கடனுக ஆயிரம் ரூபாய் கொடுக்கிருேம். கடன் வாங்கியவர் நமக்கு ஒரு புரோநோட்டு எழுதிக்கொடுக்கிருர். நாம் கொடுத்த கடனே வரப்பற்றுவதற்கு நமக்குள்ள உரிமையையும், கடனைத் திருப்பித்தரவேண்டிய அவருடைய கடமையையும் காட்டும் சான்ருக அந்தப் புரோநோட்டு அமைகின்றது.

நாம் குடியிருக்கும் வீட்டிற்குக் கொடுக்கவேண்டிய வாடகைப் பணத்தை வீட்டின் சொந்தக்காரரிடம் கொடுத்து ரசீது பெற்றுக் கொள்ளுகிறோம். நாம் வாடகைப் பணத்தைக் கொடுத்ததற்குச் சான்ருக அந்த ரசீது இருக்கிறது.

இரண்டு நபர்கள் தங்களுக்குள் ஒப்பந்தம் செய்துகொண்டு ஒரு பத்திரம் எழுதிக்கொள்கின்றனர். அந்தப் பத்திரமே ஒப்பந்தப்படி அவர்களுக்குள்ள உரிமையையும் கடமையையும் காட்டும் சான்ருக இருக்கிறது.

ஒருவர் மற்ருெருவருடைய கடையிலிருந்து கடனுகச் சாமான் களை வாங்குகிருர். இது கடைக்காரரின் கணக்குப் புத்தகத்தில் எழுதப்படுகிறது. கடனுகச் சாமான்களை விற்றதற்குச் சான்ருகக் கடைக்காரரின் கணக்குப் புத்தகம் பயன்படுகிறது.

இவ்வாருக, மக்கள் ஒருவருக்கொருவர் செய்துகொள்ளும் காரியங்களுக்கும், அவர்களுக்குள் ஏற்படும் ஒப்பந்தங்களுக்கும், இதர நடவடிக்கைகளுக்கும் சான்ருக அவர்களிடை எழும் ஆவணங்கள் அமைகின்றன. மக்களிடை வழக்குகள் தோன்றிவிட்டால், இந்த ஆவணங்களே பெரும்பாலும் அடிப்படைச் சான்ருக நீதிமன்றங் களில் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன.

இந்த வகையில் ஒருவருடைய உரிமைக்கும், கடமைக்கும், தகுதிக்கும் உற்ற சான்ருக ஆவணங்கள் அமைவதால், நேர்மை யின்றிப் பிறர் பொருள் பற்றக் கருதுவோரும் மோசடியாளர்களும் பொய்யாவணங்களைத் (false documents) தயாரிக்கின்றனர். அந்தப் பொய்யாவணங்களைப் பயன்படுத்திப் பிறருக்குக் கேடு விளைக்கவோ, தமக்கு ஊதியம் கிடைக்கவோ வகை செய்கின்றனர். இதனல் சமுதாய வாழ்விற்குப் பெருங்கேடு விளைகின்றது.

இராமன் தனக்கு ஆயிரம் ரூபாய்க்குப் புரோநோட்டு எழுதிக் கொடுத்திருப்பதாகப் பொய்கூறிக் கோபாலன் இராமன்மீது வழக் கிடுகின்ருன். கோபாலன் நீதிமன்றத்தில் காட்டும் புரோநோட்டில் உள்ள கையெழுத்து உண்மையில் இராமனுடையது அன்று. ஆனல், அது இராமன் கையெழுத்துப்போலவே தோன்றுகிறது. புரோ நோட்டை உண்மையென்று நம்பி நீதிமன்றம் இராமன் ஆயிரம் ரூபாய் கோபாலனுக்குக் கொடுக்கவேண்டியதுதான் என்று கூறித் தீர்ப்பளித்துவிடின், இராமனுக்கு முறையின்றி நட்டம் ஏற்படுகிறது; அநீதி விளைகின்றது. இராமன் உண்மையிலேயே நூறு ரூபாய்க்குப் புரோநோட்டு எழுதிக்கொடுத்திருக்கிருன் என்று வைப்போம். அந்த நோட்டில் ரூ. 100/- என்று எழுதியிருந்ததைக் கோபாலன் ரூ. 1000/- என்று மாற்றி எழுதிவிட்டான் என்று வைப்போம்.

அவ்வாறு மாற்றி எழுதிய நோட்டைப் பயன்படுத்திக் கோபாலன் நீதிமன்றத்தில் தீர்ப்புப் பெற்றுவிடுகிறுன் எனில், இப்பொழுதும் இராமனுக்கு முறையில்லா நட்டம் விளைகின்றது. இவ்வாறு பொய்க்கையெழுத்திட்டுப் பொய்யாகப் புரோநோட்டுத் தயார்செய் வதும், மெய்யான புரோநோட்டில் பொய்யாக மாற்றி எழுதுவதும் பிறருக்குப் பெருங்கேடு விளைவிப்பன.

ஒருவர் பீ.ஏ. தேர்வு பெற்றிருக்கிருர் என்று பல்கலைக்கழகம் ஒரு சான்றிதழ் அளிக்கிறது. அவருடைய தகுதியைக் காட்டும் சான்ருக அந்தச் சான்றிதழ் இருக்கிறது. பீ.ஏ. தேர்வு பெருத ஒருவர் போலிச் சான்றிதழைத் தயாரித்து வைத்துக்கொண்டு, அதைத் தமக்கு வேலை தேடிக்கொள்ளுவதற்குப் பயன்படுத்திஞல், எவ்வளவு மோசடியான நிலை விளைகிறது?

எனவே, மோசடியாகப் பொய் ஆவணங்கள் தயாரிக்கப்படு வதைச் சட்டம் தடைசெய்யவில்லையெனில், நேர்மையான வாழ்வு இயலாததாகிவிடும். மக்களிடையுள்ள சமுதாய உறவு, வணிக உறவு இவைகளில் குழப்பமேற்படும். சூழ்ச்சிக்காரரின் மோசடி களால் பலரும் ஏமாற்றப்படலாம்.

ஆதலால், பொய் ஆவணங்கள் தயாரித்தலைப் பெருங்குற்ற மெனச் சட்டம் விதிக்கின்றது.

## 'ஆவணம்' (Document) என்ருல் என்ன?

சட்டத்தில் 'ஆவணம்' என்ற சொல் எதையெல்லாம் குறித்து நிற்கிறது என்பதைக் காண்போம். 'ஆவணம்' (document) என் ருல் என்ன என்பதைச் சட்டத்தின் 29 ஆம் பிரிவு விளக்குகிறது.

ஒரு குறிப்பிட்ட காரியத்திற்குச் சான்ருக இருப்பதை 'ஆவணம்' என்கிருேம். அது எண்ணுலோ, எழுந்தாலோ, குறியீடுகளாலோ வரையப்பெறலாம். அது காகிதத்தின்மீதோ அல்லது வேறு பொருள்களின்மீதோ வரையப்பெறலாம்.

சான்ருகப் பயன்படுத்தக் கருதியது அல்லது சான்ருகப் பயன் படத்தக்கது ஆவணமாகிறது. அது ஒரு நீதிமன்றத்தில் சான்ருகப் பயன்படுத்தப்படவேண்டும் என்ற அவசியம் இல்லை.

அதில் உள்ள எண்களும், எழுத்துகளும், குறியீடுகளும் எந்தக் கருவிகளைக்கொண்டும் எந்த முறையிலும் ஆக்கப்பெறலாம்.

எனவே, ஓர் ஒப்பந்தத்தைக் காட்டும் உடன்படிக்கைப் பத்திரம் ஓர் ஆவணம் ஆகும். 'செக்' (cheque—காசோலை) ஓர் ஆவணம். ஒருவர் மற்றவருக்கு எழுதிய கடிதம் ஓர் ஆவணம். நில

அமைப்பைக் காட்டும் படம் (map), நில அளவுகளைக் காட்டும் படம் (plan) இவையும் ஆவணங்கள்.

இவை எழுதுகோலால் எழுதப்படலாம்; கருவிகளைக்கொண்டு செதுக்கப்படலாம்; அச்சடிக்கப்படலாம்; 'போட்டோ' (photo) படமாக எடுக்கப்படலாம்.

உலோகத் தகட்டில் செதுக்கப்பட்ட எழுத்தும் எண்ணும் ஆவணங்கள்; வரைபடங்களும் ஆவணங்கள்.

காட்டிலாகாவினர் மரங்களின்மீது எண்களைப் பொறித்திருந்தனர். அவ்வாறு பொறிக்கப்பட்டவை 'ஆவணங்கள்' என்பது தீர்ப்பு.

எந்தப் பொருளின்மீதும் எழுத்துகளாக, எண்களாக, குறியீடுகளாக எந்த வகையிலாவது பொறிக்கப்பெற்றதும், ஒரு காரியத்திற்குச் சான்ருகப் பயன்படுத்தவெனக் கருதப்படுவது அல்லது சான்ருகத்தக்கது எதுவும் 'ஆவணம்' எனப்படுகிறது.

## 'பொய் ஆவணம்' (False Document) என்ருல் என்ன?

இனி, பொய்யான ஆணவம் என்று எதைக் கூறுகிரும் என்று பார்ப்போம்.

(i) (a) ஒன்றை எழுதிக்கொடுக்காத ஒருவர் எழுதிக்கொடுத்ததாகவோ;

(b) எழுதுவதற்கு அதிகாரமளிக்காத ஒருவர் அதிகாரமளித்து அது எழுதப்பட்டதெனவோ;

(c) ஒன்று எழுதப்படாத காலத்தில் அது எழுதப்பட்டதெனவோ

பிறரை நம்பவைக்கவேண்டும் என்ற கருத்தோடு, நேர்மையின்றி அல்லது மோசடியாக ஓர் ஆவணத்தை உண்டாக்குதல், அதில் கையெழுத்து, குறி அல்லது முத்திரை இடுதல்;

(ii) தானே அல்லது பிறரோ எழுதிக்கொடுத்த ஆவணத்தில், நேர்மையின்றி அல்லது மோசடியாக, அடித்தல் முதலியனமூலம் முக்கியமான மாற்றத்தைச் செய்தல்;

(iii) ஒரு பத்திரத்தில் எழுதியிருப்பது என்ன என்ருே அது என்ன பத்திரம் என்ருே தெரியாத மனநிலையிலுள்ள சித்த சுவாதீனம் இல்லாதவர், குடிபோதையில் இருப்பவர், ஏமாற்றப்பட்டவர் இவர்களை அந்தப் பத்திரத்தில் கையெழுத்திடும்படி, முத்திரை

வைக்கும்படி, எழுதி நிறைவேற்றும்படி அல்லது மாற்றி எழுதும்படி செய்தல்;

இந்த வகையான செயல்களால் தயாரிக்கப்பட்ட ஆவணங்களைப் பொய் ஆவணங்கள் (false documents) என்று கூறுகிறோம் (464ஆம் பிரிவு).

## 'பொய் ஆவணம் புனைதல்' (Forgery) என்றால் என்ன?

(1) பொதுமக்களுக்கோ அல்லது தனி ஒருவருக்கோ கேடு அல்லது தீங்கு விளைவித்தல்;

(2) ஒரு பாத்தியதையை அல்லது உரிமையை நிலைநாட்டுதல்;

(3) ஒருவரைப் பொருளைக் கொடுக்கும்படி செய்தல்;

(4) (வெளிப்படையான அல்லது உட்கிடையான) ஒப்பந்தம் செய்துகொள்ளல்;

(5) மோசடி செய்தல் அல்லது மோசடி செய்வதற்கான வகை செய்தல்;

இவற்றில் ஒன்றைச் செய்யக் கருதி, ஒருவர் ஒரு பொய்யாவணத்தை அல்லது பொய்யாவணத்தின் ஒரு பகுதியைத் தயாரிப்பது 'பொய்யாவணம் புனைதல்' (forgery) என்ற குற்றமாகும் (463ஆவது பிரிவு).

**உதாரணங்கள்:** (1) இராமன் என்பவர் தமக்கு ரூ. 1000/-க்கு புரோநோட்டு எழுதிக்கொடுத்திருப்பதாகப் பிறரை நம்பவைத்து மோசடி செய்யக் கருதி, இராமனுடைய கையொப்பத்தைத் தாமே எழுதி ஒரு புரோநோட்டைக் கண்ணன் உண்டாக்குகின்றார். இவ்வாறு புரோநோட்டை உண்டாக்கிய செயல் 'பொய்யாவணம் புனைதல்' ஆகும்.

(2) நூறு ரூபாய்க்குக் காசோலை (செக்) எழுதி இராமன் கண்ணனிடம் கொடுக்கிறான். கண்ணன் பாங்கை ஏமாற்றக் கருதி ரூ. 100 என்று எழுதியிருந்த இடத்தில் கூட ஒரு சுன்னத்தைச் சேர்த்து ரூ. 1000 என்று மாற்றி எழுதுகிறார். இது 'பொய்யாவணம் புனைதல்' ஆகும்.

செக்கில் உள்ள கையொப்பம் இராமனுடையதுதான். கண்ணன் எவருடைய கையொப்பத்தையும் கள்ளமாகப் போடவில்லை. ஆனால், செக்கில் எழுதப்பட்டிருந்த தொகையை மோசடியாக மாற்றி எழுதியது குற்றமாகிறது.

(3) ஒரு கம்பெனிக்கு இராமன் பணம் கொடுக்கவேண்டியிருக்கிறது. தன் வேலையாள் கண்ணனைக் கூப்பிட்டு, இராமன் ஒரு செக்கில் கையெழுத்தைமட்டும் போட்டுக்கொடுக்கிறான். கம்பெனிக்குப் போய் எவ்வளவு பாக்கியிருக்கிறது என்று கேட்டு அந்தத் தொகையைச் செக்கில் எழுதிக்கொள்ளும்படி கண்ணனுக்கு இராமன் உத்தரவிடுகின்றான். அவ்வாறே, கண்ணனும் கம்பெனியில் போய் இராமன் கொடுக்கவேண்டிய பாக்கியை விசாரித்து ரூ. 1000/-என்று அறிகின்றார். ஆனால், கண்ணன், மோசடிக் கருத்துடன் அந்தச் செக்கில் ரூ. 1000/- என்று எழுதுவதற்குப் பதிலாக ரூ. 2000/-என்று எழுதிக்கொண்டால், அதுவும் 'பொய்யாவணம் புனைதல்' ஆகிறது.

அந்தச் செக்கில் இராமனுடைய கையெழுத்தைப் பொய்யாகக் கண்ணன் போட்டுக்கொண்டால் எவ்வாறு அது குற்றமோ, அவ்வாறே இராமனுடைய அதிகாரம் இன்றி ஆயிரத்திற்குப் பதிலாக இரண்டாயிரம் என்று செக்கில் எழுதிக்கொண்டதும் குற்றமாகிறது.

(4) ஒருவர் தமது சொத்துகளை இராமன், கண்ணன் என்ற இருவரும் அடைந்துகொள்ளவேண்டுமென்று ஓர் உயில் (will)எழுதி வைத்துவிட்டு இறக்கின்றார். இராமனுக்கு அந்தச் சொத்துகள் சேரக்கூடாது என்ற கெட்ட எண்ணத்துடன் ஒருவர் அந்த உயிலில் இருந்த 'இராமன்' என்ற பெயரை அழித்துவிடுகின்றார் எனில், அதுவும் 'பொய்யாவணம் புனைதல்' என்ற குற்றமாகிறது.

(5) இராமன் கண்ணனுக்குத் தனது வீட்டை ஒரு தேதியில் விற்றுவிடுகின்றான். பிறகு, கண்ணனை மோசம் செய்யவேண்டும் என்ற கருத்துடன், அந்தத் தேதிக்கு மூன்று மாதத்திற்குமுன் ஒரு தேதியிலேயே அந்த வீட்டைக் கோபாலன் என்பவருக்கு விற்றுவிட்டதாகக் காட்டி ஒரு பத்திரத்தை எழுதி, இராமன் கோபாலனிடம் கொடுக்கின்றான். இவ்வாறு, முன் தேதியிட்டுப் பத்திரத்தை இராமன் எழுதியது 'பொய்யாவணம் புனைதல்' ஆகும்.

ஒன்று எழுதப்படாத காலத்தில் அது எழுதப்பட்டதெனப் பிறர் நம்பவேண்டும் என்ற கருத்தோடு மோசடியாக ஆக்கப்பட்ட ஆவணம் 'பொய்யாவணம்' என்பதைப் பொய்யாணவத்திற்கான விளக்கத்தில் கண்டோம். எனவே, முன் தேதியிட்டு இராமன் மோசடியாகப் பத்திரம் எழுதியது குற்றமாகிறது.

(6) முருகன் என்பவர் நோய்வாய்ப்பட்டுப் படுக்கையில் இருக்கிறார். தம் சொத்துகளைக் கந்தனுக்கு எழுதிவைக்கவேண்டும் என்று கருதி, தமது வேலையாளான வேலனைக் கூப்பிட்டு ஓர் உயில் எழுதச் சொல்லுகிறார். முருகன் சொல்லச் சொல்ல வேலையாள் வேலன்

உயிலை எழுதுகின்றார். ஆனால், சொத்தைப் பெறுபவர் கந்தன் என்று எழுதுவதற்குப் பதிலாகக் கண்ணன் என்று உயிலில் வேலன் எழுதிக்கொள்ளுகிறார். சொத்தைப் பெறுபவர் கந்தன் என்று தான் எழுதப்பட்டிருக்கிறது என்று பொய்கூறி ஏமாற்றி, முருகனிடம் உயிலில் கையெழுத்தும் பெற்றுவிடுகின்றார் வேலன். இப்பொழுது வேலன் செய்தது 'பொய்யாவணம் புனைதல்' என்ற குற்றமாகும்.

(7) ஒருவர் தம்முடைய நடத்தை குறித்து நற்சான்றிதழ் (certificate) பெறுவதற்குத் தக்கோரை நாடுகின்றார். அந்தச் சான்றிதழைக் காட்டித் தக்கதொரு வேலையைத் தாம் பெறுதல் வேண்டும் என்பது அவருடைய கருத்து. நல்ல பதவியில் உள்ள ஒருவரிடம் அத்தகைய சான்றிதழை அவர் பெற முடியவில்லை. எனவே, நல்ல பதவியிலுள்ள வேலன் என்ற ஒருவர் அளித்ததாகக் காட்டி, ஒரு சான்றிதழைப் பொய்யாக உண்டாக்கிக்கொள்ளு கின்றார். இவ்வாறு சான்றிதழைத் தயாரித்தது 'பொய்யாவணம் புனைதல்' ஆகும்.

வேலனின் உதவியாளர், வேலனின் அனுமதியைப் பெறும லேயே வேலனின் பெயரால் ஒரு சான்றிதழைத் தயாரித்துக் கொடுத்தார் எனில், வேலனின் வேலையாள் 'பொய்யாவணம் புனைதல்' என்ற குற்றத்திற்கு ஆளாகின்றார்.

(8) பொய்யாவணத்தில் குறிக்கப்பட்ட நபர் கற்பனை நபராக வும் இருக்கலாம். கற்பனை நபரை உண்மையான நபர் என்று பிறர் நம்பவேண்டும் என்ற கருத்தோடு மோசடியாக ஓர் ஆவணத்தைத் தயாரித்தலும் குற்றமாகும்.

நல்லூர் என்ற ஊரிலுள்ள இராமன் மகன் கோபாலன் தன் பெயருக்கு ரூ. 1000-க்கு ஒரு புரோநோட்டு எழுதிக்கொடுத்ததாக ஒருவர் ஒரு புரோநோட்டைத் தயாரித்துக்கொள்ளுகிறார். நல்லூரில் கோபாலன் என்ற பெயருள்ள எவரும் இல்லை. கோபாலன் என்பது ஒரு கற்பனைப் பெயரேயாகும். இந்தப் புரோநோட்டை இன்னொரு வர் பெயருக்கு மாற்றிக் கொடுத்துப் பணம் பெறவேண்டும் என்ற மோசடிக் கருத்தோடு அது தயாரிக்கப்பட்டிருந்தால், அது 'பொய் யாவணம் புனைதலே'யாகும்.

## தம்முடைய கையொப்பம் இட்டே ஒருவர் 'பொய்யாவணம் புனையும்' குற்றத்திற்கு ஆளாகலாம்

(9) ஒருவரது பெயர் கோவிந்தன். அதே பெயருடைய மற்றொரு வரும் இருக்கின்றார். அந்த மற்றொரு கோவிந்தன் எழுதிக்கொடுத்

தாகப் பிறரை நம்பவைக்கவேண்டும் என்று கருதி, ஒரு புரோ நோட்டை எழுதி அதில் கோவிந்தன் தமது கையொப்பத்தை இடுகின்றார். தமது கையொப்பத்தையே அவர் இட்டாலும் அது மற்றொருவரால் கையொப்பமிடப்பட்ட ஆவணமாகப் பிறர் நம்ப வேண்டும் என்ற மோசடிக் கருத்துடன் அந்தப் புரோநோட்டு ஆக்கப்பெற்றால், அது 'பொய்யாவணம் புனைதலே'யாகும்.

(10) இராமநாதன் என்பவர் பெயருக்கு எழுதப்பெற்ற காசோலை (செக்) ஒன்று, தபாலில் தவறுதலாக மற்றோர் இராமநாதன் கைக்குக் கிடைத்துவிடுகிறது. தபாலில் காசோலையைப் பெற்ற இராமநாதனுக்கு அது தமக்கு உரியதன்று என்பது தெரிகிறது. இருந்தாலும், அவர் மோசடியாகப் பணம் பெறக் கருதுகின்றார். இராமநாதன் என்று தம் கையொப்பத்தையே அந்தக் காசோலையின் பின் வரைந்து பாங்கிலிருந்து பணத்தைப் பெறுகின்றார். இப்பொழுது பணத்தைப் பெற்ற இராமநாதன் காசோலைக்குப் பின்புறம் தமது கையொப்பத்தையே இட்டாலுங்கூட அவரது கருத்து என்ன? காசோலைக்கு உரிய இராமநாதனின் கையொப்பமாகவே தம் கையொப்பத்தை பாங்கிப் பணியாளர் கருதித் தமக்கு அந்தப் பணத்தைக் கொடுக்கவேண்டும் என்ற மோசடிக் கருத்தேயாகும். எனவே, அவர் தம்முடைய கையொப்பத்தையே காசோலையில் இட்டாலுங்கூட, 'பொய்யாவணம் புனைதல்' குற்றத்திற்கு ஆளாகின்றார்.

மேலே கூறப்பட்ட ஐந்தாவது உதாரணத்தில் கண்ணனை மோசம் செய்வதற்கென்று இராமன் முன் தேதியிட்ட கிரயப் பத்திரத்தை கோபாலன் பெயருக்கு எழுதிக்கொடுத்ததில் தம் கையொப்பத்தையேதான் இட்டிருக்கிறார். இருந்தாலும், முன் தேதியிட்ட காரணத்தால், எழுதியவரின் உண்மையான கையொப்பம் உடையதாக இருந்தும், அந்த ஆவணம் பொய்யாவணமாகிவிடுகிறது. தம் கையொப்பத்தையிட்டு அதை ஆக்கியவரும் குற்றவாளியாகின்றார்.

இந்த வகையில் மோசடியாக நடக்கும் ஒருவர், தம்முடைய கையொப்பத்தை இட்டுங்கூடப் 'பொய்யாவணம் புனைதல்' என்ற குற்றத்தை இழைக்கலாம் என்பதை நினைவிற்கொள்ளவேண்டும்.

முருகன் என்ற மாணவனுக்குப் பதிலாக முகுந்தன் என்பவர் பரீட்சையில் உட்கார்ந்து தேர்வுக்கான விடைத்தாள்களை எழுதினார் எனில், அவர் 'ஆள்மாறாட்ட ஏமாற்றுதல்', 'பொய்யாவணம் புனைதல்' என்ற இரு குற்றங்களும் செய்தவராகின்றார்.

பல்கலைக்கழகத் தேர்வுகளுக்குத் தம்மைத் தகுதியாக்கிக் கொள்ளக் கருதி, மோசடியாக வயது முதலியவைகுறித்த பொய்ச்

சான்றிதழ்களைத் தயாரித்து அனுப்புவது குற்றமாகிறது. அரசாங்க வேலைக்காக ஆள் எடுப்பதில் பிற்பட்ட வகுப்பினர்களுக்குச் சில சலுகைகள் அளிக்கப்படுகின்றன. ஒருவர் பொய்யாகத் தாம் பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர் என்று காட்டும் ஒரு சான்றிதழைத் தயாரித்துக்கொண்டால், அது 'பொய்யாவணம் புனைதல்' ஆகி விடும்.

பொதுவாகப் பொய்யாவணம் புனைதல் குற்றத்திற்கு உரிய தண்டனை இரண்டு ஆண்டுகள்வரை சிறை, அபராதம் ஆகும் (465ஆம் பிரிவு).

## புனையப்பட்ட பொய்யாவணத்தின் தன்மைக்குத் தக்கவாறு தண்டனை அளிக்கப்படுகிறது

நீதிமன்ற நடவடிக்கைகள் சம்பந்தமான ஆவணங்கள், பிறப்பு, இறப்பு, திருமணம் முதலிய பதிவுப் புத்தகங்கள், பொது ஊழியர் எழுதிவைத்திருக்கும் பதிவுப் புத்தகங்கள், தங்கள் பணி முறையில் பொது ஊழியர்கள் அளித்ததாகவுள்ள சான்றிதழ்கள், ஒரு வழக்கை நடத்துவதற்கெனவுள்ள அதிகார பத்திரங்கள் இவைபோன்ற ஆவணங்கள்குறித்துப் 'பொய்யாவணம் புனைபவருக்கு' ஏழாண்டுக் காலம்வரை சிறை, அபராதம் உண்டு (466 ஆம் பிரிவு).

மதிப்புள்ள பத்திரம் (Valuable Security), உயில், பணத்தைப் பெறுவதற்கு அதிகாரமளிக்கும் பத்திரம், பணம் பெற்றதற்கு அளிக்கப்படும் ரசீது முதலியவைகுறித்துப் பொய்யாவணம் புனைவோருக்கு ஆயுட்காலச் சிறைத்தண்டனைகூட அளிக்கப்படலாம் (467ஆம் பிரிவு).

பிறரை ஏமாற்றுவதற்கென்று பொய்யாவணம் புனைதலுக்கு ஏழாண்டுக் காலம்வரை சிறைத்தண்டனை (468ஆம் பிரிவு).

பிறரது புகழைக் கெடுக்கும் கருத்துடன் அதற்கென ஒரு பொய்யாவணத்தைப் புனையும் குற்றத்திற்கு மூன்றுண்டுக் காலம் வரை சிறை உண்டு (469ஆம் பிரிவு).

## பொய்க்கணக்கு எழுதுதல்
## (Falsification of Accounts)

ஒருவர் தமது காரியங்களைக் கவனித்துக்கொள்ளவும், தமக்கு வரவேண்டிய தொகைகளை வசூலிக்கவும், செய்யவேண்டிய செலவு களைச் செய்யவும், அதற்கான கணக்குகளை வைத்துக்கொள்ளவும் என்று ஒரு வேலையாளை அமர்த்துகிறார். பெரிய வணிக நிலையங்கள்,

அரசாங்கம் இவற்றின் அலுவல்களும் அதற்கான எழுத்தர்கள், அதிகாரிகள், ஊழியர்கள் இவர்கள்மூலமே நடைபெறுகின்றன. அந்த நிலையங்களின் கணக்குகளும் இதர ஆவணங்களும் அந்த எழுத்தர்களிடமும் அதிகாரிகளிடமும் இருக்கின்றன. இந்தச் சூழ் நிலையில் அந்த அதிகாரிகள், எழுத்தர், ஊழியர் முதலியோர் நாணயமாக, நேர்மையோடு நடந்துகொள்ளவேண்டியது அவசிய மாகும். அவ்வாறு நடந்துகொள்ளாமல் அந்த அதிகாரிகளும் ஊழியர்களும் பொய்க்கணக்கு எழுதினாலோ, அல்லது எசமானரின் ஆவணங்களை அழித்தாலோ மாற்றினாலோ, அதற்கு அதிகத் தண்டனையைச் சட்டம் அளிக்கிறது.

ஊழியர், எழுத்தர், அதிகாரி என்ற நிலையில் பணிபுரியும் ஒருவர்—

வேண்டுமென்றே மோசடிக் கருத்துடன் தம் எசமானரின் வசமுள்ள அல்லது எசமானரின் சார்பில் தம்மிடமுள்ள

கணக்குப் புத்தகம், மதிப்புள்ள பத்திரம், வேறுவகைப் புத்தகங்கள், தாள்கள், எழுத்துகள் இவற்றை

அழித்தல், மாற்றுதல், சிதைத்தல் அல்லது பொய்யாக்குதல்,

இந்த ஆவணங்களில் பொய்க்குறிப்புப் பதிவு செய்தல், பொய்க் கணக்கு எழுதுதல், குறிப்பு எழுதாமல் வேண்டுமென்றே விட்டு விடுதல், மாற்றி எழுதுதல் இவற்றைச் செய்யத் தூண்டுதல்—

இத்தகைய குற்றச் செயல்களுக்கு ஏழாண்டுக் காலம்வரை தண்டனை, அபராதம் உண்டு (477-A பிரிவு).

ஓர் அரசாங்க அதிகாரி அரசாங்கத்திற்குச் சேரவேண்டிய பணத்தை வசூலிக்கிறார். அவ்வாறு வசூலித்த தொகைகள் அப்போதைக்கப்போது கணக்கில் எழுதப்படவேண்டும் என்று விதிகள் இருந்தும், அவ்வாறு எழுதாமல் மோசடிக் கருத்துடன் ஒருவர் இருந்தால், அது இந்தப் பிரிவின்கீழ்க் குற்றமாகும். அவ்வாறு வசூலித்த பணத்தை அவர் நேர்மையின்றித் தமதாக்கிக் கொண்டால், அது 'நம்பிக்கை மோசம்' என்ற குற்றமும் ஆகிறது. இவ்வாறே, தாம் வசூலித்த தொகை நூறு ரூபாயாக இருக்க, அதைப் பத்து ரூபாய் என்று கணக்கில் அவர் எழுதிக்கொண்டாலும், நூறு ரூபாய் என்று மற்றவர் எழுதியிருந்ததை அவர் பத்து ரூபாய் என்று மாற்றி எழுதினாலும் குற்றமேயாகும். பணியாளர் தமது எசமானரின் ஆவணங்களைச் சிதைத்தாலும், மாற்றினாலும், அழித்தாலும் குற்ற மாகிறது.

ஓர் அதிகாரி பலரிடமிருந்து பல தேதிகளில் பணத்தை வசூலித்திருக்கலாம். அவற்றில் சிலவற்றைமட்டும் கணக்கில் வரவு வைத்திருக்கின்றார். இந் நிலையில் எந்தத் தேதியில் எவ்வளவு தொகையை வசூல் செய்தார் என்றும், எந்தக் குறிப்பிட்ட தொகையை வரவு வைக்கவில்லை என்றும் உறுதி செய்வது கடினமாகலாம். எனவே, இந்த விவரங்கள் இல்லாமலேயே அவர்மீது குற்றம் சாட்டப்படலாம் என்று சட்டம் விளக்கம் கூறுகிறது.

ஓர் அதிகாரி வசூலித்த பணத்தைக் கையாடல் செய்து விட்டார். அது சம்பந்தமாக விசாரணை நடந்துகொண்டிருக்கும் பொழுது, தம் கையாடலை மறைக்கும்பொருட்டு, அந்தப் பணம் அரசாங்க கஜானாவில் செலுத்தப்பட்டதாகக் கணக்கில் பொய்யாக எழுதிவிட்டார். முன் குற்றத்தை மறைப்பதற்கென்று இவ்வாறு பொய்யாக எழுதியதும் குற்றமேயாகிறது என்பது தீர்ப்பு.

இந்தப் பிரிவின் தலைப்பு 'பொய்க்கணக்கு எழுதுதல்' என்று கொடுக்கப்பட்டிருந்தாலும், கணக்கைத் தவிர மற்ற ஆவணங்களை அழிப்பதும் மாற்றுவதும் இப் பிரிவின்கீழ்க் குற்றங்கள்தாம்.

## பொய்யாவணத்தை மெய்யாவணமாகப் பயன்படுத்துவது

ஒன்று, பொய்யாவணம் என்று தெரிந்தும் அல்லது அவ்வாறு தெரியக் காரணம் இருந்தும், அதை உண்மையானது என்று மோசடியாகவோ, நேர்மையின்றியோ பயன்படுத்துவோர்களுக்கு, பொய்யாவணம் புனைபவர்களுக்கு உற்ற தண்டனை எதுவோ அதே தண்டனை அளிக்கப்படுகிறது (471ஆம் பிரிவு).

பொய்யாவணத்தை ஒருவர் புனைதல், அதைப் பயன்படுத்திப் பிறருக்குக் கேடு விளைக்கவேண்டும் அல்லது தாம் பிறரை ஏமாற்ற வேண்டும் என்ற கருத்துடன்தான். அந்த ஆவணத்தை மோசடியாகப் பயன்படுத்துவோரும் அதே கருத்தோடுதான் இயங்குகின்றனர். பொய்யாவணத்தைப் புனைதலின் நோக்கம் அதை மெய்யாவணமெனப் பயன்படுத்துவதற்குத்தான். எனவே, அத்தகைய ஆவணத்தைப் பயன்படுத்துவோர், அதை உண்டாக்கியது தாம் இல்லை என்று வாதிட்டுத் தப்புவது கூடாது. தம் நலனுக்கென்று பிறரைக் கருவியாக வைத்துப் பொய்யாவணத்தைத் தயார்செய்பவர்களைச் சட்டம் விட்டுவிட்டால், இக் குற்றத்தைத் தடுப்பது இயலாதுபோய்விடும். எனவே, ஓர் ஆவணத்தைப் பொய்யாகப் புனைதல் எத்தகைய குற்றமோ, அத்தகைய குற்றமே புனைந்த ஆவணத்தை மோசடியாகப் பயன்படுத்துவதும் என்று

சட்டம் விதிக்கிறது. இருவகைக் குற்றங்களுக்கும் ஒரேவிதத் தண்டனையையும் சட்டம் அளிக்கின்றது.

பொய்யாவணம் புனைவதற்குப் பயன்படுவதற்கென்று முத்திரை, தகடு, இதர கருவிகள் இவைகளை உண்டாக்குவது அல்லது போலியாகச் செய்வதும், இவைகளை வைத்திருப்பதும் குற்றங்கள்.

பொய்யாவணம் என்று தெரிந்த ஒன்றை மெய்யாவணமென்று மோசடியாகப் பயன்படுத்தவேண்டும் என்ற கருத்துடன் ஒருவர் அதைத் தம்வசம் வைத்திருப்பதும் குற்றமாகும்.

## மெய்யாவணத்தை அழித்தலும் அகற்றலும்

ஓர் ஆவணத்தைப் பொய்யாகப் புனைதல் குற்றமாவதுபோல, ஒரு மெய்யாவணத்தை அழித்தலும் குற்றமாகிறது.

உயில், கிரயப் பத்திரம், புரோநோட்டு இவைகளின் அடிப்படையில்தான் ஒருவரால் தமக்குரிய சொத்து, பணம் முதலியவற்றை வரப்பற்ற முடிகிறது. எனவே, இவை முக்கியமான ஆவணங்கள் ஆகின்றன. அந்த ஆவணங்களை அழித்துப் பிறருக்குக் கேடு இழைக்க விழைவோர்களும் உண்டு. புரோநோட்டு எழுதிக்கொடுத்தவர், கடனைக் கொடுக்காமலே அந்தப் புரோநோட்டை ரத்துசெய்துவிட்டதாக அதில் எழுத முயலலாம். அவ்வாறு ரத்தாகிவிட்டதென அதில் எழுதப்பட்டு விட்டால், அந்தப் புரோநோட்டின் அடிப்படையில் வழக்கிட்டுக் கடன் கொடுத்தவர் கடனை வசூலிப்பது முடியாதுபோய்விடும். ஓர் உயில்மூலமாக ஒருவருக்குச் சொத்து வரவேண்டியிருக்கிறது. அந்த உயிலைக் கிழித்துப் போட்டுவிட்டால், உயில்படி நியாயமாகச் சொத்தை அடையவேண்டியவருக்குச் சொத்துக் கிடைக்காமற் போகலாம். இவ்வாறு, மெய்யாவணங்களை அழித்தோ, மறைத்தோ வைத்தால் பிறருக்குப் பெருங்கேடு விளைகிறது. எனவே, இச் செயல்களைச் சட்டம் கடுமையாகத் தண்டிக்கின்றது.

ஒருவர் மோசடியாகவும் நேர்மையின்றியும் பொதுமக்களுக்கோ, தனி மனிதருக்கோ கேடு அல்லது தீங்கு விளைக்கக் கருதி, உயில், மதிப்புள்ள பத்திரங்கள் இவற்றை ரத்துசெய்தல், அழித்துவிடுதல், எழுத்தை அழித்தல், மறைத்து வைத்தல் அல்லது இவற்றைச் செய்வதற்கு முயற்சி செய்தல் இவை குற்றங்களாகும். இதற்கும் ஆயுட்காலச் சிறைத்தண்டனை விதிக்கப்படலாம் (477ஆம் பிரிவு).

ஒருவர் மற்றொருவருக்குப் புரோநோட்டு எழுதிக்கொடுத்துக் கடன் வாங்குகிறார். சில நாட்கள் கழிந்து கடன் தொகையைக் கொடுப்பதாகக் கூறிப் புரோநோட்டைக் கொண்டுவருமாறு கடன் கொடுத்தவரிடம் கேட்கிறார். கடன் கொடுத்தவர் புரோநோட்டைக்

கொண்டுவந்தவுடன், அதை வெடுக்கென்று பிடுங்கிச் சுக்கு நூருகக் கிழித்து எறிந்துவிடுகிருர் என்ருல், அது இந்தப் பிரிவுப்படி கொடுங்குற்றமாகும்.

இதுவரை ஆவணங்களைக் குறித்த குற்றங்களின் வகைகளையும், அவற்றிற்குரிய தண்டனைகளையும் கண்டோம். 'பொய்யாவணம் புனைதலும்', 'பொய்க்கணக்கு எழுதலும்', 'பொய்யாவணத்தை மெய்யாவணம் எனப் பயன்படுத்தலும்', 'மெய்யாவணத்தை அழித்தலும்' கடுந்தண்டனைக்குரிய கொடுங்குற்றங்களாகின்றன.

# 31. பொருட்குறிகள்பற்றிய குற்றங்கள்
## (Offences Relating to Property and Other Marks)

பொய்ப் பொருட்குறியிடுதல்—போலிப் பொருட்குறி பொறித்தல்—பொது ஊழியர் இடும் பொருட்குறிகளைப் போலியாகப் பொறித்தல்—பொய்க்குறி இடுதல்—பொருட்குறிகளை அகற்றல், அழித்தல்.

ஓர் அசைபொருள் ஒருவருடையது என்பதைக் காட்டும் வகையில் அந்தப் பொருள்மீது குறிகள் இடுவது வழக்கம். ஒருவர் பெயரின் முதல் எழுத்துகளையோ அல்லது வேறு அடையாளக் குறிகளையோ பாத்திரம், பெட்டி, மூட்டைகள் இவைமீது வரைந்து அல்லது பதித்து, அவை இன்னாருக்குச் சொந்தமானவை என்பதைக் காட்டுகிறோம்.

இவ்வாறு, அசைபொருள்களின்மீது, அவை யாருக்குச் சொந்த மானவை என்பதைக் காட்டும்பொருட்டு இடும் குறிகளைப் பொருட் குறிகள் (Property marks) என்பார்கள் (479ஆம் பிரிவு).

சாமான்களை ஓர் இடத்திலிருந்து தூரத்தில் உள்ள மற்றோர் இடத்திற்கு ரெயில், லாரி இவைமூலமாக அனுப்பும்பொழுது, அந்தச் சாமான்களின்மீதுள்ள பொருட்குறிகளின் துணைகொண்டே அவை இன்னாருக்குச் சொந்தமானவை என்று கண்டு, அவைகளைச் சேகரித்துவைக்க முடிகின்றது. எனவே, பொருட்குறிகள் மாற்றப் படாதிருத்தல் அவசியமாகும். மேலும், ஏற்றிச் செல்லப்படும் பொருள்களைத் திருட முயலுபவர்கள், பொருட்குறிகளை மாற்றிப் பொய்யாக வேறு பொருட்குறிகளை எழுதிவிடலாம். பொருட்குறிகள் இட்ட ஒருவரது பொருளைத் திருடியவன் அந்தக் குறிகளை மாற்று வதற்கும், பொய்யான பொருட்குறிகளை இடுவதற்கும் முயலுகிறான். ஏனெனில், அந்தப் பொருளுக்கு உடையவர் இன்னாரென்று எளிதில் பிறர் தெரிந்துகொள்ளுவதற்கு அந்தக் குறிகளே துணைசெய் கின்றன. இவ்வாறு, பெரும்பாலும் தீய நோக்கத்துடனேயே பொருட்குறிகள் மாற்றப்படுகின்றன. ஆதலால், பொய்யாகப் பொருட்குறிகளை இடுவது குற்றம் எனச் சட்டம் விதிக்கிறது.

## பொய்ப் பொருட்குறி இடுதல்
## (Using False Property Marks)

ஒருவருடையனவற்றை இன்னொருவருடையன என்று பிறர் நம்பும்படியாக அசைபொருள்கள், சாமான்கள், அந்தப் பொருள் களையுடைய பெட்டகங்கள், மூட்டைகள் இவைமீது குறிகள் இடுவது 'பொய்ப் பொருட்குறியிடுதல்' (Using a false trade mark) எனப் படுகிறது (481ஆம் பிரிவு).

பிறரை ஏமாற்றும் கருத்துடன் பொய்ப் பொருட்குறியிடும் குற்றத்திற்கு ஓராண்டுக் காலம்வரை சிறைத்தண்டனை, அபராதம் உண்டு(482ஆம் பிரிவு).

## போலிப் பொருட்குறி பொறித்தல்
## (Counterfeiting Property Mark)

ஒருவருடைய பொருட்குறிபோன்ற பொருட்குறிகளைப் பிறரை ஏமாற்றும் கருத்துடன் போலியாகத் தயாரித்தல் அல்லது இடுதல் குற்ரமாகும். போலிப் பொருட்குறி பொறித்தல் (Counterfeiting a property mark) என்ற இக் குற்றத்திற்கு இரண்டு ஆண்டுக் காலம் வரை சிறைத்தண்டனை விதிக்கப்படலாம் (483ஆம் பிரிவு).

## பொது ஊழியர் இடும் பொருட்குறிகளைப் போலியாகப் பொறித்தல்

ஒரு பொருள் யாரால், எங்கு, எப்பொழுது தயாரிக்கப்பட்டது என்பதைக் காட்டவும், அந்தப் பொருளின் தரத்தை அறிவிக்கவும், அதற்கு ஒரு விலக்களிப்பு உண்டு என்பதைத் தெரிவிக்கவும் பொது ஊழியர்கள் பயன்படுத்தும் பொருட்குறிகளைப் போலியாகப் பொறித்தல் குற்றமாகும். இக் குற்றத்திற்கு மூன்றாண்டுக் காலம் வரை சிறை உண்டு (484ஆம் பிரிவு).

போலிப் பொருட்குறிகளைச் செய்வதற்கு வேண்டிய கருவிகளை வைத்திருப்பதும், போலிப் பொருட்குறிகளை வைத்திருப்பதும் குற்ற மாகும். அதற்கு மேலே கூறப்பட்ட வகையிலேயே தண்டனை உண்டு (485ஆம் பிரிவு).

போலிப் பொருட்குறிகள் பொறிக்கப்பட்ட பொருள்களைத் தெரிந்தே விற்பவரும், விற்பனைக்கு வைத்திருப்பவரும் குற்றவாளி யாகின்றனர். இக் குற்றத்திற்கு ஓராண்டுக் காலம் சிறை, அபராதம் தண்டனையாகும்.

## பொய்க்குறி இடுதல் (Making a False Mark)

பொது ஊழியரையோ, பிறரையோ ஏமாற்றும் நோக்கத்துடன். ஒரு பொருளும் இல்லாத பெட்டகத்திற்குள் பொருள் இருப்பதாகப் பெட்டகத்தின்மீது குறிப்பதும், உள்ள பொருளை மாற்றிக் குறிப்பதும், உள்ளிருக்கும் பொருளின் தரத்தையோ, தன்மையையோ மாற்றிக் குறிப்பதும் ‘பொய்க்குறியிடுதல்’ ஆகும். இக் குற்றத்திற்கும் மூன்றாண்டுக் காலம்வரை சிறை, அபராதம் விதிக்கப்படலாம் (487ஆம் பிரிவு).

## பொருட்குறிகளை அகற்றுவதும் அழிப்பதும்

பிறருக்குத் தீங்கு விளைக்கும் கருத்துடன் பொருட்குறிகளை அகற்றுவதும், அழிப்பதும், மாற்றுவதும் குற்றமாகும். இதற்கும் ஓராண்டுக் காலம்வரை சிறை, அபராதம் தண்டனையாகும் (489ஆம் பிரிவு).

பிறர் பொருளைக் கள்ளமாகக் கவருவதற்கும், பொருள்களுக்கு வரி செலுத்தாமலும் வேறு வகையிலும் அரசாங்க ஊழியர்களை ஏமாற்றுவதற்கும் பொய்ப் பொருட்குறியிடுதலும், பொருட்குறிகளை அகற்றுதலும், போலிப் பொருட்குறிகளைப் பொறித்தலும், பொய்க் குறி இடுதலும் சாதனங்கள் ஆகின்றன. எனவே, இச் செயல்களைச் சட்டம் தண்டிக்கிறது.

## 32. தேர்தல் சம்பந்தமான குற்றங்கள்
## (Offences Relating to Elections)

தேர்தலில் இலஞ்சம் அளித்தல்—தேர்தலில் தகாத முறையில் தலையிடுதல்—தேர்தலில் ஆள்மாருட்டம் செய்தல்—தேர்தலில் பொய்ப் பிரசாரம்—தேர்தலுக்கென முறையற்ற செலவு செய்தல்—தேர்தல் செலவுக் கணக்கு வைக்கத் தவறுதல்.

ஜனநாயக ஆட்சிக்குத் தேர்தல் முறையே (Election) அடிப் படையாக அமைகிறது. தங்கள் பிரதிநிதிகளை மக்கள் தேர்தல் களில் தேர்ந்தெடுத்துச் சட்டமன்றங்களுக்கு அனுப்புகின்றனர். இச் சட்டமன்றங்களின் வாயிலாக மக்களாட்சி நடைபெறுகின்றது.

ஆதலால், தேர்தல்களில் மக்கள் தங்கள் வாக்குகளைத் தம் விருப்பப்படி, தாங்கள் விரும்பும் அபேட்சகர்களுக்கு அளிப்பது மிகவும் முக்கியமாகும். தேர்தல்களில் பணத்தின் செல்வாக்கைக் கொண்டோ, தனி மனிதர்களின் செல்வாக்கைக் கொண்டோ, அல்லது பொய்யாகப் பிரசாரம் செய்தோ மக்களின் வாக்குகளைப் பெற முயலுவது ஜனநாயக ஆட்சிக்கு ஊறு விளைவிக்கிறது. மேலும், தேர்தல்களில் ஆள்மாருட்டம் முதலிய ஒழுங்கீனங்கள் நடைபெற்ருல், தேர்தல் ஒரு கேலிக்கூத்தாகப் போய்விடும். எனவே, இம்மாதிரிச் செயல்களைக் குற்றங்கள் என்று சட்டம் விதிக்கிறது.

### தேர்தல்களில் இலஞ்சம் அளித்தல்

ஒருவர் தேர்தலில் வேட்பாளராக (அபேட்சகராக) நிற்பது, நில்லாமல் இருப்பது, வேட்பாளராக நின்று பிறகு போட்டியில் கலக்காமல் போவது, வாக்குப் போடுவது, போடாமல் இருப்பது இந்த ஐந்து வகைச் செயல்களும் 'தேர்தல் உரிமை' (Electoral right) எனப்படும்.

இந்தத் 'தேர்தல் உரிமை' ஒருவரின் ஒப்பற்ற உரிமையாகும். இதை அவர் தம் விருப்பப்படி, தமக்கு எது முறை என்று தோன்று

கிறதோ அந்த முறைப்படி பயன்படுத்தவேண்டும். அப்பொழுது தான் உண்மையான ஜனநாயக முறை அமைவதாகும். எனவே, ஒருவரை அவருடைய தேர்தல் உரிமையைப் பயன்படுத்தும் வகையில் தூண்டுவதற்கு என்று அவருக்கு இலஞ்சம் (கைக்கூலி) கொடுப்பதைக் குற்றம் எனச் சட்டம் விதிக்கிறது.

ஒருவருடைய தேர்தல் உரிமையை ஒருவகையில் பயன்படுத்துமாறு தூண்டுவதற்கென்று அவருக்கு நேரிடையாக இலஞ்சம் கொடுப்பதோ, அல்லது பிறர்மூலமாக இலஞ்சம் அளிப்பதோ, அல்லது பயன்படுத்தியபின் அதற்கென்று வெகுமதி அளிப்பதோ குற்றம் ஆகிறது. இலஞ்சம் கொடுப்பதைப் போலவே, தனக்கென்றே அல்லது பிறருக்கென்றே இலஞ்சம் வாங்குவதும் வாங்க முயலுவதும் குற்றமாகும். இலஞ்சம் கொடுக்க முயலுவதும், கொடுப்பதாக ஒப்புக்கொள்வதும், இன்னொருவருக்கு இலஞ்சம் வாங்கித்தருவதாக ஒப்புக்கொள்வதும், அவ்வாறு வாங்க முயலுவதும் குற்றமாகும்.

ஒருவருக்கு வாக்கைத் (vote) தரவேண்டும் என்று கேட்டு இலஞ்சம் அளிப்பதைப்போலவே, இன்னொருவருக்கு வாக்கை அளிக்கவேண்டா என்று தூண்டி இலஞ்சம் அளிப்பதும் குற்றம். தேர்தலில் அபேட்சகராக ஒருவரை நிற்கத் தூண்டி அதற்கு இலஞ்சம் அளிப்பது எப்படிக் குற்றமோ, அவ்வாறே அவரை அபேட்சகராக நிற்கவேண்டா என்று தூண்டி இலஞ்சம் கொடுப்பதும் குற்றமாகும். அபேட்சகராகப் பதிவு செய்தவரைத் தேர்தல் போட்டியிலிருந்து பின்வாங்கிக்கொள்ளும்படி (withdraw) தூண்டி இலஞ்சம் அளிப்பதும் குற்றம்.

'இலஞ்சம்' (கைக்கூலி) என்றால் பணமாகத்தான் இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. எந்தப் பொருளை இலஞ்சமாகக் கொடுத்தாலும் அது கைக்கூலியேயாகும்.

ஒருவரிடம் இலஞ்சம் பெற்றவர் அவருக்கு வாக்கு அளிக்காமல் இருக்கலாம்; அல்லது ஒருவருக்கு வாக்கு அளிக்காமலேயே அவருக்கு அளித்ததாகக் கூறிக் கைக்கூலி வாங்கலாம். அதுவும் குற்றமாகும். 'நான் பணம் வாங்கியது உண்மைதான். ஆனால், நான் என் வாக்கைப் பணம் கொடுத்தவருக்கு அளிக்கவில்லை. இன்னொருவருக்குத்தான் அளித்தேன்' என்று ஒரு வாக்காளர் கூறித் தப்ப முடியாது. தமக்குப் பணம் கொடுத்தவருக்கு ஒருவர் வாக்களித்தாலும் அளிக்காவிட்டாலும், பணத்தை வாங்கிய செயல் குற்றமாகிறது.

வாக்காளர்களுக்கு 'விருந்து உபசாரம்' (Treating) அளித்து அவர்களுடைய வாக்குகளைத் தமக்குப் பெற முயலுவதும் குற்ற

மாகும். அதுவும் இலஞ்சம் அளிப்பது என்று சட்டம் கொள்ளு கிறது. உணவளித்தல், களியாட்டம் காண்பித்தல், இருக்கைக்கு வேண்டிய வசதியளித்தல் இவையெல்லாம் 'விருந்துபசாரம்' எனப்படுவன.

மேலே கூறப்பட்ட செயல்களைத் 'தேர்தலில் இலஞ்சம்' (Bribery in elections) என்கிறோம். இக் குற்றத்திற்கு ஒரு வருடம் வரை சிறைவாசம், அல்லது அபராதம் அல்லது இரண்டும் தண்டனையாக விதிக்கப்படலாம் (171-B and E பிரிவு).

இலஞ்சமாக 'விருந்துபசாரம்' செய்தவருக்கு அபராதம் மட்டுமே விதிக்கப்படுகிறது.

பொதுமக்களுக்கு ஒரு நன்மை செய்வதாகக் கூறுவதோ, தம்முடைய பொதுக் கொள்கைகளைக் கூறுவதோ, பிறரைத் தூண்டும் குற்றம் ஆகாது. 'என்னைத் தேர்ந்தெடுத்தால், இந்தத் தாலுக்காவிலுள்ள கிராமங்களனைத்திற்கும் மின்சார வசதி ஏற்படுமாறு செய்வேன்' என்று ஒரு வேட்பாளர் கூறினால், அது தேர்தல் குற்றம் ஆவதில்லை.

## தேர்தலில் தகாத முறையில் தலையிடுதல்

பிறர் தமது தேர்தல் உரிமையைக் கொண்டாடுவதில் மற்றவர் தலையிடுவதோ, அல்லது தலையிட முயலுவதோ கூடாது.

ஒரு வேட்பாளருக்கோ அல்லது வாக்காளருக்கோ, அல்லது அவர்கள் அக்கறைகொண்டுள்ள மற்றவருக்கோ எவ்விதமான தீங்கும் ஏற்படுத்துவதாக பயமுறுத்துதல் கூடாது. மேலும், அவர்களுக்குத் தெய்வத்தின் சாபம் ஏற்படும் என்று அச்சுறுத்தி அவர்கள் சுதந்திரமாகச் செயற்படுவதைக் கெடுக்க முயலுவதும் குற்றமாகும். இது தகாத முறையில் தலையிடுவதாகும்.

ஒரு மதத்தலைவர் அந்த மதத்தைச் சேர்ந்தவர்கள் கூடியுள்ள கூட்டம் ஒன்றில் இன்னாருக்கு வாக்குகளை அளிக்கவேண்டும் என்று கூறி, அவ்வாறு செய்யவில்லையெனில் அது அந்த மதத்திற்குச் செய்யும் துரோகம் என்று கூறினால், அது 'தகாத முறை தலையிடுத' லாகும்.

ஆனால், மக்களுக்குப் பொதுவான கொள்கையை அறிவித்தோ அல்லது பொதுமக்களுக்கு நன்மை செய்யப்படுமென்று கூறியோ மக்களிடம் வாக்குகளைக் கேட்பது குற்றமாவதில்லை. தம்மை மக்கள் தேர்ந்தெடுத்தால் நாட்டிற்கு இன்னின்ன நன்மைகள் செய்யப்படும் என்று ஒருவர் பிரசாரம் செய்யலாம்.

இவ்வாறு தலையிடுதல், 'தேர்தலில் தகாத முறையில் தலையிடுதல்' (Undue influence at elections) என்ற குற்றமாகும். இலஞ்சக் குற்றத்திற்கான அளவு தண்டனை இதற்கும் உண்டு (171-C பிரிவு).

## தேர்தலில் ஆள்மாருட்டம் செய்தல்

ஒருவருடைய பெயரால் இன்னொருவர் வாக்களிப்பது குற்றமாகும். இறந்துபோன ஒரு நபரின் பெயரால் மற்றொருவர் வாக்களிப்பதும் கூடாது. ஒரு முறை வாக்களித்துவிட்டு மீண்டும் அதே தேர்தலில் வாக்களிப்பதும் கூடாது.

மேற்சொன்னவாறு வாக்களிப்பது குற்றமாவதுபோல, அவ்வாறு செய்வதற்கென்று வாக்குச் சீட்டைப் பெற முயலுவதும் குற்றமாகும்.

இவ்வாறு ஆள்மாருட்டம் செய்வதற்கு வசதி செய்பவர்கள், முயற்சி செய்பவர்கள், தூண்டுபவர்கள் அனைவருமே குற்றத்திற்கு ஆளாகிருர்கள்.

வாக்குச் சீட்டு அளிக்கும் அதிகாரியிடம் போய் ஆள்மாருட்டம் செய்பவர் வாக்குச் சீட்டு கேட்டவுடனேயே குற்றம் நிகழ்ந்துவிடுகிறது. அவர் அந்தச் சீட்டை வாக்குப் பெட்டியில் போட்டிருக்க வேண்டுமென்பது அவசியமில்லை. எனவே, ஆள்மாருட்டமாக வாக்குச் சீட்டைப் பெற முயலுவதே குற்றமாகும் என்பதை நினைவில் கொள்ளவேண்டும் (171-D பிரிவு).

## தேர்தலில் பொய்ப் பிரசாரம்

தேர்தலின் முடிவை பாதிக்கும் கருத்தோடு வேட்பாளரின் தனிப்பட்ட நடத்தைபற்றியோ, அவரின் குண இயல்புபற்றியோ ஒருவர் தமக்குப் பொய் என்று தெரிந்த ஒன்றை, அல்லது அது உண்மையா, பொய்யா என்று தெரியாத ஒன்றை உண்மை என்று கூறிப் பிரசாரம் செய்து, அந்தப் பிரசாரத்தில் கூறப்பட்ட விஷயங்கள் பொய்யானவையாக இருந்தால், அதுவும் குற்றமாகும் (171-G பிரிவு).

## தேர்தலுக்கென முறையற்ற செலவு செய்தல்

வேட்பாளரின் அனுமதி இன்றி அவருக்கு ஆதரவு தேடும் வகையில் பொதுக்கூட்டம் கூட்டுதல், விளம்பரம் செய்தல் முதலியவற்றிற்குப் பிறர் செலவு செய்தல் கூடாது. பத்து ரூபாய்க்குக் குறைந்த செல்வை ஒருவர் செய்யலாம். ஆனுல், செலவு செய்த தேதியிலிருந்து பத்து நாட்களுக்குள் அச் செலவிற்கான சம்மதத்தை

வேட்பாளரிடமிருந்து எழுத்துமூலமாகப் பெறுதல் வேண்டும் (171-H பிரிவு).

## தேர்தல் செலவு கணக்கு வைக்கத் தவறுதல்

தேர்தல் கணக்கு வைக்கவேண்டுமென்று சட்டம் விதித்திருக்க, அவ்வாறு வைக்காமல் இருப்பது குற்றமாகும். அக் குற்றத்திற்கு ரூ. 500 வரை அபராதம் விதிக்கப்படலாம்.

குற்ற இயல் தொகுப்புச் சட்டம் முதலாவதாக இயற்றப்பட்ட போது, தேர்தல் குறித்த குற்றங்கள்பற்றிக் கூறப்படவில்லை. ஆனால், 1920ஆம் வருடத்தில் இத் தேர்தல் குற்றங்கள்பற்றிப் புதிய பிரிவுகள் குற்ற இயல் சட்டத்தில் சேர்க்கப்பட்டன. இவை இச் சட்டத்தில் 'IX-A' என்ற அத்தியாயத்தில் 171-A to 171-H பிரிவுகளில் கூறப்படுகின்றன.

தேர்தல்கள் நல்ல முறையில் நடைபெற்றால்தான் ஜனநாயக ஆட்சி நிலைக்க முடியும். தனிப்பட்டவர்களின் செல்வாக்கிற்கோ, பணத்திற்கோ, அச்சுறுத்தலுக்கோ, அழிம்பிற்கோ மக்கள் ஆட்பட்டுவிட்டால், அவர்கள் தங்கள் விருப்பப்படி சுதந்திரமாக வாக்குகளை அளிக்க இயலாதுபோய்விடும். முடிவில், தேர்தலில் வெற்றி பெறுவோர், மக்களின் உண்மையான பிரதிநிதிகளாக இல்லாமல் முறையற்ற செல்வாக்கினாலும் பணபலத்தாலும் வெற்றி பெற்றவர்களாகவே இருப்பார்கள். இவர்களால் நடத்தப்படும் ஆட்சி உண்மையான மக்கள் ஆட்சியாக இருத்தல் முடியாது.

ஆதலால், மக்கள் ஆட்சி உண்மையாகவே மக்களது ஆட்சியாக மலர்ந்து பலனளிக்கவேண்டுமானால், தேர்தலிலே தூய்மையும் முறைமையும் இருக்கவேண்டும். இந்த நோக்கத்தைக்கொண்டு, மேலே கூறப்பட்ட செயல்களைக் குற்றங்களாகச் சட்டம் விதிக்கின்றது.

## 33. அரசுக்கெதிரான குற்றங்கள்
### (Offences against the State)

இந்திய அரசுக்கு எதிராகப் போர் தொடுத்தல், அதற்கு முயலுதல, அதற்கு உடந்தையாக இருத்தல்—இந்திய அரசுக்கெதிராகப் போர் தொடுக்கச் சதிசெய்தல்—அரசுக்கெதிராகப் போர் நடத்த ஆட்கள், ஆயுதங்கள் சேகரித்தல்—அரசுக்கெதிரான போர்த்திட்டத்தை மறைத்தல்—குடியரசுத் தலைவர், மாநில கவர்னர் இவர்களைத் தாக்குதல்—அரசுப் பகைமை மூட்டல்—நேசநாடுகளுடன் போர்புரிதல், அந் நாட்டுப் பிரதேசத்தில் கொள்ளையிடல்—வெளிநாட்டுக் கைதிகளையும், போர்க் கைதிகளையும் தப்பவிடுதல், அவர்கள் தப்புவதற்கு உதவுதல்.

பெரும்பாலும் குற்றங்கள் ஒருவர் பிறருக்குக் கேடு விளைக்கும் செயல்களாகவே அமைகின்றன. அச் செயல்கள் செய்தவர்களை அரசு தண்டிக்கின்றது. அரசுக்கே கேடு விளைக்கும் செயல்களைச் செய்வோர் நிலையென்ன? அவர்களும் குற்றவாளிகள்தாம்.

அரசு நல்ல முறையில் அமைந்து செயற்பட்டால்தான் மக்கள் நல்வாழ்வு வாழமுடியும். அரசமைப்பின் உறுதிப்பாட்டிற்கே ஆபத்தை விளைப்பது நாட்டிற்கும் நல்வாழ்விற்கும் பெருந்தீங்கு பயப்பதாகும். எனவே, அரசுக்கெதிராக வன்முறையைப் பயன் படுத்தி அரசமைப்பை நிலைகுலையச் செய்ய முயலுபவர்களைச் சட்டம் கடுமையாகத் தண்டிக்கிறது.

### இந்திய அரசுக்கெதிராகப் போர்தொடுத்தல், அதற்கு முயலுதல், அதற்கு உடந்தையாக இருத்தல்

இந்திய அரசுக்கெதிராகப் போர் தொடுத்தல், அல்லது போர் நடத்த முயலுதல், அல்லது போர் நடத்த உடைந்தையாக இருத்தல் இக் குற்றங்களுக்கு மரண தண்டனை அல்லது ஆயுட் காலச் சிறை, அபராதம் விதிக்கப்படுகின்றன.

**உதாரணம்:** இந்திய அரசாங்கத்தைக் கவிழ்க்கும் வன்முறைக் கிளர்ச்சியில் ஒருவர் சேருகின்றார். அவர் இந்தப் பிரிவுப்படி குற்றம் செய்தவராகின்றார் (121 ஆம் பிரிவு).

ஒரு நாடு மற்ருெரு நாட்டின்மீது படையெடுத்துப் போர் தொடுக்கின்றது. அத்தகைய போரை நாம் இங்குக் கருதவில்லை. ஒரு நாட்டின் குடிகளே அந்த நாட்டின் அரசுக்கெதிரான போர்ச் செயலில் ஈடுபடுவதுதான் இந்தப் பிரிவில் கூறப்படும் குற்றச் செயலாகும். 'போர்ச் செயல்' என்ருல், உள்நாட்டு மக்களில் சிலரோ, ஒருவரோகூட அரசுக்கெதிராக வன்முறையில் கிளர்ச்சி நடத்தி அரசமைப்பைக் குலைப்பதற்கு முயலுவதுதான்.

ஒரு கூட்டத்தினர் சேர்ந்து வன்முறைச் செயல்களில் ஈடுபடு கின்றனர் எனில், அக் கூட்டத்தினரின் நோக்கமென்ன, கருத் தென்ன என்பதே முக்கியமாகும். அக் கூட்டத்தினரின் எண்ணிக் கையோ, அவர்கள் கைக்கொண்டுள்ள ஆயுதங்களோ முக்கியமன்று. அரசின் தனி அதிகாரத்தைத் தாக்கி, வன்முறையில் ஒரு பொதுக் காரியத்தைச் சாதித்துக்கொள்ளும் நோக்கத்துடன் இயங்குவதே 'போர்ச்செயல்' என்று இங்குக் குறிப்பிடப்படுகிறது. ஒரு பொதுக் காரியத்தை நோக்கமாகக்கொண்டு, அரசுக்கெதிராக வன்முறைக் கிளர்ச்சியில் இறங்குவதைத்தான் 'போர் தொடுப்பது' என்று கூறுகிருேம்.

மக்களில் இரு கட்சியினருக்குள் உள்ள பகையால், ஒரு கூட்டத் தினர் மற்ருெரு கூட்டத்தினரை ஆயுதங்கள் தாங்கித் தாக்கலாம். போலீசார் நிலைமையைச் சீர்திருத்த முயன்றும், அதையும் மீறிக் கலகம் பெருகலாம். கலகத்தில் போலீசாரும் தாக்கப்படலாம். ஆனல், இது அரசின்மீது போர் தொடுப்பதாகாது. ஏனெனில், இரு கூட்டத்தினரின் நோக்கமும் அரசின் நிலையைச் சீர்குலைப்பதன்று. எந்தப் பொதுக் காரியத்தையும் நோக்கமாகக்கொண்டு அவர்கள் கலகத்தில் இறங்கவில்லை.

அரசுக்கு அடங்கி நடக்கவேண்டுமென்ற அரசுப் பற்றுறுதிக் கொள்கையைக் (allegiance) கைவிட்டு, அரசின் ஆதிக்க அதி காரத்தை நேரடியாக எதிர்த்து, பகை நாட்டினர் நம் நாட்டிற்குள் வந்து போர்ச்செயலில் ஈடுபட்டால் எவ்வாறு இயங்குவார்களோ அவ்வாறு இயங்குவதைத்தான் இந்தப் பிரிவு தடைசெய்கிறது.

**போர் நடத்த உடந்தையாக இருத்தல்**

பொதுவாகக் குற்ற முயற்சிக்கும், குற்ற உடந்தைக்கும் அளிக் கப்படும் தண்டனை முடிவடைந்த குற்றத்திற்கானதைவிடக் குறை வாகவே இருக்கும். ஆனல், இந்தக் குற்றத்தைப் பொறுத்தவரை யில், முயற்சிக்கும், உடந்தைக்கும், முடிந்த குற்றத்திற்கும் ஒரே தண்டனை விதிக்கப்படுகிறது. ஏதனல்?

அரசுக்கெதிராகப் போர் நடத்தும் செயல் வெற்றி பெற்றுவிடுகிறது என்று வைப்போம். அரசின் ஆதிக்கம் அழிந்துவிடுகிறது. போர் நடத்தி அவ்வாறு அழித்தவரை யார் தண்டிப்பது? தண்டிப்பதற்கான அரசமைப்பே அழிக்கப்பட்டபின், அதை அழித்தவரைத் தண்டிப்பதற்கு எவருமில்லை. ஒருவரைக் கொலை செய்யக் கருதிச் செயற்படுபவன், கொலைச்செயல் நிறைவேறியபின் தப்பிவிடுவது முடியாது. கொலை நடந்தபின்தான் அவன் சட்டத்தின் பிடியில் தவருது அகப்படும் ஆபத்து அதிகமாகிறது. அக் கொலையைச் செய்யச் சதிசெய்த நிலையில் அவன் தப்பியிருக்கலாம். ஏனெனில், சதிச்செயல் பிறருக்குத் தெரியாதிருக்கலாம். ஆனால், கொலைக் குற்றத்தைச் செய்தபின் சட்டம் அவனைத் தவருது தொடர்கிறது. திருடுபவன் அடுத்தவரின் பணப்பையை எடுத்துக்கொண்டபின் அதிக ஆபத்துக்காளாகின்றுன். திருடுவதற்கு உடந்தையாக இருந்தபோதோ, திருடுவதற்கு முயன்றபோதோ, அவனது செயல் பிறருக்குத் தெரியாதிருந்திருக்கலாம். ஆனால், திருடிய குற்றம் நிறைவேறியபின் அக் குற்றம் வெளிப்பட்டுக் குற்றவாளி தண்டனை பெறும் ஆபத்து அதிகமாகின்றது. திருட்டு, கொலைபோன்ற குற்றங்களைப்பொறுத்த நிலை இவ்வாறிருக்க, அரசுக்கெதிராகப் போர் தொடுக்கும் குற்றத்தின் நிலை வேறுபாடுடையது. அரசுக்கெதிரான போர்ச்செயலில் வெற்றி பெற்றுவிட்டால், அரசு அமைப்பு அழிந்து விட்டால், கிளர்ச்சிக்காரரைத் தண்டிப்பது இயலாததாகிவிடுகிறது. எனவே, அரசுக்கெதிரான இக் குற்றத்தை முளையிலேயே கிள்ளியெறியவில்லையெனில், பேராபத்து விளைகின்றது. ஆதலால்தான், உடந்தையாக இருந்த நிலையிலும், முயற்சி செய்த நிலையிலும் குற்றத்திற்கான தண்டனை முடிந்த குற்றத்திற்கான தண்டனையை ஒப்பவே விதிக்கப்பட்டிருக்கிறது.

* * * *

நம் நாட்டில் ஆங்கில ஆட்சி நடந்த காலத்தில், ஆங்கிலேயர்களை ஒழித்துக்கட்டவேண்டுமென்றும், அந்த ஆட்சியை அழிப்பதற்கு மக்கள் தயாராகவேண்டுமென்றும், ஆயுதந் தாங்கிப் போரிட்டு வெற்றி பெறவேண்டுமென்றும் உணர்ச்சியை எழுப்பி மக்களைத் தூண்டிவிடும் வகையில் ஒரு பாட்டுப் புத்தகம் வெளியிடப்பட்டது. இது அரசுக்கெதிராகப் போர் நடத்தத் தூண்டுவது என்று கொள்ளப்பட்டுப் பாட்டுகளை எழுதியவர் தண்டனை பெற்றுர்.

## இந்திய அரசுக்கெதிராகப் போர்தொடுக்கச் சதிசெய்தல்

121ஆம் பிரிவிற் கூறியபடி, இந்திய அரசுக்கெதிராகப் போர் தொடுக்கச் சதி செய்வது,

மத்திய அரசாங்கம், மாநில அரசாங்கம் இவற்றை வன்முறைச் செயலாலோ, வன்முறைச் செயலில் இறங்கப்போவதாகக் காட்டியோ கிலியடையச் செய்யவேண்டுமென்று சதிசெய்வது

இக் குற்றத்திற்கு ஆயுட்காலச் சிறையும் அபராதமும் தண்டனையாகும்.

சதியின் விளைவாக வேறு எந்தவிதச் செயலும் சட்டமுரணுள்ள செய்யாமையும் இல்லாதிருந்தாலுங்கூட, இச் சதிக்குற்றம் தண்டனைக்குரியது.

சதி இந்திய நாட்டிற்குள் செய்யப்பட்டாலும் சரி, வெளிநாட்டில் செய்யப்பட்டாலும் சரி, குற்றமாகும் (121-A பிரிவு).

1948ஆம் ஆண்டில் பொதுவுடைமைக் கட்சியாளர்கள் வன்முறைச் செயல்களில் இறங்கி, மத்திய, மாநில அரசாங்கத்தைக் கவிழ்ப்பதென்று சதிசெய்து, செயலில் இறங்கினர். கட்சிக் காரியாலயத்திலிருந்து உறுப்பினர்களுக்கு அனுப்பப்பட்ட சுற்றறிக்கைகள், உறுப்பினர்கள் ஒருவருக்கொருவர் எழுதிக்கொண்ட கடிதங்கள் இவற்றிலிருந்து அந்தச் சதி வெளிப்பட்டது. அவர்களது வன்முறைச் செயல்களும் இச் சதியைக் காட்டிக்கொடுத்தன. சென்னை மாநிலத்தில் இராமநாதபுரம், திருநெல்வேலி, திருச்சிராப்பள்ளி மாவட்டங்களில் தனித்தனியாகப் பொதுவுடைமையாளர்கள்மீது வேறு குற்றச்சாட்டுகளோடு இந்தப் பிரிவின்கீழும் குற்றஞ்சாட்டி வழக்குத் தொடரப்பட்டது. அதில் அவர்கள் தண்டனை பெற்றனர்.

இந்திய அரசுக்கெதிராகப் போர்தொடுக்கவோ, மத்திய, மாநில அரசாங்கங்களுக்கு எதிராக வன்முறை காட்டிக் கிலியடையச் செய்யவோ ஒருவருக்கொருவர் ஒப்புக்கொண்டவுடனேயே சதிக் குற்றம் நிறைவேறிவிடுகிறது. அந்த ஒப்புதலின் விளைவாக எந்தச் செயலோ, சட்ட முரணுள்ள செய்யாமையோ நிகழ்ந்திருக்க வேண்டியதில்லை.

(பொதுவாகச் சதிக்குற்றம்பற்றிச் 'சதிக்குற்றம்' என்ற தலைப்பில் காணலாம்.)

## அரசுக்கெதிராகப் போர் நடத்த ஆட்கள், ஆயுதங்கள் சேகரித்தல்

இந்திய அரசுக்கெதிராகப் போர் நடத்தும் கருத்தோடு, ஆட்கள், ஆயுதங்கள், இராணுவத் தளவாடங்கள் இவற்றைச் சேகரிப்பது, வேறு வகையில் போர் நடத்துவதற்கு ஆயத்தம் செய்வது இக் குற்றத்திற்கும் ஆயுட்காலச் சிறையும் அபராதமும் தண்டனை (122ஆம் பிரிவு).

## அரசுக்கெதிரான போர்த்திட்டத்தை மறைத்தல்

இந்திய அரசுக்கெதிராகப் போர் செய்வதற்கு வசதியளிக்கும் கருத்தோடு, அல்லது வசதியளிப்பதாகுமென்பதை அறிந்து ஏதாவது ஒன்றைச் செய்வதாலோ, அல்லது சட்ட முரணுள்ள செய்யாமையாலோ

அத் திட்டத்தை மறைப்பது குற்றமாகும். பத்தாண்டுக் காலம் வரை சிறையும், அபராதமும் இதற்குத் தண்டனையாகும் (123ஆம் பிரிவு).

## குடியரசுத் தலைவர், மாநில கவர்னர்கள் இவர்களைத் தாக்குதல்

தங்கள் சட்டப்படியான அதிகாரத்தை எந்த முறையிலாவது செலுத்தும்படி அல்லது செலுத்தாமலிருக்கும்படி

இந்தியக் குடியரசுத் தலைவர், மாநில கவர்னர் இவர்களைத்

தூண்டும் அல்லது கட்டாயப்படுத்தும் கருத்துடன்

அவர்களைத் தாக்க முனைவது, முறையின்றித் தடைசெய்வது, முறையின்றித் தடைசெய்ய முயலுவது, வன்முறையாலோ, வன்முறை காட்டியோ கிலியேற்படுத்துவது, கிலியேற்படுத்த முயலுவது குற்றமாகும்.

இக் குற்றத்திற்கு ஏழாண்டுக் காலம்வரை சிறை, அபராதம் தண்டனையாம் (124ஆம் பிரிவு).

## அரசுப் பகைமை மூட்டல் (Sedition)

ஜனநாயக நாடுகளில் அரசாங்கத்தின் செயல்கள் கண்டிக்கப் படுகின்றன. அரசை நடத்தும் அரசியற் கட்சியினரின் குறைகள் கூறப்படுகின்றன. ஆட்சி முறையில் உள்ள குறைகளை வெளிப்படை யாக, எல்லோரும் அறியும்படி செய்வதுதான் ஜனநாயக ஆட்சியின் அடிப்படை இயல்பாகும். மேலும், பேச்சுரிமை மக்களுக்குள்ள அடிப்படை உரிமைகளில் ஒன்று. பேச்சுரிமையின் பயனாலும், ஜனநாயக அரசுமுறை அமைப்பாலும் அரசின் செயற்பாடுகள் சீரிய ஆய்வுக்கு இலக்காகி அதன் குற்றங்குறைகள் வெளியிடப்படுகின் றன. இத்தகைய உரிமையும் நிலைமையும் உறுதியோடு அமைவது நல்லாட்சி நடைபெறுவதற்கு ஏதுவாகும்.

ஆனால், அதேவேளையில், அரசுமுறையின் அடிப்படையில் மக்களுக்குள்ள பற்றுறுதி அற்றுப்போதல் கூடாது. அரசுமுறைக்கு அடங்கி அமைதி குலைக்காமல் வாழவேண்டுமென்பது நாகரிக வாழ்

விற்கு அடிப்படையாகும். அந்த அடிப்படையான நெறியைக் கைவிட்டு, அரசின் இயல்பான அதிகாரங்களை எதிர்த்து, பொது அமைதியைக் குலைத்து அரசின் அடிப்படையை அழிக்க முயலுவது பொதுக் குழப்பத்திற்கும், நாட்டின் கேட்டிற்கும் அடிகோலிவிடும். அரசமைப்பை மதித்தல் வேண்டும்; ஆட்சி நெறியைப் பேணல் வேண்டும்; அமைதி காத்து ஒழுகல் வேண்டும். இந்த நெறி மக்களிடை பரவி நிற்கிறது. இதைப் போக்க முயன்று, அரசின் மேல் பகையுணர்வை மூட்டுவது தகாத செயலாகும்.

அரசை நடத்துவோரை மாற்றுவது ஒன்று, அரசமைப்பையே எதிர்ப்பது மற்றொன்று. முன்னது ஜனநாயகச் செயல்; பின்னது ஜனநாயகத்திற்கெதிரான செயல். அமைதி வழியில் ஆட்சியாளரின் குறைகளைக் கூறுவது அறநெறி; அழிவு வழியில் ஆட்சியமைப்பை அவமதித்து நடக்கக் கூறுவது மறநெறி. வளர்ச்சிக்கு வழியமைப்பது முன்னது, கிளர்ச்சியில் விடுவது பின்னது. எனவேதான், பேச்சுரிமையும் ஜனநாயக முறையும் பேணப்படும் நாட்டிலும்கூட, அரசமைப்பின் அடிப்படைக்கு ஆபத்து விளைக்காமல் பாதுகாப்பதற்கென மக்களின் செயல்களுக்கு வரையறை வகுப்பது அவசியமாகிறது. வரையறை வகுத்து அதற்கு இணங்கி நடத்தலே வாழ்வின் சிறப்பாகும்.

அரசின்மீதுள்ள பற்றுறுதியைக் கைவிட்டு, அரசின்மீது பகைமையை, இழி உணர்வை வளர்ப்பது நாட்டிற்குத் தீமை பயக்கும் செயல்களாகும். இக் குற்றத்தை 'அரசுப் பகைமை மூட்டல்' (Sedition) என்று குறிப்பிடுகிறோம்.

**அரசுப் பகைமை மூட்டல் (Sedition) என்றால் என்ன?**

ஒருவர், வாய்மொழி, எழுத்து, சைகை, காட்சிச் சின்னங்கள் முதலியவற்றால்,

இந்தியாவில் சட்ட முறையில் நிலைபெற்றுள்ள அரசின்மீது,

வெறுப்புணர்வு, இழிவுணர்வு, பகையுணர்வு இவற்றினை மக்களிடம் உண்டாக்குவது அல்லது உண்டாக்க முயலுவது, 'அரசுப் பகைமை மூட்டல்' என்ற குற்றமாகும்.

இக் குற்றத்திற்கு ஆயுட்காலச் சிறை அபராதம் தண்டனையாகும்.

**விளக்கம்**

(1) 'பகையுணர்வு' (disaffection) என்பதில் பற்றுறுதி இன்மையும் (disloyalty), பலவிதமான பகைமையுணர்வும் அடங்குவன.

(2) வெறுப்புணர்வு, இழிவுணர்வு, பகையுணர்வு, இவற்றினைத் தோற்றுமல், அரசாங்கத்தின் நடவடிக்கைகளைக் கண்டித்துக் கருத்துரை தெரிவித்து அந் நடவடிக்கைகளைச் சட்டமுறையில் மாற்ற முயலுதல் குற்றமாகாது.

(3) நிர்வாகத் துறையிலும், வேறு துறைகளிலும் அரசாங்கத்தின் செயல்களைக் கண்டிக்கும் கருத்துரையை, வெறுப்புணர்வு, இழிவுணர்வு, பகையுணர்வு இவற்றினைத் தோற்றுத வகையில் வெளியிடுதலும் குற்றமாவதில்லை (124 A பிரிவு).

அரசாங்கத்தின்மீது வெறுப்புணர்வு, இழிவுணர்வு, பகையுணர்வு இவற்றினைத் தோற்றும் செயல்களை ஒருவர் செய்தல்கூடாது என்று இப் பிரிவு கூறுகிறது.

அரசாங்கத்தின்மீது வெறுப்புணர்வும் பகையுணர்வும் வளர்ந்தால் என்ன ஆகும்? மக்கள் அரசுக்கெதிரான வன்முறைக் கிளர்ச்சியில் இறங்கிவிடுவார்கள். அரசின் அடிப்படையும், அமைதியான வாழ்வும் ஆபத்துக்குள்ளாகின்றன. ஒருவரது பேச்சாலோ, எழுத்தாலோ அரசெதிர்க் கிளர்ச்சி மூண்டிருக்கவேண்டுமென்ற அவசியமில்லை. அத்தகைய கிளர்ச்சியைக் கிண்டிவிடவேண்டுமென்ற கருத்துடன் அக் கருத்தை வெளிப்படுத்தும் வகையில் எழுதுவதும் பேசுவதும் குற்றமாகின்றன.

ஒருவர் பேசுகிறுர் அல்லது எழுதுகிறுர். அது யாரிடம், எந்த வகையான மக்களிடம் பேசப்பட்டது? எந்த நிலையிலுள்ள மக்கள் படிப்பதற்கென்று எழுதப்பட்டதென்பதை நாம் கவனிக்கவேண்டும். அந்த மக்களிடை அந்தப் பேச்சோ, எழுத்தோ எத்தகைய உணர்ச்சிகளை எழுப்பலாமென்பதை ஆராயவேண்டும். அத்தகைய உணர்ச்சிகளை எழுப்பக் கருதியே அவ்வாறு அவர் பேசினுர் அல்லது எழுதினுர் என்பதை நாம் ஊகித்து அறிகின்ருேம். இவ்வாறு. குற்றம் சாட்டப்பட்டவரின் கருத்தை நாம் அறிந்து, அவர் குற்றவாளியா இல்லையா என்பதை உறுதி செய்கிருேம்.

எழுதியதோ, பேசியதோ எங்கு, எவரிடம், எந்தச் சூழ்நிலையில் நிகழ்த்தப்பட்டது? யாரால் நிகழ்த்தப்பட்டது? எந்தவித உணர்ச்சிகளை அந்தப் பேச்சோ, எழுத்தோ எழுப்பிவிடக் கூடியதாக இருந்தது? நேரடியாக அது மக்களைத் தூண்டிவிடாததாக இருக்கலாம். வரலாற்றுக் கதையைக் கூறுவதாக அது இருக்கலாம். ஒழுக்கத்தை உரைப்பதுபோன்று அது அமையலாம். கவிதையாக, நாடகமாக, உருவகக் கதையாக, பாட்டாக அது அமையலாம். ஆயினும், அதனுட் பொதிந்து கிடக்கும் பொருள் என்ன? குற்றஞ்சாட்டப்பட்டவர் எழுதிய கட்டுரை முழுதையும்

படிக்கவேண்டும். முழுக் கட்டுரையின் பொருளென்ன என்று ஆய்தல்வேண்டும். ஏதோ ஓரிரண்டு சொற்றொடர்களைமட்டும் படித்து அதன் பொருளை உய்த்துணர்தல் சரியன்று. பத்திரிகையாளர்கள் எழுதும்பொழுது, ஒரு வழக்கறிஞரின் அல்லது ஒரு விஞ்ஞானியின் எழுத்தில் உள்ள சுருக்கமும் நுட்பமும் இருக்காது. எனவே, பொதுப்படையாக, ஒரு கட்டுரையைப் படித்து, அதன்பின் அக் கட்டுரையின் கருத்தென்ன என்பதைக் கவனித்து அறிதல் வேண்டும். இவற்றையெல்லாம் ஆய்ந்துதான் ஒன்றைப் பேசியவர் அல்லது எழுதியவருடைய குற்றப் பொறுப்பை உறுதி செய்ய வேண்டும். இவ்வாறு, பாலகங்காதர திலகர்மீது 1897ஆம் ஆண்டில் நடந்த சரித்திரப் புகழ்பெற்ற அரசுத்துரோக வழக்கில் நீதிபதிகள் கூறியிருக்கின்றனர்.

ஒரு கட்டுரை எவருக்கென எழுதப்பட்டதோ, அம் மக்கள் அதை எவ்வாறு இயல்பாகப் புரிந்துகொள்வார்கள் என்ற அடிப்படையில் அதை எழுதியவரின் கருத்தினை உறுதிசெய்தல் வேண்டும் என்று டாக்டர் அன்னிபெசன்ட் அம்மையார்மீது இடப்பெற்ற வழக்கில் பிரிவி கவுன்சில் (Privy Council) கூறியிருக்கிறது.

குற்றமான கட்டுரையை எழுதிய ஆசிரியரோடு, அதை வெளியிட அச்சிடுவோரும் குற்றவாளியாகின்றனர். செய்தித்தாளில் குற்றக்கட்டுரை வெளியிடப்பட்டால், கட்டுரையின் ஆசிரியர், பத்திரிகையின் ஆசிரியர், பத்திரிகையை அச்சிடுவோர் அனைவரும் குற்றத்திற்கு ஆளாகின்றனர். அக் கட்டுரை வெளியிடப்படவில்லையெனில் அது குற்றமாவதில்லை. பிரசுரம் நிகழ்ந்த பின் தான் குற்றம் எழுகின்றது.

அரசாங்கத்தின் நடவடிக்கைகளை நல்லெண்ணத்தோடு கண்டித்தல், பகையுணர்வு, வெறுப்புணர்வு இவற்றை ஊட்டாத வகையில் அரசாங்கத்தின் நிர்வாகத்தைக் குறைகூறுதல் குற்றமாகாது. இவ்வாறு, குறைகூறிக் கண்டிப்பது நல்லாட்சிக்கு அவசியமாகையால், குற்றத்தை விளக்கும் சட்டப் பிரிவிலேயே இந்த விளக்கமும் கொடுக்கப்பட்டுள்ளது. ‘இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னனுக’ அரசாங்கம் செயற்படுதல் கூடாது. எனவே, நல்லெண்ணத்தோடு இடித்துக் கூறுதலுக்கு இடம் அளிக்கின்றது சட்டம். செய்திப் பத்திரிகைகளின் உரிமை இவ்வாறு பாதுகாக்கப்படுகிறது.

பொதுவாக, மக்களிடை அதிருப்தியை விளைவித்து, அரசின் மீதுள்ள பற்றுறுதியைக் குலைத்து, வெறுப்பையும் பகைமையையும் வளர்த்து, கிளர்ச்சியையும் உள்நாட்டுக் கலகத்தையும் மூட்டி

விடும் செயல்களையே இந்தப் பிரிவு தடைசெய்கிறது. பொது அமைதியைக் குலைக்கத்தக்க செயல்களைச் சட்டம் கண்டிக்கிறது.

ஒருவருக்கு மற்றொருவர் அவதூறு விளைத்தால் அது 499ஆம் பிரிவுப்படி குற்றமாகிறது ; ஒரு சமூகத்தினர் அல்லது இனத்தினர் இவர்களுக்கு அவதூறு விளைத்தால் அது 153A பிரிவுப்படி குற்றமாகும். அரசுக்கு அவதூறு விளைத்து, அரசின்மேல் மக்களுக்கு வெறுப்புணர்வும் இழிவுணர்வும் ஏற்படும்படி செய்தால் அது 124A பிரிவுப்படி குற்றமாகிறது.

ஆங்கிலேயர் நம் நாட்டை ஆண்டுவந்த நாட்களில், நாட்டு விடுதலைக்குப் பாடுபட்ட பாலகங்காதர திலகர், அன்னிபெசன்ட் அம்மையார் போன்ற பெரியார்கள்மேல் இக் குற்றம் சாட்டப் பட்டது.

## நேச நாடுகளுடன் போர்புரிதல், அந் நாட்டுப் பிரதேசத்தில் கொள்ளையிடல்

இந்திய அரசுடன் நேசமாக இருக்கும் ஆசிய நாடுகளுடன் போர் நடத்துவதும், போர் நடத்த முயலுவதும், அதற்கு உடந்தை யாக இருப்பதும் குற்றம். இதற்கும் ஆயுட்காலச் சிறைத் தண்டனை விதிக்கப்படலாம் (125ஆம் பிரிவு).

இந்திய அரசின் நேச நாடுகளின் பிரதேசத்தில் கொள்ளை யிடுதலும், கொள்ளையிட ஆயத்தம் செய்தலும் குற்றமாகும். இவ்வாறு கொள்ளையிடப்பட்ட பொருள்களைப் பெறுவதும் குற்றம் (126ஆம் பிரிவு).

## வெளிநாட்டுக் கைதிகளையும், போர்க் கைதிகளையும் தப்பவிடுதல், அவர்கள் தப்புவதற்கு உதவுதல்

வெளிநாட்டுக் கைதிகளையும், போர்க் கைதிகளையும் காவல் காக் கும் பொது ஊழியர் அவர்களை வேண்டுமென்றே தப்பவிடுவது பெருங் குற்றமாகும். அதற்கும் ஆயுட்காலச் சிறைத் தண்டனை உண்டு (128ஆம் பிரிவு). கவனமின்மையால் அக் கைதிகளைத் தப்பவிடு வதற்கான தண்டனை மூன்றுண்டுக் காலம்வரை சிறையாகும் (129ஆவது பிரிவு). இக் கைதிகள் தப்புவதற்கு உதவி செய்வது, இவர்களை மீட்பது, மீட்க முயலுவது, இவர்களுக்குப் புகலளிப்பது இவையும் குற்றங்கள் (130ஆம் பிரிவு).

இவ்வாறு, நாட்டின் பாதுகாப்பிற்கும், நிலையான ஆட்சி முறை அமைப்பிற்கும் உகந்த முறைக்கு எதிராக உள்ள செயல்களை அரசுக்கெதிரான குற்றங்களெனக்கொண்டு, சட்டம் கடுந் தண்டனையை அளிக்கின்றது.

## 34. முப்படைகள் சம்பந்தமான குற்றங்கள்

## (Offences Relating to the Army, Navy and Air Force)

முப்படை வீரர்கள் கீழ்ப்படியாமல் கிளர்ச்சி செய்வதற்கு உடந்தையாக இருத்தல், கடமை தவறி நடக்கும்படி அவர்களை ஈர்க்க முயலுதல்—மேலதிகாரிகளைத் தாக்க முனைதலுக்கு உடந்தையாக இருத்தல்—முப்படையினர் சட்ட விரோதமாகப் படையை விட்டு விலகுதற்கு உடந்தையாக இருத்தல்—சட்ட விரோதமாகப் படையைவிட்டு விலகி வந்த முப்படையினருக்கு மறைவாகப் புகலளித்தல்—மோசடிக் கருத்துடன் முப்படை வீரர்களுக்குரிய உடை அல்லது சின்னம் அணிதல்.

அந்நாளில் நான்குவகைப் படைகள் அரசனுக்கு இருந்தன என்று கூறுவார்கள். தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை, காலாட்படை என்று படைகளை நான்குவகைப்படுத்துவதுண்டு. முன்னாட்களில் இருந்த இந்தப் படை வகைகள் இன்றைய விஞ்ஞான உலகத்திற்கு ஒவ்வாதவை, பயனற்றவை. அந்நாளைய நான்கு வகைப் படைகளுமே தரையிலேதான் செயற்பட்டன. ஆனால், இன்று விண்ணையும் விரிகடலையும் போர்க்களங்களாக மனிதன் மாற்றிவிட்டான். எனவே, தரைப்படை, கடற்படை, விமானப் படை என்ற மூன்றுவகைப் படைகள் இன்று ஒவ்வொரு நாட்டிலும் உள்ளன. இவற்றையே முப்படை என்று கூறுகிறோம்.

இந்த முப்படைகளிலும் பணிபுரியும் வீரர்கள் கண்டிப்பான கட்டுப்பாட்டிற்கும் ஒழுங்கு முறைக்கும் அடங்கி நடக்கும் கடமையுடையவர்கள். இந்த வீரர்களின் நடத்தையைச் செம்மையாக்குவதற்கும், ஒழுங்கீனத்தையும் குற்றங்களையும் தண்டிப்பதற்கும் தனியாகச் சட்டம் உண்டு. அந்தந்தப் படைக்குரிய தனி இராணுவச் சட்டத்தின்படி குற்றங்கள் செய்யும் படைவீரர்கள் தண்டிக்கப்படுகின்றனர். இராணுவ ஒழுங்குமுறைச் சட்டங்கள் குற்ற இயல் சட்டத்தைவிடக் கடுமையான விதிகளைக் கொண்டவை. தண்டனை முறைகளும் மாறுபட்டவை.

படைவீரர்கள் தங்கள் மேலதிகாரிகளுக்கு அடங்காமல் கலகம் செய்தால் அதற்குரிய தண்டனை மிகவும் கடுமையானது. அது பொது ஊழியரின் உத்தரவைப் புறக்கணிக்கும் சாதாரண குடி மக்களுக்குக் குற்ற இயல் சட்டம் விதிக்கும் தண்டனை போன்றதன்று. ஒரு படைவீரன் மற்றொரு வீரனைத் தவறான நெறிக்கிழுத்துத் தூண்டி விட்டால், அவனைப் படைக்குரிய சட்டப்படி தண்டிக்கலாம். படை வீரனாக இல்லாத சாதாரண ஒருவன் ஒரு படைவீரனைத் தவறான நெறிக்கு இழுத்து, அவனைப் படையில் கலகம் செய்யும்படியோ, மேலதிகாரிகளுக்குப் பணிந்து நடக்காதிருக்கும்படியோ தூண்டி விட்டால், அவ்வாறு தூண்டியவனை படைக்குரிய தனிச்சட்டப்படி தண்டிப்பதா என்பது வினா. தூண்டியவன் படைவீரனல்லன், சாதாரணக் குடிமகன், தூண்டப்பட்டவன் படைவீரன். படை வீரனைப் படைக்குரிய சட்டப்படி தண்டிப்பது சரிதான்; ஆனால், சாதாரணக் குடியையும் படைக்குரிய தனிச்சட்டப்படி தண்டிப்பது படைக்குரிய சட்டத்திற்கு ஒவ்வாததாகும். எனவே, அவனைக் குற்ற இயல் சட்டப்படி தண்டிப்பதே முறையாகும். ஒரு குற்றத்திற்கு உடந்தையாக இருந்தால், அதற்கான தண்டனை என்ன என்று பொதுவாகக் கூறும் பிரிவுகளின்படி, போர்வீரனைக் குற்றம் செய்யத் தூண்டியவருக்குத் தண்டனை அளிப்பதும் பொருந்தாது. ஏனெனில், போர்வீரர்களைக் கலகம் செய்யும்படியோ அல்லது தவறான நெறியில் இறங்கும்படியோ தூண்டுதல் பெருங்குற்றம். மற்றவகைக் குற்றங்களைவிட, இது நாட்டிற்கு, நாட்டின் பாது காப்பிற்குப் பெருங்கேடு விளைப்பதாகும். எனவே, முப்படை வீரர் களைக் கலகம் செய்யும்படியோ, தவறான நெறியில் இறங்கும்படியோ தூண்டி அதற்கு உடந்தையாக இருப்பவர்களுக்குச் சட்டம் கடுமை யான தண்டனை விதிக்கின்றது. எனவே, இதற்கென்று தனி அத்தியாயம் குற்ற இயல் சட்டத்தில் உள்ளது.

இனிக் குற்றத்தின் வகைகளையும் அவற்றிற்கான தண்டனை முறைகளையும் காண்போம்.

## முப்படை வீரர்கள் கீழ்ப்படியாமல் கிளர்ச்சி செய்வதற்கு உடந்தையாயிருத்தல், கடமை தவறி நடக்கும்படி அவர்களை ஈர்க்க முயலுதல்

இந்திய அரசின் தரைப்படை, கடற்படை, விமானப்படையி லுள்ள வீரர்களும் அதிகாரிகளும் மேலதிகாரிகளுக்குக் கீழ்ப்படி யாமல் கிளர்ச்சி செய்வதற்கு உடந்தையாக இருத்தல், இவர்களை அரசுப் பற்றுறுதியிலிருந்தோ, கடமையிலிருந்தோ தவறி நடக்கும் படி ஈர்க்க முயலுதல்.

இக் குற்றங்களைச் செய்வோர் ஆயுட்காலச் சிறையும் அபராதமும் தண்டனையாகப் பெறுகின்றனர் (131ஆம் பிரிவு).

உதவி அளிப்பது, தூண்டுவது, சதி செய்வது அனைத்தும் 'உடந்தை' என்பதில் அடங்குவன என்பதை நாம் நினைவிற் கொள்ளவேண்டும்.

இவ்வாறு, ஒருவர் உடந்தையாக இருந்ததன் பயனாக, படை வீரர்கள் மேலதிகாரிகளுக்குக் கீழ்ப்படியாமல் கிளர்ச்சி செய்து விட்டார்கள் எனில், உடந்தையாக இருந்தவருக்கு மரணதண்டனை அல்லது ஆயுட்காலச் சிறைத் தண்டனை விதிக்கப்படலாம் (132ஆம் பிரிவு).

## மேலதிகாரிகளைத் தாக்க முனைதலுக்கு உடந்தையாக இருத்தல்

கடமையாற்றும் மேலதிகாரிகளைத் தாக்க முனைவதில் முப்படை வீரர்களுக்கு உடந்தையாக இருப்போருக்கு மூன்றாண்டுக்காலம் வரை சிறைத் தண்டனை உண்டு (133ஆம் பிரிவு).

இந்த உடந்தைச் செயலின் காரணமாகத் தாக்குதல் நடந்து விட்டால், உடந்தையருக்கு ஏழாண்டுக் காலம்வரை சிறையும் அபராதமும் தண்டனையாகும் (134ஆம் பிரிவு).

## முப்படையினர் சட்டவிரோதமாகப் படையைவிட்டு விலகுவதற்கு உடந்தையாக இருத்தல்

முப்படை வீரர்கள் சட்டவிரோதமாகப் படையைவிட்டு விலகி ஓடுவதற்கு உடந்தையாக இருத்தல் குற்றம். அதற்கு இரண்டு ஆண்டுக் காலம்வரை சிறை, அபராதம் தண்டனையாகும் (135ஆம் பிரிவு).

## சட்ட விரோதமாகப் படையைவிட்டு விலகிவந்த முப்படையினருக்கு மறைவாகப் புகலளித்தல்

சட்ட விரோதமாகப் படையைவிட்டு விலகிவந்த முப்படை வீரர் எவருக்காவது மறைவாகப் புகலளிப்பது குற்றமாகும். அதற்குரிய தண்டனை இரண்டாண்டுக் காலம் வரை சிறை, அபராதமாகும்.

ஆனால், கணவனுக்கு மறைவாகப் புகலளிக்கும் மனைவி குற்றவாளி ஆவதில்லை (136ஆம் பிரிவு).

## மோசடிக் கருத்துடன் முப்படை வீரர்களுக்குரிய உடை அல்லது சின்னம் அணிதல்

மோசடிக் கருத்துடன் முப்படை வீரர்களுக்குரிய உடைகளையும் சின்னங்களையும் அணிதல் குற்றமாகும். இதற்கு மூன்றுமாதகாலச் சிறை, ஐந்நூறு ரூபாய்வரை அபராதம் தண்டனை.

இராணுவ அமைப்பு நாட்டின் பாதுகாப்பிற்கு இன்றியமையாத தாகும்.

'மறமானம் மாண்ட வழிச்செலவு தேற்றம்
எனநான்கே ஏமம் படைக்கு' —(குறள், 766).

வீரமும், மானமும், சீரிய நடத்தையும், அரசனுக்கு நம்பிக்கையூட்டும் நற்பண்பும், படைவீரருக்கு அமையவேண்டிய நான்கு அரண்கள் என்கிறார் வள்ளுவர். 'மறமும் மானமும்' உள்ளோர் படையினை விட்டுச் சட்டவிரோதமாக அகலார். 'மாண்ட வழிச்செலவினை' ஒட்டி ஒழுகுவோர் கீழ்ப்படியாமல் கிளர்ச்சி செய்யார். அரசின் 'தேற்றத்தினை' ஏற்றமாக மதிப்போர் அரசுப் பற்றுறுதியிலிருந்து அணுவளவும் அகலமாட்டார். இந்தப் பண்புகளுக்கு மாறான செயல்களைத் தூண்டுவோர்களையும், உடந்தையாயிருப்போர்களையும் சட்டம் கடுந் தண்டனைக்கு ஆளாக்குகிறது.

## 35. தண்டனை விதிக்கும் முறை

அபராதமும், அபராதம் செலுத்தத் தவறினால் சிறைத்தண்டனையும்—குற்றச்செயலின் கூறுகளும், அதற்கேற்ற தண்டனையும்—திருந்தாக் குற்றவாளிகளைத் திருத்தும் அதிகத் தண்டனை.

மரண தண்டனை, ஆயுட்காலச் சிறைத் தண்டனை, குறிப்பிட்ட காலத்திற்கு கடுஞ்சிறை அல்லது வெறுஞ்சிறைத் தண்டனை, சொத்துப் பறிமுதல், அபராதம்—இந்தவிதத் தண்டனைகளே தற்காலக் குற்ற இயல் நீதிமுறையில் நம் நாட்டில் விதிக்கப்படுபவை. சில ஆண்டுகளுக்கு முன், நாடுகடத்தி அந்தமான் தீவிற்குக் கொடுங் குற்றவாளிகளை அனுப்பியதும் உண்டு. அந்தத் 'தீவாந்திர'த் தண்டனையை இப்பொழுது அகற்றிவிட்டார்கள்.

மரண தண்டனை விதிக்கப்பட்ட குற்றவாளிமீது அரசாங்கம் கருணை காட்டி அத் தண்டனையைக் குறைத்து வேறு வகைத் தண்டனையாக மாற்றலாம். ஆயுட்காலச் சிறைத் தண்டனையைப் பதினான்கு ஆண்டுக் காலத்திற்கு அதிகப்படாத தண்டனையாகக் குறைக்கவும் அரசாங்கத்திற்கு அதிகாரம் உண்டு. இதற்குத் தண்டனை அடைந்தவரின் சம்மதம் தேவையில்லை (54, 55ஆம் பிரிவுகள்).

### அபராதமும், அபராதம் செலுத்தத் தவறினால் சிறைத் தண்டனையும்

சில குற்றங்களுக்குத் தண்டனையாக அபராதம் விதிக்கலாம் எனச் சட்டம் கூறுகிறது. இன்ன தொகைக்கு அதிகப்படாமல் அபராதம் விதிக்கவேண்டும் என்று சட்டம் கூறினால் அந்தத் தொகையையோ அல்லது அதற்குக் குறைந்த தொகையையோ தான் அபராதமாக நீதிமன்றம் விதிக்கவேண்டும். அபராதத் தொகையைச் சட்டம் வரையறுத்துக் கூறவில்லையெனில், நீதிமன்றம் எவ்வளவு தொகையையும் அபராதமாக விதிக்கலாம். ஆனால், அது கையிகந்த தண்டமாக இருத்தல் கூடாது.

(i) அபராதம், (ii) சிறைத் தண்டனை அல்லது அபராதம், (iii) சிறைத் தண்டனையோடு அபராதம் என்ற மூன்றுவகையான

தண்டனைகளை அந்தந்தக் குற்றங்களுக்கு விதிக்கலாம் என்று சட்டத்தில் காணுகிறோம். இத்தகைய குற்றங்கள் புரிந்தோருக்கு அபராதம் விதிக்கப்படும்பொழுது, குற்றவாளி அபராதத்தொகையைச் செலுத்த வில்லையெனில் என்ன செய்வது? அபராதம் செலுத்தத் தவறினால் அபராதத்திற்குப் பதிலாக இவ்வளவு காலம் சிறைத் தண்டனையைக் குற்றவாளி அனுபவிக்க வேண்டும் என நீதிமன்றம் உத்தரவிடலாம்.

சிறைத் தண்டனையோடு அபராதமும் விதிக்கவேண்டும் என்ற குற்றங்கள் உண்டு. இக் குற்றங்களைப் பொறுத்தவரையில், அபராதம் செலுத்தத் தவறியதற்கென விதிக்கப்படும் சிறைத் தண்டனைக் காலம், அக் குற்றத்திற்கான அதிக அளவு சிறைத் தண்டனைக் காலத்தில் நான்கில் ஒரு பங்கு காலத்திற்கு அதிகமாக இருக்கக் கூடாது. ஒரு குற்றத்திற்கு இரண்டாண்டுக் காலம்வரை சிறையும், அபராதமும் விதிக்கலாம் என்று சட்டம் கூறுகிறது. அக் குற்றத்தைச்செய்தவருக்கு நீதிமன்றம் ஓராண்டுக்காலச் சிறையும், ஆயிரம் ரூபாய் அபராதமும் விதிக்கிறது என வைப்போம். இப்பொழுது, குற்றவாளி அபராதம் செலுத்தத் தவறினால் என்று விதிக்கப்படும் சிறைத்தண்டனைக் காலம் ஆறுமாதத்திற்கு அதிகமாக இருத்தல் கூடாது. ஏனெனில், அக் குற்றத்திற்கான அதிக அளவு சிறைத் தண்டனைக்காலம் இரண்டு ஆண்டுகள்தாம். இரண்டாண்டில் காற்பங்கு ஆறுமாதம். எனவே, ஆறுமாதம் அல்லது அதற்குக் குறைந்த காலச் சிறைத்தண்டனையே அபராதம் செலுத்தத் தவறியதற்கென விதிக்கப்படலாம். இந்தச் சிறைத்தண்டனை ஏற்கெனவே விதிக்கப்பெற்ற ஓராண்டுக்காலச் சிறைத்தண்டனையிலிருந்து தனிப்பட்டது. எனவே, அபராதம் செலுத்தத் தவறிய குற்றவாளி ஓராண்டுக்காலச் சிறைத் தண்டனையை அனுபவித்தபின், அபராதம் செலுத்தத் தவறியதற்கென விதிக்கப்பெற்ற சிறைத்தண்டனையையும் தனியாக அனுபவித்தல் வேண்டும் (64ஆம் பிரிவு).

சிலவகைக் குற்றங்களுக்கு அபராதம் மட்டுமே தண்டனையாக விதிக்கலாம் எனச் சட்டம் கூறுகிறது. இந்த வகைக் குற்றங்கள் புரிந்தவர்கள் விதிக்கப்பட்ட அபராதத் தொகையைச் செலுத்த வில்லை எனில் அதற்கான சிறைத் தண்டனை வெறும் சிறைத் தண்டனையாகவே இருக்கவேண்டும்; கடுஞ்சிறைத் தண்டனையை விதித்தல் கூடாது. மேலும், கீழே கண்ட அளவின்படியேதான் அச்சிறைத் தண்டனையை விதிக்கவேண்டும். ஒரு குற்றத்திற்கு விதிக்கப்பட்ட அபராதம் ஐம்பது ரூபாய்க்கு அதிகமாகாத தொகை என்றால், அபராதம் செலுத்தத் தவறினால் என்று விதிக்கப்படும் சிறைத் தண்டனை இரண்டுமாதகால அளவிற்குள் இருத்தல் வேண்டும்; நூறு ரூபாய்க்கு அதிகமாகாத தொகை அபராதம் எனில், சிறைத்

தண்டனை நான்கு மாத கால அளவிற்குள் இருக்கவேண்டும். நூறு ரூபாய்க்கு அதிகமான எந்தத் தொகை அபராதமாக விதிக்கப்பட்டாலும் சிறைத் தண்டனை ஆறு மாத கால அளவை மிஞ்சுவது கூடாது (67ஆம் பிரிவு).

அபராதம் செலுத்தாமல் அதற்கெனச் சிறையில் இருப்பவர், அபராதத் தொகையைச் செலுத்திய உடன் சிறையிலிருந்து வெளி விடப்படுவார் (68ஆம் பிரிவு).

அபராதத் தொகையைக் குற்றவாளி செலுத்த மறுத்தால் அவரது சொத்திலிருந்து அது வசூலிக்கப்படலாம். தண்டனைத் தீர்ப்புக் கூறப்பட்ட காலத்தில் இருந்து ஆறு ஆண்டுகளுக்குள் அத் தொகையை வசூல் செய்யவேண்டும். ஆறு ஆண்டுகளுக்கும் மேலாக அக் குற்றவாளி சிறையில் இருந்தால், சிறைத்தண்டனை முடியும் காலத்திற்குள் அபராதத் தொகையை வசூல் செய்யும் அதிகாரம் அரசாங்கத்திற்கு உண்டு. அபராதத் தண்டனைபெற்ற குற்றவாளி இறந்த பின்னரும் அவரது சொத்திலிருந்து அத் தொகையை வசூலிக்கலாம் (70ஆம் பிரிவு).

### குற்றச் செயலின் கூறுகளும், அதற்கேற்ற தண்டனையும்

ஒருவர் மற்றொருவரைக் கம்பால் அடித்துக் காயம் உண்டாக்குகிறார். ஏழு அடிகள் விழுந்திருக்கின்றன. இப்பொழுது அடித்தவர் பிறருக்குக் 'காயம் விளைத்த' குற்றத்திற்கு ஆளாகின்றார். அதற்கான தண்டனை அவருக்கு விதிக்கப்படுகிறது. ஆனால், அவர் அடித்த ஒவ்வோர் அடியும் குற்றச் செயல்தான். எனவே, ஏழு தடவை அடித்ததால் ஏழு குற்றங்கள் செய்தார் என்று கொண்டு அவரை அந்த ஏழு குற்றங்களுக்கும் தனித்தனியாகத் தண்டிக்கலாமா? கூடாது. குற்றவாளி கம்பால் அடித்துக் காயம் விளைத்தார் என்ற குற்றம் ஒன்றுதான். அக் குற்றச் செயலின் பகுதிகளாக அடித்த செயல் ஒவ்வொன்றும் அமைகிறது. அப் பகுதிகள் ஒவ்வொன்றும் தனித்தனிக் குற்றங்கள் ஆகலாம் எனினும், அவை ஒவ்வொன்றிற்கும் தனித்தனியாகத் தண்டனை விதிப்பது கூடாது.

ஒரே குற்றச் செயல் சட்டத்தில் கூறப்பட்டுள்ள இலக்கணப்படி இரு குற்றங்கள் ஆகலாம். ஒருவர் மற்றவரை அடிக்கிறார். இதனால் அடிபட்டவரின் கை ஒடிந்துவிடுகிறது. இப்பொழுது அடித்தவர் பிறருக்குக் கொடுங்காயம் விளைத்த குற்றத்திற்கு ஆளாகின்றார். இதே செயல் சாதாரண காயம் விளைக்கும் குற்ற இலக்கணத்திற்கும் பொருந்தும். இதை வைத்துக் குற்றவாளியை, 'காயம் விளைத்தல்', 'கொடுங்காயம் விளைத்தல்' ஆகிய இரு குற்றங்களுக்கும் தண்டித்தல் கூடாது. கொடுங்காயம் விளைத்த குற்றத்திற்குக்

குற்றவாளியை விசாரிக்கும் நீதிமன்றம் எவ்வளவு தண்டனை விதிக்க லாமோ அந்த அளவிற்கு அதிகமாகாத தண்டனையே குற்றவாளிக்கு விதிக்கப்படுகிறது.

ஒருவர் மற்றொருவரை அடித்துக் காயம் விளைக்கின்றார். அப் பொழுது அதில் குறுக்கிட்ட மூன்றாவது பேரையும் அவர் அடித்து விடுகிறார் என்று வைப்போம். இந்நிலையில், அடித்தவர் இரண்டு பேர்களுக்குக் காயம் விளைத்த தனித் தனிக் குற்றங்களுக்கு ஆளா கின்றார். எனவே, அந்த இரண்டு குற்றங்களுக்கும் தனித் தனியான தண்டனை விதிக்கப்படலாம் (71ஆம் பிரிவு).

### திருந்தாத குற்றவாளிகளைத் திருத்தும் அதிகத் தண்டனை

ஒரு குற்றவாளியைத் தண்டிக்கும் நோக்கம் அவன் திருந்த வேண்டும்; மீண்டும் அதுபோன்ற குற்றங்களை அவன் செய்யாதிருத் தல் வேண்டும் என்பது என்று கண்டோம். ஆனால், சில குற்றவாளி கள் அவர்கள் பெறும் தண்டனையால் திருந்துவது இல்லை; திருந்தாக் குற்றவாளிகளாக மீண்டும் மீண்டும் குற்றங்களைச் செய்வதில் அவர் கள் ஈடுபடுகின்றனர். இவர்களைத் திருத்துவது எவ்வாறு? சமுதா யத்திற்குத் தீங்கிழைக்கும் இத் தீயோர்களைத் திருத்துவதற்கெனக் கடுந்தண்டனையை அவர்களுக்குச் சட்டம் விதிக்கிறது. மூன்றாண்டுக்காலச் சிறைத்தண்டனை உள்ள திருட்டு, கொள்ளை, கையாடல் முதலிய பொருள் குறித்த குற்றங்களில் ஒன்றை (378-462 பிரிவுகளில் காணும் அத்தகைய ஒரு குற்றத்தை) இழைத்து அதற்குத் தண்டனைபெற்று அனுபவித்த ஒருவர் மீண்டும் அத்தகைய குற்றங்களில் எதையேனும் செய்து குற்றவாளியானால் அவருக்கு ஆயுட்காலச் சிறைத் தண்டனையோ அல்லது பத்தாண்டுக்காலம் வரை சிறைத் தண்டனையோ விதிக்கப்படலாம். இவ் விதி நாண யங்கள், அரசாங்க முத்திரைக்காகிதங்கள் முதலியவை குறித்த (230-263ஆம் பிரிவுகளில் கூறப்படும்) குற்றங்களை இழைத்தோருக் குப் பொருந்தும். இவ்வாறு திருந்தாத குற்றவாளிகளைத் திருத்தும் பொருட்டு, அவர்களுக்கு அதிகமான தண்டனையைச் சட்டம் விதிக் கிறது (75ஆம் பிரிவு).

# 36. முடிவுரை

நாம் இதுவரை இந்தியக் குற்ற இயல் தொகுப்புச் சட்டத்தில் (Indian Penal Code) கூறப்பட்டுள்ள குற்றங்களைப்பற்றி விரிவாகக் கண்டோம். அக் குற்றங்களின் கூறுகள், அவற்றிற்கான தண்டனை முதலியவற்றை இச் சட்டத்தில் காணுகிறோம்.

ஒருவருடைய உயிர், உடல், உடைமை, புகழ் இவைகளுக்கு ஊறு விளைவிக்கும் செயல்கள், நாடு, அரசு, நீதிமுறை, பொது அமைதி இவற்றிற்கு எதிரான செயல்கள், சமயம், இல்வாழ்க்கை இவற்றிற்கு இடையூறு விளைக்கும் செயல்கள், இவையெல்லாம் எவ்வாறு குற்றங்கள் ஆகின்றன என்பதைக் காட்டி, அக் குற்றங்களனைத்தையும் தொகுத்துக் கூறுவதால் இது 'குற்ற இயல் தொகுப்புச் சட்டம்' என்று குறிக்கப்படுகிறது.

இந்தியக் குற்றவியல் தொகுப்புச் சட்டம் 1860ஆம் ஆண்டில் அமலுக்கு வந்தது. இச் சட்டத்தை வரைவதற்கு என்று நியமிக்கப் பட்ட இந்தியச் சட்டக் குழுவின் தலைவராகப் பணியாற்றியவர், ஆங்கில உரைநடை ஆசிரியராகப் பெரும்புகழ் பெற்ற 'மெக்காலே' (Macaulay) என்பவர் எனக் கண்டோம். எனவே, இச் சட்டப் பிரிவுகளில் கையாளப்பெற்ற ஆங்கில வாசகம் பல நாட்டினராலும் போற்றப் பெறுவதாகும். மேலும், இச் சட்டத்திற்கு மற்றொரு சிறப்பும் உண்டு. இச் சட்டம் அமலுக்கு வந்து நூறு ஆண்டுகளுக்கு மேலாகியும் இச் சட்டத்தில் செய்யப்பெற்ற திருத்தங்கள் மிகச் சிலவேதாம்.

மனிதன் என்னென்ன வகையான குற்றங்களை எந்தெந்த வழிகளில் எல்லாம் செய்ய முடியும் என்பதனைத்தையும் ஆராய்ந்து, அந்தந்தக் குற்றங்களின் கூறுகளைத் தெளிவாகச் சட்டப் பிரிவுகளில் அமைத்துக் கூறுவது என்பது எளிதில் கைகூடும் செயலன்று. இந்த அரிய முயற்சியிலே ஆங்கில அறிஞர் 'மெக்காலே' அடைந்த வெற்றிக்குச் சின்னமாக இச் சட்டம் விளங்குகிறது. நம் நாட்டில்

குற்ற இயல் நீதிமுறை திறம்பட நடைபெறுவதற்கு 'இந்தியக் குற்ற வியல் தொகுப்புச் சட்டம்' அடிப்படையாக அமைகின்றது.

இச் சட்டத்தில் கூறப்பெற்றவை தவிர வேறு குற்றங்கள் இல்லை என்று நாம் கொள்ளுவது தவறாகும்.

சமுதாயத்தின் தேவைக்கேற்ப எத்தனையோ சட்டங்கள் இயற்றப்பெறுகின்றன. அச் சட்டங்களுக்கு அடங்கி மக்கள் நடக்கக் கடமைப்பட்டவர்கள்; அவ்வாறு அடங்கி நடக்கத் தவறுபவர்களைத் தண்டிப்பது அவசியமாகிறது. எனவே, அந்தந்தச் சட்டங்களில் அவற்றை மீறி நடப்போருக்கான தண்டனை என்ன என்பதும் கூறப்படுகிறது. பாலிலே நீர் கலந்து விற்போருக்குத் தண்டனை என்று தனிச்சட்டம் உண்டு. பிறந்த குழந்தைக்கு ஓராண்டுக்குள் அம்மை குத்திக்கொள்ளத் தவறுபவர்களுக்குத் தண்டனை என்று கூறும் வேறொரு சட்டம் இருக்கிறது. இன்னொரு சட்டத்தின்கீழ் உரிமை பெறாமல் மோட்டாரை ஓட்டுவது குற்றமாகிறது. இவ்வாறு எத்தனையோ சட்டங்கள் பல்வகைக் குற்றங்கள்பற்றிக் கூறுகின்றன. அந்தக் குற்றங்கள் எல்லாம் குற்றத் தொகுப்புச் சட்டத்தில் அடங்காதவை.

குற்றம் இழைத்தவர்களை விசாரணை செய்து, குற்ற வழக்குகளை நடத்தும் முறைபற்றிக் கூறும் சட்டம் ஒன்று தனியாக உள்ளது. அதைக் 'குற்ற வழக்குமுறைச் சட்டம்' (Criminal Procedure Code) என்கிறோம். பலவகைப்பட்ட குற்றங்களின் தரத்திற்கு ஏற்றவாறும், குற்றம் புரிந்தவர்களின் தன்மைக்குத் தக்கவாறும், குற்ற வழக்குகளுக்கான விசாரணை முறையை அமைத்துக் கூறுகிறது அச் சட்டம்.

குற்றவழக்கு விசாரணை முறையில் அமையும் அடிப்படைக் கொள்கையை நாம் நினைவிற் கொள்ளுவது நலமாகும். ஒருவன் குற்றம் செய்தவன் என்பதை ஐயந்திரிபறக் கண்டபின்தான் அவனைத் தண்டிக்க வேண்டும் என்பதே அக் கொள்கை. குற்றம் சாட்டப்பட்டவன்தான் அக் குற்றத்தை இழைத்திருக்கிறான் என்றும், அவனைத் தவிர வேறு எவரும் அக் குற்றத்தைச் செய்திருக்க முடியாது என்றும் வழக்கிலுள்ள சாட்சியத்திலிருந்து, எவ்வித ஐயப்பாட்டிற்கும் இடமின்றி உறுதியாகத் தெரியவேண்டும். அப்பொழுதுதான் குற்றம் சாட்டப்பட்ட ஒருவனைக் குற்றவாளி என்று நீதிமன்றம் தீர்ப்பளிக்கின்றது. சாட்சியத்திலிருந்து உறுதியாக இம் முடிவிற்கு வர இயலாதெனில் குற்றம் சாட்டப்பெற்றவரைத் தண்டிப்பதில்லை. சாட்சியத்திலுள்ள சந்தேகத்தின் பலன் குற்றம்சாட்டப்பட்டவருக்கு நல்குகிறது. அவர் குற்றச்சாட்டிலிருந்து விடுவிக்கப்படுகிறார். இவ்வாறு, ஒருவரைக் குற்றவாளி என்று கொள்ளுவதற்கு வேண்டிய

சாட்சியம் தெள்ளத் தெளிவாக ஐயத்திற்கு இடமின்றி இருக்க வேண்டும் என்று சட்டம் கூறுவதால், குற்றம் செய்தவர்களில் பலர் தண்டனையிலிருந்து தப்பிவிடுகின்றனர்.

'ஐயோ! உண்மையான குற்றவாளி விடுதலை பெற்றுவிட்டானே, தண்டனையிலிருந்து தப்பிவிட்டானே!', என்று நாம் சில வேளைகளில் அயர்வு அடைகிறோம். சட்டம் இவ்வாறு இல்லையெனில் நிலைமை எவ்வாறாகும்? சிறு சந்தேகத்தின் பேரிலேயே குற்றம் சாட்டப்பட்டவரைத் தண்டித்தால், நிரபராதிகள் பலர் தண்டனைக்கு ஆளாகிவிடலாம். குற்றம் ஏதும் இழைக்காதவர்கள் கொடுந் தண்டனை பெற்றால் அது கொடுங்கோன்மை ஆகிவிடுமன்றோ? குற்றமறியாத கோவலனைக் குற்றவாளியெனக் கொன்ற மதுரை மன்னன் கொடுங்கோலன் எனப் பெயர் பெற்றான். தான் இழைத்த தவறினை உணர்ந்த மன்னன், தாழ்ந்த குடையனாய், தளர்ந்த செங் கோலனாய் தன் பிழையைப் போக்கும் கழுவாயாகத் தன் உயிர் துறந்து உயர்ந்தான். அந்த மன்னன் ஆட்சியில் தண்டனையின்றித் தப்பிய குற்றவாளிகள் பலர் மதுரை மாநகரில் இருந்திருக்க லாம்; அதனால் அவன் கொடுங்கோலனாகிவிடவில்லை. ஆனால், குற்றமறியா ஒருவனைக் குற்றவாளி எனக் கொண்டதுதான் கொடுங் கோன்மையாகியது. இன்றைய சட்டமும் இதையேதான் கூறு கிறது. 'குற்றம் இழைத்தோர் நூறுபேர் தண்டனையின்றித் தப்பினா லும் சரி, குற்றமறியா ஒருவன்கூடத் தண்டனைக்கு ஆளாவது கூடாது' என்பது குற்ற இயல் நீதி முறையின் அடிப்படை நெறி யாகும்.

நம்மில் பெரும்பாலோருக்குக் குற்ற இயல் சட்ட விதிகள் தெரிவ தில்லை; தெரிந்துகொள்வதற்குப் போதிய வாய்ப்புமில்லை. ஆயினும், குற்றமான செயலைச் செய்த ஒருவர் தமக்கு அச் செயல் குற்றம் எனத் தெரியாது என்று கூறி வாதாட முடியாது. இவ்வாறு குற்றவாளி வாதாடுவதைச் சட்டம் அனுமதிப்பதில்லை. எனவே, சட்டம் விதிக்கும் குற்றங்களைப்பற்றி நாம் தெரிந்துகொள்ளுவது அவசியமாகும். மேலும், மக்களுக்கு எந்தெந்த நிலைகளில் தற்காப்பு உரிமை உண்டு, என்னென்ன வகைகளில் அந்த உரிமையைப் பயன்படுத்தி நம்மையும் பிறரையும் காத்துக்கொள்ளலாம் என்பது பற்றியும் இச் சட்டம் கூறுகிறது. எனவே, இச் சட்ட அறிவு நம் வாழ்விற்குப் பெரிதும் துணைபுரிவதாகும்.

இந்நூலைக் கற்றறிந்த நாம், குற்றம் நீக்கி, பொதுவாழ்வில் நமக்குள்ள கடமைகளையும் உரிமைகளையும் உணர்ந்து, நல்வாழ்வு வாழ்வோமாக!

